தோன்றியவர்கள, அவர்கள் காலம, இன்று போல் ஞாயிற்றின் செலவை அடிபபடையாகக் கொண்ட காலம; அதனல் இருவரும, "போற்றியாம் மாாகழி நீராடேலோரெமபாவாய்" என்றும, மார்கழித திஙகள் மதிநிறைந்த நன்னளால், நீராடப போதுவீர" என்றும முறையே குறிககின்ருர்கள.

இவவாறு திங்களேக் கணக்கிடும காலமுறையேயன்றி, இத் தைந நீராட்டுக கொள்கையிலும் சில வேறுபாடுகள் இவாகள காலத்தில் தோன்றியிருக்கின்றன 'இச சான்ருோ காலத்தில் சமய வொழுககங்களும சமய வுணர்வுகளும் பெருகப் பரவின. பௌத்தம, சமணம, சாங்கியம, வைசேடிகம், சைவம், வைணவம் முதலிய சமயங்கள் தமிழகத்தில் தோன்றி விட்டன பழைய வழக்காறுகட்குப் புது முறையில் ஒழுக்கங்கள் கற்பிக்கபபட்டன அந நெறியில் தைநீராடல் மார்கழி நீராட்டாகி ஒருவகை நோன்பாகவும மாறிவிட்டது நெய் பால் முதலியன உணணுமை, கண்ணுககு மையெழுதுதல், கூநதலில பூமுடித்தல் முதலிய ஒப்பனே செய்து கொள்ளாமை ஒழுககங்களாயின நீர்ததுறைககண் நிறுத்தப்படும் பாவைகளே உமையம்மையாகக் கருதி வழிபடுவது இயல்பாயிற்று திருமாலே வழிபடும மகளிரும் மாாகழி நீராட்டில பாவையைக் "கௌரி"யாகக் கருதி வழிபாடு செயதனைப் பாகவத புராணம கூறுகிறது. பழஞ செய்யுளொன்று,

"சேயரி நாட்டமும செவவாயும அல்குலுமே—அமமானய்
ஆய்மலரும தொணடையும ஆழியந் திண்டேரும்—அம்மானய்
மாயிருந் தானே மயிடன் தலேயினமேல்—அம்மானய
பாயின சீறடிப பாவை பகவதிக்கே—அம்மானய"

என்று கூறுவது காண்க.

இக்காலத்தே நிலவிய சமயச சான்ருேர்கள், தத்தம் சமயக் கருததுககளேப பொதுமககளிடையே பரப்பவேண்டி, மகளிா விளேயாட்டுக் காலத்தே பாடும பாட்டுக்களின் வண்ணத்தில் புது முறையில பல பாட்டுக்களேப் பாடினர். இந்நாளில் அரசியல் வாழ்வில இயஙகுவோா தத்தம கட்சிக கொள்கைகளேப் புதிய புதிய வண்ணததில் பாட்டமைத்து விடுப்பதைக காண்கின்ருேம். இத்துறையில் மக்கட் பண்பு என்றும ஒரு தன்மைத்தாகலின், விளேயாட்டுப் பாடல் வண்ணததில் இடைக்கால மககள் தத்தம சமயக் கருததுக்களேப் பாடிவிட்டதில் வியப்பில்லே. யாப்பருங் கலவுரையும தொல்காப்பியவுரையும் காண்போாக்கு இம் முறை பன்னெடு நாட்களுக்கு முன்பே தமிழகததில் தோன்றி விட்டமை நன்கு தெரியும

"ஏதங்கள் நீங்க எழிலிளம் பிண்டிக்கீழ்ப்—புரூவே
வேதங்கள் நான்கும் விரித்தான் விரைமலர்மேல்—புரூவே
பாரம பணிந்து பரவுதும் பல்காலும்—புரூவே"

என்பது முதலாக வருவன ஆயிரத்துநூறு ஆண்டுகட்கு முன்னர் நிலவிய பாட்டுக்களாகும். இதுபற்றியே, சேக்கிழாரும், "வண்டல பயில்வனவெல்லாம் வளர்மதியம் புனைந்த சடை, அண்டபிரான் திருவார்த்தை அணையவருவன" என்று குறித்தருளினார் இவ்வகைய வழக்காறு கொண்டே மணிவாசகனாரும், திருவெம்பாவை, திருவம்மானை, திருப்பொன்னூசல், திருப்பொற் சுண்ணம், திருப்பூவல்லி என்பன முதலியவற்றைப் பாடியருளினார். திருமால் அடியாருட் சிறந்த ஆண்டாள் திருப்பாவை பாடியதும் இந்நெறி பற்றியதேயாம்.

இனி, ஆண்டாள் அருளிய திருப்பாவையில் முதற் பாட்டில் "மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னா"ளென்று மகளிரையழைப்பதும்,இரண்டாம் பாட்டில், பாவைநோன்புக் குரிய நெறிமைகளும், மூன்றாம் பாட்டில் மார்கழி நீராட்டால் விளையும் பயனும், நான்கு ஐந்தாம் பாட்டுக்களில் மழையை வாழ்த்துவதும் திருமாலைக் கையால் மலர்தூவித் தொழுது வாயாற்பாடி மனத்தால் சிந்திக்க வரும் பயனும் கூறப்படுகின்றன. ஆறாம் பாட்டு முதல் பதினைந்தாம் பாட்டு ஈறாகவுள்ள பத்துப்பாட்டுகளில் மகளிரைத் துயிலெழுப்புவதும், பதினாறாம் பாட்டு முதல் இருபத்தைந்தாம் பாட்டு ஈறாகக் கண்ணனைத் துயிலெழுப்பி "கருத்திருத்த வந்தோம், பறைதருதியாகில், திருத்தக்க செல்வமும் சேவகமும் யாம்பாடி, வருத்தமும் தீர்ந்து மகிழ்வோம்" என்று கேட்பதும், இருபத்தாறு இருபத்தேழாம் பாட்டுக்களில், மார்கழி நீராட்டத்துக்கென, சங்கும் வாச்சியங்களும் பல்லாண்டு பாடுவோரும், விளக்கு, கொடி, விதானமும் பிறவும் நல்குக எனவும், இருபத்தேழாம் பாட்டில், சூடகம், தோள்வளை, தோடு, செவிப்பூ, பாடக முதலிய அணிகலன்களும் ஆடையும் பெற்று, பாற்சோறும் "நெய் பெய்து முழங்கை வழிவாரக் கூடியிருந்து குளிர்ந்து"ண்டிருக்கவேண்டுமெனவும், இருபத்தெட்டாம் பாட்டில் மகளிர் தங்கள் பிழை பொறுத்தருளவேண்டுமெனக் கேட்பதும், இருபத்தொன்பதாம் பாட்டில "எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்றன்னோடு உற்றோமேயாவோம், உனக்கே நாம ஆட்செய்வோம" என்பதும் கூறப்படுகின்றன. இறுதிக்கண்ணதாகிய முப்பதாம் பாட்டு, திருப்பாவைப் பாட்டு முப்பதையும் தப்பாமல் உரைப்பார், திருமாலால் எங்கும் திருவருள் பெற்று இன்புறுவர் என்று பயன் கூறி முடிகின்றது.

மார்கழி முழுத்திங்களன்று அம்பாவாடல் தொடங்குகின்றது. திருவெம்பாவை முதல் எட்டுப் பாட்டுக்களில் மணமாகாத இளமகளிர் ஒருவரையொருவர் துயிலுணர்த்திக் கொண்டு நீர்த்துறைக்குச் செல்லுகின்றனர். ஒன்பதாம் பாட்டில் எல்லோரும் சேர்ந்து நீர்த்துறையில் பாவையை நிறுவிச் சிவபெருமானைக் கருதிக்கொண்டு,

“முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருளே
பின்னைப் புதுமைக்கும் போத்துமப் பெற்றியனே
உன்னைப் பிரானாகப் பெற்றவுன் சீரடியோம்
உன்னடியார் தாள்பணிவோம் ஆங்கவர்க்கே பாங்காவோம்
அன்னவரே எங்கணவ ராவார் அவருகந்து
சொன்ன பரிசே தொழும்பாயப் பணிசெய்வோம்
இன்னவகையே எமக்கு எங்கோன் நல்குதியேல்
என்ன குறையும் இலோம்”

என்று வேண்டிக்கொண்டு நிற்ப, “முனித்துறை முதல்வியர்” என்ப பிற்பாடல் குறிக்கும் தாயர் முற்போந்து, பத்துப் பதினோராம் பாட்டுக்களில், சிவபெருமானது பரமார்த்தன்மையை வியந்து, “பாதாளமேழினும் கீழ்ச் சொற்கழிவு, போதார் புனை முடியும் எல்லாப் பொருள்முடிவே” என்று காட்டி, “ஏதவனூர் ஏதவன்பேர் யார் உற்றார் யார் அயலார் ஏது அவனைப் பாடும் பரிசு” என்றும், “ஐயா வழியடியோம் வாழ்ந்தோங்காண்” எனவும், “ஐயா நீ ஆட்கொண்டருளும் விளையாட்டின், உய்வார்கள் உய்யும் வகையெல்லாம் உய்ந்தொழிந்தோம், எய்யாமற் காப்பாய் எமை” எனவும் பாடி நீராடுறுகின்றார்கள். அத்தாயர் பக்கலில் இருந்த இளமகளிர் பலரும், பன்னிரண்டு முதல் பதினைந்தாம் பாட்டு ஈறாக நான்கு பாட்டுக்களில் நீராட்டயர்கின்றனர். பதினாறாம் பாட்டில் இளையரும் முதியருமாகிய மகளிர் அனைவரும் மழைபெய்தல் வேண்டுமென மழையைப் பரவுகின்றனர். இந்நீராட்டுப் பெரும்பான்மையும் இளமகளிர் நல்ல கணவனையடைந்து இன்பவாழ்வு பெறுவது குறித்து நிகழ்வதால், மழையை வாழ்த்துவது முறையாயிற்று. திருவள்ளுவர் கடவுள் வாழ்த்துக்குப்பின் வான்சிறப்புக் கூறியதும், இளங்கோவடிகள், மங்கலவாழ்த்தின் தொடக்கநிலையில் “மாமழை வாழ்த்துதும்” என மழையைச் சிறப்பித்ததும் இந்நெறிக்கு அடிகோலித்தருகின்றன. பின்னர் முதுமகளிரான தாயர், பதினேழு பதினெட்டாம் பாட்டுக்களில் தேவர்கட்கும் அவர் தலைவர்கட்கும் பெறமுடியாத இன்பம் நம்பாலதாக நம் இல்லங்கள் தோறும் எழுந்தருளும் நம்பெருமானைப் பாடியாடுவோம் எனவும், விண்ணாகி மண்ணாகி இத்தனையும்

வேறாகிக் கண்ணாரமுதமுமாய் நின்ற இறைவன் கழல்பாடி ஆடுவோம என்வும பரவி நீராடிக் கரையேறுகின்றனர். அவ ருடனே கூடி நீரில மூழ்கி விளையாடிய இளமகளிர, பத்தொன் பதாம் பாட்டில், முன்னர் ஒன்பதாம பாட்டிற் செய்துகொண்ட வேண்டுகோளையே வேறு வாய்பாட்டில,

“ எங்கள் பெருமான உனககொன் றுரைப்போம் கேள்
எமகொஙகை நினனன்பர் அல்லாதோள் சேரற்க,
எம்கை உனககல்லா தெப்பணியும செயயற்க
கஙகுல் பகல் எஙகண மறறொன்றும் காணற்க
இஙகிப் பரிசே எமக்கெஙகோன நல்குதியேல்
எஙகெழிலஎன் ஞாயிறு எமக்கேலோ ரெம்பாவாய்”

என்று பாடுகின்றா

இறுதியாகிய இருபதாம் பாட்டில் எல்லோரும் ஒன்றுகூடி, இறைவன் திருவருளை வியநது, “போற்றியருளுக நின் ஆதியாம் பாதமலர்” எனத தொடஙகி, “போற்றியாம் மாரகழிநீர் ஆடேலோ ரெமபாவாய்” எனப் பாடித திருக்கடைக்காப்புச் செய்கின்றனர்.

இத திருவெம்பாவையின கண் அடங்கியிருக்கும் கருத்து, பண்டையோர் ஒருவரால் சத்தியை வியந்தது என்று குறிக்கப் பட்டுளது இதறகேற்ப, மனோன்மணி, சருவபூததமனி, பலப் பிரதமனி, பலவிகரணி, கலவிகரணி, காளி, ரௌததிரி, சேட்டை, வாமை என ஒன்பதின்மர் சததிகள் என்றும், மனோன்மணி போந்து முதற்பாட்டில் சருவபூததமனியை எழுப்ப, அவள் மற்றவளை எழுபப இவ்வாறு முதல் எட்டுப் பாட்டுக்களில் இச் சததிகள் எழுப்பபபடுகின்றன ரென்றும கூறுவர், **மகாமகோபாத்தியாய பண்டிதமணி, மு கதிரேசச் செட்டியாரவர்கள்.** பேதையரும் பெதும்பையருமாகிய ஐந்தாமாண்டுமுதல் பன்னி ரண்டாமாண்டு ஈறாகவுள்ள மணமாகாத மகளிர் துயிலுணர்த் தப்பெறுகின்றன ரென்றும், அவருள்ளும் பன்னிரண்டா மாண்டு மகளிர் முதற்கண் எழுந்து முதலில் தமமையொத்த மகளிரையும பின்னா முறையே தமமின் இளையோரையும் எட்டுபபாட்டுக்களில் எழுபபுகின்றாரென்றும் கொள்ளுதற்கு இடமுண்டு என உரைப்பர்.

இனி, உறங்கியெழுந்து வருவோரை ஆண்டவன் உண்மை யும் அவனது அருள நலமும உரைப்பார் உரைக்கக் கேட்டு உணர்ந்து வரும் நன்மக்களாகவும், நீர்த்துறையை அருள் நிலையமாகவும், அதன்கண் படிந்தாடிப் பரவுவது

வாகளில் தோய்ந்து இன்புறுவதாகவும் கூறுவர். அந்நிலையில இறைவனுடைய பெருநலங்களும் அடியார் பெருமையும் அவர்கடு மக்கள் அடிமைப்பணிபுரியும் கடமையும் குறிககப்படு கின்றன தாயர் போலும சான்றோர், "இறைவன் பாதமலர் சொற்கழிவு; திருமுடி, எல்லாப் பொருட்கும முடிவு, பேதை ஒருபால் திருமேனி; ஒன்றல்லன்; வேதமுதல், ஒரு தோழன் தொண்டருளன்; அவனுக்கு ஊா பேர் ஏது? உற்றுா, அயலார் யார்? அவனைப் பாடும் பரிசு ஏது? எய்யாமற் காபபாய் என வேண்டுவதே செய்தற்குரியது" என்று அறிவுறுத்துகின்றனர்.

அவாவழி நிற்கும் உலகவர், இறைவன் திருக்கூத்தின் சிறப்பும் அவன்புரியும் ஐவகைத தொழிலின் அமைதியும் அறிநது இன்புறுவதும், காணப்படும் இவ்வுலகு ஆணும் பெண்ணுமாகிய உருவில் அம் முதல்வனைக் காட்டக் கண்டு மகிழ்வதும், பேதித்து நம்மை வளர்தெடுத்த இறைவியின் திருவருளை வியந்து உவப்பதும், இறைவனால் ஆட்கொள்ளப் பெற்றவா, மறந்தும் புறநதொழாத மாண்புகொண்டு உயாவதும் மகளிா நீராடும் பாட்டுக்களின் குறிப்பு என்பர், திருப்பாதிரிப்புலியூர் சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் தாயரும மகளிரும் கூடி மழையை வாழ்த்துமுகததால் திருவருள் அறிவு பெற்றோர்க்கு அத் திருவருள்முதல்வன் அவரவர் உள்ளத்திலும் எழுந்தருளி இன்பநதருவன் (17) என்றும், ஞாயிற்றின் நல்லொளியெழக்கண்டு தாயர் நீர்மூழ்குவதுபோல, இறைவனது அருளொளி தோன்றக் கண்டு நல்லறிஞர் அதன் இன்பத்தில் மூழ்குவரென்றும் (18) என்றும குறிக்கப்படுகின்றன. மகளிர், "உங்கையிற் பிள்ளை, உனககே அடைக்கலம்" எனத் தம்மைக் கையடைப்படுப்பதுபோல, உலகவர் தம்மை இறைவன் அருட்கு உரிமை செய்தல் பத்தொன்பதாம் பாட்டின் குறிப்பு என்பா. இறுதிப்பாட்டில், இறைவன் திருவடியே எல்லாவற்றிற்கும் ஆதியும் அந்தமுமாவன என முன்மொழிந்து, பின்பு, படைத்தல், காத்தல, அழித்தல், மறைத்தல், அருளல் என்ற ஐவகைத் தொழில்களையும் செய்வன அவன் திருவருளே என வற்புறுத்தி அதனை நினைந்து வாழ்வதே உயிர்கட்குக் கடன் என்பது பெற வைப்பர் மதுரைச் சிவப்பிரகாசர்.

(தொடரும்)

# அறிகிலேன் அன்னாய்!

[செல்வி. எஸ். கமலாதேவி. இரத்தினபுரி]

தமிழ்ப்பணி தன்னைமணந்த தவமணிச் செல்வி,

'ஒருமொழி தன்னையுடையோம உலகம நிறைந்த புகழால் திருமொழிபோல வளாபபோம்', என்கின்றனே அது என்று முள தென்தமிழ் என்றியம்பியிசை கொள்வனெல உள்ளங்குளிர உவபபாயனறே? அததகைய செமமைசான்ற முதுமையும இளமையும ஒருங்கே தவழும தனிபபேறுடைய தமிழ்மொழிக்கு இலக்கியததாலும், இலக்கணததாலும வரம்பு காண விழையும வண்மையோா எணணிலா. வான் எனத தமிழ பொழிநது கலையின் திறனுலும, கடடுரை வன்மையாலும செல்வமும திருவும ஓங்கத் தமிழநெறி வழாது வாழ்ந்த புலமைச சான்றோா எண்ணிலா அன்னாரை வாழ்த்தியும் வழுததியும் வணஙகுவோம

தொலகாபபியா, திருவள்ளுவா, இளஙகோ போன்ற தமிழ் வளர்தக எழிலிகளும, நசசினாககினியா, இளமபூரணர், பேராசிரியா போன்ற பொருளாழம காணவிழையும பொற்புடைப் புலவோரும தைததிஙகள தண்கயம என்னக கொளக் கொளக் குறைபடா வண்ணம அறிவின்திறனால அன்று வாழ்நது மன்னுலகதது மனனுதல் குறிததுத தம புகழ நிறீஇத தாம மாய்ந தனா அவவியற்கை மணம இன்னும மஙகாது எங்கும பொஙகும புகழுடன் தங்க, திரு. ஔவை சு துரைசாமிப் பிள்ளை போன்றோரால சுடாவிடடு, நாறறிசையும் செவ்வொளி வீசிக கூடலிலேயே ஒண்தீண் தமிழ் என ஆயப்பெறுமேல், தமிழ்மக்களாய்த் தோன்றிய யாம மீண்டும் பிறபபுளதேல் அது தீநதமிழ மண்ணிடையே தோன்ற வேண்டுமென்று உலைவிலாதுஞற்றுதல் உயர்வுடைத்தன்றோ?

அத்தகைய தனிபபேறு தழுவிய தமிழ்மொழிக்கு எததனையோ மறுமலர்சசிமாலைகள் தோன்றி வாடி மறைகின்றன. வாடுமே எனினும் வாடும்வரை நாடும சிலரைத் 'தங் கொள்கைபால ஈாக்கச செய்கின்றமை இறுமபூது எனினும இயற்கையே யன்றோ?

"இன்பம பயககி இம்மைக்குப புகழ் பெருக்க இன்றியமையாத செல்வபபொருளை அருளபவள "மா"—எனும சொற்றொடரில் பாங்கி என்பது இதுவரை தமிழ்மக்கள் ஒருவாக்கும்

தெரியாத புதுச்சொல்! அதனால் என்ன? என நம்மைத் தட்டி எழுப்பும் தமிழ்த் துறைத்தலைவர் பயந்து எனும் வினையெச்சம பழமைசான்ற இலக்கண வரம்பொடு தோன்றின் நன்மை பயந்துவிடும என அஞ்சுகின்றார் போலும! தூய தமிழ்க் கிளர்ச்சியானது அறிவின்பகை — ஒற்றுமையின்பகை—கல்வியின்பகை—நாகரிகத்தின் பகை—தேசீய முன்னேற்றத்தின் பகை. இதனை அறிவுடையோர் ஆதரித்தல் சிறிதும் தகாது—என இனையோரன்னவை தம நூலிடை விடுத்தமையும மறுமலர்ச்சியாமேல், நற்றமிழ் மகள் நறுமலர்ச்சியின்றி நைந்து போவளன்றோ?

நோந்த மொழிப்பொருளை நீக்க வருநகரம்
சார்ந்த துடலாயிற் றன்னுடல்போம—சார்ந்ததுதான
ஆவியேற் றன்னாவி முனனுகும, ஐஔவர
மேவிய எவும விரைந்து.

வட சொற்களைத் தமிழாக்கப் பெரிதும உதவும் பெற்றி மேற்கொண்டெழுந்த, நேமிநாத இலக்கண வெண்பாவாகும, இது

ந + அஙகன்—
ந் + அ + அங்கன்
= அ + ந + அங்கன்
= அநங்கன

மேற்கூறியாஙகு அஙகம் இலாதானை அநங்கன் என்றே குறிக்க இலக்கண ஆசிரியர் வேண்டவும, நம் நாட்டிற்பலா அனஙகன் என்றே வரைகின்றமை காண்கின்றவொன்று தமிழ் அகராதியும் இடமளிக்கிறது சொலலேருழவா இதற்கு வல்லின் வழிகாண்பரோ? அறிகிலேன்.

வடநூலுள் உலகமென்பது இருபொருட்கும் உரித்தாக ஓதப்பட்டமையின்—எனும் சொற்றொடரால் உலகம் எனும சொல்லினைச் சேனாவரையர் வடநாட்டினருக்கு உரிமைப் பொருளாக்கவும், அவர்பின் புகழொடு தோன்றிய நச்சினார்க்கினியர்—"காலம, உலகம-என்பன வடசொல அன்று, ஆசிரியர் வட சொற்களை எடுத்தோதி இலக்கணம கூறாராகலின்"—என மறுத்தனர். உலோகம என்பது வடமொழித்திரிபு என்பதவர் கொள்கை ஆனால்,

"காலம் உலகம் உயிரே உடம்பே
பால்வரை தெய்வம் வினையே பூதம்

எனும் நூற்பாவில் அமையும தெய்வம், பூதம் என்பனவும் தமிழ்ச் சொற்களோ என வினவ விழைவோமல்லமோ? அன்றியும—காலம் உலகம என்பன வடசொல அன்று—என்ற உரையாசிரியா உள்ளம், என்பன எனும பன்மைக்குரிய பயனிலே, "அன்று" அன்று என்றும் "அல்ல" என்னலே அமையும் என எண்ண எழாது போயினது வருந்துதற் குரியது. ஒழுக்கம் உடையவாக்கு ஒல்லாவே தீய வழுக்கியும வாயாற் சொலல்.

"ஆணமை திரிந்த பெயாநிலைக கிளவி
ஆணமை அறிசொற் காகிடனின்றே"

எனும இலககண நூறபா அறுதியிடவும மெதானமைசான்ற இளமபூரணவடிகள, "ஆண்மையிற் றிரிநது பெண்மை நோக்கி நின்ற பெயாப்பொருள ஆண்மகனை அறிவிக்கும் ஈற்றெழுத்தி ஞல சொலற்பாட்டிறகு ஏலாது" என்று கூறியபின் "பேடி வந்தான்" எனவும் ஆண்பாற்கும ஏற்கும என்கிறுர் இவ் வாருயின் பேடி பெண்பாலாகவும ஆண்பாலாகவும் கொள்ளலா மென்றலலவோ தோனறுகின்றது?

இலக்கணமாணவ உள்ளங்களை உவக்கச் செய்வன சேனு வரையரின சிறந்த நயங்கள.

" ரஃகா ஞெற்றும பகர விறுதியு
மாரைக கிளவி யுளப்பட மூன்று
நேரத தோனறும பலரறி சொல்லே."

இவண 'உரையாசிரியா' சேனுவரையரின கைவண்ணத்தில் ஆழ்நதுவிடுகிறேம். மாரைக்கிளவி என்ற வொன்றே சேனுவரை யரை தமிழ் உலகிற்கு அறிமுகஞசெய்யலாம. மார் என்பதை ஒரு சொலலாகவே அவா எடுத்தோதுகிறுா. எனினும தொல் காபபியா,

"இருதிணை மருஙகி னைம்பால் அறிய
ஈற்றினின றிசைக்கும பதினே ரெழுததுந்
தோறறம் தாமே வினையொடு வருமே"—

என்ற போழ்து மார் சொலலோ அன்றி எழுத்தோ என் றையுறுகின்றேம். இந்நிலையில்...... .....அவ்வச் சொல்லின் இறு திக் கண் நின்று ஒலிக்கும பதினேரிடைச் சொற்களும், என்று வரைதலை நோக்குழி,

ன்—ள்—ர்—ப—மார்—
து—று—டு—அ—ஆ—வ—

எனும இப்பதினொன்றும் இடைச் சொற்கள்தாமோ எனப் பொருளமை யிழந்து வினவுவோம். நச்சுமபெருமை நிறைந்த நல்லாசிரியா இடை இயலில் இவைகளை நினைவு கொள்கின்றனரோ என்றால் வியப்பினும வியப்பு எய்துவ மன்றோ?

போக்கின்று மானமில்லை எனும இரு தொல்காப்பியச் சொற்களும் நம இலக்கியச் சிந்தனையைக் கிள்ளிவிடுகின்றன போக்கின்று என்றமை குற்றமின்று என முப்பெரு இலக்கண வள்ளல்கள் கூறவும், தெய்வச்சிலையார் போகுதலின்று என்னலும், அவர் தம் திருவாய்மலரினை எங்ஙனம வாழ்த்துவதென அறியேன்!

நச்சினார்க்கினியா போன்று இலக்கியங்களினின்றும, ஏற்ற சான்றுகளை வேண்டியாங்கு விடுக்கும் வண்மை, சேனாவரையரிடம் காணப்படவில்லை கேளாதாரும் வேட்பத் தகையவாம் சொல்லினை உடைமையினாலன்றே நச்சார்தாறும இலக்கியத் தோழராயினா, நச்சினாக்கினியர்

"ஆக்கக் கிளவி காரண மின்றியும
போக்கின் றென்ப வழக்கி னுள்ளே." (தொல—22)

"ஆக்கமுங் கேடு மதனால் வருதலாற்
காத்தோமபல சொல்லின்கட் சோர்வு'

என்னும் குறளகத்து,

"சுட்டுமுத லாகிய காரணக் கிளவியும
சுட்டுப்பெய ரியற்கையிற் செறியத் தோன்றும'

எனும் நூற்பாவின் பொருள்வளத்தைக் காணலாம இவ்வுண்மை நினைவிலராய் "செய்யுட்கண் முன்னிற்றல் வந்தவழிக் கண்டுகொள்க, என்றமை சேனாவரையத்துட் காண்போம். இலக்கியச் சான்று முன்னிற்கிறது. காணாது திகைத்த சேனாவரையரைக் காணோம்

மூன்றும வேற்றுமைக்குப் பல உருபுகள் சங்ககால இலக்கியத்துக் காணப்படவும,

'மூன்றாகுவதே
ஒடுவெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
வினைமுதல் கருவி அனைமுதற் றதுவே."

என்ற நூற்பாவினால் "ஒடு" ஒன்றுதான் மூன்றும வேற்றுமையின் உருபோ என வியக்கும் யாம,

"ஓம்படைக் கிளவிக் கையும ஆனும்
தாம்பிரி விலவே தொகவரு காலை"

"கு, ஐ, ஆன என வரூஉம் இறுதி
அவ்வொடு சிவணும் செய்யு ளுள்ளே"

என்பன வருமவரை காத்திருந்தே ஒடு—ஆன எனும் இரண்டையும் அறிந்து கொள்கின்றோம். 'தொன்னூற்கருசி தடுமாறுவ ததன்,' என நன்னூலார், இதனையன்றோ கூறியிருத்தல் வேண்டும்.

பெரியாரொடு சிறியர் சென்றனர் என்னலே தமிழ் இலக்கிய இலக்கணமரபாயினும், சில புதியன புகுதலை வழுவன்று என்றெண்ணி இலக்கியமும் இயற்றுவாராயினர் "வந்த நம்பியைத் தம்பி தன்னொடு" என்ற காவியச்சோலைக் கம்பர் பெருமான், "ஒருவினை யொடுசொல் உயர்பின் வழித்தே" என்ற தொல்காப்பியத் திருமொழியினை மறந்தனர் போலும்! இங்ஙனம் அறிவுடையோரும் இலக்கண அமைதியினை மாற்றுவராகில் பாலும் புளிக்கும், பகலும் இருளும், நான்மறையும் நெறி திரிய இயற்கையல்லன செயற்கையிற் றோன்றலாம்.

"எவ்வயிற் பெயரும் வெளிப்படத் தோன்றி
அவ்வியல் நிலையல் செவ்வி தென்ப."

எனும் நூற்பாவில்—நும் என்பது திரிந்து நீயிர் எனநின்ற திரிபைப் பெயர் எனக்கொண்டு... ....... .......நீயிர் என்பதனை உருபேலாதென்றாராயின், நும் எனத்திரிந்து உருபேற்பதனை ............... ...என்ற சேனாவரையருக்குச் சொல்லாராய்ச்சித் துறை திருநிறை—தேவநேயப் பாவாணர் சில அழகிய கருத்துக்களை வெளியிடுதல் இலக்கண உள்ளம் நயக்கும் தன்மையது. நும் எனும் பெயர் நீயிர் எனத்திரிந்தது என்பது முற்றிலும் வழுவாம், நூம் என்ற முன்னிலைப் பன்மைப் பெயரே நும் எனக்குறுகி வேற்றுமை ஏற்கும் நீயிர் என்பது நீ எனும் முன்னிலை யொருமைப் பெயர் "இர்" ஈற்றோடு கூடியது; ஆதலின் எழுவாய் வேற்றுமை மட்டும் பெறும்....... ... ..............." என்றமை காண்க.

[illegible] மாந்திக் கமலத்தில்
வரிவண்டனையான என்னைப் பைந்தமிழ்மீது பகரொணுக் காதல் கொண்ட டாக்டர், கால்டுவெல் அவர் தம் ஒப்பிலக்கண நூலால்,

எண்ணிற் சிறந்தது தமிழ்; எழுத்திற் சிறந்தது தமிழ்
பண்ணிற் சிறந்தது தமிழ் பாரிற் பரந்தது தமிழ்
மண்ணிற் பழையதும் தமிழ்; மாசற் றொளிர்வதுந்தமிழ்
கண்ணிற் சிறந்ததும் தமிழ்; கன்னிமை சான்றதும் தமிழ்.

எனில், "என்னருந்தமிழ் அன்னாய்! நின்வளம் காணும் பேற்றியொடு, முயலுங்கால் தீரா ஐயங்களும், பொய்யுடை யொருவன் மெய்போலும் கூற்றுக்களும் யான் நின் நற்சுடரைப் பெறுவண்ணம் வழி மறைக்கின்றன. தனித்தமிழின்—தனிப் பண்பினை அறிந்தின்புறாத சிலர்—"தனித்தமிழ்ப் பற்று ஒருவனது சொல் வறுமையைக் காட்டிவிடும்" எனக் கூறவும் அப் புயற் காற்றால் தோயப்பெறும் என்னனைய, இலக்கியச் சோலையில் செந்தமிழ்மலர் கொய்யும் இளைஞர், நின் நூற்பயன் கொண்டு நின்னை எங்கணும் பரப்பும் வகை சிந்தனையாளரா தல் வேண்டும். அந்நாள் தேனினும் இனிய தாய்—தெவிட்டாச் சுவையுடையதாய்—இலக்கணஞ் சிறந்த தாய்—இயல்வளஞ் செறிந்ததாய்—இலங்கும் நின் பொன்னடி போற்றி "என்றும் செந்தமிழ் சுரக்க" என்றும் பரவும் இச் சிறுமியை இலக்கிய வுலகம் மன்னித்துவிடுமோ, அறிகிலேன் அன்னாய்!" என நற்றமிழ் அன்னையின் பொற்றாள் மலர் தெருவெலாம் தூவி, பல்லாண்டு பாட வருவாயோ தோழி?

## எச்சம்

இஃது, 'எஞ்சு' என்னும் பகுதியடியாகப் பிறந்து, 'அம்' என்னும் விகுதிபெற்ற தொழிற்பெயர். இஃது, எஞ்சு + அம் என நின்று புணர்ந்து எச்சம் என்றாயிற்று. இச்சொல்லைத் தம் திருக்குறட் பெருநூலில் வள்ளுவர் அடிக்கடி எடுத்தாளுவர். இதற்குத் தனக்குப்பின் மிச்சமாக இருப்பது, தனக்கு நல்ல புகழாக நிற்பது என்னும் பொருளில் நம் குறள் மணிகளிற் பொருள் நயந்தோன்ற அமைத்து வைத்தருள்வாராயினர். அச்சொல் கருத்தது நுட்பமும், சொல்லின் திட்பமும் அமைந்து பல பொருள் நயந்தந்து நிற்பதை அவ்வக்குறள்களில் காணலாம்.

காட்டாக,

'தக்கார் தகவிலர் என்பது அவரவர்
**எச்சத்தால் காணப் படும்.** (௧௧௪)

என்பது இதில், எச்சம் என்ற சொற்கு '**நன்மக்கள்**' என்றார் பரிமே லழகியார்.

மற்றொரு குறள்,

'வசைஎன்ப வையத்தார்க்கு எல்லாம் இசைஎன்னும்
**எச்சம்** பெறாஅ விடின்.' (௨௩௮)

என்பது. இதில், எச்சம் என்பதற்கு 'செய்தவர் இறந்துபோகத்தான் இறவாது நிற்றல்' என்றார் அவ்வாசிரியர்.

மற்றொரு குறள்,

'**எச்சம்**என்று என்எண்ணுங் கொல்லோ ஒருவரால்
நச்சப் படாஅ தவன்.' (௲௪)

என்பது. இதில், எச்சம் என்பதற்கு 'தான் இறந்தவழி ஒழிந்து நிற்பது' என்றார் அனரே.

# நீத்தார் கடன்

திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்தக் கழக ஆட்சிப் பொறுப்பாளர் திரு. வ. சுப்பையாப் பிள்ளையவர்களின் அருமைத் தாயார் திருவாட்டி வ. சுந்தரத்தம்மையாரின் இறுதி நாள் நீத்தார் கடன் 18-9-52-ல் பாளையங்கோட்டையில் கீழ்க்கண்ட முறையில் நடைபெற்றது.

பொருநையாற்று வெள்ளக் கோயில் தோப்பில் 18-9-52 காலை 7 மணிக்குத் திருவாட்டி சுந்தரத்தம்மையார் இறுதி நாட் கடன் கற்குழி வழிபாடு நடந்தது. பின், வீட்டில் வந்து திதி முதலியன கொடுத்தபின் புனித நீராட்டும் ஆகம முறைப்படி தமிழில் திருநெல்வேலி அக்கினிக் குருக்களையர் அவர்களால் நடத்தப்பட்டது. வந்திருந்த உறவினரும் நண்பர்களும் பகல் விருந்தருந்தினர்.

மாலையில் 5 மணி முதல் 5-40 மணி வரை வீரவநல்லூர் தேவார இசைமணி மறைத்திரு. சுந்தர ஓதுவாமூர்த்தியவர்கள் தேவார இசையரங்கு இசைத்துணைக் கருவிகளுடன் சிறப்பாக நடைபெற்றது. இது, மாலை 5-40 மணிக்குமேல் நடந்த சிற்றுண்டி விருந்தினர்க்கு முந்திய செவி விருந்தாயிற்று.

மாலை 6-15 மணிக்கு அம்மையார் நினைவுக்கூட்டம் தொடங்கியது. முதலில் கடவுள் வாழ்த்துக்கூறப் பெற்றதும் அம்மையார் நீத்தார் கடனாற்றிய அருமைப் புதல்வர் திரு. வ. சுப்பையாப்பிள்ளையவர்கள் இக்கூட்டத்திற்குச் சாத்தூர் வழக்குரைஞர் திரு தூ. சு. கந்தசாமி முதலியார் M. A. அவர்களைத் தலைமை தாங்கும்படி வேண்டிக்கொண்டனர். வேண்டுகோட்கிசைந்து தலைமை தாங்கிய முதலியாரவர்கள் தம் முன்னுரையில் உலக அன்புகளெல்லாம் மேலானது தாயன்பு என்றும் பயன் கருதி அன்பு செலுத்துதல் தாழ்ந்தது என்றும் குறிப்பிட்டார்கள். மேலும் அவர்கள் கூறியன —

"வேழம் திரிந்து மேற்கதுவ அச்சம் தாய்தலை அன்பின் முன்னிற்குமே" என்று எறிபத்த நாயனார் அச்சமானது, முன்நிற்க முடியாத பெருவலி மிக்க தாயன்பின் திறத்தைப் பாராட்டும் சேக்கிழார் செப்பினர். யானை, தம் மீது தாவிப் பாய்கின்றதனால் தம்முயிர்க்கு இறுதி நேரிடும் என்ற அச்சம், மழவிடையுடையான் அன்பர் பணிக்கு வரும் முட்டுப்பாட்டை

நீக்குதலின் வைத்த தலையன்பின் முன் நிற்காது. குழவி யைக் காக்கும் தாய் அச்செலவிலே தனக்கு நேரிடுகிற இடை ரையும் நோக்காது விரைகின்றது போல இங்கு தம் உயிர்க்கு வரும் தீங்கையும் நோக்காது அன்பு மீதூர்ந்து பாய்ந்தனர். அன்பு அச்சத்தை மேலிடும் என்பது நூற்றுணிபு

தாய் கமலவதி தன்பாற் கருப்பநாள் நிரம்பி விழைவார் மகவு பெற அடுத்த வேலையதனிற் காலம் உணர் பழையார் "ஒரு நாழிகை கழித்துப் பிறக்குமேல் இப்பசுங் குழவி உழை யார் புவனம் ஒரு மூன்றும் அளிக்கும்" எனலும் நல்ல ஓரை வரும் வரை வேதனையைப் பொறுத்துக் கொண்டு பின் கரு வுயிர்த்தாள் என்று வரலாற்று வாயிலாக அறிகிறோம் அத் தகைய அன்பு எத்துணைச் சிறப்பு வாய்ந்தது.

தாய்தான் நாம் கண்கண்ட தெய்வம். அன்பை அவரிடத் தில் காணலாம். அடுத்தபடியாக எம்பெருமாட்டியாகிய பராசக்தி யிடம் காணலாம். இறைவன் திருக்கோயில் எவ்வளவு முதன்மை யுடைத்தோ அவ்வளவு பெருமையுடைத்து தாயாம் கோயில். ஆகவே, தாயன்பே தலைசிறந்த அன்பென்பதும் அத்தாய்க்குச் செய்யத் தக்க கடன்களைத் தவறாது செய்தல் மக்கள் கடன் என்பதும் இன்று காலை நடந்த நீத்தார் கடன் முறையில் நன்கு விளங்கும்.

பின் ம.-தி-தா இந்துக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் வித்வான் கு அருணாசலக்கவுண்டரவர்கள் பேசினார்கள்.—

தன்னையே தியாகம் பண்ணுவதுதான் தாயன்பு. தமிழ்ச் சாதியில் பார்க்கின்ற இச் சிறப்பு வேறு எந்தச் சாதியிலும் இல்லாதது சேயிடம் தாய்க்கு இருக்கும் அன்பும், வாஞ்சை யும் மற்றச் சாதிகளில் பார்க்கமுடியாது

சைவ சித்தாந்திகளுக்கு ஆலயம் மிக இன்றியமையாதது. தாயே ஆலயமாக இருக்கிறாள் அவளே தெய்வம் அவள் வாய் வாக்கே வேதம். பட்டினத்தடிகளும் தாயை இழந்தபொழுது, தாம் துறவியாயிருந்தும் வருந்தினர் முற்றத்துறந்தவரும் தாயன்பை மறக்க முடியவில்லை.

> "தக்கார் தகவிலார் என்பது அவரவர்
> எச்சத்தாற் காணப் படும்"

என்னும் குறளுக்கிணங்கச் சுந்தரத்தம்மையார் அவர்கள் விட்டு வைத்த செல்வங்களாகிய திருவரங்கம் பிள்ளையாலும் சுப்பையா பிள்ளையாலும் அவர்களது தன்மை தெரியவரும்.

திருவரங்கம் பிள்ளையவர்கள தமிழ்ப் புத்தகங்களை அச்சிடுவது, வெளியிடுவது முதலியவற்றை ஒரு புதிய பாதையில் அமைத்தார்கள. 1921-ல் அவாகளிலலாவிட்டால் தமிழ்ப புத்தகங களைப் புதிய முறையில் அச்சிட்டிருக்கமுடியாது சைவசமயப் பற்றும் அப்படியே சுப்பையா பிளளை அவாகள் தன் தமையனார் செய்தவற்றை நிலைநிறுத்தியுள்ளார்கள.

திருநெலவேலி மாதிரமூர்த்தி உயர்நிலைபபள்ளித் தமிழாசிரியா **வித்துவான் அ. க. நவநீத கிருட்டின பிள்ளையவர்கள்** அதன் பின் **தாயன்பு** என்பதுபற்றிப் பேசினாகள் —

தாயன்பு என்பது என்றும வற்றாத பேரன்பு. அது தன்னிகரில்லாப் பேரன்பு வானுலகததில் சென்று பெறும் செல்வததைத் தாயிடம பெறககூடும "தாயோடு அறுசுவை போம், தந்தையோடு கல்விபோம" என்றா ஔவைபபிராட்டியார். "தாய்க்குப பின் தாரம்" என்பது பழமொழி. இவை எல்லாம தாயினது எல்லையற்ற பேரன்பைக்காட்டும

இறைவனுக்கு உவமையாகப புலவர்கள் தாயை ஒபபுயர்வற்ற உவமையாகக கருதினாகள "அம்மையே அபபா ஒபபிலாமணியே........" என்ற திருவாசகத்தில் மாணிககவாசகர் தாயின் அன்பைத்தான் இறைவன்பால் காண்கின்றார்

தனக்குபபிறந்த குழநதை ஆண்குழந்தை என்றதும் அளவற்ற மகிழ்ச்சி தாய்க்கு உண்டாகிறது எத்துயரும் அகன்றுவிடுகிறது எல்லையற்ற அல்லல அவ்வளவும் போய் விடுகிறது. தன்மகன் சான்றோன் என்று கேட்டுவிட்டால் அவளது மகிழ்ச்சியின் அளவுக்கு எலலையே இல்லை.

"ஈனற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய்"

மற்றவர்கள் சான்றோன் என்று சொல்லவேண்டும். ஆனல் அது பெண்ணியல்பால் தானாக அறியமாட்டாமையால கேட்ட தாய் எனப் பரிமேலழகர் உரைகூறுவது பொருந்தாது.

பொல்லாத பிள்ளையையும் தாய் தள்ளுவதில்லை. குற்றம் செய்வானுனல் ஏதோ அறிவு மயஙகிச செய்துவிட்டான் என்று தான் சொலலுவாள தன் மகன் களளன், சூதாடி என்றால் ஏதோ சேர்க்கை வாசனையால் வந்தது என்பாளேயன்றித் தானாகவே அவன் அத்தன்மையன் அல்லன் என்றே சாதிப்பாள.

இராமலிங்க அடிகள் இறைவனைத் தாயும் தந்தையுமாய் கண்டான் என்பர். "தபுத்த ஓர் மகனைத் தந்தையீண் டடித்

தால் தாயுடன் அணைப்பள........" என்பதனால் தந்தை ஒறுக்கு மிடத்தும் தாய் தன் தலையன்பால் தடுத்துங் காப்பள் என்பது விளங்கும்

தூத்துக்குடி சித்தாந்த முது பெரும்புலவர் ந சிவகுருநாத பிள்ளையவர்கள் அதன்பின் பேசினார்கள் :—

காலஞ்சென்ற அம்மையார் எனக்குச் சிறியதாயார் என்ற முறை "நீ, நான்" என்று சொல்லும் முறையில் இருந்தது. இனி, அப்படி அன்புடன் "நீ, நான்" என்று அழைப்பதற்கு எனக்கு யார் இருக்கிறார்கள் ?

சைவசித்தாந்த அடிப்படை அன்பு முடிவில் இறைவன் திருவடியில் அன்பு முதிர்ந்த பெரியோர்கள் தான் இருப்பார்கள்.

"அன்பைப் பெருக்கிஎன் தாருயிரைக் காக்கவந்த
இன்பப் பெருக்கே இறையே பராபரமே"

என்றார் தாயுமானவர்

உலகையும் அண்டபிண்டங்களையும் படைத்த நம்மை ஆள வந்த இறைவன் எதற்காக ஆணையும் பெண்ணையும் படைத்தார் ? இந்தச் சின்னக் காரணம் இல்லாமல் முடியாதா ? ஏன் இந்தத் தாய் தந்தையென்று படைத்தான் என்றால் அன்பு நெறியை வளர்க்கவே உறபத்தி நெறியை உண்டுபண்ணினார். தன்னுயிரைக் கொடுத்தாவது தன் பிள்ளையைக் காக்கவேண்டும் என்பது நம்மிடமும் கொடிய விலங்குகள், பாம்பு முதலிய எல்லா உயிர்களிடமும் இருக்கிறது

"தாயிற் சிறந்தொரு கோயிலுமில்லை." அறிவுடையவன் என்று உலகத்தார் சொல்லும்படியாக இருப்பன் தாயன்பு செலுத்தித் தாயைக் கோயிலாகக் கொள்ளுபவன்

"பெறுமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற"

அதுதான் சிறப்பு.

பிறக்கும்போதே அறிவறிந்த மக்களாய்ப் பிறப்பது தாம் முன்னாலேயே பல தலைமுறைகளில் கல்வி கற்றவர்கள் ஆவர். மேலும், அறிவு உண்டாகும் மக்களைப் பெற்றவர்கள் சிறப்புடையோர்

அன்னையாரின் மகனார் திருவரங்கம்பிள்ளை, கிடைக்கும் குறிப்புக்களைத் தொகுக்கச் சட்டைப் பைகளில் எப்பொழுதும் காகிதம் நிறைய வைத்திருப்பார்கள். அவர்களுக்குத் தமிழ்க்

கல்வியை நன்றாய்ப் பரப்பவேண்டும் என்னும் எண்ணம் எப்பொழுதும் உண்டு. தமிழ் நூல்களைச் சிறந்த நிலையில் அச்சிட்டு வெளியிடவேண்டுமென்று அதில் வெற்றியும் கண்டார்கள். இலக்கியப் பகுதிகள், சமயப் பகுதிகள், சாத்திரப் பகுதிகள் இவையெல்லாம் அச்சிட்டார்கள். அன்னையாரின் இளைய மகனார் சுப்பையாபிள்ளை அவர்களும் உத்தியோகத்திற்குச் செல்லாது இத் துறையிலே சிறந்த தொண்டாற்றுகிறார்கள். இப்படிப்பட்ட நல்ல மக்களை—உலகத்திற்குப் பயன்படத் தக்க பிள்ளைகளைப் பெற்றதாலேதான் தாயக்கு இச்சிறப்பு நடைபெறப் பார்க்கிறோம்.

அம்மையார் இறைவன் திருவடிதான் அடைந்திருப்பார் என்பதற்கு ஐயமே இல்லை;

"தம்பொரு ளென்ப தம் மக்கள் அவர்பொருள்
தந்தம் வினையான் வரும்"

என்றாராகலின்.

பின், இறந்தார்க்குச் செய்யும் கடன்களைப்பற்றிப் பேசினார்கள் :—

திதி கொடுப்பதை விடக்கூடாது. இறுதிச் சடங்குகள் எல்லாம் பெரியவர்களால் வைக்கப்பட்டவை: தாய், தந்தை, மனையாள் இவர்களின் ஏழுதலைமுறைச் சுற்றங்களும் நரகத்திலிருந்தாலுங்கூட உய்வார்கள். நாம் அவர்களுக்குச் செய்கின்ற கடமைகளை ஏற்று எக் கடவுளர்க்குச் சேர்க்கவேண்டுமோ அவர்களுக்குச் சேர்த்துப் பயன்படுத்தத் தெய்வங்கள் இருக்கின்றன. தேவர்கள் சூக்குமமாயிருக்கிறார்கள். தர்ப்பணம் முதலிய செய்வதால் நமது வேண்டுதலுக்காக ஆண்டவன் இரங்கி அருள் புரிவான். பதினாறு கிரியைகள் (சோடசம்) என்று நமக்குக் கூறப்பட்டுள. உத்தரகிரியைகளை விட்டுவிடக்கூடாது என்று சொல்லிக் கீழ்க்கண்ட இரங்கற்பாடலைப் பாடினார்கள்.

"அருந்ததிக் கற்பின் மிக்காள் அன்னை சுந்தரி நல் லம்மை
விருந்தெதிர் கோட லாதி விட்டறம் அனைத்தும் காற்றிப்
பெருந்திரு வரங்கம் சுப்பை யாபிள்ளை தம்மைத் தந்து
விருந்தெதிர் விண்ணோர் கொள்ள வீட்டைத் தின்புற்றாளே".

பின் சைவசித்தாந்தக் கழகத் திருவள்ளுவர் தமிழ்ப் புலவர் கல்லூரிப் பேராசிரியர், பெருநாவலர் ப. சி. புன்னைவனநாத முதலியாரவர்கள் பேசினார்கள் :—

"காலஞ்சென்ற அம்மையாரவர்கள் தங்கள் மக்களில் திருவரங்கனாரே குடும்பப் பொறுப்பை மேற்கொண்டு அரு முயற்சி செய்து, திரைகடலோடியுந் திரவியந் தேடிக் குடும்பத்தை நன்னிலைக்குக் கொண்டுவந்தவர் என்றும், தம் ஒரு துணையும் உறுதுணையுமாகிய ஒண்பொருளாம் உடன்பிறப்பாளரான சுப்பையா பிள்ளையையும் தாம் நிறுவிய கழகப் பணியைத் தம்மைப்போல செய்து சிறக்கப் பயிற்றுவித்தாரென்றும், இளவலும் அண்ணல் உரையைப் பேணிக் குடும்பப் பொறுப்பையும் நடத்திவரலானார் என்றும் அடிக்கடி சொல்லி மகிழ்வர். தம் உயிர் பிரியுங்காலத்து, தம் ஒரு மகன் சுப்பையா பிள்ளை இருக்குமபடியான பேறே கிடைக்கவேண்டுமென்று விரும்பிக் கொண்டிருந்தனர். நல்ல உள்ளம் கருதியது நன்மையாகவே முடிந்தது குடும்பத்தை நடத்தும் பெண்ணுக்கு என்ன என்ன செய்தி தேர்ச்சியும் மருந்துப் பயிற்சியும் வாய்ந்திருக்க வேண்டுமோ அவையெல்லாம் வாய்க்கப் பெற்றவர். தம் இல்லம் புகும் புலவர் அனைவர்க்கும் அன்புடன் உணவளித்து அக மகிழ்ந்தவர். நல்ல நினைவாற்றலுள்ளவர்," என்று பேசியதுடன் பின்வரும் பாவும் கூறினார்கள்

"சீர்மருவு நந்தனம் ஆவணித் திங்கள்மூ
வாறு செவ் வாயவ் விட்டம்
ஏர்மருவு வயிரமுத் தினைமருவு சுந்தரத்
தம்மை இறை இணைமலர்த் தாள்,
போமருவு திருவரங் கம்சுப்பை யாவெனப்
பிறங்கிரு மக்களமணி யைப்
பாமருவு புகழுற வேசெய்சீரெண் பத்துநால்
அடைந்தனள் பரங்குபெற வே".

அதன்பின் தலைவர் முடிவுரை கூறினார்கள்

## தலைவர் முடிவுரை

இறைவன் தன்னையே தந்தான், தானாகவே முழுவதும் கொடுத்துவிட்டான் அப் பரம் பொருள் எடுக்க எடுக்கக் குறையாதது. எவ்வளவு எடுத்தாலும் குறையாது மறுபடியும் நிறைவாயிருப்பது, அதுதான் Infinity யின் இலக்கணம்.

தாயின் அன்பை விளக்குதற்கு அண்மையில் நடந்ததொரு நிகழ்ச்சியைக் குறிப்பிடலாம் கோவிற்பட்டியில், மணமாகி 26 யாண்டுகள்வரை மகப்பேறின்றி வருந்திய கணவனும் மனைவியும் அறிஞர் சொற்படி,

"பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினோ டுள்ளநினை
வாயினவே வரம்பெறுவர் ஐயுறவேண் டாவொன்றும்
வேய்அனதோள் உமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையார் அவர்தம்மைத் தோயாவாம் தீவினையே",

என்னுந திருப்பாட்டுக் கிணங்கத் திருவெண்காடு சென்று முக் குள நீரில் முழுகி அஙகெழுந்தருளியிருக்கும பெருமானையும் அம்மையையும வழிபட்டு வநதனர். இறைவன் திருவருளால் அவ்வம்மை வயிறு வாய்க்கபபெற்றுப் பததுத திஙகள் நிறைந்த தும் கருவுயிர்ககுந காலம வநதது. அப்பொழுது அவாகள திருநெலவேலியைச சோநத வண்ணூர்பேட்டை மருததுவச சாலைக்கு வந்தனா அங்குள்ள பெண் வைத்தியா கவலைபபட வேண்டாவெனறும தாமே நன்கு கவனித்துக் கொளவதாகவும தெரிவிததனர். பின் மதுரைக்குச் சென்று அங்குள்ள மகப் பேற்று மருததுவசசாலையில் தங்கினர்

கருவுயிாகருங் காலம நெருங்கிய பொழுது டாக்டா அநத அமமையிடம, "இமமகவை உயிருடன் வெளிப்படுததுவது கடினமானது நீ ஒபபினால், உன் கணவரும எழுதிக கொடுத் தால் வயிறறைக் கீறியாவது குழநதையை உயிருடன எடுத் துத தரலாம் உன் கணவரும அருகில் இல்லையே," என்று கவன்றிருக்கும பொழுது கணவரும வநதனா உடன் இரு வரும அறுவைத தொழிற்குடன்படவே மருத்துவரும வயிற றைக் கீறிக் குழநதையைக கேடின்றி எடுததனா மகனைக கண்ட தாயும மிக மனம மகிழ்நதனள. தாயும பிழைததனள. இந நிகழ்சசியானது தாயானவள தன்னுயிா போவதாயிருந தாலும தன் குழந்தை உயிர் வாழவேண்டுமென்னும் தன்னல மற்ற தன்மையுடையளாயிருப்பதனையும தாய்க்குச சேயின் கணுளள ஒபபற்ற அன்பையுங காட்டுகின்றது. தாயுங குழநதையும் நலமபெற்றிருக்கின்றனா

திலகவதியாரால் தாம உய்ந்தமையை ஆளுடைய அடிகள் "ஈன்றாளுமாய், எநதையுமாய், உடன் பிறந்தாளுமாய்..........." என்றெல்லாம் பாடியது தாயைப்போனற தமக்கையிடம வைதத அன்பினாலே

மணிமொழிப பெருமானும தம் திருவாசகத்தில் "அம் மையே அப்பா ஒபபிலா மணியே" என்கிறார். உலகத்திற் கெல்லாம ஒளியாயிருப்பதால் "ஒப்பிலா மணியே" என்றார். ஆதலினால் "அன்பினில விளைநத ஆரமு"தாகிய பராசததி யிடம் நாம அனைவரும அன்புடையராயிருநது அவர்க்குச் செய்யத தகும் வழிபாடுகளை அன்புடன் செய்து உய்வோ மாக.

ıதியில், திரு. வ. சுப்பையாப்பிள்ளையவர்கள் தம் ரா இறுதி நாட் கடன் இந்நிலையில்—இமமுறையில் நடைபெற இறைவன் திருவருளும பெரியோர் பொன்மொழி

யும நன்மொழியும துணைபுரிந்தமைக்கு நன்றி பாராட்டியதுடன், கூட்டத்தில தலைமை தாங்கியவாகளும, சொறபொழிவாளாகளுககும, வநது சிறப்பித்த உற்றா உறவினா நணபாகடகும தம நன்றியை அன்புடன தெரிவித்துககொண்டார்கள். யாவரும இறைவன வழிபாடடுக்கு வரவேண்டுமென்றும வேண்டிக்கொண்டார்கள

தேவார இசையரங்கு நிகழ்த்திய வீரவநல்லூர் தேவார இசைமணி மறைத்திரு. சுந்தர ஓதுவாமூர்த்தியவாகளும், பாளையங்கோட்டைச் சலதரங்கம் அப்பாசாமி ஓதுவாமூர்த்தியவாகளும, நெல்லை அருணகிரி இசைககழக அமைச்சர் திரு. இராம கனகசபாபதி பிள்ளையர்களும மங்கள வாழ்த்துப்பாடிக் கூட்டம இனிது நிறைவே

ரவு 7-30 மணிக்குக கூட்டத்திற்கு வநத அன்பர்களும னர்களும தேவார பாராயண முழககததுடன் சிவபிரான் கோவிலுக்குச சென்று அருச்சனை வழிபாடாற்றி வீடு திருமபினர்

## தாய்மைப் பேறு

பெண் பிறவியின் விழுப்பம், சேயைப் பெற்றுத் தாயமைப் பேறடையும செப்பமாகும. இந்தாயமை அனைப்போல் வேறு எடுத்துக காட்டுதற்கு உவமம இல்லை. ஓரறிவு உயிர்முதல் ஆறறிவு உயிர்கள்வரை, தந்தம் பிள்ளையை எவ்வளவு கண்காணித்துப் பாதுகாக்கின்றன. பயிர்கள், தம் பொதியாம் இளஞ்சேயை மெல்லிய சிறு போர்வையை மூடிப் பாதுகாக்கின்றன. குருவிகள் முட்டையிட்டுக் குஞ்சு பொரித்தற்குக் கூடுகள் கட்டுகின்றன, முட்டையிட்டபின அடைகாக்கின்றன, அவைகட்கு வேளை தவறாது இரை கொணர்ந்து ஊட்டுகின்றன எவ்வளவு தாயன்பு? கொடிய விலங்குகளான சிங்கம், புலி, கரடிகளுங்கூடத் தம் குழந்தைகளிடத்து எவ்வளவு அன்பு பாராட்டுகின்றன; பால் ஊட்டுகின்றன; பாதுகாக்கின்றன. இவ்வாறே படிப்படியாக ஒவ்வொன்றையும் காணும் போது தாயமைப் பேறு எவ்வளவு சிறந்தது பாரமின்! மக்களில தம் சேயைப் பாதுகாத்தற்கு எவ்வளவு தாயமார் துன்புறுகின்றனா, மருந்துணகின்றனா. மருத்துவரைக் கண்டு மருந்தூட்டி சேயக்கு நோயைப் போககுகின்றனா. இன்னும அவை எண்ணிலடங்கா. இத்தாய்மைப் பேறு தரும பெணமை வாழ்க! வாழ்க! என்றும் இவ்வன்பு மாறாதுவளாக.

—செல்லூர்க்கிழார்.

# இரங்கலுரைகள்*

செவ்வி மலர்நத் திருமுகமும் செய்கையுரை
நவ்வும் படியெவர்க்கும் நாட்டுதலும் - ஔவை எனும்,
பண்பாள் தமிழ்சிவத்தைப் பார்க்குணர்த்தும் மக்கள்தந்தாள்
மணபுகழ் விண்புகுந்தாள் மன.
— திருவளர்வரகம் ப. இராமநாத பிள்ளை, சென்னை.

பயிர்வளர் பாணமைப் பசுந்தமிழ் வளர்த்த
பாண்டியர் அனையபண் பினராய்ச்
செயிரிலாத் திருவ ரங்கத்தைச் சீர்சால சுப்பையர்
வினைத்தந்த தெய்வ
வயிரநன் முத்து சுந்தரத் தன்னை
வளர்தமிழ் அன்னையே யனையாய்!
உயிர்வளர் சிவத்தின் உடன்வளர்ந் தனையோ?
உலகத்தை மறந்தையோ? அன்னாய!
—புலவர் - ந. சேதுரகுநாதன் - தமிழ் விரிவுரையாளர், விருதுநகர்.

இந்நிலை யெண்பானு லேறற மாயினும்
அன்னையிற் சிறந்தவர் ஆரு மின்மையால்
எந்நிலை யிறப்பினும் ஈன்ற தாய்மகள்
துன்னுறு துயர்பிறர் துயக்க வல்லரோ.
—பண்டித புலவர் ஞா. தேவநேயனார், சேலம்.

சைவநெறி யோங்கத் தமிழ் வளர்ப்பாருன மைந்தர்
செய்வத் தவமனைப்போற் செய்தவரார் - மெய்வைந்
தயாவிலையாய ஈச னடிசேர்ந்து வாழி
வயிரமுத்துச் சுந்தரத்தம் மா
—புலவரேறு அ. வரதநஞ்சைய பிள்ளை, தோரமங்கலம்

அரங்கன் பிரிவதனால் அகமவருந்தி நாள்நாளும்
இரங்கிநின்ற நீ அந்த இனியமகன் தனைக்கண்டு
பரங்கருணைத் தடங்கடலாம் பரமசிவன் அடிமலரை
வரங்கள்பெற அடைந்தாயோ வயிரமுத்துச் சுந்தரமே!
—சு. அ இராமசாமிப் புலவர், கருப்பக்கிளர்.

தாங்கள் அமிழ்தினுமினிய தமிழுக்கு ஆற்றும் தொண்டு அருமை வாய்ந்தது அப்படிப்பட்டவரை உலகுக்களித்த அம்மையாரை நாங்கள் பாராட்டவில்லை யென்றால் நன்றி கொன்றவர்கள் ஆவோம்.
K. சோமசுந்தரஞ் செட்டியார், பி ஏ., சென்னை.

வயது முதிர்ந்தவர்களே எனினும் அன்னையின் பிரிவு ஆற்றொணாதது ஒன்றுதான். —திரு. வித்துவான் கண்ணப்ப முதலியார். சென்னை.

அன்னையார் பிரிவு எத்துணைத் துன்பம் தரும் என்பதை அனுபவித்து அறிந்தவன் நான்
—பேரா. திருகூடசுந்தரம் பிள்ளை, எம். ஏ., பி. எல், சென்னை.

நமக்கினியார் ஒருவர் எத்துணை, நெடுங்காலம் வாழ்ந்து பிரியினும் இன்னுங் கொஞ்சநாள் இருக்கலாகாதா! என்றுதான் நம் பேதை மனம் நினைக்கிறது.—வ பா. தாமரைக்கண்ணி, வல்லை பாலசுப்பிரமணியம், சென்னை.

---

* திருவாட்டி, சுந்தரத்தம்மையாரவர்கள் 2-9-52-ல் இறையடிப் பேறடைந்தமைக்குத் தமிழ் பெருமக்கள் கூறிய இரங்கலுரைகள்.

தமிழ்த்தாய், தமிழ்த்தாய் எனப் பேசுகின்றோம். அந்தத் தமிழ்த்தாய் கட்புலனுக்குத் தோன்றாத தமிழ்த்தாய் நங்கள் தாயரோ கட்புலனுக்குத் தோன்றியிருந்த தமிழ்த் தாய். தமிழ் மக்கள் யாவரும் அவரது பிரிவை ஆற்றாது வருந்துவர். —**வ. சு. செங்கல்வராய பிள்ளை**, எம். ஏ., சென்னை.

இறைவன் கருணைக்குத் தாயன்பை யன்றோ உவமை காட்டுவர்! அத்தகைய பேரன்பு நங்களுக்கு இனிக் கிட்டுவதெப்படி? எனினும் அவர்கள் தங்களுக்கு வழங்கிய வாழ்த்துக்கள் நுங்களுக்கு மன அமைதியைக் கொடுக்கும். —வித்துவான் **வி. சிவக்கொழுந்து**, பெரியகுளம்.

தாயன்புக்கு இணையேது! கடவுளன்புக்கு உவமானம் என்பார்கள்.
—**எம். எம். கிருஷ்ணசாமிப் பிள்ளை**, பி. ஏ., பி. எல்., கோயமுத்தூர்.

தாயின் அன்பு ஒப்பற்றது. ஈடுசெய்ய இயலாதது. எத்துணைக்காலமிருப்பினும் சலியாதததுதான்.
—சிவக்கவிமணி **சுப்பிரமணிய முதலியார்**, பி. ஏ., கோயமுத்தூர்.

எத்துணை ஆண்டு முதிர்ந்தவர்களாயினும் தாயின் பிரிவு துயரந் தருவதே. வினையளவு நின்றொழியும் உடலின் நிலையாமை யுணர்ந்து ஆறுதலடைய வேண்டியதே கடமை. இறைவன் எல்லோர்க்கும் ஆறுதலளிப்பானாக. —பண்டிதமணி **மு. கதிரேசச் செட்டியார்**, மகிபாலன்பட்டி.

பட்டினத்தார் முற்றும் துறந்த முனிவர். அவர்களே தாயாரின் பிரிவை எண்ணி எண்ணி வருந்தினார்கள் என்றால் நமது செயல் என்ன?
—**வா. தி. மாசிலாமணி முதலியார்**, இந்துமத பாடசாலை, வாலாஜாபாத்.

வருந்துகின்றேன். மிக நல்லவர்கள். வினையளவு நின்றொழிவது ஆக்கை என்பதை நினைந்து ஆறுதல் அடையுங்கள்.
—வயிநாகரம் **வே. இராமநாதன் செட்டியார்**, தேவகோட்டை.

பெற்ற தாயினும் பேரன்புடையார் கடவுள் ஒருவர் தவிர வேறொருவரு மல்லர் என்பது எல்லாச் சமயத்தினர்க்கும் உடன்பாடே! பற்றெல்லாம் முற்ற நீத்துப் பரம்பொருளைத் துணையே வேண்டிய பட்டினத்தடிகளாரும் தாயின் பிரிவாற்றாது பல பாடல்களால் அழுது இரங்கிக் கண்ணீர் விட்டுக் கதறினாரென்றால் அத்தாயின் பெருமையன்பு சொல்லும் தரத்த தாகுமோ. —புலவரேறு **அ. வரதநஞ்சைய பிள்ளை**, கோரமங்கலம்.

தாயச் செல்வத்தை இழந்த நுங்கட்கு எமது கட்டுரை ஒரு ஆறுதல் அளிக்கப் பயன்பட்டது குறித்து மகிழ்ச்சி யடைந்தேன்.
—**தி. ஆ. பெ. விசுவநாதம்**, திருச்சி.

அவர்களது அன்பின் உருவம் என் கண்முன் தோன்றி அவரது பிரிவின் மிகுதியைப் புலப்படுத்திற்று. இனிய சொல்லும் அரிய பண்பாடும் உடைய அவர்களது பிரிவு மிக்க வருத்தத்தைத் தருகிறது.
—வித்துவான். ஒளவை, **சு. துரைசாமிப் பிள்ளை**, தியாகராயர் கல்லூரி, மதுரை.

தமிழ்நாட்டுக்கும், ஏன்? உலகத்துக்கே சிறந்த பல நூல்கள் அச்சிட்டுக் கிடைக்குமாறு அரும்பணி யாற்றிய தவமணிகளை ஈன்றெடுத்துத் தமிழுலகத்துக்குப் பேருதவி செய்த அம்மையார் மறைவு ஈடு செய்ய இயலாத பெரும் நட்டமாகும். —**திருவள்ளுவர் கழகம்**, தென்காசி.

சைவசித்தாந்தச் சொற்பொழிவுகளையும், அங்கு நடைபெற்ற காட்சிகளையும் காண அவர்க்கொண்டு காந்திமகாநமாவைப் போன்ற சாந்தியுடன் சிவஞானபோத வகுப்புக்கு அன்று வந்த காட்சியை இன்றும் கண்டுகொண்டிருக்கிறேன்.

—வித்துவான் கோ. முருகையா, தமிழாசிரியா, கவுந்தப்பாடி.

வெறுநீக கிழவா என அடியேனுக்குப் பெயரிட்டுவைத்த பெரியம்மையாா, தண்ணீா நிலையிட்டு வைத்த கிழவா சிவபெருமான் திருவடி நீழற் சென்றமர்ந்த செய்தி கிடைத்து வருந்தினேன.

—சேலை, சகதேவ முதலியார்

பணடைய நினைவுகளும, அம்மையாரவாகளோடு உரையாடியபோது அவாகள் உள மகிழ்ந்து பேசி, ஊட்டுவிக்குமபோது உறவாடி இருந்த நினைப்புகளெலலாம தோனறின —க. முத்துக்குமாரசாமி பிள்ளை, குலசை.

முதிர்ந்த பழம் கொப்பிலிருந்து தானுகவே உதிர்ந்துவிட்டது அன்னுா ஆன்மா அமைதி பெறுவதாக.

—எம். பி. எஸ். வேலாயுதம பிள்ளை, சென்னை

She has lived her full life and she should have been happy that her son has been doing good work to the Hindu Community I wish peace to the departed soul.

—*S Nataraja Nadar*, District & Sessions Judge, Madurai.

பெற்றதாய் இருக்கும வரை பிளளைகள் செல்லப் பிள்ளைகளாகவே இருநதுவருவோம் நமக்கு அது கொடுத்துவைக்கவில்லை.

—சடகோப பிள்ளை, கும்பகோணம.

அனபில் தாயன்பே தலை அத்தகைய பேரன்புடையாரைப் பிரிதல் கொடிது. —கா. கோவிந்தன், எம். ஏ., திருவத்திபுரம்.

பாலு நினைந்தூட்டும தாயினைப் பிரிந்த தங்கள் துயரத்திறகும், துன்பத்திற்கும நமது ஆறுதல் —அருணுசலதேசிக சுவாமிகள், குன்றக்குடி.

சில திஙகளுக்கு முன் யான் அவாகளைக் கண்டு பேசியபோது, அவர்களின் அனபின் பெருக்கும அறிவின் தெளிவும அமைதியின் சிறப்பும உணர்ந்து வியந்து போற்றினேன, தூய தாயமையின் வடிவமாக அந்த முதிய உருவம எனக்குக காட்சி அளித்தது

—டாக்டர் மு. வரதராசனுர், சென்னை.

அன்னை சுநதரம் அம்மையார் அவர்கள் தமிழகத் தாயர்கட்கோர் எடுததுக்காட்டென மிளிாநதவா. தம உழைப்பால் உயர்ந்த அறிவு நலம் வாயந்த சீரிய தமிழ்க்குடும்பம ஒன்றினை நாட்டுக்குத் தந்தவா.

—புலவர் மயிலை சிவ முத்து, சென்னை.

அருளைத் தாயாா அண்மையில சிவ நினைவோடு இறைவன இன்னடி நீழல் அடைந்தமை அறிந்து ஆற்றொணுத் துன்பம அடைந்தேன்.

—இராம. பெருமாள் பிள்ளை, திருச்சி.

உண்மையான தமிழ்த்தாய்க்கு எடுத்துக்காட்டாக இலஙகிய வயிர முத்துச சுந்தரத்தம்மையே! உஙகள் உள்ளம தமிழ் உள்ளம். உஙகள் ஊன் தமிழ் ஊன் சஙகம் வைத்து மொழிவளர்த்த பாண்டியருக்குப் பின் தூய இனிய செந்தமிழ் பேணும மக்களை ஈன்று வளர்த்தீர்கள்.

உங்கள் உயிர் மாசில்லா இறைவனின் இணையில திருமலர் அடியின் கண் அமர்ந்த பேரின்பத்திற் குளித்திருக்கும். இன்றேல் மீண்டும் பிறப்புளதேல் தமிழன்னையாக வந்து இன்னும் தமிழச் சிங்கங்களை அருளி உலகினைக் காண்பீர்கள் என்பது உறுதி.

—வித்துவான் **ந. சேதுரகுநாதன்**

செய்தி கேட்டு மன்றத்தினர்கள் அனைவரும் பெருந் துன்பம் உற்றோம். இத்தகைய சிறந்த தாயரை எந்த வயதில் இழக்க நேர்ந்தாலும் அது மிகப் பெருங் கவலையளிப்ப தொன்றேயாம்.

—புலவர் **கோ. வில்வபதி**, செயலாளர் டாக்டர் S. **தருமாம்பாள்**, தலைவர், மாணவர் மன்றம், சென்னை.

அன்னையாரின் உயிர் நண்ணரிய சிவானந்த ஞான வடிவேயாகி, அண்ணலார் சேவடிக்கீழ் அமர்ந்திருப்பதாக.

—**ந. சிவகுருநாத பிள்ளை**, சித்தாந்தப் பேராசிரியர், தூத்துக்குடி.

தங்கள் அருமை அன்னையார் மறைவு கேட்டு வருந்தினேன், ஆனால் அவர்கள், புகழ் மிக்க தம்மிரு புதல்வர்களிடையே நீண்ட நாள் வாழ்ந்திருந்தனர். எனவே வருந்துவதிற் கேதும் இல்லை. அம்மையார் ஆன்மா என்றும் அமைதியில் தோய்க.

—**வி. ஏ. இராசகோபால்**, சென்னை.

தமிழ்த்தாயின் திருவுளமகிழும் தொண்டர்களைத் தந்த திருச்செல்வி காலமான செய்தி உணர்ந்தேன். அன்றே என் தீயூழ்ந்த மனங்கொள்ளாத துக்கத்தினை எழுதும் நலனும் இலன் ஆனேனே.

—கவியரசு R. **வேங்கடாசலம் பிள்ளை**, கரந்தை.

வினைமாட்சியிற் சிறந்த திருவரங்கம் பிள்ளையையும், கலங்கரை விளக்காக நாளும் கழகத்தை மிளிரச்செய்துவரும் திரு. சுப்பையா பிள்ளையையும் ஈன்ற மாட்சிமைப்பட்ட திருவாட்டியார் வாழ்வை நீத்தமை அறிந்து இரங்குகின்றேன். —வித்துவான் **வை. பொன்னம்பலனார்**, முசிறி.

தமிழுக்கு உழைக்கும் பிள்ளைகளைப் பெற்றெடுத்த திருமேனி தீத் திருக்காப்பு கொண்டுவிட்டது. இவர்கள் மறைவு குறைவிளைப்பதாகும்.

—**கி. இராமலிங்கம்**, எம். ஏ., திருச்சி.

சைவத்தையும் தமிழையும் பாதுகாத்து வளர்த்துவரும் இரு பொன்மணி மக்களைப் பெற்ற அன்னையாரின் பிரிவறிந்து துன்புறுகிறேன். இவ் ஆறாத் துன்பத்தைப் பொறுக்க இறைவன் திருவருள் புரிக.

—டாக்டர் **தி. இராம. அண்ணாமலை**, திருக்குற்றாலம்.

அன்னையாரின் பழக்கம் எங்களுக்கு நன்மையும், இன்பமும் தந்தது. அவர்களது திறமையும், இன்முகமும், இன்சொல்லும், சாந்தமும் எங்கள் அகக்கண்முன் எப்போதும் நின்று நிலவுகின்றன. அவர்களின் ஆன்மா இறைவன் திருவடி நீழலில் அமைதி அடைக!

—**திரு. சிவசைலம் பிள்ளை**, எம். ஏ., எல். டி., சென்னை.

வயிரமும் முத்தும் ஈன்ற அருமை அன்னை இயற்கை யெய்தியது கேட்டு வருந்துகிறேன். இரு அரும்பெரும் தமிழ்மணிகளை தமிழ் நாட்டிற்குத் தந்த மூதாட்டியின் புகழ் என்றும் நிலவுக!

—**அர. இளங்கண்ணன்**, பி. ஏ., எல். டி., குன்றத்தூர்.

# மன்னைக்

வண்மைசேர் சுந்தரத் தம்மை மன்னே!
அண்மையில் இறையடி அடைந்தனர் மன்னே!
வருவிருந் தோம்பும் மாண்பினர் மன்னே!
திருந்து தமிழ்த்தாய் செம்மைபெற் றோங்க
அருந்திறல் திருவரங் கண்ணர் தம்முடன்
திருந்திய அறிஞன் செப்பமார் அண்ணல்
கனவினும் நனவினும் கன்னித் தமிழ்க்கே
மனமொழி மெய்களை வைத்த வாழ்க்கையன்
சுப்பையப் பெயரார் தூயவன் தன்னையும்
ஒப்பரு மணிவயி றுற்றுப் பெற்ற
வைப்பன தாய்மை மாண்பினர் மன்னே!
இத்தகைப் பண்பார் எம் அம்மை யார்க்கு
நத்தமாம் நினைவுக் குறிகள் நாட்டி
உலகிடை அவர்பெயர் ஓங்க வாழ்த்துதும்
புலமிறை புலவீர்! புரையறு நண்பீர்!
வம்மின்! வம்மின்! சுந்தர அம்மையார்
எம்மான் இணையடி இன்னிழல் அடைந்து
இறவாப் பிறவா இன்பமுற் றோங்க
மறவா மனத்தொடும் வாழ்த்துவம் மன்னே!
கறவை நினைந்த கன்றெனக் கனிந்து
அறமார் அம்மையின் ஆன்மா நோக்கி
காழ்த்த அன்பு கால்கொள மன்னே!
வாழ்த்துதும், வணங்குதும், ஏத்துதும் மன்னே

இங்ஙனம்,

செல்லூர்க்கிழான், செ. ரெ. இராமசாமி

* சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக ஆட்சியாளர் உயர்திரு. வ. சுப்பையாபிள்ளை யவர்களின் அருமை அன்னையார் **திருவாட்டி சுந்தரத்தம்மையாரவர்கள்** 2-9-'52-ல் இறையடிப் பேறடைந்தமைக்கு

# சிந்தாமணியில் முன்னும் பின்னும்

[ந. சுந்தரகுமரன், கல்வே கல்லூரி, புதுவை]

ஏமாங்கத நாட்டு அரசன் சச்சந்தன். அவன் மனைவி விசயை. அவள் மிகுந்த பேரழகுடையவளாயிருந்தமையின் சச்சந்தன் அவளைவிட்டுப் பிரியானாய்த் தன் அரசைத் தன் மந்திரியாகிய கட்டியங்காரன் வசமிட்டு அந்தப்புரத்தே மனைவியோடு இன்புற்றிருந்தனன். அரசைக் கைக்கொள்ள எண்ணிச் சச்சந்தனைச் சூழ்ச்சியால் கொல்லக் கருதிய கட்டியங்காரன் படைகளையுடன்கொண்டுசென்று சச்சந்தன் மனைவியோடிருந்த அந்தப்புரத்தை முற்றுகை இட்டனன். அதையறிந்த அரசன் நிறைந்த கருவுற்றிருந்த தன் மனைவியை மயிற்பொறியிலேற்றி வானவழியே வேற்றிடம் செல்லுமாறு செய்து கட்டியங்காரனை எதிர்த்துப் போர் செய்தனன். போரில் யானைகளையும் வீரர்களையும் கொன்று குவித்தனன். அதுபொழுது அவன் கையிலிருந்த வாள் ஒடிந்துபோயிற்று. சச்சந்தன் வீரர் எறிகின்ற படைகள் வீழ இமையானாய்ப் பாரதப்போரில் கன்னனோடு மாறுபட்டு விளங்கிய அபிமன்னுவைப்போல விளங்கினன். ஆயுதமின்றிச் சச்சந்தன் இருந்தமையின் அவனைக் கட்டியங்காரன் எளிதிற் கொன்றனன். வெற்றிமுரசையும் முழக்கினன். அவ்வொலியைக்கேட்ட தேவி மயிற்பொறியை இயக்குதலை விட்டுவிட அப்பொறி மெல்லெனச் சுடுகாட்டுற்றது. ஆண்டுச் சீவகனை ஈன்றனள். கந்துக் கடன் என்னும் வணிகன் அச்சீவகனை எடுத்துச் சென்று வளர்த்துவந்தான். பின்னர்ச் சீவகன் ஆசிரியரால் தன்னை இன்னானென உணர்ந்துகொண்டனன். தன் ஆசிரியர் ஆணைப்படி சின்னாள் தன்னை வெளிப்படுத்திக்கொள்ளாமலிருந்து பல செயற்கருஞ்செயல் செய்து விளங்கிக்கொண்டிருந்தனன். பின்னர்ப் பலவிடங்களிலும் போய்ப் பல மகளிரை மணந்து இறுதியாகத் தன் தந்தையைக் கொன்ற கட்டியங்காரனைக் கொன்று மண்மகளையும் மணம் புணர்ந்து இன்புற்றிருந்தனன். சின்னாள் கழித்து முத்தியும் எய்தினன். இதுவே சீவகன் சரித்திரச் சுருக்கமாகும். இக்கதையைக் கூறும் நூலுக்குச் **சீவகசிந்தாமணி** எனவும், **சிந்தாமணி** எனவும் பெயர் வழங்கும். இது திருத்தக்க தேவரால் இயற்றப்பட்டது. இச் சிந்தாமணியில் ஆசிரியர் திருத்தக்க தேவர் முன்னர்க் கூறும் உருவக உவமத்திற்குப் பின்னர்க் கூறும் உவமை இயைபுடைத்தாய்க் கற்போர் உள்ளத்து இன்ப ஊற்று மிகுமாறு கூறியுள்ள பகுதியை விளக்குவதே "சிந்தா

மணியில முன்னும் பின்னும" என்னும இக்கட்டுரையின் நோக்கமாகும் அதனை விளக்குவோம.

சிந்தாமணியில் முற்பகுதியில் கட்டியங்காரன் சச்சந்தனைக் கொன்றான் என்பதைதத தேவா எபபடிக் கூறுகின்றார் என்பதைப் பார்ப்போம.

"போழ்ந்துகதிர நேமியொடு வேலபொரு தழுந்தத
தாழ்ந்துதறு கணணிணைகள் தீயழல விழியா
வீழ்ந்துநில மாமகடன வெமமுலை ஞெமுஙக
ஆழ்ந்துபடு வெஞ்சுடரின ஆணடகை அவிநதான்".

இபபாட்டின் பொருள். சக்கரததோடே வேலும தமமுள் போரசெய்து அழுநததலால் மெய்வலி குறைநது அஞசாமையுடைய கணகள வெபபம தோன்றுமாறு விழிததுப பாரமகள் முலை ஞெமுஙக வீழநது மறைநது படுகினற சுடாபோல ஆண்டகைமை குறைநதான் சசசநதன் என்பதாம.

இதில ஆண்டகை என்பது சசசந்தனைக் குறிக்காது அவன் ஆண்டகைமைக் குணததையே குறிககின்றது எனவே சசசந்தன் இறநதான எனக் கொளளாது ஆண்டகைமைக குணம் குறைநதான என்றே கொளளவேண்டும் ஆயின் சசசநதனைக் கட்டியங்காரன கொன்றிலனோவெனின், அதைப் பின்வரும் பாடலிற காணபாம.

"தோய்நத விசுமபென்னும் தொனறுட் டகம்தொழுது
புலமபெய திமைந்தா மாழுக
எநது முலையார் இனைந்திரஙகிக் கொடுஙகோல்
இருள்பரப்ப என பாவம
ஆயந்த குருகுலமாம ஆழ்கடலி னுள்முளைதத

வேந்தர் பெருமானைச சசசந்தனை மந்திரிமா நாகம்உடன்
விழுஙகிற றன்றே"

மக்கள் செறிநத துறக்கமென்று சிறப்பித்துச் சொல்லத்தக்க ஏமாங்கததத்தே சான்றோா மயஙக கற்புடைய மகளிா இரஙக, கொடுஙகோலாகிய இருள் பரவப பெருமானைச் சச்சந்தனைக் கடல்போலும் குருகுலத்தே முளைதத கதிர்போல்வானை நாகம் போலும மநதிரி விழுஙகினன். ஏஎ பாவம் என்பது இதன பொருள்.

எனவே தேவர் சச்சந்தனைக் கொன்றான் என்று கூறிற்றிலர் நாகம் சூரியனை ஒளி குறையும்படி விழுங்கினாற்போலக் கட்டியங்காரன் ஆண்டகைமை குறையும்படி விழுங்கினன்

என்றே கூறிக் கொன்றான் என்பதைக் குறிப்பாற் பெறவைத்தார். இங்ஙனம் ஆசிரியர் கூறியதனாற் போந்த நலத்தை நோக்குவாம்

' தனக்கென அரசச் செல்வமின்றிச் சச்சந்தன் அரசச் செல்வத்தைப்பெற்று விளங்கிய கட்டியங்காரன், நன்றியின்றி இப்பொழுது அவ்வரசனையே அழித்தான் என்று ஆசிரியர் திறம்படக் கூறினார் எனக் கொள்ளுதல் சாலும். இக்கருத்துத் தோன்றுமாறு எங்ஙனமெனிற் கூறுதும்

கதிரவனை மறைப்பது பாம்பு என்று தமிழ்நூற்கள் கூறும் வானநூற் புலவர்கள் திங்கள் கதிரவனை மறைக்கின்ற தென்பர் எனவே, தமிழ்நூற்கள் கூறுவதுபோல் நாகம் என்று கருதப்பட்ட மதிதான் தானே யொளியுடையதாய் விளங்கும் இயல்புடைத்தின்றிச் சூரியன் ஒளியைக்கொண்டே விளங்குகிறது என வானநூற் புலவர் கூறுவதை நோக்குக எனவே கட்டியங்காரன் சச்சந்தன் செல்வத்தில் திளைத்துப் பின்னர் நன்றியின்றி அவனுக்கே தீங்குசெய்தான் என்பது தோன்றுமாறு அறிக. கட்டியங்காரன் கொடுஞ்செயல் நோக்கியன்றே தேவர் ஏஎபாவம் என இரங்குவாராயினர்

மிகப் பெரியனாகிய கதிரவனை மிகச் சிறியவனாகிய மதி ஒரு புறத்தே மறைத்துவிட்டாலும் மற்றொருபுறத்தே அவன் விளங்கிக்கொண்டிருத்தல்போலக் கட்டியங்காரனால் மறைக்கப்பட்ட சச்சந்தனும் முற்றும் மறைபடாது தன் கூறாகிய சீவகனைக் கருவிலிருந்து தோன்றி விளங்கிக்கொண்டிருந்தமையை உன்னுவார்க்கு உள்ளத்தே கழி பேரின்பம் உண்டாகும் தந்தையே தனயன் என்பது நினைவு கூர்தற்பாலது

இதனையன்றே கற்பனைக் களஞ்சியமாகிய சிவப்பிரகாசர் சிந்தாமணியில் தம் மனம் ஈடுபட்டிருந்தமையை, வேறுபட்ட மதநூல் என்றும் கருதாது *"சிந்தாமணியும் திருக்கோவையும் எழுதிக்கொளினும், நந்தாவுரையை எழுதலெவ்வாறு நவின்றருளே" எனக்கூறி வெளிப்படுப்பாராயினர்.

அன்றேல், அஃதாக திங்கள் மறைத்தான் எனத் தாங் கருதிய பொருள் இனிது விளங்க வானநூற் புலவர் கூறுமாறு போலக் கூறாது, நாகம் விழுங்கிற்றென்ற தென்னையெனின், அவன் கொடுமை கருதிஎன்க. பாம்புக்குப் பால்வார்த்தாலும் அது விடத்தையே கொடுக்கும் என்பது முதுமொழியன்றோ?

"பன்னகம் தனக்கமிர்தம் கொடுத்தாலும் விட மொழியப் பயன் தராதே" என்பது ஆன்றவர் வாக்கன்றோ.

---

* திருவெங்கைக் கோவை. க0எ.

இங்ஙனம் ஆசிரியர் கூறியதனால் கால வேறுபாட்டினால் கதிரவனைச் சந்திரன் மறைப்ப மறைபடுவதுபோலச் சச்சந்தனும் காலவேறுபாட்டினால கட்டியங்காரன் மறைப்ப மறைபட்டான், என்று கூறுகின்றவா மாநாகம விழுங்கிற்றெனக் கூறினர்.

தேவர் கட்டியங்காரனை நாகமாக உருவகித்தாரன்றி மதியாக உருவகித்திலர். மதியை நாகமாக அவன் கொடுமை பற்றிக் கூறினர், என்பதற்குச் சான்றுண்டோ எனின், உண்டு, சிநதாமணியின் பிற்பகுதியை நோககுவாம

சச்சந்தன் மகனாகிய சீவகனால் கட்டியங்காரன் மாண்டான் என்பதைக் கூறுமிடத்து,

“ மொயவார குழலார்முலைப் போர்க்களமாய மார்பில்
செய்யோன் செழும்பொற் சரமசென்றன சென்றதாவி
வெய்கா விழியா வெருவததுவா வாய்மடியா
மையார விசும்பினமதி வீழ்வதுபோல வீழ்ந்தான் ”

என்று கூறுகின்றார்

இப் பாட்டின் பொருள : மகளிர் முலைக்குப் போர்க்களமாய கட்டியங்காரன் மார்பிலே சீவகன் அம்புகள் சென்றனவாக அவன் ஆவி சென்றது. அப்பொழுது விழித்துக் கண்டார் வெருவுமாறு வாய் மடித்து விசுமபினின்றும மதி வீழுந்தன்மை போல வீழந்தான் என்பதாம.

இங்கே கட்டியங்காரன் வீழ்ச்சிக்கு மதிவீழ்ச்சியை உவமை கூறியதனானே முன்னரும் மதியாக உருவகிக்கின்றவர் அவன் கொடுமை கருதித் தமிழ் நூற்புலவர் கொள்கைப்படி மாநாகம் என்றார்.

இப் பாடலின் உரையில் ஆசிரியர் நச்சினார்க்கினியர் இதனால் சச்சந்தன் பட்ட அன்று தொட்டு இன்றளவும் கட்டியங்காரன் கொடுங்கோலிருள் பரப்ப அரசாண்ட தன்மையும, அதுதான் இராக்காலததே இருள் பரநது நிற்ப மதியாண்ட தன்மைத்து என்றும் கூறினா எனக் கூறுதலுங் காண்க.

கட்டியங்காரன் மார்பை மொய்வார் குழலார் முலைப் போர்க்களமாய மார்பு எனக் கூறுவதனானும் மதியின்மார் போடொப்பக கூறுகின்றார் எனக் கொள்ள இடனுண்டு. ஏன்னை, மதியின் மாாபு இருபத்தேழு மகளிர் முலைக்குப் போர்களமாதலின்.

இங்கே சீவகனைச் செய்யோன் என்று கூறினர் கதிரவன் என்னும் பொருளுந் தோன்றுமாறு இங்ஙனம் கூறுதலால் இறந்துபட்ட தன தந்தையாகிய சச்சந்தனே இசசீவகன் என்பது கொள்ளததகும். என்னை, தன் தநதையின் இறுதி நிலையைக் கூறும்பொழுது, "ஆழ்ந்துபடு வெஞ்சுடரின் ஆண் டகை அவிநதான்" எனவும், செங்கோல் ஆய்கதிரினை "மநதிரி மாநாகம் விழுங்கிற றெனவும் கூறினா ஆதலின். அன்றியும் சீவகன் கையிலிருநத அம்புகள மறைநது தோன்றுகின்ற சூரியன் சுடா போன்றன என்பதைக குறிக்கச் செய்யோன் செழுமபொற்சரம என்றா. இக்காலத்தும சூரியன் புறப படும் பொழுது மேலே விழும் கிரணங்களை அவற்றின் வெமமை மிகுதி நோககி அம்பு போடுவது போல இருக் கின்றன என்று நமமுள்பலர் கூறக்காண்டும். சீவகன் அமபு கள செல்ல அதனுல் மாண்ட கட்டியங்காரனை "மதி வீழ்வது போல வீழ்ந்தான்" என்றார். எனவே கதிரவன் தோற்றத் தில் காணப்பட்ட மதி ஒளி மழுஙகி மறைதல் போலக் கட்டியங்காரனும வீழ்நதான் என்பதிலிருநது முன்னரும் மதியாகவே உருவகிக்கின்றவர் தமிழ் நூற்கொள்கைபபடி அவன கொடுமை கருதி மாநாகம என்றா. பின்னரும் கட்டியங்காரனைக் கொன்று சீவகன் விளங்கிய தோற்றப பொலிவைக் கூறுங்கால்.

"ஒலலைநீர் உலகம் அஞ்ச ஒளியுமிழ் பருதி தன்னைக்
கல்லெனக் கடலின் றெற்றிக் கவுட்படுத் திட்ட நாகம்
பல்பகல கழிதத பின்றைப் பன்மணி நாகந்தன்னை
வல்லைவாய் போழ்ந்து போந்தோர் மழகதிர் நின்றதொத்தான்"

நாகம் ஒளிவிடுகின்ற சூரியனை உலகம் அஞ்சும்படி கட லிலே கடுக விழுங்குகையினுலே அப் பன்மணிநாகத்தைப் பல நாட்கள் சென்ற பின்பு வாயைப் பிளந்து போழ்ந்து அக்கதிா நின்ற தன்மையை ஒத்தான் சீவகன் என்பது கருத்து.

ஈண்டும் சீவகன் கட்டியங்காரனை வென்று விளங்கிய மையை விழுங்கபபட்ட நாகத்தினின்றும் வெளிப போந்த கதிரவனுக்கு உவமைகூறி, இறந்த சச்சந்தனே சீவகனுகத் தோன்றியுளளான் என்று தேவர் குறிப்பிடுவது புலவர்கட் கோா இலக்கிய விருந்தாகும்.

# புலவரும் புரவலரும்

[திரு. சு. அ. இராமசாமிப் புலவர்]

## I

ஏறக்குறைய இரண்டாயிரம் யாண்டுகட்கு முன்னர் பெருந்தலைச் சாத்தனார் என்னும் பெயருடைய புலவர் திலகர் ஒருவர் இருந்தார். அவர், 'பெருந்தலை' என்னும் ஊரில் தோன்றியபடியால் பெருந்தலைச் சாத்தனார் என்று பெயர் பெற்றார் என்று சிலரும், அவருடைய தலை உடலுக்குத் தகுந்த படியாக இல்லாமல் பெரிதாக இருந்தமையால் அப்பெயர் பெற்றார் என்று சிலரும் கூறுப. அவர் கல்வி கேள்விகளிற் சிறந்து விளங்கினார். புலவர்களைப் பற்றும் வறுமை அவரையும் பற்றியது. அவர் பரிசில் வாழ்க்கையை மேற்கொண்டார்.

அந்நாளில் குமணன் என்னும் பெயருடைய குறுநில மன்னன் ஒருவன் இருந்தான். அவன் இரவலர்களுக்கும் அறிஞர்களுக்கும் பெரும்பொருள் வழங்குவதில் அரும்புகழ் பெற்று விளங்கினான். பெருந்தலைச் சாத்தனார் குமணனுடைய பெருமைகளை உணர்ந்தார். அவனிடஞ் சென்று பரிசில் பெற்று வருதல் வேண்டும் என்று முடிவு செய்தார். புறப்பட்டுக் குமணனுடைய நாட்டை யடைந்தார்.

குமணனுக்கு ஓர் இளவல் இருந்தான். அவன் நற்பண்புகள் சிறிதும் இல்லாதவன். அவனுடைய பெயர் இளங்குமணன் எனவும் அமணன் எனவும் வழங்கி நின்றது. "ஒருவனாய்ப் பிறந்தால் தனிமை இருவராய்ப் பிறந்தால் பகைமை" என்பது உலக வழக்கு. அறிவிலிகள் சிலர் அமணனைக் கலைத்துவிட்டார்கள். "உன் முன்னோன் பொருள்களை யெல்லாம் இரவலர்கட்குக் கொடுத்துப் பாழாக்குகின்றான். இதனால் உண்டாகும் பொருளிழப்பு முடிவில் நின்னையே சாரும். நீ இப்பொழுதே பொருள்களைக் கைப்பற்றுவதற்கு வழி தேடுவாயாக," என்று கூறி உடன் பிறந்தார்களுக்குள் பகைமையை உண்டாக்கிவிட்டார்கள். 'கரைப்பார் கரைத்தால் கல்லும் கரையும்' அன்றோ? அமணன் குமணனுக்குப் பகைவனாக மாறிவிட்டான் 'அண்ணன் தம்பிதான் சென்மப் பகையாளி' என்பது உண்மையாக முடிந்து விட்டது. மனந்திரிந்த இளங்குமணன் தன் அண்ணனுக்கு மாறுபாடாகக் கலாம் விளைத்தான். தம்பியின் வேறுபாட்டைக் கண்ட குமணன் நாட்டைத் துறந்தான்; காட்டை யடைந்தான்.

மறைந்து வாழ்ந்தான் குமணன் இருப்பிடம் அறிந்த மக்கள் அவனுக்கு வேண்டுவன கொடுத்து அவனைப் போற்றினார்கள். 'அம்மையார் எப்பொழுது சாவார் கம்பளி எப்பொழுது நமக்கு மிச்சமாகும்?' என்றபடி சமயம் பார்த்திருந்த அமணன் நாட்டைக் கைப்பற்றிக் கொண்டான் அவன் அறிஞர் அருமைகளைச் சிறிதும் உணரான். மிகுந்த பிசினன்; 'அறுத்த விரலுக்குச் சுண்ணும்பு தடவமாட்டான், ஆர் வந்தாலும் பிச்சை போடமாட்டான்' குமணனுடைய நாட்டை அடைந்த பெருந்தலைச் சாத்தனாருக்கு இச் செய்திகள் தெரிந்தன. அமணன் குணத்தைப் பற்றியும் கேள்விப்பட்டிருந்த பெருந்தலைச்சாத்தனார் நற்பண்பு இல்லாத இளங்குமணனைப் பார்க்க விரும்பினார் அல்லர். 'அருமை அறியாதவன் ஆண்டும் என்ன, மாண்டும் என்ன? அருமை அறியாதவனிடத்தில் போனல் பெருமை குறைந்து போகும்' அன்றோ? சாத்தனார் காட்டை யடைந்தார். மறைந்திருந்த குமணவள்ளலைத் தேடிப் பிடித்தார் தம்முடைய வறுமைத் துன்பங்களை யெல்லாம் அவனிடம் விரித்துரைத்தார்.

"சமைத்தல் தொழிலை ஒழிந்தமையால் தேய்தல் இல்லாமையை அடைந்து பக்கம் உயர்ந்து தோன்றும் அடுப்பின்கண் காளான் பூத்துக் கிடக்கின்றது உடல் மெலியும் பசியால் வருந்திப் பாலின்மையால் தோலாந் தன்மையுடனே திரங்கிப் பாலூறும் துளை தூர்ந்த தனது வறண்ட மார்பைச் சுவைக்குந்தோறும் பால் வாராமையால் அழுகின்ற பிள்ளையினுடைய முகத்தைப் பார்த்துத் துன்பக் கண்ணீர் ததும்பும் கண்களையுடைய என் மனைவியின் வருத்தத்தைப் பார்த்து, இந்த வருத்தத்தை ஒழித்தற்குத் தக்கவன் நீதான் என நினைந்து நின்னிடத்திற்கு வந்தேன் நல்ல போரைச் செய்யுங் குமண மன்னனே! என்னுடைய இந்த நிலையை நீ உள்ளவாறு உணர்ந்தாயாயின், நல்ல யாழையும் மத்தளத்தையும் உடைய கூத்தரது மிடியைக் கெடுக்கும் குடியினகண் பிறந்தோய் நீ யாதலால், நீ வறுமையுற்றுள்ள இந்த நிலைமைக்கண்ணும் உன்னை வளைத்தாயினும் பரிசில் பெறுது விடமாட்டேன்," என்று உறுதி பெற உரைத்தார். சாத்தனார் உரையைக் கேட்ட குமணன் இப்புலவர்க்கு யாது பதிலுரைப்பது என்று எண்ணமிட்டான். இளங்குமணன் தன் முன்னவனை நாட்டைவிட்டுத் துரத்தியதுமன்றி அவனை அடியோடு தொலைத்துவிட வேண்டும் என்றும் தன் நண்பர்களுடைய உரையின் பேரில், ஒரு முடிவு செய்திருந்தான். அஃதாவது, குமணனுடைய தலையைக் கொணர்வார்க்குப் பெரும் பரிசில் வழங்குவதாக முரசறைந்திருந்தான். அச்செய்தி குமணனுக்கும் தெரியும். அச்செய்தி இப்பொழுது

நினைவுக்கு வரவே தன்னுடைய தலையைப் புலவர்க்குப் பரிசாக அளித்துவிடலாம் என்று முடிவுசெய்தான். தன் கைவாளைப் புலவரிடங் கொடுத்தான். தன் தலையை வெட்டிக் கொண்டு போய்த் தன் பின்னவனாகிய மன்னன் இடங்கொடுத்து உன்னிய பரிசைப் பெற்றுக் கொள்ளுமாறு உரைத்தான். வாளை வாங்காது தாழ்ப்பின் குமணன் தன் தலையைத் தானே துணித்தாலும் துணித்துக் கொள்வான் என்று அஞ்சிய புலவர் வாளைத் தமது கையிலே பெற்றுக் கொண்டார்.

ஆடுநனி மறந்த கோடுயர் அடுப்பின்
ஆம்பி பூப்பத் தேம்பசி உழவாப்
பாஅல் இன்மையில் தோலொடு திரங்கி
இல்லி தூர்ந்த பொல்லா வறுமுலை
சுவைத்தொறு அழூஉந்தன் மகத்துமுகம் நோக்கி
நீரொடு நிறைந்த ஈரிதழ் மழைக்கணென்
மனையோள் எவ்வம் நோக்கி நினைஇ
நிற்படர்ந் திசினே நற்போர்க் குமண
என்னிலை அறிந்தனை ஆயின் இந்நிலை
தொடுத்துங் கொள்ளாது அமையலென் அடுக்கிய
பண்ணமை நரம்பின் பச்சை நல்யாழ்
மண்ணமை முழவின் வயிரியர்
இன்மை தீர்க்குங் குடிப்பிறந் தோயே.

(அ - ரை.) ஆடு - அடுதல்; சமைத்தல், நனி - மிகவும், கோடு - பக்க இடம், ஆம்பி - காளான், தேம்பசி; தேம்பு பசி - உடலை மெலியச் செய்யும் பசி திரங்கி - சுருங்கி. எவ்வம் - வருத்தம். நிற்படர்ந்திசின் - நின்பால் வந்தேன். தொடுத்தும் - வளைத்தும். மண் அமை - கட்டுதல் பொருந்திய. வயிரியர் - கூத்தர். இன்மை - வறுமை.

## II

குமண வள்ளலிடம் வாளைப் பெற்ற பெருந்தலைச் சாத்தனார் விரைந்து இளங்குமணன்பாற் சென்றார். வாளுடன் புலவர் வந்திருத்தலைக் கண்ட இளங்குமணன் இவர் யாது கூறப்போகின்றாரோ என்று அவருடைய முகத்தைப் பார்த்துக்கொண்டிருந்தான். உடன்பிறந்தார் இருவரும் ஒன்றுபட்டு வாழவேண்டும் என்பதே அவருடைய உள்ளக்கிடக்கை. இரக்கத்திற் சிறந்து விளங்கும் குமண மன்னனுடன் ஒரு வயிற்றிற் பிறந்த இளங்குமணன் கொடியவனாக இரான். அவனுடைய உள்ளத்தை எளிதில் மாற்றிவிடலாம் என்று புலவர் உறுதியாக நம்பினார். அவர் எண்ணியது கைகூடுமாறு அறிவுரைகள் பல கூறலானார்.

"எப்பொருளும் நிலைபெறாத் தன்மையை உடையது இவ்வுலகம் இவ்வுலகத்தின் கண்ணே நிலைபெறுதலை விரும்பினவர்கள் தம்முடைய கொடையினாலே புகழை இவ்வுலகத்திலே என்றும் நின்று நிலவும்படி நிலைநிறுத்திவிட்டுத் தாங்கள் இறந்துபோனார்கள். பொருந்துதற்கரிய பெருஞ் செல்வராக இருந்தும் சிலர், வறுமையினால் இரப்பவர்களுக்கு ஒன்றுங் கொடாமையினாலே பழைய கொடையுடையார்போலப் பின்னுந் தம்பெயரை நிலைநாட்டி, உலகத்தோடு இடையறாது தொடர்ந்து என்றும் விளங்குதலை அறியாமற் போனார்கள் உலகத்தில் என்றும் நிலைபெறுதலை விரும்புவோர் புகழை நிலைநிறுத்துதலும், புகழை நிலைநிறுத்தாதோர் நிலைபெறாதோராகவும் இருக்கின்றனர் மணிகள் ஒலிக்கப்பெறுகின்ற சிறந்த யானைகளைப் பரிசிலர்களுக்கு மிகுதியாகக் கொடுக்கும் அழிவில்லாத நற்புகழை யுடையவனும், உனது அன்பிற்குரியவனுமாகிய குமணவள்ளலைத் தேடிக் காட்டினிடத்திலே கண்டனன். எனது வறுமையைக் கூறி அவனைப் பாடிநின்றேன் பெருமை மிகுந்த இரவலன் பரிசு பெறாமல் வாடினவனாகச் செல்லுதல் நான் என் நாட்டை இழந்ததினும் துன்பந்தருவதாகும் என நினைத்து வருந்தினன். பிறகு அவன் தலையைக் கொணர்வார்க்குப் பரிசில் வழங்குவதாக நீ யாண்டுந் தெரியுமாறு பறையறைந்திருத்தல் அவனுடைய நினைவுக்கு வந்தது. 'புலவரே! எனது தலையை அரிந்துகொண்டுபோய் என்னுடைய இளவல் இடத்திலே கொடும். அவ்வாறு கொடுப்பீராயின், உமக்குப் பெரும் பொருள் பரிசிலாகக் கிடைக்கும்' என்று கூறித் தலையை அரிந்து கொள்ளுதற்குத் தன் கையில் இருந்த வாட்படையை என்கையிற் கொடுத்தனன். வாளை வாங்குதற்கு யான் தாழ்த்து நிற்பின் அவன் தானே தன்னுடைய தலையை அரிந்து வீழ்த்தினாலும் வீழ்த்துவான் என்று அஞ்சி, அவ் வாட்படையைப் பெற்றுக்கொண்டு நின்பால் வந்தனன் அம் மன்னனைப்போல் அரிய பொருள் பிறிதுயாதும் இவ்வுலகத்தில் இன்மையானும், அம்மன்னன் உயிருடன் வாழ்ந்திருத்தலானும் நான் மிகுந்த மகிழ்ச்சியுடையவனாக நின்பால் வந்தேன்," என்று இளங்குமணனுடைய உள்ளம் மாறித் திருந்தும் வண்ணம் கூ[றினர்].

புலவருடைய எண்ணம் இனிது நிறைவேறியது. அண்ணனின் பெருமையையும், தனது சிறுமையையும் உணர்ந்தான் சிலநாள் தன் முன்னவனைப் பிரிந்திருந்தபடியால் அவனுள்ளத்தில் அன்பு தோன்றியிருந்தது. 'அகல இருந்தால் நிகள உறவு; கிட்ட இருந்தால் முட்டப்பகை, அகல இருந்தால் பகையும் உறவாம்' என்னும் மொழிகள் பொய்க்குமா? இளங்குமணனுடைய தீய

நண்பர்கள் இளங்குமணனைப் பார்த்து, ‘இருந்தால் நவாப் சாகிப் இல்லாவிட்டால் பக்கிரி சாகிப்;’ ஆகையால் உன் அண்ணனை வென்று அவனுடைய பொருள் முழுவதையும் கைப்பற்றிக் கொள்வாயாக! என்று போதித்திருந்த போதனையெல்லாம் பறந்துபோய்விட்டது ‘ஆண்டி எப்போ சாவான் மடம் எப்போது ஒழியும்’ என்று அண்ணனைப்பற்றி எண்ணியிருந்த எண்ண மெல்லாம் அடியோடு ஒழிந்துபோயின. அவன், ‘அண்ணனுக் கும் தம்பிக்கும் அல்ல வென்று போகுமா?’ என்னும் பழமொழிக் குத் தகுதியான எடுத்துக்காட்டாக அமைந்தான். தன் முன் னவனைக் கொண்டுவந்து முன்போல அரசனாக்குதல் வேண்டும் என்று வேண்டிக்கொண்டான். புலவர் மகிழ்ச்சியுடன் இணங்கினார். இளங்குமணனையும் உடனழைத்துக்கொண்டு காட்டிற்குச் சென்றார். குமணனைக் கண்டு இளங்குமணன் திருந்திய வகையைப் பொருந்த மொழிந்தார். நீ எனக்கு அளித்த தலைமீது நான் முடிசூட்டப்போகிறேன், நீ அத்தலையுடன் புறப் பட்டு நகருக்கு வருவாயாக!’ என்று திறமபெறச் செப்பினார். குமணனை அழைத்துப்போய் பழமை போல் கிழமையடையச் செய்து தாம் விழுமிய வளம் பெற்றுக் கெழுமிய உவகையுடன் மீண்டார். புலவருடைய அறிவுநலமும் ஆற்றல்மாண்பும் போற்றக் கூடியதன்றோ?

மன்னா உலகத்து மன்னுதல் குறித்தோர்
தம்புகழ் நிறீஇத் தாம்மாய்ந் தனரே
துன்னருஞ் சிறப்பில் உயர்ந்த செல்வர்
இன்மையின் இரப்போர்க்(கு) ஈயா மையின்
தொன்மை மாக்களில் தொடர்பறி யலரே
தாள்தாழ் படுமணி இரட்டும் பூநுதல்
ஆடியல் யானை பாடுநர்க் கருகாக்
கேடில் நல்இசை வயமான் தோன்றலைப்
பாடி நின்றனென் ஆகக் கொன்னே
பாடுபெறு பரிசிலன் வாடினன் பெயர்தல்என்
நாடிழந் ததனினும் நனிஇன் னாதென
வாள்தந் தனனே தலைஎனக் கீயத்
தன்னில் சிறந்தது பிறிதொன் றின்மையின்
ஆடுமலி உவகையொடு வருவல்
ஓடாப் பூட்கைநின் கிழமையோற் கண்டே

(அ - ரை.) மன்னா - நிலைபெறாத. மன்னுதல் - நிலைபெறு தல். நிறீஇ - நிறுத்தி. துன்னரும் - பொருந்துதற்கரிய. இரட் டும் - ஒலிக்கும். ஆடியல்யானை - வெற்றி மிகுந்த யானை. வய மான் தோன்றல் - வலிய குதிரைகளையுடைய தலைவன். கொன்னே - வீணே. ஓடாப் பூட்கை - புறங்கொடாத மேற் கோள்.

# செய்திகளும் குறிப்புக்களும்

**மறைமலை அடிகளின் இரண்டாவது ஆண்டு நினைவு நாள்**

மதுரைத் திருவள்ளுவர் கழகச் சார்பில் 15-9-1952-இரவு மிகவும் சிறப்பாக நிகழ்ந்தது "தமிழ்நாடு" உதவி ஆசிரியர் திரு. எம். எஸ். பி. சண்முகம் M.A. அவர்கள் தலைமை பூண்டார்கள். பசுமலைத் தமிழாசிரியர் வீ. ப. நடராசன், தி. கி. சுந்தரமூர்த்தி முதலியோர், அரியதோர் விரிவுரை ஆற்றினார்கள் அதன் சுருக்கம்:

அடிகளார் தனித்தமிழ் இயக்கத்துக்கும் தொன்மைச் சைவத்துக்கும் ஆற்றிய தொண்டு அளப்பில. அடிகளாரின் யாழினும் இனிய குரலை ஒலிப்பதிவு செய்துகொள்ளாமை தமிழரின் பேரிழப்பேயாம். ஐம்பது நூற்களுக்குமேல் யாத்துள்ளனர். திருவள்ளுவர், திருவாசகம் இவற்றின் காலத்தை அறிவது அவர்கள்தம் சித்தாந்த ஆராய்ச்சிவன்மையாலன்றோ?

தலைவரவர்கள் முடிப்புரையில்:

அடிகளாரது நூல்களிலே தலையாயது "மக்கள் நூறாண்டு வாழ்வது எப்படி?" என்னும் நூல். செய்தித் தாள்கள் தமிழைப் பரப்புவதில் ஈடுபடவேண்டும். தனித்தமிழ்ச் சொற்களையே கையாளவேண்டும். தனித் தமிழைப் புறக்கணிக்கும் தாள்கள் புறக்கணிக்கப்படல் வேண்டும் என்றனர். துணைச் செயலாளர் நன்றி கூற இனிது நிறைவுற்றது.

**தாய்மொழி மூலம் கல்வி கற்பித்தல்**

11—9—52-ல் சென்னை, மேரி அரசிக் கல்லூரியில் மொழிக் கழகத் துவக்கவிழா நடைபெற்றது. நமது மாகாணக் கல்வி அமைச்சர் திரு. டாக்டர். எம். வி. கிருஷ்ணராவ் அவர்கள் இவ்விழாவைத் துவக்கி வைக்கும்போது, தாய்மொழிமூலம் பாடங்கள் கற்பிக்கப்படும் முறை பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் சிறுகச் சிறுகக் கடைப்பிடிக்கப்படு மென்றும், தமிழே பழையமொழியென்றும், அதற்கடுத்தபடியாக வைத் தெண்ணக்கூடியவை கன்னடம், தெலுங்கு, மலையாளம் ஆகிய மொழிக ளென்றும், தமிழ் தவிர ஏனைய தென்னாட்டு மொழிகளுள் வடமொழி பெரிதும் கலந்துவிட்டதென்றும் குறிப்பிட்டார். மேலும், ஆழ்வா ராதிகள், நாயன்மார் காலங்களில் தமிழர் தெலுங்கு நாடுகளுக்குச் சென்று, அம்மொழியைக் கற்று, அந்நாட்டு இலக்கியங்களுக்குப் பெருந்தொண்டு ஆற்றியுள்ளனரென்றும் குறிப்பிட்டார்.

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே, அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.



டாக்டர் ஆர். கே. சண்முகம் செட்டியார் அவர்கள்

(துணைவேந்தர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்)




சிலம்பு ௨௭ | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௮௩, ஐப்பசி நவம்பர், 1952 | பரல் ௩

# ஒப்பில் ஒருவர்

டாக்டர். இரா க சண்முகம் செட்டியார்

நகர்

உண்டியும் உடையும் பண்பாட்டின் உடல் உயிராகும். உழைத்தற்கும் உண்டிபெறுதற்கும் உடை இன்றியமையாத தொன்று அவ்வுடையினை முடையின்றித் தடையின்றி நல்கும் நற்றொழில் நடைபெறு மேனாட்டு 'மாஞ்செஃச்ட்டரோ?' என்று கண்டார் மருளும் வண்ணம் மிளிர் கைத்தொழில் நகரம், கோவையாகும். இங்கு முப்பதுக்கு மேற்பட்ட பஞ்சாலை நூற்பாலை நெசவாலைகள் காணப்படுகின்றன. இம்முப்பதுக்கு மேற்பட்ட ஆலைகளும் நம் சண்முகனர் நன்முயற்சியாலும் முன் மாதிரியாலும் பெருகின. இவைகளெல்லாம இருபதனைந்து ஆண்டுகளுக்குள் தோன்றின. இநநகா பொன்னகர் போன்று பொலிவுறுகின்ற

இங்கே கல்வி, மருத்துவம், வாணிகம், கைத்தொழில், ஆட்சி, புலமை, நாவன்மை, பாவன்மை, மொழி, நாடு, நன்னெறி, நலத்துறை, கடவுட்பற்று, வழிபாடு, வணக்கம், வாய்மை, தூய்மை, ஈகை, இன்சொல், ஒகை, ஒற்றுமை, ஒழுககம், பண்பாடு, படைத்திறன், பயிற்சி, செழுந்திரு, சான்றாண்மை எலலாம் நிறைநதிருக்கும நிலைமை நினைதொறும் நினைதொறும் நீஙகா இறுமபூது ஒங்குவதாகும்

குடும்பம்

மறப்பரும் சிறப்புமிக்க அறப்பெருநகராம் இக் கோவைமாநகர் நாபபண், தொன்மை வாய்ந்த நன்மைச் சிற்றூர் ஒன்

றுளது. அதன் பெயர் உப்பிலியபாளையம். இவ்வூர் நூற்றைம்பது ஆண்டுகளுக்குமுன் கோவைமாநகருக்கு வெளியே இருந்தது. ஆங்கிலேயா கோவையை மூன்றுமுறை முற்றுகையிட்டுக் கைப்பற்றினா பின் நாடு வளம்பெற்றுப் பெருகியது. அக்காலை ஒப்பில் உப்பிலியபாளையமும் நகரோடு ஒன்றாய் நடுவணதாய் வடுநீங்கு சிறப்போடு வயங்குகின்றது

கோவையிலிருந்து அவிநாசிக்குச் செல்லும் பெருவழியில் தென்புறத்தில் உப்பிலியரும், வடபுறத்தில் அனுப்பரும் வாழ்ந்து வந்தனா. அக்காரணத்தால் முறையே அவ்விருவூாகளுக்கும் உப்பிலியபாளையம், அனுப்பாபாளையம் என்னும் பெயாகள் ஏற்பட்டன.

இவ்வூரில் தாழ்விலாச் செல்வ வாழ்வொடு வாழ்ந்த வணிகப்பெருமகனா ஒருவர் உளர் அவர் திருப்பெயா இராமசாமிச் செட்டியாா. இவரே ஒப்பில் ஒருவராம சண்முகனார்க்குப் பேரனாராவர். திருநீற்றுப்பொலிவும, சிவநெறிப்பற்றும், திருமுறை அன்பும, உய்யவழியருளும் மெய்யடியார்கள் காதலும, அறம்புரிதிறமும், பிறவும தம்போற் பேணிச்செய்யும் வாணிக வளமும, குடும்பமுதன்மையும் மிக்கவர் இவர். வணிகவாய்ப்பின் பொருட்டுக் கோவைப் பெருமனையில் குடியேறினா.

திருப்பணி

இராமசாமிச் செட்டியாரின் செந்நெறிச் செல்லும் நேர்மையும் சீர்மையும் கண்டு அரசியலார் கோயமுத்தூாக் கூற்றம் (தாலூகா) திருக்கோவில் அறங்காவற்குழு (தேவத்தானக் கமிட்டி) உறுப்பினராக அமாவித்தனர். அஞ்ஞான்று அண்மையிலுள்ள திருப்பேரூரில் காஞ்சிமா நதியில் சோழன்துறை என்னும் படித்துறையினைத் திருப்பணி செய்து அமைத்தனர். அத்திருக்கோவிலில் பல திருப்பணிகள் செய்தமைத்தனர். அங்குத்திருவிழாச் சேவிக்கவரும் அடியார்களுக்குப் பயன்பட ஒருதிருமடமும் அமைத்தனா.

தாயார் சிரங்கம்மாள் என்னும் அம்மையார் சிவன்பால் அன்பிற் சிறந்து விளங்கும தவத்திருவினா. திருப்பேரூரில் சிவன் திருப்பணிகள் பலவற்றையும சிறக்கச் செய்திருக்கின்றூாகள மேலும் சிவன் புகழ்களையும் சிவனடியாா புகழ்களையும செவிமடுத்து இடையறு இன்பெய்தும பெருவேட்கையும் பேரார்வமும் உடையா. பேரூரில் சீருற நிகழும் ஆவணிமூலப் பிட்டுப் பெருவிழாச் சிறப்பினைக் கொண்டாடிப் பெருமகிழ்வெய்தும் பேறுடையார்,

பிறப்பு

இத்தகைய செந்நெறிச் செல்வத் திருக்குடும்பத்தில் நம் சண்முகனார் ஆயிரத்தெண்ணூற்றுத் தொண்ணூற்றிரண்டாம் ஆண்டு அக்டோபர் திங்கள் பதினேழாம் நாள் (17-10-1892) திருவருள் துணையால் பொருவரும் பிறப்பு எய்தினர். இவரோடு உடன்பிறந்தார் இவருள்ளிட்டு நாற்பொருளும், நான்னெறியும், நற்றமிழும், பெற்ற தமிழகமும் நானிலம் போற்றும் மேனிலை எய்தி மிக்கு விளங்க நால்வராவர்.

இவர்தம் தந்தையார் திருப்பெயர் கந்தசாமிச் செட்டியார் என்ப. இவரும் பெருந்தகைமை எல்லாம் வாய்ந்த பேராளர். நெடுநாள் வாழும் நிலைமை இன்றேனும் சிலவாழ் நாளில் பயனார் பல் பணி புரிந்த நயன் சேர் பண்பாளர்.

பெயர்

பெரும்பாலும் பெற்ற பிள்ளைகட்கு உற்ற நற்பெயர் அமைவது பிற்கால வாழ்க்கையின் குறிக்கோள் செறிந்த சிறப்பமை குறிப்பேயாகும். அதுபோல் நம் ஒப்பில் ஒருவர்க்கு அறுமுகப் பெயரிய பண்ணவன் திருப்பெயராம் சண்முகனார் என்றே அமைந்தது. இப் பெயர் முருகப்பெருமான் திருப்பெயர். முருகப்பெருமானை நக்கீரனார், "மணிமயில் உயரிய மாறா வென்றிப், பிணிமுக ஊர்தி ஒண்செய் யோனும்" (புறநானூறு, ருசு) மென்று கூறுகின்றார். மேலும் "முருகொத்தீயே முன்னியது முடித்தலின்" என்றும் விளம்புகின்றார். அத்திருப்பெயர்பூண்ட நம் சண்முகனாரும் முன்னியது முடிக்கும் ஆற்றல் இயற்கையிலேயே இளமைதொட்டுக் கொண்டுள்ள பான்மையர்.

படிப்பு

இளமையில் கோயமுத்தூரிலுள்ள இலண்டன் மிசன் உயர்நிலைப் பள்ளியில், கூர்த்த மதியினராய்க் கல்வி பயின்று வந்தனர். இப்பள்ளி இப்பொழுது ஒற்றுமை உயர்நிலைப் பள்ளி என வழங்கப்படுகின்றது. இவர்தம் இளமைப் படிப்புமுறையிலேயே இவர் பிற்காலத்து மேன்மைமிக்க முதல்தர நாவன்மையராய் நிறை புலவராய்த் தோன்றுவார் என்னும் உறுதிசேர் நம்பிக்கைக்கு இடமான தோற்றத்தராய் விளங்கினர்.

உயர்நிலைப் பள்ளிப் படிப்பு நிறைவுறுவதன் நடுவே அருமைத் தந்தையார் சிவவுலகு எய்தினர். இந்நேர்வு ஆற்றொணாப் பெருந்துன்புக்குரிய தொன்று. எனினும் தந்தையின் தங்கையார் பேரனார் தனிவளம் படைத்த தனிமிகு செல்வத்தர்.

எவ்வகையினும் பழககமிக்க செவ்வியா அன்பு அறிவு ஆற்றல அடக்கம் பணிவு இன்சொல முதலிய குன்றனையகுணத்தா. அப்பெருந்தகையரால் நம் சண்முகனுர் பெருமையொடும உரிமையொடும பேணப்பெற்றுர். மேலும கல்வி முதலிய நலமெலாம் ஒல்லும வகைபெற ஓவாது உதவி ஊக்கினா

ஆங்கில இலக்கியம்

உயர்நிலைப்பள்ளியில படிக்கும்போது ஆங்கில இலக்கியத்தில நீஙகா ஆாவமுற்றிருநதனா. இவா பல ஆங்கில நூலகளைக் கசடறக் கற்றுள்ளனர். மாபாரதககதை முழுமையும நன்கு படித்திருநதனர். தம ஓய்வு காலங்களில் தமககு உளளன்புடன் ஓவாது உறுதுணையாக இருநது கற்பிததது வநத பேராசிரியர் ஒருவரை இவர் எப்போதும் மறநததே இல்லை. அமமட்டோ தாம இம்மேனிலை எய்துதறகு அவா தம் பெருநதுணையே என்று வாயார வாழ்த்தி நன்றி செலுத்தும் நயனா நன்னெஞ்சினராய் றனர்

சென்னைப்படிப்பு

ஆயிரத்துதொள்ளாயிரத்துப பத்தாம் ஆண்டு மேறபுலக் கல்வியின் பொருட்டுச் சென்னை வநது சோநதனா அஞ்ஞான்று சென்னையில் மிகவும பேர்போன கலலூரியாய முதன்மைபெற்று விளங்கியது "சென்னைக் கிறிததுவக கலலூரி". அக்கல்லூரியைத திறமபட நடததிப் பேரும் புகழும பெறறுத திகழ்ந்தவர் ஃசகின்னர் துரைமகனுர், அவா மாணவர்கள் அனைவரையும கண்ணினும் கருத்தினும் காதல் உயிர்போல் அமைத்துக கண்காணித்து வருபவர் தம மககள் எனவே கனவினும் நனவினும கண்ணி ஓம்புபவர். மாணவர் ஒழுக்கத்தை உயிரினும் ஓமபும் விழுமியர். அத் துரைமகனுர் அக் கல்லூரியின் மதிபபு மிக்க முதலவராவர். ஒப்பிலா உழைப்பும் உண்மையும் திண்மையும் ஊக்கமும் சீரிய நோக்கமும் ஒருங்கமைந்த அத்துரைமகனுர் ஒருவராலேயே சீரும் சிறபபும பெற்று அன்றும் இன்றும் விளங்குகின்றது.

அத்துரைமகனுர் வழியொழுகும் பெரும்பேற்றுல் நம் சண்முகனுர் நாடு நலமுறப் புரி மக்கள் தொண்டும், கழகமாகச் சேர்ந்து ஒற்றுமையுற்றுச் செய்யும் நற்றிறப்பணியும் நயந்து எளிதாகக் கைக்கொண்டனர். இத்துணை, அவர்தம் பிற்கால வாழ்க்கைக்குப் பெருந்துணையாக விருந்தது.

யாவரையும் வயப்படுததும் நாவன்மை படைத்த பெரும் பேச்சாளர் மூவர் எனப் பெயர்பெற்றிருந்தனர். அவருள்

ஒருவா அனனிபெசண்டு அமமையார். அவாதம் அருந தொடர்பும நாவன்மைப பழக்கமும நம சண்முகனாககுக் கிட்டியது

பரிசு

சென்னைமா நகரிலுளள எலலாக் கல்லூரியின் திறமிக்க ஒற்றுமைப் பேசசாளர் பெரும் போட்டிகளில் எல்லாம கலந்து மிக எளிதாகவெனறு பல பரிசுகளும பெற்றுள்ளார் கல்லூரிப் படிபபில மட்டுமன்றி எல்லாத் துறைகளிலும் எல்லா நற்செய்கைகளிலும் ஆர்வமும, சுறுசுறுப்பும், ஊக்கமும், விடாப் பிடியும, செய்து முடிக்கும் திறனும் உடையவராய்த திகழ்ந்தனர் இவை எல்லாம ஃச்கின்னா துரைமகனா இயக கும் நல்வழி இயஙகிய ஏறறததால அமைநதன என்க.

பட்டம

நம சண்முகனா சென்னைக் கிறித்துவக் கல்லூரியில நன்கு பயின்று ஆயிரத்துததொளாயிரத்துப் பதினைந்தாம (1915) ஆண்டில இளம் புலவா (பி ஏ) என்னும் எழிற்பட்டம் பெற்று இலஙகினா.

1915-இல், பட்டம்பெற்றபோது அமிழ்தினும் இனிய தமிழ்நூற்கலவி ஒரு சிறிதும உணரா ஒருவராயிருநதனர் தமிழி னிமை, தமிழ்பபண்பாடு, தமிழன உயாவு, தமிழ் வரலாற்றின் பெருமை முதலியவற்றை அறிய வேண்டுமே என்னும் ஆர்வங் கூட இலலாதிருந்தனா. அம்மட்டோ அருநதமிழைப் புறக் நனா.

அந்நேரதது ஆங்கில இலக்கியஙகளில் பெரும புலமை பெற்றிருநதனர் ஆங்கிலோசாக்ஃசன், கோத்திக் மொழிகளை யும் நன்கு கற்றிருந்தனா மேலும் உல்பிலாசு என்பவா கோததிக் மொழியில் வரைந்துள்ள விவிலியமறை மொழி பெயாப்பினை விடாமல் பொழுதுபோவதுணராமல் படித்துக் கொண்டேயிருப்பர். ஆனால் திருவளளுவர் திருக்குறள் இருக் கும் இடமும் தெரியாது. சாசர் எழுதிய நூல்களை நேசமுடன் கற்பா. இளஙகோ அடிகள் எழுதிய சிலப்பதிகாரத்தை உளங் கொளவும் ஒருப்படார்.

கல்லூரிப் படிப்பு முடிந்த பின்னரும் கணக்கற்ற ஆங்கில நூற்களைக கற்றனர் எண்ணிறநத ஆங்கில நூல்களை வாஙகித் தமதிலலத்து நூல்நிலையங்களை நிரப்பியுள்ளனர். மருந்துக் கேனும் தமிழ்நூல் ஒன்றிருக்க மறைந்த இடமும் ஆண்டுக் கிடையாது.

சட்டப்படிப்பு

சட்டக்கல்லூரியில் திறம்பெறப் பயின்றனர். சட்டக் கல்லூரி ஒருசாலை மாணவராய்த் திகழ்பவர், திவான்பகதூர் T. M. நாராயணசாமி பிள்ளை M.A., B.L., அவர்கள் ஆவர். 1917-இல், கிறித்துவ இளைஞர் சங்கச் சார்பில் மேற்கலைத்தேர் அனைத்துக் கல்லூரி மாணவர்களின் சொற்போட்டியொன்று நிகழ்ந்தது. அப்போட்டியில் "கேட்டார்ப் பிணிக்குந் தகை அவாய்க் கேளாரும், வேட்ப மொழிவதாம் சொல்" என்ற சீரிய முறைப்படி பேசினதோடு உண்மையும், திண்மையும், அறனும், ஆண்மையும், தோற்றமும், மாற்றமும் கண்டார் அனைவர்க்கும் கழிபேருவகை பயந்து நினைதொறும் இறும்பூது நல்கும் எழிலுடையவராயும்

இந்நிலை சண்முகனார்க்குக் கல்வியின்கண் கழிபெருங்காம மீதூர்தலை நல்கிற்று. இதனை நம் செந்தமிழ்ப் பொதுமறை செய்தருளிய திருவள்ளுவ நாயனார் திருப்பாட்டால் உணரலாம். அது வருமாறு.

"தாமின் புறுவது உலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்." —திருக்குறள், ருகக

பேரனார் பேருவகை

கோவைமாநகர்க் கிறித்துவ இளைஞர் சங்கத்துத் திறந்த வெளியில் என்றும் கண்டறியாதபடி மக்கள் கூட்டம் பெருகியிருந்தது. இக்கூட்டமிகுதி கண்டு எல்லாரும் வெளியூர் நாவன்மை மிக்க பெரும் பேச்சாளர் யாரோ வருகின்றார் என்று பொதுவாகப் பெருமக்களும் சிறப்பாக இளைஞர்களும் இடம் போதாவண்ணம் ஈண்டினர்.

ஆங்குச் சொல்வல்லராய்ச், சோர்விலராய், அஞ்சா நெஞ்சினராய், உண்மைக்கு உயிரையும் கொடுக்கும் உரனுடையாளராய்க், கரியமேனி மேல் வெளியநீறு நிறையஇடும் நீண்ட உருவினராய்ப், புன்முறுவல் பூத்த முகத்தினராய் நன்னர் நெஞ்சத்து இன்னசை வாய்ப்ப நவிலும் நாவன்மையராய் ஒருவர் தோன்றினர்; அவர்தாம் நம் சண்முகனாராவர்.

அவர் எழுந்து நின்றதும் யாவர் கண்களும் நோக்கின. யாவர் செவிகளும் அவர்தம் அரும்பெரும் சொல்லையே வேட்டன; நெஞ்சம் அச்சொல்லுக்கு இடனாகப் "புலன்கொளுவ மனமுகிழ்த்த சுருள் விரிந்து மலர்ந்தன". ஆங்கிலக் கல்வியிற் பெற்ற வாகை வள்ளல் தம் ஊரில் மன்னுயிர்க்குப் பயன்பெறுமாறு மணியனைய மொழிகளால் கேட்பார்

உள்ளத்து அணி செய்வாராயினர் யாவரும் மகிழ்ந்து வியந் தனர் அவர் விளக்கியது சொமாணியா முன்னேற்றம.

ஆங்கிலம் ஒரு சிறிதும் உணரா ஒண்மைப் பேரனார் அக் கூட்டத்து நாப்பண் யாப்புற வீற்றிருந்தது தம் பேரனார் சொற் பொழிவின் புறததோற்றங்களைக் குறிப்பால் நெறிப்பட உணர்ந்து பேருவகை கொளவாராயினர் தநதையார் காணவும் கேட்கவும முந்தைப்பேறு பெற்றிலரேனும் தநதையின் தநதை யாம் பேரனார் பேற்றை எலலாரும கொண்டாடினார்

இது, திருவள்ளுவ நாயனார் தந்தைக்கும் மகனுக்கும் உரிய கடமைகளை வலியுறுத்தியருளிய வாய்மைத திருப்பாட்டுக்களா னுணாக அவை வருமாறு :

“ தந்தை மகற்காற்றும நன்றி அவையதது
முந்தி இருப்பச செயல்.” —திருககுறள் ' சுஎ

“ மகன்தந்தைககு ஆற்றும உதவி இவன்தந்தை
என்நோற்றான கொல்லெனுஞ் சொல்.” —திருக்குறள் : எ0

இதன்படி பெற்று வளர்த்தவனினும் உற்ற நற்றந்தை உயிர் வளர்ப்பாம் ஒருபெரும் கல்விக்குத் துணைசெய்த ஒண்மை யனே என்று விளங்குகின்றதன்றோ?

மன்றாடி

சென்னையில் சட்டத் தேறுதல் பெற்றுக் கோவைமாநகர் புக்கு மன்றாடி (வழக்குரைஞர்)யாய்ச் சின்னாள் மன்னினார். அவர் நிலைக்கு அவ் இருப்பு ஒதத ஒன்றாய்த் தோன்றவில்லை. அகன்ற உலகில விரிந்த மனத்தொடு பெருமக்கள் தொண்டு புரியவே வேட்டனா வேட்டவாறு விளைவும் நேர்ந்தது.

பொதுத்தேர்தல் வெற்றி

சட்டக் கல்லூரியினின்றும் வெளிப்போந்த வழியாண்டில் அந்நாள் போபோன ஆங்கில நாள்வழித்தாளாம் ‘இந்து’வின் ஆசிரியா திரு கததூரிரெங்க ஐயஙகாரின் ஒருங்கிய மனத் தெழுந்து ஊக்கிய ஊககத்தால் 1920-இல் செனனை மாகாணச் சட்ட சபைக்கு நீலகிரி மாவட்டப் பொதுத்தொகுதிக்குத் தேரப்படுவோராய் நின்று வெற்றியும பெற்றனா. விழைந் தாங்குத் தொணடும் இயற்றினர். அஞ்ஞான்று இவா தம அகவை இருபத்தெட்டு. இவர் ஒருவரே தனிமிகு இளைஞர். இத் தேர்தல் முறை ‘மாண்டேகு சேம்ஃச் போாடு சீர்த்திருத்தத்’ தின்படி நிகழ்ந்தது.

நகராண்மைக் கழகம்

சட்டக்கல்லூரியில் பயின்றுகொண்டு தம் ஊராம் கோவை மாநகர நகராண்மை உறுப்பினராய்த்திகழ்ந்தனர். 1920-ஆம் ஆண்டிலேயே துணைத்தலைவராய் மக்கள் மதிக்கத் தொண்டியற்றினர்.

இந்திய சட்டசபை

பேராற்றல் படைத்த பெருந்தகையாளரெல்லாம் பேருலகிற்கேயுரிய பெருந்தொண்டியற்றும் பெற்றியர். அதனால் நம் சண்முகனார் வல்விரைவில் இந்திய சட்டசபை உறுப்பினராய்த் தேர்ந்தெடுக்கப்பட்டார் ஆண்டுத் திறமையுடன் பெருந்தலைவர்களும் வியக்கச் செயற்கரிய செய்வாராய்ப் பெருந்தொண்டியற்றினர். ஆண்டு 1923 முதல் 1934 வரை பணிபுரிந்தனர். எல்லாத்துறைகளிலும் நம் சண்முகனார் இணையில திறலர். ஆயின் பொருளியல் துறையில ஈடும் எடுப்புமிலலாச் செம்மல். இந்நிலையில் அனைத்துலகும் மருளத் தெருளசேர உளத்தராய்ச் சிறந்த தொண்டியற்றினர். தம அகவை நாற்பதின்கண் துணைத் தலைவராயும 1933-இல் தலைவராயும பணிபுரிந்தனர்.

மேல்நாடு சென்றுவரல்

ஆட்சித் துறையின் அறிவுமிக்க அண்ணலாரை ஆட்சியினரே மேனாட்டில் நடக்கும பயனுடைப் பல்பெருங்கூட்டங்களுக்குப் பனமுறை தெரிந்தெடுத்து அனுப்பியுள்ளார். எல்லா முறைகளிலும் மேனாடுள்ளிட்டு உலகமே வியக்கும் வண்ணம் சொல்லோ உழவராய் வெற்றிபெற்றனர். இவர் சென்று மீண்ட மாநாடுகள், ஆத்திரேலியாவில் நடந்த பாராளுமன்ற மாநாடு, செனிவாவில் நடைபெற்ற உலகத்தொழில் மாநாடு, ஆண்டே மீண்டும நடந்த அகிலதேசக்குழு மாநாடு, 1932-இல் ஆட்டாவாவில் நடந்த ஏகாதிபத்தியப் பொருளியல் மாநாடு முதலியன.

கொச்சி அமைச்சர்

கொச்சி மன்னரின் அன்பான அழைப்புக்கிணங்கி 1935 முதல் 1941 வரை அமைச்சுத் தொழில் பூண்டு பேரும் புகழும் சீரும் சிறப்பும் எய்தினர். இவர் 'தள்ளாவிளையுளைச் செய்வாராய், தக்காராய், தாழ்விலாச் செல்வராய் விளங்கியவராதலின், கொச்சி நாட்டை எல்லாவகையிலும் வளம்படுத்தினர். மக்களும் மன்னரும் மிக்கவே புகழ்ந்தனர். மன்னர் மாண்புசேர் 'மகாவீரர்' என்னும் பட்டம் நல்கினர். நம் அமைச்சர் நாவலந்தீவாம் இந்திய நாட்டில் எவரும் செய்யத் துணியாத முடிவிலாக் குடி

யாட்சி முறையை முனைந்து செய்து மன்னர்க்கும் மக்களுக்கும் என்றும் பொன்றுப பெரும் புகழை எய்துவித்தனர்.

தமிழ்க் காதல்

ஆங்கிலம் திறம்படச் சொற்பொழிவாற்றும் வல்லார் சிலருள் இவரும் ஒருவர் என்பது எவரும் அறிந்ததே. வெளி நாட்டவரும் வியக்கும் நாவன்மைமிக்க சண்முகனார், ஒருகால் சிற்றூர் ஒன்றில் தமிழில் சொற்பொழிவாற்ற நேர்ந்தது. அப் பொழுது புலம்பெயர் வேற்றுமொழியாளரைப் போல் பேச இயலாது கூசி நின்றனர். அன்று முதல் தமிழ்கற்க ஆர்வங் கொண்டு சிறந்த புலவர்கள் பலரைத் தம்முடன் வைத்துக் கொண்டு தளரா ஊக்கத்துடன் வரன்முறையாகத் தமிழ்நூல் கள் அனைத்தையும் கற்றுத் தேறினர். திருமுறைப் பண்களும் அப்பண் வல்லார் வழியாகச் செவ்வையாகத் தேர்ந்தனர். கால முண்டாகவே, கன்னித் தமிழைக் கற்றுக் கசிந்துருகி இன்புறும் பேறு பெற்றேம் இல்லையே என்று துனிமிகக்கொண்டு நனிமிக வருந்தினர். எனினும் காதல் மீதூர்தலினால் இளைஞரினும் இளைஞராய்ப் பிற்றைநிலை முனியாது விழைந்து கற்று விழுமிய புலவராயினர். சாலச்சிறந்த நூலாசிரியர் உரையாசிரியர் முதலிய பலநிலையும் ஒருங்கெய்தினர்.

தமிழுக்கும் தமிழிசைக்கும் தனிப்பெருந் தந்தையாய் விளங்கி ஒல்லும் வகை காத்து வருகின்றனர் ஒல்லாப் பகைஞர் வில்லேருழவர் எனினும் அஞ்சாது சொல்லேருழவராய்ப் புல்லாரும் நல்லாராகப் போற்றும் பொறுமையுடன் நற்றொண் டாற்றி வருகின்றனர் சீரியதொண்டு நீடுவாழ்வதாக.

திருமுறைப்பேரன்பு

டாக்டர் சண்முகனார் வழிவழியாகச் சிவனடிமைத் திறத் திலும் திருமுறையிலும் தவலரும் பற்றுமிக்க சிவநிறை குடும் பத்துத் தவச்சிறப்பால் தோன்றியவர். அகநிறை அன்பு மிக்கவர். நடிக்கும் படிப்புமுறை அவர்பால் இன்று. அதனால் அவர்தம் அகம்நிறை உண்மை அன்பு, எண்மையில் புறத்துப் புலனாகாதமைந்தது. புலனும் காலம்வரப் புலனாயிற்று.

போரூடு அமெரிக்கா புகல்

செர்மானிய உலகப்போர் தீயென மூண்டு கண்டாரும் கேட்டாரும் அண்டற்கரிய அச்சத்தராய், 'எச்சமும் யாமும் என்செய்வாம், எங்குச் செல்வாம்' என்று கண்ணிமையாது ஏங்கி இரங்கிச் சோரும் நண்ணரிய அந்நாளில், ஆட்சியாளர்

ஆணைவழிச் சண்முகனார் அமெரிக்கா செல்ல நேர்ந்தது. அக் காலை ஆண்டவன் அருள்துணை அகத்துடையராதலின் 'அஞ்சு வது யாதொன்றும் இல்லை, அஞ்சவருவதும இல்லை', என்னும் துணிவோடு எஞ்சா இன்னசைவாயப்பச சென்றனர்.

பட்டிப்பெருமான் வழிபாடு

அமெரிக்கா செல்லுங்கால் திருப்பேரூர் சென்று பட்டிப் பெருமானையும் நாயன்மார்களையுமம வணங்கி வழிபட்டு விடை பெறறுச்சென்றனர் இறைவர் திருவடிகளையே தலைக்காவலாகக் கொண்டு சென்று வென்றியும் நன்னலமும ஒன்றத் துன்று புக ழொடும் துன்பில் இன்பொடும் யாவரும மகிழவநது சேர்நதனர்.

திருவஞ்சைக்களம்

நம சண்முகனார் கொசசி அமைச்சராய்ப புக்கஞான்று திருவஞ்சைக்களததது வன்தொண்டப் பெருமானூர் சேரமான்பெருமாள் நாயனூர வழிபாட்டை அவாதம திருநாளாகிய ஆடிச சோதி நன்னு ளைக் கோவைச் சிவக்கவிமணி சி. கே. சுபபிரமணி முதலியார் அவர்கள் அடியார் குழாத்தொடும படி யுணருமம பான்மையில் பண்பொடு செய்யத தொடங்கினர் அத்திருநாள் சைவ உலகத் துக்கே புத்துயிர் அளிக்கும் புதுமைப பெருநாள். நாயன்மார் கள் இருவரும் முறையே யானைமீதும் குதிரைமீதும் வெள்ளி மலை சென்ற நன்னாள் இப்பொன்னாளை மலைநாட்டவர் வேற்று மொழி மயக்கால் ஆற்றவும் மறந்தொழிந்தனர்.

மிகவும் இடர்ப்பாடடோடும் இன்னலோடும் ஒருவகையாக அத்திருப்பெருஞ் செல்வர் ஆற்றினர். வழிமுறையாண்டில் அவ்விழா எடுக்க ஒண்ணாத்தடைகள் பலவும ஆட்சி முதன்மை யர் அஞ்சாது புரிநதனர். இதனை உணர்நத நம் சண்முகனார் அத்தடைகளை நீக்கியதுமட்டுமன்றிக் கோயில் சார்பிலேயே ஆண்டுதோறும் அத்திருநாளின் வழிபாடும் தடையின்றி நடைபெறத் திட்டம் வகுத்துப் பதிவு செய்து ஆணையிட்டனர். அன்றுதொட்டு இன்றுகாறும் முட்டின்றி நடந்து வருகிறது. இனி என்றும் நடக்கும் என்பது துணிபு.

திருமுறைப்பண்

டாகடா சணமுகனா இன்தமுடைய தனித்தமிழிசை யில் நனிபெரு வேட்கையும் நாட்டமும ஒருங்குடையர் என்பது 'தமிழிசைச்சங்கம்' நிறுவி நாடெங்கும் தமிழ் முழக்கமும் அரங் கெங்கும் தமிழிசையும் பரவ வேண்டுமெனத் தமிழ் பரப்ப வதே தம்முயிர் தழைக்கும் அமிழ்தெனை உழைத்த டாக்ட செட்டிநாட்டு ராசா சர். மு. அண்ணாமலைச் செட்டியார் அவர்களை

தமக்கு வலக்கை அணைய உறுதுணையாளராம ஒருவர் வேண்டு மென நனிததாய்ந்து நம சணமுகனாரைத தோநது தெளிநது ஏற்றமையால் புலனும அவாகளும ஒததுழைத்துச சஙக மும் பல்லாற்றால் விரிந்து நாடடுக்கும் மொழிக்கும் நன்னெறிக கும பயன்பெற்று வருவதோடு சென்னைமாநகாக்கண் நலல தோரிடத்து வல்லாரும் மாடடாரும் சென்றுசேர் வாய்ப்பின தாய் எல்லாரும இன்புற்று மகிழும ஏற்றமுடையதாய்க் காண்பாா கண்கவா வனப்பினதாய் ஏழரை இலகக வெண்பொன் செலவில் தனக்கெனப புதியதோர் தனி மாளிகையும் தாங்கி நிற்கின்றது.

இசசங்கச் சாாபில் சிலஆண்டுகளாகத திருமுறைப்பண் ஆயவு, இசைவாணா, திருமுறை நசைவாணர், செநதமிழின நநதா விளக்கனைய பெரும்புலவர் குழாங்கள், நன்றி சேர் செல்வப புரவலாகள யாவருமகூடி மன்றுசோ அம்பலவாணர் அடியுறைநது நிகழ்தத நன் முடிபுகண்டு வருகின்றனர்கள இது பததாம நூற்றாண்டில் வாழநத இராசராச தேவ சோழவேநதா விண்ணப்பததின்படி நம்பியாண்டாா நமபிகள் திருமுறை தொகுத்த காலத்து, திரு எருக்கததமபுலியூரில திருஞான சமபந்தபபெருமானார் உடன உறைநது தொண்டியற்றும பேறு பெற்ற திருநீலகண்டயாழபபாணா மரபில வநத கன்னி யொருத்தியால் இறைவன் அருள ஆணைவழி பண்ணடைவு வகுக்கபபட்டது அதுமீட்டும இப்பொழுது தோய்ந்து கைக் கொள்ளபபடுகின்றது.

நம் சண்முகனாாககு இசையோடு பொருளும விளங்கப பாடல்களைக கேட்டுப் பயன்பெற வேணடுமென்பது பெரு விருபபம். அததகைய பாடல வல்லாா அமைதல் வேண்டும. இசை உள்ளத்துறைநது உவகை நல்கும். பொருள உயிாககண் உறைந்து உணாசசியை நல்கிக் கழிபெரு மகிழ்வைததரும. இதனாலன்றே "பண்பொருநத இசைபாடும் அடியார்கள் குடியாக" என்பதூஉமட்டுமன்றிச் "சொல்லிய பாடடின் பொரு ளுணர்ந்து சொல்லுவாா" என்றும திருவருள் மொழியும் வருவதாயிற்று.

உளநலநல்கும் ஒப்பில் திருமுறை

டாக்டர் சண்முகனார்க்குக் கடுநோயுற்றுத் திருவருளால் நீங்கப்பெற்றுக் குணமெய்தினர். நலமுழுதற்பொருட்டு மருத்துவர்கள் ஒருதிங்கள் அமைதி வேண்டும் என்று உரைப் பாராயினர் உடலமைதிக்கு உழைப்பின்றி இருத்தலே சாலும்.

உள் அமைதிக்கு நன்னெறிப்படர்தலன்றி வாளா இருப்ப தன்று. அதுவும் சிவச்சார்புடையதாய்த் திருமுறைக் கேள்விய தாய் இருத்தல் வேண்டுமென எண்ணிச் 'சிவககவிமணி' அவா களைக்கொண்டு திருமுறைத திருப்பாட்டுக்களைப் பொருளுடன ஒருதிங்கள் பொருந்தக் கேட்டு உளநலமும உடல் நலமும ஒருங்கு திருந்த எய்தினர். இதன் வாயிலாகச் சண்முகனா அவர்கட்கு நன்னெறியாம் சித்தாந்த சைவத்திடததும, அதனு யிராம் திருமுறையினிடத்தும் எவ்வளவு ஆழ்நத மெய்ப்பற றிருக்கிறதென்பது புலனாகின்றதன்றோ?

திருமுறை வெளியீடு

பன்னரிய பன்னிரு திருமுறைகளையும வரலாறறுக் குறிப்பு, திருவூர்க் குறிப்பு, பாட்டுக் குறிப்பு முதலியவறறுடன் எழில்சேர் ஒண்மைய பதிப்பாக அண்ணமலைப் பலகலைக் கழக வழியாய் வெளிவரச சண்முகனார் திட்டம வகுத்துள்ளார் என்பது கேட்டுச சைவவுலகும் தமிழுலகும் மெய்மமலி உவகை பூத்து விளங்குகின்றன.

திருநீறு

"கங்காளன் பூசும கவசத் திருநீறறை, மஙகாமற் பூசி மகிழ் பவர்" நம் சண்முகனா நீராடி நீறணிநது பொட்டிட்டுப் பிளளை யாா குட்டுற்றுச்செய் வழிபாடு வழுவாதியற்றி விழுமியராய்க் கெழுமிய நல்லாரோடன்றி உணவருநதார் திருநீறு பூசுவதும நிறையப் பூசுவர். இஃது ஆளுடைய அடிகள் அருளிய "பூசில்தூய் திருநீறே நிறையப் பூசி" எனனும பொருளுரையைப போற்றுப் பொற்பினை மெய்ப்பிக்கும. திருநீறு உடற்காவலாகவும், திரு முறை உயிர்க்காவலாகவும உள தெண்ணும் வளத்தினர்.

திருநீ றுடற்காப்பாம் செயயவுயிராக காப்பாம்
திருமுறைஎன றெணணல் சிறப்பு.

மனைக் கோவில்

ஊர்நாப்பண் அமையும திருக்கோவில் ஊர்ப்பொது. தெருநாப்பண் அமைகோவில் தெருபபொது மனையகத்தமை கோவில் குடும்பப்பொது இம்முறையாகத் தமிழகம் நாயன பற்றில் நேயம் உளளதாய்த் தொன்றுதொட்டு இன்றும நின்று நிலவுகின்றது. இதற்கோர் தக்க சான்றாய் டாக்டர் சண்முக னார் மைதவழ் மனையகத்துச் செய்ய அறிவுக்குறியாம் மூத்த பிள்ளையார் திருக்கோவில் அழகுற அமைக்கப்பெற்று நாள்வழி பாட்டு நலமொடு நன்கு நிலவுகின்றது. இஃதொன்றே இவர்தம் கடவுட் காதலைப் புலப்படுத்துமன்றோ?

மனைப்பெயர்

இவர்தம் சித்தாந்த சைவப்பற்று சென்னையிலும் உதகையிலும் அணிபெற அமைத்துள்ள வளமனைகட்குத் திருமுருகன் திருப்பெயரே வைத்து வழங்கிவருவதால் விளங்கும். இவர்தம் கோவைமாளிகைக்கு "ஆவார்டன்" என்பது பெயர். இப் பெயர்க்குக் காரணம் இங்கிலாந்தில் சிறந்து விளங்கிய பழம் பெரும் முன்னேற்றக் (லிபரல்) கட்சியின் தலைவர் வில்லியம் யூவாட் கிளாட்ஃச்டின் என்பவர்தம் மாளிகையின் பெயர் "ஆவார்டன் காசில்" என்பதாகும் அம்மாளிகைக்குரியவரே நம் சண்முகனாரின் அரசியல் ஆசானவர் அந்நன்றியின் பொருட்டும் தொடர்பு தோற்றும் பொருட்டும் அப்பெயரையே வைத்து வழங்குவாராயினர் மனோன்மணீய ஆசிரியர் தம்மாளிகைக்கு ஆர்விபுரம் என்று பெயரிட்டதும், அப்பூதியடிகளார் தமமனைக்குத் "திருநாவுக்கரசு" என்று வழங்கியதும் இவ்வுண்மையை நன்கு வலியுறுத்துவன காண்க

சிலம்பு

டாக்டர் சண்முகனார் 1946-ஆம் ஆண்டில் சிலப்பதிகாரப் புகார்க் காண்டத்திற்குச் சிறந்த ஒரு நல்ல எளிய உரை எழுதி அழகாக அச்சிட்டு வெளிப்படுத்தியுள்ளார்கள். அதன் முகவுரைக்கண் தமிழ்மொழியின் தொன்மை, இனிமை, முதன்மை, உலகப் பெருமொழிகளுள் தலைசிறந்து விளங்கும் உண்மை, எளிமை, இசைமை, தனிமை முதலிய பலவகைப் பண்புகளும் மல்கிச் சாலச் சாலச் சிறந்து விளங்குவது தமிழே என மறுக்கலாகா வகைமையில் வாய்மை தோன்ற வலியுறுத்தியுள்ளார்.

இவர்கட்குத் தொன்மைத் தமிழ்நூல் அனைத்திலும் உள்ள பற்றினும் சிலப்பதிகாரத்தினிடத்துத் தணிவில் தனிப்பற்றுண்டு அதனாலேயே அதற்கோர் இனிய எளிய நல்லுரை கண்டு வெளிப்படுத்துவாராயினர்.

சிலப்பதிகாரமாநாடு

ஏறத்தாழ இரண்டாயிரம் ஆண்டுகளுக்குமுன் தோன்றிய சிலப்பதிகாரச் செழுந்தமிழ்த் தொடர்நிலைச் செய்யுட்கண் கண்ட 'பூம்புகார் நகரம்' கண்ணுற்றுக் காணும் அளவிலேனுமின்றி அழிந்து புதைந்து போனமை பெரிதும் வருந்தத்தக்கதொன்றே. ஆயினும் நம் சண்முகனார் புதைபொருள் ஆராய்ச்சியினர் வழி பல உண்மைகளைக் காணவேண்டும் என்னும் 'பேரார்வம்' உடையவராக இருக்கின்றார்.

எஞ்சியுள்ள நகரத்தையும் முன்னிருந்ததாகச் சொல்லப்படும் "கற்பக்கடம் பூண்ட பொற்புடைத் தெய்வ"மாம்

கண்ணகியார் வண்தமிழ் வாழப பிறந்தகம, மணநது சிறந்தகம, 'வாழ்க எங்கோ மாதவி மடநதை, கானற் பாணி கனக விசயா தம், முடித்தலை நெரித்தது' என்று மாடலன் கூறிய கானற் பாணி நிகழ்ந்த கவின்மிகு கடற்கரையையும, மாதவி ஆடிய அரங் கையும் மன்பெரும் புலவர் வாயிலாய் ஆண்டிருநதே போற்றிப் புகழ்ந்து புகலவேண்டுமெனப் பேரவாக் கொண்டனா

ஆண்டுளள (தஞ்சைமாவட்டம்) தமிழன்பாகளைத் தூண் டிச் சிலப்பதிகாரமாநாடு ஒன்று கூட்டுமாறு செய்தனர் அங்ஙனமே கூட்டப்பெற்ற மாநாட்டுககுத தாமே தலைமை தாங்கிச செமமையுற நடத்தினா அமமட்டோ தலைமையுரை யில் அரும்பெரும் குறிப்புக்கள் அழகுற அமைத்து விளக்கி யுள்ளனா. ஈரோட்டில் நிகழ்நத சிலபபதிகார மாநாட்டினைத் திறந்துவைத்தனா. அப்பொழுது அரியதோா திறபபுரையும்

தமிழ்க்கலைக் களஞ்சியம்

தமிழ்க்கலைக் களஞசியம் என்னும் அரிய பெருநதொண்டி னுக்கு 'மத்திய ஆட்சியினா' ஐநதிலக்க ரூபா, வழஙகியுள்ளார். அவர்கள் அங்ஙனம் வழங்குதற்குப பெருங் காரணமாக இருந்த வர் நம் சண்முகனாரவா

திருவள்ளுவர்

திருக்குறளின் மாட்டும் அளவிறநத காதலுடையவர். அந்நூற்குத் தக்க ஓா உரையும எழுதிவருகின்றனா என்பதை யறியத் தமிழகமே பெருமகிழ்வு கொள்கின்றது கமபராமாய ணத்திலும் ஆழ்ந்த பற்றுள்ளவா.

குறிஞ்சிப் பாட்டு

பத்துப்பாட்டுள் ஒன்றாகிய குறிஞசிப பாட்டினை எளிய இனிய உரையில் நம் சண்முகனா ஆக்கி அளித்துள்ளார். இம் முறை, ஏனைச் சங்கநூற்களும எளிதாக மக்கள் யாவரும் கற்றுத தேறி இன்புற்று இனிது வாழத்துணை செய்வதாகும.

கொடை

"பெருமிதம்" என்பது நன்மதிப்பு. நன்மதிப்பு நான்கு வாயில்களான் வரும். அவை "கல்வி தறுகண் இசைமை கொடை எனச், சொல்லப் பட்ட பெருமிதம் நான்கே" (தொல். மெய்ப்—கூ) என்பன. நம சண்முகனார் செய்யும் அறங்கள் ஆகலும் ஆகன்ற அருமைச் செயல்களாகக் கா[illegible]

கோவையில் 'நலவுரிமைக் கழகம்' 'முறைச்சார்பு' கட்சி) இவற்றின் வாயிலாக ஏழை மாணவர்களுக்கு உதவி கிடைத்தது. வெளியூர் மாணவர்கட்கு உறையுள் வசதி இன்மையை ஓர்ந்து தம் அருமைப பேரனூர் அமைத்துள்ள அழகிய சாவடியை (சத்திரம்) உளமகிழ்ந்துதவினர் தாயார்பாலுள்ள தனியன்பால் கோவைக்கும் அவிநாசிக்கும் இடையே அளவிலா மக்கள் செல்வொழியா வழிக்கரையிலுள்ள மூன்று இலக்கம மதிப்புள்ள கட்டடங்களை எல்லாம் தாயார் பேரால் உயர்நிலைப் பள்ளியாக அமைத்து அளித்தனர் கோவைமாநகரில் 'கலியாண மண்டபம்' ஒன்று எல்லா வாய்ப்புகளும் அமைய அழகுறப் பெரும பொருட் செலவில் ஆக்கி அளிததுள்ளார். அம் மண்டபம் பொதுநிலைப் பெருமக்கட்குப் பெரிதும் உதவியாக இருக்

பொருளமைச்சு

1947-இல் நாவலந்தீவாம் இந்தியப் பெருநாடு விடுதலை பெற்று உரிமை உற்றது. அந்நாள் பண்டித நேரு முதலமைச்சரானூர் பன்னாள பயிற்சி வாய்ந்த ஆங்கிலத் திறலோர் அனைவரும் நாட்டைவிட்டகன்றனா பொருளியல்துறை யொழிந்த ஏனைத் துறைகட்கு அமைச்சர் எங்ஙனமிருப்பினும் அமையும். பொருட்டுறைக்குப் பயிற்சியும பண்பாடும் முயற்சியும் உடைய மூதறிஞரன்றோ வேண்டப்படுவா. அத்துணை "ஆன்றவிந் தடங்கிய கொள்கைச் சான்றோ" ராவார் யாவரென நேரு மிகவும் ஆழ்ந்து எண்ணுவாராயினர்

எண்ணி நம் சண்முகனூர் ஒருவர்தாம் உளரென ஓர்ந்து தேர்ந்தனர். தேர்நது வலிய அழைத்துப் பொலிவுற நல்கினர். 'நடுவண தெய்த இருதலையும் எய்தும்' என்பது உலகியல். ஆட்சி இயலில் நோக்குங்கால் இருதலைமட்டுமன்று பலதலையும் பாங்குற அமையும் என்பது ஒருதலை அதனைப்பூண்டு உய்க்குந் திறனுடை அமைச்சாபால் ஒப்புவிக்கப்பட்டமையால், மிகவும் சிக்கலான முதலாண்டுப் பருவத்து நுண்மாண் நுழைபுலத்திண்மையால் அடிப்பட்ட அழுந்தல் (அனுபவம்) மாட்சியால் சிக்கறுத்துத் தக்காவா பேணி மிக்கவரென்னும் பெயருடன் நடத்தினர்.

பொன் உரைகள்

உலகத்திலே உள்ள எம்மொழியாளர்க்கும் இல்லா இடர்ப்பாடு நம் செந்தமிழ்த் தாய்மொழியாளர்க்கு ஏற்பட்டிருப்பது எண்ணும்தோறும எண்ணும்தோறும் ஈடுசெய்ய ஒண்ணு வருத்தந்தருவதொன்றாகும். அது, "வேலை வேண்டுமென்றால் ஆங்கிலமும், மணவினையோ பிணவினையோ செய்யவேண்டுமென்றால்

சமக்கிருதமும், தேசியச் செயல்களிலும் அரசியலிலும் ஈடுபட வேண்டுமென்றால் இந்தியும், இசை நுகர்வு வேண்டுமென்றால் தெலுங்கும் அறியவேண்டிய" அவல நிலையில் இருக்கும் கவலை தரும் செய்தியேயாம்.

துணைவேந்தர்

ராசா சர் முத்தையச் செட்டியார் அவர்கள் அன்பிற் கிணங்கி அண்ணாமலைப் பல்கலைக் கழக மதிப்புத்துணை வேந்த ராக விளங்குகின்றார் நம் சண்முகனார். இவர்கள் காலத்து அப் பல்கலைக் கழகப் பெருநோக்கம பலவும் முட்டின்றி நிறைவுறும் என்பது உறுதி தமிழும் தமிழிசையும் இடச சிறப்பாலும் இயக்குநர் திறத்தாலும் எழில்பெற்று இலங்குவ என்பதை எவரே மறுப்பர்? இடமோ தமிழைத் தாங்கி நிறுத்தத் தோன் றிய செட்டிநாட்டு மன்னர் மாண்பால் அமைக்கப்பெற்ற 'அண் ணாமலைப் பல்கலைக் கழகம்' இயக்குநர் டாக்டர் சண்முகஞ் செட் டியார். இருவரும் இருகண் போன்றவா. தமிழுக்கு உடலுயிர் போன்று உறுதுணையானவர்.

வாழ்த்து

இத்தகு மேன்மைமிக்க டாக்டர் சண்முகனார் அவர்கட்கு **அறுபான் யாண்டு** நிரமபலுறுகின்றது மக்கட்கு வகுத்த நூற் றிருபதாண்டுகளை நான்கு கூறாக இன்பம பொருள் அறம் வீடு என முதன்மைபற்றிப் பிரித்துக் கண்ணின், பொருள் பகுதி அறுபதாண்டு நிறைவுடன் நிறைந்து அறுபத்தோராவது ஆண் டுத் தொடக்கம அறம்புரி நன்னாள் தொடக்கமாகும்.

இந்நாள் இறையருளால் எய்தி இன்புறும் அப் பெருந் தகையார்க்கு ஏனையவும எய்தி எல்லா நலமும் பெற்று நற்றமிழ்த தொண்டராய் நாளும் வாழுமாறு இறையடியை இறைஞ்சி வாழ்த்துகின்றோம். அவர்கள் அரும்பெரும் குடும்பத்தாரும் நீடுவாழ ஆண்டவனை வழுத்துகின்றோம்.

சைவத் திருவுருவன் சால்தமிழின் நற்றொண்டன்
மெய்வைத்த சொல்லன் வினைவேட்போன்—வையமெலாம்
போற்று புலவன் பொருளியலோன் சண்முகனார்க்கு
ஏற்றமணி நாள்வாழ்க இங்கு.

# ஆட்சிமொழி மாநாடு

[டாக்டர், கனியர், இ. மு. சுப்பிரமணிய பிள்ளை]

## தமிழ்நாட்டின் ஆட்சியைத் தமிழிலே நடத்துக

### தமிழ்நாட்டின் பண்டைச்சிறப்பு

இங்கிலாந்து, அமெரிக்கா, உருசியா, சீனு, சப்பான் முதலிய நாடுகளிலெல்லாம் ஆட்சி அவ்வந்நாட்டு மொழிகளிலேயே நடைபெற்று வருகின்றது; அதனுல் அந்நாடுகள் எல்லாத் துறைகளிலும் முன்னேறிச் சீரும் சிறப்பும் பெற்றுத் திகழ்கின்றன. அந்நாட்டு மக்கள் 'தமநாடு' என்ற உணர்ச்சியில் ஓங்கி அந்நாடுகள் மேன்மைபெறும் வழிகளிலே கண்ணுங் கருத்துமாக உழைத்து வருகின்றனர்.

நம் இந்தியநாடு பண்டைக்காலத்தில் பல பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தாலும் அவ்வப் பிரிவுகளிலுள்ள மக்கள் பேசிய மொழி வழியாகவே ஆட்சி நடைபெற்ற காரணத்திலுலே பலவகைக் கலைகளிலும் மேன்மைபெற்று விளங்கியது. இந்தியாவின் தென்கோடிப் பகுதிதான் உலகிலேயே முதன் முதல் தோன்றிய பண்டைய நாடு, அது **பாண்டிநாடு** என்று பெயர்பெற்றுச் சிற்பம், ஓவியம், கணிதம், மருத்துவம் முதலிய பல கலைகளிலும் உலகத்துக்கு வழிகாட்டியாகத் திகழ்ந்ததென்பது அவ்வக் கலைகளில் முதன்மை பெற்றுள்ள இன்றைய உலகப்பெரியார் கண்ட முடிவாகும்.

### அடிமை வாழ்வும் விடுதலையும்

கால மாறுபாட்டினுலே பிற நாட்டினர் ஆட்சியில் இந்தியா சிக்கிச் சீர்குலைவதாயிற்று. மகமதியர் ஆட்சியில் முற்றிலும் அடிமைப்பட்ட வடஇந்தியப் பெரும்பான்மையோர் தமது தாய்மொழியையே மறந்து மகமதியருடைய மொழியாகிய இந்துஸ்தானியைக் கைக்கொள்வாராயினர்; அவரிற் சிலர் இந்தியாவில் முன்னரே தம தாய்மொழியுடன் வழங்கியிருந்த சமஸ்கிருதச் சொற்களிற் பெரும்பான்மை அம்மொழியிற் கலந்து இந்தியென்ற புது மொழியை அமைப்பாராயினர். இந்துஸ்தானியிலுள்ள **தாசில்தார், தாலுகா, சில்லா, நமூனு, மசோதா** முதலிய எண்ணிறந்த சொற்கள் ஆட்சியிற் பயிலத்தலைப்பட்டன. அச்சொற்களிற் பெரும்பான்மை ஆங்கிலேயர் ஆட்சியுள் இந்தியா முழுவதும் மாறியபோதும் மாருமல் நிற்பவையாயின; **கலெக்டர், போர்டு, பிரசிடெண்டு, முனிசிபாலிடி, சேர்மன், பில்,**

ஆர்டு முதலிய எண்ணிறந்த ஆங்கிலச் சொற்களும் ஆட்சியிற் கலந்தன இந்துஸ்தானி மாறி ஆங்கிலம் இந்தியா முழுமைக்கும் ஆட்சிமொழியாகி மக்களை அடிமை மனப்பான்மையுடன் ஆங்கிலேயருடைய அடிவருடிகளாக்கிவிட்டது. என்றாலும் இடையிடையே கப்பலோட்டிய சிதம்பரம்பிள்ளை, மகாத்துமா காந்தியடிகள் முதலிய பேரறிஞர்கள் தோன்றி இந்திய விடுதலைக்காகப் பாடுபட்டு வெற்றியும் பெற்றார்கள். உலகத்திலே ஒருநாளும் சூரியன் மறையாத பேரரசாட்சியைப் பல நூற்றாண்டுகள் நடத்திய ஆங்கிலேயர் திடீரென இந்திய ஆட்சியை நம்மிடம் ஒப்புவித்துவிட்டு இந்தியாவினின்றும் வெளியேறிவிட்டார்கள். அதனால் நம் நாட்டு ஆட்சிப்பொறுப்பு நம்மீது சார்ந்தது.

## நாட்டு மொழியே ஆட்சி மொழியாதல் வேண்டும்

நம் நாட்டு ஆட்சியின் முழு உரிமையும் நம்மைச் சேர்ந்து ஐந்தாண்டுகள் கழிந்துவிட்டன; இப்போது ஆறாவது ஆண்டும் தொடங்கியிருக்கிறது. இருந்தாலும் இந்தியநாட்டு ஆட்சி முன்போலவே ஆங்கிலத்திலேதான் நடைபெறுகின்றது. ஆங்கிலத்தைப் பதினைந்து ஆண்டுகளில் ஒழித்துக்கட்டி அதன் நிலையில் இந்தியைக் கொண்டுவரவேண்டும் என்ற செய்தி இந்தியச் சட்டத்தில் இடம் பெறுவதாயிற்று. மாகாணங்கள் மொழிவாரியாகப் பிரிந்து அவ்வம் மொழியே வழங்கும் பகுதிகளில் ஆட்சி மொழியாதல் வேண்டும் என்ற கிளர்ச்சி நெடுங்காலமாக இருந்துவருகிறது. அப்படியானால்தான் மக்கள் மொழிப்பற்றும் நாட்டுப்பற்றுங் கொண்டு விடாது உழைத்துத் தாமும் மேன்மையடைந்து தம் நாட்டையும் மேலோங்குவிப்பர் என்பது உலக அறிஞர் கண்ட உண்மை.

ஐம்பது ஆண்டுகளுக்கு முன்வரை இன்று மலையாளநாடு என்று சொல்லப்படும் திருவாங்கூர் அரசாட்சி தமிழிலேயே நடைபெற்றிருந்தது. இப்போது இலங்கையிலே தமிழ்மொழியும், சிங்களமும் ஆட்சிமொழிகளாய்விட்டன. நம் இந்தியாவின் ஒரு பகுதியாகிய மத்தியப் பிரதேசத்திலே மராத்தியும் இந்தியும் 1953 ஆகஸ்டு 15உ முதல் ஆட்சி மொழிகளாகவேண்டும் என்று அந்நாட்டு ஆட்சியாளர்கள் முடிவுகட்டிவிட்டார்கள். நம் சென்னை நாட்டு முதன் மந்திரியாக இருந்த ஓமந்தூர் இராமசாமி ரெட்டியார் இக்கருத்தினை நான்கு ஆண்டுகளுக்கு முன்னரே கண்டு தமிழ் நாட்டில் திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் தமிழிலும், தெலுங்கு நாட்டில் கிழக்குக் கோதாவரி மாவட்டத்தில் தெலுங்கிலும் ஆட்சி நடக்கவேண்டுமென்று ஆணையிட்டார். அதனால் தேவையான ஆட்சிச் சொற்களை

அமைத்து ஒழுங்கு கண்டு அவ்வொழுங்கினை நாடு முழுமையிலும் மிக விரைவில் ஆட்சிக்குக் கொண்டு வரவேண்டுமென்பது, அவருடைய கருத்து. திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் ஆங்கிலமும் தமிழும் வல்ல தக்க தலைவர்களை ஆட்சித் தலைவர்களாக்கி அரசாங்கம் வேண்டும் வசதிகள் செய்து தாராமையும், தெலுங்கு, கன்னடம், மலையாளம் முதலிய பிற மொழியாளர் ஆட்சித் தலைவர்களாக அமைந்துள்ளமையும் ஆகிய பல காரணங்களால் அப்பகுதியாட்சி வெற்றி பெறவில்லை.

### நாடு, நகர், ஊர் ஆட்சி

அரசியற் கிளர்ச்சிகள் அந்தந்த நாட்டு மொழிகளிலேயே நடைபெற்றமையினாலேதான் மக்கள் மிக எளிதில் உரிமை யுணர்ச்சி பெற்றார்கள். இந்தியாவின் பொதுமொழி எதுவாக இருந்தாலும் இந்தியா முழுமையும் மேலோங்குவதற்கு அந்தந்தப் பகுதியில் வழங்கும் மொழிதான் அந்தந்தப் பகுதியின் ஆட்சிமொழியாக ஆதல்வேண்டும். இப்போது தமிழ் நாட்டில் நாட்டாட்சி, நகராட்சி, ஊராட்சி எல்லாம் தமிழிலேயே நடைபெறுகின்றன. அதனால் ஆட்சிமுறையினைப் பொதுமக்கள் நன்றாகப் புரிந்துகொள்கிறார்கள்.

### ஆட்சித் தலைச் சொற்கள்

ஆங்கில ஆட்சிச் சொற்களுக்குப் பொருத்தமான தமிழ்ச் சொற்களைத் தமிழ்ப் பாதுகாப்புக் கழகத்தினர் முயன்று ஆக்கி 'ஆட்சிச்சொல் அகரவரிசை' என்ற நூலை வெளியிட்டிருக்கின்றார்கள். அச்சொற்களை வாங்கிப் பயன்படுத்துமபடி அரசாங்க நாட்டாட்சித்துறை (Local Administrative Department) ஆணை 1949லேயே பிறந்திருக்கிறது. ஆதலின் அத்துறையில் அச்சொற்கள் அதுமுதல் நம நாட்டிற் பழக்கத்தில் இருந்து வருகின்றன. அதே சொற்களை அரசாங்கத்தின் ஏனைய துறைகளிலும் பயன்படுத்துமபடி செய்தால் ஆட்சி மிக எளிதாக நடைபெறும் என்பதில் தடையேயில்லை. அச்சொற்றொகுப்பட்டியில் இடம்பெறாத ஆங்கிலச் சொற்கள் தொகுக்கப்பெற்று அவைகளுக்கு ஏற்ற தமிழ்ச்சொற்கள் ஆக்கப்பெற்றோ அல்லது முடியாத இடத்து அவைகளை தமிழில் எழுதப்பெற்றோ கையாளுமபடி தமிழ்நாடு முழுமைக்கும் ஆணையனுப்பினால் தமிழ்மொழி ஆட்சி விரைவில் நிலைபெறுவதாகும்.

### தெளிவான சொற்கள்

ஆட்சி எளிதில் நடைபெறுவதற்கு ஆட்சியாளரிடம் அம் மொழியைப் பிழையற எழுதவும் பேசவும் திறமையிருத்தல்

வேண்டும். அத்திறமை அமையும்படி செய்துவிட்டால் இப்போது பதின்மர் கூடிப் பார்க்கும் வேலை ஐவரால் மிகத் திறம்படச் செய்துமுடிக்கப்பெறும். ஆட்சிச் சொற்கள் ஐயமதிரிபில்லாமல் பொருளைத் திட்டமாகக் குறிக்கும் தன்மையுடையனவாக அமைதலவேண்டும். ஆங்கில ஆட்சி ஆங்கிலத்திலேயே பலப்பல நூற்றாண்டுகளாக நடைபெற்று வருவதோடு ஆங்கிலத்தை எவ்வளவோ துறைகளிலெல்லாம் ஆங்கிலர் வளப்படுத்தியிருந்தும் அவர்கள் இன்றும் தமது ஆட்சிமொழியைத் தெளிவாக்குவதற்கு முயற்சி செய்தே வருகின்றார்கள். ஆங்கில அரசாட்சித் தலைவர்களுடைய வேண்டுதலின்படி 1951-ல் தெளிவான சொற்கள் (Plain words) என்ற நூலும், அதனைத் தெளிவாகத் தெரிந்துகொள்ளுவதற்கு ஏற்றதொரு விளக்க நூலும் (A. B. C of Plain words) ஸர். எர்னஃச்டு கவர்சு (Sir Ernest Gowers) என்ற பெரியாரால் எழுதித் தரப்பெற்று அரசாங்கத்தாராலேயே அச்சிடப்பெற்று வெளிவந்துள்ளன. எவ்வளவுக்கெவ்வளவு தெளிவு இருக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு திறமை நிலவும்; திறமை நிலவினால் குழப்பம் குறைந்து மறையும்; அதனால் நாடு பலவகையிலும் நலம்பெற்று ஓங்கி வளர்ந்து திகழும். ஆட்சியாளரும் பொதுமக்களும் ஒருவரையொருவர் நன்றாகத் தெரிந்துகொண்டு நாட்டு வளத்தைப் பெருக்குவதில் ஒன்றுபட்டு உழைப்பார்கள்.

### அரசாங்கம் செய்யவேண்டுவன

மத்தியப் பிரதேசத்தில் அந்நாட்டு மொழிகளாகிய மராத்தியும், இந்தியும் ஆட்சி மொழிகளாக 1953 ஆகஃச்டு 15உ முதல் நிலைபெறுகின்றன; அங்ஙனமே நம தமிழ்நாட்டில் தமிழ்மொழி அந்நாள் தொடங்கியாவது ஆட்சிமொழியாக ஆக்கப்பெறுதல் வேண்டும்; அப்படியானால்தான் சில ஆண்டுகளில் வந்து ஆட்சி திறம்பட அமையும். ஆதலின் இவ்வழியில் உடனே அரசாங்கம் செய்யவேண்டிய கடமைகள் பின்வருவன:—

1. 1953 ஆகஃச்டு 15உ முதல் வடக்கே திருப்பதி தொடங்கித் தெற்கே கன்னியாகுமரி வரையிலும் தமிழ்நாட்டில் தமிழே நீதிமன்றங்கள் முதலிய பல துறைகளிலும் ஆட்சிமொழியாதல் வேண்டும் என்று ஆணையனுப்பித் திட்டஞ்செய்தல் வேண்டும்.

2. கல்லூரிக் கல்வியும் தமிழிலேயே கற்பிக்கப்பெறுதல் இன்றியமையாதது.

3. பலதுறை அலுவலகத தலைவாகளும பணியாளர்களும் ஆசிரியர்களும் அச்சுததுறையாளாகளும் தமிழைப் பிழையற எழுதவும் பேசவும வகைசெய்தல் வேண்டும

4 தமிழ்நாட்டில் பெயர்ப்பலகைகளெல்லாம தமிழி லேயே இருத்தல் வேண்டும

5. கடித மாதிரிகள் முதலிய பல படிகள நல்ல மாதிரி யாக அமைத்து அச்சிட்டு உதவுதல் வேண்டும்

6 இதனைக கண்காணிப்பதற்கு ஓா அறிஞா கழகம அமைக்கபபெறுதல் வேண்டும

முதன்மந்திரி சககரவர்த்தி இராசகோபாலாச்சாரியாா

நம் சென்னை நாட்டு முதன்மநதிரி இராசகோபாலாசசாரி யார் இணையற்ற தமிழ் மகன். தமிழ்க் கலைச சொற்களை நமது சென்னை மாகாணத தமிழச்சங்கம ஆக்கியபோது இவா அதற்குத் துணைசெய்ய வலிய முனவந்து பூதநூற கலைசசொற கழகத்துக்குத் தலைமை தாங்கி அரும்பாடுபட்டு அககலைச் சொற் களை ஆக்கிததநததோடு பொருட்டுணையும புரிநது அவை அச்சானவுடனே அபபோது தாம முதன்மந்திரியாக இருநத செல்வாக்கினால் அரசாங்கச் செலவிற படிகள் வாஙகித் தமிழ நாட்டிலுளள உயர்பள்ளிக்கூடங்களுககெல்லாம் அனுபபி அச சொற்களைத் தாராளமாக ஆசிரியர் பயன்படுத்திக் கலவி கற்பித் தல் வேண்டும் என்ற ஆணையும் அனுபபினார்; (Government of Madras—Memo. No. 45290 B 3—dated 9-11-1938) அபபோது இராசபாளையததில் நடைபெற்ற மாகாண அரசியல மாநாட்டிலும் கலைச்சொல்லாக்கத்தைப பாராட்டியும அதற்கு ஆசிரியரும் அறிஞரும் துணைபுரிய வேண்டும் என்று வேண்டி யும் ஒரு தீர்மானமும் கொண்டுவந்து நிறைவேற்றினா

பொறுமையினாலே அறிவுக்கண் மழுங்கி மிகச் சிறுபான்மை யினராக வாழும தமககுச் சென்னை சேரவேண்டும் அல்லது தனிப்பகுதியாக இருக்கவேண்டும் என்று பிதற்றும் ஆந்திரத் தலைவர்களுக்கு ஆணித்தரமாக அறிவுரை கூறிச் சென்னை தமிழருக்கே என்பதை எடுத்துக்காட்டி வருகிறார். "தமிழில் எக்கருத்தையும் எளிதில் விளக்க முடியும்; கலைச்சொற்களும் எளிதில அமைத்தற்கு ஏற்ற இயற்கைமொழி தமிழ்மொழி" என்ற உண்மையை விளக்கித் "தமிழில் முடியுமா?" என ஒரு சிறந்த நூலை ஆக்கியிருக்கிறார் இவா இப்போது நம் நாட்டு முதன்மந்திரியாக இருப்பது நம் நாட்டுக்கு நலல காலமே என்பதில் தடையே இல்லை: இவருக்கு வாய்த்த கல்வி மந்திரியோ மிக நேர்மையான கருத்துடை யார்.

### கல்வி மந்திரி கிருஷ்ணா ராவ்

திருச்சிராப்பள்ளி இந்தி ப்ரசார சபை மாநாட்டை 22-10-1952-ல் தொடங்கி வைத்தபோது நம் பின்வருமாறு பேசினார் —

"தாய்மொழியாகிய தமிழ்மொழியின் முதன்மையை நாட்டுமொழியாகிய இந்தி குறைப்பதனை நாம் ஒருநாளும் பார்த்துக்கொண்டிருக்க முடியாது. தொடக்க, உயர் பள்ளிகளில் எல்லாப் பாடங்களும் இன்று தமிழ்மொழி வழியாகவே கற்பிக்கப் பெறுகின்றன. மிக விரைவில் கல்லூரிக் கல்வியும் தமிழ்மொழியிலேயே நடைபெறும் காலம் வந்தே தீரும். பல்கலைக் கழக ஆய்வுக் கழகத்தின் முடிவும் இதுவே. தென்னிந்திய நாட்டாட்சி தாய்மொழி வழியாகவே நடந்தாதல் வேண்டும். தாய்மொழிக்கு இடையூறு வரும் என்று மக்கள் உணர்ந்தால் உடனே தக்க முறையில் திட்டமிட்டுக் கிளர்ச்சி தொடங்குதல் வேண்டும். பல்கலைக் கழகத்தைத் தாய்மொழிக்கு முதன்மை தரும்படி வற்புறுத்துதல் வேண்டும். கல்வி மந்திரி என்ற நிலையில் நான் அக்கிளர்ச்சிக்குத் தக்க ஆதரவளிப்பேன்."

### ஆட்சிமொழி மாநாடு

ஆதலின் நாம் இந்த வேளையே மிகவும் பொருத்தமானது என்பதை உணர்ந்து நாடெங்கும் கிளர்ச்சி செய்து சென்னையில் அண்மையில் "ஆட்சிமொழி மாநாடு" நடத்தித் தமிழ்நாடெங்கும் ஆட்சி தமிழிலேயே நடைபெறுதல் வேண்டும் என்றும், பல்கலைக் கழகங்களிற் கல்வி தமிழ்மொழி வழியாகவே கற்பிக்கப் பெறுதல் வேண்டும் என்றும் வற்புறுத்தி வேண்டிக் கொள்வோம். தமிழ் நாட்டில் ஆட்சி தமிழிலேயே நடக்குமாறும், பல்கலைக் கழகங்களிலும் தமிழ் வழியாகவே பல கலைப் பாடங்களும் கற்பிக்கப் பெறுமாறும் நமது முதன்மந்திரியாரும் கல்வி மந்திரியாரும் ஆணைசெய்து பெருநலம் விளைவிப்பார்கள் என்பதில் தடையேயில்லை.

தமிழ்ப் பெருமக்களே! முன்வாருங்கள், சாதி சமய குல வேறுபாடின்றி ஒன்றுபட்டுக் கிளர்ச்சி செய்யுங்கள், தீர்மானங்கள் நிறைவேற்றி அனுப்புங்கள், நினைத்ததை முடித்துக் காணுங்கள்.

"ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும் அசைவிலா
ஊக்கம் உடையான் உழை."

சென்னை மாகாணத் தமிழ்ச்சங்கம் கூட்டுவிக்கும்

# ஆட்சிமொழி மாநாடு

[டாக்டர், கனியர், இ மு. சுப்பிரமணிய பிள்ளை]

[மொழிபற்றி நமது இந்திய அரசியல் அமைப்புக் கூறுவதனைத் தமிழ்ப் பொதுமக்கள் தெரிந்துகொள்ளும்படி கீழே தருகின்றோம்.]

பாகம்17—அரசாங்க மொழி

பகுதி 1. இந்திய யூனியன் மொழி

## இந்தியாவின் அரசியல் மொழி

343 (1) யூனியனின் அரசாங்க மொழி தேவநாகரி எழுத்தால் எழுதப்பட்ட இந்தியாக இருத்தல்வேண்டும் யூனியனின் அரசாங்கக் காரியங்களுக்காகக் கையாளவேண்டிய இலக்கங்களின் வடிவம் இந்திய இலக்கங்களின் உலகப் பொது வடிவாக

(2) 1-ம் உட்பிரிவில் எவ்வாறு இருந்தாலும் இந்த அரசியலமைப்பின் தொடக்கத்திற்கு அடுத்து முன்னதாக ஆங்கிலமொழி பயன்படுத்தப்பட்டுவந்த யூனியனின் அரசாங்கக் காரியங்களுக்கெல்லாம் இந்த அரசியலமைப்பின் தொடக்கத்திலிருந்து பதினைந்து ஆண்டுகளுக்கு அந்த மொழியே தொடர்ந்து பயன்படுத்தப்பட்டு வரவேண்டும்

இருந்தாலும், மேற்சொன்ன காலத்தில் யூனியனின் அரசாங்கக் காரியங்கள் எவைகளுக்கேனும் ஆங்கில மொழியோடு இந்தியையும், இந்திய இலக்கங்களின் உலகப் பொது வடிவத்தோடு தேவநாகரி வடிவத்தையும் பயன்படுத்துவதற்கு நாட்டுத் தலைவர் தமது ஆணையினால் அதிகாரம் அளிக்கலாம்.

(3) இப்பிரிவில் எவ்வாறு இருந்தாலும், மேற்சொன்ன பதினைந்து ஆண்டுகளுக்குப் பிறகு சட்டத்தினால் (அ) ஆங்கிலமொழியை அல்லது (ஆ) இலக்கங்களின் தேவநாகரி வடிவத்தை,

அச் சட்டத்திற் குறிப்பிடப்படும் காரியங்களுக்காகப் பயன்படுத்துவதற்குப் பார்லிமெண்டு ஏற்பாடு செய்யலாம்.

## அரசாங்க மொழியைப்பற்றிய கட்டளைக்குழுவும் பார்லிமெண்டு உட்குழுவும்

344. (1) இந்த அரசியலமைப்பின் தொடக்கத்திலிருந்து ஐந்து ஆண்டுகள் முடிவடைந்ததும், அதற்கு அப்பால் அத

தொடக்கத்திலிருந்து பத்தாண்டுகள் முடிவடைந்ததும், நாட்டுத் தலைவர் தமது கட்டளையினால் ஒரு தலைவரையும் எட்டாவது தபசிற் குறிப்பிடப்பட்ட பல்வேறு மொழிகளின் பிரதிநிதிகளாக நாட்டுத்தலைவர் நியமிக்கும் மற்றைய உறுப்பினர்களையும் கொண்டுள்ள ஒரு கட்டளைக் கழகத் (Commission)தை அமைத்தல் வேண்டும்; மேலும், அந்தக் கட்டளை அக் கட்டளைக் கழகம் பின்பற்றவேண்டிய நடைமுறையை வரையறுத்தல் வேண்டும்

(2) (அ) யூனியனின் அரசாங்கக் காரியங்களுக்காக இந்தியை மேன்மேலும் பயன்படுத்தல,

(ஆ) யூனியனின் அரசாங்கக் காரியங்கள் எல்லாவற்றிற்குமோ அல்லது எவற்றிற்கோ ஆங்கிலத்தைக் கையாளுவதைக் கட்டுப்படுத்துதல்,

(இ) 348-வது பிரிவிற் கூறப்பட்ட காரியங்கள் எல்லாவற்றிற்குமோ அல்லது அவைகளில் எவற்றிற்கோ பயன்படுத்த வேண்டிய மொழி,

(ஈ) யூனியனின் காரியங்களில் ஏதாவது குறிப்பிட்ட ஒன்றிற்கோ அல்லது பலவற்றிற்கோ பயன்படுத்தவேண்டிய இலக்கங்களின் வடிவம்,

(உ) யூனியனின் அரசாங்க மொழியையும், யூனியனுக்கும் ஒரு நாட்டிற்கும் இடையிலோ ஒரு நாட்டிற்கும் மற்றொரு நாட்டிற்கும் இடையிலோ வழங்கவேண்டிய மொழியையும், அவற்றின் பயனையும்பற்றி நாட்டுத் தலைவரால் அக் கட்டளைக் கழகத்துக்கு அனுப்பப்படும் ஏனைய பொருள்கள்.

இவைகளைக் குறித்துச் செய்யவேண்டியதை நாட்டுத் தலைவருக்கு எடுத்துக் கூறுதல் அக் கட்டளைக் கழகத்தின் கடமையாகும்.

(3) (2)ம் உட்பிரிவின் கீழ்ச் செய்ய வேண்டியதை எடுத்துக் கூறும்போது, கைத்தொழில், பண்பாடு, விஞ்ஞானம் ஆகிய துறைகளில் இந்தியாவின் முன்னேற்றத்தையும், இந்தி பேசப்படாத பாகங்களைச் சேர்ந்த மக்களின் அரசாங்கப் பணியாளர்பற்றிய உரிமைகள் பாத்தியதைகள் இவற்றையும்பற்றி உரிய அளவிற்கு அக் கட்டளைக் கழகம் கவனம் செலுத்துதல் வேண்டும்.

(4) வீதாசாரப் பிரதிநிதித்துவ முறைப்படி ஒற்றை மாற்று வாக்கினால் முறையே மக்கட் சபையின் உறுப்பினர்களால் தெரிந்தெடுக்கப்பட்ட மக்கட்சபையின் அங்கத்தினர்

கள் இருபது பேரும், நாடுகளின் கழக (Council of States) த்தால் தேர்ந்தெடுக்கபபட்ட அக் கழகததின் உறுபபினா பததுப பேரும் ஆக முபபது பேர்களை அடஙகிய உட்கழகம் (Committee) ஒன்று அமைக்கப் பெறல்வேணடும்

(5) (1)ம உட்பிரிவின்கீழ் அமைக்கபபட்ட கட்டளைக் கழகத்தின் முடிவுகளை ஆராய்ந்து அவற்றைப்பற்றித தனது கருத்தினை நாட்டுத் தலைவருககு அறிவிததல அவ்வுட் கழகத்தின் கடமையாகும

(6) 343-வது பிரிவில் எவ்வாறு இருப்பினும் (5)ம் உட்பிரிவிற குறிப்பிட்ட அறிககையைக் கவனித்து ஆராய்நத பிறகு அநத அறிக்கை முழுவதையுமோ அதன ஒரு பாகத்தையோ பின்பற்றி நாட்டுததலைவா கடடளைகள பிறப்பிக்கலாம.

பகுதி 2 நாட்டு மொழிகள்

ஒரு நாட்டின் அரசியல்மொழி அல்லது மொழிகள

345 346-வது, 347-வது பிரிவுகளின் கட்டளைகளுக்கு உட்பட்டு, ஒருநாட்டின் சட்டமன்றம சட்டத்தினுல் அந்த நாட்டில் வழஙகிவரும மொழிகளில ஒன்றையோ பலவற்றையோ அல்லது இநதியையோ அந்த நாட்டின் அரசியற் காரியஙகள் எல்லாவற்றிறகுமாவது அல்லது எவற்றிற்குமாவது கையாள வேண்டிய மொழி அல்லது மொழிகளாகக் கொள்ளலாம.

எனறுலும, அநத நாடடின சடடமனறம சடடத் வேறு விதமாக ஏற்பாடு செய்யும்வரை அந்த நாட்டினுள எநத அரசியற் காரியங்களுக்கு இநத அரசியலமைபபின் தொடக்கததிற்கு அடுதது முன்னதாக ஆங்கிலமொழி கையாளப்பட்டு வந்ததோ அந்தக் காரியங்களுக்கு அநதமொழி தொடர்நது கையாளப்பட்டு வரவேண்டும.

ஒரு நாட்டிற்கும் மற்றொரு நாட்டிற்கும் இடையே அல்லது ஒரு நாட்டிற்கும யூனியனுககும இடையே வழஙகிவரவேண்டிய அரசியல் மொழி

346. யூனியனில் அரசியற் காரியங்களுக்காகக் கையாளலாம் என அப்போது திட்டமாக முடிவு செய்யபபட்ட மொழியே ஒரு நாட்டிற்கும் மறறொரு நாட்டிற்கும் இடையேயும ஒரு நாட்டிற்கும யூனியனுககும இடையேயும் வழஙகி வரவேண்டிய அரசியல் மொழியாகும.

என்றாலும், இரண்டு அல்லது அவற்றிற்கு மேற்பட்ட நாடுகள் தமக்கிடையே இந்தி அரசாங்க மொழியாக வழங்க வேண்டும் என்று ஒத்துக்கொண்டால் அந்த மொழி அவ்வாறு வழங்கப்படலாம்.

### ஒரு நாட்டின் மக்களில் ஒருபகுதியினர் பேசும் மொழியைப் பற்றிய சிறப்பு ஏற்பாடு

347. ஒரு நாட்டின் மக்களில் கணிசமான வீதத்தினர் தாங்கள் பேசும் மொழியின் வழக்காற்றை அந்த நாடு ஏற்றுக் கொள்ளவேண்டும் என்று விரும்புகிறார்கள் என அதன் பொருட்டுச் செய்துகொண்ட விண்ணப்பத்தின்பேரில், நாட்டுத் தலைவருக்கு நன்கு விளங்கினால், அவர் தாம் குறிப்பிடும் காரியத்திற்கு அந்த நாடு முழுவதிலுமோ அல்லது அதன் ஒரு பாகத்திலோ அந்த மொழியையும் முறைப்படி ஏற்றுக்கொள்ளல்வேண்டும் எனக் கட்டளையிடலாம்.

## பகுதி 3.—உச்ச நீதிமன்றம், உயர் நீதிமன்றங்கள் முதலியவற்றின் மொழி

### உச்ச நீதிமன்றிலும், உயர்நீதிமன்றங்களிலும் சட்டங்கள் மசோதாக்கள் முதலியவற்றுக்காகக் கையாளவேண்டிய மொழி

348 (1) இப்பாகத்தின் மேற்கூறிய சரத்துக்களில் எவ்வாறு இருந்தாலும், பார்லிமெண்டுச் சட்டத்தினால் வேறு விதமாக ஏற்பாடு செய்யும்வரை.—(அ) உச்சநீதி மன்றத் (Supreme Court) திலும் உயர்நீதி மன்றம் ஒவ்வொன்றிலும் நிகழும் எல்லா நடவடிக்கைகளும்,

(க) பார்லிமெண்டுச் சபை ஒன்றிலாவது, ஒரு நாட்டின் சட்டமன்றச் சபையிலாவது சபை ஒன்றிலாவது கொண்டு வரப்படும் எல்லா மசோதாக்களும் அவற்றிற்குக் கொண்டுவரப்படும் எல்லாத் திருத்தங்களும்,

(கா) பார்லிமெண்டால் அல்லது ஒரு நாட்டின் சட்டமன்றத்தால் நிறைவேற்றப்பட்ட எல்லாச் சட்டங்களும், நாட்டுத் தலைவரால் அல்லது ஒருநாட்டின் அரசபால (கவர்ன)ரால் அல்லது அரசப் பிரமுகரால் வெளியிடப்படுத்தப்படும் எல்லா அவசரச்சட்டங்களும்,

(கி) இந்த அரசியல் அமைப்பின்கீழாவது பார்லிமெண்டால் அல்லது ஒருநாட்டின் சட்டமன்றத்தால் செய்யப்பட்ட ஒரு சட்டத்தின்கீழாவது பிறப்பிக்கப்பட்ட எல்லாக்

கட்டளைகளும், விதிகளும, துணைவிதிகளும, இவற்றின் அதிகார பூாவமான வாசகஙகளும ஆங்கில மொழியில் இருத்தல் வேண்டும்

(2) (1)ம பிரிவின (அ) உட்பிரிவில எவ்வாறு இருந்தாலும, ஒரு நாட்டின் அரசபாலரோ அரசப பிரமுகரோ நாட்டுத் தலைவரின முனசமமததது-ன அநத நாட்டில முதன்மை இடமுடைய உயாநீதிமன்றததின நடவடிககைகளில இநதியை யாவது அநத நாட்டின் அரசாஙகக காரியஙகள எவற்றிற்காக வேனும கையாளப்படும வேறு எநத மொழியையாவது கையாளுவதற்கு அதிகாரபூாவமாக அனுமதி யளிககலாம.

என்றாலும, அததகைய உயாநீதி மன்றத்தால பிறப்பிக்கப்பட்ட அலலது செயயப்பட்ட ஒரு தீாபபு, டிககிரி அல்லது கட்டளைககு இப பகுதியில உளளது எதுவும கையாளப்பட மாட்டாது

(3) (1)ம பிரிவு (ஆ) உட்பிரிவில எவவாறு இருப பினும், ஒரு நாட்டின சட்டமனறததில கொண்டுவரபபடும் மசோதாககளிலாவது அல்லது அசசட்ட மன்றததால நிறை வேற்றப்படும சட்டஙகளிலாவது, அநத நாட்டின் அரசபாலா அல்லது அரசப் பிரமுகரால் வெளியிடப்படும் அவசரச சட்டங் களிலாவது அநத உடபிரிவின் மூனறாம பததியிற் குறிபபிட்ட கட்டளைவிதி துணைவிதி அல்லது ரெகுலேசன் எதிலாவது கையாளுவதறகாக ஆஙகிலமொழியல்லாத வேறு மொழியை அநத நாட்டின சட்டமன்றம விதித்திருநதால, அநத நாட்டின அரசாஙக வெளியீட்டில அநத நாட்டின் அரசபாலருடைய அலலது அரசப பிரமுகருடைய அதிகாரத்தின்கீழ் ஆங்கில மொழியில வெளியிடபபடும அதன் மொழிபெயர்பபே இப் பிரிவின்கீழ் ஆங்கிலமொழியில் அதன் அதிகாரபூர்வமான வாசகமாகக கருதப்படவேணடும.

### மொழியைப்பற்றிச சில சட்டங்களை இயற்றுவதற்கான சிறப்பு நடைமுறை

349. இநத அரசியலமைப்பின தொடககததிலிருந்து பதினைநது ஆண்டிற்கு, 348-வது பிரிவின (1)ம உட்பிரிவிற் சொலலப்பட்ட காரியஙகளில எதற்காகவேனும கையாளவேண் டிய மொழியைபபற்றி ஏற்பாடு செய்யும மசோதா அலலது திருததம எதையும, நாட்டுத தலைவரின் முன் அனுமதியின்றிப் பாாலிமெண்டுச் சபை எதிலும் கொணரவோ பேசவோகூடாது. மேலும் நாட்டுத் தலைவர் 344-வது பிரிவின் (1)ம உட்பிரிவின

கீழ் அமைக்கப்பட்ட கட்டளைக் கழகத்தின் முடிவுகளையும் அப் பிரிவின் (4)ம் உட்பிரிவின்கீழ் அமைக்கப்பட்ட உட்கழகத்தின் அறிக்கையையும் கவனித்து ஆராய்ந்த பிறகன்றி, அத்தகைய மசோதா எதையாவது கொணருவதற்கோ அத்தகைய திருத்தம் எதையாவது எடுத்து மொழிவதற்கோ தமது அனுமதியை அளித்தல் ஆகாது.

### பகுதி 4.—சிறப்புக் கட்டளைகள்

**மனக்குறைகளைத் தீர்க்கும்பொருட்டுச் செய்துகொள்ளும் விண்ணப்பங்களில் கையாளவேண்டிய மொழி**

350. ஒவ்வொருவரும் தம் மனக்குறையைத் தீர்த்துக் கொள்ளும்பொருட்டு யூனியனின் அல்லது ஒரு நாட்டின் அலுவலர் அல்லது அதிகாரி ஒருவருக்கு, சமயத்திற்கு ஏற்ப, யூனியனிலாவது அல்லது நாட்டிலாவது பயன்படும் மொழிகளில் எதிலேனும் விண்ணப்பம் கொடுக்க உரிமையுள்ளவா

**இந்திமொழியை வளர்ப்பதற்கான கட்டளை**

351. இந்திமொழி பரவுவதற்கு ஆவன செய்தலும், இந்தியாவின் பல கூறுடைய பண்பாட்டின் எல்லாத் தன்மைகளையும் வெளியிடுவதற்கேற்ற கருவியாகப் பயன்படுமாறு அதை வளர்த்தலும், அதனுடைய தனிப்பண்பிற்கு இடையூறின்றி இந்துஸ்தானியிலும் எட்டாவது தபசிற் குறிப்பிட்ட மற்றைய இந்திய மொழிகளிலும் வழங்கும் வடிவங்களையும் நடையையும் சொற்றொடர்களையும் அமைத்துக் கொள்வதன் மூலமாகவும், அதனுடைய சொல்வளத்திற்கு இன்றியமையாததாகவோ பொருத்தமாகவோ உள்ள இடங்களில், முதலாவது சம்ஸ்கிருதத்திலிருந்தும் அடுத்தபடியாக மற்றைய மொழிகளிலிருந்தும் சொற்களை எடுத்துக்கொள்வதன் மூலமாகவும் இந்திமொழியைச் செழிப்புறச் செய்தலும் யூனியனின் கடமையாகும்.

# தமிழ்நாட்டு விளையாட்டு

## 5. நொண்டி

[திரு ஞா. தேவநேயன்]

### ஆடிடமும் பொழுதும் ஆடுவாரும்

நொண்டி என்பது, பொட்டலிலும் திறந்த வெளிநிலத்திலும், பெரும்பாலும் சிறுவரும் சிறுபான்மை சிறுமியரும், பகலிலும் நிலவிரவிலும் விளையாடும் ஒரு விளையாட்டு.

### ஆடுகருவி

ஆடுவார் தொகைக்கேற்ப நிலத்திற் கீறப்பட்ட ஒரு சிறு அல்லது பெரு வட்டமே இவ்வாட்டுக் கருவியாம்.

### ஆடுமுறை

இருவருக்குக் குறையாத சிலரும் பலரும் சமத்தொகையவான இருகட்சிகளாய்ப் பிரிந்து கொள்ளல் வேண்டும். இருவர்க்கு மேற்பட்டவராயின் உத்திகட்டிப் பிரிந்து கொள்வர்.

மரபான முறைகளுள் ஒன்றன்படி துணிந்துகொண்டு ஒரு கட்சியார் வட்டத்திற்குள் இறங்குவர். மறு கட்சியார் வெளி நின்றுகொண்டு, ஒவ்வொருவராய் ஒவ்வொருமுறை வட்டத்திற்குள் நொண்டியடித்துச் சென்று, உள் நிற்பாருள் ஒருவரையோ பலரையோ எல்லாரையுமோ தொட முயல்வர். தொடப்பட்டவர் உடனே வெளிவந்துவிடல் வேண்டும். உள்நிற்பார் அனைவரும், தம்மை நொண்டியடிப்பவர் தொடாதவாறு, வட்டத்திற்குள் அங்குமிங்கும் ஓடித்திரிவர். அங்ஙனம் ஓடும்போது கோட்டை மிதிப்பினும், கோட்டிற்கு வெளியே கால் வைப்பினும், உடனே வெளிவந்துவிடல் வேண்டும். நொண்டியடிப்பார் களைத்துப்போயின் கோட்டிற்கு வெளியே சென்று காலூன்றல் வேண்டும். ஒருமுறை வெளியே சென்றபின், காலூன்றாக்காலும், மீண்டும் உள்ளேவரல் கூடாது. நொண்டியடிப்பவர் வட்டத்திற்குள்ளும் கோட்டின்மேலும் காலூன்றினும், கோட்டை மிதிக்கினும், அவர் தொலைவதோடு, அவராலும் (அவர் பிந்தினவராயின்) அவருக்கு முந்தினவராலும் தொடப்பட்டு வெளியேறியுள்ள அத்துணைப்பேரும் உடனே உள்ளே வந்து விடுவர். மீண்டும் அவரைத் தொடுதல் வேண்டும். ஒருவர் நொண்டியடித்து முடிந்தபின், இன்னொருவர் நொண்டியடிப்பர். வெளிநிற்கும் கட்சியாருள், முதலிலோ இடையிலோ இறுதியிலோ நொண்டியடிப்பவர் ஒருவரே உள்நிற்பார் எல்லாரையும் தொட்டுவிடுவதுமுண்டு; ஒவ்வொருவரும் ஒவ்வொருவரைத் தொடுவதுமுண்டு, இடையிட்டு ஓரோவொருவர் ஒருவரையோ பலரையோ தொடுவதுமுண்டு; ஒரேயொருவர் ஒரேயொருவரைத் தொடுவதுமுண்டு; ஒருவரும் ஒருவரையும்

தொடாதிருப்பதுமுண்டு இங்ஙனம், உள்நிற்கும் கட்சியாருள் ஒருவரே வெளியேறியிருத்தலும், சிலரோ பலரோ வெளியேறியிருத்தலும், அனைவரும் வெளியேறியிருத்தலும், அனைவரும் வெளியேறாதிருத்தலும், ஆகிய நாலவகை நிலைமை ஏற்படக் கூடும்

வெளிநிற்கும் கட்சியாருள் அனைவரும் நொண்டியடித்து முடிந்தபின், அல்லது உள்நிற்கும் கட்சியாருள் அனைவரும் தொடப்பட்டபின், ஓர் ஆட்டம் முடியும்.

ஆட்டவெற்றி

உள்நிற்பார் அனைவரும் தொடப்பட்டுவிடின் வெளிநிற்பாரக்கும், அங்ஙனமன்றி ஒருவர் எஞ்சியிருப்பினும் உள்நிற்பாரக்கும், வெற்றியாம்.

ஆட்டத் தொடர்ச்சி

ஒருமுறையாடியபின், மீண்டும் ஒருமுறையோ பலமுறையோ ஆட நேரமும் விருப்பமுமிருப்பின், அங்ஙனஞ் செய்வர். முந்திய ஆட்டத்தில் வென்ற கட்சியாரே பிந்திய ஆட்டத்திலும் உள்நிற்பர். உள்நிற்பதே இனியதாகக் கருதப்படும்.

ஆட்டுத் தோற்றம்

இவ்விளையாட்டு போர்வினையினின்று தோன்றியதாகும். போர்க்களத்தில் ஒருகால் வெட்டுண்ட மறவன் மறுகாலால் நொண்டியடித்துச் சென்றே, தான் பட்டு வீழுந்துணையும், பகைவரை வெட்டி வீழ்த்துவதுண்டு இம்மறவினையை நடித்துக் காட்டும் முகமாகவே இவ்விளையாட்டுத் தோன்றிற்று.

குறைத்தலைகள் கூத்தாடுவதும் தலையைக் கையிலேந்தி நிற்பதும் போன்ற மறவினைகளை நோக்கும்போது, ஒருகாற் குறைகள் நொண்டிச்சென்று நாழிலாட்டுவது வியப்பன்று.

கள்வனொருவன் படையிலுள்ள குதிரையொன்றைத் திருட முயன்று கால் [illegible]றியுண்டபின் நல்வழிப்பட்ட செய்தியைச் சிந்துச் செய்யு[illegible]ளினாற் கூறு[illegible], நொண்டி நாடகம் என்னும் நாடக நூல்வகையும் உளது. 'தக்காதி நொண்டிநாடகம்' இதற்கோர் எடுத்துக்காட்டாம். இந் நாடகச் செய்தி மேற்கூறிய போர்வினைச் செய்தியின் வேறாம்.

ஆட்டின்பயன்

ஒருகால் நோய்ப்பட்டும் வெட்டுண்டும் நடக்கவியலாதபோது மறுகாலால் நொண்டியடித்து வேண்டிடஞ் செல்வதற்கான பயிற்சியை, இவ்விளையாட்டு அளிக்கும்.

# புலவர் அறம்

[திரு க குமரன்]

தன்னலம் பேணுப் பொன்னலை மிக்கது புலவருள்ளம். அருளெனும பெருஞ்செலவமிகக திருவாளர்கள் புலவாகள். அறிவெனுந தோட்டியால் அகமெனும் மதயானையை அடக்கும் ஆண்மை படைத்த வீராகளே புலவர்கள் மெய், வாய், கண், மூக்கு, செவியெனும ஐம்பொறிகளும அவாகள வயப்பட்டு நடககச்செய்யும ஆற்றலமிக்கவாகள். தாம் கற்றறிநதனவும, கேட்டறிநதனவும வருங்கால மககளுக்கெனவே போற்றும் கடபபாடடை மேற்கொண்டவாகள நாட்டு நன்னலமே தன்னலம எனக்கொண்டு நாட்டு மககளை அறிவின்மை சூழ்நது ஆட்கொள்ளும் நேரததிலே - அடிமைகொள்ளும அரசாகளின் ஆதிக்க வெறி புகுந்தலைககும் நேரததிலே - கொடுங்கோலாட்சி மக்களை அசசுறுததி இறை பெறுநெறி பிறழ்ந்து நலிக்கும் நேரத்திலே-புலவர்களின் உள்ளம் கொதிககும - குமுறும் - எரி மலையாகும். - அது தன் எண்ணக் குழம்புகளை அரசனுயினும் அஞ்சாது எதிர்உமிழும அஞசல் எதற்கு? மக்கள் நலனுக்குப் பாடுபடும மாண்பு மிக்க புலவர்கள் மதிக்கத்தகும் தலைவாக ளலலவா? கொடுங்கோல மன்னராம் கொடுவிலங்குகள ஆற்றுருக் கொடுநதுன்பங்களைச செய்து அச்சுறுததும் போது சொல்வாள்கொணடு வெட்டிச் சாய்க்கும் நேரத்திலே புலவர்கள் முன் நால்வகைப் படையும் ஏதுஞ் செய்ய முடியா! இத்தகு சீர்ததிபெற்ற நாவரசர்கள அன்றிருந்தனர். என்று? அதுதான் நம மனக்கண்முன் தோன்றும் இரண்டாயிரம் கெட்கு முற்பட்ட காலம்!

பண்டையினும் இக்காலம் விஞ்ஞானப் பயன்களில் முன்னேறியிருந்தும, அக்காலப புலவாகளின் பெருமிதம் இக்கால நமமனோரிடம் காணப்பெற்றிலோம். என்னே இளி வரவு! என்னே இவர்களின் மன ஒடுககம்! 'நன்மையை நன்று' என்றும், 'தீமையைத் தீயது' என்றும் வாயால் கூறுதற்கே அஞ்சுகின்றனர். அசசமெனும் பேய் அகத்தணைக்க, கோழை யெனும் அமளியிற் சாய்நது, அரசியலுக்குந தமக்குந் தொடர்பு காணுது, பெருந் துயிலகொண்ட புலவாகளே எழுஙகள்! வீறு பெறுங்கள்! நம் பாண்டிய புலவரைச் சிறிது மனக்கண்ணுல் நோக்குமின்!

பாண்டிய நாட்டை ஒருகால் அறிவுமிக்க ஓர் அரசன் ஆண்டுவந்தான். எனினும் அவன் அங்கங்களில ஒன்றுகிய

அமைச்சு அவனை ஆட்கொண்டது. அதனால், அச் செவ்வறிவார்ந்த நம்பியும் மனமயங்கினன். அப்பாண்டியன் அறிவுடை நம்பியையுங்கூட, அறிவற்ற - அரசன் நச்சியதையே விரும்பிக் கூறும் ஆரவாரமிக்க - தமக்கென ஒரு சூழ்வில்லா - தகவிலலா அமைச்சுக் குழு ஆட்கொண்டது என எண்ணும்

'நிலத்தியல்பா னீர்திரிந் தற்றாகு மாந்தர்க்
கினத்தியல்ப தாகு மறிவு'

என்னும வள்ளுவர் வாய்மை உறுதிப்படுத்தப் படுகிறது.

என் செய்தான்? குடிகளிடம் நெறிபிறழ்ந்து வரி வாங்கினான் அவ்வரிகொடுக்க இயலாது மககள தவித்தனர். அவாகள் தவிப்பு மதியற்ற அமைச்சா சூழ்ந்த அரசன்கண் ணுக்குப புலப்படவில்லை. விதிவலியாற் கெடுமதி கண்ணுக்குத் தோன்றுதன்றோ? ஆனால், அதே நேரததில் புலவர் ஒருவருக்கு மட்டும, அரசாங்க அலுவலர் மக்களைத் துன்புறுத்துவதும, அவர்கள் அல்லற்பட்டு ஆற்றாது அழுவதும் புலப்படலாயிற்று. அவ்வேழை மக்களின் கண்ணீரே அரசாட்சியை அழிக்கும் படையாக மாறும் என்பதை அரசனுக்கு அந்நேரத்தில் எடுத் துரைக்க யாருமே முந்தவில்லை. ஆயின், புலவருக்குமட்டும ஏழை மக்களின் கண்ணீா நெஞ்சு சுடுமே தீககோலாக மாறியது. அத் தீககோலின் அனல என் செய்தது? புலவரைப் புரவல னிடம் போக்கியது. சினம மிக்க புலவர் ஏறுபோற் பீடுநடை யிட்டு அரசவை அடைந்து காவலனைக் கண்டார். 'வாழி' என்று வாழ்த்துங் கூறினார். பின்னர்த் தம் மனக் குமுறலைக் கொட்டினா. மககளின் துணையாயிருந்து, மன்னனென்றும் பாராது இடித்துரைத்தார். எவ்வாறு? நாகரிகமற்ற முறை யிலா? அல்ல; உரிமைக்காகப் போராடும் சினமிக்க அந்நேரத் திலும் தண்ணிய, வெய்ய, இனிய சொற்களைக்கொண்டே அறிவு மயஙகிய பாண்டியனை அறிவுடை நம்பியாக்கினார். என்ன கூறினார்?

"நம்பீ! களிறோ பெரியது! அதற்குணவிடலோ அருமை! எனினும் நம்மிடம் அதைப் பொருட்படுத்தத் தேவையில்லாத அளவுக்கு நூற்றுக கணக்கில் பல வேலி நிலங்கள் உள்ளன. இச்செல்வச் செருக்கினால், அப் பெருங்களிற்றை விளைந்துள்ள அப்பெருஞ் செய்களில் தானே உண்ணும்படி அவிழ்த்துவிடின், அது வயிறார உண்ணுவதுங் குறைந்து நிலத்தில் சேற்றில் அழிந்துபடும் நென்மணிகளே மிகுதி! அவ்வாறன்றி அளவு களில் மிகக் குறைந்த 'மா' என்ற அளவுள்ள சிறு நிலத்தில்

ம் நென்மணிகளை நாமே யறுத்துச் சமைத்துக் கவளமாக்கி அக்களிற்றுக் களிப்பின் அவ்வுணவு பன்னாட்காகும்! அது போல, ஒரு அரசன் குடிகளிடம் பெறும் நெறியறிந்து இறை பெறின், மக்களெல்லாம் கொடுக்கும் இறையுடன் 'எம்மரசன் வாழவேண்டும்' என வாழ்த்திக் கோடி பல கொடுப்பர். அவ்வாறு கொள்ளாது நெறி பிறழ்ந்து வரிகொள்ளின், தானுந் துய்க்காமல் - பிறரும் பயன்கொள்ள முடியாத அளவுக்கு நென் மணிகளைச் சேற்றில் உழக்கி நிலம் பாழாக்கிய யானை வயிறார உண்ணாமற் பசியுடன் வருந்தியதொப்ப, தானும் பயன்படான் - குடிகளையும் பயன்கொள்ள விடானாய வேந்தன் குடிமக்களின் உள்ளக் கொதிப்புக்கு ஆளாகித் தன்னெஞ்சே தன்னைச் சுட மாய்வன். ஆகலின், அறிவுமிக்க பாண்டிய! மக்களின் அல்லலைக் கண்கொண்டு நோக்கி வரிவீடு செய்க,' என்று நயமாக எடுத்துரைத்தார். வேந்தனுடைய அறிவுமயக்கம் தெளிந்தது. பொருந்தா இறைகளை வீடு செய்தனன்.

என்னே புலவரின் அஞ்சாமை! என்னே புலவரின் நயப்பாடமைந்த சொல்லாற்றல்! அவருடைய அஞ்சாமை, நால்வகைப் படையும் - அதிகாரமும் பெற்ற அரசனை ஆட்கொண்டு வெற்றியடைந்தது. இஃதன்றோ புலவர் அறம்! அப்புலவரின் அஞ்சாமை, சொல்லாற்றல், கூர்மதி, காலங்கருதி மக்களைக் காப்பாற்றும் திறன், நம் புலவர்களுக்கு இப்போது வருமா? வரின் அந்நாளே நம் திருநாளாகும்! அப்போதுதான் பிறக்கிறது பண்டைத் தமிழரின் ஆட்சி!

மேற்கூறிய அறங்கூறு நாவினர் யாரோ? அவரே பாண்டிய நாட்டுப் 'பிசிர்' என்ற ஊரின்கண் வாழ்ந்த 'ஆந்தையார்' என்ற ஆழமிக்க நெஞ்சுடை அறிவாளர். அத்திருப் பேரறிஞர் வாழி!

அவர் பாட்டினால் உலகுய்யச் செய்த பாண்டியனார் அறிவுடை நம்பியும் வாழ்க!

காய்நெல் லறுத்துக் கவளங் கொளினே
மாநிறை வில்லதும் பன்னாட் காகும்
நூறுசெறு வாயினுந் தமித்துப் புக்குணினே
வாய்புகு வதனினுங் கால்பெரிது கெடுக்கும்
அறிவுடை வேந்த னெறியறிந்து கொளினே
கோடி யாத்து நாடுபெரிது நந்தும்
மெல்லியன் கிழவ னாகி வைகலும்
வரிசை யறியாக் கல்லென் சுற்றமொடு
பரிவுதப வெடுக்கும் பிண்டம் நச்சின்
யானை புக்க புலம் போலத்
தானும் உண்ணான் உலகமும் கெடுமே

# திருவெம்பாவை

[திரு ஔவை சு. துரைசாமிப்பிள்ளை, தியாகராயர் கல்லூரி, மதுரை]

(சிலம்பு - ௨௭. பரல் - ௨, ௬௪ம் பக்கத் தொடர்ச்சி)

சூடிக்கொடுத்த நாச்சியார் எனப்படும ஆண்டாள் அருளிய திருபபாவைக்கு உரை கண்ட சான்றோர்களா, வேறுவகையாக முன்னுரை வழங்குகின்றார்கள். "கண்ணபிரான் தூர்த்தனாயிரா நின்றான். இவன் முகத்திலே பெண்கள் விழிக்கலாகாது என்று பாரதது, இவர்களை (கோவியர் பெண்களை)க் கொண்டு போய் நிலவறைகளிலே யடைக்க, பெண்களும் கிருஷ்ணனும் பண்ணின பாக்கியத்தாலே வர்ஷமின்றிக்கே யொழியப் பெண்களா இருநது மனோரதிக்கிறார்கள், கோதனராயிருக்கிற இடையர் வர்ஷார்த்தமாக நமமை நோற்கச் சொல்லக் கடவர்கள் [illegible]ன் இதுக்குக் கடைக்கூட்டனாகவும் கடவன்; நமக்கொரு துக்கமிலலை என்று பெண்கள் பிரீதைகளாய்த் தரித்திருக்கிற தசையிலே வர்ஷமின்றிக்கே இருக்கிறபடியைக் கண்டு கோபவிருத்தரெல்லாரும் திரண்டு பசுக்களும மனுஷ்யரும் பிழைக்கும விரகு ஏதோ என்று பார்தது வர்ஷார்த்தமாக நோற்க வர்ஷமுண்டாம் என்று இவ்வூரில் பெண்கள் அடைய நோற்கக் கடவர்களா இந்நோன்புக்கு இஙகுத்தைக்கு அதிபனான ஸ்ரீநநதகோபா மகன் கிருஷ்ணன் கடகனாவன் என்று அத்யவசித்துப பெண்பிள்ளையடைய அழைத்துக் கிருஷ்ணனையும் அழைத்துப் பெண்களை நோற்கச சொல்லி இவர்கள் நோன்புக்கு நீ கடகனாக வேணும் என்று கிருஷ்ணனை அபேக்ஷிக்க அவன் எனக்கு க்ஷமமன்று என்ன, இத்தனையும் செய்யவேணுமென்று மறுக்கவொண்ணாதபடி நிர்ப்பநதிக்க, அவனும் இசைந்த பின்பு, எல்லாரும் திரள இருந்து, பெண்கள் நோற்பார். இதுக்கு வேண்டுவது கிருஷ்ணன் சககரித்துக் கொடுப்பான் என்று கிருஷ்ணன் கையிலே பெண்களைக் காட்டிக்கொடுத்துக் கோபவிருத்தரெல்லாரும் போன பின்பு, பெண்களும் கிருஷ்ணனும் கூடவிருநது திருக்குரவை கோத்த ராத்திரிபோலே பெண்காள் இதுவும நமக்கு ஒரு ராததிரியே என்று கிருஷ்ணன் கொண்டாடி இனி அசிர்ப்புப் பிறக்க வைகல் இருப்போமல்லோம். இப்போது எல்லோரும் போய் அபரராத்திரியிலே வந்து எழுப்புங்கோளா நோன்புக்குக் குளிக்கலாம்படி என்று அருளிச்செய்து கிருஷ்ணனும் பெண்களைப் பிரிந்துபோய்த் தரிக்கமாட்டாமே நப்பின்னைப் பிராட்டி திருமாளிகையிலே புக்கான்

பெண்களும பரஸபரம சம்ஸிலேஷததாலே காலநடை தநது போயத தநதம் மாளிகையிலே புக்கு உறஙகப புக்கவிடத தில் கண்ணுறங்காமையாலே முறபட வுணர்நதவர்கள் கிருஷண குண சேஷ்டிதஙகளை நினைதது எழுந்திருககமாட்டாதே கிடக கிறவாகளை உணர்ததத் தனிததனியே சென்று எழுபபி எலலாரும் கூடி உததேசியமான ஸ்ரீநநதகோபா திருமாளிகை யிலே சென்று கிருஷ்ணனை யெழுபபித தஙகள அபேக்ஷிததததை அறிவிதது அபேக்ஷிதம பெறறு முடிககிறது. உததேசியம வேறொனறாய் நோன்பு வியாஜமாதரமாகில இவர்களுக்குத தேவதை வாஷிக்குமோ வென்னில விரதோபவாசகாசிதமான வடிவைக கண்டால், சேதனமன்றோ, வர்ஷியாதோ என்று பார்ததாாகள்'' என்பது திருபபாவை அவதாரிகை.

இனி, மகளிா பிறமகளிரைத துயிலெழுபபுஙகால, ஒருத் தியை நோககி, "எபபோது இபபோதாா அமளிககே நேசமும வைததனையோ, நேரிழையாய்'' எனறு கேட்க, அவள அவர் களை நோக்கி, "சீசி இவையும சிலவோ? விளையாடி ஏசும இடம ஈதோ'' என்று கூறுபவள், "நேரிழையீர்'' என்று குறிக் கின்றாள். வைகறைப போதில நீாததுறைககு நீராடச செலலுத லால், நீககத்தகக இழைகளை நீககுவதாகிய குறிப்புததோன்ற "நேரிழையாய'' என்றும, "நேரிழையீர்'' என்றும ஒருவரை யொருவர் குறிப்பு மொழியால் உரைபபதைத திருவெமபாவை யிற் காண்கின்றேம, அதுபோலவே, திருப்பாவையில, "நீராடப் போதுவீர், போதுமினோ, நேரிழையீா'' என்றொரு குறிப்புக் காணபபடுகிறது அதறகு விளக்கங்கூறிய உரைகாரர்கள், நேரிழையீா எனறதற்கு, "ஆபரணத்தை யுடையீா'' என்று பொருள கூறி, "இவாகள போதுமினோ என்ற பின்பு அவாகள வடிவிலே பிறந்த புதுக்கணிபபு இருநதபடி; அன்றிககே, "சொாஙகைமேற குஙகுமததின் குழம்பழிய' என்கிறபடியே கிருஷ்ணனுடைய வரவைக் கடாக்ஷித்து அவன எபபோது வநது மேல்விழும்' என்று' அறியாதபடியாலே தஙகளை எப் போதும் அலங்கரித்தபடியே இருப்பார்கள் என்றுமாம'; 'வஸதிஹ்ருதி ஸௌமியரூப:' என்னுமா போலே முன்புத்தைக் கிருஷ்ணனோடைக் கலவியால பிறந்த புகர் இபபோது தோற் றும்படி இருக்கையாலே சொலலவுமாம,'' என்று கூறினா. இவ்விளககத்துக்கு அமைதி கூறவநத சான்றோர் ஒருவர், "விலக்ஷணமான விஷயத்தை க்ஷணகாலம் விஸலேஷிககும் போதும விஸலேஷிசனம் பெரிதாயிருக்க, இப்போது ஆபரண மும் பூண்டிருபபரோ; நேரிழையீா என்று சம்போதிக்குமபடி என்னென்ன இதற்கு மூன்று பரிகாரம் அருளிச் செய்கின்றா,'' என உரைக்கின்றா்.

மழை பெய்தல் வேண்டுமென வழிபடும் பகுதியொன்று திருவெம்பாவை, திருப்பாவை இரண்டிலும் உளது. "மழையே, நீ உமையம்மையின் மேனிபோலக் கருத்து, அவளது சிற்றிடை போல் மின்னிப் பொலிந்து, அவளுடைய திருவடிப் பொற்சிலம்பு போல முழங்கி, திருப்புருவம் போல விலகிட்டு, அவள் சுரக்கும் இன்னருள் போல மழையைப் பொழிதல் வேண்டும்," எனத் திருவெம்பாவை கூறுகிறது "மழையே, ஊழிமுதல்வன் உருவம் போல் மெய்கருத்து, அவனது ஆழிபோல் மின்னி, வலம்புரி போல் நின்றதிர்ந்து, சார்ங்கம் உதைத்த சரமழைபோல் பெய்திடாய்," என்று திருப்பாவை கூறுகிறது. அவ்விடத்தே, "வருஷ தேவதையான பர்ஜன்யன் நாம் இச்சேர்த்தியிலே கிஞ்சித்கரித்து ஸ்வரூபம் பெற வேணுமென்று வந்து நான் இங்குத்தைக்குச் செய்யவேண்டும் அடிமையை நியமிக்கவேணும் என்ன. செய்யக்கடவபடியை இன்னபடியும் இன்னபடியும் என்று கையோலை செய்துகொடுக்கிறார்கள்," என்று இப்பாசுரத்துக்கு முன்னுரைகாட்டி "வர்ஷதேவதை அடியேனுக்கு ஒரு கிஞ்சித்காரம் நியமித்தருளவேணும் என்று பிரார்த்திக்க இவர்கள் அவனுக்குக் கைங்கர்யம் நியமித்தபடியைச் சொல்லுகிறது." என்று ஸ்வாபதேச வியாக்கியானத்தில் முன்னுரை சொல்லி, தாற்பரியம் கூறுமிடத்து, "இப்பாட்டில் வர்ஷதேவதைக்கு அவன் அதிகரித்த காரியத்தையே தங்களுக்கு இஷ்டமாக நியமிக்கையாலே பகவத் பாகவத இஷ்டத்வேந நித்திய நைமித்திகாதி தர்மங்களை யதாவாக அனுஷ்டிக்கை பிரபந்நாதிகாரிகளுக்கு ஆவசியகமென்றதாய்த்து," என்று பெரியோர்கள் கருதிக் கூ

றயும் கூறியதனால் திருவெம்பாவை சிவபெருமானது திருவருட் சத்தியை வியந்து பாராட்டும் கருத்துடையதென்றும், திருப்பாவை கோபிகைகள் கண்ணனது கூட்டத்தை விரும்பிய வேட்கை மிகுதிபற்றி ஆயர்பாடியில் நிகழ்ந்த நிகழ்ச்சியை நிகழ்த்தும் நீர்மையதென்றும் இரு வேறு கருத்துக்கள் காலவரலாற்றில் கொள்ளப்பட்டிருக்கின்றன என்பது விளங்கும்.

இங்கே விரியக்கண்ட பாவைப்பாட்டு இரண்டும் தோன்றியது ஆயிரத்து இருநூறு யாண்டுகட்கு முன்பாயினும், அவை இன்றும் புதுமைப்பண்டம் சுவைமிகுதியும் பெருகக் கொண்டிருப்பது கண்கூடு. இடைக் காலத்தே விசயாலயன் வழிவந்த சோழ வேந்தர்களும் பாண்டி மன்னர்களும் பிறரும் திருவெம்பாவையின் சிறப்பை நன்கு உணர்ந்து, மார்கழியில் நடைபெறும் விழாக்களில் திருவெம்பாவையைக் கோயில்களில் ஓதுதற்

கென நிவநதஙகள பல அளிததுளளனா கி. பி. பதினோராம நூற்றாண்டில் கங்கைகொண்ட சோழன் மக்களில ஒருவனை இரண்டாம் இராசேநதிரன ஆட்சியில் ஐநதாமாண்டில நடு நாட்டுத் திருக்கோவலூரில் திருவெமபாவை யோதுவதற்கு ஏற்பாடு செய்யப்படடிருநதது: அந்த இராசேநதிரன் தமபி முதல வீரராசேநதிரன் காலத்தில் இத்தகைய ஏற்பாடொன்று உண்டாயிற்று (A R. for 1926-7 para-26) சோழ நாட்டில் எண்வகை வீரட்டங்களுள ஒன்றான வழுவூரில் வீரட்டேசுரா கோயிலில், கி பி. பன்னிரண்டாம் நூற்றாண்டில், இரணடாம இராசாதிராசன் காலத்தில் திருவெமபாவை ஓதுதற்கான நிவந தம் விடப்பட்டதென அவ்வூர்க் கல்வெட்டுக் (A R No. 421 of 1912) கூறுகிறது. கி. பி. பதின்மூன்றும் நூற்றாண்டில மாறவாமன் சுந்தரபாண்டியன ஆட்சி புரிந்தபோது தென்பாண்டி நாட்டு நாங்குநேரியிலுள்ள சிவன் கோயிலில் அவனிநாராயணப் பல்லவரையா எனனும் தலைவர் ஒருவரால திருவெம்பாவையை ஓதுவதற்கென்று நிவந்தம ஏற்படுத்திய செய்தியை அவ்வூர்க கல்வெட்டு (A. R for 1927-8 para-19) கூறுகிறது கி. பி. பதினைன்காம் நூற்றாண்டில் நம தமிழ்நாட்டையாண்ட விசய நகர வேநதருள் ஒருவரான அரியரதேவராயர் காலத்தில செனனையின் வடபகுதியான திருவொற்றியூர்க் கோயில செயல முறைகளை ஆராய்நது செமமை செய்யும நிகழ்ச்சியொனறு நடந்தது அதனால பழைய வழககுகள சில புதுபபிக்கப பட்டன. அவறறுள திருவெம்பாவை ஓதுவதும ஒன்றாகக கலவெட்டறிக்கை குறிககிறது. (A. R. for 1913. para-51).

இவ்வாறு தமிழகமெங்கும் சீரிய நிலையில வைத்துச் சிறப பிக்கபபெறற திருவெம்பாவை கீழைககடலைக் கடநது சயாம் நாட டுக்கும சென்றிருககிறது திருப்பாவையும உடன் சென்றது சயாமநாட்டு மன்னர்கள் இரண்டையும் சிறப்பாக வரவேற் றனர். அவர்களது முடிசூட்டு விழாவில் ஓதப்பெறும் தமிழ் மந்திரம் இததிருவெமபாவை; இதற்கு அவர்கள் "லோரி பாவாய்," என்று பெயரிட்டுள்ளனா. மார்கழித் திங்களில் அவாகள் பெரிய விழாச் செய்கின்றனா. அவ்விழாவில், முதல் பதினைந்து நாள் திருவெம்பாவை விழா என்றும், பின் ஐந்து நாள் விழா திருப்பாவை விழா என்றும், இவையிரண்டையும் தங்கள் சயாம் மொழியில "லோ—ஜின்—ஜா" என்றும் குறிக் கின்றனா. இவ் விழாக்களைப்பற்றிய விரிந்த குறிப்பை H. G. குவாரிட்சு வேலசு (H. G. Quaritch wales—The Lord Chambulains Department of the Court of Siam) என்பார் எழுதிய சயாம்நாட்டு அரசவாழ்க்கை யென்ற ஆங்கில நூலில்

விரியக் காணலாம. 1918-ஆம ஆண்டு அக்டோபர் திஙகளில் வெளிவந்த வெளியீடொன்றால், இந்தோனீசியாவிலும், பிறபகுதி களிலும திருவெமபாவை தமிழ் மந்திரமாக நிலவிய செய்தியை அவரே வெளியிட்டுளளார

கி. பி பதினேநதாம் நூறறாண்டிலும் அதற்குப பின்னும தோன்றிய காலம தமிழர் வாழ்வுக்குப பெருஙகேடு விளைந்த காலமாகும். தமிழ்மொழி பிறமொழிகடகு முதலிடம் தநது சீரழிந்தது அரசியலில் செல்வாக்கிழநததேயனறி, திருக கோயில் வழிபாடுகளிலும செந்தமிழ் தன் சீரிய இடத் தைக் கைவிட்டது. திருமுறைகளும திருவெம்பாவையும் தாம் பெற்றிருநத சிறப்பை இழநதன அவற்றை நிலைபெறுவித்த நிவந்தஙகள் "கோயிற் பூசைகட்கும்," "கோயிற் பெருச்சாளி," கட்கும் இரையாயின. தமிழ்மக்கள் உள்ளத்தை உருக்கி, திருககோயிலில் எழுநதருளியிருக்கும் இறைவன் திருவருளில் இனிய எளிய முறையில் ஈடுபடச்செய்த திருமுறையும் திருவா சகமும அங்கே ஓதுவாரையும் ஓதக் கேட்பாரையும் இழநதன ; அவற்றின் பொருளை உணாவாரும உணர்த்தக் கேட்பாரும் இல ராயினர். ஓதுவதும் உணர்வதும் தமக்கு இழிவெனக் கருதும் தமிழ்ச்செல்வர்களும் தலைவர்களும உளராயினா எனின் வேறு கூறுவானேன் ?

சென்ற சில ஆண்டுகட்கு முன் திருககோயில்களில், திரு முறை திருவாசகப் பாட்டுக்களைக கோயிற் சுவர்களில் அழகுற எழுதிவைக்கும் முறையொனறு உண்டாயிற்று. கோயிலுக்குச் செலவோர் கண்களை அவைகள கவர்நதன, அவர் வாயில் அப் பாட்டுக்கள் தோன்றின ; அவர் தம் உள்ளததில் ஒருவகை ஒளி பிறந்தது. பின்னர், அவ வெழுத்துக்களின் தோறறம் மறைய லுற்றது; புதுககுவோர் அருகினர்; புதுகக கருதுவோர் இலராயினர்.

இன்று திருவெம்பாவை விழாக்களும் திருவாசக விழாக் களும் எழுகின்றன. மறைந்த ஒளி விளங்க முயல்கிறது. வீழ்ந்த திருமுறை எழத் தலைப்படுகிறது. மடிந்து கிடந்த தமிழகம் எழுந்துநிறக முயல்கிறது ; ஒடிந்து வீழ்ந்து உணர் விழநது கிடநத தமிழன் புரண்டு எழுந்து கண்ணைப் பிசைந்து கொண்டு எழுந்திருக்க முயல்கின்றான். எழுக திருவெம்பாவை ! எழுக திருவாசகம் ! எழுக திருமுறை ! வாழ்க தமிழ் ! வாழிய தமிழர் ; வாழி தமிழகம்.

# *வள்ளுவர் காட்டிய வழி

வான், திரு. தெ. பொ. பாலதண்டாயுதபா

தெள்ளுதமிழில் திருக்குறள் தந்த வள்ளுவர், நாம இவ் வுலகில் வாழ்ந்தின்புறுசற்கு வகுத்துள்ள வழிகளில் சில கூறு கிறேன்

வரலாறில்லை

முத்தமிழ் முடியரசாண்ட அந்தக்காலத்திலே புலவர்களும் வேநதர்களும தமிழை நினைந்தனா, தம்மை மறந்தனர். அது போறறற்குரியதே ஆயினும அச்செயலால நாம் இன்று செந் தமிழின் பழைமையறியாது நொந்தலைகிறோம; செந்தமிழ்ப் புலவாகளின் வாழ்வையறியாமல் வாடுகிறோம்; செந்தமிழ்நாட் டின் வரலாறறியாது சிநதை தடுமாறுகிறோம். இவ்வாறான வாட்டக குரலில் ஒன்று வளளுவர் யாா? என்பது. ஆதிபகவன் என்பதற்குப் பொருள் முதற்கடவுள் என்றறியும மதியற்றோர் வள்ளுவர் ஆதிக்கும பகவனுககும் பிறந்தவர் என்று கதை கட்டினா அறிஞரோ "வள்ளுவர் அரசாட்சியில் இணைந்து அலுவல் பெற்று வாழ்ந்தவர்; சான்று அவர் நூலே" என்று முடிவுகட்டியுள்ளனர். வள்ளுவர் வரலாற்றைக் காணவில்லையே என்ற இத்துன்பக் குரலிலே ஒருதுளி இன்பக்குரல் கேட்கிறது. அதுதான் திருவள்ளுவரே திருக்குறளியற்றியவர் என்பது.

வள்ளுவர் ஒரு வழிகாட்டி

சென்னை முதலிய மாபெரும் நகரங்களிலே நண்பரின் வீடறியாது அலையும்போது அங்கொருவர் "இன்னார்வீடு இன்ன விடத்தில் இன்னபடியிருக்கும்," என்று வகையாக வழிகாட்டி னால் எப்படி மகிழ்கிறோம்; கைகாட்டி மரத்திற்கும் புகை வண்டிக் கழகத்தார் வெளியிடும் வழிகாட்டிக்கும் மத அன்பர் கள் வெளியிடும் தலயாத்திரைப் படங்கட்கும்கூடக் காலத்தில் அவைகள் செய்யும் உதவிகருதி அவைகளின் நலம் பாராட்டு கிறோமல்லவா? ஆனால் போகமுடியாத—ஏறமுடியாத இமயமலை யினுங்கடிய உலக வாழ்வுக்கே வழிகாட்டும் புலவர்களை என்றும் நாம் மறக்க வியலாது.

முற்காலத்துத் தமிழ்நாட்டு இசைக்குடிமக்கள் பழமரந் தேரும்பறவைபோல ஊர்கள் தோறும் சென்று வள்ளல்களிடம் பெரும்புலமையைக் காட்டி அருமபரிசு பெறுவதுண்டு. இயற்

*4-4-51 அன்று காரைக் கல்விக் கழகத்தில் துறவி சுத்தானந்த பாரதியார் தலைமையின்கீழ் ஆற்றிய சொற்பொழிவு.

றமிழ்ப்புலவர், இசைக்கலையில் தேர்ந்த பாணர், அவரின் பெண்பாலர் விறலியர், வேடம்புனைவதில் வல்ல பொருநர், நாடகமாடும் கூத்தர் "கற்றோர்க்கு யாதானும் ஊராம்; நாடாம்" என்றதை உணர்ந்து நாடு தோறும் செல்வர். அவர் தாம் சென்ற வழிகளின் வகையை ஆங்காங்கு கண்ட அநுபவத்தை வைத்து வழிகாட்டும நூலும் எழுதுவர்; இத்தகைய நூல்கள் பத்துப்பாட்டில் ஐந்துள்ளன. அவை ஆற்றுப்படை எனப்படும். ஆறுபடை, வழிகாட்டுதல்.

ஆனால் வள்ளுவரோ நாட்டுமக்கள் உலகில் நலமுடன் வாழ்ந்து இன்பத்தின் எல்லைகாண நல்வழிகண்டு நமக்குக் கூறியுள்ளார். ஆகவே வள்ளுவரும் ஒருவகையில் வழிகாட்டியாவர்; ஊர்க்கு வழிகாட்டியல்ல; உலகவாழ்வுக்கே வழிகாட்டி, அவர் குறித்துக் கொடுத்த வழிகுறிப்பே திருக்குறள்.

வள்ளுவர் தமிழர்; தமிழ்நூலியற்றினர்; ஆகவே அவர் "தமிழர்க்கே வழிகாட்டி" எனக் கருதக் கூடாது. அவர் உலகோர்க்கே வழிகாட்டி; அவர் தண்டமிழில் பாடிய அத்திருக்குறளை

* திடமான கருத்துடையதென்றுணர்ந்த வட மொழியினர் தம் மொழியில் பெயர்த்துள்ளனர்;
* குலுங்கும் கருத்துடைய தென்றுணர்ந்த தெலுங்க மொழியினர் தம மொழியில் பெயர்த்தனர்;
* தலையான கருத்துடைய தென்றுணர்ந்த மலையாள மொழியினர் தம்மொழியில் மாற்றிக்கொண்டனர்;
* பங்கமில்லாத நூல் என்றுணர்ந்த வங்க மொழியினர் தம் மொழியி லெழுதிக்கொண்டனர்;
* பாங்குடைய நூலென்றுணர்ந்த ஆங்கில மொழியினர் தம் மொழியில் பெயர்த்துக் கொண்டனர்;
* முத்தமிழ்ச் சிறப்பறிய இலத்தீன் மொழியினர் தம் மொழியில் எழுதிக்கொண்டனர்;
* சீருடைய நூலென்றுணர்ந்த பாரசீக மொழியினர் தம் மொழியில் பெயர்த்துக் கொண்டனர்;
* அறஞ்சொல்லும் நூலென்றுணர்ந்த பிரஞ்சு மொழியினர் தம் மொழியில் எழுதிக்கொண்டனர்;
* அருமையான நூலென்றுணர்ந்த செருமானிய மொழியினர் தம் மொழியில் பெயர்த்துக் கொண்டனர்;
* செந்தமிழ்ச் சிறப்பறிய இந்தி மொழியினரும் தம் மொழியி லெழுதிக்கொண்டனர்.

இவ்வாறு ஒவ்வொரு மொழியினராலும் தத்தம் மொழியிலே பெயர்த்துக் கொள்ளப்பட்டுள்ளமையான திருக்குறள் உலகப் பொது நூலாயிற்று ஆதலினலேதான்

“வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து
வான்புகழ் கொண்ட தமிழ்நாடு.”

என்று சுப்பிரமணிய பாரதியாரும் செப்பினர்.

வள்ளுவர் காட்டிய வழிகள்

வள்ளுவர் நமக்குக் காட்டிய வழிகளுள்ளே முதலாவதாகக் கூறியதும் முதன்மையானதாகக் கூறியதும் “ஒருவனே தேவன்” என்பது வள்ளுவர் “ஒருவனே தேவன்” என்ற சிறந்த கருத்துடையவர். பண்டைக்காலத்திலேயும் இத்தண்டமிழ் நாட்டில் இநதகொள்கைதான் இருந்திருக்கவேண்டும். நாளாக நாளாக சாதிகள் பெருகியதைப் போலவே பல்வேறு கடவுட் கொள்கைகள பல்கின போலும். கடவுளைபபற்றிக் கூறத்தொடங்கிய வள்ளுவர் கடவுள் வாழ்த்தென ஒரு வாழ்த்தை அமைததார். இவர் ஒருவனே தேவன் என்ற கொள்கையினராகலின் பத்துக் குறள்களுள்ளும் எந்தக் கடவுளையும் குறிப்பிடவில்லை.

வள்ளுவர் கடவுளைப்பற்றிக் கூறும்போது (முதற்கடவுள்) ஆதிபகவன் என்றும், வாலறிவன் (தூயஅறிவுருவானவன்) என்றும், மலர்மிசை ஏகினன் (அன்பர் மனத்தே தங்குபவன்) என்றும், வேண்டுதல் வேண்டாமை இலான் (விருப்பு வெறுப்பற்றவன்) என்றும், இறைவன் என்றும், ஐந்தவித்தான் (ஐம்புலன்களையும் அடக்கியவன்) என்றும, தனக்குவமை யில்லாதான் (ஒப்பில்லாதவன்) என்றும், அந்தணன் (அருளுடையோன்) என்றும் எண்குணத்தான் (எட்டுவகையான நற்பண்பினன்) என்றும் பொதுவாகவே கடவுட்டன்மைகளையும் நாம் வணங்க வேண்டிய கடமையையுமே கூறுகிறார். ஆனல் மதங்கொண்டோர் வள்ளுவரைத் தம் மதத்தவராக்கத் தலைப்படுகின்றனர்.

கண்ணபிரான் பாரதப் போரில் அருச்சுனனிடம் “எழுத்துக்களுள் அகரமாகி நின்றவன் யானே” என்று கூறியதையே வள்ளுவர் “அகர முதல எழுத்தெல்லாம் ஆதிபகவன் முதற்றே உலகு,” என்று முதற்குறளிலேயே மொழிந்தார்—என்பது போன்ற சான்றுபல காட்டி வள்ளுவரை வைணவராக்கி ஆழ்வாரென்று அழைக்கவும் தொடங்கினர்; அம் முதற் குறளையே சைவர்கள் சான்ருக எடுத்துக்கொண்டு “பகவன் என்ற சொல் சிவனையே குறிப்பதாகலின் வள்ளுவர் சைவர்” என்று முடிவு கூறி அவரை நாயனரென்று அழைக்கவும் நாணினரல்லர்.

இன்னும் சில மதத்தினரும் இவ்வாறே ஏற்றவாறு தத்தம் மதத்தினராக வள்ளுவரை மாற்றி உலகோரை ஏமாற்றப்பார்க்கின்றனர். "ஒருவனே தேவன்" என்ற கருத்துடைய வள்ளுவரையும் உலகப் பெருநூலாகிய திருக்குறளையும் மதங்களில் சேர்த்து மதிப்பைக் குறைக்காமல் பொதுவாகவைத்துப் போற்றலே ஏற்றமாகும்; நமது கடமையுமாகும்

வள்ளுவர் வகுத்த அடுத்தவழி "ஒன்றே குலம்" என்பது. நமது நாடும் மொழியும் இழிநிலையடைய இருந்த காரணம் சாதிவகையால் உயர்வு தாழ்வு கற்பித்து வகுத்து வகுத்து உடன் பிறப்பினரை ஒதுக்குவதேயாகும. ஆகவே, சாதியொழிய வேண்டும மக்கட்டன்மை நிரம்பப்பெற்றோர் எச்சாதியினராயினும அவர்களே மக்களென்று மதிக்கப்பெற வேண்டும்; மற்றவர் கயவரென்று ஒதுக்கப்படவேண்டும் அன்றி பிறப்பினால் உயர்வு தாழ்வு கற்பித்தல் பேதைமையாகுமென்றெண்ணிய வள்ளுவர் "பிறப்பொக்கும எல்லா வுயிர்க்கும," என்றார். விடுதலை வேட்கையுண்டாக இன்றுங்கூட நம காதில் ஒலித்துக் கொண்டு நிற்கும பாரதியார் முரசறைகிறார்; முரசறைந்தவர் "ஊருக்கு நல்லது சொல்வேன்—எனக், குண்மை தெரிந்தது சொல்வேன்," என்று கூறியபின், சாதிப்பேயைத் தொலைக்கத் தன் சொந்த வரலாற்றை நிறுத்திக் கூறுகிறார்.

"வெள்ளை நிறத்தொரு பூனை—எங்கள்
வீட்டில வளர்வது கண்டீர்;
பிள்ளைகள் பெற்றதப்பூனை—அவை
பேருக்கொரு நிறமாகும்;

சாம்பல் நிறமொரு குட்டி—கருஞ்
சாந்து நிறமொரு குட்டி;
பாம்பு நிறமொரு குட்டி—வெள்ளைப்
பாலினிறமொரு குட்டி;

எந்த நிறமிருந்தாலும்—அவை
யாவும் ஒரே தரமன்றோ?
இந்த நிறஞ்சிறிதென்றும்—இஃது
ஏற்றமென்றும் சொல்லலாமோ?"

என்று வளர்த்த ஒரே பூனை வெவ்வேறு வகையான நிறங்களுடன் நான்கு குட்டிகள் போட்டால் அக் குட்டிகளுள் உயர்வு தாழ்வு பாராட்டல் மதியற்றவர் செயலெனக் கூறியவர்,

என்று நிறங்கருதி மக்களைப் பிரித்தல் நேர்மையல்ல என்று உறுதியாகக் கூறிவிட்டார். ஆகவே, மக்கள் சாதி வேறுபாடு கருதாமல் வாழும் வழியே வள்ளுவர் காட்டிய வழியாகும்.

அடுத்தபடி அவர் காட்டும் வழி "கல்வி, அறிவு, ஒழுக்கம் உடையவரே மனிதர்," என்பது. மாந்தர் குருடராகாமல் காணுங்கண்ணராக வேண்டின் கல்வி கற்றல் வேண்டும், செவிடராகாமல் கேட்கும் செவியராக வேண்டின கேள்விச் செல்வம் பெறவேண்டும். கல்வியொன்றே மக்களை விலங்குகளி லிருந்து வேறானவராக ஆக்கிக்காட்டும். இக்கல்வியால் அறிவை வளர்க்கவேண்டும். அறிவு ஒன்றே நமக்கு அழிவு வராமல் காக்கும் கருவியாகும், அறிவுடையவரே எல்லாமுடையவ ரென்று ஏத்தப்படுவர்; அவ்வறிவினாலே எல்லாவற்றையும் தேடி இன்ப வாழ்வு வாழலாம்; அஃதிலையேல் துன்ப வாழ்வே. அறிவுடையார் நல்லொழுக்கம் பேணி நடத்தல்வேண்டும். "கற்க" என்று கூறிய வள்ளுவர் "அதற்குத் தக நிற்க" என்றும் சேர்த்தே கூறியுள்ளார். உலகுடன் ஒத்து ஒழுகும் ஒழுக்கமிலா ஒருவன் கற்ற கல்வியும் அறிவும் பயன் தருவன வல்ல, அறிவில்லாரவ னென்றே பழித்து இழித்திடப்படு வான்.

நாம் செல்லும் இவ்வுலக வாழ்க்கைப்பாதிய வழியிலே தீவழிகள் சில நம்மிடம் தாமே எளிதில் வந்து அறிவை மயக்கித் துன்புறுத்தும். அத்தீவழிகளில் செல்லாமல் அறிவின் துணை கொண்டு நல்வழிகளிலே செல்லவேண்டும். தீவழிகளாகக் கூறப்பெறும் ஐம்பெருங் குற்றங்களில் கொலையை, கொல்லாமை, புலாலுண்ணாமைப் பகுதிகளிலும், களவை, கள்ளாமைப் பகுதி யிலும், காமத்தை, வரைவின் மகளிர்ப் பகுதியிலும், கள்ளை, கள்ளுண்ணாமைப் பகுதியிலும், சூதை, சூதுப் பகுதியிலும் விளக்கிக்கூறி நம்மை விலக்குமாறு கூறியுள்ளார்.

மேலும், 'மக்கட்கு அன்பு அமையவேண்டும் அஃதில்லா உடல் வெறும் என்பு தோலால் போர்த்தப்பட்டது' என்றும் கூறுகிறார். இன்னும், 'அருளென்னும் அன்பீன் குழந்தை பொருளென்னும் செவிலியால் போற்றப்படவேண்டும்' என்றும் புகல்கிறார்.

இறுதியாக அவர் மக்கட்குக் கூறும்வழி மானமென்றதே யாகும். 'மக்கள் மானங்கெட உயிர்வாழக் கூடாது, உயிரினும் மானமே உயர்ந்தது மானங்கெட நேரின் மயிர்நீப்பின் வாழாத மானைப்போல உயிர்நீத்தே மானம் காக்கவேண்டும்' என்கிறார்.

சோழன் செஙகண்ணுனல் குடவாயிறகோட்டததுச் சிறை யில் வைக்கப்பெற்றிருநத கணைக்காலிரும்பொறை தாகத்தைத தீர்ததுக்கொள்ளத் தண்ணீர் பெற்று உயிர் வாழ்வும மானததிற் கீனமே என்றெண்ணி, "தமிழ்த தாய்மார் மானம்விட்டும உயிர் வாழுமாறு குழவிகளைப் பெறமாட்டார்" என்ற கருத்துடைய "குழவி இறப்பினும" என்ற புறபபாட்டை யெழுதிவிட்டு இறந்தா னன்றோ?

கோவலனைக் குற்றவாளியாக்கிச் செங்கோல முறைமையைச சிரழித்துத தென்னவா மானததைத் தானே யழிகக நோநத காலை கண்ணகியாலுண்மை யுணர்ந்த ஆரியப்படை கடநத நெடுஞ்செழியன உயிர்விட்டு மானஙகாததா னன்றோ?

தமிழரை இழித்துரைத்த கனகவிசயர் தலையில கல் கொணர்ந்து கண்ணகிக்குக் கோயில கட்டிய சேரன் செஙகுட்டுவன் உயிரினும தமிழர் மானமே பெரிதென்றெண் ணிப் பொருது தமிழர் மானங்காததா னன்றோ?

இவ்வரலாறுகளெல்லாம் தமிழர் மானங்காக்கும பண்பினர்; உயிரையே உதவி மானங்காபபவர் என்பதை உரைக்கின்றன வன்றோ? ஆகவே இனியும் நாம் தூங்காது நம்நாடுமொழி சிறக்கப் பாடுபட்டு ஈனமகற்றி மானங்காக்கவேண்டும.

ஆகவே 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என் றுணர வேண்டும்; இன்பமுடன் வாழவேண்டின் அன்பு வேண்டும், சிறக்கவாழவேண்டின் இரக்கம் வேண்டும்; இழுக்கின்றி வாழ வேண்டின் கல்வி யறிவு ஒழுக்கம வேண்டும்; ஈனமின்றி வாழ வேண்டின் மானம் வேண்டும்; எனறு இவ்வாறெல்லாம் நமது நல்வாழ்வுக்கு வழிகாட்டிய வள்ளுவரின் வழிகளை உணர்ந்து குறளின குறிப்பின்படியே நலவழி நடந்து இன்புறுவோமாக!

# சங்க நூல்கள் தரும் செய்திகள்

[திரு. பி. எல். சாமி.]

பழந் தமிழிலக்கியத்தில காணபபடும் சில அரிய செய்தி களைத் தொகுத்துக் கூறுவதே இக் கட்டுரையின் நோக்கம.

தற்காலம் சாரணர்கள 'சுவடு தேறுதல' (Tracking) என்ற பயிற்சியைத தங்கள திட்டத்தில் ஒன்றாகக கொணடுள ளனா. கல்லின்மேல் கல்வைத்தல, புல் முடிதல, கிளைபொடித்து ஒதுக்குதல், அமபுக குறி போடுதல ஆகியவைகொண்டு சென்ற வழியைப பின் வருவோருக்கு அறிவிபபதுண்டு. இதை 'பேடன் பவுல்' என்பவர் ஆபபிரிக்கக காட்டுமக்களிடம கறறுச் சாரண இயக்கத்தில் புகுததினா தமிழாகளிடமும புன்முடிந்து வழியறிவிக்கும் பழக்கம் இருந்ததென்பதற்கு ஒரு சான்று உளது.

"பண்டுநற் கறியாப் புலமபெயா புதுவிா
சந்து நீவிப் புன்முடிந் திடுமின." (௩௯௨ - ௩ - மலைபடுகடாம)

'முற்காலம் நன்மை யறியாத தீயநிலததை வழியறியாமற் போய் மீண்டுவந்த புதியவர்கள், பின் வருகினறவாகளும அவ் வாறு போய் மீளாதபடி பல வழிகளுங கூடின சநதியைக கையாலே துடைதது அடையாளமாக ஊகமபுல்லை முடிநதிட்டு வைப்பீா' என்ற உரையே இவ் வழக்கததைத தெளிவாக உணாத

தற்காலத்தில் இருமல் வராமல் தடுகக, சில 'மிட்டாய்' போன்ற இனிபபு மருநதுகளை வாயில அடக்குகின்றனா. மழ வர் என்பாா புற்றுமண்ணை வாயிலடக்கி இருமல் வராமல் தடுத் தனா என்பதை அகப்பாடல்மூலம் உணருகிறோம்.

"............ ........ .........செஙகண மழவர்
வாய்ப்பகை கடியும மண்ணொடு கடுந்திறல்" (அகம். ௧0௧)

என்ற வரிகள் இவ் வழக்கத்தைச் சொல்லுகின்றது.

நோய் கி மு. 600-க்கு முன்னரே இந்தியாவில் த் தெரிகிறது. கி மு. முதல நூற்றாண்டில் யூதேயா முதலிய நாடுகளில் குட்ட நோய்ககாராகளை ஊர்களில் அண்ட விடாது ஒதுக்கும் வழக்கம இருநததாக விவிலிய நூல் கூறும். இம் முறையில் ஒதுக்கும் வழக்கம் (Segregation) மிகவும் நல்ல தொரு திட்டம். பழங்காலத்தில் சேரிகளில குட்டநோய்க்

காராகளை அண்ட விடுவதில்லை என்பதை ஒரு கலிப்பாவின் மூலம் உணரலாம்.

"தீரத் தறைந்த தலையுந்தன் கம்பலும்
காரக் குறைந்து கறைப்பட்டு வந்துநம்
சேரியிற் போகா முடமுதிர் பார்ப்பானை" (கலி கசு)

பகலில் வெளிவர முடியாத குட்டநோய்ப் பார்ப்பனன் இரவில் வரவே தலைவி பயந்துபோனதை இப்பாடல் கூறுகிறது.

ஒட்டகத்தைப்பற்றி அகநானூற்றில் ஒரு அரிய குறிப்பு வருகின்றது.

"குறுமபொறை யுணங்குந் ததரல்வெள் ளென்பு
கடுங்கா லொட்டகத் தல்குபசி தீர்க்கும்
கனனெடுங் கவலைய கான நீந்தி" (அகம். உசரு)

ஆங்கிலத்தில் 'பாலைவனக்கப்பல்' என்று அழைக்கப்படும் ஒட்டகம் எலும்பைத் தின்று பசியாறிப் பாலைவனத்தை நீந்திக் கடப்பதாக இப்பாட்டு கூறுகிறது. அக்காலத்தில் நம் நாட்டில் ஒட்டகம் இருந்ததோ அல்லது வெறும் கேள்விவழிச் செய்தியோ என்பதை அறுதியிட்டுக் கூறமுடியவில்லை.

கலித்தொகையில்மட்டும் வரும் ஒருவிதப் பட்டுப்பூச்சியைப்பற்றிய குறிப்பு கவனிக்கத்தக்கது. இஃது, 'உலண்டு' என அழைக்கப்படுகின்றது.

"மேற்பாட் டுலண்டின் நிறனொக்கும் புரைகுரூஉக் காய"

உலண்டு என்பது ஒருவகைப் பட்டுப்பூச்சி யென்றும், அது கருமை கலந்த செம்மை நிறமாக (புகர்நிறம்) இருக்குமென்றும் கூறப்படுகிறது. இதைப்பற்றி வேறு யாதொரு குறிப்பும் சங்க இலக்கியத்தில் கிடையாது. இங்கே உலண்டு என்று கூறப்படுவது பட்டுப்பூச்சிதான் என்பதும் ஐயத்திற் கிடமானது.

மழை பெய்தவுடன் சில நாட்களுக்குள் பச்சைப் பசும் புல்லில் கருஞ்சிவப்புள்ள (Purple) ஒருவகைப் பூச்சி உலவுவதைப் பார்த்திருக்கலாம். இதன் மேற்புறம் 'வெல்வெட்' என்று சொல்லப்படும் துணிபோன்று மிகவும் மென்மையாக மெத்தென்று இருக்கும். மிகவும் அழகானதொரு பூச்சி. இது சில இடங்களில் வர்ணிக்கப்படுகின்றது. இதை இந்திர கோபப் பூச்சி யென்று பிற்காலத்தில் வழங்கினர். 'ஈயல்மூதாய்' என்று இது சங்க இலக்கியத்தில் அழைக்கப்படுகின்றது.

"அரக்கத் தன்ன செந்நிலப் பெருவழிக
காயாஞ் செம்ம ருய்ப் பலவுடன்
**ஈயன் மூதாய்** வரிப்பப் பவளமொடு
மணிமிடைந் தன்ன குன்றங் கவைஇய" (அகம். கச)

"மணிமிடை பவளம் போல வணிமிகக்
காயாஞ் செமம ருஅயப் பலவுடன்
**ஈயன் மூதாய்** யீர்ம்புறம வரிப்பப்" (அகம் ரு0ச)

மேற்காட்டிய பாடல்களிலும் இன்னும் அகம் 134, நற்றிணை, குறுநதொகை முதலிய நூல்களிலும இப்பூசசி சொல்லபபடு கின்றது காயநதுபோன காயாம்பூவொடு இபபூச்சிகள் கலந்து காண்பது பவளத்தொடு நீலமணியைத தொடுததுவைத்திருப் பதுபோலிருப்பதாகக் கூறபபடுகிறது. முல்லை நிலத்தில திடீ ரென்று மழை பெய்தபின், காயாமபூக்கள் உதிர்ந்த இடத்தில் இபபூச்சிகளை உலவுவதைக் கண்ட புலவர் அதை ஒரு அழகிய உவமையாககினார 'ஈர்ம்புறம் வரிப்ப' என்று சொலலபபடுவதி லிருநது மழைக்கப்புறம் இது தோன்றுவது தெரிகின்றது. அரியதோர் இயற்கைச செய்தியை அழகிய உவமை வாயிலாக வெளியிடட நம புலவர்களின் திறமை போற்றத் தக்கது.

ஈயல் என்ற பூச்சி மழைக்காலத்தில் புற்றிலிருந்து புறப் படுவதைப பாரததிருக்கலாம. இந்த ஈயலை உண்ணும வழக்கம் பழங்காலத்தில் இருநததென்பதைச் சங்கநூல் வாயிலாக உணரு கிறோம்.

"உடும்பு கொரீஇ வரிநுணை லகழ்ந்து
நெடுநகோட்டுப் புற்றத தீயல் கெண்டி"

"சிறுதலைத் தருவின் பழுப்புறு விளைதயிர
இதைப்புன வரகி னவைப்புமா ணரிசியொடு
காரவாயப் பொழிந்த வீர்வாய் புற்றத்
தீயல்பெய் தட்ட இன்புளி வெஞ்சோறு." (அகம். ருகச)

இந்தப் பூச்சியைத் தவிர உடும்பு, தவளை முதலியவற்றையும் உண்டு வநதனர் எனக் கருதவும இடமுண்டு. ஈயலை உண்ணும் சில இனததார் தற்காலம தென்னார்க்காடு, இராமநாதபுரம், மதுரை முதலிய மாவட்டங்களிலும் காணப்படுகின்றனர். புற்றில் புகைமூட்டி நீருள்ள சட்டிகளில், வெளிவரும் பூச்சி களைப் பெய்தெடுத்து அரிசிப பொரியோடு வறுத்துச் சாப்பிடும் வழக்கத்தை இப்பொழுதும் அவ்வகுப்பினரிடையே காணலாம்.

ஓரிரண்டு இடங்களில் திமிங்கிலம் கூறப்பட்டுளது. இலக்கி யத்தில் இது 'பெருமீன்' என்று கூறபபட்டதாகத தெரிகிறது.

இது வேட்டையாடப்பட்ட செய்தியை நற்றிணையில் படிக்கும்போது, தற்காலத்தில் திமிங்கில வேட்டையைப்பற்றி ஆங்கில நூற்களில் படிப்பது போலிருக்கிறது ஐரோப்பாவில் வேட்டையாடி வந்த முறையும், நற்றிணையில் கூறப்படும் முறையும் அடிப்படையில் வேற்றுமையின்றிக் காணப்படுகின்றது

"......... ..................நோன்புரிக்
கயிறுகடை யாத்த கடுநடை யெறியுளித்
திண்டிமிற் பரதவர் ஒண்சுடாக் கொளீஇ." (நற். ௩அ௮)

'வன்மை மிக்க புரிகளான் முறுக்குண்ட கயிற்றின் நுனியிலே கட்டிய திமிங்கிலத்தின்மீது எறிகின்ற ஈட்டியையுடைய நீரில விரைந்து செல்லவல்ல திண்ணிய மீன் படகிலே செல்லுகின்ற பரதவா ஒள்ளிய விளக்கங்களைக் கொளுத்திக்கொண்டு' என்று பின்னத்தூர் நாராயணசாமி அய்யர் உரையெழுதியுள்ளாா. ஐரோப்பிய நாடுகளில் கூட நீளமான சங்கிலிகளில் கட்டிய ஈட்டியை எறிந்து திமிங்கிலங்களைக் கொன்று வேட்டையாடும வழக்கம் இன்றும் உள்ளது. திமிஙகிலம் மிக விரைவாகச் செல்லும் விலங்காதலால் அதற்கேற்ப மிக விரைந்து செல்லும் படகுகளையே பயன்படுத்தியிருக்கின்றனர்.

'எழால்' என்ற சொல்லுக்கு வல்லூறு என்றும் மெலெழு (உச்சஸ்தாயி) என்றும் பொருள் இருந்ததாக பழைய நூல்களிலிருந்து தெரிய வருகின்றது அவை:

"வஙகாக் கடந்த செஙகாற் பேடை
எழாலுற வீழ்ந்தெனக் கணவற் காணுது"
(குறுந்தொகை கடுக)

"சிறுபுன் புறவொடு சிற்றெழால் சீறும்
நெறியரும் நீள் சுரத்து." (திணைமொழி. கரு)

"புன்புற எருவைப் பெடைபுணா சேவல்
குடுமி எழாலொடு கொண்டு கிழக்கிழிய" (பதிற்று, ௩௬: க௧ப)
"நிழலறு நனந்தலை எழால்ஏறு குறித்த" (அகம். ௪0௩)

எனப் பல நூல்களிலும் இப்பறவை சொல்லப்படுகின்றது. தொல்காப்பிய மரபியலில் எழால்-புல்லூறு எனக் கூறப்படுகின்றது. தற்காலத்தில் இதைவல்லூறு என்றும் ராஜாளி என்றும் அழைக்கின்றனர். இப்பறவை செங்குத்தாக மேலெழும்பிப் பறந்து பின்னர் திடுமெனப் பாய்ந்து விண்ணிலேயே பிறபறவைகளைக் கால்களால் பிடித்துக் கொன்று உண்ணும் கொடிய பழக்கத்தை உடையது.'புள்ளூறு' என்பதே இதற்குப் பொருத்தமான பெயர். இதைப்போல மிக உயரமாகவும செங்குத்தாகவும் மேலெழும்பிப்

பறக்கும் பறவைகள் மிகச் சில. இதை எண்ணியே பழந்தமிழர் இசையில் மேலெழும்பி (உச்சஸ்தாயியில)ப் பாடுதற்கு 'எழால்' என்று பெயரிட்டனர் எனக் கருதலாம். 'எழு' என்ற மூலச் சொல்லின் வழிவநததே 'எழால்' என்ற சொல்லும். இதே இனப் பறவையான ஃபால்கன் (Falcon) ஆங்கில நாட்டில் உளது. இபபறவை மேலேபறக்கும் உயரததைக் குறிக்கும் ஆங்கிலச்சொல் (Pitch) என்பதே, அந்நாட்டு இசையிலும் 'மேலெழுநிலை' (உசசஸ்தாயி)யைக் குறிதது வருகின்றது. தமிழி லும் ஆங்கிலத்திலும் இப்பறவைக்கும இசைக்கும் தொடர்பு காட்டிவரும் சொல்லொற்றுமை மிகவும் வியப்புக்குரியது. ஐரோப்பிய நாடுகளில் முயல் முதலிய சிறு விலங்குகளையும் பற வைகளையும் வேட்டையாட இபபறவை பழக்கப் படுத்தப்பட் டது இப்பறவைகளை அரசர்களும் உயர்குலப் பெண்களும் தஙகள பொழுது போக்குக்காகப் போற்றி வந்தனர். இதை ஒருகலை (Falconry) யாகவே மதித்துவந்தனர். கி மு 600-ல் இபபறவை இந்தியாவிலும் வளாக்கபபட்டதென்பதற்குப் போதிய சான்றுகள் உள்ளன. தமிழ் நூல்களில் இப்பற வையை வேட்டையாடப் பயன்படுததினதைக் குறித்துவரும் இடங்கள் ஒன்றுமிலலை ஆயினும் பிற்காலததிய ஏட்டுச் சுவடி யாக உள்ள 'கருணீகர் புராணம்' என்ற நூலின்மூலம் இப பறவை வேட்டையாடப் பயன்படுத்தப்பட்டது என்பது தெரிய வருகின்றது. சென்னியச் சோழன் என்பவன் வேட்டையாடு வதை விளக்கமாகக் கூறும் பாடலில் இக்குறிப்பு வருகின்றது.

"கட்டியே வலையொழுஙகாய்க கயிறதாம் கண்ணிசேர்த்தும்
வெட்டியே முட்கடன்னை வெளிதெரி வழியடைத்தும்
மட்டிலாப் பதஙகமான மாளவே வேட்டைக்காரர்
விட்டனர் வல்லூறுதன்னை வீழ்ந்திடப் பறவைதானே"

மேற்காட்டிய வரிகளில், பறவைகளை வேட்டையாட வல்லூறு பயன்பட்டது தெரியவருகின்றது.

கிரேக்கர்களும் ரோமர்களும் குறிப்பிட்ட காலங்களில் நாடுவிட்டு நாடுபோகும் பறவைகளைப்பற்றி (Migratory Birds) அறிநதிருந்தனர். தற்போதுகூட இபபறவைகளைப பற்றி ஆராய்ந்து அறிந்தது மிகவும் குறைவே. மணிமேகலையில் வரும் "பறவை பயன்றுய்த் துறைபதி நீங்கா" என்றவரி இப் பறவைகளையே குறிப்பதாகத் தெரிகின்றது.

மற்றும் தமிழ் நூல்களில் கூறப்படும் அசுணமா, எண்கால் வருடை, பேரண்டப்பறவை, ஆளி ஆகிய அரிய உயிர்களைப் பற்றித் தற்பொழுது ஒன்றும தெரியவிலலை. பிற்காலத்தில் பல்

ல்வ அரசர்கள் காலத்தில் 'காண்டாமிருகம்' பட்டயத்தில் கூறப்படுகின்றது. கூரம்பட்டயம் இதைக் கூறுகின்றது. சீவகசிந்தாமணி 930-ம் பாட்டு காரன்னத்தைப் பற்றிக் கூறுகின்றது பெரும்பாணாற்றுப்படை உரையில் 'காரன்னமுண்மையின' என்று நச்சினார்க்கினியர் எழுதியுள்ளார். கருப்புநிறமுள்ள அன்னம் ஒரு புராணக்கதையென்று பலரும் கருதிவந்தனர். ஆனால் ஆஸ்திரேலியாவில இது சில காலத்திற்குமுன் கண்டு பிடிக்கப்பட்டது. முதல் நூற்றாண்டில் வாழ்ந்து வந்த ஜுவனல் என்ற கிரேக்கக்கவி காரன்னத்தைப்பற்றி எழுதியுளளார். காரன்னம் தமிழ்நாட்டில் இருந்திருக்கலாம் (இதுகாலை, சென்னை உயிர்ப பொருட்காட்சிச்சாலையில் இரு காரன்னங்கள் மேல்நாட்டிலிருநது கொணர்ந்து வைத்துள்ளனர்) அல்லது அதைப்பற்றிப பிறநாட்டு வழித்தெரிந்திருக்கலாம் செம்மயிருடைய எலியின் தோலிலிருந்து ஆடைசெய்தனர் என்பதைச் சீவகசிநதாமணியிலிருநது உணருகிறோம். இந்தச் செம்மயிருடைய எலி இருந்திருக்கலாம், பின்னா மறைநதிருக்கலாம் என்பதற்குச் சான்றுகள் உள. வடகரோலினாவில் இப்பொழுது கூட 'சின்ச்சிலா' (Chinchilla) என்றொரு எலிபோன்றதொரு விலங்கு உளது. உலகிலே மிகவும் விலைபொருந்திய தோல இநத எலியிடமிருந்து பெறப்படுகிறது. இதுபோன்றதொரு எலி தமிழ்நாட்டில் பழங்காலத்தில் இருந்திருக்கலாம். கலித்தொகையில் 'சிம்புள' என்றதொரு விலங்கு கூறப்படுகிறது. எட்டுக் கால்களும், இரண்டு தலைகளும், வட்டமான கண்களும், வளைந்த எயிறுகளும் உடையதென்று கூறப்படுகின்றது. சிம்புள், எண்கால்வருடை போன்ற உயிர்கள், மிகமிகப் பழங்காலத்து உயிர்களைப்பற்றி நம்முன்னோர் செவிவழி அறிந்த செய்திகளாக இருக்கலாம். புராணங்களில் கூறப்படும் சில நம்பமுடியாத உயிர்கள் மிகமிகப் பழங்காலத்தவை என்று உயிர் நூல் வல்லுநர் கருதுகின்றனர் ஒற்றை மருப்புக்குதிரை (யூபம்) (Unicorn) இருநததாகப் புராணங்கள் கூறும். ஒரு கொம்புடைய அத்தகைய விலங்கு மிகப் பழங்காலத்தில் இருந்ததாகவே அறிவியலார் கருதுகின்றனர். நம்பமுடியாத பல உயிர்கள் ஆஸ்திரேலியாவில் உள. அதுபோல் சில உயிர்கள் தமிழ்நாட்டிலும் இருந்தன பின்னர் அழிந்தன எனக் கருதுவது மிகையன்று.

# செய்திகளும் குறிப்புக்களும்

**பட்டம் வழங்கல்**

தூத்துக்குடி சைவசித்தாந்த சபையினரால் சித்தாந்தப் பேராசிரியர் திரு. ந. சிவகுருநாதபிள்ளை அவர்களின் எண்பதாவது ஆண்டுப் பிறப்பு நாளை முன்னிட்டு நிகழும் நந்தன ஆண்டு ஆடித்திங்கள் பத்தாம் நாள் (25-7-1952) கூட்டப்பெற்ற பேரவையில் இதன் அடியிற் கண்டவண்ணம் பட்டங்கள் வழங்கப்பெற்றன:

க. சிவத்திரு வித்துவான் **மகாலிங்கத் தம்பிரான்** சுவாமிகள், இளவரசு திருப்பனந்தாள் ஆதீனம். —**சித்தாந்த ஞானமாதவர்.**

உ. சிவத்திரு **சோமசுந்தரத் தம்பிரான்** சுவாமிகள் திருவடி ஆதீனம். —**சித்தாந்த ஞானதீபம்**

ங. திருவாளர் டாக்டர், மு **வரதராசனுர்** அவர்கள் தலைமைத் தமிழாசிரியர், பச்சையப்பன் கலலூரி, சென்னை

**ாந்த பண்டிதம**

ச. திருவாளர், அ. ச **ஞானசம்பந்தம்** M A. அவர்கள் தமிழாசிரியர் பச்சையப்பன் கல்லூரி, சென்னை. — **சித்தாந்த ஒளிமணி.**

ரு. திருவாளர். K. **சிவராமன்** M A அவர்கள் சைவ சித்தாந்தத் தத்துவ விரிவுரையாளர், காசி சர்வகலாசாலை, காசி. —**சித்தாந்த வித்தியா சிரோன்மணி**

சு. திருவாளர், S **நடேசபிள்ளை** B A, B L. அவர்கள் தபால் தந்தித்துறை அமைச்சர், கொழும்பு —**சித்தாந்தப் பெருங்காவலர்**

எ *திருவாளர், வ. **சுப்பையாபிள்ளை** அவர்கள், ஆட்சிப் பொறுப்பாளர், திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிட்டெட், திருநெல்வேலி. —**சித்தாந்தக் காவலர்**

அ. திருவாளர் K. **அரங்கசாமி முதலியார்** அவர்கள், டிப்டி கலெக்டர் (ரிடையர்ட்), செயலாளர், சைவ சித்தாந்த மகா சமாஜம், சென்னை. —**சித்தாந்தப் புரவலர்.**

கூ. திருமதி K A. **ஆதிலட்சுமி அம்மையார்** அவர்கள் சென்னை. —**சித்தாந்த பண்டிதை.**

க0. திருவாளர் வித்துவான். **வை துஞ்சிதபாதம் பிள்ளை** அவர்கள் உதவி ஆசிரியர், சித்தாந்தம், சென்னை. —**சித்தாந்தப் பெரும்புலவர்.**

கக. திருவாளர் சிவம். **கருணாலய பாண்டியன்** அவர்கள் பண்டிதர் விவேகானந்த சபை, கொழும்பு. —**சித்தாந்த பண்டித சிகாமணி.**

கஉ. திருவாளர் **வீர. சிவசுப்பிரமணியம்** அவர்கள் குலசேகரன் பட்டினம். —**சித்தாந்தச் சொல்மணி.**

---

* செந்தமிழ்ச்செல்விப் பதிப்பாளர் திரு. வ. சுப்பையாபிள்ளை அவர்கள் பட்டமில்லாமலே தொண்டு செய்ய விரும்புகின்றவராதலின், தமக்கு வழங்கிய "சித்தாந்தக் காவலர்" என்னும் பட்டத்தை ஏற்றுக் கொள்ளவில்லை என்பது அன்பொடு தெரிவிக்கலாயிற்று.

கங. திருவாளர், உ ராம மெ சுப சேவு அ அண்ணாமலைச் செட்டியார் அவர்கள் B Com., தேவகோட்டை, —சித்தாந்த அருட்செம்மல்

கச. திருவாளர் புலவர் கி கரு. ராம சோம இராமநாதன் செட்டியார் அவர்கள் தேவகோட்டை, சித்தாந்தப் பாவலர்.

கரு திருமதி சீ பிருந்தா தேவியார் அவர்கள், திருகோகர்ணம் புதுக்கோட்டை, —சித்தாந்தச் செல்வமணி.

கசா. திருவாளர், டாக்டர் இராவ்சாகிப் D. R. அண்ணாமலைப் பிள்ளை அவர்கள், திருக்குற்றாலம். —சித்தாந்த எழுத்தறி சிவமணி

கஎ. திருவாளர், தசாவதானம் ஆறுமுகம்பிள்ளை அவர்கள் சுசீந்தரம். சித்தாந்த அருங்கலை விநோதர்

## பூலாங்குறிச்சியில் அருள் நெறித் திருக்கூட்டம்

தமிழ்நாட்டின அருளநெறித் திருக்கூட்டத்துத் தலைவரும திருவண்ணாமலை ஆதீன கர்த்தருமான மறைத்திரு. தெய்வசிகாமணி அருணாசல தேசிக பரமாசாரிய சுவாமியவர்கள் தலைமையில் 14 10-52-ஆம நாள் அருள்நெறித் திருக்கூட்டத் துவக்கவிழா தொடங்கப்பெற்றது.

அதுகாலை அடிகளார், அருள் இனன தன்மைத்தென்றும், அன்பு இத்தகையதென்றும யாவரும் உணருமாறு தெற்றென விளக்கிக்கூறி, இவ் அருள்நெறியே கடவுள் நெறி, அதனைப்பற்றி ஒழுகவேண்டுமென்றும், இச்சீரிய நெறியை நம் முன்னோர் கண்டு கடவுள் என்னும் ஒரு பொருள் உண்டென்று நம்பி வந்தார்கள் என்றும் திருவள்ளுவர் கருத்துரைகளையும விளக்கிக் காட்டினார்கள்.

அதன்பின் பன்மொழிப் புலவர் திரு. தெ. பொ. மீனாட்சிசுந்தரனார், மிக எளிமையான முறையில் கடவுள் உண்மையை விளக்கிப் பேசினார் பின்னர், சா. கணேசன் அவர்கள் திருக்கோவில் வழிபாட்டுமுறை, தத்துவம் முதலியன அஞ்ஞான்று மெய்ஞ்ஞானிகள் கண்ட உண்மை முடிவுகளையே இற்றைஞான்றைய விஞ்ஞானிகள் கண்டுரைக்கின்றனர் என்பதைப் பல மேற்கோள்களுடன் விளக்கிக் கூறி

## பேரறிஞர், இரா. க. சண்முகஞ்செட்டியார் மணிவிழாவில் மகிழ்வுச் செய்தி

கொங்கு நாட்டில் உள்ள எல்லா மாவட்டங்களிலும் செந்தமிழ்க் கல்லூரி ஒன்றுகூட இல்லை. இக்குறையை நீக்க, 16-10-'52-ல் கோவையிலுள்ள சில பெரியோர்கள் ஓர் கூட்டம்கூடி திருப்பேரூர் சாந்தலிங்கசுவாமிகள் மடத்தைச் சார்ந்து ஓர் செந்தமிழ்க் கல்லூரி நிறுவுவதென்று முடிவுசெய்து, அதற்கு வைப்பு நிதியாக ஒரு நூறாயிர ரூபாய திரட்டுவதெனவும் முற்றுதல் செய்துள்ளனர். இம்முடிபினை மறைத்திரு. சாந்தலிங்கசுவாமிகள் திருமடத்து ஆலோசனைக் குழுவினரும் திருமடத்துத் தலைவரவர்களும் ஏற்றுக்கொண்டு இதனை அரசியல் தலைவர்கட்கு அறிவிப்பதாக முடிபு கொண்டனர்.

இதில் பங்கெடுத்துக் கொண்ட பெரியார்கள்: திரு. C. S. இரத்தின சபாபதி முதலியார், திரு V. C. சுப்பையக் கவுண்டர், திரு. ஆர். கே. சண்முகஞ்செட்டியார், திரு A. T. கிருஷ்ணசாமி முதலியார், திரு. C. M இராமச்சந்திரன் செட்டியார் முதலியோராவர்.

இவ் அரிய செய்தி, திரு ஆர் கே சண்முகஞ் செட்டியாரவர்களின் மணிவிழா மகிழ்ச்சிக் கொண்டாட்டம் திருப்பேரூர்ப் பட்டிப்பெருமான் திருக்கோவிலில் நிகழ்ந்தபோது வெளியிடப்பெற்றது இதைக் கேட்ட மக்கள் யாவரும் புது மகிழ் பூத்து இன்புற்றனர்

இவ்விழாவில் பங்குகொண்ட செட்டிநாட்டரசர், முத்தையா செட்டியாரவர்கள் மகிழ்ந்து இக்கல்லூரியுடன் தமிழிசைக் கல்லூரியும் சங்கமும் சேர்த்து நடத்துமாறு வேண்டினர். அவ்வாறே ஏற்றுக்கொண்டனர்

இதுபோன்ற பல கல்லூரி தோன்றி நாட்டுக்கும் மொழிக்கும் நலம் பல நல்க வேண்டுகின்றோம்

## சென்னைமீது ஆந்திரர் உரிமைக்கு முதலமைச்சர் கண்டிப்பு

சென்னை மாநில முதலமைச்சர் இராஜாஜி அவர்கள் 24 10-52-ல் காரைக்குடி 'இந்து மதாபிமான சங்கப்' புதுக்கட்டிடத்தைத் திறந்துவைத்துப் பேசியபோது குறிப்பிட்டுரைத்ததாவது '

"சென்னை நகரில் மக்கள் தொகைக் கணக்குப்படி நூற்றுக்கு 68 பெயர்கள் தமிழும், 16 பெயர்கள் தெலுங்கும், ஏனைய 16 பெயர்கள் மற்றை மொழிகளும் பேசுகின்றவராவர். எனவே, இவ் அடிப்படையில் சென்னை நகரை ஆந்திரர்கள் கேட்பதற்கு உரிமையில்லை ஒரு பொருளின்மீது ஒருவருக்கு யாதொரு உரிமையும் இல்லாதிருக்கையில், அதை அவர் வைத்திருந்தால் அது முடிவில் அவர்க்கு அழிவையே தரும் ஆந்திர மொழி உரிமையில் சென்னை நகரைக் கேட்கின்றனர். நான் முன்கூறியபடி தெலுங்கு பேசுவோர் பதினாறு பெயர்களே. இவர்கள் சென்னையைக் கேட்கக் கூடுமானால், கோயமபுத்தூரையும் கேட்கலாம் ஏனெனின், அங்கு நூற்றுக்கு 20 பெயர்கள் தெலுங்கு பேசுகின்றனர்" என்று நகைச்சுவை ததும்பப் பேசினார்.

பின்னரும் "இவ் ஆந்திரர்களுள் உண்மையறிந்தவர்கள் சிலர் இருக்கின்றார்கள் அவர்கள் சென்னை நகரமின்றி ஆந்திர மாநிலம் பெற, எச்சரிக்கையோடு இருக்கின்றார்கள். ஒரு குடும்பத்தைச் சேர்ந்தவர் தனித்துப் போக விரும்பினால் அக்குடும்பத்திலுள்ள மற்றவர்களையும் தனித்தனி பிரிந்து போய்விடவேண்டுமெனக் கேட்கமுடியுமா? அது முறையற்ற செயலாகு"மென்று குறிப்பிட்டார்.

## மூன்றாண்டுச் சிறுவன் நான்கு மொழி பேசும் வியப்பு

டில்லி பத்திரிகை நிருபர் ஒருவருடைய மூன்றகவையுள்ள புதல்வன் 'சந்தோஷ் ஒக்' என்பவன், நம இந்தியநாட்டுக் குடியரசுத் தலைவர் இராசேந்திரப் பிரசாது அவர்கள் முன்னிலையில் ஆங்கிலம், சமஸ்கிருதம், இந்தி, மராத்தி ஆகிய நான்கு மொழிகளிலும் அவர்கள் வியக்குமாறு பேசினான். அதைக்கேட்ட இராசேந்திரபிரசாது அவர்கள் அவனை மெச்சி வாழ்த்துக் கூறினார்கள்.

நம் சைவசமயப் பெரியார்களான திருஞானசம்பந்தர், மெய்கண்டதேவர் முறையே இளங்குழவிப் பருவத்தே தேவாரம் பாடியருளியதும் சித்தாந்த நுண்மையை விளக்கியருளியதும் பொய்ம்மையென்று கூறுவார்க்கு இதுபோன்ற உண்மைகள் எடுத்துக்காட்டாக இறைவன் திருவருளே என்பது குறிப்பிடத்தக்கது.

இச்செய்தி 21-10-52 'இந்து' நாளிதழில் 22-10-52-ல் நிகழ்ந்ததாக வெளிவந்துள்ளது.

## இந்திய முதலமைச்சர் கூறும் எழுத்து மாற்றத்துக்கு மறுப்பு

19-10-52-ல் புதுடில்லியில் நிகழ்ந்த சாரணர் கூட்டம் ஒன்றில் பேசியபோது இந்தியநாட்டு முதலமைச்சர் நேரு அவர்கள் கூறியதாவது:

மாகாண மொழிகள் எல்லாம் 'தேவநாகரி' எழுத்துக்கள் மூலம் வழங்கப்பெறுமானால் மக்கள் இரண்டு அல்லது மூன்று மொழிகளை எளிதில் கற்றுக்கொள்ள இயலும் என்றும், தாம் ஒருமுறை அசாம் பகுதியில் சுற்றுச் செலவாக வந்தபோது, தம்மை ஒரு சிறுவன் நேரிற் கண்டு, 'அசாம் மொழியைத் தேவநாகரி எழுத்து மூலம் பயிலலாமா?' என்று கேட்டானும். அதற்கு நேரு அவர்கள் 'இது மிக நல்ல கருத்து' என்று

**குறிப்பு:** நேரு அவர்கள் கூற்றுப்படி எல்லா மொழிகளின் எழுத்துக்களையெல்லாம், தேவநாகரி எழுத்தாக்கிப் பயின்றால் நல்லதெனபது, வடநாட்டு மொழிகளுக்கு ஏற்றதாக இருக்கலாம். ஆயினும், ஒவ்வோர் மொழிகளும் அவ்வந் நாட்டுப் பண்பாட்டையொட்டிக் குறியீடு செய்தவையே அவைகட்கு ஓர் அமைப்பும் கருத்தும் உண்டு. எம் தமிழ் மொழி பண்டுதொட்டு இயற்கை நுட்பத்தோடும் அரிய கருத்தமைதியோடும் ஆக்கப்பட்ட செப்பமுடைய எழுத்துக்களைக்கொண்டு இயங்கும் சீர்மை கொண்டது; இவ்வெழுத்துக்களைக் கொண்டே ஏனைய எல்லா மொழிகளையும் எழுதிவிடலாமென்று ஒலி இலக்கண வல்லுநர் பா. வே. மாணிக்க நாயகர் அவர்கள் யாவருக்கும் தெள்ளத் தெளிய எடுத்துக் காட்டிய உண்மை. நேரு அவர்களோ அவர்க்கு மேற்பட்ட பிறரோ இயற்கைக்கொவ்வாதனவற்றை மொழிந்தால் 'நெற்றிக் கண்ணைக் காட்டினும் குற்றம் குற்றமே' என மொழிந்த வீரத் தமிழன் வழிவந்த தமிழர்களால் ஏற்றுக்கோடல் சாலாது.

## தமிழ் எழுத்துச் சீர்திருத்தத்தை அரசியலார் கைவிட்டனர்

தமிழ் எழுத்தைச் சீர்திருத்திப் பாடபுத்தகங்களை அமைக்கவேண்டுமென்று அரசினர் கொண்டிருந்த கொள்கையை அறவே விட்டுவிட்டதாக 9-8-52 நாளிதழ்களில் வெளிவந்துள்ளது. இது குறித்து நம் செல்வி இதழ்களில் முன்னரே பெருங்கிளர்ச்சி செய்து கட்டுரைகள் பல வரைந்துள்ளோம், இச்செய்தி பெரிதும் மகிழ்வுக்குரியது.

**குறிப்பு:** எழுத்துச் சீர்திருத்தம் வேண்டாமென அறிக்கை வெளியிடச் செய்த நம் சென்னை மாநில முதலமைச்சர் இராஜாஜி அவர்களின் 'வருமுன்னர்க் காக்கும்' மதிநுட்பத்தைப் பாராட்டுகின்றோம், வாழ்த்துகின்றோம்; மகிழ்கின்றோம்.

இந்நிலையில் 'விடுதலை' 'சுதேசமித்திரன்' ஆகிய நாளிதழ்கள் எழுத்துத் திருத்தத்தை விடாப்பிடியாகக் கொண்டொழுகி வெளியிட்டு வருவது வருந்தற்குரியது; தமிழ்மொழிக்குச் சீர்கேடு செய்வது; பழந்தமிழ் நூல்களோடு மக்கள் தொடர்பு கொள்ளாமல் மறைக்கும் இருள் திரையாகவுள்ளன வலியுறுத்திக் கூறுகின்றோம்.

ஆட்சிமொழி மாநாடு

நம் தமிழர்க்கு மிக நெருக்கடியான காலம் இது. நாம் நாடு மொழி இனம ஆகிய மூன்றையும் விடாமல் பாதுகாக்க வேண்டுவது இன்றிமை யாக் கடப்பாடாகும்.

சென்னைமாநிலததை ஒரு மொழியாகிய நம் தமிழ்மொழி கொணடு ஆட்சி செலுததுதல் வேண்டும அதனல நாடும மொழியும் இனமும மேம்பாடெய்தும. ஆகவே நாம உடனடியாக ஆட்சிமொழி மாநாடு நடத்தி நாட்டிடை அரசியல் முறை யாவும் தமிழ்மொழியிலேயே நடை பெறுவிததல வேண்டும.

நம மந்திரியவாகள் சென்னை நகரம தமிழர்க்கே உரிமையுடைத்தென மக்கள் மொழி அடிப்படையில பல கூட்டஙகளில் நன்கு வற்புறுததிக் கூறியுள்ளாாகள அதுவும இதில் மற்ருெரு பககத்தில் வெளியிட் டுள்ளோம்.

இவர்கள் இதுகாலை நமக்கு முதல் மந்திரியாக அமைந்திருப்பது, தமிழராகிய நமககு நற்பேறே. இவாகள் காலததிலேயே நம தமிழ் மொழியை ஆட்சிககுக கொண்டுவந்து அரசியல் நடத்துதலே நனறு; சிறப்புமாகும. ஆகலின, ஆநதிரா சென்னைநகா தமக்கு யாதோா உரிமை யின்றி இருந்தும் உரிமை கொணடாடிககொணடு 'மதராஸ் மனதே' என உரிமையாகக் கேட்பது, நாம செனனையை மட்டும உரிமையாகக் கொண்டு திருப்பதிப் பகுதிகளை விட்டுவிடுவோமெனற உட்கிடை கொணடேயாம நமக்கு எல்லையாகத தொனறுதொட்டுள்ளது திருவேஙக கடமே ஆகவே, நாம திருவேஙகடமவரை நமககுரிமை கொணடு போராடி வெற்றிகொள்ள முயல்வது நம் குறிககோள, கடமையென் பதை உணர்நது உடனடியாக இதனடியிற் கணடவாறு தீாமானஙகள் செயது முதலமைச்சரவாகட்கு (செயினட் ஜாாஜ் கோட்டை, செனனை) படி அனுப்புமாறு வேண்டுகிருேம் ஆட்சிமொழி மாநாட்டைப் பற்றிய விளக்கஙகளை இதில் முன் பக்கஙகளில வெளியிடப் பெற்றுள்ளது.

(௧) தமிழ்நாட்டை உடனே திருப்பதி வரையிலிருந்து தெறகே கன்னியாகுமரிவரை ஒன்றுகத் தனி நாடாக்கித் தாமே உடனடியாக முன்னின்று முடித்துத்தரும்படி சென்னை முதல் மநதிரியாா அவாகளை வற்புறுத்திக் கேட்டுக் கொள்கின்றேம்.

(௨) தமிழ்நாடு முழுவதும் உடனடியாகத் தமிழிலேயே ஆட்சி நடைபெறுமாறு ஏற்பாடு செய்யும்படி சென்னை முதல் மந்திரியாரவர்களை வற்புறுத்திக கேட்டுக் கொள்கின்றேம்.

(௩) வட வேங்கடத்திற் கூடத் தமக்குச் சிறிதும் உரிமை யில்லா திருந்தும் சென்னை நகரைத் தமக்கு உரிமை கொண்டாடிக் கிளாச்சி செய்தால் வட வேங்கடம் வரையிலும் தம் உரிமை யைத் தமிழ் மக்கள் கவனியாமல் சென்னை நகரளவில் நின்று விடுவாாகள் என்று கெட்ட எண்ணத்துடன் சூழ்ச்சி செயது ஆந்திரத் தலைவர்கள் செய்யும் பேராசைக் கிளர்சசியை இக் கூட்டம் வன்மையாகக் கண்டிக்கிறது.

## தமிழ்இசைச் சங்கக் கட்டிடத் திறப்பு

சென்னையில் தமிழிசைச் சங்கத்தின் புதுக்கட்டிடத் திறப்புவிழா 31-10-52 காலையில் நிகழ்வுற்றது

பல்லாண்டுகளாகத் தமிழ்இசை, இசையென்னும் பெயரால் இருந்ததே யன்றித் தமிழ்இசை இல்லாதிருந்தது. இசைவாணர்கள் தெலுங்கில் இயற்றிய தியாகராசய்யர் பாடல்களைப் பாடுவார்களே தவிர, தமிழ்ப் பாட்டு பாடுவதில்லை. அதில் அருவருப்புங்கொண்டிருந்தனர். இம் மாறுபட்ட கொள்கைகளை ஒழித்துக்கட்ட முன்வந்த பெரியார்கள் செட்டி நாட்டு வேந்தர் ராசா சா. அண்ணாமலை செட்டியார், வீரத்திரு. ஆர். கே. சண்முகஞ்செட்டியார் ஆகிய இருவருமே ஆவர். இவர்களின் குறிக்கோளினால் தமிழிசை உருப்பெற்று வளர்ச்சியடைந்து வருகின்றது.

அதற்கென இசைப்பெரு மன்றமும் 'எஸ்பிளனேட்' கோட்டை புகை வண்டி நிலையத்துக்கு அருகில் எழுரை இலட்ச ரூபா செலவில் கட்டப் பெற்றுக் குடி புகுதல் விழாவும் நிகழ்ந்துள்ளது பெருமகிழ்வுக் குரியதே. இம்மன்றத்துக்கு 'அண்ணாமலை மண்டபம்' என்ற பெயர் சூட்டியதும் பொருத்தமானதே.

இப்பெயர் கொண்டு விளங்கும் இம்மன்றம், தமிழிசையைத் தமிழ் நாடெங்கணுமன்றி கடல் கடந்தும் தன் இசைமையைப் பரப்பித் தமிழின் இசையைவளர்த்து நின்று நிலவுமாக.

## நாட்டுமொழியில் தந்தி

26-10-1952 இலங்கையின் நாட்டு (தேசீய) மொழிகளாகிய தமிழ் சிங்களம் இரண்டிலும் ஆட்சித்துறை அலுவல்கள் அனைத்தும் உடன் நடத்த துவங்கவேண்டும் என்பது தாய்நாடு தாயமொழிப் பற்றுடையார் எல்லாரும் வேற்றுமையின்றி ஒப்புக்கொள்ளும் நற்செய்தியாகும். இதன் அடிப்படை அறிகுறியே நேற்றுக் கொழும்பு, தந்தித்துறையில் '**தமிழிலும், சிங்களத்திலும்**' இனி எல்லாரும் தந்தி கொடுப்பதற்கு வாய்ப்பாகப் போஸ்ட் மாஸ்டர் செனரல் தபால் தகவல் துறை அமைச்சர் திரு. எஸ். நடேசனுக்கு ஒரு தமிழ்த் தந்தியைக் கொடுத்துள்ளார்.

பலவேறு தபால் நிலையங்களிலிருந்தும் பலவேறு மாந்தர் கொடுத்த தந்திகளும் பெற்று வெளியாயின.

**குறிப்பு** : வல்விரைவில் நம் தமிழகத்தின் ஆட்சிமொழியாக அருந்தமிழ் நிலைபெறவும் எல்லாத் துறையிலும் தமிழே திகழவும், தந்தியும் தமிழிலேயே வழங்கி வரவும் நேருமென எதிர்பார்க்கின்றோம். தமிழர்கள் அனைவரும் வீறுடன் விடாமுயற்சி செய்து வெற்றிகாண விழை

திருநெல்வேலித், தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.




லம்பு ௭ } திருவள்ளுவர் ஆண்டு ௧௯௮௩, கார்த்திகை
திசம்பர், 1952 { பரல் ௪

# கடவுள் உண்டா?

உலகம் அறிவுடை உயிா, அறிவில்லாதன என இரு பகுப்புக் கொண்டிலங்குகின்றது. அறிவென்பது, ஒன்றை இன்னதென உணர்நதுகொளளும் தன்மை. அஃதின்மையாவது ஏதும் அறியாது கிடக்கும் தன்மை

இவ்வறிவை ஓரறிவுயிர் முதல், ஆறறிவுயிர் வரை பகுத்தனா தமிழ்ச சான்றோா அது, மரஞ்செடி கொடி விலங்கு புட்களிலிருநது மககள வரை காணக்கிடககின்றது இதனைத் தொலகாபபியா,

* 'மாவும மாககளும ஐயறி வினவே'

என்றும்,

† 'மக்கள் தாமே ஆறறி வுயிரே'

என்றும், தாம் அருளிய தொல்காப்பிய மரபியல் நூற்பாவில் விளக்கிக் காட்டுவாராயினர் அவருக்குச் சிறிது பிற்பட்ட காலத்தவரான திருவள்ளுவப் பெருமான்,

‡ 'விலஙகொடு மக்கள் அனையா இலங்குநூல்
கற்றாரோ டேனை யவா'

என, வரையறுத்துரைப்பாராயினர்.

ஆகவே, அறிவே, மக்கட்கும் வேறு உயிரினங்கட்கும் வேறுபாட்டை உணர்த்தும் பெற்றியதாகும் என்பதொருதலை.

---

* † தொல். பொருள்: ௫௮௭-௮. ‡ திருககுறள்: ௪௧௦.

இவ்வறிவு கைவரப் பெற்றோரே உயர்ந்தோராவர். அஃதில்லாதோர் என்னுடைய ரேனும் இலரேயாவர். இவ்வறிவில் உயர்ந்தது தக்க இன்ன தகாதன இன்ன என்று அறிந்தொழுகும் பேரறிவு.

பறவைகள் விலங்குகள் நீரில் வாழ்வன ஊர்வன முதலியனவான எண்ணிறந்த உயிர்த் தொகைகள் இருக்கின்றன. அவை: இரை தேடுகின்றன; உண்கின்றன; உறங்குகின்றன, புணர்கின்றன, இனத்தைப் பெருக்குகின்றன, இறுதியில் இறந்துபடுகின்றன. மக்கள் இனமும் அவ்வாறே. ஆயினும் அவைகளினும் சிறிது மேம்பட்டவராக இயங்குகின்றனர். சில அரும் பெரும் வியத்தகு செயல்களையெல்லாம் செய்கின்றனர். இற்றைஞான்று அவர்தம் அறிவு, மிக விரிந்து நிற்கின்றது.

மனிதன், *மின்னாற்றலால் செயற்கருஞ் செயல்களையெல்லாம் செய்கின்றான். பல்லாயிரம் மைல்களுக்கு அப்பால் பேசுகின்ற பேச்சை வானொலி மூலம் கேட்கின்றோம், வானூர்தி கொண்டு மணிக்குப் பன்னூறு மைல் தொலை பறந்து செல்கின்றோம். இன்னும் எண்ணற்ற செயற்கருஞ் செயல்களையெல்லாம் செய்ய இயல்கின்றது.

தற்கால விஞ்ஞானிகள் அணுக்குண்டைப் படைக்கின்றனர், புகைவண்டி, வானூர்தி, வானொலிப்பெட்டி முதலியவற்றை ஆக்குகின்றனர்; இயங்கச் செய்கின்றனர்; இன்னும் எண்ணற்ற பலபல ஆற்றவொண்ணா அரியனவெல்லாம் செய்து காட்டுகின்றனர்; ஒரே குண்டினால் பல நகர்களை எண்ணற்ற உயிர்களையெல்லாம் அழிக்கின்ற ஆற்றலும் பெற்றவராக இருக்கின்றனர்.

ஆனால், மனித உருவை, விலங்கு வடிவத்தை, மரத்தை, புல்லை, கல்லை, மண்ணைச் செயற்கை முறையில் தம் கை வன்மை
ன தன்மையினால்—படைக்க முடிய
வில்லை. இளமையை நிலைத்திருக்கச் செய்ய
முதுமையை வாராது தடுக்க ஒண்ணவில்லை; இறப்பை
முடியவில்லை; பிறப்பை நிறுத்தக் காணவில்லை; மறப்பை இல்லாதாக்க இயலவில்லை; பசியை வாராமல் தடுக்க இசையவில்லை; நோய் வருகின்றது; மூப்பு வருகின்றது; நரை பெருகுகின்றது; செந்நீர் ஓட்டம் அருகுகின்றது; திரை நெருங்குகின்றது; மரணம் பழுக்கின்றது; இவைகள் வாராது தடுக்க எத்தனையோ வழிகள் கண்டுபிடிக்கப்படுகின்றன. அவைகளையெல்லாம் நழுவிக் கொண்டு சென்று அவ்ளையறியாது மூப்புப்பிணி முதலியன ஒன்றன்பின் ஒன்றாக அலைகள் போல் போதருகின்றன.

* Electricity.

இவைகள் 'ஏன் இப்படி வருகின்றன? ஏன் பிறக்கின்றோம்? ஏன் இறக்கின்றோம? ஏன் வளாகின்றோம்? ஏன் தேய்கின்றோம்? நம் இளமை எங்கே? ஏன் முதுமை வந்தது? 'அவ்விளமை யாண்டுண்டு கொலலோ? ஏன் ஒன்றொன்று ஒருவழி நில்லாது செல்கின்றது?' என்று எண்ணிக்கொண்டே சென்றால் உண்மை புலனும. இவ்வாறு எண்ணி அளந்து அறிவதே பகுத்தறி வாகும்.

பகுததறிவென்பது, ஒவ்வொன்றையும் நன்கு அலசிப் பார்த்து ஆராய்நதறிவது. அவ்வறிவை ஊட்டுவதே கல்வியறிவு. இவ்வாறு ஒவவொன்றையும் ஆராய்ந்துகொண்டே போனால் உலகியல் உணமைநெறி புலப்படும.

இதனை இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர் இருந்த விளமபிநாகனா என்னும புலவர் பெருமான் கூர்த்தறிந்து உண்மையை உணர்தது வாராயினா.

*'கற்பக கழிமடம் அஃகும்; மடம அஃகப்
புற்கமதீா் திவ்வுலகின கோளுணரும், கோளுணாந்தால்
தத்துவ மான நெறிபடரும், அந்நெறி
இப்பால் உலகந் திசைநிறீஇ உப்பால
உயாந்த உலகம புகும.'

என்பதில், 'கற்றால் அறியாமை குறையும்; அது குறைநதால், இவவுலகின் தனமையை அறிவான்; இவ்வுலகின் கீழ்நிலையை அறிந்தால் அவன் உண்மை கண்டு தெளியும வழியில நடப் பான், அதிற் சென்றால, இவ்வுலகில் தன் பெயரை நிலைநிறுத்தி, அபபால வீட்டு நெறியை அடைவான்' என்று விளககமாகக கோவைபபடுத்திக கட்டுரைக்கின்றார்

தத்துவ நெறியென்பதென்னை? அஃதே உண்மையுணர்வு! உண்மையுணர்வு! அந்நெறியே மக்களாய்ப பிறந்தோர் ஒவ வொருவரும் அடையவேண்டும பெரும் பேறாகும. அந்நெறியே கடவுள் நெறி; கடடற்ற செந்நெறி, சிறப்பு நெறி. இந்நெறி யையே, 'தலைவா உன்னை வேண்டிக் கொள்வேன் தவநெறியே' என்றருளினார், நம சமயகுரவர் சுந்தரர்..

இங்கே பிறர் கேட்கலாம். "கடவுள் என ஒன்றுண்டா? இவ்வுலகை ஆக்கற்கும் அழித்தற்கும் ஒன்றும் வேண்டுவதில்லை. இயற்கையாக ஐம்பூதச் சேர்க்கையால் உலக உயிர்களும் பிறவும் தோன்றுகின்றன. வெற்றிலையும் பாக்கும் சுண்ணும்பும் ஒன்று சேர்ந்தவழி செந்நிறமாவதுபோல, நீரும் நிலனும சேர்ந் தால் நெல் பயிர் வளர்வதுபோல உலக உயிர்கள் உண்டா

கின்றன. ஆண் பெண் கூட்டுறவால் மகவு உருவாகின்றது. இதற்கெல்லாம் கடவுளென ஒன்று எற்றுக்கு? எல்லாம தான் தானுய்க் கலந்து உண்டாகின்றன,'' என்று இறைவ ஞான்று பலர் மொழிகின்றனர்; சொற்பொழிவு செய்கின்றனர்; எழுது கின்றனர். ஐயகோ! இவர்தம் அறியாமை குறித்து இரங்கு கின்றேம்! எதனையும நுணுகி ஆய்ந்தால்தான் உண்மை புலனாகும். நுனிப்புல் மேய்ந்ததுபோல் மேல் எழுந்தவாரியாக ஆய்ந்தால் புலனாகாது, மலரை விரும்பி அதன் மென்மை யிலும் கவர்ச்சியிலும் வண்ணத்திலும மணத்திலும நுண்மை கண்டு உண்மையறிய விழைவானொருவன், அதற்கு ஊறு நேரா வண்ணம் இயற்கையோடு வைதது அதன் மணத்தையும் பிறவற் றையும் காணல்வேண்டும். அங்ஙனமின்றி, அதனைக் கசக்கி முகர்ந்தாலோ பார்ததாலோ என்ன தெரியும்? ஒன்றுமற்ற நிறமற்றும் சிதைந்துபோன தன்மையுமே வெளிப்படும். அது போல் இறையின் நிலையை, கந்தழியாம கடவுள் நிலையைக் காண விழையின் அதன் செந்நெறி வழியே சென்று சார்புணர்ந்து சார்புகெட ஒழுகினால் அஃது உணர்வுக்கு உணர்வாகத தோன் றும். பருப பொருட்டாக நோக்கினால், உலக நிலை மட்டுமதான் தோன்றும். இது அந்நிலை கண்டுணர்ந்த மெய்ஞ்ஞானச் செலவர் கண்ட உண்மை.

இவ் வியத்தகு சததியை—பேராற்றலைக் கடவுள் என்றனர்; இயவுள் என்றனர்; முருகு என்றனா; ஒளி என்றனர்; பிற பிறவாறெல்லாம் பெயா கொடுதது விளிப்பாராயினர். வழுத துவாராயினர், போற்றுவாராயினா.

உலகில் இதுகாலை யாவர்க்கும் பயனாக இலங்கும் மின்னாற் றலை யெடுத்துககொள்வோம். நமககு என்னென்ன வழிகளில பயன் தருகின்றது. எண்ணற்ற ஆலைகளை இயக்குகின்றது! பொறி வண்டிகளை ஓடச் செய்கின்றது! வானொலியாக வநது பேசுகின்றது; விளக்காக எரிகின்றது! விசிறியாக வீசுகின் றது! நீரை இறைததுத் தருகின்றது! பலவகை நோய்களைக் குணப்படுத்துகின்றது! இன்னும் நமக்கு எத்தனையோ வழி களில் பயன் பல தருகின்றது! இப்படிப்பட்ட பொருளின் உருவம் இன்னதெனக் கண்ணாற் காண்டற்கில்லை; காதாற் கேட்க முடியவில்லை; மூக்கால் முகரக் கூடவில்லை; நாவால் சுவைக்க இயலவில்லை; மெய்யால் தொட இசையவில்லை; ஆனால், ஏதோ ஓர் பொருள் இருக்கின்றதென்பதுமட்டும் நன்கு தெரிகின்றது. மேற்கூறியவற்றை யெல்லாம், நம்மால் இயல் வன இயலாதனவற்றை யெல்லாம் ஒருங்கே செய்கின்றது! என்னே வியப்பு! என்னே பெருமை!

அதற்கு வடிவமில்லாததால் இல்லையெனச் சொல்வதா? நிறமில்லாததால இன்றென விளம்புவதா? கண் காது முதலிய உறுப்புக்கள் இல்லாததால் அன்றென அறைவதா? கண்ணுக்குப் புலப்படாததால் இல்லையெனக் கரைவதா? ஆகலான், இதுபோன்ற ஓர் பெரிய மின்னொளி—அறிவெல்லையைக் கடந்த ஆற்றல்—எல்லாமாய் அல்லதுமாய் இருக்கும் பொருள்—உண்டெனக் கொள்ளலா மன்றே? நாத்திகம் பேசி நாத்தழும் பேறுவதாற் பயன் என்னை?

*'அன்றே என்றன் ஆவியும் உடலும் உடைமை எல்லாமும்
குன்றே அனையாய்என்னை ஆட்கொண்டபோதே கொண்டிலையோ'

என்று கதறி இறைபால் அடைந்த மணிமொழிப் பெருமான் அறியாதவரா?

†'தோடுடைய செவியன்விடை யேறியோர் தூவெண் மதிசூடிக்
காடுடைய சுடலைப்பொடி பூசிஎன் உள்ளங் கவர் கள்வன்'

என்று ஆண்டவன் உண்மைநிலை கண்டுணர்ந்த திருஞானசம் பந்தர் தெரியாதவரா?

‡'நாமார்க்கும் குடியல்லோம் நமனை யஞ்சோம்
நரகத்தில் இடர்ப்படோம் நடலையில்லோம்'

என்று மொழிந்த இறைபணி பூண்ட நாவுக்கிறை உணராதவரா?

§'பொன்னும் மெய்ப்பொருளும் தருவானைப்
போகமும் திருவும் புணர்ப்பானை'

என்று வ(

$'எத்தனை நாட் பிரிந்திருக்கேன் என்னாரூர் இறைவனையே'

என்று ஆண்டவன் திருவடி பிடித்த சுந்தரர் என்ன படியாதவரா?

¶'என்னையும் கண்டேன் நின்னையும் கண்டேன்
நின்பெருந் தன்மையும் கண்டேன் என்னே
நின்னைக் காணா மாந்தர்
தன்னையும் காணாத் தன்மை யோரே.'

என்று பாரனைத்தும் பொய்யெனக் கண்டு அகப்புறப் பற்றைக் களைந்து துறந்த பட்டினத்தார் என்ன உணராதவரா?

* திருவாசகம் குழைத்த: எ.　　† திருஞானசம்: தேவாரம். க.
‡ திருநாவுக்கரசு தேவாரம்.　　§ சுந்தரர் தேவாரம் பதிகம் ருக: க.
$ சுந்தரர் தேவாரம் பதிகம் ருக: க.　　¶ பட்டினத்தார், பிர:

* 'வேதநூற் பிராயம் நூறு மனிதர்தாம் புகுவரேனும்

ஆதலால் பிறவி வேண்டேன் அரங்கமா நகருள்ளானே'

என்று ஆண்டவன் பற்றை அமைத்த தொண்டரடிப்பொடி ஆழ்வார் என்ன காணுதவரா?

† 'துஞ்சுமபோ தழைமின் துயர்வரில் நினைமின்
துயரிலீர் சொல்லினும் நன்றும
நஞ்சுதான கண்டீர் நம்முடை வினைககு
நாராயணு வென்னும் நாமம.'

என்று இறை திருவருளை நாடிய திருமங்கை யாழ்வார் தெரியாதவரா?

இவர்கள்போன்ற எண்ணற்ற பெரியார்கள் பற்பல சமயக் கணக்காகளெல்லாம் தெய்வமென ஒன்றுண்டென்றே நிலைநாட்டிச் சென்றனா. அவர்தம் வழியினரான நாம் அந்நெறியிற் செல்ல வேண்டாவா? கருமபிருக்க இரும்பு கடித்தெய்பபதா? கனியிருப்பக் காய் கவர்வதா? உமிக் குற்றிக் கை நோவதா? பனியை நமபி ஏர் பூட்டுவதா? உலக வாழ்வு நிலையற்றதென் பதை உணர்மின் இளமை நிலையில்லாதது; உடல் நிலைத்திராது; செல்வம் என்றும் இருககாது; கண்ணிற் காண்பன வெல்லாம் நீரிற குமிழிபோல் தோன்றி மறையுந் தன்மையனவே.

‡ 'ஊரும் சதமல்ல உற்றூர் சதமல்ல உற்றுப்பெற்ற
பேரும் சதமல்ல பெண்டிர் சதமல்ல பிள்ளைகளும்
சீரும சதமல்ல செலவம் சதமல்ல தேசத்திலே
யாரும் சதமல்ல நின்தாள் சதம கச்சி யேகம்பனே.'

என்னும் பட்டினத்தடிகளாரின் பண்பட்ட மொழியை ஓருங்கள். 'ஒன்றே குலனும் ஒருவனே தேவனும்' என்று அறிமின். 'கண்டதே காட்சி, கொண்டதே கோலம்,' என்று திரியாதீர். இறைவன் திருவடி அடைமின்! வாழ்ததுமின்! வணங்குமின்! ஏத்துமின்! இறைஞ்சுமின்!

அவன் அருள்வழி நின்றால்,

அவன் கனியினும் இனியன்; கட்டிபட்ட கரும்பினும் இனியன்; பனிமலர்க் குழல் பாவை நல்லாரினும் இனியன்; தனிமுடி கவித்தாளும் அரசினும் இனியன் என்பதை அறிமின்! உணர்மின்! அவனை எங்கே காண்பது என வினவுதிரேல்,

*† திருவாய்மொழி: அஎச, கடுஎ.
‡ பட்டினத்தார் பாடல்:

இதோ! அவன் நீராகக் காட்சி யளிக்கின்றான்; குளிர்கின்றான்! இதோ! நெருப்பாகச் சூரியன் உருவமாகத் தோன்றி நிற்கின்றான்; சுடுகின்றான்! இதோ! நிலனாக நிலைத்து நிற்கின்றான்; நம்மையும் நம்போன்ற பலவகை உயிர்களையும் தாங்கிக் கொண்டு இருக்கின்றான்! இதோ! தண்ணிலவாகத் தோற்ற முறுகின்றான்; உலகப் பெருவிளக்காக மேல் நின்று இருளை ஓட்டுகின்றான்! இதோ! காற்றாகத் திரிகின்றான், எம் முன் ஓடித் திரிகின்றான்! இதோ! விண்ணாக விரிந்து நிற்கின்றான்; வைரக் கற்போல் வானிடமெல்லாம் விண்மீனாக மலர்ந்து மின்னுகின்றான்! இதோ! எம் உயிர்க் குயிராய் உயிருடன் ஒன்றாகக் கலந்து எம் உயிரையும் உடலையும் இயக்கி உயிராக—உணர்வாக நிற்கின்றான்! ஆ! அவன்றன் பேராற்றல் என்னே! வியத்தகு காட்சி என்னே! என்னே! என்று ஏமாக்குகின்றேன்!

இத்தகைய வியத்தகு பொருளை, இறையை, இயவுளை, முருகை, மாலை, கடவுளென்பேம்! காற்றென்பேம்! ஒளி என்பேம்! இருளென்பேம்! பொருளென்பேம்! ஒன்றென்பேம்! பலவென்பேம்! இன்றென்பேம்! உண்டென்பேம்! அன்றென்பேம்! என்ன கூறினும், அன்ன தன்மைத்தாய் நின்று உலகை இயக்கும் எம் திணைத்திணைப் பொழுதும் மறவாது வாழ்த்துவோம் வம்மின்! வம்மின்! எம் தமிழ்ப் பெருமக்களே! நன்மக்களே! வம்மின்!

மண்ணே கல்லே என்று இறை திருவுருவை இகழ்ந்து பேசி மண்ணாய்க் கல்லாய்ப் போவார் வழிச் செல்லன்மின்! நன் மொழியால் இறை இயற்கைகளை எடுத்தியம்பி உண்மை நெறியில் ஈர்த்துச் செலலும் நல்லார் வழிப் படர்மின்! அதுவே நல்வழி! உய்யும் நெறி; உயரும் முறையென்பதை உணர்மின்! உலக நூல் ஓதுவதெல்லாம் கலகல கூஉந் துணையே, தடுமாற்றம் கொண்டு போந் துணைக்காகா.

*'கற்றதனால் ஆய பயன்என்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்'

என்னும் வள்ளுவர் வாய்மையைக் கடைப்பிடிமின்!

கடவுளைக் குறித்துச் சமயக்கணக்கர் பலரும், தத்தம் குறிக் கோள்கட் கேற்ப வெவ்வேறு உருவமைத்து வழிபடலாயினர். சைவ சமயத்தாராகிய யாம் சிவபெருமானென ஓருருவமைத்து, அவன் தலையில் கங்கையும் திங்களும் பாம்பும் கொன்றையும் அணிந்து பெண்ணொரு பாகமும் கொண்டிருக்கின்றான்

என்று குறியீடு செய்து வழிபடுகின்றோம்,' வைணவர் திருமாலென ஓர் உருவமைத்து அவன் பாற்கடலில் பாம்பு மெத்தையில் அறிதுயில் கொண்டிருக்கின்றானென்றும் அவன் மார்பில் திருமகள் வாழ்கின்றாளென்றும் அவன் பத்துப் பிறப்பு பிறந்துள்ளானென்றும் குறியீடு செய்து வழிபடுகின்றனர்; சமணம் புத்தம் முதலிய சமயங்களும், பிற்காலத்தில் தோன்றிய இஸ்லாம், கிறித்துவம் முதலிய சமயங்களும் குறியீடு செய்தும், குறியீடு செய்யாது மத குருமார்களையே தெய்வத்தோடொப்ப வைத்து வணங்கியும் வழிபாடு செய்துவருகின்றன.

எவ்வெவ்வாறு உருவமைத்து வணங்கினும் இறைவன் ஒருவன் என்பதே முடிபு. இதன் இயல்பை சைவ சித்தாந்த உண்மை நூல்கள் விளக்கமாகவும், நுணுக்கமாவும் விளக்குகின்றன. அவைகள் கதை கட்டவில்லை; எந்த மாறுபாட்டையும் கூறவில்லை; கடவுள் உயிர் உலகம் என்னும் மூன்றைப்பற்றி ஆய்ந்து முடிபு கூறுகின்றன. இதனை வடமொழியாளர் பதி பசு பாசம் என்ப பதி யார்? பசு யார? பாசம் என்பதென்ன? என்று நாம் அந் நூல் வழியே சென்று காண்போமானால் இறையை எளிதில் காண இயலும்; அதற்கு இதுவே காலம்.

* 'காலமுண் டாகவே காதல்செய் துய்ம்மின் கருதரிய
ஞாலமுண் டானொடு நான்முக னுஞ்சொல்ல வல்லனல்லன்
ஆலமுண் டானெங்கள் பாண்டிப் பிரான்தன் அடியவர்க்கு
மூலபண் டாரம் வழங்குகின் றான்வந்து முந்துமினே.'

என்னும் மணிமொழிப் பெருமான் திருவாசக மொழியை ஒரு வாசகமாக உணர்ந்து அதன்வழி நின்றொழுகி உயர்வு பெறுவோமாக

ஓம் சிவம்.

* திருவாசகம், திருப்பாண்டிப் பதிகம் : ௫.

# தமிழ் நெடுங்கணக்கு - பெயரும் எண்ணும்

[இராவ்சாகிப், சைவப்புலவர்
டாக்டர். தி. இரா. அண்ணாமலைப் பிள்ளை
L.C.P.S., L M.S S.A. Lond (திருக்குற்றாலம், தென்காசி)]

(செந்தமிழ்ச்செல்வி—சிலம்பு உஎ; பரல் க; ௲0-ம பக்கத்தொடர்ச்சி.)

## உலக மக்கள் அனைவரும் ஓரினம்

மக்கள் அளவிற்கு அடங்காத இப்பேரண்டம் ளால் இயற்றப்பட்டு, என்றும் தவறாத ஒரு நியதியில் வருகின்றது. அதைக் கூர்ந்து நோக்கும்பொழுதே, ஓரின மாய்ப் படைத்த மக்களே இவவுலகிற் பல சிற்றினங்களாய்ப் பிரிந்துள்ளார் என்பது ஊகிக்கப்படும். யாங்காணும் பொருள் உலகம எல்லாம் சொல்லுலகத்தினும், சொல்லுலகம் மூல ஓசை ஒன்றினும் அடங்கும. இம் மூல ஓசை ஆண்டவனது திருச் சிலம்போசையினின்றே கிளமபி விரிநதிருததல் வேண்டு மென்பது சித்தர்கள கண்ட உண்மையாகும. இக்கருத்தையே, மணிவாசகப் பெருமானார், "வாத ஊரினில் வநதினி தருளிப் பாதச் சிலமபொலி காட்டிய பண்பும," என்று குறித்தனர் போலும்.

## உலகில் நிலவும் பன்மொழிகள்

இன்று, உலகில் நிலவும் மொழிகள் நூற்றுக்கணக்காயின. மக்கள எல்லாம் ஓரினமாயின், அவர்கள் பேசும் பன்மொழி களும், ஓரினததிலே தோன்றி, பின்னர், நாட்டின் வெப்பதட்பம், தொழில், உணவு, வாழ்க்கை முதலிய பல ஏதுக்களால் பல மொழிகளாய் மாறுபட்டிருக்கலாம் என்பது மொழி ஆராய்ச்சி யாளரில் ஒரு பகுதியார் கூறும் கூற்று. இஃது ஆழ்ந்து சிந்திக்க வேண்டிய பொருளேயாகும். ஆகவே, உலகில் நிலவும் மொழி களுக்கெல்லாம் மூல மொழிகளாகக் கருதப்படும ஒரு சில மொழிகளைப் பொறுக்கியெடுத்து அவைகளில் ஏதாவது ஒற் றுமை காணப்படுகின்றனவா என்பதை ஆராய்வது பொருத்தமே.

**தமிழ, இலத்தீன, சமசகிருதம்**

நமது இந்தியா நாட்டில் நிலவும் மொழிகளில், தென்பாகத்தில் வழங்கப்படும திராவிடமொழிகளில், தமிழ் முதன்மையானதாக டாக்டர் கால்டுவெல், டாக்டர் போப் முதலிய பேரறிஞர்களால் உறுதிப்படுத்தப் பட்டுள்ளது. வடநாட்டில் சமக்கிருதமும், மேனுட்டில் (Europe) இலத்தின் (Latin) மொழியும அடிப்படையாய் நிற்கின்றன வென்று ஆராய்ச்சியாளா கருதுகின்றனர். இலத்தீனுக்கும், கிரேக்க மொழிக்கும் ஆங்கிலத்துககும் மற்றும மேனுட்டு மொழிகளுக்கும நெருங்கிய தொடர்பு உண்டென்பது மறுக்க முடியாத உண்மை ஆகவே, தமிழ், இலத்தீன், சமக்கிருதம், இவைகளுககுள் ஏதாவது ஒற்றுமை காணபபடுகின்றனவா வென்பதை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## இலத்தீனுக்கும் தமிழுக்கு முள்ள தொடர்பு

**இலத்தீன் மொழி வரலாறு**

இலத்தீன் மொழி, ஆரியம் அல்லது இந்திய-ஐரோப்பிய (Indo-European) குடும்பத்தைச் சேர்நதது. உரோமாபுரி அரசாட்சி மிக உன்னத நிலையிலிருநதபொழுது, அது மேற்கு ஐரோப்பிய மொழிகள (Italıan, French, Spaniah, Portuguese) எல்லாவற்றிலும கலந்து உலவ வாய்ப்பு இருந்தது. கி மு. 800-க்கு முன்னரேயே, இலத்தீன் மொழிக்கும கிரேக்கர் நாகரிகததுக்கும் நெருங்கிய தொடர்பு ஏற்பட்டிருந்து வந்தது பண்டைக்காலத்து உரோமாபுரி மக்கள், இத்தாலியா, நாட்டில், இலாட்டியம் (Latıum) என்னும் வட்டத்தில் குடியிருந்து வந்ததால் அவாகள் பேசிய மொழிக்கும் இலத்தீன் (Latin) என்னும் பெயர் வழங்கிற்று.

**இலத்தீன் மொழி இலக்கணம்**

இலத்தீனில், தமிழிலக்கணத்தைப் போல ஏழு வேற்றுமையில்லை; ஆறே வேற்றுமை தான். இந்த ஆறு வேற்றுமைகளில் ஒன்று "Genitive Case" என்று கூறப்படும். தமிழ் இலக்கணத்தில், ஆறும் வேற்றுமையைத் தான் இலத்தீனில் 'Genıtive' என்றழைப்பர். சான்று :— எனது (கை) அல்லது என்னுடைய (கை)—தமிழ் ஆறும் வேற்றுமை Mensa (Table) Genitive Plural of Mensa ls MENSARUM இதுதான் Genitive Case.

மேசைக்கு ‘Mensa’ என்று பெயர், “மேசைகளினுடைய” என்னும் பொருளைக்குறிப்பது “Mensarum” (Genitive Plural), ஆகவே “Mensarum” என்னும் சொல்லிலிருந்து ‘Rum, என்னும உருபை நீக்கினால் அது ‘Mensa’ ஆகிறது. ‘Mensa’ என்னும் இந்த வேர் (Stem) ‘A’ என்னும் ஓசையில் முடிகிறது, இதை ‘A’ (First Declension) என்று கூறுவர். இங்ஙனமே இலத்தீன் மொழியில் ஐந்து விதமான பிரிவுகள் (Declension) உள்ளன. இலத்தீன் மொழியிலுள்ள எல்லாப் பெயர்ச் சொற்களும ஐந்து விதமாய்ப் பிரிக்கப்படுகின்றன, அவை யாவன

| 1 | 2 | 3 | 4 | 5 |
|---|---|---|---|---|
| A | O | I | U | E |
| அ | ஒ | இ | உ | எ |

குறிப்பு I என்பது ‘இ’ என்றும ‘E’ என்பது ‘எ’ என்றும் இலத்தினில் உச்சரிக்கப்படும் இங்குத்தான், கூர்நது நோக்கவேண்டிய இடமாகும். மேற் காட்டிய, ‘அ’, ‘ஒ’, ‘இ’, ‘உ’, ‘எ’, என்னும் ஐந்து பிரிவுகளுக்குரிய ஐந்து ஓசைகள் தான், தமிழ் மொழியிலும் ஐந்து குறில்....உயிரெழுந்துக்களாக ஒத்திருப்பது மிகவும் வியக்கத்தககதாகும் இத்தகைய, வேறு சில ஒற்றுமைகளும உளவாகும். பின்னா விவரிக்கப்படும. இது நிற்க

## தமிழுககும் சமககிருதத்துக்கும் உள்ள தொடர்பு

இன்று நிலவும ஆரிய (Indo--European) மொழிகளில். தலைசிறந்தது இலததீனும சமக்கிருதமுமாம், சமக்கிருதத்தைத் தமிழ் இலக்கணங்களில் ‘வடமொழி’ என்றழைப்பர்; நன்றாய்ச் சமைக்கபபட்டதால் ‘சமககிருதம்’ (Samskrit or Sanskrit) என்று பெயர்பெற்றதாகக கூறப்படுகிறது. அஃது எங்ஙனமாயினும் ஆகுக, சமக்கிருதத்துக்கும் இலத்தீனுக்கும், அநேக ஒற்றுமைகள் உண்டென்பது மொழி ஆராய்ச்சியாளர் உரைக்கும் கூற்றாகும்.

தமிழுக்கும் சமக்கிருதத்துக்கும் ஏதாவது ஒற்றுமை விளங்குகின்றதா வென்பதை, உற்று ஆழ்ந்து ஆராய்வோம்.

உயிர் எழுத்துக்கள்: தமிழ் நெடுங்கணக்கில் உயிரெழுத்துக்கள் பன்னிரண்டு (குறில் ஐநதும் நெடில் ஏழும்) சமககிருத எழுததுக்களில், உயிா (அச்செழுத்து) பதினாறு. தமிழ் உயிரெழுத்துக்களில உள்ள எகரமும் ஒகரமும் சமக்கிருதத்தில் இல்லை, ஆனால் அம், அஹ என்னும் இரண்டெழுத்துக்களும்

'ஞு, ஞூ ரு, ரூ' என்னும் நான்கெழுத்துக்களும் அதிகமா யுள்ளன $(12-2+6)=16$. தமிழ் நூல்களில் அகம், புறம என்று பிரிப்பது மரபு (உ—ம்) அகத்திணையியல், புறத்திணை யியல்; அகப்பொருள—புறப்பொருள்; அகநானூறு, புற நானூறு. இதே மாதிரியே சமக்கிருத எழுத்துக்களில், 'அகம் என்பதை இரண்டு ஓசையாகப் பிரித்து 'அம்', 'அஹ' என்று வருவது நோக்கத்தக்கது.

மெய்யெழுத்துக்கள்: தமிழில் மெய்—18 சமக்கிருதத்தில —35 தமிழில மெய்யெழுத்துக்களில் முதலில் நிற்பது—'க' அதற்கு இன எழுத்து 'ங'

'க' என்னும் எழுத்து ஒன்றுயிருந்தாலும, அது முன், பின் வரும் எழுத்துக்களுக்குத் தககவாறு பல ஓசைகளைத தரும். 'அக்கம' என்னும சொல்லிலும் 'அங்கம்' என்னும சொல்லிலும், மூன்றுவது எழுத்து 'க' என்னும் எழுததே யாகும். ஆனால், அதை உயிர்ப்பிககும்பொழுது (உச்சரித்தல்) 'அக்கம' என்னும் சொல்லிலுள்ள 'க' என்னும எழுத்து 'KK' என்னும் ஓசையையும், 'அஙகம்' என்னும் சொலலிலுளள 'க', 'GH' என்னும் ஓசையையும தருவது வெளிபபடை. இனி "இலங்கு வெண்பிறை ரசனடி யாாகரு, கலஙங்கு நெஞ்சமிலை காண்" என்னும அருட்பாவில் வரும் 'இலஙங்கு' 'கலஙங்கு' எனனும் சொற்களில் வரும 'கு' என்னும எழுத்தின் உச்சரிப்பு, 'அங்கும்' என்னும் சொலலிலுள்ள 'கு' உச்சரிப்பைபபோலலல 'இலங்கு' என்னும் சொல்லில் வரும், ககர உசசரிப்பு, 'அங்கம்' என்பதிலுள்ள ககரத்தினும் மெனமையானது. 'அங்ஙனம்' என் னும் சொல்லிலுள்ள 'ங' என்னும் எழுததின் உச்சரிப்பு 'இலங்கு' என்னும் சொல்லிலுள்ள ககரத்தினும், அதிக மென மையானது. ஆகவே க—ங என்னும இனவெழுததுக்கள ஐந்துவிதமாய் உச்சரிக்கப்படும. அவை பின்வருமாறு.—

கந்தன்—அக்கம்—அங்கம்—இலங்கு—அங்ஙனம்
k — kk — gh — ggh — ngh

மேற்காட்டிய ஐந்து ஓசையுமே சமக்கிருதத்தில் க வருக்கம் என்று சொல்லபபடுகிறது. இங்ஙனமே, மற்றைய வருக்கங்களை யும் கண்டுகொள்க க—வருக்கம்; ச—வருக்கம்; ட—வருக்

எழுத்தோசைகள்—ஆக $5\times5=25$. ஆய்தவெழுத்து தமிழில் தனியெழுத்து. அதுதான் ஃ; முப்பாற்புள்ளி என்றும் ஒரு சிலர் கூறுவர். அதே ஓசைதான் சமக்கிருததகில் 'ஹ' என் னும் எழுத்தால் குறிக்கப்படுகிறது. ய, ர, ல, வ, ள என்னும்

எழுத்தோசைகள் இருமொழிக்கும் பொதுவாகும். இனி சகர உச்சரிப்பில், வேறுபாடுள்ள நான்கு எழுத்துக்கள் ச (sa), ஷ (sha), ஸ (Issa), க்ஷ (ksha) வடமொழியில் தனி எழுத்துக்களாயுள்ளன. இவை நான்கும், தமிழில் கூட்டெழுத்துக்களால உச்சரிக்க இயலும். ஆகவே,

| | | |
|---|---|---|
| க—ங | (க—வருக்கம்—5) | 25 |
| ச—ஞ | (ச—வருக்கம்—5) | |
| ட—ண | (ட—வருக்கம்—5) | |
| த—ந | (த—வருக்கம்—5) | |
| ப—ம | (ப—வருக்கம்—5) | |
| ஃ—ஹ | | 1 |
| ய, ர, ல, வ, ள | (பொது எழுத்துக்கள்) | 5 |
| ச, ஷ, ஸ, க்ஷ | (கூட்டெழுத்துக்கள்) | 4 |
| ஆக வடமொழியில் எழுத்துக்கள் | | 35 |

வடமொழியில் 37 மெய்யெழுத்துக்களென்று கூறுவாருமுளர், ஆனால் பொதுவாய் 35 மெய்களே, சமக்கிருதத்தில வழங்கப்படுகின்றனவென்று சமக்கிருதப் புலவர்கள் பலர் கூறுகின்றனர். இங்ஙனமாகத் தமிழுக்கும் சமக்கிருதத்திற்கும் தம்தம் நெடுங் கணக்கிற் காணப்படும ஒருவித ஒற்றுமை இங்கு சுட்டப்பட்டுள்ளது

உலகில் நிலவும் பலமொழிகளுக்கும் உள்ள ஒற்றுமைகளை ஆராய்ந்து அவைகளுக்குள்ள தொடர்பை உறுதிப்படுத்துவோமாயின், உலக சமாதானத்துக்கே அஃது உறு துணையாயிருக்குமென்ற ஒரே நோக்கத்தில் இச்சிற்றுரை எழுதப்பட்டுள்ளது. வேற்றுமைகளை அகற்றி, ஒற்றுமைகளை உறுதிப்படுத்தி ஒழுகுவோமாக. உண்மை ஓங்குக.

---

## மணிமேகலை

இஃது ஐம்பெருங்காப்பியங்களில் ஒன்று 'சொன்னலங்கனிந்து சுவையுடன் திகழ்வது இதிற் கூறப்படும அறவுரைகள் மககட்கு எக்காலத்தும் பொருந்தும் ஒழுக்கமாகும் இதில்,

'பிறந்தோர் உறுவது பெருகிய துன்பம்
பிறவார் உறுவது பெரும்பேர் இன்பம்
பற்றின் வருவது முன்னது, பின்னது
அற்றோர் உறுவது அறிக'

என்பது, பிறப்பின வெற்றியையும், அதனால் வரும் இன்னல்களையும் கண்ணாடிபோல் காட்டுகின்றது. —சேல்லூர்க்கிழார்

# ஓநாயின் சாவு

[திரு. முதுகண்ணன்]

எழுகின்ற நிலவினிலே மேகக் கூட்டம்
எரிதழலில் தவழ்ந்தோடும் புகைபோற் செல்லும்
நிழல்செறியும் தழைமரங்கள் அடர்ந்த காட்டில்
நெடுவானம் வரையோங்கும் இருளின் வீககம்!
எழுமொலிகள் ஏதொன்றும் தோன்றா வண்ணம்
எடுத்தடிகள் பெயர்த்துமெல்லச் சென்றேன் ஆங்கே
வழியொன்றும் காணாத வெளியில் எங்கும்
வளர்ந்தடர்ந்த பெரும்புதர்கள் நிரம்பக் கண்டேன்.

செடிகொடிகள் மிடைந்தபுதர் விலக்கிக் கொண்டே
செல்வழியில் விழிதாவ நடக்கும் போது
கொடுநகத்தின் பதிவுகளைக் கண்டேன், நின்றேன்,
கூர்ந்தந்த நகக்குறியின் போக்கா ராய்ந்தேன்,
விடுமூச்சின் ஒலியுமவண் எழாத வண்ணம்
வேட்டைக்காங் கருவிகளை ஒழுங்கு செய்தேன்;
அடிமேலோர் அடிவைத்துப் படர்ந்தேன், அக்கால்
அசைவில்லை காடெங்கும் அமைதி கண்டேன்.

விரிஆலின் படர்கிளைகள் பாறை தூங்கும்
விழுதூன்றும் அடிமரத்தில் வெள்ளிக் காசை
நிரைத்திறைத்தார் போலிலையின் சந்தில் வான
நிலவொளி காட்சிதரும்! எமமுன் வேட்டைப்
பெரும்பழக்கம் உடையவொரு முதியோன் கூர்ந்து
பெயர்ந்துசெலும் நககுறியைத் தேர்ந்தா ராய்ந்தே
இரண்டோநாய்க் குட்டிகளோ டிந்தப் பக்கம்
ஏகியிருக் கின்றனவென் றறிக்கை செய்தான்.

துப்பாக்கி மின்னொளியும் விளங்கா வாறு
சுடுவதற்காம் ஏற்பாடோ டவற்றை நோக்கி
அப்பாங்கில் உள்ளபுதர் அண்டி ஒண்டி
அருமபொருளைக் கவர்திருடன் போலச் சென்றேன்.
அப்போதங் கெரிசுடர்போல் விழியி ரண்டை
அடர்புதரின் அடியினிலே காணப் பெற்றேன்.
அப்படியே நின்றேன்பின் தலையைத் தாழ்த்தி
அமைதியுடன் அடிபெயர்த்து நெருங்க லானேன்.

கரிநிரைகள் கிடத்தல்போல் விளங்கும் பாறை
கவர்த்தவழி வெளியினிலே பால்போல் திங்கள்
விரிகதிர்கள் பொழிந்திலங்கும் அமைதி தன்னில்
மேவியதோர் இன்பததில் ஓநாய்க் குட்டி
நெருங்கியவண ஒன்றையொன்று தாவி ஏறி
நிகழ்த்துகின்ற விளையாட்டை என்ன சொலவேன்?
திருந்தாத கொடுமக்கள் வழியில வந்த
தெளிவில்லா என்நெஞ்சம் தெரித லுண்டோ? (ரு)

முன்கால்கள் நிலனூன்ற ஒளிரும கணகள்
முன்னிற்கும எதிரியினைச சபித்தல போலத்
தன்னிலையில அசைவின்றி ஓநாய ஏறு
தவசியைப்போல் அமர்ந்திருந்த நிலையைக் கண்டேன்
என்னைஇனித தப்பியிவண் வாழ்தற் கில்லை
என்றமுடி வுற்றதனை விளக்கிற் றோநாய!
என்னஅறி வுடையேனநான் அதனைச சுட்டேன்!
இழிகுருதி தரைபாயநது பெருகிற் றெங்கும்; (சு)

விருப்புற்றுத தன்னினததைக் கொல்லற் காக
விரைந்தெதிராதத என்நாயின் குரலை ஓநாய்
ஒருசிறிதும விட்டிலதே! என்ன வீரம்!
ஒழுகியதன் குருதியினை நக்கிக கொண்டே
பெருகொளிசேர் கண திறந்திவ் வுலகை நோக்கிப்
பிரிந்ததுவே உயிர்வாழ்வை; அமைதி யோடே!
நெருங்கியதன சாவிற்குத் துயரங் கொண்டு
நிலைகலங்கிக் கதறிற்றா? சிறிதும் இன்றே! (எ)

வெடிதீர்ந்த துப்பாககிக் குழையின் மீது
வெய்துற்று நெற்றியினைச் சாய்த்தேன்; மேலும்
தொடர்ந்ததனறன் குடும்பத்தைச சுட்டு வீழ்த்தத
துணிவிலலேன்! என்எண்ணப் போராட் டத்தின்
கடுமையினை எங்ஙனம்நான் விளக்க வல்லேன?
கலக்கமென்ப தறியாத ஓநாய்க் குட்டி,
அடுந்துன்பக் கைம்பிணவு, இவைதாம் என்றன
மாறிவநது சூழ்ந்த வாங்கே! (அ)

வாழ்க்கையெனும பெரியதோ ராய்வுத் தேர்வில
வந்துவந்து வருத்துகின்ற பசியின் போழ்தும்
மனிதாக்கே துணையாய் வாழும்
நம் விலங்கெதிரில், நகரில் எந்தப்

பொழ்தினிலும தன்செய்கள் சிக்கா வணணம்
புன்மைதரும் பசிநோயைப் பொறுததுக் கொள்ள
சூழ்ந்துதனக் குறுகடனை உணர்ந்த வன்றே
தொல்லையுறுங் கைம்பிணவு தனிதத தாங்கே!

எற்றுக்கோ இப்பெரிய மனிதப் பட்டம்
ஏதேனும் பொருளுண்டோ? இதிலே ஈங்கு?
மற்றிதனை நினைத்தாலே வெட்கம்! வெட்கம!!
வாழ்க்கையினில் எஞசியவண நிற்ப தென்ன?
உற்றிடும்பே ரமைதியன்றோ? ஓர்ந்து பாரீர்!
ஒழிவின்றி அலகினற மககாள்! இஙகே
மற்றவைகள் பொருளற்றுப் போவ தன்றி
மடியாமல் நிற்பனவோ? தெளிந்து சொல்வீர்?

பொருமுகின்றீர்! அழுகின்றீர்! தொழுகின் றீரே!
பொருளற்ற செயலன்றே செய்கின றீர்கள!
பெரியதெது? நிலைததெது? தெளிந்த துணடா?
பெருந்தகைமை வனவிலஙகின் சாவைக் காணபீர!
உரியகடன் முடிந்தவரை செய்த பின்னே
உறும்அமைதி வழிநின்று உயிரை நீத்த
அரியசெயல நமககெல்லாம பெரிய பாடம்!
அமைதியல்லால் மற்றவைகள் தாழ்ந்த வன்றோ?

### இறந்த ஓநாய் தரும் முடிபு.

சஞ்சலமே கொண்டு தளர்ந்துறையும் மாந்தர்காள்!
வந்தடுக்கும் ஊழ்வழியே வாழ்ந்திடுமின்—வந்ததன்பின்
சாவினுக் கஞ்சித் தளராதீர், பேசாமல்
போய்விடுமின் என்றனைப் போல். (கஉ)

**ஓநாயின் சாவு**:—18ஆம் நூற்றாண்டில் இருந்த தத்துவக் கவிஞன் "அலஃப்ரே தெ விஞ்ஞி" (Alfred de Vigny) எழுதிய La mort du loup என்ற கவிதையை வேண்டுமிடத்து மொழி பெயாததும, தழுவியும் யாககப்பெற்றது.

# கவிதையின் இயல்பு

[தென்னுப்பிரிகா, டர்பன், திரு. ச. மு. பிள்ளை அவர்கள்]

ஒருடற் கண் உயிர் பொருந்தி நிற்குமேனும், அவ்விரண்டன் தொடர்பால நிகழ்தற்குரிய அறிவு விளக்கம் ஆண்டுக் காணப்படாதாயின், அவவுடறகும் உயிர்க்கும ஏதொரு பொலிவும சிறப்பும் இல்லையாதல் போல, ஒரு நாட்டிற் பலவகை வளங்களும மககளும நிரம்பி நிறைநது வாழினும், அறிவுடைப் பெருமககள் அந்நாட்டின கண் இலராயின் அதற்கு எவ்வாற்றானும் பெருமையும் சிறப்பும் உண்டாதல் இல்லை. ஒரு தனி மனிதனை, அவன்றன், மனம—'சென்ற விடத்தாற் செலவிடாது தீ தொரீஇ, நன்றின் பால் உய்பப தறிவே' யாதல் போல, ஒரு நாட்டின் கண்ணுள்ள மக்களைத் தாம கூறும் அறிவுரைகளின் வாயிலாகத் தீ நெறிகளினின்றும் விலக்கி நன்னெறி ஒழுக்கி நலம் பெறச் செய்விப்போர், அந்நாட்டின் நல்லிசைப் புலவர் பெருமக்களே யாவர். இது பற்றியே ஆசிரியர் திருவள்ளுவர்,

> " தள்ளா விளையுளும் தக்காரும தாழ்விலாச
> செல்வரும சோவது நாடு "

என்று நாட்டின் இலக்கணம நவில்வாராயினா. தக்கார் என்றது ஈண்டு அறிவுடைப பெருமக்களையே என்க. இஃதன்றியும 'நிலை மக்கள சாலவுடைத தெனினும் தானை (தேயம்), தலை மக்கள இல்வழியில்' 'பண்புடையார்ப் பட்டுண்டுலகம் அது வின்றேல், மண்புககு மாய்வது மன்' என்பன போன்றனவும் ஈண்டு ஒருபுடை வைததுக் கருதுதற்குரியன.

இங்ஙனம் நாட்டிற்கு இன்றியமையாதவர்களாய நல்லிசைப் புலவா பெருமக்கள நாட்டிற்குச் செய்யுந தொண்டுகட்கு அளவேயில்லை. ஆசிரியா திருமூலர் 'ஞான முண்டாக்குதல் நலமாகும் நாட்டிறகே' என்றுங்கு ஒப்புயர்வற்ற அப்பெரு நலததினைச் செய்பவர்கள இவாகளே யாவா. நாட்டின் பொருட்டுத் தம் முயிரைக் கொடுததுதவும மறவாகளினும் அறிவைக் கொடுத்துதவும் புலவாகளே நாட்டிற்கு நலன் விளைப் பதிற் றலைசிறந்தோராவர் என்பதிற் றடையில்லை. சங்க காலத்துச் சான்றோர்களுள் 'செறுத்த செய்யுட் செய்செந்நாவின் வெறுத்த கேள்வி விளங்குபுகழ்க் கபிலரும்,' நாவன்மை மிக்க கோவூர்கிழாரும, செவ்விய புலமை ஔவையாரும், ஓங்கிய

சிறப்பின் உயர்ந்த கேள்வி மாங்குடி மருதனாரும் முதலிய புலவர்கள் நாட்டிற்குச் செய்துள்ள நன்மைகள அளவிடற்பாலன வல்ல. இத்தகு நல்லிசைப் புலவர்கள் ஒருகாலத்து ஓரிடத்தது தம்மை எதிர்ப்பட்டார் ஒரு சிலர்க்கு மட்டுமே தம் அறிவுரை யறவுரைகளைக் கூறி யமைந்துவிடாமல், எக்காலத்தும், எவ்விடத்துமுள்ள எத்தகையாக்கும் அவை பயன்படுமாறு என்றும அழிந்துபடா வகையில் சொற்களை நிரல் படக் கோத்தமைத்துச் சொன்னலங்கனிந்து, பொருள்வளம் பொலிந்து, சுவைநலந் ததும்பும அழகின் மிக்க அழியாப் பெருந்திருவனைய அருமைத் திருபாடல்களாக அவையிற்றைச் செயயுள வடிவில் வடித்துக கொடுத்துள்ள பேருதவியை என்னென்று பேசுவது?

இங்ஙனம் ஒரு காலத்து ஓரிடத்துள்ள புலவர் பெருமகன் ஒருவன், தான் தன் கலவியினாலும், உலகியற பட்டறிவினாலும் (அநுபவம்) ஆராய்ந்து கண்டறிந்துணர்ந்த விழுமிய நலல அரும்பெருங் கருத்துகளை, எஞ்ஞான்றும் எங்குமுளள யாவரும் இனிதறிந்து பயனெய்துமாறு அவையிற்றைச சிற்சில வரம்பு நெறிமுறைக்கு உள்ளிட்டுச் செமமை செய்து, நிரநதினிது சொலலவல்ல அருநதிறல் மிக்க பெருங்கலைத திறமே கவிதைத் திறனும். இக்கவிதைத்திறம் இற்றென்று உணர வலலாதார் பலர், 'கருஙகொளளும செஙகொளளும தூணிப பதககெனறு ஒருங்கொபபக் கொணடானும் ஊரன்' என்பது போலக் கண்டனவற்றை யெல்லாங் கலந்து கூட்டிக் கவிதை யிதுவே எனக் கரைநது, தமிழிலக்கிய நலனுக்குக கேடு சூழநது போதருகின்றார். தமிழில் உரைநடை எழுதுதல் எங்ஙனம் எனபது பற்றிப் பல்வேறு மாறுபட்ட கருத்துக்கள உலவி வருதலை யொப்பவே, கவிதை பற்றியும பலப்பல கருத்துக்கள் உலவி வருகின்றன

நம் மக்களிற் பெரும்பாலார் கவிதை என்பது கவிஞன் தன் வாயைத திறந்தவுடனேயே பொங்கிப புறப்பட்டுப் புறம்பே வநது குதித்து விழுவதே என்றும, அது கடவுளருட் பேற்றாலேயே வாய்பபதென்றும, கலவிக்கும கவிதைக்கும் ஏதொரு தொடர்பும வேண்டுவதில்லை என்றும கருதுகினறனா ஒரு சிலர் கவிதை என்பது பெருந்திறமைப பெற்றி மிக்க அருங்கலை அறிஞர்கள் ஒரு சிலர் மட்டுமே இயற்றுதற்குரிய மடக்கு, திரிபு, மாலைமாற்று, ஏகபாதம் முதலிய மிறைக்கவிகளே என்பர். வேறு சிலர் இன்னோரன்ன மிறைக்கவிகள இயற்றுதல் அரிதெனினும், அவை யெல்லோராலும் அத்துணை யெளிமையாகச் செய்யப்படுவன அல்லவாய்ச் சொற்களைச் சேர்த்தும், இணைத்தும், கூட்டியும, குறைத்தும் பலவாறு வருந்திப பாடப்படுவன வாதலானும், அங்ஙனம் பாடப்படினும் பிறர் என

பொருளறிந்து கொள்ளலாகா வண்ணம், பெரியோர் மயக்கம் செய்யும் பெற்றியினவாய்ப் பயன்படாது போதலானும் அவை கவிதையாகா என்பர்.

மற்றுமொரு சிலர், கவிதைக்கு இலக்கணம் வேண்டுவதில்லை கவிஞன் என்பான் தான் கருதும் கருத்துக்களைத் தான் கருதியவாறே வெளியிடுதல் வேண்டுமன்றி எதுகைக்கும் மோனைக்கும் கவலைப்பட வேண்டுவதில்லை சங்ககாலத்துப் புலவர்கள் எதுகையும் மோனையும் ஒரு சிறிதும் வேண்டிற்றிலர் என்பர். இவர் தம்முள் மேலும் சற்றுணாசசி மிககார் தொல் காப்பியத்துள் யாண்டுங் கூறப்பெறாத பலவகைப் பாடல்களை, அதற்கு மாறாகப் பிற்காலத்து வந்த சமய குரவர்களும் புலவர்களும் பாடினரல்லரோ? அவர்களெல்லாம இலக்கணக் கட்டுப் பாடுகளுக்குச் சிக்கினரல்லரே! இலக்கணத்திற்கு நாமா? நமக்கு இலக்கணமா எனப் பல பேசுவர். இனிப் பிறிதொரு சிலர் கவிதை என்பது வேறொன்றுமின்று, புதுப்புது, 'மெட்டுக்களுக்கு'ப் பொருந்தி இசையொடு பாடுதற் கினிதின் இயைந்து மகிழ்விப்பனவே என்பர் மற்றும் சிலர், உயாவு நவிற்சி, புனைந்துரை முதலிய அணிகள் ஒரு சிறிதும் கலக்கப்பெறாதனவே கவிதை என்பர். இனி, இவர்களினெல்லாம் வேறுபட்டோர் சிலர், கவிதை என்பது கவிஞன் கருதுமவற்றை யெல்லாம் தெள்ளத் தெளிய நன்கினிது காட்டுவனவாய், மிகுதியும் எளிமையாய் அமைவனவே (கொச்சைச் சொற்களும் இலக்கண வழுக்களும் மலிந்து கிடப்பினும்) என்பர்

இங்ஙனம் இவர் கூறுவன பலவும் ஒருதலைப்படாது பல்திறலைப்பட்டு யானைகண்ட குருடர் செயலினையே ஒத்துக் காணப்படுகின்றன கவிதை என்பது கடவுளருட் பேற்றாலேயே வாய்ப்பதொன்று என்பது, அவ்வாற்றல் செயற்கையாக அன்றி இயற்கையிலேயே அமையுமாயின் மிகுதியும் சிறப்புடைத்தாம் என்னும் அளவிற்கே கொள்ளத்தக்கது. 'காரிகை கற்றுக் கவிபாடுதலில்' என்று கூறப்படுதலும் இது குறித்தே. அல்லாக்கால் கடவுளுணர் வுடையாரெவரும் தாம் எய்தும் இன்பங்களை மட்டுமன்றித், துன்பங்களையுங்கூட இறைவனே தமது நலத்தின்பொருட்டு எய்துவிக்கின்றான் எனக் கொள்ளுப வாகலின், இதனைமட்டும் அவனருளால் வாய்ப்பதொன்று என்பதிற் சிறப்பேதும் சிறிதுமில்லை.

இனி, கவிதை புனைதற்குக் கல்வி வேண்டுவதில்லை என்பது பெரியோர் அறியாமை. கற்றவர்விழுங்குங் கனியாய இறைவன் கல்லார் நெஞ்சில் நில்லானாகலின், அவர்க்கு இறைவனருள்

வாய்த்தலும் அதனல் அவர் கவிதை புனையும் ஆற்றலுடைய ராதலும் அறவே இல்லையென்று தெளிக. சமய குரவர்கள் நால்வருள் மிக மழவிளம் பருவத்தேயே இறையருள எய்தப் பெற்ற திருஞான சமபநதர் ஒருவரைத் தவிரநத ஏனைய மூவரும் நம்மை யொப்பவே கற்றற்குரிய எல்லாக் கலை நூற் களையும் முயன்று கற்றுணர்நதவர்கள் என்று கடைப்பிடிக்க. இனிக், குமரகுருபரர், இராமலிங்கர், பாம்பன் குமரகுருதாசர் முதலிய பெரியோர்கள் கல்வியின்றியே கவி செய்தாரலோ வெனின், இப்பிறவியிற் கற்றிலரெனினும் முன்னை முனனைப பிறவிகளில் அவர் கற்றிருத்தல் கூடும் என்க. என்னை? 'ஒருமைக்கண் தான் கற்ற கல்வி ஒருவர்க், கெழுமையும் ஏமாப் புடைதது' என்று ராகலின். அன்றியும் 'ஈண்டு இவ்வானமாககளுக்கு முற்செய் தவத்தான் ஞானம் நிகழும் என்றது' எனச சிவஞானபோதத்து 8-ஆம் சூத்திரத்து முதலதிகரணத்து வரூஉம் மேற்கோளும, அதற்கு ஆசிரியா சிவஞான முனிவர் 'ஆளுடைய பிள்ளையார்க் குத் தவமின்றியும் ஞானம நிகழ்ந்ததாலோ என்னும் ஆசங் கையை நீக்குதற்கு' என உரையருளிச் செய்த வுண்மையும 'தவ முதல்வர் சம்பந்தர் தாமுணர்ந்தார் அந்நிலையில்' என்னும சேக்கிழார் பெருந்தகையின் திருவாக்கும இவ்வுண்மைக்குக் கரிபோக்கு மென்க.

கவிஞன் விரைவாகவும் இயலபாகவும பெருமுயற்சியின்றி எளிதிற் பாடுதல் போற்றத்தக்கதெனினும (இஙஙனம் பாட வல்லவன் ஆசுகவி எனபபடுவன்). அஙஙனம பாடுவோரே கவிஞர் எனல் அடாது. இஙஙனம கொளளின், ஜோன் ஸ்டுவாட் மில் என்னும் ஆங்கிலப் பேராசிரியர் "லிபர்டி" என்னுங் கட்டுரை யினை ஏழாண்டுகளும், கிரேய் என்னும் கவிஞர் "எலகி" எனப படும் இரங்கற்பா வொன்றினை ஏழாண்டுகட்கு மேலும, அரிதின் முயன்று எழுதியமைபோலத, தம் வாழ்நள அளவும பெரிதும் அமைந்திருந்து ஆராய்ந்தாராய்நது அழகுசெய்து அருமைமிக்க ஒவ்வொரு பெருநூலே செய்துதவிய திருவள்ளுவர், இளங்கோ வடிகள், திருததக்கதேவர், சேக்கிழார், மெய்கண்டார போன்ற தெய்வப்பெற்றிமை மிக்க செம்புலச் செல்வாகளையும், தமது நல்லிசைப் புலமையினைப் பல்காலும் நினைந்துணர்நது நெஞ்சம் நெகிழ்ந தின்புறுமாறு ஒவ்வொரு பாடலே இயற்றிபபோந்த சங்க காலத்துச் சான்றோர்கள் பலரையும கவிஞர் எனக் கருது தற்கு இடனின்றி யொழியுமன்றே?

கவிதையாவன எனறும, நிறைக கவிகள் முற்றிலுமே வெறுத்தொதுக்கற்பாலன என்றும் கூறும தார் கூற்றும ஒருசிறிதும் பொருந்தாது. பிறாக்குத்

தம் அறிவின் திறத்தினை அவர் வியந்து மகிழுமாறு காட்டு தற்கும், மேன்மேல் அறிவு வளர்ச்சிக்கு அடிகோலுதற்கும் மிறைக்கவிகள் ஓரளவு வேண்டப்படுவனவே. இனிச் சங்க காலத்துப் புலவர்கள் எதுகையும் மோனையும் வேண்டிற்றிலர் என்பது, அவர்கள் எதுகையும் மோனையுமே கருதிப் பொரு ளற்ற செயற்கைப் பாடல்களைப் பாடிற்றிலர் என்னும் அள விறகே யுண்மையுடையது. கவிதைக்கு இலக்கணம் அத்துணை வேண்டற்படுவதன்று எனின், தொல்காப்பியனார், அவிநயனார், காக்கை பாடினியார், கையனார், நத்தத்தனார், பல்காயனார், மயேச்சுரனார், பல்காப்பியனார் முதலியோர் ஏனைப் பல புலவர்கள் எற்றிற்கு யாப்பிலக்கணம் வகுத்தல் வேண்டும். எனவே,

> “பொருள் சிறந்தும் இலக்கணத்தாற் புரைபடுமே யானல்
> பொருந்தியுயிர் உருககுறைந்தாற் போலொக்கும்—அன்றிப்
> பொருளசிறவா திலககணத்தாற் பொலியுமெனறால நனறுப்
> பொலியுறுத்து நிறைந்தவுயிர் பொருந்தாமை போலும்.’

என்றுணர்தல் வேண்டும்.

இனிப் பிற்காலத்து வந்த சமய குரவர்களும், புலவர்களும், தொல்காப்பியத்துள் யாண்டுமே கூறப்பெறாத கட்டளைக் கலிப்பா, கட்டளைக் கலித்துறை முதலிய பல செய்யுள் வகை களைப் புதிது புனைந்து, புலமையுரிமை பெற்று இலக்கணக் கட்டுப்பாடுகட்குச் சிக்கினரல்லரெனினும், அவர்கள் பண்டை வரம்பழித்து மாறுபட்டனரல்ல ரென்க ‘விருந்தே தானும், புதுவது கிளந்த யாப்பின் மேற்றே’ என்ற தொல்லாசிரியர் நல்லாணையினையும், “விருந்தாய சொன்மாலை கொண்டேத்தி” என்னும் ஆளுடைய நம்பிகளின் திருமொழியினையும் அறிந்து கருதவல்லார், தமிழ் நலங்கருதியே சமயாசிரியர்கள் தமது கரைகடந்த திருவருட் பெருக்கால் புதுவது கிளந்த யாப்பினை முறையுற அருளிச் செய்வாராயினர் எனத் தெரியப்பெறுவர் இனிப் புனைந்துரை முதலியன ஒருசிறிதும் இன்றி, உண்மை நவிற்சியொன்றும் உடையனவே கவிதை என்றலும் அமையாது. உண்மை நவிற்சி வரலாறுணர்தற்கும், மெய்யுணர்வு எய்து தற்கும் இன்றியமையாததாயினும், யாண்டும் எதற்கும் அது வேண்டுவதில்லை. அன்றியும் ஒன்றனைக் கூறவிழைவான், அதனை அஃதுள்ளவாறே கூறியமையின் அஃதொரு சிறிதும் சுவை படாது கழிந்தொழியும். எனவே, பிறழ்வுணர்ச்சி நிகழ்தற்கிட னின்றிக், கடுத்தின்னு தானைக்கட்டி பூசிக் கடுத் தீற்று தலபோலச் (குளஜிவ்ஹா நியாயம் என்பர் வடநூலார்) சொல்லுமவற்றைச் சுவைபடத் திறம்படச் சொல்லுதற்குப் புனைந்துரை முதலிய ஒரு நூறணிகளும் வேண்டுவனவே என்க.

...யாக, கவிதைகள் எல்லாம் மிகுதியும் எளிமையாகவே அமைதல் வேண்டுமென்பார் கூற்றே மிகுதியும் ஆய்தற்குரியது. என்னை? மிகப் பெரும்பாலார் இப பிழைபட்ட கொள்கையினையே பரப்பி வருகின்றனராகலின. கவிதைக்குரிய பல பண்புகளுள் எளிமையும ஒரு பண்பேயாமன்றி எளிமையே கவிதையன்று. பாலின் நிறப்பண்பு வெண்மையாயினும், வெண்மையெல்லாம் பாலலல இரததததின் நிறம சிவபபே யாயினும், சிவப்பானவெல்லாம் இரத்தமல்ல இங்ஙனமே கவிதை எளிமை கலந்து இனிது திகழ்தல வேண்டுமெனினும், கொச்சைச் சொற்கள் மலிந்து, இலககண வழுககள் நிறைநது, யாபபமைதிகட் குட்படாது 'இழுககுடைய பாட்டிற்கிசைநன்று' என வருவனவெல்லாம் கவிதையாகா கவிதைகள் முற்றிலுமே எளிதின அமைந்துவிடின் அறிவு நிலையின் மேன்மேல் உயாந துயர்ந்து செல்லுகின்ற பல்வேறு நிலையினாக்கும அவை பயன படுமாறு யாங்ஙனம்? இனபுறுதற்கு எளிதின் எய்தபபடுவன வெலலாம் மிக விரைவில் நமமால் வெறுக்கத்தககனவாய் முடிதலை நாம் நாடோறும் கண்டு வருகின்றனம் அலலமோ? ஆதலின் எளிமை மிக்க கவிதைகள் இரண்டொரு முறை படித்தற்கே இன்பம். பயப்பனபோலத் தோன்றுமன்றி, நவில்தொறும நவில்தொறும நூனயம் பயவாதொழியும எனவே அவை விரைவில் அழிநதொழிநது மாய்தல் ஒருதலை ஒருகாலத்து நம்தமிழக மககள—நினைப்பனவெல்லாம் பாட்டாகவே நினைத்தனர்; சொல்வனவெல்லாம் பாட்டாகவே சொல்லினா, செய்வன பலவும பாட்டாகவே செய்தனா ஆனால், அநதோ! இப்போது கல்வி நிலையிற்றாழ்ந்து அறியாமையில் ஆழ்நது கிடககும் நம் நாட்டகத்துக் கவிதை புனையும ஆற்றல பெற்றுடையாா மிகச் சிலரே யாவர். அச்சிலரும் இவாதம் வெற்றாரவாரததின் மயங்கி ஈடுபட்டு, எளிமை நடையிலேயே யாவும செய்யத் தலைப்படுவராயின், சிறந்த இலக்கியங்கள் தோன்றுவதெங்ஙனம்? எளிமை நடையினையே வற்புறுத்தின் அருமைநடை எழுதுதற்குரிய விருப்பமும முயற்சியும் ஆற்றலும் நிகழாமைத் தடைப்பட்டு, நாளடைவில் எளிமையினும் மிக்க எளிமை நடையே வேண்டப்பெறும் இழிநிலை எய்துமன்றோ? அங்ஙனமாயின் பண்டைச் சங்ககாலத தமிழ் நடை நம்மனோர்க்கு இயலபின் அமைவது எஞ்ஞான்று? இவையிற்றினை யெல்லாம் கருதிய பார்க்கவலலார் 'பண்டிதர் நடை கடினமாதலிற் பயனுடைய தன்று' என மிக எளிதிற் கூறி, அழகின் மிகக அரிய நடையிற் பாட்டும் உரையும் பெரிதியற்ற வலலார்க்கும இழிவு தேடுவாரோ? ஆசிரியர் தொல்காப்பியனாா செய்யுட்குரிய எண்வகை வனப்புககளுள் ஒன்றாய 'அழகு' என்னும் வனபபைக் கூறுங்கால், கற்றோர்க்

கன்றி மற்றோர்க்கு விளங்காத செய்யுட் சொல்லாகிய திரிசொற் களான ஓசை இனிதாகப புணாக்கபபடுவது என்னும் கருததாற்

‘ செய்யுண் மொழியாற் சீர்புனை தியாப்பின்,
அவ்வகை தானே அழகெனப் படுமே ’

என்றமை ஈண்டுக் கருதுதற்குரியது.

எனவே, இதுகாறும் கூறிய இவவாற்றாற், கவிதை என்பது மேலெடுததுக் காட்டிய பல்வேறு கருத்தினரும் கூறும் இவ்வெல்லா நலங்களும் ஏற்ற பெறறி அமைந்து, எழில பெறறிலஙகிச், சொன்னலந் துவன்றிப் பொருள்வளம் பொலிந்து, மெய்யுணர்வின் மிக்க விழுமிய கருததுக்கள் கம்மிற செறியப்பெற்றுச, சிந்தைக்கும் செவிககும் வாய்ககும் இனியவாய், அறிஞாகள விதந்து வியந்து புகழந்து பாராட்டுமாறு, அவாதம் உளங்கவாந்து இடங்கொண்டு என்றும அழியாது விளஙகவல்ல பெருஞ் சிறப்புடையனவேயாம் என்க ஈண்டுத தாலிபுலாக முறைபற்றிப் பாரி மகளிா பாடிய,

‘ அற்றைத் திஙகள் அவ்வெண நிலவின்
எந்தையும உடையேம எஙகுன்றும பிறர் கொள்ளார்
இற்றைத திஙகள இவ்வெண் நிலவின
வென்றெறி முரசின வேந்தரெம்
குன்றுங கொணடார்யாம் எந்தையும் இலமே ’

என வருஉம அருமைத் திருப்பாட்டைக் கருதுமின்கள் ! இதன் கண் எளிமையிலதோ? இனிமை இலதோ? தெளிவு இனறோ? கனிவு இன்றோ? இசைமை யிலையோ? சுவைமை யிலையோ? யாது இலலை கூறுமின்களா ! எனவே, இம முறையினைப் பின் பற்றிக கவிதையை வளர்பபோம்! புலவாகளைப் போற்றுவோம!

கவிதை, பா, பாடல, செய்யுள் என்பன ஒரு பொருள் குறிதத சொற்கள். பாடலென்பது இயற்கையாகப் பாடுவோன உள்ளததினின்றும் பொஙகியெழுதல் வேணடும். எணணி எண்ணி அகராதி, நிகணடு, இலககணம முதலியனவற்றை வைததுககொணடு, வீடுகட்டும கொததன செஙகற்களைப் பொறுககி அடுககுவதுபோல் சொற்களை அடுககி நிரப்புதல செயயுள் ஆகாது. நாம இனறும பல கவிஞர்களைக் காணகின்றேம அவர் எதையும எணணிப் பாடுவ தில்லை. கடல் மடை திறநததுபோல் தட்டுத்தடையின்றிக கவிதை கள் பொஙகிவருவதைக காணகின்றேம். எனவே, இயற்கைச சததி எழுப்பத் தன்னையறியாது கவிகள் தோனறுகின்றன. அதில் பிறக கும சொற்களும் உயிருடையனவாய இலங்குகின்றன. இவ்வாறு பாடும் பாடல்களே ‘கவிதை’ என்று பாராட்டற்குரியன.

# குமரியாறு இருந்ததா?

[திரு. திருமந்திரமணி, துடிசைகிழார், அ. சிதம்பரனுர்]

"தமிழ்ச் சங்கங்களின் வரலாறு" பக்கம் 53-ல், தலைச் சங்கம் கி. மு. 14004 முதல் கி மு 9564 வரை 4440 ஆண்டுகள், குமரியாறறஙகரையில் இருநத *தென் மதுரையில் நடைபெற்றது என்றும், காயசின வழுதி முதல் கடுங்கோன் ஈறுக எண்பத்தொன் பது பாண்டியர்கள் தலைசசங்கத்தை நடததினுர்களை என்றும், காய்சின வழுதி என்பான் இரண்டாம் நிலந்தரு திருவிற் பாண் டியன் என்னும பட்டத்தை உடையவன் என்றும்; பக்கம 55ல, ஊழி என்பது கடல்கோள் என்றும், ஆதியூழி என்பது கி மு. 14058-ல் ஏற்பட்ட கடல்கோள் என்றும, 'தொடியோள் பவ்வம' என்ற சிலப்பதிகாரத் தொடருக்கு அடியார்க்கு நல்லார் கூறும் உரையை நோக்குமிடத்து, ஆதியூழியில் குமரியாறும குமரிக் கோடும் அழியவில்லை என்றும், பஃறுளியாறறுக்கும் குமரியாற் றுக்கும் இடையில் இருந்த நிலபபகுதி மாத்திரம அழிந்தது என்றும், கி. மு 9564ல் ஏறபட்ட கடல்கோளை உரையாசிரியர்கள் இடையூழி, அல்லது இரண்டாம் ஊழி, என்று கூறுவர் என்றும எழுதியுள்ளாம

அதே புததகத்தில் பக்கம் 70-71ல் இடைச்சங்கம் கி. மு. 6805 முதல கி. மு. 3105 வரை 3700 ஆண்டுகள் பொருநை (தாம்பிரவர்ணி) ஆற்றின் முகத்துவாரத்தில் இருந்த காபாடபுரத்தில் நடைபெற்றது என்றும், வெண்டேர்ச் செழியன் முதல முடத்திரு மாறன் ஈறுக எழுபத்தொன்பது பாண்டியாகளை சஙகததை நடத்தினுாகள் எனறும், கி மு. 6000ல் மூன்றும் நிலந்தரு திருவிற் பாண்டியன் காலத்தில், ஐந்திரம் நிறைந்த தொல்காபபியர் அப பாண்டியனுடைய அவைக்களத்தில் அதங்கோட்டாசான் முன னிலையில் தொல்காப்பியம் என்னும நூலை அரஙகேற்றினுா என் றும் எழுதியுள்ளாம்.

ஆதலின், இக்கூற்றுப்படி, தொல்காப்பியா காலததில் குமரி யாறும, குமரிக்கோடும், தலைச்சஙகம் இருந்த தென் மதுரையும் இலலை, அழிந்துபோயின என்றே கொளளவேண்டியிருக்கிறது.

அப்படி இருக்க, தொல்காப்பியப்பாயிரத்தில் உள்ள "வட வேங்கடம் தென் குமரியாயிடை," என்ற அடியில் உள்ள குமரி

* இந்தத் தென்மதுரை பஃறுளியாற்றங் கரையில இருந்த தென்மதுரையினின்றும வேறுபட்டது.

என்ற சொல்லுக்கு உரையாசிரியர் குமரியாறு என்று பொருள் கொண்டுள்ளார்கள் என்றும், ஊழி என்ற சொல்லுக்கு யுகம் என்று பொருள் கொண்டு, ஆறிய்ஊழி என்பது கிரேதாயுகம் என்றும், இடையூழி என்பது திரேதாயுகம என்றும் எழுதியுள்ளார்கள் என்று சில வித்துவான்கள் கூற முன்வந்துள்ளார்கள்

ஆதலின், தொல்காப்பியப் பாயிரத்தில் உள்ள "வடவேங்கடம் தென் குமரியாயிடை" என்ற அடிக்கு என்ன பொருள் என்பதைப்பற்றிச் சிறிது ஆராய்வாம

பாயிரத்தில் உள்ள அடி "வட வேங்கடம் தென்குமரி" என்பதே இந்தப் பாயிரத்தைத தொல்காப்பியரே பாடியிருந்தாலும் சரி, அல்லது, பனம்பாரனரே பாடியிருந்தாலும் சரி; அவர்கள் குமரியாறு என்று கூறவில்லை என்பது அவ்வடியைப் பார்த்தாலே தெரியும்; "கைப்புண்ணுக்குக் கண்ணாடி வேண்டா." வருவித்துப் பொருள்கொண்டால் அது பொருந்தாது. சரித்திரத்துக்கு முரண் இல்லாது பொருள்கொள்ளுவதுதான் பொருந்தும். சரித்திரத்தையும் காலவரையறையையும் நோக்காது மனமபோனவாறு பொருள் கொள்ளககூடாது

பாயிர ஆசிரியர் கூறியது எல்லாம் 'வேஙகடம்'—'குமரி' எனற இரண்டு சொற்களே இநதச் சொற்களின் பொருள்களை உளளபடி அறிய முயல்வதே கற்றறிநதார் கடன் ஆகும

வேஙகடம் என்ற சொல்லுக்கு அக்ராதியில 'ஓர் மலை'—'தமிழ நிலத்தெல்லை நான்கின் ஒன்று' என்று கூறப்பட்டுள்ளது.

கி. மு. 6000ல் இருநத சுந்தரநாதர் என்ற திருமூலர் :—

"வேஙகட நாதனை, வேதாந்தக் கூத்தனை
வேஙகடத் துள்ளே விளையாடு நந்தியை
வேஙகடம் என்றே விரகறி யாதவா
தாஙகவல லாருயிர் தாமறி யாரே."

என்று தாம் பாடிய 'தமிழ் மூவாயிரத்தில்' அச்சொல்லைப் பயன்படுத்தி உள்ளார்.

சுந்தரநாதர் கயிலையை விட்டுத் தென்னாட்டுக்கு வரும் போது பசுபதி நேபாளம்—காசி—கேதாரம முதலிய தலங்களை வணங்கிக்கொண்டு வந்ததாகச் சேக்கிழார் பெரிய புராணத்தில் கூறுகிறார். ஆனால், அப்புராணத்தில் சுந்தரநாதர் சென்று வணங்கிய பூரி என்ற ஜெகன்னாதம், வேங்கடம் என்ற திருப்பதி முதலிய தலங்களின் பெயர்கள் காணப்படாவிட்டாலும், சுந்தரநாதர் என்ற திருமூலர் பாடிய தமிழ் மூவாயிரத்தில் அவ்விரண்டு தலங்களைபபற்றிக் குறிப்புக்கள் காணப்படுகின்றன.

சுந்தரநாதர் என்ற திருமூலர் வேங்கடநாதனை வேதாந்தக் கூத்தனாகவும், நந்தியெம்பெருமானாகவும் கண்டு வணங்கி உள்ளார் என்பது அவர் பாடலால் அறியக்கிடக்கின்றது. அதனால், அவர் காலத்துக்குப் பிற்பட்டே, அங்கே நிலங் கடந்த நெடுமுடி அண்ணல் வணக்கம் ஏற்பட்டதாகக் கொள்ளவேண்டியிருக்கிறது.

ஆதலின், வேங்கடம் என்ற சொல்லுக்கு ஒரு மலை என்பதும், அது 'தமிழ நாட்டின் வடஎல்லை' என்பதும் பொருள் என்று தெளிந்தாம். இதில் ஐயம் ஒன்றும் இல்லை. இந்தப் பொருளிலேயே பாயிர ஆசிரியர் கூறியுள்ளார் என்பது தெளிவு.

இனி, குமரி என்ற சொல்லை எடுத்துக்கொள்ளுவோம். குமரி என்ற சொல்லுக்கு :—

(1) குமரிகண்டம்; (2) குமரிக்கோடு;
(3) குமரியாறு; (4) குமரித்தெய்வம் அல்லது கன்னியா குமரி;
(5) குமரிக்கன்னி அல்லது ஏழு கன்னிகைகளில் ஒருத்தி;
(6) அழிவின்மை; (7) மகள்;
(8) கற்றாழை; (9) குமரி முனை;
(10) குமரித்தீர்த்தம் (குமரிப் பெருந்துறை-குமரிப் பவ்வம்)

என்ற பல பொருள்கள் அகராதியில் பேசப்படுகின்றன.

இப் பொருள்களில் எந்தப் பொருளை மனத்திற்கொண்டு பாயிர ஆசிரியர் அச்சொல்லை வழங்கி உள்ளார் என்பது ஆராய்ச்சிக்கு உரியது.

பாயிர ஆசிரியருடைய கருத்தை அறிவதற்கு உரையாசிரியர்களுடைய உதவி வேண்டியிருக்கிறது. அவர்களுடைய உரை இன்றேல் பாயிர ஆசிரியருடைய கருத்தை அறிவது மிகக் கடினம். அப்படி உரையாசிரியர்களுடைய தெளிவான உரை இருந்தும், அதனை ஊன்றி நோக்காது தவறாகச் சிலர் பொருள் கொள்ளுவதுதான் வருந்தத்தக்கது.

முதலில் நச்சினார்க்கினியருடைய தொல்காப்பியப் பாயிர உரையை எடுத்துக்கொண்டு பார்க்கலாம். (சாலிவாகன சகம் 1772ல் மழவை மகாலிங்கையர் அவர்களால் பதிப்பிக்கப்பட்ட தொல்காப்பியம் நச்சினார்க்கினியர் உரைப்பதிப்புப் பார்க்க) :—

பதவுரை

"வடவேங்கடம் தென்குமரியாயிடை" என்பது, வடக்கின்கண் வேங்கடமும், தெற்கின்கண் குமரியும் ஆகிய அவ்விரண்டு எல்லைக்குள்

லிருந்து," என்று பதிப்பிக்கப்பட்டிருக்கிறதேயொழிய வேறில்லை. பதவுரையில் நச்சினார்க்கினியர் குமரியாறு என்று கூறுமை தெளிவாம்.

விளக்கவுரை

இனி, விளக்க உரையில் என்ன கூறுகிறார் என்று பார்ப்போம். "இனி மங்கல மரபிற் காரியங்கள் செய்வார் வடக்கு—கிழக்கு நோக்கியும் சிந்தித்து நற்கருமங்கள் செய்வாராதலின், மங்கலமாகிய வடதிசையை முற்கூறினார். இந்நூல் நின்று நிலவுதல் வேண்டித் தென்புலத்தார்க்கும் வேண்டுவன செய்வார் தெற்கு—மேற்கு நோக்கியும் கருமங்கள் செய்வாராகலின் தென்திசையைப் பிற் கூறினார். நிலங்கடந்த நெடுமுடி அண்ணலை நோக்கி உலகம் தவம் செய்து வீடுபெற்ற மலை ஆதலானும், எல்லாரும் அறியப்படுதலானும் வேங்கடத்தை எல்லையாகக் கூறினார். குமரியும் தீர்த்தமாகலின் எல்லையாகக் கூறினார்" என்பதே.

இந்த விளக்க உரையின்படி வடக்கு மங்கல திசையென்றும், தெற்கு அமங்கல திசையென்றும் அறிந்தோம். தென்புலத்தார் என்பவர் இறந்தவர், நம்மை விட்டுப் பிரிந்து சென்றவர்; பிதிர்ந்து சென்றவர் என்றும் கூறலாம். ஆகையால்தான் தென்புலத்தார்க்குப் பிதிரர் என்றும் பெயர் ஏற்பட்டது.

இறந்தவருக்குக் காரியங்கள் செய்யும்போது, தெற்கும் மேற்கும் நோக்கிச் செய்வது மரபு. அதனால், தெற்கும்—மேற்கும் அமங்கல திசைகள் ஆயின. ஆனால், ஈண்டு பாயிரத்தில் அமங்கல திசையாகிய தெற்குத் திசையைக் கூறுவானேன என்றால், பாயிர ஆசிரியர் தம் காலத்துக்குமுன் கடல்கோளால் (ஊழியால) அழிந்துபோன தமிழநாடுகளைக் குறித்தும், அப்போது இறந்துபோன பல ஆன்றோர்களைக் குறித்தும், இந்த நூல் (தொல்காப்பியம்) எஞ்சி இருக்கும் நாட்டில் நின்று நிலவுதல் வேண்டியும் தென்திசையைப் பிற்கூறினார் என்று உரையாசிரியர் விளக்கியுள்ளார்.

ஒருவன் இறந்துபோனால் எப்படி அவனுடைய மகன், தன் தகப்பன் இறந்துபோனதைக் குறித்துப் பிறருக்கு அறிவிக்கவும், தான் நலம்பெற்று இவ்வுலகில் வாழவும் பிதிர்க்கடனைச் செய்வானோ, அதுபோல, பாயிர ஆசிரியர் தமிழ்நாட்டின் எல்லை கூறுமிடத்து, மங்கல திசையாகிய வடக்கை முற்கூறியும், தம் காலத்தில் எஞ்சியுள்ள நாட்டில் தம் நூல் நின்று நிலவவும், உலகோர் நலம்பெற்று வாழவும், கடல்கோளால் அழிவெய்திய நாடு இருந்த தென்திசையை நினைந்து பிற்கூறினார் என்று விளங்க வைத்துள்ளது காண்க. இதனால், தொல்காப்பியர் காலத்துக்கு

முன் கடல்கோள் ஏற்பட்டு நாடு அழிவெய்தியது என்பதும், அக் கடல்கோளில் குமரியாறும் அவ்வாற்றங்கரையில் இருந்த தென்மதுரையும் அழிவெய்தின என்பதும் விளங்குவது காண்க.

மேலும், நிலங்கடந்த நெடுமுடி அண்ணலை நோக்கி உலகம தவம்செய்து வீடுபெற்ற மலை ஆதலானும், எல்லோரும் அறியப் படுதலானும் வேங்கடத்தை எல்லையாகக் கூறினர் ஆனல், குமரியை எதற்காகக் கூறினர் என்றால் குமரியும் தீர்த்தமாக லானும், எல்லாரும அறியப்படுதலானும குமரிகண்டத்துத தெய்வமாகிய கன்னி தவம்செய்து வீடுபெற்ற தலம் ஆதலானும, இன்றும் அத்தீர்த்தத்தில் மூழ்கி எல்லோரும் பிதிர்க்கடனைச் செய்வதுபோல, பாயிரத்தில் ஆசிரியர் அழிந்துபோன நாட்டை நினைவு கூர்நதும், குமரித்தீர்த்தத்தை நினைநதும 'தென்குமரி' என்று தெற்கே எல்லை கூறினா என்றார்.

ஆதலால், பாயிர ஆசிரியா குமரி என்ற சொல்லுக்கு "குமரித்தீர்த்தம்" என்ற பொருள்கொணடு பாடியுள்ளார் என பதனை நச்சினார்க்கினியர் தெளிவாக்கியுள்ளார். ஆதலின், பாயிர ஆசிரியரும் குமரியாறு என்று கருதவில்லை உரையாசிரியரும் குமரியாறு என்று பொருள் கூறவிலலை என்பது தெளிவு.

மாடலன்* என்னும் மறையோன் இக் குமரி . . . நீராடியதைச் சிலப்பதிகாரம் பேசுகின்றது குமரிததீர்ததம் குமரியாறு அல்ல. ஏனெனின், மாடலன் காலத்தில், அதாவது, கி. பி. 2-ம் நூற்றாண்டில் குமரியாறு இல்லை என்பது தெளிவு. இது எதுபோல என்றால் காஞ்சிநகரின்கண் ஓடிக்கொண்டிருநத கம்பையாறு அழிந்துபோய் இபபோது கம்பா தீர்த்தமாகக் காட்சி அளிப்பதுபோல் எனக்கொள்க.

இனி, அவ்விளக்க உரையின் கடைசிப்பகுதி வருமாறு :— "இவ்விரண்டினையும் (வடவேங்கடம் தென்குமரி) காலையே ஓதுவார்க்கு நல்வினை உண்டாம என்று கருதி இவற்றையே கூறினர். வடவேங்கடம் தென்குமரி இவை இரண்டும் அகப் பாட்டு எல்லை ஆயின. என்னை? குமரியாற்றின் தெற்கு நாற்பத் தொன்பது நாடு கடல் கொண்டதாகலின், கிழக்கும் மேற்கும் கடல் எல்லையாக முடிதலின் வேறு எல்லை கூறார் ஆயினர். வேங்கடமும் குமரியும் யாண்டையதென்றால் வடவேங்கடம் தென்குமரியென வேண்டுதலின், அதனை விளங்கக் கூறினர்"

* சிலமபு, 15 - 14 to 16.
" 27 - 69.

ஈண்டு, "குமரியாற்றின் தெற்கு நாற்பத்தொன்பது நாடு கடல் கொண்டதாகலின்" என்ற தொடருக்குச் சில புலவர்கள் 'இன்' என்பதை ஐந்தாம் வேற்றுமை உருபாகக்கொண்டு, எல்லைப் பொருளில் வந்ததாக எண்ணி, குமரியாற்றிலிருந்து தெற்கே இருந்த நாற்பத்தொன்பது நாடுகளை கடல்கொண்டதேயொழிய குமரியாறு அழியவில்லை என்று பொருள் கொள்ளுகிறார்கள். நீக்கப் பொருளிலும், எல்லைப் பொருளிலும் இல் - இன் உருபு களின்மேல் நின்று—இருந்து என்பன சில இடத்துச் சொல் உருபுகளாக வரும் என்னும் இலக்கண விதிப்படி 'குமரியாற்றின்' என்பதற்கு 'குமரியாற்றிலிருந்து' என்று பொருள் கொள்ளு கிறார்கள் அது தவறு என்பதனைக் காட்டுவாம்.

மேலே விளக்க உரையில் நடுப்பகுதியில் உரையாசிரியர் குமரி என்பதற்கு குமரித்தீர்த்தம் என்று பொருள் கூறிவிட்டு, பின்னல் குமரியாறு என்று பொருள் கூறமாட்டார் ஆனால், அவர் கொண்ட பொருள் என்ன? குமரியாற்றின் என்ற சொல்லில் உள்ள இன உருபு ஐந்தாம் வேற்றுமை உருபு அல்ல. அப்படி எடுத்துக்கொண்டது தவறு அதனை ஏழாம் வேற்றுமை உருபாகக் கொள்ளவேண்டும். அப்படிக் கொண்டால் மயக்கம் ஒழியும். உண்மைப்பொருள் விளங்கும்.

'இன்' உருபும் ஏழாம் வேற்றுமை உருபாக வரும் என்பதனை இலக்கணம் வல்லார் அறிவர். குமரியாறும்—49 நாடு களும் குமரிக் கண்டத்தின் பகுதிகளே இங்கே இன் உருபு தற்கிழமைப்பொருளில் உரையாசிரியர் பயன்படுத்தி உள்ளமை கண்கூடு இங்கே இனை இடமாயிற்று கடல் கோள்கள (ஊழிகள்) இரண்டு தடவை உண்டாகி, முதல் ஊழியில (கடல கோளில) 49 நாடுகளும, இரண்டாம் ஊழியில் (கடல் கோளில்) குமரியாறும் அந்த ஆற்றங்கரையில் இருந்த தென்மதுரையும், தனித்தனியாக அழிந்ததனால், உரையாசிரியரும் தனித்தனியாக இரண்டையும் கூறினர்.

"குமரியாற்றின் தெற்கு நாற்பத்தொன்பது நாடுகள் கடல் கொண்டதாகலின், கிழக்கும மேற்கும் கடல் எல்லையாக முடி தலின் வேறு எல்லை கூறாராயினார்," என்று உரையாசிரியர் கூறு வதால் தெற்கின்கண் இருந்த குமரியாறும் 49 நாடுகளும் அழிந்தமையைத் தெரிவிக்கவே தெற்கு எல்லை கூறினர் என்பது அவர் கருத்து.

இளம்பூரணர் உரை

இனித் தொல்காப்பியத்துக்கு இளம்பூரணர் உரையில் என்ன கூறப்பட்டுள்ளது என்பதனைக் காண்பாம். (மகாவித்து

வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள மாணாக்கர் சோடசாவ தானம் சுபபராயச் செட்டியார் பதிப்புப் பாரகக.)

பதவுரை

"'வடவேங்கடம தென்குமரியாயிடை' என்பது வடக்கின் கண்ணதாகிய வேஙகடமும், தெற்கின் கண்ணதாகிய குமரியும் ஆகிய அவற்றை எல்லையாக உடைய நிலத்து" எனபதே. இதில் உரையாசிரியா குமரியாறு என்று கூறவில்லை என்பது கண்கூடு

விளக்கவுரை

இனி, இளம்பூரணர் கூறிய விளக்கவுரையைக் காண்பாம்:- "மங்கல நிரையாகலின் வடககு முற்கூறபபட்டது. கடல் கொள் வதன் முன்பு, பிறநாடும் உண்மையின் தெறகும் எல்லை கூறப்பட்டது. கிழக்கும் மேற்கும் பிறநாடின்மையின் கூறபபடாவாயின", என்பதே.

பாயிர ஆசிரியர் ஏன் தெற்கு எலலை கூறினார் என்றால், அவர் காலத்துககு முன்பு கடல்கோள ஏற்பட்டு, குமரியாறும், 49 நாடு களும் அழிந்தன எனபதைத் தெரிவிததறபொருட்டு எலலை கூறினர் எனறார் கிழககும் மேற்கும் அவ்வாறு நாடுகள் இல்லாமையால் எல்லை கூறப்படவிலலை என்பது கூர்ந்து நோக்கத்தக்கது.

தொல்காப்பியர் காலததில (அதாவது கி. மு 6000-ல்) குமரியாறும், குமரிககோடும, நம மதுரைநாட்டின் பகுதியும் குமரி யாற்றங்கரையில் இருநததும ஆன தென் மதுரையும் இருந்திருந் தால் "கடல் கொளவதன்முன்பு" என்று கூறமாட்டார். ஆனால், எபபடிக் கூறியிருபபார் என்றால், "தொல்காப்பியர் காலததில் பிறநாடும் உண்மையின தெற்கு எல்லை கூறப்பட்டது" என்று கூறியிருப்பார். வேங்கடத்தின் வடக்கே வடுகு—கருநடம் முதலிய நாடுகள உண்மையின் வேங்கடம் எல்லையாகக் கூறப் பட்டது குமரித் தீர்த்தத்திறகு தெற்கும் நாடுகள் இருநது அழிந்துபோனமையின் கடல் கொள்வதன் முன் பிறநாடுகள் உண்டு என்று உலகர்க்கு அறிவிக்க தெற்கும் எல்லை கூறினர்

இனி, விளக்க உரையின் கடைசிப்பகுதியைப பார்க்கலாம்:- "பிற இரண்டு எல்லை கூறாது இம் மலையும் ஆறும் கூறியது. அவை தீர்த்தமாகலானும், கோடிலவாதலானும், எலலாராலும் அறியப்படுத லானும் என்பது • இவை அகப்பாட்டெல்லை." என்பதே.

மலை கோடில ஆதலானும எல்லாராலும் அறியப்படுத லானும் வடக்கே மலையைக் கூறினா என்றார். அதுபோலவே,

ஆறு தீர்த்தமாக ஆகிவிட்டபடியாலும், அத்தீர்த்தம் கேடில ஆதலானும், எல்லாரானும் அறியபபடுதலானும் தெற்கே குமரித் தீர்த்தத்தைக் கூறினர் என்றார் *

இதனால் இளமபூரணர் கருத்தும் நச்சினர்க்கினியர் கருத்தும் ஒன்றே என்பது காண்க. உரையாசிரியா குமரி என்பது குமரியாறு என்று கருதியிருந்தால் "அது கேடில வாதலானும்" என்று கூறியிருக்கமாட்டார என்னெனின் அந்த ஆறுதான் அழிந்துபோயிற்றே அதனை எபபடிக கேடிலது என்று கூறுவார் குமரியாறு தீர்த்தமாகிவிட்டபடியாலும, அத்தீாததத திற்கு என்றும கேடு இல்லை ஆதலாலும் அவ்வாறு கூறினா என்று கொள்க சிலப்பதிகார காலத்திலேயே மாடலன் கூற்றால் குமரியாறு இருக்கவில்லை குமரித்தீர்த்தமே இருந்தது. அந்தத்தீாத்தத்தில அவன் ஆடிச்சென்றான் என்பது வெளிப் படையாய் இருக்க, சிலப்பதிகார ஆசிரியர் காலத்துக்குப் பிற் பட்ட உரையாசிரியா காலததில குமரியாறு இருந்தது என்பது பொருந்தாது. ஆதலின், தொல்காபபியர் காலததுக்கு முன்பே குமரியாறும—குமரிக்கோடும்—குமரியாற்றங்கரையில் இருநத தென்மதுரையும் அழிநதுபோயின என்பது வெள்ளிடைமலை. அப்படி அவைகள் அழிநதுபோனது கி மு 9564-ல் ஏற்பட்ட கடல் கோளாலதான் எனபது சரிததிரம

ஆதலின், இவவிரு உரையாசிரியர்களின் கூறறுக்களை நோக்கின் குமரி என்ற சொலலுக்கு, பாயிர ஆசிரியா குமரித் தீாத்தம என்றே பொருள்கொண்டு பாடியுள்ளாா என்பது வெளியாகின்றது இதனால, தொல்காப்பியர் காலத்துககு முன்பே குமரியாறு அழிந்துவிட்டது என்பது பசுமரததாணி போல் நாட்டப்பட்டது.

தொல்காப்பியப் பாயிர விருத்தி

இனித் தொல்காபபியப் பாயிர விருத்தியில் சிவஞான வர் கூறுவதாவது :—

பதவுரை

"வடக்கின்கண் வேங்கடமும் தெற்கின்கண் குமரியும் எல்லை யாக உடைய அவ்விடமாகிய தமிழ் மொழியைக் கூறும் நல்ல உலகத்தின்கண்" என்பதே.

---

* குமரி = யாறு - கடலுமாம். 'தொடியோள்பவ்வம்' என்றாராதலின் Vide சிலம்பு - வேங்கடசாமி நாட்டார் உரை - கழகப்பதிப்பு pap. 354.

## விளக்கவுரை

தமிழ் நாட்டிற்கு வடக்கட் பிறவெல்லையும் உளவாக வேங்கடத்தை எல்லையாகக் கூறினர்; அகத்தியனார்க்குத் தமிழைச் செவியறிவுறுத்த செந்தமிழ்ப் பரமாசாரியனாகிய அறுமுகக் கடவுள வரைப்பு என்னும் இயைபுபற்றி என்பது.

தெற்கட் குமரியாருகலின் அதுவே எல்லை ஆயிற்று கிழக்கு —மேற்குக் கடல் எல்லையாகலின் வேறு எல்லை கூறுராயினா

"வடதிசை மருஙகின் வடுகு வரம்பாகத
தென்திசை யுள்ளிட் டெஞ்சிய மூன்றும்
வரைமருள் புணரியொடு பொருது கிடநத
நாட்டியல் வழகக நான்மையின் கடைக்கண்
யாப்பின திலக்கணம் அறைகுவன் முறையே"

என்று சிறுகாக்கை பாடினியார் தெற்குக்கடல் எல்லை கூறியது, குமரியாறு கடல்கொண்ட பிற்காலததுச செய்ததெனை அறிக" என்பதே.

இதில் சிவஞான முனிவர் குமரி என்பதற்கு குமரியாறு என்றே பொருள்கொண்டுள்ளது விளஙகும சிறுகாக்கை பாடினியம குமரியாறு கடலகொண்ட பிற்காலத்துச் செய்யப் பட்டது என்றால, தொல்காப்பியம் கடல் கொள்ளா முற்காலத் துச் செய்ததெனவே பொருள்படும. இதனை மனத்திற்கொண்டே சிலவித்துவான்கள் தொல்காப்பியர் காலத்தில் குமரியாறு இருந ததது என்றும், அதனுல் தொல்காப்பியம் இரண்டாம ஊழிககு (திரேதாயுகததுக்கு) முன்னமே, அதாவது திரேதாயுகத்தில் செய்யப்பட்டது என்றும் கூற முன்வந்துளளார்கள்

தொல்காபபியர் காலத்தில் குமரியாறு இருநதிருநதால், குமரியாற்றங்கரையில் இருநத தென்மதுரையும் இருநதிருக்கும். தென்மதுரையில் நடைபெற்ற தலைச்சங்கமும் இருநதிருக்கும். ஆனல தொல்காப்பியர் காலத்தில் தென்மதுரையும், குமரி யாறும், தலைசசஙகமும் இல்லையென்பது வெளிப்படை. அவைகள் அழிந்துபோன பின்புதான், பாண்டியர்கள் தஙகளுடைய அரச இருக்கையை தென்மதுரையினின்றும் பொருநை ஆற்றின் முகத் துவாரத்தில் இருந்த கபாடபுரத்துக்கு மாற்றினர்கள். தலைச் சங்கம் அழிந்துபோய்விட்டபடியால் கபாடபுரத்தில் இடைச் சங்கத்தை நிறுவினர்கள். தலைச்சங்கத்துக்கும இடைச்சங்கத் துக்கும் இடைப்பட்ட காலம் 9564 B. C.—6805 B. C., அதாவது 2759 ஆண்டுகள். அந்த இடைப்பட்ட காலததில் கொற் கையில் அரச இருக்கையை உண்டாக்கி அங்கே ஒரு தமிழ்ச் சங்கத்தை நிறுவி நடத்திவந்தான் பல் யாகசாலை முதுகுடுமிப்

பெருவழுதி என்பான், இந்தக் கொற்கைத் தமிழ்ச்சங்கம் கி. மு. 7500 முதல் கி மு 6900 வரை 600 ஆண்டுகள் நடைபெற்றது. கொற்கைத் தமிழ்ச் சஙகததுக்குபபின ஏற்பட்ட கபாடபுரத் தமிழ்சசங்கமாகிய இடைசசஙகததிலதான் தொல்காப்பியம் என்னும நூல கி மு 6000-ல் அரங்கேற்றப்பட்டது. அதன் பிறகுதான் தொல்காப்பியர் சஙகத்தில் தலைமை வகித்தது. தொலகாப்பியம இடைச் சங்கத்துக்கு நூலாயிற்று. இடைச சங்கம் ஆரமபிதது 805 ஆண்டுகளின் பின்புதான் தொல்காப் பியம செய்யபபட்டது.

இடைச்சஙகமும் அது இருந்த கபாடபுரமும் கி. மு. 3105.ல் துவாரகைஅரசன் கண்ணபிரானல் அழிவுற றன என்று வியாச பாரதம் கூறுவதாக மகாவித்துவான் இரா. இராகவய் யங்கார் அவர்கள் தம்முடைய 'தமிழ் வரலாறு' என்னும நூலில் பக்கம் 36-ல கூறுகிறார் இடைசசங்கமோ 3700 ஆண்டுகள் நடைபெறறது என்று நக்கீரர் கூறுகிறார். ஆதலின், (3700+3105)=கி. மு 6805-ல் இடைச்சங்கம் தொடங்கியிருக்க வேண்டும். கபாடபுரமோ தாம்பிரவாணி ஆற்றின் முகத்துவா ரததில் இருந்தது. குமரியாறும் தென்மதுரையும் அழியாது இருந்திருநதால் இடைச்சங்கததைக் கபாடபுரத்தில் நிறுவுவது எதறகு?

தலைச்சஙகம நிறீஇயவன் காய்சினவழுதி என்ற இரண்டாம் நிலநதருதிருவிற் பாண்டியன். இறுதி அரசன் கடுஙகோன். கடுஙகோனுக்கு நிலநதருதிருவிற் பாண்டியன் என்ற மறுபெயர் கிடையாது

இடைச்சங்கம நிறீஇயவன் வெண்டேர்ச்செழியன். இவ னுக்கு நிலந்தருதிருவிற் பாண்டியன் எனற பட்டம கிடையாது. அபபடி இருக்கக கடுஙகோனும் வெண்டேர்ச்செழியனும் ஒரு வனே என்று வாய்கூசாது கூறுவார உளர். இவர்களுக்கு எல்லாம் பதில் கூறுவது வீண் காலக்கழிவேயாகும்.

உரையாசிரியர்கள் கூற்றுக்கும சிவஞானமுனிவர் கூற் றுக்கும வேற்றுமை உண்டு என்பது தெரிகிறது. சரிததிரத்தை ஒட்டிவரும உரையாசிரியர் கூற்றை நம்புவதா? அல்லது சரித் திரததுககு ஒத்துவராத தொல்காபபியப் பாயிரவிருததியில் காணப்படும் கூற்றை நம்புவதா? என்பது வாசிப்பவரைப் பொறுதது உள்ளது.

இதுகாறும் ஆராய்நதவாற்றால், உரை ஆசிரியர்கள் கருத் துக்களும் பாயிர ஆசிரியர் கருத்தும் குமரி என்பது குமரித் தீர்த்தமே ஒழிய, குமரி ஆறு அல்ல என்பது தேற்றம்,

24

இனி, ஊழி என்ற சொல் யுகம் என்ற பொருளைக்கொண்டது எனச் சில புலவர்கள் மனத்திற்கொண்டு, முதல ஊழி என்றால் கிரேதாயுகம் என்றும், இரண்டாம ஊழி என்றால் திரேதாயுகம் என்றும் கூறுவர். அவாகள் எலலாம தமிழ நாட்டில் வழக்கத்தில் இருநத, அல்லது, இருக்கிற சகங்களின் வரலாறுகளையும், யுகக்கிரமம், பிரபவ முதலாக உள்ள அறுப தாண்டுத திட்டம் முதலியவைகளின் வரலாறுகளையும் நோக்குவ ...

கிரேதாயுகம் முதலிய நான்கு யுகஙகளின் திட்டம் பாரத காலத்தில் (கி மு 3105) இருநத வியாசரால் ஏற்படுததப பட்டது. அதற்குமுன் யுகததிட்டம் கிடையாது யுகம = ஆண்டு என்ற பொருளில்தான் அதறகு முநதி வழஙகப்பட்டு வந்துள்ளது இன்றைக்கும் தெலுங்க நாட்டில் யுகாதி என்றால் ஆண்டுப்பிறப்பு, அதாவது வருட ஆரமபம் என்று பொருள் கொள்ளுகிறார்கள். அதனால் தெலுங்கருடைய ஆண்டுப்பிறப்புக்கு யுகாதி என்ற பெயர் ஏற்பட்டது இவ்வழககம் சதுர்யுகத் திட்டம் ஏற்படாததன்முன் ஏற்பட்டதாகும.

சாலிவாகனன் காலத்தில் (கி பி 78) இருந்துதான் அறுப தாண்டுத் திட்டம் ஏற்பட்டது. அதற்குமுன் எல்லாம ஒவ்வொரு அரசன் பெயரால் இனன அரசனுடைய இததனையாவது ஆண்டு என்றுதான் கணக்கிட்டுவநதாாகள் இது கலவெட்டுக களால் அறியககிடக்கின்றது அறுபதாண்டுத் திட்டமும, யுகத் திட்டமும் ஏற்படாமுன்னம் உண்டான நூல்களுககுப பின்னால ஏற்பட்ட கால வாய்பாடுகளைப பயனபடுததுவது பொருநதாது

தமிழ்நாட்டில் மேல்வாயுஇலக்கம் கீழ்வாய்இலக்கம முதலிய வாய்பாடுகளைப் படிததால்தான் இலக்கியங்களில் காணபபடும் வெள்ளம—ஆம்பல்—குமுதம்—நெய்தல்—யுகம்—கறபம் முதலிய சொற்களின் பொருள்கள் விளஙகும சிலப்பதிகாரம—வேங்கடசாமி நாட்டாா உரை—பககம் 354-ல் குமரி = யாறு ; கடலுமாம் என்று கூறப்பட்டுள்ளது. ஆதலின் குமரி = கடல என்ற பொருள் ஏற்படுகிறது ஆதலால, குமரியாறு என்றால் குமரிக் கடல் என்றே நினைக்கவேண்டியிருக்கிறது நூலாசிரியரும உரையாசிரியரும அவ்வாறு நினைத்துக் கூறியிருந்தாலும் இருககலாம் ஆதலின், தொலகாப்பியர் காலத்தில் குமரியாறு என்பதே முடிந்த முடிபு.

# உணவின்றி உயிர்வாழும் வியப்பு

குடகு தனலட்சுமி என்ற பெண்ணை நேரிற்கண்ட சென்னை உயர் முறைமன்ற நடுவர் ஏ. எஸ். பி. ஐயரவர்கள் அவளைபபற்றிய சில அரிய செய்தியை நாளிதழ்களில் வெளியிட்டுள்ளார்கள். அது வருமாறு :

தனலட்சுமியுடன் நான் 1½ மணிநேரம் பேசிக்கொண்டிருந்தேன் நல்ல உடல்நலததுடன காணப்பெற்றாள. பெண்களுககே உரிய இயற்கையான குணங்களும் நாணமும் கொண்டிருநதாள அவளது உணவுபறறிய வரலாறு முழுதும என்னிடம் கூறினாள். அவளுககு இபபோது அகவை 17 ஆகின்றது மூனறாணடுகளுககு முன்வரை மற்றோாகளைப்போலவே உணவு உட்கொண்டுவநதாள பிறகு திடும்எனப் பசி, நீர்வேட்கை போயவிட்டது. சில வேளைகளில சோறோ காபி தேநீரோ அருநத விரும்பினால், அவை உட்கொள்வதற்குச சுவையாகத் தோன்றுமாம விருபபமில்லாதபோது கட்டாயபபடுத்தி உண்ணசசெய்தால் எலலாம கைபபாக இருக்குமாம்; குமட்டல் ஏற்பட்டு வாந்தியும எடுததுவிடுவாளாம

இவ்வாண்டு மேததிஙகள முதல் நவம்பர்த்திங்கள வரை உணவு, நீா எதையும அவள் உட்கொள்ளவில்லை, அவள் தநதையின் முதலாளி திரு. ஜி எம். மஞசுநாதையா (குடகு அசெமபிளி எம எல் ஏ) அப்பெண்ணைபபற்றி ஆய்ந்து பார்பபதற்கு மெர்க்காராவிலுளள மருததுவசாலையில் கொண்டுவிட்டாா. அஙகே இரப்பாக் குழாய்வழியாக அவளுக்கு உணவு செலுததபபட்டது அவவாறு அவள் உணவு உட்கொண்டதில அவளுடைய உடலின எடை குறைந்துவிட்டதாம

இதுகாலை மருத்துவ சாலையிலிருநது வீட்டுக்கு வந்துள்ளாள். உணவுண்பதில்லை, இப்போது அவள் உடலின் எடை கூடியிருக்கிறதாம் அவளது எடை 98 இராத்தல் இருந்தது. 4 அடி 11 அங்குல உயரமுள்ள ஒரு பெண்ணுக்கு இருக்க வேண்டிய எடைதான் அது நன்கு செரித்த நீரை மருத்துவாகள் வெளியே எடுத்து ஆராய்ச்சிசெய்து பார்த்தபோதும் அது சரியாகவே இருநததாம்.

இவள் கௌடா என்ற வகுப்பைச் சேர்ந்தவள். இவ்வகுப்பினர் புலால உண்பவா. குழநதைப பருவததில புலால் உணவு உட்கொண்டுவநதாள. ஆனால், மூன்றாண்டுகளுககுமுன் அதை

வெறுத்து விட்டுவிட்டாள். அவள் வீட்டிலுள்ள மற்றவர் களுக்குச் சமையல் செய்தாலும் தான்மட்டும் உண்பதில்லை. சில மாதங்களுக்குமுன் புலால் உணவு சமையல் செய்வதையும விட்டுவிட்டாள். இப்போது காய்கறிகளை மட்டும சமைக்கிறாள். ஆனால் அவைகளையும் உண்பதில்லை. அவளைப் பார்த்தால் உண்ணாதவள் என்று சொல்லமுடியாது. வெளிப்பார்வைக்கு அவள் வேடம்போடவில்லை. தனித்து இருக்கும்போதுகூட அவள எதையும் உட்கொள்வதில்லை. உணவு உண்ணாததால் அவள் வெளிக்குப் போவதில்லை படக்காட்சி பார்ப்பதில அவளுக்கு மிக விருப்பம் நீராடல் முதலிய யாவும் செய்கிறாள. தன் சாதியாரிடம் அன்புகொண்டிருக்கின்றாள்.

அவளைக் காற்றுண்டு வாழ்பவள் (வாயுபட்சணி) என்றே கூறலாம். நம் புராணங்களில் வரும் முனிவர்கள்தாம இவ்வா றிருந்ததாகப் படித்திருக்கிறோம் உணவுநிலை கண்டறியும பேரறிஞர்களையும் புகழ்பெற்ற மருத்துவ வலலுநர்களையும உள நூற் புலவர்களையும அங்கே அரசினர் அனுப்பி அவளைப் பரிசோதித்தறியச் செய்யவேண்டும என்று எழுதியுள்ளனா

குறிப்பு: முற்காலத்தில் நம் பண்டைத தமிழ்சசான் றோரும் அவர் வழியினரான சித்தர்களும் மனவொருமை (யோகம்)யினால் ஊண் உறக்கமின்றி நீருமகூட அருந்துத லின்றி இருந்ததாக நூல்கள மூலம் தெரிகின்றது. ஆனால இத் தனலட்சுமி என்ற இளமபெண், யாதொரு யோகப பயிற்சியோ வேறு சாதனஙகளோ இன்றி இயற்கையாகவே இவவாறு நீரும ஊணும் இன்றிப பலதிங்கள் உயிாவாழ்வதாயின இப்பெண்ணின் உடலமைப்போ பிறவாறு காணவொண்ணாத தெய்வீக வலியோ இருத்தல் வேண்டும். இதனை அரசியலாா முன்வந்து அறிவியல் அறிஞர்களைக் கொண்டும், சிறந்த அனு பவம் பெற்ற ஆங்கிலப் பட்ட மருத்துவர்களைக் கொண்டும் நன்கு ஆய்ந்து அறிக்கை வெளியிடின் சிறந்த உயர்ந்த இயற் கையை உலகிற்கும் சிறப்பாக நம் நாட்டிற்கும வெளிப்படுத்தும் சீரிய முயற்சியாகும். இதனை அரசியலார் நன்குணர்ந்து அதற் கானவை செய்து உண்மையை உணர்ததுவது சாலச் சிறந்ததாகும, ஆட்சியாளரின் கடமையும் உரிமையுமாகும. "எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள், மெய்ப்பொருள் காண்ப தறிவு," என்பது வள்ளுவா வாய்மொழி.

தென்னிந்திய தமிழ்ச்சங்கம் :

# தமிழ்ப் புலவர் மாணவர் தேர்வு

சென்னைப் பல்கலைக் கழக வித்துவான் தேர்வுக்கு இச்சென்னை மாநிலத்தில் நிறுவப்பெற்றுள்ள பல புலவர் கல்லூரிகளிலும் பயின்று வருகின்ற மாணவர்களும், மேற்படி வித்துவான் பட்டத் தேர்வைப் பெற்று நலமடையக் கருதிப் பயின்றுவரும் ஆசிரியர்களும், தமிழ்ப்பற்றுளார்களும் ஷை தேர்வில் நல்ல தேர்ச்சியடைந்து சிறக்கும் வகையில் உதவியாகவும் தூண்டுதலாகவும் திருநெல்வேலித் தென்னிந்திய தமிழ்ச்சங்கத்தார் சென்ற இரண்டாண்டுகளிலும் புலவர் கல்லூரிகளின் ஆசிரியர் துணைகொண்டு தேர்வுகள் நடத்தி வகுப்புக்கு மூன்று பரிசுகளாக ஒன்பது பரிசும் தகுதித் தாள்களும் வழங்கி வந்துள்ளார்கள்.

அம்முறையில் 1952—1953 **தமிழ்ப்புலவர் மாணவர் தேர்வு,** 1953 **பிப்ரவரி௴ 15௳ முதல் 20௳** (மெய்கண்டார் ஆண்டு 730, மாசித் திங்கள் 5 முதல் 9௳) முடிய பல ஊர்களிலும் அவ்வப் புலவர் கல்லூரிகளில் வைத்து நடத்தப்பெறும்.

வித்துவான் புகுமுக வகுப்பு மாணவர் ரூபாய் ஒன்றும், வித்துவான் முதனிலை வகுப்பு மாணவர் ரூபாய் இரண்டும், வித்துவான் இறுதிநிலை வகுப்பு மாணவர் ரூபாய் மூன்றும் தேர்வுக் கட்டணமாகச் செலுத்த வேண்டும்.

கல்லூரியிற் பயிலாது தனித்து ஷை தேர்வுகட்கு எழுதுகின்ற பிறரும் மேற்கண்டபடி தேர்வுக் கட்டணம் செலுத்தவேண்டும். இக் கட்டணம் அவரவர்கள் தேர்வு விண்ணப்பத்தாளுடன் 1953 **ஜனவரி௴ 20௳-க்குள்** சங்க அலுவலகத்துக்கு அனுப்பிவைக்கவேண்டும்.

இண்டர்மீடியேட் III D. தமிழ் மாணவர்களும் வித்துவான் முதனிலைத் தேர்வுக்கு விண்ணப்பித்துத் தேர்ச்சிபெறலாம். விண்ணப்பங்களைத் தங்கள் தாள்களில் சிறிது விளக்கத்துடன் எழுதி அனுப்பின போதும்.

நெல்லை,
4—11—52.

# செய்திகளும் குறிப்புக்களும்

பொது மொழிபற்றி நேரு :

இந்திய முதலமைசசா நேரு 9-10-'52 அன்று மாலை ஜலந்து கிரவுண்டில் பெருந்திரளான பெருமககள் கூட்டததிடையே பேசிய பொருள்பொதி பேசசின் ஒரு சிறுகுறிப்பு வருமாறு :

இந்தி மொழியைப்பற்றிக குறிப்பிடுகையில் "தென்னாட்டில் வடக கரதியா ஆதிககம் இருபபதாகக் கூறபபடுகிறது. டிலலியில் செகரட்டேரிய அதிகாரிகள பலா தென்னியந்தியராக இருப்பதாகவும ஆகவே தென் இநதியா ஆதிககம வடககே இருப்பதாகவும் கூறப்படுகிறது. அவாகள திறமையின பேரிலேயே அமாததபபடடிருககிறாாகள. இவ்வாறு தென் இநதிய அல்லது வட இநதிய ஆதிககததைப்பற்றிக கூறுவதில் பொருளில்லை," என்றா மேலும் "இநதியாவுககு ஒரு பொதுமொழி கட்டாயம, அதற்குஇந்தி தோந்தெடுககப்படடிருககிறது. ஆஙகிலம் பொதுமொழியாக இருகக முடியாது. இநதியைவிடடால வேறு எதைப் பொதுமொழியாகக கொளளமுடியும? வேறெதையுமபற்றி நான நினைகக முடியவிலலை. சிலநாடடுமொழிகள மிகவும வளாசசியடைந்திருககின்றன. இந்தியைவிட வஙகாளியும தென்னிநதிய மொழிகளும வளாசசியடைந்திருககின்றன. இந்தி கற்பது எளிதுதான் நான் பிறர் மீது இந்தியைததிணிப்பதுபற்றிப் பன்முறை எசசரிததுப் பேசியிருககினறேன. எனது மாகாணத்தில உருது வழஙகுமிடததில் பெயாப பலகைகளில் எலலாம உருதுவில எழுதியிருந்ததைப பாாததுவிட்டு நான் அயலானுகவே என்னைக கருதவேணடியதிருககிறது," என்றா

**குறிப்பு** வடநாடடில் தென் இநதியரைப்பற்றியும, தெனனாட்டில வடஇநதியரைபபறறியும நலலெணணம நிலவாமை விளஙகுகின்றது. இககசப்பு இந்தியைத திணிப்பதாலமிகும எனபதும அப்பேசசிலேயே புலனுகினறது. வடநாடடவா தெனனாடடு மொழியுள ஒனறைப்பயில வேணடுமெனறு கூறுவதும அவாகட்கோா பெரும சுமையேயாகும அது போன்றதே தெனனாட்டவாககு இந்தியும் எந்த மொழியும எவாககும மக்களோடு பயிலநேருஙகால இனறியமையாமைபற்றித தானே வந்துவிடும. அதுவணிகததின பொருடடு வெளிநாடு செலலும் வணிகப் பெருமககள, பாமா, மலேயா, சிஙகளம, சீனம முதலிய மொழிகளை மிகவும் எளிதாகப்பயின்று அம்மொழி வல்லாரும வியப்புறப் பேசுகின்றனா. சிலா எழுதவும் செய்கினறனா.

ஆகவே, உலகத்தில இப்பொழுது வழக்கிலுள்ள எல்லா மொழிகளுக்கும் பழைமையதாய், ஆறுயிரம ஆண்டுகளுக்கு முந்திய பழநூல் உடையதாய், வளமிக்கதாய, குறைபாடிலதாய, தனிததியஙகுவதாய, இயற்கை ஒலியுடையதாய, எளிமையதாய், பெருநூல பரப்பினதாய் விளஙகுவது தமிழ். அததமிழைத தமிழ் மககள் இருபாலா அனைவரும் முதறகண் கற்க வழிசெயது ஆஙகிலத்திடதது இநதி வருஙகால் கற்பது சுமையாகாது. இளஞ்சிறு மாணவாகளை மூன்று மொழிகளைக்கறக வற்புறுத்துவது முறையாகுமா? பள்ளியிலுள்ள குறைந்த காலததையும மூன்றுகப் பகுத்துவிடடால மாணவா எஙஙனம திறமை எயதுவா? மாகாண ஆட்சி தாய்மொழியிலும, மததிய ஆட்சிததொடாபு இந்தியிலும் அமைத்துககொள்வதே சாலப்பொருததம. அத்தொடர்புககு இனறியமையாதவாகளமடடும அவ்வக்காலததுக கற்கசசெயவது எற்புடைதது.

## மாமல்லபுர ஓவியச் சிறப்பு

சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழக ஆட்சிப் பொறுப்பாளர் திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்களுடன் கழக அலுவலாளர்களும் பிறருமாக நாங்கள் பதினைவர் 18-10-'52 சனிக்கிழமை காலை 8-30-க்குச் சென்னையிலிருந்து நிலப்பொறியூர்தி வழி (மோட்டார் பஸ்) புறப்பட்டோம். இரவிலிருந்து புறப்படும் நேரம்வரை நல்லமழை. எங்களில் பலர்க்கும் புறப்படுவது ஐயமாயிற்று. ஆனால் ஆட்சிப் பொறுப்பாளரின் உறுதியான நம்பிக்கையும் தளரா ஊக்கமும் யாவரையும் புறப்படுமாறு தூண்டின. புறப்பட்டோம், ஊர்தி நண்பராயப் பின்னும் ஐவர் அமைந்தனர். ஊர்தியில் செல்லும் போதும் மேகமும் மப்பும் மேல்மூடி என விளங்கின. வலவரும் (Driver) மிகவும் நல்லவர். அன்பும் அமைதியும் ஆண்மையும் ஒழுக்கமும் நண்பும் பொருந்தியவர். அவ்வூர்தியில் செல்லுங்கால் உரிமை ஊர்தியில் செல்வார் எய்தும் இன்பமே யாவரும் எய்தினர்.

10-30 மணிக்குத் திருக்கழுக்குன்றம் வந்து சேர்ந்தோம். நனி நாகரிக வல்லவன்றன் குறிப்புணர்ந்து கூறும் நயமொழியால், ஆங்குள்ள திருக்கோவில் சென்று அமைதியாக வழிபாடு செய்து அருட்கொடை (பிரசாதம்) பெற்று மீண்டும் ஊர்தி நண்ணினேம். 11-30-மணிக்கு மாமல்லபுரம் சென்று சேர்ந்தோம். இருவகைக் கட்டுச் சோறும் பழவகைகளும், சிற்றுணவும் கைவயம் இருந்தன. இவற்றையெல்லாம் ஆங்குள்ள சாவடியில் ஒரு தனியறைபெற்று வைத்துப்பூட்டிவிட்டு வியத்தகு காட்சியாம் ஓவியச் சிறப்புக்களைக் கண்ணுற்றுக்களிக்கச் சென்றனம். பழம்பொருள் பேணும் ஆட்சித்துறையினர், ஆங்காங்குள்ள விளக்கங்களைக் காலக்கணக்கொடு பொறித்து யாவரும் உணருமாறு அவ்வவ்விடங்களில் வலையகத்தமை நிலைப்பலகைகள் நாட்டியுள்ளார்கள். அங்ஙனம் அமைந்த விளக்கங்கள் இருபதினைமேலன. ஒரு சிறிதுபார்த்து உச்சிவேளை உணுகை கொள்ளச் சாவடி (சத்திரம்) மீண்டனம்.

பாறைமேல் ஏறியும் இறங்கியும், அரும்பெரும் ஓவியச் சிற்பங்களைக் கண்டின்புற்றும், வழிகாட்டியாக வந்த மாணிக்கத்தின் கலவைமொழி நகைச்சுவை கேட்டும் பசிமிக்கிருந்தது. அனைவரும் உடனமர்ந்து உவகையோடும் உண்டனம். உணவும் நனிமிகுசுவையாய் இனிமை நல்கிற்று.

மீண்டும் காவியம் விளக்கும் ஓவியங்காணப்புறப்பட்டோம். ஊர் நடுவண் திகழும் திருமால் கோவில் சென்று வழிபட்டோம். திருக்கழுக்குன்றக் குருக்கள்போல் இக்குருக்களும், அன்பு நிறைந்த நல்லார். வழிபாட்டுத் துணையாய வேண்டுவன செய்தனர். இவ்வூர்ப் பூதத்தாழ்வார் அருள்தோற்றம் எய்திய திருவூர். கலங்கரை விளக்கம் ஏறிக்கண்ணுற்றேம். அதனைக்கண்ணுறத் தலைக்கு மூன்றணாக்கட்டணம். 94 அடி உயரத்தில் 84 படிகளைக் கொண்டதாய் இலங்குகின்றது. கழியருகாமையும் கடலருகாமையும் உள்ள ஓவியங்கள் கண்டின்புற்றேம்.

இவ் ஓவியங்கள் வியத்தகு சிறப்பின. ஆயிரத்தைஞ்ஞூறு ஆண்டுகளின் பின்னும் ஆயிரத்திருநூறு ஆண்டுகளின் முன்னும் அமைந்துள்ளன. ஒரே பாறையில் திருக்கோவில் அடிதொட்டு முடிகாறும் அறுத்துச் செப்பனிட்டமை எவர்க்கும் வியப்பினை ஊட்டாதிரா. திருவுருவங்கள் பேணுவாரின்றிக் காணுவார் செய்யும் கொடுமைகட்கு உள்ளாகி

யும மாணலம குன்றாது இன்று செய்தது போல் காட்சி அளிக்கின்றன. எல்லா ஓவியங்களும இயற்கை எழிலை உடையன எடுத்துக்காட்டாகக் கறவைமாட்டில பால்கறக்கும பானமையும, அப்பால் மாடு தன் கன்றினை நாசசுழற்றி நக்கும் நயனார் தோற்றமும் மெய்யே என மருளும பாஙகின. முனிவா ஒருவா ஒற்றைக்காலூன்றித தவமபுரிகின்றனா அவாதம் என் பெழுந்தியஙகுமயாக்கையும உணணுமருஙகுலும் உணமை ஒண்மையாயத தோன்றுகின்றன. பெணணொருகூறன திருவுரு கண்ணையும் கருத தையும ஒருஙகு கவரும காட்சிய. எல்லாசசிறபஙகளும் அததகையவே, பண்டைசசிறபியா கைததிறனும் பல்லவமனனா மெயததிறனும என றும நின்று நிலவும நினைவுககுறியாக நிற்கினறது. மேற்புல அறிஞரும வியக்கினறனா. இளநீரும மாலைசசிற்றுணவும் உட்கொணடனம். 6-30-கசு மீணடனட.

## தமிழில் அரசியல் ஆட்சிமுறை அறிக்கை

விடுதலை பெற்ற நம் நாட்டில் 15-11-52-ல் முதன் முதலாகத தமிழில அரசியல் ஆட்சி முறை அறிககையை அரசியலாா வெளியிடடுள்ளனா. இது 1949 50-ஆம ஆணடிறகு தஞ்சைமாவட்டத்தின் ஆடசி முறைபபற்றியதாகும். மாவட்ட வாரியாக ஆடசி அறிக்கை வெளியிடபபெறுவதும இதுவே முதன முறையாகும. நம தமிழ் மொழிக்கு முதன் முறையாககிடைத்துளள பெருமைககு மகிழகினறோம.

## பாம்பு தீண்டிய அன்பர் பிழைத்தெழுந்தார் :

வநதிரா இருப்பு சைவசிததாந்த சபையின சாாபில சிததிவிநாயகர் கோவில சாாபில பசனை நடந்து கொண்டிருந்த போது, அககூட்டத்தில ஒருவாககு-கடவுள என்ற வி கிருஷணத தேவருக்குப் பாம்பு கடிததுத துன்புறறா அப்போது அப்பசனை பாடுவோாில ஒருவரான முததுச சாமி ஓதுவாா திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிய விடந்தீாத்தபதிகம் பாடியவுடன நஞசு இறஙகிக் குணததுககு வந்து பிழைததெழுநதாா இவ்வியத்தகு செயலைககணட அவ்வூர்ச சிததவைததியரும் காசிவிசுவநாத சுவாமி கோயில மேற்பாாவையாளருமான திரு எம். திருவேஙகடேசன மகிழநது, திருநாவுககரசு சுவாமிகள திருவுருவம செயது அவ்வுருவை வைதது வழிபடுதற்குக் கட்டிடமும கட்டிததருவதாக உறுதி மொழி கொடுததாா.

**குறிப்பு :** கடவுள நமபிக்கை பிறழ்ந்து வரும் இக்காலததில் இது போனற அரிய பெரிய வியத்தகு செயல்கள நிகழ்ந்து வருவது, இறைவன திருவருள் என்றும் நிலைத்திருககும் உண்மையை நிலைநாட்டுவதாக வுள்ளது

---

திருநெல்வேலித, தென்னிந்திய சைவசிததாநத நூற்பதிப்புக் கழகததிற்காக, சென்னை 2-140, பிராட்வே, அப்பர் அச்சகததில், திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர் : வ. சுப்பையா.




சிலம்பு ௨௭ | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௮௩, மார்கழி
சனவரி, 1953 | பரல் ௫

# தமிழகஎல்

இயற்கை பொருந்த அமைந்தது நம தமிழ்மொழி ; அது மெல்லிய ஒலிநயமும், சிறு சிறு சொறகளும கொண்ட இனிய கனிவு செறிந்த மொழி ; அம்மொழியைக கொண்டவா தமிழா இவா தம் பழமை 'கலதோன்றி மண் தோன்றாக காலததே...... முன்தோனறி மூதத குடி' வாழ்ககையா எனப் பாராட்டப பெறுகின்றது

இததகைய நம் தமிழ்மாந்தா தம வீரப் பண்பினால் மறத் தால் மானததால பண்பால் உலக மாநதாகட்கே வழிகாட்டி யாகத் திகழ்நதனர் இவர்கள பன்னூறு ஆண்டுகடகு முன னரே மொழிக்கு மரபு வகுத்தனரெனறால்—அறததை அடிப் படையாகக கொண்டு நூலகள எழுதினரென்றால்—கலவியில கைத்தொழில் வன்மையில ஓவியபபண்பில் காவிய அமைப்பில வணிகத்தில நாகரிகத்தில நனி சிறநதிருநதனரென்றால்— 'யாதும் ஊரே யாவரும கேளிர்' என்னும பொதுபபடை அறததை உலகததிறகே அறைகூவி அழைததது விடுததனரென் றால் அவா தம உயர்சசி மலையினும் மாணப் பெரிதாக விளஙகு கின்றதன்றோ?

இவா தம கொற்றமிக்க வீரத்தால் தம் நாகரிகமும கலை ஓவியம் முதலியனவும் வளர்ச்சியுற்றுப பெருகற்காகக் குறிப் பிட்ட ஓரெல்லை வகுதது அதனைத தமிழகமாக்கி அரசு புரிந்த னர். இதனைக்,

* 'காடு கொன்று நாடாககிக்
குளந்தொட்டு வளமபெருக்கி

---

* பட்டினப்பாலை ௨௮௩ - கூக.

பிறங்குநிலை மாடத் துறந்தை போக்கிக்
கோயிலொடு குடிநிறீஇ
வாயிலொடு புழையமைத்து
ஞாயில்தொறும் புதைநிறீஇப்
பொருவேமெனப் பெயர்கொடுத்து
ஒருவேமெனப் புறக்கொடாது
திருநிலைஇய பெருமன்னெயில்'

என்னும் பட்டினப்பாலை அடிகளால் தெளிவாம்.

அவ் வெல்லை தெற்கே குமரியாறும் வடக்கே இமயமலையும் கிழக்கே கீழ்க்கடலும் மேற்கே மேல்கடலும் எல்லையாகக் கொண்டு, சேர சோழ பாண்டியரென முப்பிரிவினராக மன்னர்கள் ஆண்டு வந்தனர் அதனபின், சிறிதுகாலஞ் செல்ல ஆட்சி மாறுபட்டுப் பற்பலர் இந்நாட்டை நாடிவந்த காலத்து மேற்குறித்த வடவெல்லை சுருங்கி வேங்கட மலையளவாக நின்றது. பழங்கால நூல்கள் நமக்கு இதன் உண்மையை விளக்கு

* 'தெனகுமரி வடபெருங்கல்
குணகுடகட லாவெல்லைத்
தொன்றுமொழிந்து தொழில்கேட்ப
வெற்றமொடு வெறுத்தொழுகிய
கொற்றவர்தம் கோனுகுவை'

எனப் பாண்டியன் பெருமையை விளக்கிப் போந்த மதுரைக் காஞ்சி யடிகளால் 'வடபெருங்கல்' என இமயமலையைத் தமிழக வடவெல்லையாகக் காட்டி யிருப்பதும்,

† 'பொன்னிமயக் கோட்டுப் புலிபொறித்து மண்ணாண்டான்' என்று சோழமன்னன் பெருமை கூறவநதபோது இளங்கோவடிகள் இமயமலை உச்சியில் தன் புலிக்கொடியை எழுதி நாடாண்டான் என்று கூறியிருப்பதும், மூவரசர்களையும் ஒன்றுபடுத்திக் கூறுங்கால்,

‡ 'வன்சொல் யவனர் வளநாடு வன்பெருங்கல்
தென்குமரி யாண்ட செரு வில் கயல் புலியான்.'

என்று கூறுவதாலும்,

§ 'வடாஅது பனிபடு நெடுவரை வடக்கும்
தெனுஅது உருகெழு குமரியின் தெறகும்
குணுஅது கரைபொரு தொடுகடற் குணக்கும்
குடாஅது தொன்றுமுதிர் பௌவத்தின் குடக்கும்.'

*மதுரைக காஞ்சி எ0 - ௪. †-‡ சிலப்பதிகாரம், கஎ, உள்வரி: உக: ஊசல்-௩. § புறம்: ௬.

என்று பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழு தியை வாழ்த்திய காரிகிழார் பொன்மொழியானும் தெளளத் தெளிய விளங்குகின்றன. பிற, பழந்தமிழ் நூல்களானும தற கால ஆராய்ச்சியில் கண்ட மொகஞ்சொ தரோ ஹாரப்பா நாகரிகத் தாலும் தமிழக எல்லை—நாகரிகம்—வரையறுக்கப் பெற்றது காண்க

பிற்கால இவ் வெல்லை சுருங்கிய வரலாற்றுண்மைக்குச் சான்றாகத தொல்காப்பிய இலக்கண நூலுக்குப் பாயிரம் வகுத்த பனம்பாரனார்,

* 'வடவேஙகடம தென்குமரி
ஆயிடைத தமிழ்கூறு நலலுலகத்து '

என்றும்,

† 'குணகடல் குமரி குடகம் வேஙகடம
எனுநான கெல்லையின் இருந்தமிழ்.'

என்று, பிற்காலத்து நனனூல சிறபபுப் பாயிரத்தும் காணக் கிடக்கின்றன.

ஆகவே, தமிழகம தொன்றுதொட்டு வடக்கே இமயமலை வரை சென்று அமைநத வரலாறும, அப்பால் அவ் வெல்லை பல வகைப் போர்களினால ஒருவாகை மாறி மாறி வந்தமை யானும் பிற்காலம் வேற்று நாட்டாரான ஆங்கிலேயர் கையிற் சிககுண்டு நூற்றைமபது ஆணடுகட்கு மேற்பட்டு அவாகட்கு அடிமையாகக கிடந்து தற்செயலாற்ற ஒண்ணாதிருந்தமையா னும் தமிழா தம கலையை மறநதனா ; பண்பையும படிப்படி யாகக் குறைய விட்டனா ; அமிழ்தினும இனிய தமிழமொழி யைக் கற்றற்கும பேசறகும அருவருப்புற்றனர்; அவர் தமிழில் சொற்பொழிவு ஆற்றவொண்ணா நிலையில் ஆங்கிலமொழி மோகத்தில் துவக்குண்டு கிடந்தனர் அதனால கலை இசை பண்பு நாகரிகம முதலியனவற்றைக் கைநநழுவ விட்டதைப்போலவே தம் நாடாகிய தமிழக எல்லையை வரையறுத்துக கொள்ளாராய் 'யார் ஆண்டாலென்ன ?' என்னும் இழிநிலை மனககொள்கையை உடையராக வாழ்நது வநதனா.

பிற்காலம் நலவாய்ப்பினால காநதியடிகள் போன்ற பெரி யோாகள் முயற்சியால் காஙகிரசுப பேரவைமூலம் வெள்ளையர் கைபபிடிபபினினறும இநதியப பெருநாடு விடுதலை யடைந்த போது, அதன ஒரு பகுதியான நம தமிழகமும்
பெற்றது

* தொல , பாயிரம : க.

† நன்னூல், சிறப்புப்பாயிரம்.

காங்கிரசுப் பேரவைத் திட்டத்தில மொழிவாரி மாநிலமாகப் பிரித்துத் தனி ஆட்சியாக்கி அவ்வாட்சியெல்லாம ஒன்றாக இணைந்து இந்தியப் பெருநில ஆட்சியின்கீழ் இயங்குமென்...
-மும உள்ளது.

ஆனால், நாட்டின் நிலைக்கேற்பச் சிறிதுகாலம முனபின்னாக அமைக்கலாமென அரசியலார எண்ணியிருநதனா இதற்குள் ஆந்திரநாட்டினர் ஆத்திரப்பட்டனர், ஆநதிரநாட்டை இநதியப் பெருநிலத்தினின்றும் தனி ஆநதிர மாநிலமாக்க வேணடுமென்னும கொளகையை வற்புறுததிவநதனர், அநநாட்டு அரசியற குழுவினரும நாட்டுநலங கருதும் அறிஞருமாகிய ஒரு சிலர். அவருள பொட்டி சீராமுலு என்பவரும ஒருவர் அவா சென்னையுடன சேர்நத—தமக்குச சென்னை உரிமையாகக்கொண்ட ஆநதிர மாநிலம் வேண்டுமென விருமபி ஐமபததெட்டு நாட்கள் வரை உணவின்றி வடக்கிருந்து தம் உயிரை—அரும்பெறல் ஆவியை—ஆந்திர மாநில உரிமைககாகக கையுறை கொடுததாா. அவர் தம் குறிக்கோள போரிட்டுப புறப்புண்ணாணி உயிாநீதத நம பழந்தமிழா குறிக்கோளுக்கு ஒத்ததாகவும பாராட்டத் தக்கதாகவும அமைநதது, தன்னலமறறது; உயரியது; சிறந்தது; ஆனாலும், பிறா உடைமையான—தமிழர் தனிச்சொத்தான—சென்னைநகரையும தாம் பிறநத ஆநதிர மாநிலததோடு ஒன்றுபட்டுசசேர இணைததுக கேட்பதைத் தமிழராகிய நாம் எங்ஙனம பாராட்டுவது? யாருக்கும 'பெறற தாயும பிறநத பொன்னாடும நற்றவ வானிலும நனி சிறநதனவே' அவவாறிருக்கத் தம் மாநிலததோடு பிறர் பெருநகரததை உரிமையாகக் கேட்பது, பிறன் மனைவியை அயலான் ஒருவன் விரும்புதலையொக்கும். மேற்கூறியவாறு தமிழகஎலலை வடககண் பொன் மலைவரை வளர்நது நின்றது, வெறுங கட்டுககதையல்ல; வரலாற்றுண்மை, மேல்நாட்டறிஞர் தம் அரிய ஆய்வுகள வழியும் நன்கு தெளிததுரைததது. அஃது இககாலதது அந்த எலலை அளவு குறைநது வடக்கு எல்லை வடவேஙகடமவரை நிற்கின்றதென்றால் — அதுவும காலவேறுபாடே அஃதுவரையுடைய சென்னைமாநிலததோடு சார்நத தனித்தமிழ்மாநிலம அமைக்கப பெறல்வேண்டும; தமிழா பிறர் உடைமையை விருமபாத நடுநிலையாளர்; அவர் பிறர் பொருளை நஞ்செனக் கருதும் நயனுடையர்; "நடுவின்றி நன்பொருள் வெஃகிற் குடிபொன்றிக், குற்றமும் ஆஙகே தரும்" என்னும் தெய்வமறை தோனறிய திருநாட்டினர்; அநநாட்டினா பிறா பொருளை வெஃகாா; வெஃக வேண்டிய கட்டாயமும் இல்லை எனவே, நடுவுநிலையோடு சென்னையோடு...ந்த தனித்தமிழ் மாநிலமே வேண்டற்

பாலது; அமைததற்குரியது; நாஙகள விரும்புவது—கேட்பது—ஆநதிரநாட்டையனறு; கன்னடததையன்று, துளுவத்தையன்று, பிற வேறு நாட்டையுமன்று, எஙகள் பொருள் எஙகட்குக் கிடைக்க வேண்டுமென்பதே.

ஆகவே, தமிழ்ப்பெரு மக்களே! இன்று ஆந்திரர், தூங்கினவன் தொடையில கயிறு திரிப்பதுபோல, தமிழராகிய நாம் வாளா இருக்கின்றோமெனக் கருதிச சென்னையைக் கவர மடிதற்று முன் நிற்கின்றாரகள சென்னை நகரம தமிழ்மாநில அமைப்போடு இணைக்கப்பட வேண்டுவதே; என்றும் இன்றும் தமிழகத்தோடேயே அது சார்நதிருக்கின்றது அதற்கு அதன் பெயருமஅதன் பகுதிப் பெயாகளுமே சான்று கூறுகினறன.

கோடம்பாககம், நுஙகம்பாககம், சேப்பாககம எனனும் பகுதிகளின் பெயர்கள் எம்மொழிப பெயாகளாக உள்ளன? 'பாக்கம்' என்னும் பெயா கடற்கரையைச சார்நத ஊர்களைக் குறிக்கும் இதனை,

*'கொழுஙகாந்தள மலர்நாகத்துக
துடிக்குடிஞைக குடிப்பாககத்து'

என்னும் பொருநராற்றுப்படை அடிகளும,

†'புடைசூழ தெஙகின முப்புடைத் திரள்காய்
ஆறுசெல் வம்பலா காயபசி தீரச
சோறடு குழிசி இளக விழூஉம்
வீயா யாணா வளஙகெழு பாககம'

என்னும பெருமபாணற்றுபபடை அடிகளும,

‡'சிறுகுறுங கைவினைப் பிறாவினை யாளரொடு
மறுவின்றி விளஙகும் மருவூாப் பாககம.'

என்னும் சிலபபதிகார அடிகளும் பிறவும் சான்று கூறி விளக்குவனவாம.

திருவொற்றியூர், மயிலாப்பூர், திருவல்லிக்கேணி முதலிய ஊர்ப் பெயர்களும் தமிழ்ச சான்றோர்களான, திருவள்ளுவர், பட்டினத்தடிகள், இராமலிங்க அடிகளாா முதலிய தமிழ்ப் பெரியாகள் வாழ்ந்ததும் இன்றும் அவாகட்கு வழிபாடு செலுத்தும் கோயில்களும் குறிகளும் அமைந்தனவாய் இலகுவதும, பிறவா

* பொருநா: உ0க—க0. † பெரும்பாண் கூசச—எ.
‡ சிலப். ௫. கூஅ-கூ.

யாக்கைப் பெரியோனுன சிவபெருமான் கோயில்களும், சிறப பாக மயிலாப்பூர் கபாலீச்சுரர் கோயிலும், அறுமுகச் செவ் வேள் அணிதிகழ் கோயில்களும், நீலமேனி நெடியோன் கோயிலகளும், ஐயையாகிய காளி கோயில்களும் ஆஙகாங்கே தமிழர்தம பழங்கால இயற்கையோடு சாாநத குறிஞ்சி மருதம் முல்லை நெய்தல் பாலை நிலக்கடவுளர்களாக அமைத்துப் பண்டு தொட்டே வழிபாட்டுடன் இருநது வருவதும் இதற்கு நற்சான் ருக உள்ளன.

ஆதலால், நாம் இன்னும் ஏமாற்றமடையாமல் நம் தமி ழகத்தை வடக்கே வேங்கடமலையை எல்லையாக அமைதது, இன னும் தமிழ் மக்கள் வாழும சிததூர், நெல்லூா முதலிய பல தமிழச சார்பான ஊாகளேயும் உளளடககித தெறகே குமரி யாற்றை எல்லையாகக் கொண்டு, மேறகே தமிழர் வாழும் பகு திகளான திருவாங்கூரைச சார்நத ஊாகளை மேலெல்லையாக நிறீஇக, கிழககே இராமேச்சுரத தனுக்கோடியைக் கொண்ட எல்லையாகப பொருத்தித, தமிழகமாக்கி, நம என்றுமுள தென் றமிழையே ஆட்சிமொழியாக நிலைநாட்டித், தமிழகத்தை ஒரு வரையறைப்படுததி அமைதது நிறுவ இன்றே எழுக! இன்னே வருக! எனத் தமிழ்நனமககளை விரும்பி வேண்டுகிறோம. இனியும் தமிழ்நாடு தமிழருக்கே என்று வீண் வெற்றுரவாரச சொற்கள் பேசிக்கொணடு வீண்காலம் கடததுவதில பய னில்லை; எதிரி மார்தட்டிக்கொண்டு முன் நிற்கின்றுன். நாம நடப்பது நடக்கட்டும் என்று வாளா இருபபதும நன்றன்று.

ஆந்திரமாநிலம் தனியாகப பிரிப்பதற்குரிய எல்லா அலுவல்களையும் பொறுப்புடன் ஆய்ந்து முடிவு செய்தறகு இராஜஸ்தான் தலைமை நீதிபதி திரு வாஞ்சு அவாகளை அரசிய லார் செனனைககு அனுபபியுளளனா. அவா தில்லி நகரிலிருந்து புறப்பட்டு 7-1-1953 புதன இரவு வந்துள்ளனா. அவா நடு நின்று ஆந்திரமாநில அமைபபு முதலியவற்றை ஆய்நது முடிபு கூறுவாா. அவர் 'நான முடிவு ஏதும செய்யபபோவதில்லை' என்றும், 'பலவேறு சிககலான செய்திகட்கு இயன்ற வழிகளை யும அவைகளுள் எது சிறநத தென்பதையும நான் தெரிவிப பேன்; இறுதி முடிவு இநதிய அரசியலாரைப பொறுத்திருக்கும்' என்றும் அவர் தம கருத்தைத் தெரிவிததுள்ளனா. ஆதலால், இந்திய அரசியலாரும் இதில சமன்செய்து சீர்தூக்குங் கோல போல் அமைந்து நடுநின்றாய்ந்து தமிழகளல்லை அமைப்புக்கும் சென்னைநகரம தமிழ்மாநிலத்துக்கே உரிமையான தென்ப தற்கும் துணைபுரிந்து அமைத்துத் தருவார்களென்று நம்பு கின்றோம்.

ஆந்திரர், தமக்குச் சென்னை கிட்டாததால அதைத் தமிழ் நாட்டோடு சேராமல் தனியாகப்—பொதுவாக இருக்கச செய்ய வேண்டுமென்னும கொளகையுடன் பேசிக்கிளர்ச்சி செய்து வருகின்றனர். இது, தனக்குக்கிட்டாத உண்பொருளைப் பிறரும உண்ணுமற் கீழே கொட்டித் தொலைத்த அறிவிலி செயலை நினைவூட்டுகின்றது தமிழர்கள் அவ்வாறுவிட்டு விட்டிருக்கும் கோழைகளல்லர், போரெனிற் புகலும புனை கழல் மறவா வீரக்குடியில் தோன்றியவர் என்பதை அவர்கட்கு அறிவுறுததுகின்றோம.

சென்னையை விடுத்து ஆந்திரர் தனியே பிரிந்து சென்றாலும், ஏனைய மொழியினரான கேரளர், கன்னடர் ஒட்டிக் கொண்டேயிருபபர் அவவாருனல் சென்னை தமிழ்நாட்டுக்குரிய தலைநகராக அமையாது, தமிழகமும தனிநாடாக இருத்தலும் இயலாததாகும்

எனவே, மேற்கூறிய வேங்கட மலையை வட எல்லையாகக் கொண்டு தனிததமிழ் நாடாக ஆககி, கேரளா கன்னடரை அவரவர்கட்கு உரிய நாட்டுகருச் செலவிடுதது ஆஙகாங்கே அவரவர் மொழியில் ஆட்சியுறத் தனி மாநிலமஅமைத்து ஆட்சிபுரியத் தூண்டி அனுப்பிவிடுதல் வேண்டும், காற்றுள்ள போதே தூற்றிக் கொள்வதுபோல, இதுகாலை நம தமிழ்நாட்டைத் தனிததமிழரசு ஆட்சிக்குக் கொணர்ந்து நம தமிழ்மொழி அடிப்படையில் முறைமனறம், நாட்டாண்மைக் கழகம, ஊராண்மைக்கழகங்கள் யாவும் அமைதது நடைபெறத் தமிழ்ப்பெருமக்கள் யாவரும ஒன்றுபட்டு முனைந்து நின்று செய்தல் வேண்டும். இம்முறை நாம ஸ்கநழுவ விட்டுவிட்டால் பருந்து போன்று பிறர் கௌவிக்கொள்ள முன்நிற்கின்றனர். அவரை நம உரிமையிற் புகாது வெருட்டி ஆட்சி நிறுவ ஒவவொரு தமிழ்மகனும முன் வருதல் வேண்டும அவ்வாறு செய்தால்தான், நம் பண்டைய நிலையை யெய்துதல்கூடும். காலமுண்டாகவே செய்யாத காரணத்தால, நம் தமிழ்மொழி நூல்கள் பலவற்றைக் கறையான் சுவைகாணலாயின; கடல் தன் வயிற்றில் அடக்கிற்று, மண் உண்டு செரிததது; இன்னும் அநிலை எய்தவிடலாமா? நம் கன்னிததமிழ் என்ன நிலையில் இருக்கின்றது! ஒரு சில புல்லுருவிகள், வளர்பபது போற்காட்டி, நூற்றுக்குத தொண்ணூறு சொற்கள வட சொற்களாக மாட்டி, அதன் தூய உருவைக குலைத்தனர்; மறைமலையடிகள் போன்ற ஒரு சில பெரியார்களால் அவை, களையப் பெற்றுச் சிறிது சிறிதாக மேம்பாடுற்று உருவுகிளர்ந்து வருகின்றது. அதுபோன்று நம் தமிழ்மொழியை வளம்

படுத்த வேண்டாவா? அறிவியல் நூல்கள் ஆக்க வேண்டாவா? கலை காண வேண்டாவா? இசை பரப்ப வேண்டாவா? வேண்டு மேல், தமிழகத்தை இன்றே அமைக்க முயலுமின்! விழிமின்! எழுமின்! எழுந்து தலைநிமிர்ந்து நின்மின்! பாண்டியன் அமைத்த நாட்டை—சோழன் புதுக்கிய நாட்டை—சேரன் செய்த நாட்டை—ஒருப்படுத்திக் காண்மின்! காணமின்!

‘ நீலத் திரைகடல் ஓரத்திலே நின்று
நித்தம் தவஞ்செய் குமரியெல்லை—வட
மாலவன் குன்றம் இவற்றிடையே புகழ்
மண்டிக் கிடக்கும் தமிழ் நாட்’டை

அமைக்க முன்வாருங்கள! வாருங்கள்!

இவ்வாறான எல்லை கொண்ட தமிழகம் அமைத்து வேலி யாயிரம் விளையுட்டாக விளைவைப் பெருக்குவோம், உடையை உயர்த்திக் குவிப்போம்; கைத்தொழிற்சாலையைக் கண்ட கண்ட இடனெல்லாம் பரப்புவோம், செந்தமிழை - சீரிய கூரிய தீஞ் சொல் வளத்தை - நுண்ணியற் கலையை - பொறியியற் கலையை - தமிழர் பண்பை - மறத்தை - மானத்தை - இசையனைத்தின் பெருமையெல்லாம் தென்றிசையே வென்றேற இன்னும் எல்லை யற்ற கலைகள் காண்போம், இசை வளர்ப்போம்; காவியம் அமைப்போம்; ஓவியம் தீட்டுவோம்; நாட்டை வளப்படுத்து வோம்; இவைகளின் அடிப்படையில் அறத்தையும் அன்பையும் கொண்டு ஆக்கம் பல புரிந்து, பிறநாட்டுடன் இணைந்து பிரிவின்றியைந்த துவராநட்புடன் மகிழ்மிக வளங்கொண்டு வாழ்வோமாக.

—ஆசிரியர்.

# இந்தியச் சாசனங்கள்*

[டாக்டர் திரு. மா இராசமாணிக்கம், M.A, L.T., M.O.L (Ph. D.)]

**பண்டை எழுத்துக்கள் :**

எகிப்து, சீனம், பாபிலோனியா முதலிய நாடுகளில் தோன்றிய நாகரிகங்களே உலக நாகரிகங்களில் மிகப் பழமையானவை என்பது ஆராய்ச்சியாளர் கருத்து அவ்விடங்களில் கிடைத்துள்ள எழுத்துக்களின் வளர்ச்சிக்குறிகளையும், மெக்ஸிகோ, ஈஸ்டர் தீவுகள் முதலியவற்றிற் காணப்படும் எழுத்துக் குறிகளையும் நன்கு ஆராய்ந்த ஆராய்ச்சியாளர்கள், "இவ்வெழுத்து முறைகளின் தோற்றமும் வளர்ச்சியும் ஒருபடித்தாகவே காணப்படுகின்றன," என்ற முடிவுக்கு வந்துள்ளனர்

"முதலில் உடம்பின் உருவம் அவ்வுயிரைக் குறிக்க வரையப்பட்டது பின்னர் அவ்வுருவம் அவ்வுயிரைக் குறிக்காமல் நிலத்தைக் குறிக்கப் பயன்பட்டது முதலில் வரையப்பட்டது 'உரு எழுத்து' எனப்படும் பின் குறிக்கப்பட்டது சித்திர சங்கேதக்குறி (குழூஉக்குறி) எனப்படும். சீனம், எகிப்து முதலிய பண்டைய நாடுகளில் இச் சங்கேதக்குறிகள் பல கிடைத்துள்ளன நடைக்குக் கால்களும், பார்வைக்குக் கண்ணும், அதிகாரத்திற்குக் கையும், பலத்திற்குத் தோளும், வரையப்பட்டன இங்ஙனம் ஒரு பொருளைக் குறிக்க வரையப்பட்ட சித்திரம், நாளடைவில், அப்பொருளின் பெயரைக் குறிப்பதாக மாறியது அதுவே 'ஒலி எழுத்து' என்பது அஃதாவது, 'வேல்' என்பதை உணர்த்தும் சித்திரம், 'வேல்' என்னும் பெயரையே குறிக்கத் தொடங்கியது. ஒரு மனிதனைச் சித்திரித்துக்காட்டி அவன் கையில் வேல் இருப்பதாக எழுதியுள்ள 'தொடர்ச் சித்திரம்,' 'வேல்,' 'ஆள்' என்னும் இரு பெயர்களைக் குறிக்கத் தொடங்கியது

"ஆனால் இக்குறிகளைக் கொண்டு தொடர்மொழிகளையும் முற்றிய கருத்துக்களையும் எழுத இடர்ப்பாடு ஏற்பட்டது. அதனால் வார்த்தைகளை அசைகளாகவும் சீர்களாகவும் பிரித்து, ஒவ்வொன்றுக்கும் ஒவ்வோர் உருவத்தை எழுதி, அவற்றைச் சேர்த்து வாசிக்கும் முறை ஏற்பட்டது. அம்முறையும் கடினமாகத் தோன்றியதால், பின் வந்த மக்கள், சில குறிப்பிட்ட குறிகளைத் தேர்ந்தெடுத்து, ஒவ்வொரு குறியையும் அது

* கொழும்பு வானொலி நிலையத்தில் (1-11-'52-ல்) பேசியது

உணர்த்தும் வார்த்தைகளின் சிறப்பாகக் கொண்டனர். இம்முறையில் தோன்றிப் படிப்படியாக வளரத் தொடங்கியதே 'வரிவடிவம' என்று எழுத்தாராய்ச்சியாளர் எடுத்தியம்ப

தமிழ்நூற்சான்றுகள்

மேலே கூறப்பெறற சிததிர சஙகேதக்குறிகளும் அவற்றின் வடிவ வளாச்சிக் குறிகளும இநதியாவில் சிந்துவெளி நாகரிகப் புதைபொருள மீது பொறிககப்பட்டு உள்ளன. இவற்றால், இவை இந்தியாவிற்குப் புதியன அல்ல என்பதை அறியலாம ஆயினும மேலே சொல்லபபட்ட எழுத்துக்களின் விவரங்களைத் தமிழைததவிர வேறு எநத இநதிய மொழி நூல்களிலும காணல் இயலாது. நன்னூலுககு உரை வகுத்த மயிலைநாதர், எழுததுக்களை, (1) உரு எழுதது, (2) தன்மை எழுத்து, (3) உணர்வு எழுதது, (4) ஒலி எழுத்து என்று குறிததுள்ளார் யாபபருஙகல இறுதிச் சூத்திரவுரையில் ஓராசிரியனுக்குத தெரிநதிருக்க வேண்டிய எழுத்துவகைகளைக் குறிககுமிடததில உரை ஆசிரியர், இவவெழுத்துககளுக்குரிய சூத்திரங்களை மேற்கோளாக எடுத்துககாட்டியுள்ளார்.

"காணப் பட்ட வுருவம எல்லாம்
மாணக காட்டும வகைமை நாடி
வழுவில் ஓவியன் கைவினை போல
எழுதப் படுவது உருவெழுத் தாகும்."

"கொண்ட வோர் குறியாற் கொண்ட அதனை
உண்டென் றுணாத்துவது உணர்வெழுத் தாகும்"

' இசைப்படு புல்லின் எழிஅல போலச்
செவிப்புல னாவது ஒலியெழுத் தாகும்"

"முதற்கா ரணமும துணைக்கா ரணமும
துணைக்கா ரணத்தொடு தொடரிய உணர்வும்
அவற்றொடு புணர்ந்த அகத்தெழு வளியின்
மிடற்றுப்பிறந் திசைப்பது தன்மை எழுத்து."

இவையன்றி, அச்சூத்திரவுரையில் வேறுபல எழுத்து வகைகளும் குறிக்கப்பட்டுள்ளன. சிலபபதிகாரத்தில், காவிரிப் பூம்பட்டினத்துத் துறைமுகத்தில் இறக்குமதியான மூட்டைகட்குக் கண்ணெழுத்து இடப்பட்டது என்பது கூறப்பட்டுள்ளது. 'கண்ணெழுத்து—சித்திர எழுத்து' என்று நச்சினார்க்கினியர்

பொருளை கூறலை நோக்க, சிலப்பதிகாரக் காலத்திலும் ஒரு வகைச்சித்திர எழுத்துக்கள் குறிப்பிட்ட சில காரியங்களுக் கேனும் வழக்கில் இருந்தன என்று கருத இடமுண்டாகிறது. இவைநிற்க.

## இந்திய எழுத்துக்கள்

வரலாற்று உண்மைக்குப் பொருந்தியனவாக ஆராய்ச்சி யாளர் ஒப்புக்கொண்ட இந்திய எழுத்துக்கள் நான்கு வகைப் படும். அவை (1) பிராமி, (2) கரோஷ்டி, (3) திராவிட, (4) யவனாணியா என்பன இவற்றுள் யவனாணியா என்பது கிரேக்கரும் அவரைச் சார்ந்தவரும் பயன்படுத்தி வந்தவை. கரோஷ்டி என்பது வடமேற்கு இந்தியாவின் ஒரு பகுதியில் ஏறத்தாழ கி பி. 4-ஆம் நூற்றாண்டில் வழக்கில் இருந்த எழுத்து முறையாகும். பிராமி என்பது அசோகனுடைய கல வெட்டுக்களிலும், கி மு. முதல மூன்று நூற்றாண்டுகளிலும் தென் இந்தியக் குகைகளிலும் காணப்படும எழுத்துக்களாகும். பிராமி எழுத்துமுறை மேற்சொன்ன இரண்டு எழுத்து முறைக்கும் மாறுபட்டது. பிராமி எழுத்துக்களை நன்கு ஆராய்ந்த அறிஞர்கள், அது தமிழுக்கென அமைக்கப்பட்ட குறியாகலாம் எனக் கருதுகின்றனர். திராவிட என்பது வட் டெழுத்து உருவெழுத்து முதலிய நிலைகளைத் தாண்டி அகர வரிசை எழுத்துக்களைப் பெற்ற பிராமி லிபி, ஏறத்தாழக் கி. மு. 3-ஆம நூற்றாண்டில் தமிழகத்திற் புகுந்து, நாட்டுநிலைக் கேற்பச் சிறிது வளர்ச்சியடைந்து வட்டெழுத்தாக மாறியிருத்தல் வேண்டும் என்று அறிஞர் கருதுகின்றனர். வட்டெழுத்து ஒருகாலத்தில் தமிழகம முழுவதும் வழக்கில் இருந்திருத்தல் வேண்டும். தொண்டை நாட்டிலும் காவிரி வரையுள்ள தமி ழகத்திலும பல்லவராட்சி ஏற்பட்ட பிறகு, பல்லவராற் போற்றி வளர்க்கப்பட்ட பிராமி லிபியின் வழிவந்த கிரந்தமும் அதனை ஒட்டி வளர்ந்த கிரந்தத்தமிழும் வழக்காறு பெறத்தொடங்கின. அக்காலத்தில் பல்லவராட்சி ஏற்படாத பாண்டியநாடு, சேரநாடு, கொங்கு நாடுகளில் வட்டெழுத்து வழங்கிவந்தது

பல்லவர்க்குப் பின்பு தென்னிந்தியா முழுவதையும் ஒரு குடைக்கீழ் வைத்தாண்ட சோழர் காலத்தில் கிரந்தத தமிழே பெருவழக்குப் பெற்றது. சோழர்க்குப்பின தமிழகத்தை ஆண்ட விஜயநகர அரசர் காலத்திலும் மகாராஷ்டிர மன்னர் கள் காலத்திலும் நாகர எழுத்துக்கள் தமிழகத்தில் இடம் பெற்றன.

இந்தியச் சாசனங்கள்

இந்திய எழுத்துக்களைப்பற்றி இதுகாறும் கூறப்பெற்ற விவரங்கள், இந்தியாவில் உள்ள கல்வெட்டுக்களில் இருந்தும் செப்பேடுகளிலிருந்தும் தெரிவனவாகும் 'இந்திய சாசனங்கள் எவ்வாறு தோன்றலாயின?' என்பது அடுத்தெழும் வினாவாகும் பிராமி எழுத்துக்களைக்கொண்ட அசோகன் காலத்துக் கல்வெட்டுக்கள் பௌத்தசமயக் கொள்கைகளை மக்களிடம் பரப்புவதற்காக உண்டானவையாகும் பின் வந்த பட்டயங்களும் கல்வெட்டுக்களும் கல்வியிற் பெரியவர்கட்கும் வீரர்கட்கும் கோவில்கட்கும் அவ்வப்போது நிலதானம் முதலிய தானங்கள் செய்யப்பட்டபோது எழுதப்பெற்றவையாகும் ஒரு பொருளைக்குறித்துக் கல்லில் வெட்டி, அக்கல்லைப் பலரும் சேர்ந்து பார்க்கத்தக்க கோவில்போன்ற பொது இடங்களில் பதித்து மக்களைக் காணச்செய்வது நம் நாட்டில் இன்றளவும் இருந்து வரும் வழக்கமாகும். போரில் இறந்த வீரனுக்குக் கல் நாட்டி, அதன் அடியில் அவனுடைய பெயரையும் சிறப்புக்களையும் வெட்டுவித்தல் தொல்காப்பியத்திற் கூறப்பட்டுள்ளது

அரசர்கள் கற்றூண்களை நாட்டி அவற்றில் தங்கள் செ[illegible] களைக் குறிக்கத் தொடங்கினதுமுதல் கல்வெட்டுக்கள் நாட்டில் மதிப்படையலாயின ஏறத்தாழக் கி மு 170-இல் கலிங்கத்துப் பேரரசனாக இருந்த காரவேலன் உதயகிரியில் நாட்டிய உறுதி கும்பா தூண் கல்வெட்டுக் குறிக்கத்தக்கது தனக்கு 117 ஆண்டுகட்கு முன்பு (அதாவது ஏறத்தாழக் கி மு 3-ஆம் நூற்றாண்டில்) தமிழக வேந்தர் ஒற்றுமையுற்று வன்மையோடு இருந்தனர் என்பதை அவன் அக்கல்வெட்டிற் குறித்துள்ளான மோரியர் படையெடுப்புத் தமிழகத்தில் நடந்து படுதோல்வியுற்றது என்பதைச் சங்கநூல்களின் வாயிலாக அறிகிறோம் ஆயினும் அதன் காலம் புலப்படவில்லை காரவேலன் கல்வெட்டுச் சான்றை நோக்க வலிமிக்க மோரியர் படையெடுத்துத் தோல்வியுற்றதையும் காண, அத்தோல்விக்குத் தமிழரசர் ஒற்றுமையே காரணம் என்பதையும், அப் படையெடுப்பின் காலம் கி. மு. 3-ஆம் நூற்றாண்டாக இருக்கலாம் என்றும் ஊகித்தல் தவறாகாது இவ்வாறு இந்தியவரலாறு காட்ட, இலக்கியத்திற்கு உறுதுணையாக உதவுவது கல்வெட்டாகும்

கி. பி. 4-ஆம் நூற்றாண்டில் பேரரசனாக இருந்த சமுத்திரகுப்தன் கி பி 340-இல் டெக்கான் மீதும் தென்னிந்தியாவின் மீதும் படையெடுத்துவந்தான். அவனது வெற்றியைக் குறிப்பது அல்லஹாபாத்தில் உள்ள தூண் கல்வெட்டாகும். அதில் பல அரசர் பெயர்களும், அவர்கள் நாடும் ஊரும் குறிக்கப்

பட்டுள்ளன. அவற்றுள் மிகச் சிறந்த குறிப்பு—காஞ்சியை விஷ்ணுகோபன் என்ற பல்லவன் ஆண்டுவந்தான் என்பது. பல்லவர் என்ற சொல்லே சங்கநூல்களில் இல்லை. சங்க காலத்தின் இறுதியில் காஞ்சி சோழராட்சியில் இருந்ததை மணிமேகலை குறிக்கிறது. கி. பி. 340-இல் காஞ்சியில் பல்லவ வேந்தன் இருந்தான் என்பதை நோக்க, பல்லவர் சங்கப் பாடல்களில் குறிக்கப்படாமையையும் நோக்க சங்கத்தின் இறுதிக் காலம் ஏறத்தாழக் கி பி 300 என்று கொள்ளச் சமுத்திர குப்தனது வெற்றித்தூண் கல்வெட்டு உதவிபுரிதலைக் காணலாம்.

வடநாட்டு ஹர்ஷனையே புறங்கண்ட சாளுக்கிய வேந்தனை இரண்டாம் புலிகேசி என்பவன் சுமார் கி பி 642-இல் நரசிம்ம வர்மனிடம் தோல்வியுற்றான. அவனது தலைநகர் வீழ்ந்தது. அங்கொரு வெற்றித்தூண் எழுந்தது. அதில் பல்லவன் வெற்றி பெற்றதையும் வாதாபி பல்லவராட்சியில் 13 ஆண்டுகள் இருந்ததையும் அத்தூண் கல்வெட்டுக் குறிக்கிறது. தம் அரசன் ஏவலாற் சென்று வடபுலத்து வாதாபியை வென்றவர் சிறுத்தொண்டர் என்று சேக்கிழார் தமது வரலாற்றுச் சிறப்புடைய பெரியபுராணத்திற் பாடியுள்ளார். வாதாபி இவ்வாறு வீழ்த்தப் பட்ட காலம் கி பி. 642 என்று மேற்சொன்ன கல்வெட்டுக் குறிக்கிறது. இதனால் சிறுத்தொண்டர் காலம் இன்னதென உறுதிப்படுகிறது. அதனால் அவரது சமகாலத்தவர் ஆன திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், நின்றசீர் நெடுமாறர் முதலியோர் காலமும் உறுதிப்படுகிறது. வாதாபிக் கல்வெட்டுச் செய்தி பெரியபுராணச் செய்திக்கு உறுதுணையாக நின்று, சமயாசாரியர் காலத்தை அறியவும் பெருந்துணைபுரியும் பெற்றியை நாம் நன்கு உணரலாம்.

இப் பல்லவர்காலத்துக் கல்வெட்டுக்களில் மன்னன் பெயர், அவனுடைய விருதுப்பெயர்கள், அவனுடைய போர்ச் சிறப்புகள், கல்வெட்டு எழுந்த நோக்கம் முதலியன சுருங்கிய அளவில் குறிக்கப்பட்டன, ஆயின், கூரம் பட்டயம்போன்ற பல்லவர் பட்டயங்களில் அவ்வேந்தர்கள் செய்த போர்களின் வருணனைகள் விரிவான முறையில் வடமொழிச்சுலோகங்களாகக் காணக் கிடக்கின்றன.

### மெய்க்கீர்த்தி

பல்லவர்க்குப் பின்வந்த விஜயாலயன் மரபினரான பிற்காலச் சோழப் பேரரசருள் முதலாம் இராசராசன் காலமுதலே தென்னிந்தியக் கல்வெட்டுக்களிலும் பட்டயங்களிலும் விரிவான முறையில் அரசர்தம் வெற்றிகளை முறைப்படுத்திக் கூறும்

'மெய்க்கீர்த்தி' இடம் பெறலாயிற்று. மெய்க்கீர்த்தி எப்படி அமைந்திருக்கு மென்பதைப் பின்வரும் உதாரணம்கொண்டு அறியலாம்.

"ஸ்வஸ்தி ஸ்ரீ திருமகள்போலப பெருநிலச்செல்வியும், தனக்கே உரிமை பூண்டமை மனக்கொளக் காந்தளூர்ச்சாலை கலமறுத்தருளி வேஙகைநாடும் கஙகபாடியும் நுளம்பபாடியும் தடிகைபாடியும் குடமலை நாடும் கொல்லமும் கலிங்கமும முரட டொழில சிஙகளா ஈழமண்டலமும் இரட்டபாடி ஏழரை இலக்கமும் முன்னீர்ப்பழநதீவு பன்னீராயிரமும் திண்டிறல் வென்றித் தண்டாற்கொண்ட தன்னெழில் வளர் ஊழியுள எல்லா யாண்டுந் தொழுதகை விளங்கும யாண்டே செழிய ரைத் தேசுகொள் ஸ்ரீகோ ராஜகேசரிவாமரான ஸ்ரீ ராஜ ராஜ தேவர்க்கு யாண்டு 26-ஆவது.................................."

இதனல், இராசராசன் தனது 26-ஆம் ஆட்சியாண்டுக் குள் சேரநாடு, வேங்கைநாடு எனப்படும் கீழைச் சாளுககிய நாடு, கங்கபாடி, நுளமபபாடி, தடிகைபாடி, குடமலைநாடு, கொலலம், கலிங்கம, ஈழமண்டலம், முனனீரபபழநதீவு பன்னீ ராயிரம் எனப்படும மாலததீவுகள் என்பவற்றை வென்று சோழப் பேரரசனுக விளங்கினன் என்பது தெளிவாதல் காணலாம.

இவ்வாறு சாசனங்களில் இராசராசன் நுழைதத மெய்க்கீர்ததிமுறை பின்வநத சோழபபேரரசா அனைவ ராலும் கைக்கொள்ளப்பட்டது. மேலும் சோழபபேரரசா சமய வுணர்ச்சி மிக்கவரா யிருந்தமையால், அவாகள காலத்தில கோவில்களா பெருஞ் சிறபபுற்றன; அரசன்முதல சாதாரண குடிமகன் ஈறுக அனைவருமே கோவில்களைத தம் முயிரெனக் கருதி அவற்றின் வளர்ச்சிக்குத் தம்மாலான அறங்களைச் செய தனர்; அவ் வறங்களைக கல்வெட்டுக்களிற் பொறித்தனர். எனவே, சோழர் காலத்தில் ஆயிரக் கணக்கான கல்வெட்டுகள் ஏற்பட்டன

கல்வெட்டுக்கள் உணர்த்துவன:

அவை அனைத்தும் அவ் வேநதர்தம் போர்ச்செயல்களா, அரசியல்அமைப்பு, கொடைச்சிறப்பு, சமயநிலை, நாட்டு நடப்பு, உள்நாட்டுவாணிகம், வெளிநாட்டுவாணிகம, கைத் தொழில், பயிர்த்தொழில், நாட்டுவிளைபொருளகள, அயல் நாட்டுஉறவு, நாட்டில் வழங்கிய எண்ணல் எடுத்தல் முகததல் நீட்டல் முதலிய அளவைகள், பலவகை ஆடைகள், அணிகள்

ய விவரங்களை நமக்குத
இவற்றுடன், இலக்கியங்களில் உள்ள பல விளங்காத பகுதிகட்கும் கல்வெட்டுக்கள் விளக்கம் தருகின்றன. சிறுத்தொண்டர் வாதாபி வென்ற காலத்தை உறுதிப்படுத்த வாதாபிக் கல்வெட்டுத்தானே உதவி புரிந்தது! மற்றொரு சிறந்த செய்தியையும் இங்குக் குறிக்க விரும்புகிறேன்.

தன் மைந்தனது தேர்க்காலில் பசுக்கன்று அகப்பட்டு இறந்தமைக்காக, அம் மகன் தன் ஒரே மைந்தன் என்பதையும் கருதாது, அவனைத் தேரூர்ந்து கொன்ற மநுநீதிச் சோழனது வரலாறு முழுவதையும்—அதாவது, அரசன் ஏவற்படி அரச குமாரனைக் கொல்ல மனம் வராது தானே தற்கொலை செய்து கொண்ட அமைச்சன் செயல் உட்பட எந்தத் தமிழ் நூலிலும் கூறப்பட வில்லை என்பது நோக்கத்தக்கது இந்த விவரங்களை எல்லாம் நமக்குத் தரும நூல் பெரியபுராணம் ஒன்றுதான். அந் நூலாசிரியர் இவ விவரங்களை எங்கிருந்து பெற்றார் எனின், அவருக்குச் "சிறிது முன்னாப் பொறிக்கபபெற்ற திருவாரூர்க் கோவிலில் உளள பெரிய கல்வெடடிலிருநதுதான் என்று கூறலாம சேக்கிழார் இரண்டாம குலோத்துங்கன் காலத்தவர். மேற்சொன்ன கல்வெட்டு இவ விரண்டாம் குலோத்துங்கனுக்குத் தந்தையான விககிரமசோழன் காலத்தில் பொறிக்கபபட்டது மநுவேநதன் ஆணையை நிறைவேற்ற மனமில்லாது இறநத அமைச்சனது பரமபரையினருள ஒருவன் விக்கிரமசோழனுககு அமைச்சன் அவன் பெயா பாலையூருடையான் சந்திரசேகரன் ஆதிவிடஙகனான குலோத்துங்க சோழ மாவலி வாணராயன் என்பவன்.

சுநதரருடைய தாயாரான இசைஞானியார் திருவாரூாக் கோவில் தலைமை அாசசகரான ஞான சிவாசாரியார் மகளார் என்பதைத் திருவாரூாக்கல்வெட்டே உணர்த்துகின்றது. இவ்வாறு கல்வெடடுகளை உணர்த்தும் அரிய செய்திகள் மிகப் பல இவை நாட்டின பழம பெருமைக்கு உயிாநாடி ஆதலை நன்கு உணர்நதே அக்கால மக்கள் இவற்றைப் பொன்னே போலப் போற்றிவநதனர், அவை சிறிதும பழுது படாதபடி எண்ணெய் பூசிப பாதுகாததுவநதனா; கலவெட்டுக்களுககுச் செப்பேடுகளிற் படியும் எடுதது வைத்திருந்தனர், பழுதுற்ற கோவிலை யிடித்துப் பழுது பாாப்பதற்கு முன்பு, அவற்றில் இருந்த கல்வெட்டுச செய்திகளைப் பனையோலைகளில் எழுதிக் கொண்டு, கோவில்திருபபணி முடிநதபின்னா, அவற்றை ஊரவையோா காண அக் கோவிற் சுவர்களிற் பொறித்து வைத்தனர்

ஆராய்ச்சியாளர் உழைப்பு:

இங்ஙனம் நம் முன்னோரால் பாதுகாக்கப்பட்டு வந்த கல்வெட்டுகள் இடைக்காலத்தில் ஏற்பட்ட ஆட்சி மாறுபாடுகளால கவனிக்கப் படாமற் கிடந்தன : ஆங்கில ஆட்சி ஏற்பட்ட பிறகு, ஊக்கமும் உழைப்பும் கொண்ட பலர் மேனாட்டு அறிஞர் சென்ற நூற்றாண்டின் பிற்பகுதியில் இந்தியா வந்தனர். அவருட் சிலர் வடமொழி நூல்களையும் தென்மொழி நூல்களையும ஆராய்ந்தனர் வேறுசிலர் ஒவ்வொரு மாகாண மொழியையும் உழைத்துக்கற்று ஆராயத் தொடங்கினர் முன் சொல்லப் பட்ட பிராமி, வட்டெழுத்து முதலிய எழுத்துககற்ற அறிஞர் சிலர் இந்தியச் சாசனங்களைப் படித்தறிய முற்பட்டனர்; அவற்றைப் படியெடுத்தனர்; இண்டியன் ஆண்டிகுவெரி (Indian Antiquary) முதலிய ஆங்கிலத்தாளகளில் வெளியிட்டு அவைபற்றிய தங்கள் ஆராய்ச்சியையும் தெரிவித்தனர். இத் துறையில் உழைத்தவருள் பிளிட் (Fleet), பேராசிரியர் வெப்பர். M. A. பார்த், H J. ஸ்டோக்ஸ, மக்கென்ஸி, சா டபிள்யூ. எலியட், C. P பிரௌன், என்பவர் குறிக்கத் தக்கவர் ஆவா இப்பெரு மககளது உழைப்பால், கல்விகற்ற இந்தியா சிலா இத்துறையிற் பயிற்சி பெறலாயினா

இந்நிலையில் டாக்டர் உல்ஸ் என்ற ஜெர்மானியா இந்தியா வந்தார், ஆயிரக்கணக்கான கலவெட்டுககளைக கண்டார்; அக்கால அரசபிரதிநிதியா யிருந்த ரிபபன் பிரபுவிடம (1884-1888) இந்தியக கல்வெட்டுக்களின அருமைபபாட்டினை விளக்கி, அவற்றைப் படியெடுத்து ஆராய்ச்சி செய்யவும் வெளியிடவும ஓர் இலாகாவை அமைக்கச்செய்தார் அதுவே கல்வெட்டு இலாகா என்பது. அவ்விலாகாவில் அப்பெரியாரும் இருந்து உழைத்தார். அந்நிலையில், “தென்னிந்தியக் கலவெட்டுக்கள்” என்னும் பெயருடன் அரசாஙக ஆதரவில் மூன்று தொகுதிகள வெளிவந்தன. ஒவ்வொரு கல்வெட்டுக்கும் ஏற்ற முன்னுரை, ஆங்கிலமொழி பெயர்ப்பு, அருஞ்சொல் விளககம் முதலியன வெளியிடப் பெற்றன. உல்ஸ் துரைமகனார்க்குபபின் வந்த கல்வெட்டுத் தொகுதிகள் ஒன்பது ஆகும் ஆயின, அவற்றில் வெறுங் கல்வெட்டுப்பகுதிகளே வந்துள்ளன படியெடுதது இன்றளவும் வெளிவராத கல்வெட்டுக்கள சில ஆயிரமேனும் இருககலாம். அவை அனைத்தும் தகக அறிஞரால் விளக்கங் களுடன் வெளிப்படுமாயின், மேலும பல உண்மைகளை வரலாற்றுஉலகமும் பொதுமககளஉலகமும் அறிந்து பயன் பெற இடமுண்டாகும்.

# குறும்பு

[திரு. பி. ஏர்துசாமி பி. எஸ் ஸி.]

குறும்பு என்ற சொல் பொருட்செறிவும் நயமும் உடையது. குறும்பு என்பது சிற்றரண், முல்லை, பாலை நிலத்தூர், குறுநில மன்னர் ஆகிய பல பொருளைக்கொண்டு பழந் தமிழிலக்கியத்தில் பயிலுகின்றது. தற்பொழுது பேச்சு வழக்கில் 'விஷமம்' என்று சிலர் கூறும் சொல்லின் பொருளைக்கொண்டு வழங்குகிறது.

அரம்பு என்பதும் குறும்பு எனும் பொருளுடையது. அரட்டன் என்பது குறும்பன் எனும் பொருள்கொண்டு நூல்களில் வருகிறது. 'அரட்டமுக்கி' என்ற சொல் குறும்பர்களை அடக்குபவன் எனும் பொருளில் வழங்குகிறது. 'அரட்டை அடித்தல்' எனும் பேச்சு வழக்கும் குறும்பு பண்ணல், கேலி செய்தல் என்ற பொருளில் வழங்குகிறது.

கலகம் செய்யும் குறுநில மன்னர்களைக் குறும்பு என்று பழந்தமிழ்நூல்கள் கூறும். மாலையைக் குறும்பென்று உருவகப்படுத்திச் சிலப்பதிகாரம் கூறும். இந்த உருவகம் மிகவும் அழகு வாய்ந்தது; நயம் பொருந்தியது; பொருட்செறிவுடையது.

> "விரிகதிர் பரப்பி யுலகுமுழு தாண்ட
> வொருதனித் திகிரி யுரவோற் காணேன்
> அங்கண் வானத் தணிநிலா விரிக்குந்
> திங்களுஞ் செல்வன் யாண்டுளன் கொல்லென
> திசைமுகம் பசந்து செம்மலர்க் கண்கள்
> முழுநீர் வார முழுமெயும் பனித்துத்
> திரைநீ ராடை யிருநில மடந்தை
> அரைசுகெடுத் தலம்வரும் அல்லற் காலை
> கறைகெழு குடிகள் கைதலை வைப்ப
> அறைபோகு குடிகளொ டொருதிறம் பற்றி
> வலம்படு தானை மன்னர் இல்வழிப்
> புலம்பட இறுத்த விருந்தின் மன்னரின்
>
> மல்லன் மூதூர் மாலைவந் திறுத்தெனை
> இளைய ராயினும் பகையரசு கடியுஞ்
> செருமாண் தென்னர் குலமுத லாகலின்
> அந்தி வானத்து வெண்பிறை தோன்றிப்
> புன்கண் மாலைக் குறும்பெறிந் தோட்டி."

மேற்காட்டிய உருவகத்தைக் காவிய உருவகம் (Epic metaphor) என்று சொல்லவேண்டும்.

இந்த உருவகம் பலவரிகளில் விளக்கமாகச் செல்கின்றது கதிரவனை அரசனாக உருவகப்படுத்தியிருக்கிறார் நிலவை அவ்வரசனின் செல்வனாக உருவகித்திருக்கிறார் கதிரவன் மறைந்து திங்கள் தோன்றுவதற்கு இடையுள்ள மாலைக்காலம், அரசன் இறந்துபட மகன் அரசுகட்டில் ஏறுவதற்கு இடையில் குறுமன்னர்கள் கலகம் செய்யும் காலத்திற்கு ஒப்புமையாகக் கூறப்பட்டுளது கதிரவனின் வலிமையையும், சிறப்பையும் நோக்க அரசனாக உருவகித்தது பொருத்தமே நிலவின் தண்மையையும், மென்மையையும், வளரும் குணத்தையும் நோக்க, நிலவை மகனாகக் கூறியதும் பொருத்தமே கதிரவனிடம் திங்கள் ஒளி பெறுவதும் ஒப்புமையாகக் கொள்ளலாம் 'குழவித் திங்கள்' என்று நிலவுக்கு இளமை கூறுவதும் 'ஒரு தனித்திகிரி உரவோன்' என்று கதிரவனுக்கு வலிமை கூறுவதும் பண்டை நூல்களின் மரபு. மகன் இளையனாயிருக்க, வேந்தன் இறந்துபட்டால் குறுநிலமன்னர்கள் கலகம் செய்வது தமிழிலக்கியமும் வரலாறும் காட்டும் உண்மை. இந்தக் கலக இடைக்காலம் குழப்பமயமானது, குறுகியது, மக்களை மயக்குவது. ஆதலின், இவ்விடைக்காலம் மாலைக்காலத்திற்குப் பொருத்தமாகக் கூறப்பட்டது மாலைக்காலத்தில் ஒளி மங்குகிறது, பனி பெய்கின்றது; இயற்கையே மயக்கத்திலாழ்கின்றது, இம்மாலை அந்தியின் ஒளி தெளிவன்றி மயங்கிக்கிடப்பது இயற்கை நிகழ்ச்சி. உலகம் இம் முறையில் மயங்கிக்கிடப்பதை அழகாக இளங்கோ வருணித்துள்ளார். ஒரு தனிக்கதிரவன் மறைய, நிலாத் தோன்றுமுன் வான முகட்டில் உடுக்கள் பல தோன்றுகின்றன இவ்வுடுக்களைக் குறுநில மன்னர்களுக்கு ஒப்புக்கூறலாம்.

மனிதனின் விழிப்பிற்கும் உறக்கத்திற்கும் இடையுள்ள காலம் மாலை. தலைவி தலைவனை எதிர்பார்த்து இருக்கும் வேளை மாலையே. மனிதனும் அயர்வு நீங்க மாலையையும் வீட்டையும் வரவேற்கிறான். ஆடு மாடுகள் பட்டி தொட்டி நாடுவதும், பறவைகள் கூட்டைத் தேடுவதும் இம் மாலைக்காலத்திலேயே உயிர்கள் எல்லாம் ஏதோ ஒன்றை எதிர்பார்க்கும் காலம் மாலை, மயங்கிக்கிடப்பது மாலையின் இயற்கை; அதுபோல் மக்களும் கலக இடைக்காலத்தில் மன்னனின் மகனை எதிர்பார்த்து மயங்கி நிற்கின்றார்கள், ஆதலின் மாலையைக் குறுமமென்றது பொருத்தம்

மனிதனின் உள்ளத்தில் அலைக்கழித்துக் கொண்டிருக்கும் குழப்பத்தை உள்நாட்டுக் கலகத்திற்கு ஒப்பிட்டு செகப்பிரியர், மாக்பெத்திலும் ஜூலியஸ்சீசரிலும் கூறியுள்ளார். இந்த உவமை சிலப்பதிகார உருவகத்தோடு ஒத்து வருவது அழகாக உள்ளது.

ஆளும அரசனை ஒழித்து அரசுபெற மாக்பெத் ஆசைப்படுகிறான். அந்தப்பேராசைக்கும் மனசசான்று, பகுத்தறிவுக்குமிடையே போராட்டம் நடக்கிறது இநதப் போராட்டம நடக்கும குழப பமய மனநிலையை, இடைக்காலததை, வெளியில் நடககும் உள் நாட்டுக்கலகத்திற்கு ஒப்பிட்டிருககிறார். மாக்பெத்தைதத தமிழ் மரபுப்படி குறும்பெனக்கூறலாம். இதுபோல், புரூட்டஸ மனதிலும் ஒரே குழபபம. அறிவுநிறைநத சான்றோனை புரூட்டஸ ஆராய்நது பார்க்கிறான் புறஉலகத்தைப போன்று, அகத்திலும் ஒரு உலகம் இருபபதைக காண்கின்றான.

> "Between the acting of a dreadful thing
> And the first motion, all the interim is
> Like a phantasma, or a hideous dream
> The Genius and the mortal instruments
> Are then in Council, and the state of man
> Like to a little kingdom, suffers then
> The nature of an insurrection." —Julius ceasar II 1· 62-69

'மனிதனே ஒரு சிறு உலகம தொடங்குவதற்கும செய் வதறகுமிடையே உள்ளகாலம் கெட்டகனவுபோல, மங்கிய மயக்கததோற்றம்போல இருக்கிறது' என்று புரூட்டஸ சொல் கிறான மற்றும உள்ளத்தில நிகழும குழபபத்தை, வெளி உலக உள்நாட்டுக் குழப்பத்திற்கு ஒபபிடுகிறான, இபபடிக் குழப்பத்தி லாழ்நத மனிதனின நிலை, உளநாட்டுக் கலகத்தால அலைக் கழிக்கபபடும சிறுநாடுபோல இருக்கின்றது என்று சொல் கிறான உள்ளததில நிகழும குழபபமான இடைக்காலததை, வெளியுலக அரசியல குழபபததிற்கு ஒப்பிட்டதுபோல, இளங் கோவும இயற்கையில காணும மயகக இடைககாலமான மாலையை, அரசியல குழபபததிற்கு ஒப்பிடுகின்றார். இந்த ஒப்புமைகளி லெல்லாம அடிபபடைத்தனமை கலக்கம, குழபபம், மயக்கமே. இதன் பொருட்செறிவையும நயத்தையும உணாநதே கலித தொகை, பெருஙகதை, சிநதாமணி, மற்றும் பிறநூல்களும் இதைககையாள்கின்றன

> "ஆனாது கலுழ்கொண்ட உலகத்து மற்றவன
> ஏனையான அளிப்பான்போல இகலிருள் மதி சீப்பக
> குடைநிழ லாண்டாற்கும ஆளிய வருவாற்கும
> இடைநின்ற காலம்போல் இறுததந்த மருண்மாலை"
> (கலி, நெய்தல்· ககஅ)

> "நிறைகடல் மணடில நேமி யுருட்டிய
> இறைகெழு பெருவிறல் எஞசிய பின்றைக
> கடல்கண ணாிநத கையா ராகி
> இடந்தொறும் பல்கிய மனனர் போல

வரம்பில பனமீன் வயின்வயின் விளங்கிப்
பரந்துமீ தருமபிய பசலை வானத்துத்
தலைசதேர்ந்த தானைக்குத தலைவ னாகி
மூலைப்பாற் காலதது முடிமுறை யெயதிக்
குடைவீற் றிருந்த குழவி போலப்
................... .... ..................
செங்கோட் டிரும்பிறை செககர் தோனறி''
(பெருங்கதை மலைபுலம்பல் சஈ-ருஅ)

"உரைசெய திகிரி தனையு ருட்டி ஒருகோ லோசசி உலகாண்ட
அரசன் ஒதுங்கத தலையெடுதத குறும்பு போனறது அரக்காமபல''

சிந்தாமணியில்,

"ஆறிரு மதியி னெய்தி யாட்டனை யடாதது மற்றான்'
(கஉஉக)

என்னும் வரிகளிலும நிலாபபோல் எழுந்து குறும்பாகளை அடககினான் என்று சொல்வது இநத ஒப்புமையின் சுருககமே யன்றி வேறல்ல

குறும்பு உருவக உவமையாகப பயின்றுவரும் நயத்தையும பொருட்செறிவையும பார்த்தோம. இனி, இச்சொல் வரலாற றில் எப்படி முக்கியமானது என்று பார்க்கவேண்டும தமிழ் நாட்டில் பழங்காலததில் இருவகையில் அரசாகள் தோன்றி னார்கள் எனபதைதத தமிழிலக்கியத்திலிருநது உய்தததுணரலாம குறிஞ்சியில் மலைகளிலும காடுகளிலும தேன், கிழஙகு முதலிய இயற்கை உணவுகளை உண்டுவந்த மனிதன, முல்லைநிலததில் இறங்கி ஆடுமாடுகளை மேய்க்கலானான்; ஆடுமாடுகளை மேயத்து வாழ்ந்தபோது அவர்களிடையே தோனறிய தலைவன் அரச னானான்; முல்லையிலிருநது ஆற்றோரஙகளில் குடியேறிய மனிதன் பயிர்செய்து வரலானான்; நகரங்கள் தோனறியது. அங்கும அரசன் தோன்றினான். அவனே தண்புனலுலகதது 'வேநதன' ஆவான்.

ஆடுமாடுகளை மேய்த்த நாகரிக காலத்தில் (Pastoral civilization) மனிதன தோனறியதற்குப பலநாட்டு வரலாற றிலும், நமது இலக்கியத்திலும சான்றுகள் உண்டு ஆற்றோர நாகரிகத்தில் (Riverside civilizations) தோன்றியவாகளே மூவேநதர்கள் இந்த சேர, சோழ, பாண்டியாகள் ஆடுமாடுகளை மேய்த்தவர்களிடையே தோனறிய அரசாகளை வென்று, அவா களைக் குறுநில மன்னர்களாக்கினார்கள் ஆனால், இக்குறுநில மன்னாகள வாய்த்தபோதெல்லாம கலகம் செய்துவநதாகள் சிறப்பாகப் பேரரசன் இறந்துபட, மகன் சிறியனாயிருப்பின் இக் குறுநில மன்னர்கள் இந்த இடைக்காலத்தில் தலையெடுத்துக்

கலகம் செய்தனர். இக் குறுநில மன்னர்கள் 'குறும்பு' என்று அழைக்கப்பட்டனர். இவர்கள் மூவரசர்களுக்கு முன்னமே முல்லை நாகரிகத்தில் தோன்றிய அரசர்களின் வழிவந்தவர்கள் இவர்களுக்குக் 'குறும்பு' என்ற பெயர் பின்னர் இடப்பட்டது.

முல்லையில் மன்னன் முதலில் தோன்றினான் என்பதற்கு 'கோன்' என்ற சொல் ஒரு சான்று கோக்களை மேய்த்த மக்களின் தலைவன் கோன் மாடுமேய்த்தவனின் கோலே பின்னர் செங்கோல் ஆகியது இந்த முல்லை நாகரிகத்தில் தோன்றிய அரசனின் பெயரான 'கோன்' பிறபேரரசர்களுக்கும் பெயராயிற்று. குறும்பு முல்லைக்குப் பெயராயிருந்திருக்க வேண்டும் குறும்பும் அரம்பும் ஒரேபொருளுடையன. குறும்பு என்ற சொல்லிற்குச் சிற்றரண் என்று பொருள்உண்டு. குறுநில மன்னர்கள் அரண்கள் கட்டிவாழ்ந்தனர் என்பது இதிலிருந்து தெரிகிறது குறும்பாடு என்றொரு ஆடும் உளது ஆனால் 'குறும்பு' என்றசொல் தோன்றியமுறையை அறுதியிட்டுச் சொல்லமுடியவில்லை. இந்தக் குறும்புமன்னர் அடிக்கடி இடைக்காலத்தில் இடையூறு செய்துவந்ததால், இவர்கள் மாலை யோடு ஒப்புமைக்காட்டப்பட்டனர். குறும்பர் என்று ஒரு சாதியார் உளர் அவர்கள் குறும்பாடுகளின் அடர்ந்த மயிரி லிருந்து கம்பளி நெய்கிறார்கள் இவர்கள் மிகப் பழங்காலக் குடிகள் என்று தெரியவருகிறது முல்லைநிலத்தாரில் 'கோனர்' என்றொரு சாதியாரும் உளர் 'கோ' மேய்த்தவர் கோனர் ஆயினர் அடுத்த இடையர் என்ற சாதியினரும் தற்பொழு துள்ளனர். குறும்பர், கோனர், இடையர் ஆகிய மூன்று சாதி யினரும் ஒரு காலத்தில் முல்லையில் வாழ்ந்த ஓரினத்தவரே 'இடையர்' என்ற பெயர் எப்படி வந்தது என்பது ஐயமின்றித் தெளிவாகவில்லை குறிஞ்சிக்கும் மருதத்துக்கும் இடையிலுள்ள நிலத்தவர் என்று பொருளுடையதாயிருக்கலாம் அல்லது இடைக்காலத்தில் எழும்பும் குறுநில மன்னர்களால் ஆளப் பட்டதால், பிற்காலத்தில் இவர்கள் இடையர் என அழைக்கப் பட்டிருக்கலாம் ஆனால் 'மாலை இடைக்காலம்" போன்றவர் குறும்பு என்ற ஒப்புமைக்கும் 'இடையர்' என்ற சொல்லுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு என்பதை மறுக்கமுடியாது. ஆனால் இடத்தின் தன்மையால் பெயர்பெற்றனர் என்பதற்குச் சிந்தா மணி வரிகள் சான்றாக உள்ளன.

> "நலத்தகு தொறுவி னுள்ளேன்
> கோன்குடி யேன், இடையிடத்தேன்"

என்று வரும் வரிகள் 'கோன்குடி' என்றும் 'இடையிடத்தேன்' என்றும் சொல்வதை நோக்குக.

குறும்பாகள் அரசாண்டதறகு செவிவழிசசான்று உளது மிகப்பழங்காலத்தில் தொண்டைநாடு குறும்பர் நிலம் என்றழைக கபபட்டது அதில் ஆடுமாடுகள் மேய்த்து வந்தனர் குறும்பா. இருபத்துநான்கு கோட்டங்களாகப்பிரித்து ஆண்டனா என்றும, அவர்களை வென்று ஆதொண்டைப் பேரரசன் தொண்டை நாட்டை நிறுவினான் என்றும் செவிவழிச்செய்தி கூறுகிறது. மற்றும் பழந்தமிழ்ப் பாடல்களில் வரும் தாழியில் கவிததுப புதைத்தல் என்ற வழக்கம் குறுமபர்களுடைய தனிபபட்ட வழக்கம் என்று சில வரலாற்று ஆசிரியர்கள் கருதுகிறார்கள குறும்பர்கள் இப்போது தென்னார்காடு வடாக்காட்டிலும திருச்சிமா வட்டத்திலும் இருக்கின்றார்கள. குறும்பர்கள் நாடாண்டுவந்ததைப் பதிற்றுப்பதது பாடல் ஒன்றின் மூலமும உணரலாம்.

ப் புகல்சிறந்து
புலவுவில் இளையா அஙகை விடுப்ப
மத்துக்கயி ருடா வைகறபொழுது நினையூஉ
வானபயம வாழ்நர் கழு வுள தலைமடஙகப
பதிபா ழாக வேறுபுலம படர்ந்து” (பதிற்றுப்பத்து எக)

‘கழுவுளான இடையாககுத தலைவனாய அக்காலத்துக குறும்பு செய்தானொருவன்’ என்றும், ‘அககழுவுள தலை மடங்குகையாலே, அவனை விட்டு வேறு திறையிடாக குறும்பர் நாட்டிலே பதிபாழாகச் செனறனர்’ என்றும் உரை கூறியிருப் பதைக் கவனிக்கவும். திரையிட்டு வாழ்நதனா என்பதிலிருந்து குறும்பர்கள் அரசு செலுத்தினர் என்பது தெரிகிறது இடைய ரும் குறும்பரும் ஒருவரே என்பதும் தெரிகிறது. இக்குறும்பர் களே குறுநில மன்னர் என்பதும், அவர்கள ‘மன்பெருமரபு’ பெற்று, மூவேந்தருடன் மகட்கொடுத்து வாழும் உரிமை யுடைய வர் என்றும கருதுவது பிழையல்ல. இதனால குறும்பர் மிகப் பழஙகாலத்தில் தமிழ்நாட்டில் அரசு செலுத்தினர் என்பதும, முல்லை நாகரிகததில் முதன் முதல மன்னர்கள் தோன்றினர் என்பதும், அவர்கள பின்னர்க் குறுநிலமன்னராய்க் ‘குறும்பு’ ஆகினர் எனபதும் விளஙகுகிறது.

மலையாளத்தில் ‘குறும்பா நாடு’ எனும் ஒரு தாலுக்கா உளது காரைக்காலருகில் குறும்பகரம் என்றொரு ஊர் உளது. கொங்கு மண்டலத்தின் இருபத்து நான்கு நாடுகளில குறும்பு என்பதும் ஒன்று.

“கொங்கிற் குறுமபிற் குரக்குத தளியாய்”

என்கின்றது தேவாரம ஆதலின் குறும்பர் ஒரு காலத்தில் தமிழ்நாடு முழுவதும் பரவியிருந்தனர் என்று கருதலாம். இக்

குறுமபரைப் பற்றியும அவர்கள் வரலாற்றைப்பற்றியும் அறிய வேண்டியவை மிக இருக்கின்றன.

முலலை நிலத்தாராகிய இக்குறுமபா, இடையர், கோஞர் ஆகிய சாதியினர் இன்றும் கண்ணனைப் போற்றி வைணவத்தைக் கடைப்பிடித்து வருகின்றனர் ஆனல், இவாகளுடைய பழைய தெய்வம எது என்பதும, அத தெய்வத்தின் வரலாறும் ஆராய வேண்டிய தொன்று

பழந்தமிழா இயற்கையையே தெய்வமாக வணங்கி வந்த னர் ஒவவொரு திணைமக்களும அநநில இயற்கையைத் தெய்வ மாக வழிபட்டு வந்தனர். ஆனல் மருதநிலத்தார் தங்களுடைய அரசனையே தெய்வமாகப போற்றினா என்று கருதவேண்டி யிருக்கின்றது குறிஞசியின செம்மையான அழகுடைய இயற் கைக் காட்சியைச 'சேயோன்' என்றும் 'முருகன்' என்றும் அழைத்தனர் அதுபோல முலலைநில இயற்கையை 'மாயோன்' என்றனர் 'மாயோன் மேய காடுறை உலகமும்' என்ற தொல் காப்பிய வரியில் வரும் 'மாயோன்' இயற்கைத் தெய்வமே

முல்லைக்குரிய காலம் 'மாலை'. மாலை என்பதின் வேர்ச் சொல 'மா' அலலது 'மால' 'மால்' எனருல் மயககம் என்று கூறலாம் முல்லைககுரிய காலம இருளும ஒளியும் மயங்கும் காலம் பனிபபெய்து வானம ஒளியற்றுப் பசநது மங்கிய ஒளி மண்டிககிடககும காலமாகும. உலகமே மங்கிய ஒளியில் மயக்கததிலாழ்நதுளது. மால் தரும காலம மாலையாயிற்று. மாலைக்கால மயக்கததில் மாய்ந்துளள இயற்கையை 'மாயோன்' எனறழைததனர். மால தரும இயற்கையை 'மால்' எனும் தெய்வமாக்கினர் மால, மாய் எனும இரு சொல்லும ஒரு பொருள் தருவன அதனடியாக மாயோன், மால் எனற பெய ரில் முல்லைத தெய்வம அழைககபபட்டது விடியற்காலமான 'உஷாக்காலத்தை' 'உமை' எனும தெய்வமாக்கினர் வடமொழி யாளர் அதுபோன்றே மாலை இயற்கையைத் தமிழா தெய்வ மாககியதில் வியப்பிலலை இம்மாயோன் மாலாகி, பின்னர் கண்ணன், விஷ்ணு ஆயினன் என்று கருதவேண்டும ஆரியத் தெய்வமென்று கருதப்படும கிருஷ்ணன் ஆரியத்தெய்வமன்று; ஆரிய-திராவிடக் கலப்பிற்குபபின் உண்டானது என்று கருதும் வரலாற்று ஆசிரியர்கள் உண்டு. இருக்கு வேதத்தில் கிருஷ்ணன் என்றொரு கடவுள் இல்லாததை அவர்கள் காட்டுகின்றனர். சிநது நாகரிகம, சிவ வழிபாடு ஆரியர்க்கு முற்பட்டது என்ப தைக் காட்டியது. கிருஷ்ண வழிபாடும் ஆரியருக்கும் முற்பட் டது அல்லது ஆரிய-திராவிடக் கலப்பில் உண்டானது என்று கருத இடமுண்டு. கிருஷ்ணன், மாயோனுயினன் என்பதைவிட

மாயோன் பின்னர் கிருஷ்ணனோடு ஒன்றுபடுத்தப்பட்டான் என்று கூறுவதே பொருத்தம் ஆடு மாடுகளை மேய்த்த ஆயரிடை வாழ்ந்தான் கிருஷ்ணன் என்ற கதை, முல்லை நிலத்தில் ஆடுமாடு மேய்க்கும் ஆயர்களின் தெய்வமான மாயோனுடைய கதையாகமாறிய காலம் தெளிவாகத் தெரியவில்லை. மாயோன் வழிபாட்டின் அடிச்சுவடு மறையவே, மாயோன் கிருஷ்ணனானான். 'மாயோன் ஓண நாளும்' என்ற மதுரைக் காஞ்சி 591-ம் வரியில் 'மாயோன்' விஷ்ணுவான முறை தெரிகிறது. ஆனால் 'ஓண' விழா மிகப் பழைய தமிழ் விழா. அது இப்போது மலையாளத்தில் மட்டும் உளது இது வேறெங்கும் நடைபெறுதலை நோக்கும்போது, இவ்விழா ஆரியவிழா என்று கருத இடமில்லை இதில் வரும் 'மாயோன்' முதலில் இயற்கைத் தெய்வத்தைக் குறித்தது என்று கருத இடமுண்டு புதுப்புனல் வருவதை விழாவாகக் கொண்டாடினர் மருத நிலத்தார். இப் புதுப்புனல் விழாவே இந்திர விழாவாயிற்று. தண்புனலுலகத்து வேந்தன் இந்திரன் ஆனதுபோல் இவ்வோண விழா முல்லை மக்களுடைய விழா என்று கருதவும் இடமுண்டு இவ்விழாவில் வணங்கப்பட்ட தெய்வம் 'மாயோன்' என்றும் கருத இடமுண்டு. 'யாயாகிய மாயோளே' என்று குறுந்தொகை வரி கூறும் கருநிறமுடைய காளியை 'மாயோள்' என்று பிற்கால நூல்கள் கூறும். 'காடுகிழாள்' என்றும் சில நூல்களில் ஒரு தெய்வம் வருகிறது இவைகளுக்குள்ள உண்மைத்தொடர்பு விளங்கவில்லை மாயோள் என்றால் அழகிய, கருமையானவள் என்பதே பழைய பொருள் என்பதும் தெரிகின்றது ஆதலின் 'மாயோன்' அழகிய, மங்கலான, மயக்கம்தரும் இருள் சூழ்ந்த இயற்கைத் தெய்வத்தின் பெயர் என்று கருதுவதில் மிகையில்லை இத்தெய்வத்தையே முல்லை மக்கள் வழிபட்டு வந்தனர் மாலையை வருணித்துவரும் பாக்கள் தமிழிலக்கியத்தில் எண்ணில இருக்கின்றன மாலையொடு புலம்பல், மாலையைப் பழித்தல் என்று பல துறைகளில் மாலைக்காலத்தைப் பற்றிய பாடல்களைப் பாடியிருக்கின்றனர். சிலப்பதிகாரம், மணிமேகலை, சிந்தாமணி, பெருங்கதை ஆகிய காவியங்களிலும், பல சங்கப்பாடல்களிலும் இந்தக் கையறு மாலையைப்பற்றிப் புலவர்கள் பாடியுள்ளார்கள்

ஆதலின் மாலை இயற்கையில் ஆழ்ந்து மகிழ்ந்த தமிழர் அவ் வியற்கையைத் தெய்வமாகக் கொண்டாடினர் என்பதில் மிகையொன்றுமில்லை.

# நாவலர் நினைவுவிழாத் தலைமையுரை*

[வித்துவான் பண்டிதர் கா பொ இரத்தினம் எம் ஏ., பி. ஓ எல்]

நாவலர் பெருமான் இவ்வுலகைவிட்டு நீங்கி எழுபத்து மூன்று ஆண்டுகளாகின்றன நாவலர் நினைவு விழாவையும் குருபூசையையும் பல இடங்களிலே பற்பல சங்கங்கள் கொண்டாடிவருகின்றன வெறுங் கொண்டாட்டங்களோடு மாத்திரம் நாம் அமைந்துவிடுதல்கூடாது. நாவலர் ஒரு பெருந்தொண்டர், நம் சைவசமயத்திற்கு உய்வைத் தேடிய தொண்டர், தமிழ் மொழிக்குத் தலைமை தந்த தொண்டர், இறந்தகாலத்தின் பழுதிலாத திறத்தை நிலைநாட்டிய தொண்டர், வருங்காலத்தின் சிறப்புக்கு வழிகோலிய தொண்டர். இத்தகையவரை நாம் போற்றவேண்டுமெனில், தொண்டு செய்தலையே நமது முதற் கடமையாகக் கொள்ளவேண்டும் அவர் செய்த தொண்டுகளை நாமும் செய்தல்வேண்டும். அவர் செய்ய விரும்பியவற்றை - செய்யத் தொடங்கியவற்றை - நாம் செய்து நிறைவேற்ற வேண்டும்

நாவலரின் பேராற்றல்

விநாடிக்கொரு பாட்டும் நாழிகைக்கொரு நூலும் ஆக்கத் தக்க பேராற்றல் உள்ளவராக இருந்தாலும் நாவலர் அவற்றை ஆக்குவதிலே தம் முயற்சியையும் நேரத்தையும் முழுதும் ஈடுபடுத்த விரும்பவில்லை எழுதப் படிக்கப் பயிலாத மக்களுக்கு— கற்க வாய்ப்பில்லாது அவலப்பட்ட மக்களுக்கு—நூல்களினால் என்ன பயன் உண்டாகும்? நாவலர் காலத்திலே, பொதுவாகத் தமிழ்நாட்டிலும் சிறப்பாக யாழ்ப்பாணத்திலும் ஒரு பெரிய சமய மாற்றம் நிகழ்ந்தது இம்மாற்றம் பல வழிகளில் நடந்தது. பாடசாலைகள் யாவும் சமய மாற்றஞ்செய்யும் இடங்களாக விளங்கின

நாவலரின் பேராசை

மேனாடுகளிலிருந்து கிறித்த சமயத்தைப் பரப்புவதற்கு இங்குவந்த பாதிரிமார் பாடசாலைகள் பலவற்றை நிறுவிக் கல்வி கற்பிக்கத் தொடங்கினார்கள். அப்பாடசாலைகளிலே தமது சமயத்தைத் தழுவியவர்களையே சேர்த்தார்கள். பிள்ளைகளைப் படிப்பிக்க விரும்பிய பெற்றோர் யாவரும் கிறித்த சமயத்தைச்

---

* மதுரைப் மாகாணத்துச் சைவ மகாசபையார் கொண்டாடிய நாவலர் விழாவில் நிகழ்த்தியது.

சேரவேண்டியிருந்தது அரசினர் பாடசாலைகளைத் தாமே நிறுவாமல்விட்டது மாத்திரமன்றிப் பாதிரிமார் நடத்திய பாடசாலைக்குப் பொருளுதவியுஞ் செய்து கிறித்த சமயத்தைப் பரப்ப ஊக்கமளித்தார்கள். இதனாலே சைவசமயப் பிள்ளைகள் கல்வி கற்பதற்குச் சைவப் பாடசாலைகள் இல்லாமல் அவலப்பட்டனர். நம் நாட்டு மக்களின் அவலத்தைக் கண்டார் நாவலர். அவருடைய உள்ளங்கொதித்தது. தமிழுஞ் சைவமும் சிறந்தோங்க வேண்டுமெனின், மக்கள் யாவரும் சைவப் பாடசாலைகளிலே கற்று அறிவுபெறவேண்டுமென உணர்ந்தார். கல்வி கற்பிக்கிறோம் என்று கூறிக்கொண்டு சமயமாற்ற வேலையிலே முனைந்து நின்ற பாதிரிமாரின் சூழ்ச்சியை அம்பலப்படுத்தினார். தமது சொற்பொழிவுகளினாலும் துண்டறிக்கைகளினாலும், தூங்கிக் கிடந்த மக்களைத் தட்டி எழுப்பினார்; உணர்ச்சி உள்ளவர்களாக-மானம் உடையவர்களாக - வாழ வழி காட்டினார்; சைவசமயப் பிள்ளைகள் கல்வி கற்பதற்குப் பாடசாலைகளை நாடெங்கும் தொடக்கி நடத்தவேண்டுமென்று முடிவுசெய்தார், அதனையே தமது வாழ்வின் முழுநோக்கமாகவும் கொண்டார். இதனைப் பின்வரும் அவருடைய மணிவாசகங்கள் புலப்படுத்துகின்றன.

"நிலையில்லாத என் சரீரம் உள்ளபோதே என் கருத்து நிறைவேறுமோ நிறைவேறாதோ என்னும் கவலை என்னை இரவும் பகலும் வருத்துகின்றது. அக்கருத்து இது: தமிழக் கல்வியும் சைவசமயமும் அபிவிருத்தியாவதற்குக் கருவிகள் முக்கிய ஸ்தலங்கடோறும் வித்தியா சாலைகள் ஸ்தாபித்தலும் சைவப் பிரசாரணஞ் செய்வித்தலுமே."

... நிறைவேற்றுதற்காகவே நாவலர் அல்லும் பகலும் உழைத்தார்; தம் உடல் பொருள் உயிர் மூன்றினையும் நல்கினார். இதனை நிறைவேற்றுதற்காக அவர் செய்த பணிகள் பலப்பல; அவர் அடைந்த இடையூறுகளும் பல. நாட்டு நலனுக்காக அவர் பாடுபட்டாராதலின் தாம் செய்ய விரும்பியவற்றை எவர்க்கும் அஞ்சாது உண்மைவழியில் நின்று செய்தார். தம்மை எதிர்த்தவர்களை ஈற்றில் அடிபணியச்செய்தார்.

**நாவலர் ஒரு புரட்சிவீரர்**

நாவலர் ஒரு பெரிய சீர்திருத்தச் செல்வர், புரட்சிவீரர். கிறித்த பாதிரிமார் தம் சமயத்தைப் பரப்ப மேற்கொண்ட வழிவகைகளை எல்லாம் சைவசமயத்தை நிலைநாட்ட அவர் கையாண்டார்; புதுப்புது வழிகளையும் மேற்கொண்டார்.

ஈழநாட்டிலே மாத்திரமன்றி இந்தியநாட்டிலும் சைவப் பாடசாலைகளைத் தொடங்கினார். பாடசாலைகளிலே 'படிக்கும்,

மாணவர்களுக்குப் பயன்படத்தக்க பாலபாடங்கள், இலக்கணச் சுருக்கம் முதலிய நூல்களை எழுதி வெளியிட்டார். சைவசமய உண்மைகளைத் துண்டு அறிக்கை வாயிலாகவும் சொற் பொழிவுகள் மூலமாகவும் பரப்பினார். அக்காலத்திலேயிருந்த தமிழறிஞர்கள் சொற்பொழிவாற்ற நன்கு பயின்றுகொள்ள வில்லை. சொற்பொழிவாற்றப் பலரை நாவலர் பழக்கினார்; ஒப்புயர்வற்ற நாவன்மை உடையவராகத் தாமும் விளங்கினார். இந்நாவன்மை காரணமாக **நாவலர்** என்னும் பட்டத்தையும் பெற்றார். 'சபாப்பிரசங்க சிங்க'மென அறிஞர்கள் யாவரும் அவரை ஒருமுகமாகப் போற்றினார்.

செய்யுள் வடிவத்திலிருந்த சமயநூல்கள் பலவற்றை மக்கள் யாவரும், எளிதில் படித்துணருமாறு உரைநடையில் ஆக்கினார். வினாவிடைகள் மூலம் சமய உண்மைகளை மக்க ளுடைய மனத்திலே எளிதிற் பதியச்செய்தார். வடமொழியிலே உள்ள சமயநூல்களின் கருத்தையும் தமிழிலே எழுதிப் பரப்பினார். நூல்களைப் பதித்து வெளியிடுதற்கு அச்சியந்திர சாலையையும் நிறுவினார்.

நாவலரின் கண்டனங்கள்

அவருடைய அஞ்சாமையையும் வீரத்தையும், ஆழ்ந்தகன்ற கல்வியறிவினையும், உண்மையை நிலைநாட்ட உயிரையே கொடுக் கும் பெருஞ்செயலையும் இன்றும் நமக்குக் காட்டுவன அவருடைய கண்டனங்களே. பொதுநிலையங்களிலும், அறச் சாலைகளிலும், ஆலயங்களிலுமுள்ள குறைகளையும், கிறித்த சமயத்தைச் சேர்ந்தோர் செய்த சமய நிந்தனைகளையும், அறிஞர்கள் எனவும் தேசத்தொண்டர்கள் எனவும் நடித்த வர்கள் செய்த பிழைகளையும் அச்சம் சிறிதுமின்றியும், அவற்றை அம்பலப்படுத்திக் கண்டிப்பதால் தமக்கு வரும் பகைமையையும் அதன் விளைவுகளையும் பொருட்படுத்தாதும் கண்டித்தார். இதனாலே கிறித்தவர்கள் மாத்திரமன்றிப் பிராமணர்களும் கோவிலதிகாரிகளும் போலிச் சைவர்களும் பிறரும் இவருக்கு இன்னல்விளைக்க முற்பட்டனர்; வசைமாரியும் பொழிந்தனர். ஆனால் நாவலரோ "**நம்மை நீங்கள் எப்படித் தூற்றினும் உங் களுக்கு நன்மையாக முடிப்பவைகளை உங்களுக்கு வெளிப்படுத்துதற்கு நான் சிறிதும் தடைப்படா வண்ணம் சிவபெருமான் திருவருள் செய்க**" என்று கூறினார், நீதி மன்றத்தில் வழக்குகளும் நடந்தன. எதற்கும் அஞ்சாத ஆண்மையுடனும் அசைபாத ஊக்கத்துடனும் நாவலர் பொலிந்தார்; நற்றொண்டாற்றினார்; நாடெங்கும் புகழ்பெற்றார்.

நாவலருக்கும், இராமலிங்கசுவாமிகளுக்கும் மிடையில நடந்த அருட்பா வழக்கினை அறியாதார் உளரோ?' தேவார திருவாசகங்கள் முதலிய அருட்பாடல்களுடன் சேர்த்து அருட்பாடல் எனப்போற்றததக்க பெருமையும் அருட்டன்மையும இராமலிங்கசுவாமிகளுடைய பாடல்களுக்கு உண்டா?' என்று நாவலர் கேட்டார். கண்டிததார், இத்தகைய நாவலர் பெருமான் அவதரித்த நாட்டிலே இப்பொழுது தோன்றும் அருட்பாடல்களைப்பற்றி என்ன கூறலாம்?

'கன்னுபின்னுப்' பாடல்கள் அருட்பாடல்களாகுமா?

மொழி மரபு அறியாது, பேசுவது போல எழுத வேண்டுமென்று வாதிடும் அறிவிலாச் சோம்பேறிகளுடன் பேசுவது போலப் பாடவும் வேண்டும் என்று கூத்தாடுங் 'கும்பலும்' இப்பொழுது தமிழ் நாட்டிலே தோன்றித் தமிழ்க்கொலை செய்கிறது. முறிந்த தடி, கிழிந்த சீலை, அறுந்த கயிறு.. . ..... போன்ற பொருள்களைப் பற்றியுங்கூடப் பலபாடல்கள் தோன்றுகின்றன. புற்றீசல்கள் போலத் தோன்றும் இப்பாடல்கள் உடனுக்குடனே அழிந்து வருவதை நாம் காண்கிறோம் ஆதலின், இவற்றைப்பற்றி அதிக கவலை அடைய வேண்டிய

ஆனால், முருகன் அருளாலே இயற்றுகிறோம், ஆவேசத்தாலே பாடுகிறோம், சன்னதங்கொண்டு ஆகருகிறோம் என்று கூறிக்கொண்டு 'கன்னு பின்னு' எனப்பாடித் தம பாடல்களையும் அருட்பாடல்கள் என்று பறையறைவாரை எப்படி நாம் பொறுக்கலாம்?

"காலைப் பிடித்தேன கந்தா
கையை யெடுத்தேன் முருகையா
சிறிய குணம் இல்லாத குமரா
பெரிய செயகை யுடைய முருகா"

என்று வாயிலே வந்தவற்றை யெல்லாம் பாடி, இவையும் அருட்பாடல்களதாம் என்றால் இது முருகன் திருவிளையாட்டா? அன்றேல் பக்தி மயக்கமா? முத்தமிழால் வைதாரையும் வாழ வைக்கும் முருகனைப் பாட யாவர்க்கும் உரிமையுண்டு ஆனால் 'அவனருள் கூட்டப் பாடினேம், ஆதலினாலிவை அருட்பாடல்கள்' என்று பிறரை ஏமாற்றுதல் கூடாதன்றோ! நம் மொழியில் அளவில்லாத அருட்பாடல்கள் உள அவற்றைப் படித்துப் பயனடைதலை விடுத்து இத்தகைய பாடல்களைக் கட்டி நம் மொழிக்கும் சமயத்துக்கும் அவமானத்தை உண்டாக்குதல் நன்றோ?

மொழிக்கு மொழி தித்திக்கும் தேவார திருவாசகங்களிலுள்ள அன்புப் பெருக்கும், அருள்நலமும், தெய்வ மணமும், புலமைத்திறனும் சிறிதேனும் இல்லாத இக்குப்பை கூளங்களையும் நம்மவர் சிலர் பொருட்படுத்திப் போற்றுகின்றார்களே இஃது எவ்வளவு மடமை! இதனைக் கண்டால் யார்தான் நகைக்கமாட்டார்கள்? இவ்வாறு நெல்லுக்கும் புல்லுக்கும் வேறுபாடு தெரியாது ஒழுகும் நம்மவர்க்கு நாவலர் பெருமானைப் போற்றத்தானும் தகுதியுண்டோ என்று சிந்தித்துப் பாருங்கள்.

உயிர்ப்பலியிடுங் கொடிய வழக்கம் நீங்கவேண்டும்

இனி, நம் சமயத்துக்கும் நமக்கும் அவமானத்தையும் பழிப்பையும் தரும் ஒரு கொடிய வழக்கத்தைப் பற்றியுஞ் சில கூற விரும்புகிறேன். அறியாமையாலும் அசுரத் தன்மையாலும் நம் கோயில்கள் சிலவற்றிலே இன்னும் உயிர்ப்பலியிட்டு வருகிறார்கள். இந்த அநியாயத்தை நீக்குதற்கு நாவலரும் முயன்றார். அவருடைய முயற்சி இன்னும் முற்றும் வெற்றி காணவில்லை. அவரைப் போற்றும் நாம் இந்த மா பாதகச்செயலைப் போக்கச் சிறிதேனும் முயற்சிக்கிறோமா? தெய்வத்தின் பெயரால் கொலை செய்து கொண்டாட்டம் நடத்துவதைப் பார்க்கிலும் இழிவான செயல் வேறுண்டா? நம் கோவில்களிற் சில, கொலைக் கொட்டில்களாகவும், இறைச்சிக் கடைகளாகவும், குடியர்களின் வெறியாட்டிடங்களாகவும் காட்சியளிக்கின்றனவே இதைப் பார்த்துக்கொண்டு கண் மூடி மௌனிகளாக நாம் இருத்தல் நன்றோ! இந்தக் கொடிய வழக்கத்தை நம் நாட்டிலிருந்து அறவே ஒழித்து விடுதல் நமது கடனென்று கூறவும் வேண்டுமோ? அடுத்த ஆண்டில் வரும் நாவலர் திருநாளின் முன் இதனை ஒழித்துவிடத் திட்டமிட்டு நாம் முயல்வோமாக உயிர்ப்பலியிடும் கோயில்களையுடைய ஊர்களில் வாழும் அன்பர்கள் பலர் இப்பேரவையில் இருக்கிறார்கள் தங்கள் தங்கள் ஊரிலே இக்கொடிய செயல் நிகழாமற் செய்ய வேண்டியது தங்களுடைய கடமையென்பதை அவர்கள் ஏற்றுக்கொள்வார்கள் என்றே நினைக்கிறேன்.

மேலும், நம் கோவில்களில் நிகழும் திருவிழாக்களில் நடக்கும் தாசிகளின் ஆடல் பாடல்களையும், வாணவிளையாட்டுக்கள் முதலியவற்றையும் ஒழித்துவிடவேண்டும் என்று நாவலர் கூறினார், முயற்சியும் செய்தார்! ஆனால் இப்பொழுது நடப்பதென்ன? இவற்றை நீக்குதற்கும் நாம் முயலவேண்டும். நம் சைவசமயச் சபைகளும் சங்கங்களும் ஆடம்பரத்திலும் ஆரவாரத்திலும் பதவிவேட்டையிலும் தம் பொழுதையும்

பொருளையும் வீணுக்காது, இவற்றையும் உயிர்ப்பலியிடுதல் முதலிய கொடிய செயல்களையும ஒழித்து விடுதற்கு வேண்டிய தொண்டுகளில் ஈடுபடும் நாள் எந்நாளோ?

**பிழைமலிய எழுதுவதா நவயுகக்கலை?**

அச்சிட்டு வெளியிடப்படும நூலகளில் எவ்வித பிழையும் இருததல் கூடாது எனுங் கருத்து உடையவர் நாவலர் பெருமான், பிழைகளின்றி நூலகளை எழுதியும் பதிததும அவர் வெளிப்படுத்திஞர் திருக்குறள, திருக்கோவையாா முதலிய நூல்களைப் பிழையின்றிப பதிக்கத தகககவா அக்காலத தில் அவரொருவரே என அறிஞாகளும செல்வாகளும கருதி ஞர்கள்; அவரைக்கொண்டு அந் நூலகளையும பிறவற்றையும அச்சிடுவித்தார்கள். பிறர் எழுதும் நூல்களிலுள்ள பிழைகளை எடுத்துக்காட்டி கண்டிப்பதறகும் நாவலர் பின்னிற்பதில்லை இதனுல் அவருடைய காலததிலே வெளியிடப்பட்ட நூலகள் பிழைக ளின்றிச் சிறந்தமுறையில் அமைநது விளங்கின. ஆனுல் இபபொழுது நிகழ்வதென்ன? பரிசு பெறும் நூல்கள பல வற்றிற் பக்கத்துககொரு பிழையாவது இருக்கும் ஒருமை—பன்மை, செய்வினை—செயப்பாட்டு வினை, புணர்ச்சிவிதிகள முதலியனவற்றைச் சிறிதும் அறியாதவாகளும் நூல்கள் எழுதி கிருர்கள, பரிசும் பெறுகிருர்கள், பட்டங்களையும் சூடுகிருர்கள, சூட்டுகிருாகள் பிழை மலிய எழுதுவது ஒரு நவயுகக கலையாக—புத்தம புதிய கலையாக—ஆகிவிடுமோ என்று கவலைப்பட வேண்டிய நிலைமை ஏற்பட்டிருககிறது.

சிறந்த தமிழ்நூல்களை நன்கு கற்றுத் தமிழமொழி அறிவு நிரமபப் பெருமையால பிழையின்றி எழுதும் ஆற்றல் கைவரப் பெருத சோம பேறிகள், பேசுவதுபோல் எழுதவேண்டும், பாடவேண்டும் என்று கூறுகிருர்கள; பிழைமலிய எழுதுகிருர்கள இவாகளுடைய அறியாமை குறித்து இரங்குதலன்றி வேறென்ன செய்யலாம?

பல நாடுகளிலிருந்து பலவழிகளிற் கிடைக்கும் செய்திகளை னுக்குடனே அச்சிட்டுப பரபபவேண்டிய செய்தித் தாளகளின் இடையூறுகளைக் கருதி அவற்றிலுள்ள பிழைகளையும நாம பொருட் படுத்தாமல் விடினும் விடலாம்.

மாண்டு மடிந்துபோன மணிப்பிரவாள நடையைப் படைத்தவர்கள் பரம்பரையைச் சோந்தவர்களாய்த் தமிழமொழியிலே பற்றின்றித் தமிழின் தன்னிகரிலா மாண்பைச் சிதைக்கும் முயறசியிலே வெளிப் படையாக ஈடுபட்டுள்ளவர்களையும், இதறகாகப் பாடுபடும் வெளியீடு களையும் நாம் சிறிதும் மதிக்காமல் ஒதுக்கி வைத்துவிடலாம

'கரிப்பிரவாள' நடையும் 'தஸ்புஸ்' நடையும் வேண்டாம்

ஆனால், "தமிழை வளர்க்கிறோம், தமிழ தமிழென உயிர்க்கிறோம், தமிழ்ப்பணி புரிகிறோம்," என்று கூறிக்கொண்டு தமிழைச் சிதைக்கிறவர்களை நாம் கண்டிக்காமல் விடமுடியுமா? 'நெற்றிக்கண்ணைக் காட்டினும் குற்றம் குற்றமே' என்று கூறிய நக்கீரரைப் போற்றுகிற நாம—'உயிருக்குக் கெடுதி ஏற்படினும உண்மையை உரைப்பேன்' என்று இயம்பிய நாவலரைப் பரவும நாம—தமிழ் மொழியின் ஆக்கங் கருதி இவர்களுடைய பிழைகளை எடுத்துக் காட்டவேண்டிய கடப்பாடுடையவர்களன்றோ? இந்த 'நர மனிதர்கள' ஆங்கிலம், இந்தி முதலிய பல மொழிகளின் சொற்களை ஒரு வரையறையுமின்றித் தமிழிலே புகுத்தி ஒரு கரிப் பிரவாள நடையை உண்டாக்குவதன் காரணம யாதோ? சிறைச்சாலை, வழக்கு முதலிய தமிழ்ச்சொற்களிருக்க 'ஜெயில்,' 'கேஸ' முதலிய ஆங்கிலச் சொற்களைப் புகுத்தி "தஸ்புஸ" நடைக்கு ஏன் வழிகாட்டவேண்டும்? 'போடு, வாடு, இண்டா, பாரட்லா' முதலியவற்றை வலிந்து போற்றி "அரட்டைக் கச்சேரி" ஏன் செய்யவேண்டும? தகுதியான தமிழ்ச்சொற்களிருக்கவும், வழக்கில் வந்த வடசொற்களிருக்கவும ஜாமீன், ஜாபிதா முதலிய சொற்களை வாரி வழங்குவதேனோ? இவற்றால் தமிழுக்குக் "கட்டுமஸதான" உடல் வந்துவிடுமா?

ஆரியச் சொற்களைத் தமிழில் ஆளும்போது அவற்றிலுள்ள ஆரிய எழுத்துக்களை நீக்கித் தமிழ் மயமாக்கி ஆளவேண்டுமென்பதே, தொல்காப்பியர், பவணந்திமுனிவர் முதலிய பேரறிஞர் கொள்கை இந்தக் கொள்கையினையே தமிழ்ப் பெரும புலவர்கள் யாவரும தழுவியுளர் இதனையே பிறமொழிச் சொற்களை எடுத்தாளும பொழுதும் நாம கடைப்பிடிக்க வேண்டும்

இதனை விடுத்து ஆங்கிலம இந்தி முதலிய மொழிகளின் சொற்களை மாத்திரமன்றி ஆரியச் சொற்களையும் சிலர் அவற்றின் "தத்ரூபத்திலே" தமிழிலே புகுத்திப் புதுமை காண்கிறார்கள். 'அக்னி, சூர்யன், இந்த்ரன்,' என்றெல்லாம் எழுதித் தமிழ்த் தாய்க்கு "ஹாரதி" எடுக்கிறார்கள். இது 'தித்திக்கும செந்தமிழின் சீர்த்திக்கு' அடுக்குமா? இந்தப் புதுயுக மனிதர்கள உண்மையை உணர்ந்து தமிழ்மரபைச் சிதைக்காமலும நாளுக்கு நாள, நூலுக்கு நூல் தம கொள்கைகளை மாற்றாமலும உறுதிப்பாட்டுடன் தமிழ்த்தொண்டு செய்தால நமது தமிழ்மொழி நன்கு சிறந்தோங்குமன்றோ!

பேசும் பொழுதும் தமிழ்மொழியின் இனிமை தோன்ற நாம பேசுதல் வேண்டும. நம் வானொலி நிலையத் தமிழ் அறிவிப்பாளர் சிலர் பேசுந தமிழைக் கேட்கும்போது 'ஆரியர் கூறுந்தமிழ்' நகைச் சுவைக்குப் பொருளாகும், எனபபேராசிரியர் தொல்காப்பிய உரையிற் கூறுவது நினைவுக்கு வருமட. நிற்க.

**தாய்மொழிக்கு முதன்மையளிக்கிறேமா ?**

இப்பொழுது நாம் அடிமைத தளையினின்றும விடுதலை பெற்று நம்மை நாமே ஆளும உரிமையுடையவாகளாகி விட்டோம் நமது தாய்மொழிக்கு நமது நாட்டிலே சம உரிமை கொடுக்க முயற்சிகள் நடக்கின்றன அதனை அரசியல் மொழியாக்கவும் முடிவு செய்துளர் கல்வியினையும தாய் மொழியிலேயே ஊட்ட வேண்டு மென்றும் வற்புறுததுகிறோம. ஆனல், இப்பொழுதுதானும நமது மொழிககு நமது பேச்சிலே எழுத்திலே, வீட்டிலே நாட்டிலே நாம் முதனமை கொடுக்கிறேமா ?

தமிழ்மக்கள் ஒருவரோடு ஒருவர் உரையாடும்போதும, ஒருவருக்கொருவர் எழுதும்போதும தமிழை மாததிரமே பயன் படுத்துவதாக உறுதி செய்து அதன்படி நடகக வேண்டும தமிழிலே எழுதும் அழைப்பிதழ்கள் அறிக்கைகள் முதலிய வற்றிலே ஆங்கிலச் சொற்களையும் எழுததுக்களையும் கலவாமல் எழுதப பழகிக் கொள்ள வேண்டும. நம பெயாகளைத் தமிழிலும அவற்றிற்கு முன்னே வரும எழுததுககளை ஆஙகிலத் திலுமாகக் கலந்து எழுதும் வழககத்தை விடுத்து அவற்றைத் தமிழிலேயே எழுதல வேண்டும. ஆங்கிலம், யபபான முதலிய மொழிகளைத் தாய்மொழிகளாகக் கொணட மககள தம் பெயர்களை இவ்வாறு இருமொழிகளைக் கலந்து எழுதுகிறார் களா ? ஆங்கிலேயரின் ஆட்சியிலிருந்து நீஙகிய பின்னரும் நாமேன் நம் பெயரை நமது மொழியில் எழுதுமபொழுது கூட ஆங்கிலததுக்கு அடிமைப் பட்டவாகள என்று காட்ட வேண்டும தமிழிலே தந்தி அனுப்புதற்குச சில நகரங்களிலே இப்பொழுது வாய்ப்புக்கள இருக்கின்றன. அவற்றைப் பயன் படுத்துவோர் தொகை நாளுககு நாள் குறைநது வருகிறதாம், என்னே நம் தமிழ் மக்களின் தமிழ் ஆர்வம ! அஞசல் உறை களிலே தமிழிலே முகவரியினை எழுதும தமிழர்கள் எத்தனை பேர் இங்குளர். இலஙகை முழுதும தமிழைப பரபப விரும்பு பவர்கள் இதனைத தானுஞ்செய்தல் கூடாதா ?

**தமிழிசையைப் போற்றுதல் யார்கடன் ?**

தமிழ் மக்கள் தமிழிசையைப் போற்ற வேண்டு மென்று அக்காலத்திலேயே நாவலர் கருதினர். சில இசைப்பாடல்களையும்

பாடித்தந்தார் 'தமிழர்கள் தமிழிசையைப் போற்ற வேண்டும், தமிழ்ப் பாடல்களையே பாடவேண்டும்' என்று கிளர்ச்சி செய்ய வேண்டிய நிலைமை தமிழ் நாட்டில் ஏற்பட்டதுகுறித்து உண்மைத் தமிழன் - மானமுள்ள தமிழன—வருந்தாமலிருக்க முடியாது. தாய்மொழி அறிவு நிரம்பாத நம் குழந்தைகளுக்குப் பொருள் சிறிதும் தெரியாத தெலுங்குப்பாடல்களைத் தொடக்கத்திலே கற்பிக்கும் அறியாமை என்றுதான் முற்றும் நீங்குமோ? தென்னிந்தியாவிலும் யாழ்ப்பாணத்திலும் உள்ள தமிழ்மக்கள் இப்பொழுது உண்மையையுணர்ந்து தமிழிசை வளர்ச்சியில் ஊக்கங்கொண்டுளா. ஆனல், நமது கொழும்பு மாநகரில் உள்ள சில தமிழ்ப் பெரியோர்கள் இன்னும் தூங்கிக் கொண்டுதானிருக்கிறார்கள் இவர்களையும் விரைவில் உண்மையையுணர்ந்து தமிழிசையாக்கங்கருதி உழைக்கச் செய்தல் இன்றியமையாதது.

கடைசியாக எந்த எந்தத் துறைகளிலே நாம் தமிழை வளர்க்கலாமோ அந்த அந்தத் துறைகளில் அதனை வளர்த்தலும், எல்லாத்துறைகளிலும் அதற்கு முதன்மை கொடுத்தலும் நமது கடன் என்பதை நாவலரைப் போற்றும் இந்தப் புனித நாளிலே வற்புறுத்தி எனது தலைமையுரையை நிறைவாக்குகிறேன. தமிழ் வாழ்க, தமிழிசை பெருகுக, நாவலர் புகழ் ஓங்குக.

## வையை

வையையெனபது, தென்பாண்டி நாட்டில் ஓடும் சிறந்த ஆறு. இதனை **வையை** எனவும், **வைகை** எனவும் வழங்குவா. இவ்யாறு பண்டு தொட்டே வளர்ந்து வளந்தரும பேராறு இதனை இரண்டாயிரம யாண்டுகட்கு முனபிருந்த இளங்கோவடிகள் தாம ஆக்கியருளிய சிலப்பதிகாரச செஞ்சொற் கருவூலத்தில,

'உலகுபுரந் தூட்டும உயர்பே ரொழுக்கத்துப்
புலவர் நாவிற் பொருந்திய பூங்கொடி
வையை யென்ற பொய்யாக் குலக்கொடி'

என, அழகுற அமைத்துப் பதித்து வைப்பாராயினர் அவ்வையை; விடுதலை பெற்ற நமநாட்டில் வற்ருப் புனலுடன் வளஞ்சுரந்தூட்டி நாட்டில் பசியும பிணியும் நீங்கி மக்களும் உயிர்களும் வாழ நன்னலம் நல்குக. வாழ்க வையை!

—சேல்லூர்க்கிழார்.

# *புயலோ! புயல்!! புயல்!!!

[புலவர் திரு. பொ. வே. சோமசுந்தரனார், மேலைப்பெருமழை.]

பித்தேறி னானிறைவன் நல்லருளைக
கைவிட்டான் பெருங்காற் றானான்
மத்தேறி யுடைதயிர்போல் மன்னுயிர்கள்
உடைநதொழிய மலக்கஞ் செய்தே
செத்தேயிங் கொழிகவெனச சினநதிட்டான்
பேய்போலச் சீறு கின்றான்
கொத்தேறு குழலுமையும முகிலாயங்
கவனோடே கூடி னாளால்!

டன உலகதிரத் திசைநடுங்க
வானிருளத் தெய்வ மஞசச்
சடசடவென் றொலிபடத்தீந தருவெல்லாம
வேரோடே சாய்நது வீழக
கடகடவென் றேநகைததான்! கடல்பெருகித
திடரேறிக் கலகஞ் செய்யப்
படபடவென் றேமாந்தா பயத்தாலே
குலைநடுங்கிப பதைத்து வீழ்நதார்!

எளியோர்கள சிறுகுடிலும எழிலோங்கு
மாளிகையும் இரைநது சிறித
துளியோஙகு மழையோடே சூறைவளி
சாடுதலால் சுவர்கள் சாயப
புளியோங்கு மாமரமே தென்னைமரம
வாழைமரம் புதலபூண டோடே
களியோஙகு பைங்கூழும கரும்புகளும
பாழாகிக் கழிநத வாலோ!

---

* நந்தன யாண்டு, கார்த்திகைத் திஙகள் ௧௫-ம நாள (30-11-1952) தஞ்சை திருச்சி மாவட்டஙகளில் வீசிய சூறைப் பெருவளி குறித்துப் பாடியது.

காற்றென்றே யிருநதிட்டாா காலையிலே
மாலையிலே கடுங்காற் றாகிக்
கூற்றென்றே உருக்கொண்டு கூ! கூ! வென்
றேயார்த்துக் குமைததல் கண்டாா
மாற்றொன்றும் அறியாதே மாந்தரெலாந்
திகைத்திட்டார் மகார்கள் தம்மைப
போற்றுமவகை அறியாதே தாயரழப்
புதல்வர்களும் பொருமி னூரால்.

பட்டினியால வாடுகின்ற ஏழைகுடில்
பெரும்பொருளே படைத்து வாழ்வோர்
கட்டியுயர் நீண்மாடம சிறூர்பயிலும
கூடங்கள் சிதைத்து யாவும
குட்டிநெடுஞ சுவராகப பாழபடுபப
அச்சுவரைக் குறுகி நின்றே
ஒட்டியுயிர் ஓமபினரால் மானிடவர்
சுவரின்றேல் ஒருவ ருய்யாா ! ரு

ஆடிமூநதேம் ! எனறழுதார் ! ஆனிமூநதேம் !
என்றழுதார் ! அநதோ ! வாழும
வீடிழந்தேம் ! என்றழுதாா ! மேதையிலா
மானிடவர் ! விண்ணிற் றோயுந
கோடிருந்தே வாழகுரங்குங் குதிததாடும்
அணிற்குழுவும் பிறவுங் கிதம்
பாடிமகிழ் பறவைகளும இழந்தேமென்
றழுவாரைப பாாத்தி லேமால்,

'நில்லாது பொருளுலகின நிலைாது
யாக்கையிவை நிலையென் றெண்ணி
ஒல்லாத தீவினைசெய் தழலாதீர் !
அறஞ்செய்மமின் ! உலகீர் !' எனறே
சொலலாலே மெய்ந்நூல்கள் சொல்வனவும்
கேளாராய்ச் சுகித்து வாழும
கல்லாத புல்லருநேர் கண்டுணர
வகைசெய்தான் காற்றுத் தேவன்

'சிற்றுயிரும் சிற்றுடலும சின்னுளும்
உடையீரே! செருககேன் மின்னே!
உற்றுயிர்வாழ் உலகெல்லாம் ஒருநொடியின்
நீறுக்கி ஊதித் தீர்பபேம!
பெற்றவுயர் யாக்கையினுற் பெறுபயனும்
பெறீர்தெய்வம பேணீர! வீணீர்!
உற்றநும வாழ்க்கையிஃதிங குறுஞசிறுமை
கண்டிருமென்' றுணர்ததினுல்!

காற்றுகி உயிர்க்குயிராயக காப்பானும்
நீயொருநாட் கருணை மாறிக்
கூற்றுகிச் சினஞசிறநது கொலவானும
நீயென்னில் யாமென் செய்வோம?
தேற்றுதே பெரும்பாவம செய்கின்றேஞ்
சிறுமையினுற செய்கை! தேறிப்
போற்றுதேம! எனினுமெமைப பொருளாகச
சீறுவதோ! புகழான் மிக்கோய்!

படைததிடுவாய் உலகுயிரைப பரிந்தோம்பிக
காத்திடுவாய்! பரனே! மீண்டுந்
துடைததிடுங்கால் காற்றுகிக் கூற்றுகிச்
சூழ்பிணியாய்த துயரே செய்து
புடைததிடுவாய் எனினுமிவை அருளென்றே
புகல்கின்றார் புலமை நூலோர்
சடைத்திகழும் பெருமா! நின் றிருவருளே
வெல்கவெனத தாழ்வே மன்னே.

# காட்சியும் கருத்தும்

[திரு. கா. கோவிந்தன், எம். ஏ. திருவத்திபுரம்.]

உலகில் நிலவும் உயிர்கள் அனைத்தும் பிறப்பால் ஒத்தனவே எனினும், அவை தம்முள் வேறுபடுவது அவை மேற்கொண்டொழுகும் தொழில் வேற்றுமையான் ஆம் என்று வள்ளுவர் கூறுகின்றனர். ஊன்றி நோக்கின் அவ்வேறுபாடு, அவர் தம் தொழில் வேறுபாட்டான் ஆகிறது என்பதினும், அவர் தம் மன வேறுபாட்டான் ஆகிறது என்று கோடலே பொருத்தமாதல் விளங்கும். மன வேறுபாடே சொல் வேறுபாடு தொழில் வேறுபாடுகளுக்குக் காரணமாம். "உள்ளத்தில் உண்மையொளி உண்டாயின் வாக்கினிலே ஒளி உண்டாகும்." "மனத்துக்கண் மாசிலனாதலே அறமாம்" எனவும், "நினைத்தலும் செய்தலோடு ஒக்கும்" எனவும் கூறப்படுதலும் நோக்கற்பாலதாம். "மனம் வேறு, சொல் வேறு, மன்னு தொழில் வேறு" என இவ்வேறுபாட்டு முறைமையைக் காரண காரிய வரிசையில் வைத்து வழங்குவதும் காண்க. மக்கள் தம்முள் ஒத்த உளத்தினராய் இல்லாது, வேறுபட்ட உள்ளத்தினராய் இருத்தலான் அன்றே, பிறப்பு, சாதி, சமயம், மொழி, நாடு, இவை காரணமாகத் தம்முள் பொருது கெட்டழிகின்றனர்.

இவ்வாறு மக்கள் ஒத்த உளத்தினராய் இல்லாது இருத்தலின், அவரால் காணப்படும் பொருள் ஒன்றே ஆகவும், காணும் அவர்தம் உள்ளத்தே பல்வேறு கருத்துக்கள் நிகழ்கின்றன. நிலவொளி வீசி எழும் முழுத்திங்கள், உலகில் உள்ள எல்லா உயிர்கட்கும், ஒத்த காட்சியையே அளிக்கின்றது என்றாலும், அதைக் காணும் அரசன் உள்ளம், பகைவர் நாடுமீது படையெடுத்துச் செல்ல இக்காலம் எத்துணை நல்லகாலம் என எண்ணுகிறது; உழவன் உள்ளம், பயிர்களுக்கு இளைப்பின்றி நீர்பாய்ச்ச இன்பம் அளிக்குமே இக்காலம் என எண்ணுகிறது; கள்ளர் உள்ளம், தம் தொழிலைத் தடை செய்கின்றதே இந்நிலவொளி எனத் திங்கள்மீது காய்கின்றது; இளைஞர் உள்ளம், மணல் வீடு கட்டி விளையாடத் துள்ளுகின்றது; ஆடியும், பாடியும் இன்பம் துய்ப்பதற்குரிய இன்பக்காலம் இக்காலம் எனக் களிப்பெய்தும் பிரியாது கூடி உறையும் தலைமக்கள் உள்ளம்; "உங்கள் இளம்பிறையால் எங்கள் இளங்கொடிதான் எத்தனை கோடி யிரா இப்படி வாடுவதே" எனத் துயருறும், பிரிந்துறையும் தலைவியின் தோழி உள்ளம். மேலும், அறிவு, உருவு ஆய எல்லா நலனும் அமையப்பெற்ற இளம்பெண் ஒருத்தியைக்

காணும், காவியப் புலவன் உள்ளமும், ஓவியப புலவன் உள்ளமும், காமுகன் உள்ளமும் ஒன்ருக இருக்க முடியுமா? மணமகனைபபற்றி ஆராயுங்கால, மணமகள தநதை, அவன் கல்வியின் பெருமையை எண்ணுகின்ருன், அவன் தாய் அவன் செல்வப பெருக்கை எண்ணுகிருள, அவள் சுற்றம, அவன் குலநலனை எண்ணுகிறது; மணமகள் உள்ளம் அவன் வடிவழகை எண்ணுகின்றது இவ்வேறுபாடு அவர்தம் மனவேறுபாட்டை அன்ருே அறிவிக்கின்றது ஒருவாபால குணம் உண்டு எனினும, கீழ் மக்கள் அவர்பால உள்ள அவாதம் சிறு குற்றத்தைக் கொண்டு புகல்வது, அக்கீழோர் தம கருத்துக் கீழமையால் அன்ருே?

இனி, இவ்வாறு காணப்படும் ஒரே பொருள், காண்பாா தம தகுதிக்கேற்ப, அவர்தம உளளத்தே பல்வேறு வகைபபட்ட கருத்துக்களைத் தோற்றுவிப்பதே அன்றி, காணுகின்ற ஒருவா உள்ளத்திலேயே கால வேறுபாட்டான், வேறுபட்ட கருததுக களை தோற்றுவிபபதும் உண்டு ஞாயிற்றின் தோற்றம என்றும் ஒன்ருகவே இருப்பினும், அதை இளமையில் காணுங்கால் எழுநத உளளக் கிளாச்சி, அவாககு, முதுமையிலும் அதைக காணுங்கால் உண்டாதல இல்லை. மணப்பருவம எய்தா நிலையில், காமநோய் என்பது இத்தன்மைதது என அறியாளாய்க், காம நோயால் வருந்தும வாணியை நோககி,

> "காதலென் பதுவென்? பூதமோ? பேயோ?
> வெருட்டிஞல நாய்போல ஓடிடும், வெருவில்,
> துரததும்; குரைக்கும, தொடரும வெகுதொலே."

என வீண் வீரம் பேசிய மனேன்மணி, பின்னர்க் காமநோயுற்று வருந்துங்காலே, "போதம் கரைநது மேற் பொங்கிடும் அன்பை, பூதயாக்கையோ தடுததிடும்," என இரங்கி உரைத்தல், கால வேறுபாட்டான் நிகழ்ந்த அவ்ள் மனவேறுபாட்டை அன்ருே

அமைச்சன் குடிலன், சூழ்சசியால், சேரநாட்டரசன், புருடோத்தமன், பாண்டிநாட்டு மன்னன், சீவகனுடன் போர் தொடுத்து விட்டான. முதல்நாட் போரில், பாண்டிப் படைகள் தோற்று மீண்டன; சீவகனும், பகைவரால் கொலலபபடும் நிலையில உயிர் மீடகபபட்டான், அரணும அழிநதுவிடடது. இந்நிலையால், உளத்துயர் மிக்கான் எனினும், மறுநாட் போரில் வெற்றி பெற்ருே, அன்றிக களத்தில உயிர்விட்டோ, பழி நீங்கிப் புகழ்பெறத் துணிந்துவிட்டான் அரசன். அந்நிலையில் அவன் ஆசிரியர் சுந்தரர் அவண் வருகின்ருர். வநத அவர் அரசனை நோக்கி, "கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்,

குத்தொக்க சீரதத விடத்து" என்ற முதுமொழிப்படி, தமக்குக் காலமும் இடனும் கருவியும நன்கு வாயாவழி அடங்கியிருந்து, அவை வாய்த்தவழி வினையாற்றலே அறிவுடையார் செயல்; ஆதலின, அரணும ஆற்றல அற்று, வீரரும வீறு இழந்து நிற்கும இக்காலே, ஆண்மையானும, ஆற்றலானும், நின்னினும சிறநத நின் பகைவனுடன் போரிடல் நீத்து, அவனுடன் அமைதிபேசிப பணிநதொழுகலே நன்று; இவ்வாறு இன்று பணிந்தொழுகுவையேல, பினனர் உயர்வைப் பெறுவாய்," என்று கூறுகின்றார் இவவாறு அறிவுரை கூறும் அவர் உள்ளத்தே, தான கூறிய அறிவுரைக்குச சிறநத எடுததுக்காட்டாக விளங்கும ஒரு காட்சி தோன்றுகிறது. "பெருவெள்ளம பாயும பேராறு ஒன்று, அதன கரையில் மூங்கிலும் மரமும் நிறைந்துள்ளன; பெருவெளளம் பாயினும, பெருங்காறறு வீசினும, தமநிலையில் சிறிதும தாழாது நிறகின்றன மரங்கள; ஆனல மூங்கில்களோ எனின், சிறுவெளளம் பாயினும, சிறு காற்று வீசினும, அவற்றிறகு ஏற்ப வளைநது கொடுககின்றன. இறுதியில், மரங்கள ஆணிவேரும் அற்று வீழ்ந்து விடுகின்றன; மூங்கில்கள் மட்டும, காற்றும மழையும ஓய்ந்த பின்னர்த் தம்நிலையில் நிமிர்நது நிறகின்றன, இவவாறு தான் கண்ட இககாட்சியை எடுததுக கூறித தாம கூறவிருமபிய கருத்தைக் கூறுகின்றார. "புயல்போல வநதுளது போர, இக்காலே நீ மரம் போல பணியாது செருககுற்று நிறபையேல நீ நின் கிளையுடன் அழிவது உறுதி அவவாறன்றி, மூஙகில்போல் பணிந்து செல்வையேல பின்னர ஒருகால சிறந்து வாழ்தலும் கூடும," என்றனர்.

"வளையும வேய்நிமிரும், வளையா நெடுமரம்
கிளையுடன கெடுமே கிளாகாற் றதனுல்."

இனி, இதை அமைதியுடன் கேட்ட அரசன் உளளம அக் காட்சியைக் காணும் முறையினைச் சறறு நோக்குவாம: மூஙகிலே நோககுகினறான்; உளளே வயிரம அற்று, வெற்றிடம் பெற்றுள்ளது, மரத்தை நோக்குகின்றான், இடைபபகுதி வயிரம் முற்றிச் சிவந்து தோன்றுகின்றது அன்றியும மூங்கிலேப் பலரும வேருடன் களைநது எடுத்துச் செல்கின்றனர் ஆனல், மரத்தைக் களைய மனத்தாலும் நினைக்கிலர், அன்றியும, காற்றாலும் மழையாலும வீழ்நதுகிடககும் மரத்தின் சிறுசிறு பகுதிகளையும், பொன்போற் பேணி எடுத்துசசெல்கின்றனரே அன்றி, அம் மூங்கில்களை ஒரு பொருளாக மதித்தலும் செய்கிலா. இககாட்சியைக் கண்ட அவன் உள்ளம், அதை அபபடியே ஆசிரியனுககு எடுத்துக்கூறி, அதனல் தான் அறிந்த உண்மைகளையும் விளககு

கின்றது "மூங்கில்போல் உள்ளத்தே உரம் அற்றவரே பகை வரைப் பணிந்து ஒழுகுவர், மரம்போல் உரம் மிகப் பெற்றோர் துன்பம் உற்ற இடத்தில் உயிர்விடுவரேயல்லால் பற்றலரைக் கண்டு பணிந்தொழுகார்; "ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலின் அந்நிலையே, கெட்டான் எனப்படுதல் நன்று.' காற்றாலும் மழையாலும் அழியாது நிற்பினும், அம்மூங்கிலைப் போற்றுவார் ஒருவரும் இலராதல் போல, துன்பம் கண்டு அஞ்சிப் பகைவரைப் பணிந்து ஒழுகுவாரை உலகம் போற்றாது அவரை அறிவதும் இல்லை "கணம் கணம் தோன்றிக் கணம் கணம் மறையும் பிணம்பல; இவரெல்லாம் பிறந்தார் என்பவோ?" ஆணிவேரும் அற்று விழுந்துவிடினும், மரத்தின் சிறுபகுதியும் பயன்படுதல் குறித்து அறிந்தோர் அதனைப் பெரிதும் பேணுதல் போல, உரனுடைக் கொள்கையால் உயிரிழக்கப்பெற்றோர் அறிவுடையோர் உள்ளத்தே பொன்போல பொதிந்துவைக்கப் படுவர் ஆதலின், உளளதநே உரம் மிகப் பெற்றுளளேன், நாளைப் போரிட்டு, வெற்றியோ, அன்றி, இறப்போ பெறுதலே என் கடனும் எனக் கூறினன்.

"மூளையும ஓமரமோ? முனிவ! புல்லினம்!!
களைகுவர். களைகிலா காழ்பெறுந் தருககள்;
சேணுயா தேககு திசையெறி சூறையில்
ஆணிவேருடன் எழுந்து அதிரநது அசைந்து இறினும,
பேணுவா அதனைப் பெரியோர! யாரே,
காணுவா காழுறு நாணமில நாணலை?"

ஈண்டு ஆசிரியர் சுந்தரரும். அரசன் சீவகனும் கண்ட காட்சி ஒன்றே ஆகவும், அவர் தம கருததுககேற்ப, வேறுபட( விளஙகுவது காண்க காலமும், கருததும இன்மை குறித்து கட்டுரையை இமமட்டில் முடிககின்றேன்.

# பொங்கற் புதுநாள் வாழ்த்து

[செல்லூர்க்கிழார், திரு. செ. ரெ. இராமசாமி பிள்ளை]

## வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா

திருவளரும் செந்நெல்லும் தீங்கரும்பும் மாங்கனியும்
உருவளரும் பலாக்கனியும் உயரியவா ழைக்கனியும்
தேனூறு பாயந்தோட்டத் தெங்கங்காய் பாகுடனே
ஆனுத வெண்சோறும் அனைவோர்க்கும் ஊட்டுகின்ற
மஞ்சளுடை பூண்டுவெள் ளிலைபாக்கும் வாய்மடுத்து
கஞ்சமுகம் காட்டிவரு பொங்கற்கனி வுத்தாயே! (தரவு)

இன்னிசையார் பறவைகளும் ஏற்றினமும் யாட்டினமும்
மன்னியகா ரான்களுடன் மற்றுள்ள உயிர்களும்
தன்னிகரில் இன்படையத் தண்ணருளால் அமைத்துதவும்
அன்னைநிகர் தைப்பொங்கால்! ஆண்டாண்டு வாழியவே!

வாடையிலும் பனியினிலும் வாடுகின்ற மக்களுக்கு
ஆடையொடு சோறீக்க அருளுகின்ற பாற்பொங்கால்!
மாடையுறும் அணிபூண்டு மங்கையர்கள் வாழ்த்துரைப்ப
வேடையெலாம் ஓட்டவரும் மேதகவோய்! வாழியவே!

புதுக்கலத்தில் வெள்ளியன்ன பூஞ்சாலி அரிசியுடன்
மதிக்கதிர்போற் பாற்பெய்து வண்கரும்பின் கட்டியிட்டு
விதுப்புறவே பொங்கலிட்டு மேலிறைவன் தாள்போற்ற
முதுப்புதுமை தருபொங்கால்! முழுதுலகும் வாழியவே!
(தாழிசை)

ஏழை மக்கட்
தாழை முல்லை தாமரைப் பூவினை,

பாகார் பவள வாயுறு மங்கையர்
வாகார் இன்பம் வழங்குநல் அன்பினை. (ஈரடியிரண்டு)

பட்டினி என்னுயிர்க் கின்மை செய்தனை;
ஒட்டிய கிளைஞர்கள் உவப்பத் தோன்றினை,

சங்கொலி இசையொலி முழக்கந் தந்தனை;
எங்கணும் மகிழ்கொள இயைந்து வந்தனை. (ஓரடிநான்கு)

பொங்கலாய்ப் போந்தாய்நீ, பொற்புறூஉம் அன்போய்நீ;
மங்கையருக் கின்போய்நீ, மனைமாண்புக கணியோய்நீ,
நெல்லெல்லாம் தருவோய்நீ, நிரைப்புலனும் நிறைப்போய்நீ,
மல்லெல்லாம் கொடுப்போய்நீ; மன்பதையும் புரப்போய்நீ.
(இருசீரெட்டு)

அறமுநீ; அன்புநீ; அறிவுநீ, திருவுநீ,
திறமுநீ; செம்மைநீ, இம்மைநீ, தருவோய்நீ,
நிறைவுநீ, நலமுநீ, நெறியுநீ, குறியுநீ;
பிறவுநீ, பெட்புநீ, பெண்ணுநீ, ஆணுநீ (ஒருசீர் பதினாறு)

ஆங்கு (தனிச்சொல்)

இன்புறு பொருளெலாம் இயற்கையின் ஈந்துநீ
அன்புறு தாயென அமைந்து ஆண்டுதோறும்
தண்பனி நீர்மிகு தைஇத் திங்களின்
அண்ணுறு முதல்நாள் அன்புடன் தோன்றி
மன்பதை உலகுடன் மாட்டினம் யாட்டினம்
துன்பம் நீங்கி இன்பங் கொழிக்க
வருவாய் 'வருக! வருக!' என்னஎம்
திருவாய் மலர்ந்துனைச் சிறப்புற வாழ்த்துதும்
பொங்கல் நாளே! பொங்கல் நாளே!
இங்கண்மா ஞாலத் தென்றும் வாழியவே! (சுரிதகம்)

## காவிரி

காவிரி என்பது சோழநாட்டில் பல்வளங்கொழிக்கும் பண்புடையது. இவ் ஆறு வற்றா நீர்மல்கும் வளம் உடையது, இதனைக் காவேரி எனவும், பொன்னி எனவும் வேறு பெயரானும் வழங்குவர் இதன் பெருமையை இளங்கோவடிகள், தாம் ஆக்கியருளிய சிலப்பதிகாரக் காப்பியத்தில் பல் ... ரக் கூறுகின்றார் கம்பநாடரும் கோசல நாட்டைக்

'காவிரி நாடன்ன கழனி நாடு' எனப் பெருமிதத்தோடு காவிரியையே நாட்டொடு சார்புபடுத்திக் கூறுவதூஉம் காண்க

'வேலி ஆயிரம் விளையுட் டாகக்
காவிரி புரக்கும் நாடு கிழவோனே'

எனக் கரிகாற்சோழன் பெருமையை விளக்குங்கால், இக்காவிரியையே குறித்தது, அதன் பெருமையை உணர்த்தவே என்க இக்காவிரி என்றும் வளஞ்சுரந்து உயிர்களை வாழ்விக்குமாக. வாழ்க காவிரி!

—செல்லூர்க்கிழார்.

# வடமொழி வளருமா?

மயிலாப்பூர் குப்புசசாமி சாததிரி ஆராயசசிக் கழகத்தின ஆதரவில ஒரு சமககிருத வகுப்பை *மீமிசை நீதிமன்றததலைமை நீதிபதி பதஞ்சலி சாததிரியாா 4-1-53-ல் மாலையில் சமக்கிருத வகுப்பை ஆரம்பித்து வைததாா. அப்போது அவா கூறியதாவது:

'சிறிது காலத்துககுமுன் நான் பம்பாயில் பேசியபோது கூறிய யோசனை இப்போது கணகூடாக உருப்பெறுகிறது என்று கருதுகிறேன். உரையாடலை அடிப்படையாககொணடு சமககிருதம கற்கும முறையை திரு சஙகரசுபபிரமணிய ஐயா உருவாககியிருக்கிறார் நான ஓய்வு பெற்றபின, சமககிருததகதை நனருகக்கற்று அதிறபேச எணணியுள்ளேன்.

கo அல்லது கஉ அகவையுள்ள சிறுவாகள் சமக்கிருதத்தில் பேசும் படி திரு சஙகரசுப்பிரமணிய ஐயா செயதுவிட்டால், இமமொழியின எதிாகாலம் நனருக இருககுமெனறே சொலவேன்.

சமககிருததகதின பெருமையைப்பற்றி நான் இஙகு சொல்லத்தேவை இலலை. இராட்டிரபதி இராசேந்திரப பிரசாது இதுபற்றிப்பேச வாய்ப் புக் கிடைததால அதை விடுவதிலலை நம் பழைய நாகரிகததில் (அo) அல்லது (கூo) விழுககாடு இநதச சிறந்த மொழியில ஆழ்ந்திருககின்றது. இநத மொழியின முதனமையை நாம உணாந்து நம் பணபாட்டை இந்தியாவிலும பிறநாடுகளிலும பரப்ப முயனருல் அதுவே ஒற்றுமைககான வலிமையாக அமையும.

சமககிருதம கற்றுககொடுப்பதில் கொளளப்படும பழையமுறை தவறானது எளிதான புதிய முறையில் கற்பிப்பதற்கு வேணடிய பாட நூலகள இலலை சமககிருதம் கற்றுககொடுக்குஙகால் இளைஞாகளுக்கு முதலில இலக்கணததைக கற்பிககாமல் மொழியை எளிதாகக கற்பிககும் வேறு எந்த முறையும வரவேற்கப்படும இது வெற்றிபெற்ருல் சமக் கிருதம கற்பிபபதில ஒரு பெருமுனனேற்றம ஏற்பட்டதாக ஆகும.

சமககிருதம் நாட்டுமொழியாக வேண்டுமெனறு நான முழுமனத்துடன் விருமபுகிறேன கூடியவிரைவில் இது, நாட்டுமொழியாகுமென நமபுபவாகளில யானும் ஒருவன கo அல்லது கரு அகவையுள்ள சிறுவர்கள் சமககிருததகதில நனகு பேசும்படி செய்வதில் திரு. சஙகரசுப்பிரமணிய ஐயா வெற்றிபெறுவாரென்ருல, நமநாட்டு ஆட்சிமுறைகளை சமககிருதததிலே ஏன் நடத்தக்கூடாது? என்பதற்குக காரணமில்லை. அவா முயற்சி வெற்றிபெறவேணடுமென்று விருமபுகிறேன்.

**குறிப்பு**: இன்றைக்கு நாட்டில பல்வேறு மொழிகள் உலகவழக்கிலும செயயுள வழக்கிலும நிலைபெற்று வழஙகிவருகின்றன அவற்றுளெல்லாம தலைசிறந்தது நம் தமிழ்மொழி யெனருல் அது மிகையாகாது. எததனையோ மொழிகள புற்றீசலபோல தோன்றின; வாழ்ந்தன, மடிந்தன; அவற்றுள சில ஏட்டளவில் நிற்கின்றன, உயிரோடு நிலவும மொழிகளுடன் அவை ஒவ்வொரு சொற்களாக ஒட்டுப் புற்போல் ஒட்டிககொண

* Supreme Court.

டிருக்கின்றன. அந்த இனத்தைச சேர்ந்தனவே, லத்தீன், கிரீக், ஹீப்ரு போன்ற மொழிகள். அவைகளின் உடன்பிறப்பே சமக்கிருதமும் அது செத்துப பல்லாயிரம் ஆண்டுகளாகிவிட்டன அதனை வளாக்க முற் பட்டாா ஒரு சிலா என்ன முற்பட்டும சப்பாணிக குழந்தை என்ன மருத்துவம செய்தபோதினும் நடமாட்டமில்லாமல் வீட்டின் மூலையில் முடங்கிக் கிடப்பதுபோல், இம்மொழியும் ஏட்டளவில் குந்திககிடககின் றது அதறகுப் புதுமுறை கண்டு வளர்கக முற்படுதல் செதத பிணத்தை உயிாப்பிககும் செயலை ஒத்ததே. இவ்வாறிருக்க அது, நாட்டாட்சி மொழியாக உருப்படுதல் எஙஙனம்? தமிழ்நாட்டில் பிறநது தமிழரோடு பழகி தமிழால் உயிர்வாழும் மக்கள் தமிழை வளர்க்கவே முற்படுதல வேண்டும்.

சமககிருதம் எந்தக காலத்தும பேசசுவழககில் எப்படிப் போறறினும் அது வழககத்திற்கு வாராத கடுமொழியே ஆகும். அது உலகில் நிலவாத காரணம அதனிடமுள்ள எழுத்துப் பெருககம் ட்டெழுத்துமுறை கனைத்தல எடுததல் படுததல் போனற ஒலிமிகுதி

இதே நிலையில் தமிழை ஒப்பிட்டுப் பாாததால் இனிய ஒலி, இயற்கை யாக அமைந்த ஒலியமைப்பு, மெல்லொலி வல்லொலி இடையொலிகள ஒரே அளவிலமைநத சிறபபு, எழுததுப் பெருககம மிகுதியினமை, சிறுசிறு சொற்களான் அமைநத சொற்குழுமஙகள் முதலான பலவாம்.

எனவே, தமிழ்நாட்டில் பிறந்த ஒவ்வொருவரும் தமிழரே எனறு தம்மை ஒவ்வொருவரும எணணிககொணடு தமிழமொழியை நாட்டு ஆட்சி மொழியாக அரசியல அமைப்பு மொழியாககொணடு உலகியல நடதத முன்வருமாறு வேணடுகின்றோம.

நம நாட்டுக்கவி சுப்பிரமணிய பாரதியாா கொள்கைகளில—கருத்தில தமிழ்மக்களுக்கு வேறுபாடிராது: வேறுபாடிருககக காரணமுமில்லை. அவர் தமிழ்மொழியைப்பற்றி என்ன கூறுகின்றாா பாாமின!

"யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல
இனிதாவ தெங்குங காணோம."

என்பதும்,

"தெள்ளுற்ற தமிழமுதின் சுவைகணடாா்
இங்கமரர் சிறப்புக கண்டாா"

என்பதும் அவா பொனமொழிகள. இம்மொழிகளைக் கடைப்பிடித் தேனும் தமிழை ஆட்சி மொழிக்குக கொணர முயலும்படி வேணடுகின றோம்.

—ஆசிரிய

# மதிப்புரை

## 'முருகவேள் பன்னிரு திருமுறை'

முருகவேள் பன்னிரு திருமுறையின் உரையாசிரியர் திரு. வ. சு. செங்கல்வராயபிள்ளை, எம்.ஏ., அவர்களைச் செந்தமிழுலகிலும், செந்நெறி உலகிலும் அறியாதார் எவரும் இரார். இவர்கள் புலவுத் துறந்த புண்ணியராய், புலனழுக்கற்ற அந்தணராய், நிலவும் பணிவு இன்சொல் கனிமனம் மலர்முகம் வாய்ந்த சான்றவராய், துறைபோகக் கற்றுத் தொண்டே புரிந்துவரும் தண்டமிழ்ப் பெரும்புலவராய்த் திகழ்கின்றனர். இவர்கள் திருத்தொண்டிற்கு அளவின்று. அம்மட்டோ! அவை சார்பாக வெளியிடும் நூல் உரைகளும் அன்னதே. அவர்கள், முருகவேள் திருமுறையை முன்னோன் திருமுறைபோன்று மூந்நான்காக வகுத்து வாயப் போடு வழங்குதற்கு முருகவேள் திருவருளால் முழு உரிமையும் தகுதியும் உடையவராவர். 'தேவார ஒளிநெறி' ஒன்றே இம் மெய்யுணர்வுச் செல்வரின் ஒளிநிறுவும் நல்லக விளக்காகும்.

இப் பன்னிரு திருமுறையைப் பகுதி பகுதியாக வெளியிடும் நோக்கம் சாலச்சிறந்ததே. இச் சிறந்த திருத்தொண்டை மேற்கொண்டு செய்து வரும் தவப்பெருந் திருவினர் திருமதி **மீனாட்சிகலியாணசுந்தரம்** அவர்கள். 2, இரண்டாந்தெரு, வடக்குக் கோபாலபுரம், சென்னை-6. விலை, பகுதி ஒன்றுக்கு ஒரு ரூபா. இந் நூல் செவ்வேள் அடியார் சீருடன் வழிபட்டுப் பரவும் விழுப்பம் உடையது. திருப்பாட்டுக்களும், செம்மையான உரையும், சொற்பொருளும், முடிபும், இன்றியமையா இடத்து வரலாறுகளும், ஒப்புமைப்பகுதி வாய்ந்த மேற்கோள்களும், பிறவும் அணி அணியாய் மணியொத்துத் திகழ்கின்றன. எவ்வாற்றானும் தக்க செவ்வியரால் உரைவகுத்து வெளிவரும் இப் பகுதித் திருமுறைகளைத் தமிழுலகமும் சைவ உலகமும் வாங்கியும் வாங்குவித்தும் ஊக்குவிப்பது பெருங்கடனாம் கடவுள் தொண்டும் என்றுகூறுவது மிகையாகாது. அங்ஙனம் செய்து ஏனையவும் வெளிவரத் துணைபுரியுமாறு அன்புடன் அனைவரையும் வேண்டுகின்றோம்.

## செய்முறை பௌதிக நூல்

இந் நூலாசிரியர், 'அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பௌதிகப்பகுதி விரிவுரையாளராவர். அவர்தம் திருப்பெயர், S. ஸ்ரீராமன், M.A., M.Sc., அவர்கள் என்ப. செந்தமிழாக்கத் திறரும், நந்தமிழ் நாட்டின் முறபோக்கிற்கும் பெருந்துணைபுரிவது இத்தகைய அரும்பெரும் மொழிபெயர்ப்பு நூற்களேயாம். இவ் ஆசிரியர் கூடியவரை செவ்விய முறையில் தமிழ் ஆக்கம் பேணி நன்கு மொழிபெயர்த்துள்ளார்கள். இத்தகைய உண்மைத் தமிழரால் உற வாய்ப்புக்கிடைத்தது மெய்ம்மையாகத் தமிழ்நலம் பேணும் 'அண்ணாமலைப் பல்கலைக் கழகத்' தொடர்பேயாம். இந் நூல் பல்கலைக் கழக நுழைவுப் புலமைத்துறைப் பகுதிக்கு வாய்ப்புடையதெனக் குறிக்கப் பெற்றுள்ளது. இஃது அடிப்படைக் குறிப்பும், நீர்நிலையியல், வெப்பவியல், ஒளியியல், ஒலியியல், காந்தவியல், மின்சாரவியல் முதலாக வகுக்கப் பட்டுள்ள இயல்களும், அவ்வவ்வியல்களின் உள்தலைப்பாகப் பிரிக்கப்பட்டுள்ள பல பகுதிகளும் உடையதாய் மிகச்சிறந்து விளங்குகின்றது. ஆசிரியன்மாரும், மாணவர்களும், தமிழ்ப்பெரு மக்களும் இதனை வாங்கி இது போன்ற பல அரிய நூல்கள் வெளிவரத் துணைபுரிந்து ஆசிரியர்தம் முயற்சியைப் பாராட்டுவார்களாக.

# செய்திகளும் குறிப்புக்களும்

## திரு ச. த. சற்குணர் மறைவு

சென்னைக் கிறித்துவக் கல்லூரியில் முன்னைத் தமிழ்ப் பேராசிரியராக இருந்த திரு சற்குணர் அவர்கள் தம் ௭௫-ஆம் அகவையில் தாம்பர நகரில் 23—12—52-ஆம் நாள் இறையடிப் பேறெய்தினார்கள்.

இவர்கள், முதலில் சென்னை ஹாரிஸ் உயர்நிலைப்பள்ளியிலும் பின்னர் நெடுங்காலம் சென்னை வேப்பேரித் திருப்பவுல் உயர்நிலைப் பள்ளியிலும் அதன்பின் சென்னைக் கிறித்துவக் கல்லூரியிலும் பேராசிரியராக இருந்து தமிழ்த் தொண்டாற்றினார்கள்.

தமிழ் இலக்கணத்திலும் இலக்கியத்திலும் நுட்பமான ஆராய்ச்சி வன்மையும் மாணவர் உள்ளங்கண்டு கற்பிக்கும் ஆசிரியத் திறனும் பெற்றவர்கள். தமிழுக்கு அவர்கள் பல்வகையானும் செய்த தொண்டுகள் பெரிதும் பாராட்டற்பாலன.

**குறிப்பு:** இவர்களின் பெரும்பிரிவுக்குப் பெரிதும் வருந்துகின்றோம். அவர்கள் நல்லுயிர் இன்பவுலகில் இன்புறுக.

## நெல்லை மாவட்டத்தில் அருள்நெறித் திருக்கூட்டம்

இதுகாலைப் பல இடங்களில் அமைக்கப் பெற்றுவரும் அருள்நெறித் திருக்கூட்டம் நெல்லை மாவட்டத்திலேயில் நேற்று மாலை நெல்லையப்பர் சுவாமி வசந்த மண்டபத்தில் மாபெரும் பொதுக்கூட்டம் துவங்கப் பட்டது.

அக் கூட்டத்தில் குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனத் தலைவர் திருப்பெருந்திரு தெய்வசிகாமணி அருணாசல தேசிக பரமாசாரிய சுவாமிகள் பேசுகையில், மக்களைத் தீய சக்திகளின் வலையில் வீழாது காத்து உண்மை நெறியில் அழைத்துச் சென்று உயவிப்பதே இவ்வருள்நெறித் திருக்கூட்டத்தின் நோக்கமென்று பல மேற்கோள்கள் காட்டிப் பேசினார்கள்.

**குறிப்பு:** நாத்திகம் பேசி நாத்தழும்பேறி வருகின்ற குழுஉக்கள் மலிந்துள்ள இக்காலத்தில் இவர்கள் போன்றார் தோன்றி தமிழுக்கும் சைவநன்னெறிக்கும் உறுகாலத் தூற்றுக்கோல்போன்று இவ்வாறாகிய நன்னெறியைப் பரப்ப முன்வந்தது குறித்துப் பெரிதும் மகிழ்கின்றோம்.

## ஆந்திரர் சென்னையைக் கேட்பதற்கு தமிழ்நாடெங்கணும் கண்டனம்

சென்னை நகரம் தமக்கே உரியதாக வேண்டுமெனக் கூறும் ஆந்திரர்கட்கு, அவ்வாறு கேட்பது தகாது; பொருளற்றது, தமிழ் நாட்டுக்கே உரியது எனப் பல நகராண்மைக் கழகங்களும், நாட்டுப் பெருமக்களும் கூட்டங்கூடித் தத்தம் கருத்துரைகளைத் தெரிவித்துள்ளனர். அக் கழகங்களின் பெயர்களும், நாட்டுப் பெருமக்கள் பெயர்களும் ஒரு சிலவற்றை இதனடியில் குறிப்பிடுகின்றோம்.

(க) காஞ்சி நகராண்மைக் கழகம்
(உ) நாகை நகராண்மைக் கழகம்
(ங) ஆரணி நகராண்மைக் கழகம்
(ச) கோவைத் தமிழ்ச் சங்கம், இன்னும் பல கழகங்களும்,

(1) பெரியார் திரு ஈ. வே. ரா.
(2) சுவாமி இராமானந்த தீர்த்தர்
(3) திரு எஸ். முத்தையா முதலியார்
(4) திரு. டி. செங்கல்வராயன்
(5) திரு. ஆர். கே. சண்முகஞ் செட்டியார்
(6) திரு டி. கே. சண்முகம்
(7) திரு டி. கே. பகவதி
(8) திரு. வி. கே. இராமசாமி முதலியார்
(9) திரு. எஸ். இராமசாமி நாயுடு
(10) திரு. கே. காமராசு நாடார்
(11) திரு. ம. பொ. சிவஞான கிராமணியார்

மற்றும் பல, தமிழ்நாட்டுப் பெரியார்களுமாவர், விரிவஞ்சி முழுதும் வெளியிடப்பெறவில்லை.

குறிப்பு: நாடு முழுதும் ஆந்திரா சென்னையை விரும்புவதைக் கண்டனஞ் செய்துள்ளனர், செய்து கொண்டிருக்கின்றனர். இஃதறியாதது போல மேலும் மேலும் ஆந்திரா சென்னையைக் கேட்பது, அவர்கள் தன்னலத்தையே காட்டுவதாக உள்ளது. அவர்கள் திருந்தி நெடுக இருந்த தமிழர், ஆந்திரா உறவை மேலும் வளர்ப்பதற்கு இப்பிடிவாத குணத்தை விட்டுவிட விரும்புகின்றோம்.

### சத்துள்ள உணவாக்க வழி

தற்போது அரிசி, கோதுமை முதலிய தானியங்களில் உயிர்ச்சத்து குறைந்துவருவதால் மக்கள் உடல்நலத்தோடு இருக்க முடியவில்லை. உணவு ஆராய்ச்சியில் வல்லுநரான டாக்டர் நேஸ்டர் பிளோடின் என்பார், குறைந்த செலவில் உலகிலுள்ள உணவுப்பொருள்களை இரட்டிக்கச் செய்வது இயலவல்லதே என்று குறிப்பிட்டுள்ளார். உணவுப் பண்டங்களில் அமினோகாடிகளைச் சேர்ப்பதுதான் அவர் கூறும் முறை. மண்ணெண்ணெய்த்தொழில் கழிவுப்பொருள்களிலிருந்தும், பார்லி முதலிய ஒருசில தானிய வகைகளிலிருந்தும் மேற்குறித்த அமினோகாடிகளை எடுக்கமுடியுமென்றும், இவற்றை அரிசி கோதுமை முதலிய பண்டங்களில் கலந்தால் உணவின் உயிர்ச்சத்து இல்லாது போயினும் மக்கள் உடல்நலத்துடன் நல்வாழ்வு வாழமுடியும் என்றும் குறிப்பிட்

### நூறுவது வயதில் பல்முளைத்துப் பார்வையும் பெற்றவர்

அஸ்ஸாம் மாகாணத்தைச் சார்ந்த சில்லாங் என்னும் பகுதியில் ஒரு முதியவர் இருந்தார். இவர் தம் 106-ஆம் வயதில் 4—1—53-ல் கால

மானார். இவா வாழ்நாளில நோயநொடியின்றி இருந்ததாகத் தெரிகிறது இவா பெயா பரமஅம்ச சங்காபூரி என்பது. துறவு வாழ்க்கையை மேற் கொண்டிருந்த இப்பெரியாா 80-வது வயதில் கணபாாவையை இழந்துவிட்டாா; பற்களும் விழுந்துவிட்டன. ஆனால், 100-வது வயதில இழந்த பற்கள மீண்டும முளைததன. கணபாாவையும மீண்டும கைவரப் பெற்றாா இறக்குந தருவாயில் 23 பறகள அவருககுப் புதிதாக முளைத்
ன.

மலேயா மக்களின் தன்மானம்

இலணடன் ஆக்சபோாடு நிலயத்தினின்று அண்மையில வெளிவந் துள்ள கலைக்களஞ்சியப் புதிய பதிப்புக்களை எரித்துவிடவேணடுமென்று மலேயாவைசசோந்த ஓா அரசியல் தலைவா் குறிப்பிட்டுள்ளாா அதற்குக் காரணம, அப்பதிப்பில மலேயாமககளை 'புல்லாகள்' என்று குறிப்பிட்டிருப் பதேயாகுமென அவா கூறுகிறாா. ஐக்ய மலேயாச சங்கததின செயலாள ராகிய இன்கி சுல்கிப்லி ஆசிம் என்பாா ஒரு கூட்டததில் பேசுமபோது ஒவ்வொரு மலேயா நாட்டானும் இதனை உணரவேணடுமென்று குறிப் பிட்டாா. மலேயா மககள என்பதற்கு அப்பதிப்பில சோம்பேறிகள், ஒழுக்கமற்றவாகள, கீழ்மையானவர்கள் என்று பொருள் சொலலப்பட டிருப்பதாகவும கூறினாா

நெல்லை அருணகிரி இசைக்கழகம் தமிழ்த்திருநாள்

நிகழும வளளுவா யாணடு ககூஅச—தை உச முதல் மாசி உ வரை (1953 பிபரவரி 6-ஆம நாள் முதல் 13-ஆம நாள்வரை) சனி தொடஙகி வெளளி முடியத தொடாந்து நெல்லைத் தருமபுர மடததில் தமிழ்ததிருநாள நிகழும். அதுகாலை, நெல்லை மாவட்டக கலவித்துறைததலைவா திரு. வேத. அ மரியசூசை M A L T. அவாகள் விழாவைத் தொடஙகிவைப் பாாகள் அறிஞர்கள் பலர் கலந்துகொள்வாாகள்.

இசைமுதலாக நாழிகைசசொற்பொழிவு முப்பதுடன், சொற்போர், மொழிமரபு, உரையாடல், உடற்பயிற்சி, ஓரங்க நாடகம், கல்வித்திரை, கதைகளி, அவதானம், ஆடல்பாடல் முதலியன, நிரலிலே கண்டவாறு நடைபெறும.

விருதைத் தமிழ்வள்ளல் திரு. ச. வெள்ளைசசாமி நாடாரவாகள அது காலை வள்ளுவா விழாவைத தொடஙகிவைப்பாாகள் ஏழாவது நாள் விழா நம சைவசித்தாந்த நூற்பதிப்புக கழகச சாாபில் நடைபெறும.

அன்பர்கள் யாவரும் நணபர்களுடன போந்து விழாவிற் கலந்து கொணடு, கணடும் கேட்டும இன்புறுமாறு வேணடுகினறோம.



திருநெல்வேலித், தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக
கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு வ. சுப்பையா அவாகளால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.



நாடகப் பேராசிரியர்,

ப சம்பந்த முதலியார் அவர்கள், பி.ஏ., பி எல்.




சிலம்பு ௨௭ | திருவள்ளுவா் ஆண்டு ௧௯௮௫, தை பிப்ரவரி, 1953 | பரல் ௬

# நாடகப் பேராசிரியர் சம்பந்தர்

உலகம் இருவேறு இயறகைத்தாக இலகுகின்றதென்று கணடு தெளித்துரைததவா நம திருவள்ளுவப் பெருமானுவர் ஒன்று, கல்வி கேள்விகளிற் சிறந்தாராக இலகுவது; மற்றொனறு, செல்வததினும் புகழினும் மேம்பட்டாராகத் திகழ்வது இவை இரண்டும உலகமக்கட்கு இன்றியமையாமல் வேண்டபபெறுவன. இவ்விரணடும ஒருசேரப் பிறப்பார் உலகத் தரியர். எந்நாட்டினும் வரலாற்றை நோக்குவோமாயின் இவ் ஈரினமாகவே பிரிநது நிற்பதைக் காணலாம்

நம நாட்டுப் பழஙகாலவரலாற்றுண்மைகளைக் காணப் பண்டைச்சுவடிகளைக் கொண்டு ஆய்வோமாயின், அவை யாவும இவைகளையே நமக்குக் காட்டுகின்றன. ஒரு சிறந்த நாட்டமைப்புக்கு இலக்கணங் கூறப்போநத நாவலர் பெருமான் திருவள்ளுவர்,

“தள்ளா விளையுளும் தககாரும் தாழ்விலாச்
செல்வரும சோவது நாடு.”

என்று நன்கு ஆய்ந்து முடிபுகட்டி உணர்ததியருள்வாராயினர்.

ஒரு நாட்டுக்கு விளைவுமல்கப் பாடுபட்டு உழவுத்தொழில் செய்து வற்றுவளத்தைப பெருக்கும உழைப்பாளர் இருததல் வேண்டும; அவைகளை ஒழுஙகு முறையாக அமைத்து நாட்டு வளத்தைச் சிதறவிடாது பாதுகாத்து நலஞ் செய்யும் அறிஞரும் ஒருபால் இருத்தல் வேண்டும்; இவைகட்கெல்லாம் நிலைக் களனகை நின்று உற்றுழி உதவும் கடபபாடுடைய பெருந்தகைய

ரான செல்வரும் ஒருபால் இருத்தல் வேண்டும். அஃதே நாடாகும்; அதுவே நற்றவவானினும் நனிசிறந்த நாடாகப் பிறநாட்டாரால் போற்றிப்புகழும் பெற்றிமை மிக்கதாகத் திகழும்.

இச்சிறந்த இலக்கணத்துக்கு உழைப்பாலும், கல்வி மேம்பாட்டினாலும், செல்வச் சிறப்பாலும் இலக்கியமாகத் திகழ்கின்ற பெரியாரொருவர்க்கு 1-2-52 ஞாயிறன்று சிறப்பான பாராட்டு விழா ஒன்று இச்சென்னைமாநகரில் நிகழ்ந்தது, அவ்விழாவிற்குப் பலலாயிரக்கணக்கான மக்கள் திரள் திரளாகச் சேர்ந்து வந்து அப்பாராட்டுவிழாவிற் கலந்துகொண்டு தம் பேரன்புத் திறத்தை உணர்த்தினர். அப்பாராட்டைப் பெற்ற பெரியார் நாடகப் பேராசிரியர் திரு பம்மல் சம்பந்தமுதலியாரவர்களே ஆவர்.

இவர்கள், நகை ஈகை இன்சொல் இகழாமை முதலிய நற்பண்புகள் யாவும் ஒருங்கே அமைந்த நற்குடியின் வழித்தோன்றலாகத் தோன்றினார்கள். கல்வி கேள்விகளிற் சிறந்து நாட்டுக்கு இன்றியமையாத நாடகக் கலைக்குப் புத்துயிரளித்து நன் ... டபெருமை இவர்கட்கே உரியது

நாடகம் நம் தமிழ்மொழியின் ஒருபிரிவு; அது, மக்களுக்கு உணர்ச்சியூட்டி நல்வழிப்படுத்தும் சிறந்த கலை. எதினும் மாசு படிதல் இயல்பு. அம்மாசைத் துடைத்து ஒளிபெறச் செய்ய வேண்டுவது அறிவுடை மக்களின் தனிப்பெருங் கடமை. நாடகக் கலையில் ஒருசில குறை தோன்றியது; அதனை நன்குணர்ந்து நம சம்பந்தர், அக்கலைக்கு நல்வாழ்வு அமைய நாடகநூல் ஒன்றல்ல; இரண்டல்ல; எழுபதுக்கு மேற்பட்ட நூல்கள் எழுதித் தமிழ்மொழிக்கு அணி செய்தார்; தாமே ஐந்நூற்றிருபது முறை, நூற்றொன்பது வெவ்வேறு நடிகராக நாடக மேடையில் தோன்றித் திறம்பட நடித்துப் புகழ்பெற்றார். அதனால் கற்றோரேயன்றி மற்றெல்லோரும் கொண்டாடும் பேறும் பெற்றார்.

நாடகநூல்களை அமைக்குங்கால் பிறநாட்டு நல்லறிஞர் கருத்துக்களையும், தம் தனி நுண்மாண்நுழைபுல அறிவுநுட்பத்தால் திரட்டிக் கொணர்ந்து சிறந்த முறையில் ஆக்கி உதவினார். இதற்கு முன்னர், நடிகர்கள், ஒரு வேடத்தில் கோலம் புனைந்துவருவர்; வேறொரு கோலப் பாடல்களைப் பாடுவர்; அல்லது, ஒரு வேடத்தில் தோன்றுவோர், அவ்வேடத்துக்குரியராகத் தம்மையே புகழ்ந்து பேசிக்கொண்டும் பாடிக்கொண்டும் வருவர். எடுத்துக்காட்டாக அரிச்சந்திரவேடத்தில் தோன்றுமொருவன்,

"பூசுராகள ஆசிகூறப புகழுமரிச்சந்திரன்
திகழ் புவிக்கோா இந்திரன்."

என்றும்,

பிறபிற வேடங்களிலெல்லாம இவ்வாறே, அவரவர் பெருமையைப் பாடிக்கொண்டு வருவதையும் முற்கால நாடக நடிகாகளிடையே காணலாம்

அக்குறைபாடெலலாம் நீங்க நகை முதலிய உணர்ச்சி தோன்ற நூலகள எழுதியும், நடித்தும தமிழநாடககலைக்குத தனிபபெருமை தநத சம்பநதர், இன்று அக்கலையின முதிர்வே தம் முதிர்வாககொண்டு எண்பதகவைபபருவ இளைஞராக இலகுகினறார்

இத்தனிப பெருங் கலைஞருககு, பொதுவாக தமிழ்பபெருமக்களும சிறப்பாக நாடககலைஞாகளும இவ் எண்பது அகவைநிறைவுத் திருநாளில பாராட்டிப பண்புபல பகாநது கொண்டாட எண்ணினா அதற்காகச் சென்னைத் திருவல்லிக்கேணித் தேசீயப பெண்கள் உயாநிலைப பளளிக் கலைமன்றத்தில பநதரமைத்துச செடி கொடிகளால் அழகுபடுத்தமைத்தனர்

1-2-53 ஞாயிற்றுக்கிழமைகாலை 8-மணிக்குச் சுகுணவிலாச அவைக் கட்டிடத்திலிருந்து விழாககூட்டம் திருவலலிககேணிக் கலைமன்றததுக்குப புறபபட்டது. அதுகாலை பாராட்டுக்குரியரான சம்பநதா, காலகிளர்நதன்ன விரைபரிபூட்டிய அழகிய வண்டியில ஏறியமர்நதனா ; நாடக நடிகர், திரைபபட நடிகா, பொதுமக்கள யாவரும புடைசூழ்நதனர் ஊர்வலத்துக்கு முன்னாப படுமணியிரட்டும மருஙகிற கடுநடை இருயானைகள சென்றன ; பலவகை இயஙகள் வானளாவ முழங்கின 'நாடகப் பேராசிரியா வாழக,' 'சமபநத முதலியார் வாழ்க' என்னும வாழ்த்துரை எஙகும முழங்கின இமமுழக்கஙகளுடன் காலை 10 மணிககுக் கலைமன்றததுககு வநது சோந்தனர் மக்கட் கூட்டம உளளே கட்டுக்கடஙகாமல் மிகுதியாயிற்று. தேசீயப் பள்ளிமாணவிகள் கலைமகட்கு வணககங்கூறி நடனமாடினர்.

பின்னர் நாடகப பேராசிரியாககுச் சிறபபுச செய்வதற்குப் புகழ்வாய்நத நடிகர்கள்பலர் முனவந்து விழாவிற் கலநது கொண்டனா. பல அறிஞர்களும் செல்வர்களும ஒன்றுகூடி அம்மன்றில் வீற்றிருநதனர் அதுகாலை சென்னைமாநில முதலமைச்சர் திரு சி இராசகோபாலாச்சாரியவாகள் போந்து, பொன்னுடை கொண்டு வருதற்குக் குறிப்பால் உணர்த்தினார் கள. 'நாடகப் பேராசிரியர் வாழ்க' வென்னும பேரொலி.

ஒருபாலும, கைதட்டி மகிழ்ச்சியைக் காட்டுகின்ற ஒலி ஒருபாலு மாக முழங்கப் பொன்னுடையை நம் சம்பநதருக்கு அமைசசா் போாத்தினா்கள். கூட்டத்திலிருநது பல்பக்கங்களிலும் மக்கள் தம அன்புக்கொடையாகப் பூமழை பொழிந்து வாழ்த்தி மகிழ்ந்தனர்.

அப்போது இராசகோபாலாச்சாரியாா, "திரு ப. சம்பந்த முதலியார் செய்துள்ள தொண்டுக்காக அவரைப பெருமைப் படுத்த நாம் இங்குக் கூடியிருப்பது முற்றும பொருததமாகும். திரு ப சமபந்த முதலியார், திரு. வி வி சீனிவாச ஐயங்கார், டாகடர் சி பி. இராமசாமி ஐயா ஆகியோர்கள் எனனுடைய பழைய நண்பர்கள ; அவர்களோடு ஒப்பிட்டுப பார்க்குஙகால் இஙகுக் கூடியுள்ள யாவரும் வயது எதுவாக இருபபினும் குழநதைகள் தான் திரு. சம்பநத முதலியாரும் திரு வி வி. சீனிவாச ஐயங்காரும் முதன்முதலில் சுகுணவிலாச சபையைத் துவஙகிய காலததில் இபபோதைய தனிததமிழ் அப்போது நடைமுறையில் இல்லை ; தமிழோடு சமக்கிருதமும் மிகுதியாகக் கலந்து புழங்கிவந்த காலம் ; அக்காலங்களில், நற்பான்மை இன் பததிற்கே நாடகங்கள எழுதபபட்டு நடிககப்பெறறு வநதன ; கெட்ட எண்ணஙகளுககாக அல்ல அக்காலத்தில் ஒற்றை வாடைததிடலில் சில நாடகங்கள நடநது வநதன ; சென்னை மக்களுக்கு அந்நாடகங்கள் பிடிக்கவில்லை , வெறுத்தனா ; அப் போதுதான் சமபநத முதலியாரும,ஏனையசீர்திருத்தக்கொள்கை யினரும் ஒன்றுசோந்து சுகுணவிலாச சபையைத துவஙகினர் ; அதில பல சிறந்த தொழிலாளர்களும் சேர்ந்து நாடகங்களை எழுதியும் நடித்தும் மக்களுக்கு உண்மைப் பொழுதுபோக்கை யும கல்வியறிவையும் புகட்டினா , சம்பநத முதலியார் துவங்கிய அநநறறொண்டு நல்லகாலமாக இன்னும் தொடாந்து நடந்து வருவது மகிழ்ச்சிக் குரியதாகும. அவருக்கு எண்பதாண்டு நிறைநதுவிட்டது ; அவரைப பாராட்டுதற்கு நாம இவ்வளவு காலம் காத்திருந்தோம , அவர் நோய் நொடி இன்றி மருநது உண்பதறகுக் கட்டாயமின்றி வாழ்ந்தவா; நலலோா எல்லோரும் அப்படிததான் , அவர்கட்கு எத்துன்பமும் எற்படுவதில்லை," என்று இன்னும் பலவாறுகப புகழ்ந்து பேசினா.

அதனபின் அவ்விழாக கூட்டத்துக்குத் தலைமை தாங்கிய திரு. சர். சி. பி. இராமசாமி ஐயரவாகளும், திரு வி. வி சீனி வாசையங்காரவாகளும நம சம்பந்தா தொண்டினைப் பாராட்டிப் பேசினர்

வ்விழாவில் சம்பந்த முதலியா பேரால் துவங்குவித்த திறந்துவைத்த திரு. வி. கலியாணசுந்தர

முதலியாரவர்கள் நமசமபநதர், தமிழமொழி, கலே, நாடகம இவை வளமபெற இடைவிடாது உழைத்து வந்ததைப பாராட்டிப் பேசினர்.

பின்னர்த் தென்னிநதியாவின் பண்பாட்டுக்கு -இந்நாள் ஒரு புதிய மலர்சசியைக குறிக்குமெனப பாராட்டிககூறித் திரு. பி ஆர். சுப்பிரமணியம் அவர்கள ‘ நினேவுமலா ’ ஒன்றை வழஙகினுாகள் அதில் நாடகப பேராசிரியரின் வாழ்ககைவரலாறு, பாராட்டுரைகள, நாடகங்களேப பற்றிய கட்டுரைகள் முதலியன இடம் பெற்றிருக்கின்றன.

அதன்பின்னர் புகழவாய்ந்த நடிகரான நவாப. இராசமாணிக்கம அவாகள் ஒரு பாராட்டுரை இதழொன்றைப படித்தளிததாா. பிறகு பல நிலேயங்களின் சாாபாளர்கள நாடகப் பேராசிரியர்க்கு மலர்மாலேகள அணிவித்தனர். புத்தனேரி திரு. ஆர். சுபபிரமணியன் அவாகள் பல்லிடஙகளி லிருநது வந்திருநத வாழ்த்துரைகளேப் படிததாாகள

திரு ரங்கவடிவேலு, திரு சிவஞான கிராமணியாா, திரு. ராசா சா முதையா செட்டியாா, தமிழ்நாடகக் கலேஞர் திரு. ஔவை, டி கே சண்முகம், திரு ப ஜீவானநதம, திரு. சி என் அண்ணுத்துரை முதலிய அறிஞர்களும நாடகப் பேராசிரியரைப பாராட்டிப பேசினர்.

இப்பாராட்டுரைகளே ஏற்றுமகிழ்ந்த பாராட்டாளர் சம்பநத முதலியார் மறுமொழி கூறுகையில தமககுச சிறப்புச்செய்ய ஏற்பாடு செயதவாகளுககு நன்றிகூறிஞா. சுகுணவிலாச சபையுடன் தொடக்க காலததில் தமக்கிருநத தொடாபைப்பற்றி விளக்கிஞா. அபபால் தமபெற்ருோ அளிதத ஊககமே தாம் இன்றுள்ள உயாநிலேக்குக காரணம் எனறு கூறினர். திரு வி. வி சீனிவாச ஐயங்கார் உதவியுடன் சமக்கிருதம பதினெட்டாண்டுக் காலம் பயினறதாகவும குறிப்பிட்டார்.

பின்னா நன்றி கூறிய நகைசசுவை மன்னா திரு. என். எஸ் கிருஷ்ணன் அவர்கள் திரு. சமபந்த முதலியார் நாடகக் கலேக்குப புததுயிா அளிததவரென்றும, இருபது ஆண்டுகட்கு முன்னர் நாடகஙகளேயும், நடிகாகளேயும் வெறுத்தவாகள் ‘மககட் சீர்திருததத்தில் நாடகத்தின் பஙகு என்ன?’ என்பதை இன்று உணர்நது விட்டாாகள் என்றும கூறிபபாராட்டிப் பேசிஞாகள்.

அன்று இரவு, நாடகப் பேராசிரியா எழுதிய நடகங்களான **சபாபதி, மனேகரன், களவர்தலேவன், இரு நண்பர்கள** முதலியவற்றைச் சிறநத நடிகர்கள் நன்முறையில் நடித்தனா ; அநநாட

கத்தைத் திரளான மக்கள் இருந்து கண்டுங் கேட்டும ஆரா அயரா இன்புற்றனர். அன்றிரவு 10 மணிககு எல்லோரும் கலைஞரைப பாராட்டும் பண்பினராய் மகிழ்நது கலைநது சென்றனர். இன்பஞ் சிறக்கப பாராட்டுவிழா இனிதே நிகழ்ந்தது

நாடகப் பேராசிரியர் சம்பநதர் எழுதிய நாடகங்கள் மக்கட்கு அறிவுரைபுகட்டும கருவூலங்கள, அவை தமிழர்தம் வீரம் பண்பு அறம மறம சிறப்பு முதலியவற்றை வடித்துக் காட்டும வற்றாஊற்றுககள் அவற்றுள், தமிழர்தம காதற் சிறப்பை விளககிக்காட்டுவது காதலர் கண்கள் என்னும் கவினுறு நாடகம்; வீரததையும கடமையுணர்ச்சியையும காட்டுவது மனோகரா என்னும் மாண்புறு நாடகம, நகைசசுவைக்கு நன்முறையாக மிளிர்வது சபாபதி என்னும தகைசால நாடகம்; மேனாட்டு நாடகக்கலைஞரான சேக்குபியரின் செநதமிழ் நாடகப் பெயர்ப்பு அமலாதித்தன் (ஹாமலெட்) என்னும் அரிய நாடகம. இன்னும பலபல நாடகங்கள் தமிழர்தம பெருமிதத்துக்கு அரண் செய்யும் ஆகக அருங்கலை நாடகஙகளாம்.

இத்தகைய அருங்கலைச் செலவத்தை ஆக்கி உதவிய அருங்கலைப் பெரியார்—தமக்கெனவாழாத தகைமையாளர்—என் கடன்பணி செய்து கிடப்பதே என இலகும பண்பினர்—தமிழ நாடகக் கலையை வளர்க்கும் நல்லாசிரியர்—ஒருநாட் செல்லினும் பலநாட் செல்லினும தலைநாட் போன்று தண்முகங்காட்டும சான்றோர்—திசையனைத்தின் பெருமையெல்லாம் தென்னாடே பெற உழைககும சீராளர், கலைஞர், அறிஞர், ஆசிரியர், உழைப்பாளர், கல்வியாளர், செலவர், மேற்குறிததவாறு 'இருவேறுலகததியற்கை திருவேறு; தெள்ளியர் ஆதலும் வேறு' என்னும மொழியை வேறாக நிலைநாட்டிய நலததார் சம்பநத முதலியாரவர்கள் இன்று எண்பானாண்டு கடந்து எண்பத்தோராவது அகவையினராக இலகுகின்றனர்கள இவர்கள் இன்னும் பல்லாண்டுகள் வாழ்நது தமிழமொழிக்கும, தமிழ் நாடக உலகிற்கும, தமிழ்க்கலைக்கும வேண்டும நற்றொண்டுகள் செய்துவர நல்வாழ்வை ஈநதருளுமாறு இறைவனை வேண்டி அவர்களை வாழ்த்துகின்றோம.

வாழ்க நாடகக்கலை, வாழ்க சம்பந்தர்.

ஆசிரியர்.

# திருவள்ளுவர் நாஞ்சில்வள்ளுவன்

[வித்துவான், திரு. சு. குமாரஸ்வாமி ஆச்சாரி எம். ஏ, மயிலம்]

உலகம் புகழும் திருககுறள் திருவள்ளுவரால் இயற்றப் பட்டது பாண்டியன உக்கிரப்பெருவழுதியின் அவையில் அரஙகேற்றப்பட்டது அததிருககுறள் எனபது கர்ணபரம் பரைச் செய்தி. வள்ளுவர்வரலாறு கூறும நூல்கள கூறுவ தும் இஃதே இவ்வள்ளுவா வரலாறும பிற்காலத்தோா புலவர் கட்டிய கதையெனபர் ஆராய்சசியாளர்கள். கதைகளிலும் சில உண்மைகள் இருககுமனறோ! இவவள்ளுவரைப்பற்றிய ஏனைய வரலாறுகளை எவவாறாயினுமாக, காலத்தைபபற்றிய பகுதியை மாததிரம ஆய்நது காணபோமாக

பாண்டியன் உக்கிரப் பெருவழுதியைப பாடிய புலவர் ஔவையார். இப்பாண்டிய மனனனும, சேரமான் மாரிவெண் கோவும், சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிளளியும் ஒருங கிருந்தபோது, மூவரையும இபபுலவர் புகழ்நதுளளார். இப் புலவராற் பாடபபடட பிற மன்னர்களை அதிகமான் நெடுமா னஞ்சியும, எழினியும, நாஞ்சில் வள்ளுவனுமாவா. இராசசூயம வேட்ட பெருநறகிள்ளியைப் பாடிய புலவாகள் உலோசசனார், பாண்டரங்கண்ணனார், பேரிசாததனார் ஆவர். பேரிசாத்தனாரால் பாடப்பெற்றவர் சேரமான் மாநதரன் சேரலிரும்பொறையும், பாண்டியன் இலவந்திகைப் பள்ளிததுஞ்சிய நனமாறனுமாவர். மாநதரன் சேரலிரும்பொறை, யானைக்கடசேய் மாநதரன்சேரல் இரும்பொறையென்பது, குறுஙகோழியூர்கிழாா பாட்டால் (புறம். 22) விளங்கும். ஆதலின், உக்கிரப்பெருவழுதியின் காலததுப பிற மன்னாகள் சேரமான் மாரிவெண்கோ, இராச சூயம வேட்ட பெருநற்கிள்ளி, சேரமான் மாந்தரனசேர லிரும் பொறை, பாண்டியன் இலவந்திகைப் பள்ளிததுஞ்சிய நன் மாறன் ஆவர்

வள்ளலாகிய நாஞ்சில் வள்ளுவனைப் பாடியவர்கள் ஒரு சிறைப் பெரியனார், ஔவையார், கதப்பிள்ளையார், மருதன் இளநாக னார் ஆவர். இவர்களுள் மருதன் இளநாகனாரால் பாடப்பெற்ற வர்கள பாண்டியன் கூடகாரத்துத துஞ்சிய மாறன்வழுதியும், பாண்டியன் இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறனும ஆவர். மாறன்வழுதி, குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் காலத் தவன். நன்மாறன், கிள்ளிவளவன், திருமாவளவன், வெள்ளி

யம்பலத்துத் துஞ்சிய பெருவழுதிய ஆகியவர்கள் காலத்தவன். மாறன்வழுதி, இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறனுக்கு முன்னவனவான். எனவே, உக்கிரப் பெருவழுதியும் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதியும் ஒருவரேயோ என நினைத்தற் கிடனுண்டு, இருவரும் போர்புரி வீரத்திற் சிறந்தவராகக் காணப் படுவதால்.

நாஞ்சில்வள்ளுவன் வரையாவீகையும், அஞ்சா வீரமும், இறைவர்க்கு மெய்த்தொண்டு புரிதலும் உடையவன் எனவே, இவ்வள்ளுவனே திருவள்ளுவனுகலாம், திருக்குறட் கொள்கைகளைப் பின்பற்றுவோனுகக் காணப்படுவதால். இவ்வள்ளுவன் கந்தன் என்னும் பெயருடையான் எனக் கதப்பிள்ளை குறிக்கின்றார். கந்தா அத்தனார் என்னும் புலவர் இவ்வள்ளுவனது தந்தைபோலும் ?

# நான் யார் ?

, கா. கணபதி

முருகுவளர் செழும்பருதி தோன்றும் போழ்து
முத்தமிழை என்றும்போல் கற்று வந்தேன்
ஒருநிறைவும் ஒருநினைவும் ஒரேஎ நோக்கும்
உற்றவர 'நீயார் நானாரார்' என்னும்
அருமறையே தோன்றிடவும் ஆய்விற் செல்ல
அன்பினையும் அறிவினையும் நீக்கி வேறே
ஒருவரையும் தோன்றாது மயங்கும் எல்லை
ஒளியொன்று புகுந்ததுகாண் உள்ளந் தன்னில். (1)

நானென்ன ஒன்றில்லை நான்யார் என்னின்
நல்லவன் உள்ளமெலாம் நானே யாவன்
நானென்றால் கையில்லை கால்கள் இல்லை
நலிந்துவரும் மனமில்லை மெய்யும் இல்லை
நானென்னும் இறுமாப்பு நீக்கி ஆங்கே
நல்லறிவு வெள்ளத்தைத் தேக்க விட்டால்
நானென்ப தறிவேகாண் அறிவா யென்று
நல்லுள்ளம் புகன்றதுவே நலமே வாழ்க! (2)

# திருப்பாசுரப் பேருரை விளக்கம்

[சித்தாந்த கலாநிதி ஒளவை சு. துரைசாமிப் பிள்ளை, மதுரை.]

## கடவுள் வாழ்த்து

செம்பொன் அம்பலத் தெம்பெரு முதல்வன்
விருப்பார் மலரடி பரவுதும்
திருப்பா சுரப்பொருள் தேரற் பொருட்டே

## திருஞானசம்பந்தப்பெருமான் அருளிய திருப்பாசுரம்

"வாழ்க அந்தணர் வானவ ரானினம்,
வீழ்க தண்புனல், வேந்தனு மோங்குக,
ஆழ்க தீய, தெல்லா மரனாமமே
சூழ்க, வையக முந்துயர் தீர்கவே"

என்பது பாசுரம். இஃது என்நுதலிற்றோ எனின், திருந்தா அமணர்தம் தீநெறிப்படுத் திகைத்துநின்ற தென்னவனைத் தெரிந்துய்த்தற்பொருட்டு,

"உலகியல் வேதநூல் ஒழுக்க மென்பதும்
நிலவு மெய்ந்நெறி சிவநெறிய தென்பதும்"

உணர்த்துதல் நுதலிற்று. அஃதாவது வேதங்களிலும் ஆகமங்களிலும் விதிவிலக்குகளால் நுவலப்படும் ஒழுக்கநெறியே உலகியலில் ஒழுகுவார்க்கும் உரித்தென்றும், அந்நூல்களுள் உணர்த்தப்பெறும் பலவகை நெறிகளுள் உண்மை நெறியாவது சிவநெறியென்றும் கூறியவாறும். நூல், ஆகமங்கள். வேதம் பொது, ஆகமம் சிறப்பு. பொதுவும் சிறப்புமாகிய இந்நூல்கள் விதித்தன செய்தும் விலக்கியன வொழிந்தும் வாழ்வது உலகியல் என்பார், "உலகியல் வேதநூல் ஒழுக்கம் என்பது" என்றார். இவ்வொழுக்கத்தால் பெறப்படும் அறமுதல் நாற்பொருளையும் செவ்வேயறிந்து உறுதியெய்துவார்க்கு, அவரவர் தகுதிக்கேற்பப் பற்பல நெறிகள் கூறப்படுதலின், அவற்றுள் உண்மைநெறியறிந்து ஒழுகும் முன்னைத் தவமுடையார் பொருட்டு, "நிலவு மெய்ந்நெறி சிவநெறியது" என்றும் கூறியருளினர். என்பது, என்று உண்மையறிந்த பெருமக்களால் சிறப்பித்துக் கூறப்படுவது என்றவாறு.

இத் திருப்பாசுரத்துக்குப் பேருரை வகுப்பான் ஒக்க ஆசிரியர் சேக்கிழார்சுவாமிகள் இப்பாசுரத்தின் கருத்து ஈதென்பார், "உலகியல் வேதநூல் ஒழுக்கமென்பதும் நிலவு மெய்ந்நெறி சிவநெறியதென்பதும்" என்று அருளிச்செய்தது கொண்டு இத்துணையும் கூறப்படுவதாயிற்று.

இதுகாறும் கூறியதற்கியைய, ஸ்ரீ மாதவச் சிவஞான முனிவர், "வேதம் சிவாகமம் என இரு பகுதிப்பட்டது மூன்று வருணத்திற்கும் உரிமையாதலும் நான்கு வருணத்திற்கும் உரிமையாதலும்பற்றி என நீலகண்ட பாடியத்திற் கூறப்பட்டது. 'வேதநூல் சைவநூல் என்றிரண்டே நூல்கள் வேறுரைக்கும் நூல் இவற்றின் விரிந்த நூல்கள், ஆதிநூல் அநாதியமலன் தருநூலிரண்டும் ஆரணநூல் பொதுசைவம் அருஞ்சிறப்பு நூலாம், நீதியினாலுலகர்க்கும் சத்திநிபாதர்க்கும் நிகழ்த்தியது நீண்மறையினொழிபொருள் வேதாந்தத், தீதில் பொருள்கொண்டுரைக்கும் நூல் சைவம் பிறநூல் திகழ்பூர்வம் சிவாகமங்கள் சித்தாந்தமாகும்' (சிவ சித் 8. 15) எனவும், 'உலகியல் வேத நூல் ஒழுக்கமென்பதும், நிலவு மெய்ந்நெறி சிவநெறியதென்பதும்' எனவும் கூறுபவாகலின் அங்ஙனம் தூலாருந்ததி முறைமை பற்றிக் கூறுதலின் இருபகுதிப்பட்டது என யாமகோடும்," என்று அறிவுறுத்தருளியிருப்பது காண்க.

இப்பாசுரத்தின் பொருள்

அந்தணர் வானவர் ஆனினம் வாழ்க—அறவோரும் தேவரும் ஆனினங்களும் இனிது வாழ்க; தண்புனல் வீழ்க—தண்ணிய மழைபொய்யாது காலந்தோறும் பொழிக; வேந்தனும் ஓங்குக—வேந்தனை பாண்டியனும் சிவஞான சிவவொழுக்கங்களால் மேம்படுக; தீயது ஆழ்க—தீமையினையுடைத்தாகிய சமயம் ஒழிக; எல்லாம் அரன் நாமமே சூழ்க—எல்லா உயிர்களும் சிவபெருமான் திருப்பெயராகிய திருவைந்தெழுத்தினையே ஓதிச் சிறப்புறுக, வையகமும் துயர்தீர்க—நிலத்தே வாழும் மக்கள் இருமையினும் துன்பமின்றி வாழ்க என்றவாறு.

வேறு வேறு இனமாதல்பற்றித் தொகை கொடாது அந்தணர் தேவர் ஆனினம் என்றெண்ணி "வாழ்க" என்றார். காலந்தோறும் தப்பாது பெய்தாலன்றித் தட்பம் உண்டாகாமையின், "தண்புனல் வீழ்க" என்றார். வேந்தனை "ஓங்குக" என்றதனால், அவன் ஓங்குதற்குரிய சிவநெறிக்கண் நில்லாமை யுணர்த்தியவாறும். புறச்சமயம் என்றுதல், அயற்சமய மென்றுதல் கூறாது, அந்நெறி யொழுகுவாரது தீமை குறித்து, "தீயது" என்றார். எல்லாமெனறது, அத் தீநெறிக்கண் இன்றி அதனின் வேறாய நெறிநின்ற உயிர்களை யுளப்படுத்துநின்றது. திருவைந்தெழுத்துச் சிவபரம்பொருளை யுணர்த்துவதாதலின், அதனை "அரன் நாமம்" என்றும், சூழ்தல் நினைத்தலாதலின், நினைத்தும் ஓதியும் வாழ்க என்றற்கு "சூழ்க" என்றும் கூறினார். ஏகாரம், தேற்றம். வேந்தனும் வையகமும் என்புழி உம்மை எச்சப்

பொருள் இனி, வேந்தனும் என்பதனைப் பிரித்து, வையகமும் என்பதனோடு இயைத்து, வேந்தனும் ஓங்குக, வையகமும் துயர் தீர்க என்று நிறுத்திப் பொருள்கூறுவாருமுண்டு. ஆயினும், அவ்வாறு பொருள்கோடல் மரபன்மையின் ஈண்டுக் கிடந்த வாறே கொள்ளப்பட்டது

சேக்கிழார் சுவாமிகள் அருளிய பேருரை:

இனி, இத்திருப்பாசுரத்துக்குப் பேருரை விரிக்கலுற்ற ஆசிரியர் சேக்கிழார் சுவாமிகள், முதற்கண், "வாழ்க அந்தணர்," என்று தொடங்கும் திருப்பாசுரத்துக்குப் பொருள் கூறுவார்,

"அந்தணர் தேவர் ஆனினங்கள் வாழ்கஎன்
றிந்தமெய்ம் மொழிப்பய னுலக மின்புறச்
சந்தவேள் வி முதல் சங்கரர்க் குமுன்
வந்தவர்ச் சனைவழி பாடு மன்னவாம்." (1)

என்று உரைத்தருளுகின்றார்

உரை அந்தணர் தேவர் ஆனினங்கள் வாழ்க என்ற இந்த மெய்ம்மொழிப் பயன் - அறவோர்களும் தேவர்களும் பசுக்கூட்டங்களும் வாழ்க என்று ஆளுடைய பிள்ளையார் அருளிச்செய்த இந்த மெய்ம்மை சேர்ந்த திருமொழியின் பயன் யாது எனின், உலகம் இன்புற - உலகில் உள்ள உயிர்கட்கு இன்பம் மிகவும், சங்கரர்க்கு - சிவபெருமான் பொருட்டு; சந்த வேள்விகள் முதல் - மறையோதிச் செய்யும் வேள்வி முதலாக; முன்வந்த - முன்னைநாள்தொட்டு நடைபெற்றுவந்த; அர்ச்சனை வழிபாடுமன்னவாம் - மலரிட்டு அருச்சித்தலும் பிறவுமாகிய வழிபாடுகள் நிலைபெற நிகழ்வுமாம் எ - று

என்றது, ஆளுடைய பிள்ளையார் தாம் அருளிச்செய்த திருப்பாசுரத்தின்கண், வாழ்க அந்தணர் வானவர் ஆனினம் என்றது, உலகம் இன்புறுதற்கும் தொன்றுதொட்டுச் சிவபரம் பொருட்கு நடைபெற்றுவந்த அருச்சனை முதலிய வழிபாடுகள் நிலைபெற்று நிகழ்தற்குமாம் என்று உரைத்தவாறும்.

அந்தணர், அறவோர், அவர் முற்றத்துறந்த முனிவராவர். திருவள்ளுவனாரும் அந்தணரென விதந்தோதப்படுபவர் இவரே யென்றற்கு "அந்தணரென்போர் அறவோர்," என்று தெளிவித் துள்ளார் உலகில் மக்களை அநாதியே பிணித்து நிற்கும் மல கன்மக் கட்டுக்களை அறுத்தற்குத் துணையாகவந்த உடல், கருவி, உலகு முதலியவற்றை நன்கு பயன்படுத்திக் கோடற் குரிய அறமுதல் நான்கினையும் அவற்றிற்குரிய நன்னெறியினை யும் உணர்த்தியும் ஒழுகியும் காட்டும் பேரருளாளராதலின் அவ் வருணிலையைச் சுட்டி "அந்தணர்," என்றார். அவரால் உலகம்

பெறும்பயன் அவர்தாம் பெற்ற பயனே, அஃதாவது சிறறின் பத்தொடக்ககனறு பேரினபப பெருவாழவில் திளைததாடுவது, அதுபற்றியே ஆசிரியா "உலகம இன்புற" என்ருா எனவே, அநதணா வாழ்க என்றது உலகம இனபுறுதற்பொருட்டு எனற வாறுயிறறு இனபுறுதல, இன்பம் மிகுதல், "யார்மாட்டும இனபுறாஉம் இன்சொலவாகரு" (குறள. 94. பரி உரை) என்ருறபோல.

செய்யப்படும் வேள்வியையேற்று செய்வாரை அதன் பயனைத தலைபபடுவிக்கும தலைமையுடைமையின் தேவா வாழ்க என்ருர் என்றும, மறைமொழி கேட்டு மகிழநது போநது வேள்வியில் நல்கப்படும் அவியுண்டு சிறப்பவராதலின, அவ வேள்வியைச் "சந்த வேள்வி," யென்று சிறப்பிததும கூறிஞா சந்தம், மறையோசை; வடசொற் சிதைவு தேவாபொருட்டுச செய்யபபடும் வேள்விகளால் மழைவளம பெருகுமென்பதனை அடுதத பாட்டிற கூறுதலால், வேதவேளவி நிலைபெறுவது குறிததுப் பிளளையாா தேவா வாழ்க என்ருா எனறு ஆசிரியா உரைக்கின்ருா பிறுண்டும "வேதவேளவியை நிநதனை செய் துழல் ஆதமில்லி," என வேதவேளவி நிலைபெறுவதையே குறிக கொண்டும் அதனுல் விளைவது குறைவற்ற இனபவாழவென்பார் பிள்ளையார். "மாதவர்களன்ன மறையாளாகள வளாதத மலி வேள்வியதனுல், ஏதமதிலாதவகை இன்பமமா்கின்ற எழில வீழி நகரே," (திருவீழி 5) என்றும ஓதுவது காணக இனி, சமண் சமயச் செல்வாககு மிகுதியால நாட்டில் வேதவேள்வி நிலைபே றின்றிக் கெட்டிருநதமையின் அது நிலைபெறவேண்டிச "சநத வேளவிகள் மன்ன" என்ருரெனபதூஉமாம ஆவடுதுறையில இறைவன் அருளிய பொற்கிழியினைப பிளளையாா தம தநதை யார்க்குக் கொடுததபோது, "ஆதிமாமறைவிதியினுலாறு சூழ வேணி, நாதனுரை முன்னுகவே புரியுநல வேளவி, தீது நீங்கநீா செய்யவுந் திருக்கழுமலததுவேத வேதியரனைவரும செய்யவும மிகுமால்," (திருஞான. 429) என்று உரைபபதும* இககருத வலியுறுததுவது காணலாம்.

சங்கரர் - சிவபெருமான். சங்கரன் - எவ்வுயிர்க்கும் சுகத தைச்செய்பவன் சிவபரம்பொருட்குச் செய்யபபடும திருப்பணி

* "அநதணா வேள்வியும அருமறைத் துழவியும்
செந்தமிழ்க் கீதமும சீரினுல் வளாதரப்
பந்தணை மெல்விர லாளொடும் பயில்விடம
மந்தம்வந் துலவுசீா மாமழ பாடியே." (திருமழபா. கொல்லி. 3)

என்ற திருவாக்கு ஆளுடைய பிள்ளையாரின் குறிககோள்கள் இவை யென்பதுணர நிற்றல் காண்க.

களுள தொன்றுதொட்டுவந்த அருச்சனை முதலிய வழிபாடுகள் சிறந்தவையாதலின், "முன்வந்த அருச்சனை வழிபாடு," என்றார் பிள்ளையார் இககருத்தினைப பல பதிகங்களில், "இருபொழுதும பூவினைக் கொய்து மலரடி போற்றுதும்," "பத்தி மலா தூவ முததியாகுமே," "சுருமபாா மலா இணைடைகட்டி வழிபாடு செய்யுமிடம," என்பன முதலிய பல திருவாககுக்களால் எடுத்தோதுதலைக காணலாம்.

திருமுழுக்குக்கு வேண்டும் நெய்யும் பாலும் தயிரும் முதலிய வைந்தும் தருவதுடன் அருசசனைககுரிய திருநீறும் தருவதால 'அருசசனை வழிபாடுமன்ன ஆனினங்கள் வாழ்க' என்று பிளளையாா அருளிசசெயதாரென்றார், "ஆனஞ்சாடும் முடியானும ஐயாறுடையடிகளே" என்று பிறண்டும பிள்ளையாா கூறுவதுடன், அருசசனை வழிபாட்டிறகு வேண்டியவற்றுள் பலவறறை நலகும பண்புபறறி, ஆவினையே பரமனாக உபசரித்து, "மணியே, ஆனே சிவனே அழுநதையவர் எம்மானேயெனமாமடம மனனினையே" (அழுநதூா 4) என்று உரைததருளுவது காண்க

இதுகாறும்' கூறியவாறறால பிள்ளையாா பாசுரத்தே "அந்தணர் வாழ்க எனறது உலகம இன்புறுதற்கும, வானவா வாழ்க எனறது சநதவேளவிகள முதலியனமனனுதற்கும, ஆனினம் வாழக என்றது அருசசனை வழிபாடு மன்னுதற்கும என்றும் தெரிததுரைததவாறும. அநதணரைப் பிரிததுத தேவரை ஆனினததோடு கூட்டி "மன்னவாம" எனப் பொதுமுடிபு தநது உரை வழஙகியது, அத்தேவரனைவரும ஆனினத்தின் அங்கததே யடஙகியிருததலபறறியென வுணாக "துஙகவமரா் திருமுனிவா கணங்கள சூழ்நது பிரியாத, அங்கமனைத்தும் தாமுடைய வலலவோ நல்லா னினஙகள்" (சண்டே 19) என ஆசிரியர் தாமே உரைததிருப்பது காண்க.

இனி நிறுத்த முறையாலே, ஆளுடைய பிள்ளையாா, "வீழ்க தண்புனல வேநதனும் ஓங்குக," என்று மொழிநதருளிய பாசுரப பகுதிக்கு ஆசிரியர் பேருரை வகுததருளுகின்றாா.

> "வேள்வி நற்பயன் வீழ்புன லாவது
> நாளு மாசசனை நல்லுறுப் பாதலால,
> ஆளு மனனனை வாழ்ததிய தாசசனை
> மூளு மறறிவை காக்கு முறைமையால." (2)

உரை. வீழ்புனலாவது - மழை காலநதோறும் பொய்யாது பொழிவது; வேள்வி நற்பயன் - வேள்விகளால உண்டாகும நல்ல பயனாதலாலும்; நாளும் - நாடோறும; அர்ச்சனை - சிவபெருமானுககு நடைபெறும் அருச்சனை வழிபாட்டுக்கு;

நல் உறுப்பு ஆதலால் - சிறந்த பொருளாதலாலுமாம், ஆளும மன்னனை வாழ்த்தியது - நாட்டையாள்கின்ற வேநதனை ஓங்குக என வாழ்த்தியருளியது; அர்ச்சனை மூளும் - அருசசனை வழி பாடுகள் மிகுதற்கும; இவை காககும் - அவை குன்றுதபடி காத்தற்கும் உரிய, முறைமையால் - முறைமையினையுடைய துதலால், (எ - று)

"வீழ்க தண்புனல்" என்று பிளளையாா அருளிய மெயம மொழி விசுமபினின்று வீழும மழையென்னும் பொருட்டென் பார், "வீழ்புனலாவது" என்றாா வீழ்க தண்புனல என்று வாழ்ததியருளவே மழை காலநதவறுது பெய்யும் பெருமை பெறுவதாயிற்றென்றற்குத தொகை வாய்பாட்டால் "வீழ்பன லாவது" எனறாராயிற் றென்க வீழ்புனல் வினைத்தொகை இவ்வாறு மழையுளதாவது வேள்வியால விளையும் நற்பயனென் றற்கு, "வேள்வி நற்பயன்" என்றாா் பிள்ளையாருமம, "அம்பர மாகி யழலுமிழ் புகையினு குதியான மழைபொழியும், உமபர்க ளேததும் ஓமமாமபுலியூர் உடையவா வடதளியதுவே" (ஓமமாம் 2) என்று ஓதியருளுதல காண்க வேளவியின் நற் பயனுய நலல நீர் திருநீராட்டுககும் பூசனைபபொருளகளைத் தூய்மைசெயதறகும் பயன்படும் சிறபபுடைமைபற்றி, "ஆாசசனை நல்லுறுப்" பென்றாா நீரை உறுபபென்றதனல், ஏனைப்பூவணி, ஒபபனை, புகையீடு, பராவல முதலிய வழிபாடுகள பலவும் இஃதில்வழிச சிறவாமை பெற்றாம; பெறவே, "வீழ்க தண் புனல்" என்ற மெய்ம்மொழி, வேள்வியால விளையும் நற்பயன் மழை என்பதும, இறைவனை அருசசித்து வழிபடுதற்கு இன்றி யமையாதது என்பதும உணாத்தி நிற்றல்பெற்றாம் எல்லா வுயிர்கட்கும இன்பம செய்தல்பறறி "நற்பயன்" என்றும, இன்றியமையாமையினை வற்புறுத்தற்கு "நலலுறுப்பு" என்றும ஆசிரியா சிறப்பித்தாரென வறிக

இனி, பிள்ளையார் "வேந்தனும ஓஙகுக" என்ற மெய்ம் மொழிககுப் பொருள் கூறுவாா, "ஆளும மன்னனை வாழ்த்தி யது" என்றாா் பாண்டிநாட்டிற் பாண்டி வேநதன் கேட்ப இத திருப்பாசுரம் பிளளையாரால் திருவாய்மலாந்தருளப் பெறுத லின் பாண்டிநாட்டை யாளும பாண்டிவேநதன் ஓஙகுக என்று தெரிததோதிற்றிலராதலின், ஆசிரியா, "ஆளும மன்னனை" எனத தெரித்தோதினா இருவழியும பாண்டிநாடு எடுத் தோதபபடாமையின், இடததானும காலத்தானும் பாண்டி வேந்தன் மேற்றாயினும், பொதுநிலையில எலலா நிலததும எக் காலததும் நிலவும் வேந்தர்க்கும் அமைந்து மெய்மமையொளி திகழ நிற்பது உய்த்துணாநது கொள்ளபபடும

இதுகாறுந் தான நின்றொழுகிய அல்வழியின நீங்கிச் சைவ மாகிய நல்வழியில் நிற்கின்றுகைலின, பாண்டிவேந்தன் நெடிது ஓங்கவே அருச்சனை வழிபாடுகளை நிலைபெற நடக்குமென்றும், நிலைபெறுமெனனுது "மூளும்" என்றதனால, உலகமெங்கும் அவவழிபாடு பரவி நிலைபெறுமென்றும் கூறினுரென வறிக இவற்றின் நிலைபேறு அரசனது காவல் முறைமைக்கண் தஙகு கின்றதென்பார், "இவைகாக்கும் முறைமையால்" எனறார்.

வேள்வியால தணமழையும, மழையால் அருசசனை வழி பாடும நிலவுமென்பதும, எனவே வேள்வியும அருச்சனையும் நிலைபெறுமாறு காததல அரசுமுறையென்பதும், அம்முறை யினைக் குறைவினறிச செயயும வேநதன வாழதல வேணடு மென்பதும பிள்ளையாா உரைததருளிய மெயம்மொழியின கருத்தாதல அறிகினறும மறறு, அசைநிலை. வேளவியும் மழையும காரணமும காரியமுமாய நின்று, அருசசனையாகிய பயனை முடிததமைதலின் "வேளவிநற்பயன் வீழ்புனலாவது" எனறு எடுததுரைததாரென வறிக

இனி, நிறுத்த முறையே, "ஆழ்க தீயது எல்லாம் அரன் நாமமே சூழ்க" என்ற பாசுரப் பகுதிகட்கு ஆசிரியா பேருரை ஜென்றா

"ஆழ்க தீயதென றோதிற் றயலநெறி
வீழ்க வென்றது வேறெலலா மரன்பெயா
சூழக வெனறது தொலலுயிா யாவையும
வாழியஞ் செழுத் தோதி வளாகவே." (3)

உரை :—ஆழக தீயது எனறு ஓதிற்று—ஆழ்க எனப பிள்ளையாா திருவாய் மலர்ந்தருளியது, அயல் நெறி வீழ்க என்றது—சைவததுக்கு அயலதாகிய தீநெறி வீழ்க என் பது குறிதது நினறது, வேறு எலலாம—அதனின் வேறாகிய நெறிககண் நிற்கும உயிாகளெலலாம, அரன் பெயர் சூழ்க என்றது—சிவபரமபொருளின் திருபபெயராகிய திரு வைந தெழுததை எண்ணுக என்று ஓதியருளியது; தொல்லுயிா யாவையும்—அனுதி நிததியமாகிய உயிரனைததும, அஞ்செ ழுதது ஓதி—அத்திருவைந தெழுத்தையோதி; வளாக—சிவ னருட் செலவாகளாய் வளர்நதோங்குவாாகளாக எ - று.

"ஆழ்க தீயது" என்று பிள்ளையாா அருளிச்செய்த பாசுரப பகுதிக்குப் பொருள் இஃதென்பார், ஆழ்க தீயதென றோதிற்று அயல்நெறி வீழ்க என்றது", என்றா எனவே, தீய தென்றது அயல்நெறியையென்பதும, அஃதாவது சைவத்துக்கு அயலதாய்க் கிளைத்திருந்த புறச்சமயநெறி யென்பதும

பெற்றும். ஆழ்க தீயதெல்லாம் என்பதிலுள்ள ஆழ்க என்றது, எஞ் ஞான்றும் கிளைக்காதவாறு புதைந்து கெடுக என்னும் பொருண்மைத்து என்பார், "வீழ்க என்றது" என்றார். ஆழ்ந்து நோக்கிச் செல்வதொன்றினை வீழக்கும் என்பது செந்தமிழ் வழக்காதல்பற்றி வீழ்க என்று பொருளுரைத்தாரென வறிக.

"கொழுங்கொடி வள்ளிக்கிழங்கு வீழ்க்கும்மே" (புற 109) என்று பிறரும் வழங்கியிருத்தல் காண்க. வீழ்க என்ற பொருளுரை ஆற்றலால் மேலெழாமையை வற்புறுத்தல் உணரப்படும். இவ்வேறுபாடு காட்டற்கன்றே, ஆசிரியர், "வீழ்க தண்புனல்" என்ற திருமொழிக்கு "வீழ்புனலாவது" என வேறு வாய்பாட்டால் பொருளுரைப்பாராயினதூஉமென வறிக. "எல்லாம் அரன் நாமமே சூழ்க" என்றது, சைவசமயத்தின் வளர்ச்சி குறித்து நிற்றலின், தீயதென்பது அதற்கு அயலதாகிய சமயத்தைக் குறித்து நிற்பது இனிது பெறப்படுதலின், அதனையெடுத்தோதாது, "அயல்நெறி" என்று உரைத்தொழிந்தார். இனி, அஃது அரன் நாமத்தைச் சூழாது சைவத்துக்கு மாறாயவற்றைச் சூழ்ந்து, அதற்கிடனாகிய வைதிகநெறியை யிகழும் தீமையுடைமையின், "தீயது" என்றார், "வைதிகத்தின் வழியொழுகாதவர், கைதவம் முடைக்காரமண்தேரர்" (ஆல 2) என்றும், "மணணில மறையோர் மருவு வைதிகமும்" (வீழி 6) என்றதனை வைதிக மின்னதென்றும் பிள்ளையார் ஓதுதல் காண்க. அரன் நாமத்தைச் சூழாது பிறவற்றை யவர்கள் சூழ்ந்தனரென்றற்கு, "குண்டமணராகியொரு கோலமிகு பீலியொடு குண்டிகைபிடித்த, தெண்டிசையுமில்லதொரு தெய்வமுள தென்பர்" (வீழி. 10) என்று ஓதுதலாலறியலாம். சைவம் வேதநெறிப்பட்டதெனபது, ஆசிரியர், "விண்ணின் பயனும் பொழி மழையும் வேதப்பயனும் சைவமும்போல" (சண்டே. 9) என்றும், "வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறை விளங்க" (ஞானசம் 1) என்றும் உரைப்பது காண்க. இனி, பிள்ளையாரால் காணப்பட்ட சமணர் பலரையும் "பொல்லா மன சமணர்" (கொடுங, 10) என்றும், "நீதியறியாதார் அமண் கையர்" (புள. ஆல 10) என்றும், "கோது சாற்றித் திரிவார மண்குண்டர்" (சோற்று 10) என்றும், "வெஞ்சொல் தஞ் சொல்லாக்கிநின்ற வேடமிலாச் சமணும்" (நெடுங்களம். 10) என்றும், "பறிகொள் தலையினார் அறிவதறிகிலார்" (வீழி. மிழலை 10) என்றும் ஓதுதலின், அவர் மேற்கொண்டொழுகிய நெறியினைப் பிள்ளையார், "தீயது" என்றாரென்றலுமொன்று.

இனி, எல்லாம் எனப் பிள்ளையார் அருளிய திருமொழிக்குப் பொருள் கூறுவார் ஆசிரியர், "வேறெல்லாம்" என்று

உரைக்கின்றார் எல்லாம் என்றது, சமண்சமயமொழிந்த ஏனையெல்லாச் சமயங்களையும் எஞ்சாமல் தழுவி நிற்பது பெறப் படும். அவற்றைப் பிற எல்லாம் என்னாது வேறெல்லாம் என்று சிறப்பித்ததனால், சமண்சமயத்தின் வேறாய், சைவத்திற் பிறவாய் நிற்கும் பல்வகைச் சமயங்களும் குறித்தவாறு உணரப் படும். சைவத்தைப்போல் வேதநெறியைத் தழுவி நெறியினும் முடிபினும் வேறுபடும் பிறசமயங்கள், வேதநெறியினை அறவே மேற்கொள்ளாத சமண்சமயத்திற்கு வேறாதலின், இவ்வாறு தெரித்தோதல் வேண்டிற்று. எவ்வாற்றானும் இயைபில்லதனையே வேறு என்ற சொல்லாற் சுட்டவேண்டுமென்பது ஆசிரியர்க்குக் கருத்தாதல், அப்பூதியடிகள் தாம் நிறுவிய தண்ணீர்ப் பந்தர் முதலியவற்றிற்கு இட்ட பெயரைக் கண்டு நாவரசர், "நும் பேர் எழுதாதே, வேறொருபேர் முன்னெழுத வேண்டிய காரணம் என்கொல" என்றாக்கு, வேறு என்ற சொல்லாற்றலால் மிக வெகுண்ட அப்பூதியார், "மன்னவன் சூழ்ச்சி திருத்தொண்டின் உறைப்பாலே, வென்றவர் தம் திருப்பேரோ வேறொருபேர்," என்று உரைப்பதனால் இனிது விளங்கும். தீயது எனப் பிள்ளை யார் பொதுவாயக் கூறினாரேனும், வேதவழக்கொடுபடாத வேறு சமயம் பலவும் அதனால் அடக்கிக் கொள்ளப்படும். வேதத்தை ஒரோருகால் மேற்கொள்வதும் ஒரோருகால் கொள்ளாதொழிவதும் உடைய தார்க்கிகரும் பிள்ளையாரால் ஒரோவழி மறுக்கவும் படுகின்றனர்; தருக்கமரும் சமணரொடு தர்க்க சாத்திரத்தவர்சொல், இடுக்கண் வருமொழி கேளா தீசனையே ஏத்துமின்கள்" (கோளிலி 10) என்று ஓதுவது காண்க

"அரன் நாமமே சூழ்க" என்ற மெய்ம்மொழியில் நாமம் என்றது "நமச்சிவாய" என்பதனை இத் திருவைந்தெழுத் தினையே பரமனுக்குத் திருநாமம் என்பது பிள்ளையார் தாமே, "நாதன் நாமம் நமச்சிவாயவே" (பொது நமச. 1.) என்றும், திருநாவுக்கரசர், "எந்தையார் திருநாமம் நமச்சிவாய" என் றும் ஓதியிருத்தலால் இனிதுணரப்படும். சூழ்தல், நினைத்தல். உயிர்கள் யாவும் உணருந்தன்மை யுடையவையாதலின், அவை தம் முணர்வின்கண் உணர்ந்து ஓதியுய்தற்குத் துணை யாவது அத்திருநாமமே யென்பார், "அரன் நாமமே சூழ்க" என்றார் பிறண்டும், "காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி, ஓதுவார்தமை நன்னெறிக் குய்ப்பது" என்று பிள்ளையார் ஓது வது காண்க. இப்பொருண்மொழி, உயிர்கள் உய்தி பெறுதற் பொருட்டு வழங்கியதொரு பேரருள் நெறியாதலை வற்புறுத்து வார், ஆசிரியர், இதற்கு உரை கூறலுற்றுத் "தொல்லுயிர்

பெற்றும். ஆழ்க தீயதென்பதிலுள்ள ஆழ்க என்றது, எஞ் ஞான்றும் கிளைக்காதவாறு புதைந்து கெடுக என்னும் பொருண் மைத்து என்பார், "வீழக என்றது" என்றார் ஆழ்ந்து நோக்கிச் செல்வதொன்றினை வீழ்க்கும என்பது செந்தமிழ் வழக்காதல்பற்றி வீழ்க என்று பொருளுரைத்தாரென வுய்க.

"கொழுங்கொடி வள்ளிக்கிழங்கு வீழ்க்குமமே" (புற 109) என்று பிறரும வழங்கியிருத்தல் காண்க. வீழக என்ற பொரு ளுரை ஆற்றலால மேலெழாமையை வற்புறுத்தல் உணரப்படும். இவ்வேறுபாடு காட்டற்கன்றே, ஆசிரியா, "வீழ்க தண்புனல்" என்ற திருமொழிக்கு "வீழபுனலாவது" என வேறு வாய் பாட்டால் பொருளுரைபபாராயினதூஉமென வறிக "எல்லாம் அரன நாமமே சூழ்க" என்றது, சைவசமயத்தின வளர்ச்சி குறித்து நிற்றலின், தீயதென்பது அதற்கு அயலதாகிய சமயத் தைக் குறித்து நிற்பது இனிது பெறப்படுதலின், அதனையெடுத் தோதாது, "அயல்நெறி" என்று உரைதொழிந்தார் இனி, அஃது அரன் நாமத்தைச் சூழாது சைவத்துக்கு மாறாயவற்றைச் சூழ்ந்து, அதற்கிடனாகிய வைதிகநெறியை யிகழும தீமையுடை மையின, "தீயது" என்றார், "வைதிகத்தின வழியொழுகாத வர், கைதவம முடைக்காரமணதேரா" (ஆல 2) என்றும், "மண்ணில மறையோா மருவு வைதிகமும" (வீழி 6) என்றத னுள் வைதிக மின்னதென்றும பிள்ளையார் ஓதுதல காண்க. அரன் நாமத்தைச் சூழாது பிறவற்றை யவாகள் சூழ்ந்தன ரென்றற்கு, "குண்டமணராகியொரு கோலமிகு பீலியொடு குண்டிகைபிடித்த, தெண்டிசையுமில்லதொரு தெய்வ முள தென்பர்" (வீழி. 10) என்று ஓதுதலாலறியலாம சைவம் வேதநெறிப்பட்டதென்பது, ஆசிரியா, "விண்ணின பயனும் பொழி மழையும் வேதப்பயனும் சைவமும்போல" (சண்டே. 9) என்றும், "வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறை விளங்க" (ஞானசம் 1) என்றும உரைப்பது காண்க. இனி, பிள்ளையாரால் காணப்பட்ட சமணா பலரையும "பொல்லா மண சமணர்" (கொடுங், 10) என்றும, "நீதியறியாதார் அமண் கையர்" (புள். ஆல 10) என்றும், "கோது சாற்றித் திரிவார மண்குண்டா" (சோற்று 10) என்றும், "வெஞ்சொல் தஞ் சொல்லாக்கிநின்ற வேடமிலாச் சமணும" (நெடுங்களம். 10) என்றும, "பறிகொள் தலையினர் அறிவதறிகிலார்" (வீழி. மிழலை 10) என்றும் ஓதுதலின், அவர் மேற்கொண்டொழுகிய நெறியினைப் பிள்ளையார், "தீயது" என்றாரென்றலுமொன்று.

இனி, எல்லாம் எனப் பிள்ளையாா அருளிய திருமொழிக் குப பொருள் கூறுவார் ஆசிரியர், "வேறெல்லாம" என்று

உரைக்கின்றார் எல்லாம் என்றது, சமண்சமயமொழிந்த ஏனையெல்லாச் சமயங்களையும் எஞ்சாமல் தழுவி நிற்பது பெறப் படும். அவற்றைப் பிற எல்லாம் என்னாது வேறெல்லாம் என்று சிறப்பித்ததனால், சமண்சமயத்தின் வேறாய், சைவத்திற் பிறவாய் நிற்கும் பலவகைச் சமயங்களும் குறித்தவாறு உணரப் படும். சைவத்தைப்போல வேதநெறியைத் தழுவி நெறியினும் முடிபினும் வேறுபடும் பிறசமயங்கள், வேதநெறியினை அறவே மேற்கொள்ளாத சமண்சமயத்திற்கு வேறாதலின், இவ்வாறு தெரித்தோதல் வேண்டிற்று. எவ்வாற்றானும் இயைபில்லதனையே வேறு என்ற சொல்லாற் சுட்டவேண்டுமென்பது ஆசிரியர்கருத் தாதல், அப்பூதியடிகள் தாம் நிறுவிய தண்ணீர்ப் பந்தர் முதலியவற்றிற்கு இட்ட பெயரைக் கண்டு நாவரசர், "நும் பேர் எழுதாதே, வேறொருபேர் முன்னெழுத வேண்டிய காரணம் என்கொல்" என்றார்க்கு, வேறு என்ற சொல்லாற்றலால் மிக வெகுண்ட அப்பூதியார், "மன்னவன் சூழ்ச்சி திருத்தொண்டின் உறைப்பாலே, வென்றவர் தம் திருப்பேரோ வேறொருபேர்," என்று உரைப்பதனால் இனிது விளங்கும். தீயது எனப் பிள்ளை யார் பொதுவாயக் கூறினாரேனும், வேதவழக்கொடுபடாத வேறு சமயம் பலவும் அதனால் அடக்கிக் கொள்ளப்படும். வேதத்தை ஒரோருகால் மேற்கொள்வதும் ஒரோருகால் கொள்ளாதொழிவதும் உடைய தார்க்கிகரும் பிள்ளையாரால் ஒரோவழி மறுக்கவும் படுகின்றனர்; தருக்கமரும் சமணரொடு தர்க்க சாத்திரத்தவர்சொல், இடுக்கண் வருமொழி கேளா தீசனையே ஏத்துமின்கள்" (கோளிலி 10) என்று ஓதுவது காண்க

"அரன் நாமமே சூழ்க" என்ற மெய்ம்மொழியில் நாமம் என்றது "நமசிவாய" என்பதனை இத் திருவைந்தெழுத் தினையே பரமனுக்குத் திருநாமம் என்பது பிள்ளையார் தாமே, "நாதன் நாமம் நமசிவாயவே" (பொது நமச 1) என்றும், திருநாவுக்கரசர், "எந்தையார் திருநாமம் நமச்சிவாய" என் றும் ஓதியிருத்தலால் இனிதுணரப்படும். சூழ்தல், நினைத்தல் உயிர்கள் யாவும் உணருந்தன்மை யுடையவையாதலின், அவை தம் முணர்வின்கண் உணர்ந்து ஓதியுய்தற்குத் துணை யாவது அத்திருநாமமே யென்பார், "அரன் நாமமே சூழ்க" என்றார் பிறண்டும், "காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி, ஓதுவார்தமை நன்னெறிக் குய்ப்பது" என்று பிள்ளையார் ஓது வது காண்க. இப்பொருண்மொழி, உயிர்கள் உய்தி பெறுதற் பொருட்டு வழங்கியதொரு பேரருள் நெறியாதலை வற்புறுத்து வார், ஆசிரியர், இதற்கு உரை கூறலுற்றுத் "தொல்லுயிர்

யாவையும் வாழி அஞ்செழுத்தோதி வளர்கவே" என்றார் தாம் அறிவுறுக்கும் மெய்ந்நெறிச் செம்பொருளாகிய இதனை யறிந்து கடைப்பிடித்தற்குரிய உயிர்கள் அநாதி நித்தியமாதல் பற்றித் "தொல்லுயிர்" என்றும், அவ்வுயிர்வகை பலவும் அடங்க, "யாவையும்" என்றும், இத்திருநாமம் நெஞ்சில் நில்லாதவழி, வாயாற் பிற பொருளில் மொழிகளைப்பேசிப் பிறப்பிறப்புக்களை எய்துவித்துக் கொள்பவாகலின், நெஞ்சின் செயலும் அடங்கப்பட, "ஓதி" யென்றும் கூறினாரென வுணர்க. வாயால் ஓதுந்திறம் நெஞ்சம் சூழ்தலாகும் என்பதுபற்றி இவ்வாறோதினா ரென்றலுமொன்று "துஞ்சலும் துஞ்சலிலாத போழ்தினும், நெஞ்சம் நைந்து நினைமின்" என்றோதிய பிள்ளையார், காதலாகி என்ற திருப்பாட்டில் "ஓதுவார் தமை நன்னெறிக் குய்ப்பது" என்று ஓதுதலாலும், சிவஞானபோதத்து ஒன்பதாம் சூத்திரத்தில் "விதியெண்ணும் அஞ்செழுத்தே" என்று ஓதிய மெய்கண்டதேவர், தாம் உரைத்தருளிய பொழிப்பின்கண் "விதிப்படி உச்சரிக்க" என்றே யுரைத்தலாலும், ஓதுதல் என்ற தொழில் நெஞ்சின் நினைத்தற்றொழிலும் அகப்படுத்து நிற்றல் துணியப்படும் இக்கருத்தே, நண்டுப பிள்ளையார் "சூழ்க" என்றதற்கு ஆசிரியர், "ஓதிவளர்க" என்றுரைத்த உரையின்கண்ணும் விளங்கிநிற்றல் தெளியப்படும் வாழி, அசைநிலை ஆயினும் அஃது ஈண்டு, ஆசிரியர்க்கு அத்திருவைந்தெழுத்தின்பால் உள்ள ஆராவன்பினை வெளிப்படுத்தி, அதனால் உயிர்கள் பெறற்கு அடவதோர் ஆக்கத்தினை உணர்த்தி நிற்கிறது. திருவைந்தெழுத்தை ஓதினோர் தாம் அரனுக்கு அடிமையென்றுணர்ந்து அத்திருவைந்தெழுத்தா லமைந்த அவன் திருமேனியை இதயத்தே எழுந்தருளுவித்து அருச்சித்தும் குண்டலியில் ஓமித்தும் புருவநடுவே கண்டு தியானித்தும் சிவபோகப் பேரின்பத்தே திளைத்தாடிச் சிறப்பரென்பது சான்றோர் முடிபொருளாதலின் "ஓதுக" என்றே யொழியாது "ஓதிவளர்க" என்று ஆசிரியர் உரைத்தருளுவாராயினரென வுணர்க

இனி, அயல் நெறியின் நீங்கிச் சிவத்தைச் சாரும் உயிர் சார்தற் கேதுவாகிய சிவஞானம் விளங்கிய வழியும், பண்டைப் பயிற்சியால் அந்நெறியினை வேம்புதின்ற புழுப்போல நோக்கிற் றையே நோக்கித் துயருறுமாதலின், அது நீங்குதற்கு ஓதியுய்க என்பார், "ஓதிவளர்க" என்றாரென்றுமாம

"சொன்ன வையகமுந் துயர் தீர்கவே
என்னு நீர்மை யிகபரத் தில்துயர்
மன்னி வாழுல கத்தவர் மாற்றிட
முன்னர் ஞானசம் பந்தர் மொழிந்தனர்"

இனி, நிறுத்தமுறையானே பிள்ளையார் மொழிந்தருளிய “வையகமுந் துயர் தீர்கவே” என்ற பாசுரப் பகுதிக்கு ஆசிரியர் சேக்கிழார் சுவாமிகள் பேருரை வகுக்கின்றார்.

உரை:—சொன்ன—மேலே திருவாய் மலர்ந்தருளிய “வாழ்க அந்தணர்” என்றற் றொடக்கத்துத் திருப்பாசுரத்து; வையகமும் துயர் தீர்கவே எனவும் சீர்மை—வையகமும் துயர் தீர்கவே என்ற மெய்ம்மொழியின் கருத்து, இகபரத்தில்—இம்மை மறுமைகளில், துயர்மன்னிவாழ் உலகத்தவர்—துன்பம் மிகுந்து வாழும் இவ்வுலகத்து மக்கள், மாற்றிட—அத்துன்பங்களைப் போக்கி இன்பமெய்துவித்துக் கொள்ளற் பொருட்டு, முன்னர்—முதற் பாசுரத்திலேயே; ஞானசம்பந்தர் மொழிந்தனர்—எல்லாம் அரன் நாமமே சூழ்க அதனால் வையகமெல்லாம் துயர்நீங்கி வாழ்க என்று ஞானசம்பந்தப் பிள்ளையார் மொழிந்தருளினர் (எ - று).

உரைபெருகி நீட்டித்தலின், கடைப்பிடியும் இயைபும் தோன்ற, “சொன்னவையகமும் துயர் தீர்கவே,” என்றார். “அரன்நாமமே சூழ்க,” என்ற திருவுள்ளத்தால், வையகமும் வாழத்தப்பெறும் அருமைப்பாடு நினைந்து “சொன்ன,” எனச் சிறப்பித்தாரென்றலுமொன்று. அயல்நெறி நின்றார் வீழ்க என்னாது, அந்நெறியே வீழ்க என்ற அருட்குறிப்பு, அரன் நாமமே சூழ்ந்து வாழும் மக்களேயன்றி ஏனையோர் வாழும் நிலவுலகுக்கும் சென்று, ஆங்கு வாழ்வார் தாமும் துன்பம்நீங்கி இன்பமெய்தி வாழ்க என்று கருதுதல் தெரிந்து, நமக்கு அறிவுறுத்துவார் ஆசிரியர், துயர்மன்னிவாழ் உலகத்தவர் அத்துயர் மாற்றிவாழ்தல் வேண்டி, “வையகமும் துயர் தீர்கவே,” என்று அருளினார் என்று தெரிக்கின்றார்.

இனி, “வையகமும்,” என்ற சொல், ஆகுபெயரால் ஆண்டு வாழும் மக்களையே குறித்து நிற்கிறதெனபார், “உலகத்தவர்,” என்றும், இன்புறுக என்னாது “துயர்தீர்கவே,” என்றதனால், உலகத்தவர் இருமையினும் துன்பமே நுகர்கின்றனரென்றும், உரைத்தருளுகின்றார். இம்மை மறுமையென்ற இருவகை வாழ்விலும் உலகத்தவர் துன்பம்மிக்கு வாழ்வதால், அவர் துன்பம் நீங்கியுய்தல் வேண்டுமென்ற திருவுள்ளத்தால் “துயர்தீர்க,” எனப் பிள்ளையார் அருளிச்செய்தாராயிற்று. துயர் தீர்தலாவது, அத்துன்பம் எய்தியவழி, அதற்குப் பரிதலும் பிறவும் செய்யாது அது தம்மைப்பற்றி நிற்கும் வினைமாசு கழுவவந்த மாண்பொருள் எனக்கொண்டு, துன்பம் பயக்கும் பிறவினைகளைச் செய்யாது தம்மைக் காத்துக்கொண்டொழுகலாம். அதனால், துயரொழிந்து உயிர்கட்குத் துன்பமின்றாம் என்பார், “மாற்றிட”

என்றார். மாற்றுதலாவது, "இன்னாமையின்பமெனக் கொளின் ஆகுந்தன், ஒன்னார் விழையுஞ் சிறப்பு" (குறள் 630) என்றாற் போல, தான் புறப்பட வந்த வினையை வினைமாசு கழுவவந்ததாக மாறி நினைத்தல்

இம்மையினும் மறுமையினும் ஒருவன் நுகரும் இன்பங்கள் நிலைபேறின்றிக் கழிந்து மேலும் பிறப் பிறப்புக்கட்கு ஏதுவாகிய வினைகளை விளைவித்துத் துன்புறுத்தலின், "இகபரத்தில் துயர் மன்னிவாழ உலகத்தவர்" என்றார் மறுமைக்கண் நுகரும் இன்பத் துன்பங்கட்கு நிலைக்களன் மண்ணுலகமேயாதலைப்பற்றி, "துயர் மன்னிவாழ உலகத்தவர்" என்றார். மன்னுதல், மிகுதல்

இவ்வாறு துயரிலே கிடந்து வருந்தும் உயிர்கள் அதனின் நீங்கியுய்தல் வேண்டுமென்ற அருளுள்ளத்தால் இவ்வுலகத்தவர் நினைக்கப்பட்டமையின், துயர்க்கேதுவாகிய வினைகளின் நீங்கி, இறைவன் திருவடியை வழிபட்டு வினையின் நீங்கி இன்புறுவர் என்பது கருதி, முதற்பாசுரத்தேயே பிள்ளையார் இதனை மொழிந்தருளினாரென்பார், "முன்னர் ஞானசம்பந்தர் மொழிந்தனர்," என்றார். ஞானசம்பந்தமுடையராதலால், ஞானத்தால் சிவபரம்பொருளின் திருவருணெறி நின்றாரேயன்றி, நிலலாரும் பின்னர்த் தெளிந்து நிற்பர் எனனும் திருக்குறிப்போடு "முன்னர் மொழிந்தனர்" என்பதொருநயம் தோன்றநிற்றல் காண்க வினைநீக்கத்துக்கு இறைவன் திருவடி வழிபாடே ஏற்ற சாதனமாவதென்பார் பிள்ளையார்,

"அவ்வினைக் கிவ்வினை யாமென்று சொல்லும் அஃதறிவீர்
உய்வினை நாடா திருப்பது முந்தமக் கூனமன்றே
கைவினைசெய் தெம்பி ரான்கழல் போற்றுதும் நாமடியோம்
செய்வினை வந்தெமைத் தீண்டப் பெறாதிரு நீலகண்டம்."

என்றும்,

"பண்டுசெய்த வல்வினை பற்றறக் கெடும்வகை
உண்டுமக் குரைப்பனான் ஒல்லைநீ ரெழுமினோ." (கோடிகா.)

என்றும்,

"துக்கமிக்க வாழ்க்கையின் சோர்வினைத் துறந்துநீர்,
பக்கதோர் நெறியினைச் சார்தல்செய்யப் போதுமின்,
அக்கணிந் தரைமிசை ஆறணிந்த சென்னிமேல்,
கொக்கிற கணிந்தவன் கோடிகாவு சேர்மினே."

என்றும், பலபடக்கூறித் தெருட்டுவது காண்க. (3)

# பழந்தமிழ்நாட்டில் காதல்

[சித்தாந்தச் செல்வமணி சி. பிருந்தாதேவி, திருக்கோகர்ணம்]

வையத்துள் மக்கள் வாழ்வாங்கு வாழுமவகையைச் சங்க இலககியங்கள் பலவும் வரையறுத்துக கூறியுள்ளன இந்நூல்களில கூறப்படும் பொருள்கள அகம் எனறும் புறம் என்றும் இருவகைப்பட்டவை வீரத்தை ஊட்டுவது புறநூல, அன்பின் திறத்தை அளந்து கூறுவது அகநூல் அன்பே சிவம! சிவம வேறல்ல, அனபு வேறல்ல நோககுவாா தஙகருததில நுணணுணர்வு ஏற்படுததககூடிய ஒன்றே அனைத்தும.

இறையிடத்தன்பு, தாயிடததன்பு, மகவிடததன்பு, மனைவியிடத தன்பு முதலிய இவைகள் வகையில் வேறு வேறாக இருப்பினும இவற்றின் அடிப்படை அன்பு ஒன்றே.

> "அன்பும சிவமும இரணடெனபா அறிவிலாா
> அன்பே சிவமாவ தாரு மறிகிலாா"

எனறும்,

> "காதலாகிக் கசிந்து கண்ணீா மல்கி"

என்றும் தமிழத்திருமுறைகள் கூறுவது உனனற்பாலது!

அன்பென்னும் வித்திலிருந்து உண்டாகிய மரத்தில இடங கொண்டவைகள்தாம் அனைத்தும அவற்றை வேறாகப் பிரிபபினும அவை ஒன்றையொன்று ஒட்டி நிறபவைகளே, விட்டு விலகுவனவல்ல அருளால இவற்றுள எவற்றை நோக்கினும அவனருள் கிடடும.

காலைக் கதிரிலே, மாலை மதியத்திலே, ஓடுகின்ற தண்புனலிலே, கூடுகின்ற அன்பரிலே, மலைத்தாககிலே, மலர்சொரியுங் கானிலே எஙகு நோக்கினும அழகு! இதுவே இறையருள! இவையனைததையும இலக்கியம் எடுத்துக்காட்டி இன்பந் தருகிறது! "இலககியத்தின் அழகியலபுகள் அனைத்தும் இறைவன் திருவுள்ளத்தின் தூய பிழிவே" என ஆங்கில நூலொன்று கூறுவது உண்மையென அறிஞா உணர்வா. ஆணவ அழுக்கிலே மக்கள் மனம் ஊன்றாமல், "அழகென்னும் அருள்" அவாகள் கருத்தைக் கவர்நது இருட்டறையில் உறங்கும இதயத்தைத் தட்டி எழுப்பித தன்பால் ஈர்த்து ஒளியை நல்குகின்றது.

அன்புநலம், இன்பநலம், அழகுநலம், அருள்நலம் இந்நான்கும் நிறைந்த இலக்கியங்களின் பெருங்கடலில் "காதல்" என்னும் கலங்கரை விளக்கத்தை எடுத்துரைப்போம்.

சங்க இலக்கியங்களிலே, ஒத்த அன்பினையுடைய தலைவனும், தலைவியும் தம்முட் கூடுகின்றகாலத்து ஏற்படும் இன்பத்தை, மற்றக்காலங்களில் அது எத்தகைத்து என இயம்ப இயலாததால், எப்பொழுதும் உள்ளத்துள்ளே உணர்ந்து அவரவரே இன்புறுதலால், புறத்தில் புலனாகாது உள்ளத்தே நிகழ்வதால் அது அகமெனக் கூறப்பட்டது. உள்ளத்தால் உணர்ந்து மகிழத்தக்க இன்பத்தை வள்ளுவர்,

> "உள்ளக் களித்தலுங் காண மகிழ்தலுங்
> கள்ளுக்கில் காமத்திற் குண்டு"

எனக்கூறி யிருக்கின்றார். களவியலில் முதலாவதாக வுள்ளது காட்சி. தலைவன் தலைவியைக் கண்டபொழுதே, நெஞ்சம் நெகிழ்ந்து மயங்குவதாகத் திருக்கோவை யாசிரியர் மணிவாசகப் பெருமான் நவிலுகின்றார்

> 'திருவளர் தாமரை சீர்வளர் காவிக ளீசர்தில்லைக்
> குருவளர் பூங்குமிழ் கோங்குபைங் காந்தள்கொண் டோங்குதெய்வ
> மருவளர் மாலையொர் வல்லியி னொல்கி யனநடைவாய்ந்
> துருவளர் காமன்றன் வென்றிக் கொடிபோன் றொளிர்கின்றதே'

பெண்ணரசியின் உறுப்பழகுகளைப் பலவகை வானரும் வாடாமலர்களுடன் ஒப்பிட்டு, அவளின் நடையை அன்னத்தின் நடையென எடைபோட்டு அஃதோடமைதியுறாமல், தெய்வ மாலையே "அவள்" எனக்கூறி மகிழ்ந்து, மகிழ்வின் மேனிலையில் வளர்ந்துகொண்டே வரும் வடிவுடைய காமனது வெற்றிக் கொடியென அறுதியிட்டு உறுதி கூறித் தன் காதலின் ஆவலை மெய்ப்பிக்கிறான் தலைவன். பரவையாரைக் கண்ட சுந்தரமூர்த்தி சுவாமிகட்கு இக் காதல் மிகுதி அவர் உள்ளத்தை, உருக்கியதாகச் சேக்கிழார் பெருமான் கூறுகின்றார்

> "மானிளம் பிணையோ? தெய்வ வளரிள முகையோ? வாசத்
> தேனிளம் பதமோ? வேலைத் திரையிளம் பவளவல்லிக்
> கானிளம் கொடியோ? திங்கட் கதிரிளங் கொழுந்தோ? காமன்
> தானிளம் பருவம் கற்கும் தனியிளந் தனுவோ என்ன?"

இவ்வகையாகத் தலைவியைக் கண்டபொழுதிலே தலைவனது உள்ளம் அவள்பால் பதிந்து, பல்வகை நலன்களையும் அவளிடமிருந்து அடையக்கருதி, அவளை யாரெனத் தெளியவியலா நிலையிலே மயங்கி,

"அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ, கனங்குழை
மாதர்கொல் மாலுமென் னெஞ்சு"

என வள்ளுவப்பெருந்தகையாரும் வரைந்திருப்பது முன்
சொன்னவற்றை உறுதிப்படுத்துவதாகும். காட்சியிலே மகிழ்ச்சி
யுற்று நிகழும் இயற்கை இன்பமாவது தெய்வத்தாற் பெறுங்
காலத்து முயற்சியின்றி முடியும் என்பது அகத்திணையியலின்
சிறப்பு விதி.

இங்ஙனம் தெய்வத்துணையால் தலைவனும் தலைவியும் முத
லில் தலைக்கூடினர்; அன்பால் கலந்தனர். பிரிந்தனர்; கலந்து
பிரிந்த இவர்களின் உள்ள நிலைகளைத் தொல்காப்பியனார்
உணர்ச்சிபெருகும் உருவப்படமாகக் காட்டுகிறார். கலப்பதற்கு
முனனிருந்த வேட்கையே பின்னுமிருக்கிறது! அதனால் இடை
யறாது ஒருவரையொருவர் நினைவில் நிறுத்துகின்றனர். மற்
றொரு நினைப்பின்றி ஒரே நினைவுடைமையால் உடம்பு மெலி
கின்றது. அதே நினைப்பு உள்ளத்தை விரியவைக்கின்றது.
தங்கள் காதற் களவொழுக்கத்திற்கு வேறுவித இடையூறுகள்
எவையேனும் ஏற்படின், அவைகளும் நன்மைக்காகத்தான்
தோன்றினபோலும் என்று தமக்குத்தாமே சொல்லி ஆறுகின்
றனர். நாணத்தைப் பொறுக்குமளவு பொறுத்து இயலாத
பொழுது கடந்து விடுகின்ற நிலையும் கிட்டிவிடுகின்றது. ஊரார்
இவர்களைப் பார்க்குங்காலங்களிலெல்லாம் தங்களது கள
வொழுக்கம் எங்கே வெளிப்பட்டு விட்டதோவென எண்ணி
அவர்கள் பார்வையில் ஐயப்பாடு கொள்ளுகின்றனர். இடை
விடாமல் "காதல்" நினைவால் விளையாட்டு முதலியவற்றையும்
மறந்துவிடுகின்றனர். தம் செய்கை இன்னதென்று அவர்
கட்கே தோன்றுவதில்லை. இந்நிலையிலே அவர்கள் தம் சொல்லை
யும் ஏற்காத—மாற்றுரை கூற இயலாத பறவைகள், விலங்கினங்
கள் இவற்றோடு தம் அவா, ஆற்றாமை இவைகளையெல்லாம்
சொல்லுகின்றனர்.

சத்திமுத்தப் புலவர் ஆற்றாமை அதிகரித்ததின் காரணமாக
நாரையைக்கொண்டு தம் மனைவியிடம் செய்திகூற வேண்டிய
செய்கையும், முத்தொள்ளாயிரத்தலைவி யானையின்மேல் உலா
வரும் தலைவனாகிய கிள்ளியைக்காண ஆவல்கொண்டு யானையைப்
பார்த்துச் "சாலேகஞ் சாரநட"—"என சன்னலின் பக்க
மாக நட, நான் என் தலைவனாகிய கிள்ளியைக் கண்குளிரக்
காண்பதற்கு" எனக் கூறும் மொழியும், கலித்தொகைச்
செல்வி, "பிரிந்த தலைவனுக்குத் தன் கண்ணீராக் கடலிலுள்ள
நீரை மொண்டு சென்று, அவன் செல்லுமிடந்தோறும் வறட்சி

யின்றி நீர் பொழிய மேகத்தை வேண்டுவதும இன்னன் பிற பலவும் இவண் நாம எண்ணி இன்புறத் தக்கனவாகும்

காதலர்கள் தங்கள் எண்ணங்கள் நிறைவேறுமையானும், ஆற்றுமை மிகுதியடைவதானும இருப்பதைவிட இறத்தலே நன்றென்றும் கூறுகின்றனராம் !

"வேட்கை யொருதலை யுள்ளுதன் மெலிதல்
ஆக்கஞ் செப்பல் நாணுவரை யிறத்தல்
நோக்குவ வெல்லாம் அவையே போறல்
மறத்தல் மயக்கஞ் சாக்கா டென்றச்
சிறப்புடை மரபினவை களவென மொழிப"

இத்தொல்காப்பிய நூற்பாவில பிரிந்திருக்குங்கால காதலர்க ளிடைப் பலவித ஐயப்பாடுகள், கவலையுறும் சிந்தையில் எழுவது இயல்பு என்பதை உணர்த்துகிறது.

காமத்தையும், நாணத்தையும் சோத்துத் தாங்க வியலா நிலையிலே, தலைவி வருந்துவதாகக் குறளாசிரியர் கூறுகிறார்.

"காமம் விடுஒன்றோ நாண்விடு நன்னெஞ்சே
யானோ பொறேன்இவ் விரண்டு."

இரண்டில் எதை விடுவது? ஒன்றையும விடமுடியா நிலையிலே தவிக்கும் தலைவியின்நிலை இரக்கத்திற் குரியதன்றோ?

வீட்டினுள்ளே அடைத்துவைத்துக் காக்கும் தாய்களில் ஒப்பற்ற தன் தாய தனக்குக் காவலிருக்க, பாண்டியனமேல் காதல் கொண்ட தலைவியொருத்தி பக்கத்துவீட்டுப் பெண்க ளெல்லாம், தங்கள காதலா பெயர், அவரின் திறம இவைகளைப் பாடிப் பொற்சுண்ணம் இடிப்பது கண்டு, தானும் 'தன் காதல னாகிய பாண்டியனின் கொடியைப்பற்றிப் பாடி, முத்தாரத்தைப் பற்றியும்பாடி, பூண் கட்டிய உலக்கையினாலே தனது சிறு வீட்டிலே பொற்சுண்ணம் இடிக்கும செயலைச் செய்வேனோ?' என ஆற்றாது வருந்தி இவ்வாற்றுமை நீள—தன எண்ணக் கிடக்கை நிறைவேற்றுவண்ணம் ஒரு அம்மனை தானும காவலிருப்பதாகச் சித்தரிக்கும முத்தொள்ளாயிரப் பாடல் பழந்தமிழ் நாட்டின் காதல் உணர்ச்சியைத் தெளிவுறுத்துகிறது.

"கொடிபாடித் தேர்பாடிக கொய்தண்டார் மாறன்
முடிபாடி முத்தாரம் பாடித—தொடியுலக்கை
கைம்மனையுள் ஓச்சப் பெறுவேனோ? யானும ஓர்
அமமனைக் காவல் உளேன்"

தலைவன்மேல கொண்ட காதலின் வேகததால தலைவி தன் கண்களினுளளே காதலா எபபொழுதும இருபபதால் மையெழுதும நேரததில எஙகே அவா மறைநது விடுவாரோ என அஞசி மையும எழுத மாடடேனெனகிறுள!

"கண உளளாா காத லவராகக கணணும
எழுதேம கரபபாககு அறிநது"

இவளது காதல ஆணித்தரமானது, மரணத்தின் வாயிலினும மாறுககாதல இதுவனறே?

"காதலா செயத காதல் நீடினறி மறததல் இயலுமோ" எனறும், "பற்றிய மருஙகின உளளமபோல வநது நினறனரே காதலா" எனறும, "செலவேம எனனும நமமெதிா ஒழிவேம்" என்றும "ஒண்மையே இலளே—பிரிநது செலவேனெனச் சொல்லக்கூடிய உமமெதிரில பிரிநது ஆற்றியிருபபேனெனக் கூறும் மனப்பானமை யிலலாதவள என் தோழியாகிய தலைவி" யென்றும, தலைவியின உட்கிடககையைத தலைவனிடம புலப் படுததும தோழியின் வினயமான பேசசும, அகநானூறறுப் பாலைத்திணையிலே அறியக் கிடககினறது தலைமகனின் காதல தலைவியின்பால் எனறும சிறககத தோழி வாழ்ததுவதாக "ஐஙகுறுநூறு" அறிவிககிறது

"தணடுறை யூரன கேணமை
வழிவழிச சிறக்க வெனவேட் டேமே"

"நின்காதல் தலைவியினபால் பெருகுதல் வேண்டும். அவள நின்னைவிட்டுப் பிரிநதிருக்கத துணியாள; அனபு அகன்றல அவள ஆவி அகலும," எனப பலவாறுகக் கூறும் தோழியின் சொன்னயம பழந்தமிழநாடடுக காதல்வாழ்க் கைக்கு மிக உதவியாக இருந்திருக்கிறது! தலைவன் தன்னை விட்டுப பிரிவானே என எணணித தலைவி வருநதுவதைக் குறிப பாலறிந்த தலைவன, ஒரு தொடாபு மில்லாத நாம் ஊழின் வன்மையால் ஒன்றுபட்டோ மாதலின, இனி நமமிடையே பிரிவு உண்டாகாது எனககூறுகிறுன். பழநதமிழ்நாட்டின் காதற்பண்பைக் கருத்தோவியமாக்கிக் காட்டும் இப்பாடல் குறுந்தொகையிலே இடம்பெற்றுள்ளது.

"யாயும் ஞாயும் யாரா கியரோ
எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்
யானும் நீயும் எவ்வழி அறிதும
செம்புலப் பெயனீர் போல
அன்புடை நெஞ்சந் தாஙகலந் தனவே"　　(குறுந் ச0)

'என் தாயும் உன் தாயும் என் தந்தையும் உன் தந்தையும் ஒரு வருக் கொருவர் எம்முறையில் உறவு? அஃதன்றி நீயும் நானுந் தான் ஒருவரையொருவா எவ்வழி இதற்குமுன் அறிவோம்? ஆயினும் செம்மண் நிலத்திலே பெய்தமழைநீா அம்மண்ணோடு கலந்து அதன் தன்மையடைதல்போல, அன்புடை நெஞ்சம் தாமாகவே ஒன்று பட்டன? அவையென்றும் ஒன்றைவிட்டு ஒன்றுபிரியா' எனக்கூறித்தேறறும் பணடைத தமிழன் பண் பாடுடையவனே!

காதல நிறைவேறக் காதலி, தோழியைத் துணைநாடலும், நெஞ்சம உருகி உருகித தெய்வததை வேண்டுதலும், காதல கைவரக காதலன் பலவகைகளில் முயனறு இறுதியில் மடலஏறி உடல்துன்பததைப பொறுத்து, உள்ளததின் உறுதிப்பாட்டால் காதலியைப பெறுதலும பண்டைத தமிழ்நாட்டின காதல் மரபு இன்பின் ஊற்றுன காதறகிழததியோடு பேரின்பவாயிலை யெட்டிப் பிடித்திருக்கின்றனா பண்டைத்தமிழர் இவர்கள் நடைமுறையில் இன்பியலவாழ்க்கையைக் கண்ட புலவர் பெரு மக்கள் அகததுறை நூலகளை ஆக்கியுளளனா. பெரியோர் மக்களுக்கெனறு தந்த சஙகஇலககியமாய்ச சான்ற இன்பத் தமிழ் போற்றப்படுகிறது மக்கள நவிலதொறும நவில்தொறும் உணர்ந்துணாந்து நன்னயம பலகாணும் சஙக இலக்கியங்களிலே உள்ள காதற்பகுதிகள் பண்டைத்தமிழரின் இன்பியல்வாழ்க் கையை வெளிப்படுத்துவதுடன் நிகழ்கால வருங்கால மக்களின் அறிவுக்கருவூலங்களாகவும விளங்குகின்றன.

## பொருநை

தென்பாண்டிநாட்டில் பொதியின் மலையிற் றோன்றி பளிக் குருககன்ன தெண்ணீாப் பெருககையுடையது பொருநை யாறு. இதனைப் **பொருந்தம்** என்றும, **தாமிரவருணி** எனறும் பிறபெயாகளாலும வழஙகு வா. இதன் தெளிந்த தன்மைககுச சானறோா செயயுளையே உவமமாகக் கூறலாம. இதன சிறப்பை இளஙகோவடிகள் ஆககியருளிய செஞ்சொற் சிலம்பில் பாணடிவேந்தன சிறப்பைக கூறுஙகால 'பூநதண பொருநைப் பொறையன' எனறு குறிததாா இவ் யாறு வற்றுவள மலகும பூந்தண அருவியாகப் பிறநது தவழ்ந்து செந்நெலவளனையும மாவும் தெஙகும் கமுகுத் தோஙக வளாததுப் பிற கனிகளின வளனையும கவினபெற ஆககிததரும் பெற்றிமையுடையது. இது நமநாட்டில விளைவுமலகப் பசி பிணி நீஙக, நன்னலம பலக, நறுநீா பெருககிச சேயககுத தாயென நாட் டிற்கு நல்குக. **வாழ்க பொருநை!**

—செல் லூர்க்கிழார்

# திருக்கோவில் வழிபாடு

[சித்தாந்த பண்டிதர், திரு. ப. இராமநாதபிள்ளை.]

இயற்கை

கண்ணிற்குத் தோன்றும் பொருள்கள் காரியப்பொருள்கள். எடுத்துக்காட்டாக உடுக்கும் உடை, உண்ணும் ஊண், உறையும் வீடு, புழங்கும் பண்டங்கள், நடக்கும் சாலை முதலியன இவற்றிற்கு மூலப்பொருளாயுள்ளனவும் கண்ணிற்குத் தோன்றுவனவே அவை பஞ்சு, பட்டு முதலியன. நெல்லு, புல்லு முதலியன, கல், மரம், இரும்பு, மண், சுண்ணும்பு முதலியன; பெட்டி, சட்டிபானை முதலியன; கற்பாறை, நிழல் பழம் முதலிய தரும மரங்கள் முதலியன. இம் மூலப் பொருள்களும் காரியப் பொருள்களே. இவற்றிற்கு மூலமாய் இருப்பனவற்றிற்கு அணு என்று பெயர் கூறுகின்றனர். அணுக்களும் காரியப் பொருள்களே. அணுவை மண் எனப் பழந் தமிழ்நூல் கூறுகின்றது.

மூலப்பொருள்களை ஐம்பெரும்பூதம் எனக் கூறுவர். பூதம்—பருமை, பூ—பூத்தல், தோன்றல் அவை மண், தண்ணீர், தீ, காற்று, வானம் எனப. நம உடம்பும் இவ் ஐம்பூதங்களால் ஆனவையே. இவ் ஐம்பூதங்களுக்கு முதல் அணுக்கள். ஆயின் அவையும் காரியமாக இருப்பனவே ஆகவே அவற்றிற்கு முதலை இயற்கை என்பர் அதுவே இயற்கை ஆற்றல்—இயற்கைச் சத்தி ஆற்றல்கள் கண்ணிற்குப் புலப்படுவன அல்ல அதனால் அவற்றை இல்லை என மறுப்பதற்கும் இல்லை. இவ் ஆற்றல்கள் அறிவில்லாதன. தாமே ஒன்ருேடு ஒன்று கூடுவன அல்ல அறிவுடைய ஒரு தெய்வப் பேராற்றல் கூட்டுவித்தல்வேண்டும். எதுபோல் என்ருல் மண், கல், சுண்ணம்பு, மரம், இரும்பு, ஓடு முதலிய அறிவில்லாத பொருள்கள் தாமே ஒன்றுகூடி வீடாகின்றனவா? இல்லை ஏன்? அறிவில்லாமையே காரணம். பின் எப்படி வீடாகின்றன? அறிவுடைய கொல்லர், தச்சர், கொத்தர் முதலிய பெருமக்களால் வீடாகின்றன. இப்படியேதான் மற்றப் பொருள்களும். இதுபோல் காண்க.

எப்பொழுதும் அறிவில்பொருள் அறிவுள்பொருளால் பயன்படுத்தப்படுகின்றது. இவ் உண்மை மறுக்க ஒண்ணுதது. நேரில் காணப்படுவது. இதனல் நாம் அறியவேண்டுவன இயற்கை, இயற்கையை ஆக்கப்பாடு செய்து இயக்குவோன், இயற்கையின் பயன் எய்துவோர் என்பனவே. இவற்றுள் இயற்கையை மாயை என்போம். இயற்கையின் ஆக்கம—

காரியத்தை உலகு, உடல், உண்பொருள்கள் என்போம் ஆக்கப்பாடு செய்து இயக்குவோனை இயவுள்-இறைவன் என்போம் இயற்கையின் பயன் எய்துவோரை உயிர்கள்—ஆவிகள் என்போம்

> எண்ணும் இயற்கையே ஆக்கம் இயவுள்உயிர்
> நண்ணும் பொருள்நான்மை நாடு

இறைவன்

இவ் இறைவனை எம் மொழியாளரும், எந்நாட்டவரும் தொன்றுதொட்டு இன்றுகாறும் தத்தம் மொழியில் பற்பல திருப்பெயர் அமைத்து வழங்கியும் வழிபட்டும் வருகின்றனர். ஆங்காங்கு ஒருசிலர் உண்மை அறியாது மறுப்பினும் வல்வழக்கிட்டு ஒறுப்பினும் வழிபடுவார் தொகை நாளும் பெருகிக் கொண்டே வருகின்றன. நற்பாங்கு இன்மையால் வழிபடுவாருள்ளும் மொழி நாடு கொள்கை முதலிய பல வேற்றுமை காரணமாக ஒற்றுமை இன்மையும் பகைமையும் இருந்துகொண்டே வருகின்றன. ஆனால் கொள்கை அல்லது சமயத் தலைவர்கள் அவ்வாறு பகைமை கொள்ளும்படி யாண்டும் கூறிற்றிலர். அதற்கு மாறாக ஒற்றுமைக்கே வழிகோலி உள்ளனர்

பொறை

பரந்துபட்ட அறிவிலாதவர்கள் பகைமையால் பிரிந்து சென்று, வேறொரு புதுக்கொள்கை—சமயம் வகுத்துச் சொன்னாலும் 'எம்பிரார்க்கு ஏற்றதாகும்' என்பதே செந்நெறியின் கொள்கை செந்நெறி எனினும் சிவநெறி எனினும் ஒன்றே. இதுவே சைவம் அத் திருப்பாட்டு வருமாறு .

> "விரிவிலா அறிவி னார்கள் வேறொரு சமயஞ் செய்து
> எரிவினால் சொன்னா ரேனும் எம்பிரார்க்கு ஏற்ற தாகும்
> பரிவினால் பெரியோர் ஏத்தும் பெருவேளூர் பற்றி னானை
> மருவிநான் வாழ்த்தி உய்யும் வகையது நினைக்கின் றேனே"
>
> —௪. ௬0 - க.

கடவுள் உண்டு :

கடவுள் உண்டு என்பது உலகம் முற்றிலும் ஒப்புக்கொள்ளப்பட்டதொன்று. உடலகத்து உயிர் ஒன்று உண்டு என ஐயமின்றி எல்லாரும் ஒப்புக்கொள்கின்றனர் அதுபோலவே அவ் உயிரகத்தும், உடலகத்தும், உலகுள் அகத்தும் ஒருபெரும் கடவுள் கலந்துநின்று நடத்துகின்றனன். உயிர் கண்ணிற்குப் புலம்படுகின்றதா? இல்லையே! புலப்படாமையால் இல்லை என்று சொல்லுகின்றோமா? அதுவும் இல்லையே! கடவுளைமட்டும்

கண்ணிற்குப் புலனாகவில்லையென்று ஒப்புக்கொள்ளாம விருப்பது எப்படிப் பொருந்தும? கடவுளை நம்புகின்றவா பழி பாவங்களாகிய அழிவுச்செயலுக்குப் பெரிதும அஞ்சுவர். புகழ் புண்ணியங்களாகிய ஆக்கச்செயலுக்கு மிகவும ஊக்கம கொள்வர் கடவுளை ஒப்புக்கொள்ளாதவர் தப்புவழியிற் செல்வா என ஒருவர் ஐயமகொள்வது எப்படித் தப்பாகும? தாம் மட்டுமா? தம்மைச் சார்ந்தாரையும் தப்புவழியில் செலுத்தி விடுவர். இத்தகையாரே உலகிற்குப் பெருங்கேடு சூழும நல மிலார் எனப் பண்டும் பாடப்பெற்றுள்ளனர்.

அற்றூர்

உயிர்க்கு இருவகை உறவுகள் உள்ளன. ஒன்று உயிர் உறவு; ஒன்று உடலுறவு உயிர் உறவு கடவுள். உடல் உறவு இனம, சுற்றம, நண்பு முதலியன. இவ உறவுகளுள் உலகியலில் மேல் எழுந்த வாரியாக ஒருவனை நமபுவதற்கு, அவனை அலுவலில் அமாத்திக்கொளவதற்கு உடலுறவாகிய சுற்றத்தார் உளரா? என உசாவுகின்றனர் ஏன்? சுற்றத் தொடர்புடையார் நற்றம புரிவர், குற்றம புரியார்; பழி நாணுவர்; வழி யொழுகுவர், வாய்மை குன்றா; தூய்மையில் தளரார் என்னும நலம்பல உடைமையால் என்க.

இவை அனைத்தும மெய்ம்மை ஆயினும, உயிர் உ கடவுளின் உறவற்றா சுற்றத்தொடாபு உற்றாரேனும பழி பாவங்களுக்கு அஞ்சார், வழியொழுகார் என்பதுதான மெய்மமை ஆகிறது வரலாறும் இதனையே மெய்ப்பிக்கின்றது. பிறாக்கும், பிற உயிர்களுக்கும் இன்னல் இழையாது, இனியனவே புரிவதற்குக் கடவுள் உறவாகிய உயிர்உறவு ஒன்றே உறு துணை செய்யும. அதன் வழியாகத் தீமைசெய்ய அஞ்சுவதும், நன்மைசெய்ய நாடி முந்துவதும ஏற்படும்.

ஆட்சியின் சட்டத்துக்கு அஞ்சி ஒருசிலர் பிறர்க்குத் துன்பம புரியாமல வாழினும், பிறவுயிர்களுக்கு ஊன் உண்டல் முதலியவற்றால துன்பம் புரிகின்றனர் பிறாக்கும் தாங்களாகவே வகுத்துக்கொண்ட 'சாதி, குலம் பிறப்பு' மொழி, நாடு, நெறி முதலிய வரையறைகளால் சொல்லொணாத் துன்பம் இழைக்கின்றனா இவை எல்லாம் அகலவேண்டுமாயின், எல்லா உயிர்களிடத்தும் ஒத்த அன்பு நிகழ்தல்வேண்டும் அவ் அன்பு நிகழ்தற்கு எல்லா உயிர்கட்கும அம்மை அப்பராக விளங்கும் ஒரு முழுமுதல்வன்உண்மையைக் கைக்கொள்ளுதல் வேண்டும். அத் தொடர்புடைமையினாலேயே எவ் உயிர்களிடத்தும் அன்

காரியத்தை உலகு, உடல், உண்பொருள்கள் என்போம். ஆக்கப்பாடு செய்து இயக்குவோனை இயவுள்-இறைவன் என்போம். இயற்கையின் பயன் எய்துவோரை உயிர்கள்—ஆவிகள் என்போம்.

> எண்ணும் இயற்கையே ஆக்கம் இயவுள்உயிர்
> நண்ணும் பொருள்நான்மை நாடு

இறைவன்

இவ் இறைவனை எம் மொழியாளரும், எந்நாட்டவரும் தொன்றுதொட்டு இன்றுகாறும் தத்தம் மொழியில் பற்பல திருப்பெயர் அமைத்து வழங்கியும் வழிபட்டும் வருகின்றனர். ஆங்காங்கு ஒருசிலர் உண்மை அறியாது மறுப்பினும் வல்வழக்கிட்டு ஒறுப்பினும் வழிபடுவார் தொகை நாளும் பெருகிக் கொண்டே வருகின்றன. நற்பாங்கு இன்மையால் வழிபடுவாருள்ளும் மொழி நாடு கொள்கை முதலிய பல வேற்றுமை காரணமாக ஒற்றுமை இன்மையும் பகைமையும் இருந்துகொண்டே வருகின்றன. ஆனால் கொள்கை அல்லது சமயத் தலைவர்கள் அவ்வாறு பகைமை கொள்ளும்படி யாண்டும் கூறிற்றிலர். அதற்கு மாறாக ஒற்றுமைக்கே வழிகோலி உள்ளனர்.

பொறை

பரந்துபட்ட அறிவில்லாதவர்கள் பகைமையால் பிரிந்து சென்று, வேறொரு புதுக்கொள்கை—சமயம் வகுத்துச் சொன்னாலும் 'எம்பிராற்கு ஏற்றதாகும்' என்பதே செந்நெறியின் கொள்கை. செந்நெறி எனினும் சிவநெறி எனினும் ஒன்றே. இதுவே சைவம். அத் திருப்பாட்டு வருமாறு:

> "விரிவிலா அறிவி னார்கள் வேறொரு சமயஞ் செய்து
> எரிவினாற் சொன்னா ரேனும் எம்பிரார்கு ஏற்ற தாகும்
> பரிவினால் பெரியோர் ஏத்தும் பெருவேளூர் பற்றி னானை
> மருவிநான் வாழ்த்தி உய்யும் வகையது நினைக்கின் றேனே"
>
> —௪. ௬0 - ௩.

கடவுள் உண்டு:

கடவுள் உண்டு என்பது உலகம் முற்றிலும் ஒப்புக்கொள்ளப்பட்டதொன்று. உடலகத்து உயிர் ஒன்று உண்டு என ஐயமின்றி எல்லாரும் ஒப்புக்கொள்கின்றனர். அதுபோலவே அவ் உயிரகத்தும், உடலகத்தும், உலகுள் அகத்தும் ஒருபெரும் கடவுள் கலந்துநின்று நடத்துகின்றனன். உயிர் கண்ணிற்குப் புலப்படுகின்றதா? இல்லையே! புலப்படாமையால் இல்லை என்று சொல்லுகின்றோமா? அதுவும் இல்லையே! கடவுளைமட்டும்

கண்ணிற்குப புலனாகவில்லையென்று ஒப்புக்கொள்ளாம லிருப் பது எபபடிப பொருநதும? கடவுளை நம்புகின்றவர் பழி பாவங்களாகிய அழிவுச்செயலுக்குப் பெரிதும அஞ்சுவர் புகழ் புண்ணியஙகளாகிய ஆககச்செயலுக்கு மிகவும் ஊக்கம் கொள்வர் கடவுளை ஒப்புககொளளாதவர் தபபுவழியிற் செல் வர் என ஒருவர் ஐயமகொள்வது எப்படித் தப்பாகும்? தாம் மட்டுமா? தம்மைச சாாநதாரையும தப்புவழியில செலுத்தி விடுவர். இத்தகையாரே உலகிற்குப் பெருநகேடு சூழும நல மிலார் எனப பண்டும் பாடபபெறறுளளனா.

அற்றூர்

உயிாக்கு இருவகை உறவுகள உள்ளன. ஒனறு உயிா உறவு, ஒன்று உடலுறவு உயிா உறவு கடவுள் உடல் உறவு இனம், சுற்றம், நண்பு முதலியன இவ் உறவுகளுள் உலகிய லில் மேல் எழுநத வாரியாக ஒருவனை நம்புவதறகு, அவனை அலுவலில அமாததிக்கொளவதற்கு உடலுறவாகிய சுற்றததார் உளரா? என உசாவுகின்றனா ஏன? சுற்றத் தொடர்புடை யாா நற்றம் புரிவா, குறறம புரியார், பழி நாணுவர்; வழி யொழுகுவர், வாய்மை குன்றார்; தூய்மையில் தளரார் என்னும் நலமபல உடைமையால எனக.

இவை அனைத்தும மெய்ம்மை ஆயினும், உயிா உறவாகிய கடவுளின் உறவறறா சுற்றத்தொடர்பு உற்றாரேனும் பழி பாவங்களுக்கு அஞ்சார், வழியொழுகார் எனபதுதான மெய்மமை ஆகிறது வரலாறும் இதனையே மெய்பபிக்கினறது. பிறாக்கும், பிற உயிாகளுககும் இன்னல இழையாது, இனிய னவே புரிவதறகுக் கடவுள் உறவாகிய உயிர்உறவு ஒன்றே உறு துணை செய்யும அதன் வழியாகக் தீமைசெய்ய அஞ்சுவதும், நன்மைசெய்ய நாடி முந்துவதும ஏற்படும்.

ஆட்சியின் சட்டத்துககு அஞ்சி ஒருசிலர் பிறர்க்குத துன் பம புரியாமல் வாழினும், பிறவுயிர்களுக்கு ஊன் உண்டல முதலியவற்றால துன்பம் புரிகின்றனா பிறாக்கும தாங்க ளாகவே வகுத்துககொண்ட 'சாதி, குலம் பிறப்பு' மொழி, நாடு, நெறி முதலிய வரையறைகளால் சொல்லொணுத் துன்பம் இழைககின்றனா. இவை எல்லாம் அகலவேண்டுமாயின், எலலா உயிர்களிடத்தும் ஒத்த அன்பு நிகழ்தல்வேண்டும் அவ் அன்பு நிகழ்தற்கு எல்லா உயிர்கட்கும் அம்மை அப்பராக விளஙகும் ஒரு முழுமுதலவன்உண்மையைக் கைக்கொள்ளுதல் வேண்டும. அத் தொடர்புடைமையினாலேயே எவ் உயிர்களிடத்தும் அன்

புடையர் ஆவோம். இவ் உண்மையினை மெய்கண்ட நூற்கள் செம்மையுற விளக்குகின்றன. அவற்றுள் ஒன்று:

"ஈசனுக்கன் பில்லார் அடியவர்க்கன் பில்லார்
எவ்வுயிர்க்கும் அன்பில்லார் தமக்கும் அன்பில்லார்"

என்பதே.

திருவள்ளுவப் பெருந்தகையாரும் கடவுள் உறவு அற்றாரை நம்புதல் வேண்டாவென்றே நவின்றருளுகின்றனர். அத் திருப் பாட்டு வருமாறு:

"அற்றாரைத் தேறுதல் ஓம்புக மற்றவர்
பற்றிலர் நாணார் பழி." —திருக்குறள், ௫0௬.

முப்பண்பு:

கடவுளைப் பண்பியாகத் திருப்பெயர், திருஉரு அமைத்துத் தொன்றுதொட்டு வழிபட்டுவந்த நம்முன்னோர் பண்பாகவும் அரு வாகவும் வழிபடும் வாய்மையினையும் வகுத்தமைத்தனர். அதுவே தமிழகத் தனிப்பண்பு உலகப் பொதுப்பண்பு உண்மைச் செம்பொருள் துணிபு. அப்பண்பு தொகையாகுங்கால் சிறந்த மூன்றன்கண் அடங்கும். அவை 'அன்பு, அறிவு, ஆற்றல்கள்' என்ப.

இம்மூன்றும் அறிவு ஒன்றனின் விரிவே ஆகும். இம் மூன் றும் கடவுளுக்குத் தாமே விளங்குவன. உயிர்களுக்குக் கடவுள் விளக்க விளங்குவன. விளக்க விளங்குந் தன்மையைப் புலப் படுத்துவதே காரணம் அல்லது முதல் என்னும் சொல். இஃது ஆறாயிரம் ஆண்டுகளுக்கு முன்உள்ள ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியத்தின்கண் அறிவுறுத்தப்பட்டுள்ளன. அது வரு மாறு:

" கொடிநிலை கந்தழி வள்ளி என்ற
வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்
கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே."
—தொல். பொருள்—௩௩.

கொடிநிலை - அன்பு. கந்தழி - அறிவு. வள்ளி - ஆற்றல. வடுநீங்கு சிறப்பு - தாமே விளங்குந் தனிச் சிறப்பு. முதலன - காரணமாயுள்ளன. கண்ணிய - கருதப்பட்டு.

இதன் பொழிப்புரை: அன்பு, அறிவு, ஆற்றல் என்ற குற்றம் நீங்கிய தனிச்சிறப்பு வாய்ந்த உயிர்களுக்கு விளக்கக் காரணமாயுள்ள பண்புகள் மூன்றும் பண்பியாக வழிபடப் பெறும் கடவுள்வாழ்த்துடன் ஒப்பக் கருதப்பட்டுவரும் என்றவாறு.

இதனைக் கருத்துப்பற்றியே "ஈறிலாப் பதங்கள் யாவையுங் கடந்த இன்பமே என்னுடை அன்பே" என்று ஆளுடைய அடிகளும் அருளியுள்ளனர். இவ்விரண்டும் பண்பியாக வழிபடுங்கால் இன்புடையான் அன்புடையான் என்று வழங்கப்பெறும்.

உயிர்களுக்கும் அன்பு, அறிவு, ஆற்றல் என்னும் மூன்று பண்புகள் உள்ளன. அவை ஆண்டவனின் அன்பறிவாற்றல்கள் மூன்றும் கலந்து இயக்கினாலன்றி இயங்கா. அதனால், ஆண்டவனின் அன்பறிவு ஆற்றல்கள் ஆருயிரின் அன்பறிவு ஆற்றல்களுக்குக் காரணம் ஆகின்றன.

நினைப்பு

உலகத்தில் பயன் உறுத்துவாரும், பயன் எய்துவாரும் நினைப்படையாளங்கள் கொண்டே செய்கின்றனர். வீடு என்பது விருந்து முதலிய நல்லறம் பேணுதற்கு நினைப்படையாளமாகும். கல்லூரி என்பது மக்கள் எல்லாரும் அன்பும் ஒற்றுமையும் இன்பும் எழிலும் பெருக நாடும் மொழியும் நன்னெறியும் வளரக் கலவி அறிவு ஒழுக்கங் கைக்கொண்டு வாழக் கற்பித்தல் கற்றல் முதலியன நிகழும் நினைப்படையாளமாகும். இது போன்றதே படிப்பகம், நூலகம், முதலியன. ஆட்சித்துறை, வணிகத்துறை, பொதுநலத்துறை, முறைமன்றம், மிறைமன்றம், மருத்துவநிலையம் முதலியன இவை அவ்வவற்றின் பணியாளர்கள் முதலியோரை எளிதில் தெரிந்து நலமெய்துதற்கு நினைப்படையாளங்களாய் நின்று அன்றோ துணை செய்கின்றன.

தெரு, ஊர், ஊர்திநிலையம், பெயர், பெயர்ப்பலகை, கைகாட்டி முதலிய நினைப்படையாளங்கள் இல்லையாயின் எவ்வாறு கண்டுணர்வோம். எங்ஙனம் முட்டின்றி முயற்சியும் தொழிலும் நடைபெறும். நினைத்துப் பாருங்கள், அடையாளங்கள் நமக்குச் செய்யும் அரும்பெரும் துணைகள் எத்தனை என்பதை.

நீனிறப் பெருங்கடலில் மேனிறை பொருள்களுடன் வரும் கலங்(கப்பல்)களைக் கூவி அழைத்துத் தாவிச்செலுத்தாவில் வழிகாட்டும் நினைப்படையாளம் அன்றோ கலங்கரை விளக்கம். இம்முறையாக உய்த்து நோக்கின் உலகியல் முற்றும் நினைப்படையாள நீள் துணைகொண்டே நிகழ்கின்றது.

இதுபோலவே உயிர்க்கு உறுதிபயக்கும் விழுமிய முழுமுதல்வனாகிய கடவுளை நினைப்பூட்டும் அடையாளங்கள் எவ்வளவு சிறந்தன. நினைத்துப் பாரமின்! அந்நிலையத்தினைக் கடவுள் நிலையம் அல்லது திருக்கோவில் என்று உலகம் எங்கும் வழங்குகின்றனர்.

திருக்கோவில்

திருக்கோவில் ஒன்றே அனைத்துயிர்க்கும் இனித்த பொது நிலையம். திருக்கோவிலில் ஆட்சித்தலைவனும் ஏழை ஆண்டியும் சமமே அதற்குக் காரணம் அனைத்துயிரும் ஆண்டவன் அருள் மக்கள் என்பது திருக்கோவிலின் நினைவுடையாளத்தால் எல்லார் உள்ளத்து உணர்ச்சியிலும் தோன்றுகின்றது ஆர்வம் பெருகுகின்றது. எல்லாரும் "அம்மையே அப்பா ஒப்பிலா மணியே அன்பினில் விளைந்த ஆரமுதே" என்று அகங்குழைந்து அன்புருகிப் போற்றிப் புகழ்ந்து பராவுகின்றனர் இத்திருக்கோவில் அல்லவா உலக மக்களை ஒற்றுமையிலும், அன்பிலும், இன்பிலும், ஒழுக்கத்திலும் நிலவி உயரச் செய்கின்றது. உயிர்க்கு உறுதி நல்குகின்றது. பிறவாப் பெருவாழ்வு பெறச் செய்கின்றது

கலைகள்

உலகிலுள்ள அழியாக் கலைகள் எல்லாம் நின்று நிலவுவதற்கு பொன்றுப் புகலிடம் திருக்கோவிலே பண்டைப் பெருமக்களின் செய்வினைத்திறனும் கைவினைத்திறனும் இன்னும் நம் கண்முன் காட்டிக் கழிமகிழ் செய்விப்பதற்கு இடனாயிருப்பதும் திருக்கோவிலே இயல் இசை நாடகம் என்னும் முத்திறனும் இனிய முத்தமிழும் கல்வெட்டுத் திருப்பாட்டாக இசைக் கருவிகளைக் கையேந்தி அவ்வவ் இசைகளை உள்ளவாறு மீட்டும் குறிப்பொடு நெறிப்படத் தோன்றும் களைமிகப் பொலிந்த உயிர்ப்பொடு தோற்றும் உயிரோவியங்கள் கல்லிலும் செம்பிலும் பிறவற்றிலும் கணக்கிலாது காணப்படுதற்கு நிலைக்களனாய் இருப்பதும் திருக்கோவிலே

நடன ஓவியங்களோ நம் நாட்டகத்துத் திருக்கோவில்களில் அளவில்லன காணலாம் அம்பலவாணர் திருவுருவமே அறிதற்கரிய அருட்பெருங் கூத்தர் திருவுருவம் அத்திருவுருவினைக்கண்டு அமெரிக்கா முதலிய மேலைநாடுகளெல்லாம் அறிவியலாலும் அருளியலாலும் பெரிதும் வியக்கின்றன. அத்திருவுருவை உயிரினும் சிறந்ததாகப் போற்றி உவக்கின்றன.

இறைபணி

உலகத்தில் பல்வேறிடங்களில் வேந்தர், மன்னர், குறுநில மன்னர், பெருநிலக்கிழார், வணிகப் பெருஞ்செல்வர் முதலியோர் தன்இழவாது ஆக்கி அமைத்த அரண்மனை, மாளிகை, சாவடி, கல்லூரி, மருத்துவநிலையம், சாலை, குளம், கூவல், சோலை, கால்வாய், ஆறு, அரண், அகழி முதலியன அவ்வவர் பெயராலேயே நின்று நிலவுகின்றன.

ஆனால், திருக்கோவில் மட்டும் தன்னிழந்தாரால் எல்லா உயிர்க்கும் ஏமமாகிய இன்பம் நாடி எழில்பெற இயற்றி அமைக்கப் பெற்றமையால் ஊர்ப்பெயரால், இறைவன், இறைவியர் பெயரால், வழிபட்டோர் பெயரால் திருப்பெயர் பூண்டு இன்றுகாறும் நின்று நிலவுகின்றது. எடுத்துக்காட்டாகத் தில்லைச்சிற்றம்பலம், திருச்சிராலைவாய், ஆலவாயில் அவிர்சடைக் கடவுள், அங்கயற்கண்ணியார்கோவில், இராமேச்சுரம், சோழேச்சுரம் முதலாயின. இஃதொன்றே திருக்கோவில்தரும் விழுப்பேற்றிற்குச் சிறந்த சான்றாகும். இஃதொன்றே செருக்கற்றார் திருத்தொண்டாகலின் வானோர்க்குயர்ந்த உலகுவாழ இன்பினைத்தரும். ஆகவே திருக்கோவிலினும் சிறந்தபொருள் வேறொன்று யாண்டும் உளதென நினைத்தற்கும் ஒண்ணாதது. இதுவே இறைபணியாகும்.

குரு

“மூர்த்திதலம் தீர்த்தம் முறையாற் றொடங்கினர்க்கோர்
வார்த்தைசொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே.”

—தாயுமானவர்.

திருக்கோவில் வழிபாடு ஒன்றாலேயே மெய்யுணர்வு கைவந்த தவத்தோராகிய குருமாரைக் காணுதல் கூடும். அவர்தம் திருவடிவழிபாடு செய்தல் கூடும். அருமறை (உபதேசம்) அருந்தமிழ் பெற்றுய்தல் கூடும். சான்றோர் காட்சியே ஆன்ற பேரின்பந்தரும். சான்றோர் திருக்கோவிலை விழைவது போன்று வேறு எதையும் விழையார். சான்றோரே சாதுக்கள் என்ப.

இன்பம்

என்றும் எக்காலத்தும் இனிய முழக்கமும், விழவும் வழிபாடும், ஆர்வலராகிய அடியார், பெருமக்கள் முதலாயினர் திருக்கூட்டமும், ஊன்ஒலி அரவமும், உடை அணிச்சிறப்பும், அறவுரை அறிவுரை விளக்கமும், அன்பின் பெருக்கமும், அடியாள் உருக்கமும், ஆண்டவன் புகழே அனைவரும் கூறிமகிழும் மாறாவிருப்பமும், ஒப்புரவு, நகை, ஊராண்மை முதலிய உதவிகளும் கண்டும் கேட்டும் இன்புறுவார் எண்ணிறந்தோர் என்க.

வணக்கம்

ஏறத்தாழப் பதினாயிரம் ஆண்டுகளுக்கு முன்னாகும் தலைச்சங்கமெனப் பலரும் கருதிப் பாராட்டுகின்றனர். இடைச்சங்க நூல் தொல்காப்பியம் என எல்லோரும் ஒப்புக்கொள்கின்றனர். தொல்காப்பியர் காலம் கிட்டத்தட்ட ஆறாயிரம் ஆண்டுகள்.

தலைச்சங்கத் திருப்பாட்டாகக் கருதும் 'பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைக் காரிகிழார் பாடியதன்கண்

"பணியிய ரத்தைநின் குடையே முனிவர்
முக்கட் செல்வர் நகர்வலஞ் செயற்கே"
—புறநானூறு, 'வடாஅது' சு.

இதன் பொருள் : "நினது கொற்றக்குடை முனிவரால் பரவப்படும் மூன்று திருநயனத்தையுடைய செல்வரது கோயிலை வலம் வருதற்குத் தாழ்க."

இதன்கண் 'காமம் வெகுளி மயக்கம்' மூன்றனையும் முனிந்தார் முனிவர் எனப்படுவர் அவரே நீத்தாராவர் நீத்தாரே அறஞ்சொலற்குரியர் அவரே உலகுக்கு அறிவுக் கண்ணவர். அறிவுக்கண் என்பது அறிவுவிளக்கத்தால் ஆனைவரையும் வழிப்படுத்துவது கடவுளின் அன்பு இடக்கண்ணாகவும், ஆற்றல் வலக்கண்ணாகவும், அறிவு நெற்றிக் கண்ணாகவும் உருவகிக்கப் பெற்றன இவை முறையே திங்கள், ஞாயிறு, தீ எனப் தீ எனப்படும் அறிவுக்கண்ணே நுதல்விழி நாட்டம் ஆண்டவனை நினைவுறுத்தும் அடையாளம் நெற்றியின்கண் விளங்குவதால் அம் நலார் நுதல்களை 'ஒளிநுதல்' முதலிய அடைகளால் சிறப்பித்தனர். இக்கருத்துபற்றியே "நீறில்லா நெற்றிபாழ்" என்னும் திருப்பாட்டும் வழங்கி வருகின்றது

முழுமுதலவர்

முக்கட் செல்வரே முழுமுதல்வர் என்பது அருந்தமிழ் நாட்டகத்து அன்றும் இன்றும் என்றும் நிலைபெற்ற சீரிய கொள்கையாகும். மணிமேகலைக்கண்

"நுதல்விழி நாட்டத்து இறையோன் முதலாப்
பதிவாழ் சதுக்கத்துத் தெய்வமீ றாக"
—மணிமேகலை, விழாவறை—ருச, ரு

சிலப்பதிகாரத்தின்கண் :

"பிறவா யாக்கைப் பெரியோன் கோவிலும்"
—சிலப்பதிகாரம், இந்திர—கசுக

ஆளுடைய பிள்ளையார்,

"செல்வன் கழல்ஏத்தும் செல்வம் செல்வமே" —க அ௦—ரு

முதன்மை

தலைச்சங்கத்து 'முனிவர் முக்கட் செல்வற்கு' முழுமுதன்மை திகழ்ந்தமைபோல் கடைச்சங்கத்தும் அதன் பின்னும் திகழ்ந்தமை 'நுதல்விழி நாட்டத்து இறையோன்,' 'பிறவா யாக்கைப் பெரியோன்' 'செல்வன் கழலேத்தும் செல்வம் செல்வமே,' என்னும் திருமொழிகளால் நன்கு பெறப்படும்.

திரு

திருக்கோவில் உள்ள ஊரே திருவிளங்கும் திருவூராகும் திருக்கோவில் ஒன்றே உலகோர் வேந்து முதல் நிலமவாழ் மக்கள் ஈறாக எல்லாரையும் உயிர் உறவில் சமம் என்னும் உணர்ச்சியை ஊட்டுவது. உயிர் உறவு உணர்வதே திருவருள் கைவரும் வழி இதுவே, 'அன்பர் பணி செய்ய ஆளாக்கும,' இன்ப அருள். இத்தொண்டு தொடங்கும் நிலையம் திருக்கோவில் ஒத்து வாழுவார்க்கு இன்றியமையாது வேண்டப்படுவதென்று தொல்காப்பியம் கூறும் பத்தனுள் ஈற்றிற்காணப்படும் 'உணர்வொடு திரு * என்னும் இரண்டும், உயிர் உறவு உணர்வாம் உணர்விற்கும், திருக்கோவில் வழிபாடாம் திருவிற்கும் பொருந்தும், ஆளுடைய அரசரும் இதனை வற்புறுத்தியருளினர் அத்திருப்பாட்டு வருமாறு

"திருக்கோவில் இல்லாத திருஇல் ஊரும்
திருவெண்ணீ றணியாத திருஇல் ஊரும்
பருக்கோடிப் பத்திமையாற் பாடா ஊரும்
பாங்கினொடு பலதளிகள் இல்லா ஊரும்
விருப்போடு வெண்சங்கம் ஊதா ஊரும்
விதானமும வெண்கொடியும் இல்லா ஊரும்
அருப்போடு மலர்பறித்திட்டு உண்ணா ஊரும்
அவையெல்லாம் ஊர்அல்ல அடவி காடே." —௬. ௯௫-௫

சமம்

நடும்பத்தலைவற்கு வீடும், நாட்டுத்தலைவற்கு அரண்மனையும், அனைத்துலகத் தலைவற்குத் திருக்கோவிலும் காணப்படுகின்றன. இம்மூன்றனுள் திருக்கோவில் ஒன்றே ஓர் அறிவு முதல் ஆறறிவு ஈறாக உள்ள எல்லா உயிர்க்கும் வேற்றுமையில் ஒற்றுமையாம் சமநிலையைக் காட்டுவதாகும் நலஉயிரும் அல லுயிரும் ஆகிய அனைத்துயிர்களும் ஆண்டவனையே சார்ந்திருக்கின்றன. ஆண்டவனைச் சார்ந்துவாழ் உயிர்கள் அனைத்தும் நல் உயிர்களே இன்றும் நச்சுப் பாம்பும் திருக்கோவில்களில் எவ்வுயிரைத் தீங்கும் செய்வதில்லை. அம்மட்டோ ஆண்டவன் திருப்பெயர் மொழிந்து அகலவேண்டின அகன்று விடுகிறது

இதனாலேயே திருக்கோவில் தெய்வநிலையமாய்ச் சென்று வழிபடுவார்க்குத் தெய்வத்தன்மையை அருளுவதாய் இருக்கின்றது திருக்கோவிலில மரத்தை வழிபடுகின்றோம். பாம்பு முதலிய ஊர்வனவற்றை வழிபடுகினறோம் இறைவன் இறைவியர் ஊர்ந்துவரும் அன்னம், கிளி, கருடன், யானை, குதிரை, ஆடு, மாடு, அரிமா, ஆன் முதலியவற்றை வழிபடுகின்றோம ஆண்டவன் ஊர்ந்து வருகின்றன என்பதன் உள்ளுறை எல்லா

* தொல். பொருள் - ௨௭௩.

உயிர்களையும் 'ஆணையின் இருவினைக்கு ஏற்பச் சமமாக இயைந்து இயக்குகின்றான்' என்பதாகும்.

"ஆண்டான் அருளூர்தி ஆயின் அனைத்துயிரும
பூணடியகக வேஇயங்கும பொறபு."

வேணடத்தக்கது

ஒவ்வொருவாக்கும திருககோவில வழிபாடு இன்றியமை யாதது வேண்டப்படுவது. வழிபாடெனபது வழிபபடுதல எனறு கும் வழிபபடுதல என்பது அருளவழிபபடுதல எனபதாகும. திருக்கோவில்வழிபாட்டால ஒற்றுமையும், உயிாநினைவும, உயிர்க்கு உயிராம ஆண்டவன நினைவும, அருள்நினைவும பழி பாவங்கட்கு அஞ்சுதலும், அடியாா இணககமும, சானறோா துணையும், தாழ்வு என்னும் தனமையாம வாழ்வும், மெய் யுணர்வும, பிறவும் கைவரப பெறும இவ்வழிபாடே பிறவிப பெருமபயன்

செல்லும் முறை

முழுகித தூய்மை செய்து தெயவநாட்டததை நினைவுறுத தும திருவெண்ணீறு முதலான திருஅடையாளஙகளைப பூண்டு புறந்தூயராய், திருக்குறள் திருவாசகம முதலிய திருமுறை களைக கைககொணடு ஐநதெழுததை எணணுவதால அகநதூய ராய் வேறு எவ்வகை நினைவும பேச்சும் இலலாது செலலல வேண்டும்.

வழிபடுமுறை

கோபுரந தெரியுமிடததில நின்று வணஙகலவேணடும. பின்கோபுர வாயில் அல்லது முதல வாயிலில வணஙகவேணடும். வணககம வீழ்ந்து எழுநது வணஙகவேணடும். விழுமபொழுது மலம - அறியாமை விழுகினறது எழும்பொழுது மெய்யுணாவு- திருவருள் அகம நிறைநது எழுகின்றது காலிரண்டு, மாாபு, நெற்றி, கையிரண்டு, காதிரணடு ஆகிய எட்டுறுபபும் நிலததே படுமபடி வீழ்நது எழுநது வணஙகவேண்டும. பின் வலம வருதல் வேண்டும் போற்றிப புகழ்தல்வேண்டும

தனிததிருந்து திருக்குறளில் ஓா அதிகாரமும் திருவாசகத தில குறைநதது ஒருதிருப பாட்டும பொருந்தியவாறு இசை யுடன் ஓதுதலவேண்டும இவ்ஓதுதல ஒன்றே உயிர் வழிபாடா கும். கூடுமானால் திருமுறை அருச்சனை செய்தலவேண்டும. அருட்கொடை (பிரசாதம்) பெற்று மீளல்வேண்டும்.

# 'எல்லோர்க்கும் கொடுமதி'

[திரு ப இராமலிங்கன், குடியேற்றம்]

பாரினைப் படைத்தது பரம்பொருள் பல்லுயிரளித்ததும் அஃதே. அதில் வளமுற வாழப் பல்வளங்கொழித்தது, யாரும் பகிர்ந்து இன்புற்று வாழற்கே இவ்விதிக்கிணங்க மன்பதை வாழ்வமைதல் என்பது ஒருதலை இஃதே உயிர்க்கோடிகளின் இயற்கை வாழ்வு! இறைவன் வாழ்வு!! பரம்பொருள் திருவுள்ளக் கருத்துக்கிசைந்த திருவாழ்வு

பண்டை ஞான்று நாடு காடாக இருந்தது இயற்கையன்னை பொலிவுற்றுக் குலுங்கக் கொலுவிருந்தாள்! மக்கள், பசித்தபோழ்து இயற்கையன்னையை யணுகிக் கவலையை ஒழித்தனர் 'நாளை நமக்கு என்ன,' என்ற ஏக்கமனம் பெற்றிலர். தன்னலப் பேயமனம் பிடித்தாட்டவில்லை. யாண்டும் எதுவும் பெற்றனர் 'யாதும் ஊரே' அவர்கட்கு, எங்கும் எதையும் பெற்றதால்; 'யாவருங் கேளிர்,' யாரும் தன்னுயிர் போற்றுது மன்னுயிர் காத்துத் திரிந்ததால், ஆகக் 'கொடுப்பாரிலைகாண்,' கொள்வாரின்மையால்

'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்' எனும் இறை அருட் சமதம் பெற்ற உண்மைநிலை நிலவியது. அன்று பொருள் நிலையால ஒத்தவாழ்வு மன்றி புகழ் நிலையாலும் உயர்வு தாழ்வு பெருகவில்லை 'தீதும் நன்றும் பிறர்தர,' வரவில்லை எங்ஙனம் வரும் அத்தகு பண்பட்ட சமுதாய வாழ்வில்? நம்முடை முன்னோர், 'மாட்சியின் பெரியோரை வியத்தலும் அதனினும் சிறியோரை இகழ்தலும்,' இலலை என்ற காய்தல் உவத்தல் அற்ற நடுநிலைபெற்றுக் காணும் உயிர்களையெல்லாம் நடமாடுந் தெய்வங்களாகப் போற்றி உயிர்வழிபாட்டுவாழ்க்கை ஓம்பி வந்தனர் அதுதான் தமிழன் கண்டு அவனுக்கு அளித்த ஈடு எடுப்பொன்றிலலாச் சமுதாயத்தின் உயர் நாகரிகம்

'நமர்எனக் கோலகொடாது பிறர் எனக் குணங்கொல்' லாத நடுநிலை நெஞ்சம் ஆகும் தொன்மைத் தமிழன் நெஞ்சம் அதனாற்றான் அன்று, 'ஆன்றவிந் தடங்கிய கொள்கையில சான்றோர் பலரை நம் தெய்வத் தமிழகம் பெற்றிருந்தது அற்பப் புள்ளின் ஆருயிர் காக்கத் தன் தொடை ஊனையே அறுத்தறுத்துத் துலாக்கோலில் வைக்கத் தூண்டியது தமிழன் நாகரிகம் ஊர்க்காவலில் ஓர் அந்தண மாதின் கற்பினைக் கட்டிக் காக்கக் கதவினைத் தட்டிய குற்றமில் - குற்றத்திற்காகத் தன் வாளால் தன் கையை வெட்டிப் பொறகை பெற்றது தமிழன் நாகரிகம். ஆவின் கன்றைக் கொன்றதற்காகத் தவங்கிடந்து

தான்பெற்ற சேயைத் தேர்க்காலில் கிடத்தித் தேரைச் செலுத்திப் பசுவிற்கு நீதி வழங்கியது தமிழன் நாகரிகம். முடியிழந்து காடேகிவாழ்ந்த ஞான்றும் தமிழ் வாழ, தமிழ்ப்புலவன் வாழத் 'தன்னின் சிறந்தது ஈயப் பிறிதொன்றின்மையான்,' தலைஈய வாள்தந்தது தமிழன் நாகரிகம் (குமண வள்ளல்) கலைஞரது கடும்பசி கண்டாங்கு 'இரப்பாது கொடுக்கும் செல்வமும், இல்லென மறுக்கும் சிறுமையும்' இல்லாது, 'அமரகத்து இரும்பு சுவைக்கொண்டு விழுப்புண் நோய் தீர்ந்து மருந்துகொள் மரத்தின் வாள்வடுமயங்கிப் பாண்பசிப் பகைஞனாகிய தன்னூர்க் கருங்கைக் கொல்லனைத், 'திருந்திய வேல்வடித்தி' என்பது தமிழன் நாகரிகம். (வீரன் தோயன் மாறன்)

இங்ஙனம் உடல் வலிமையையும், உயிர்வாழ்வையும் ஈடு வைத்துக் கலையுரிமையைக் கட்டிக்காக்கவல்லது தமிழன் நாகரிகம் புலவர்ப் பசி தமிழவீரனை வேலினைத் தேடிப் பொருள் மிக்காரை எதிர்த்துப் பொருது கலைவளர்த்த பெரும்பேற்றினை எந்தையார் தமிழ்நாடல்லது வேறு எந்நாடு பெற்றது!

இவையெல்லாம் அற்றை ஞான்று. இற்றை ஞான்று பண்டைய ஏட்டில் காணப்படும் இன்பம் என்ற அளவோடு நிற்கிறது. ஆனால் உண்மை நிலை என்ன? இன்று கண்ணாரக் காண்பது யாது? மலைக்கும் மடுவுக்குமன்ன வேறுபாடு எவ்வுயிரும் இன்புற்றுவாழ அருளப்பெற்ற வாழ்க்கைவளங்கள் யாவும் ஒரு சிலர் கையிற்போய் முடங்கிவிட்டனவே! இயற்கை வாழ்வு முற்றுற்றதே! இறைவன் வாழ்வு ஒழிந்துபட்டதே! தன்னல நச்சு உச்சிமேலிட்டால் மன்பதையே தன்னுயிர் காத்துத் திரியும் பேய்வாழ் காடாகவன்றோ மாறிவிட்டது. பறித்தலும் சுரண்டலும் காண்பதன்றி வேறு என்ன? எங்கணும் பசிக்குரல், பட்டினிச்சாவு, கற்புடை மாதரும் கணவனை வறுமைவாயில் பலிகொடுத்துவிட்டுக் கதறியழும் கண்ணைப் புண்ணாக்குங் காட்சி. பெற்ற சேய்களைக் காக்கமுடியா வறுமையில் அங்காடியில் விலைகூறும் கொடுங்காட்சி! வேலையில்லாது மனமுறிந்து வாழவசதியற்று வகையற்று வாழ்க்கையிலோர் வெறுப்புத்தட்டித் தம் ஆருயிரை மாய்த்துக்கொள்வதோடு அதற்கு முன்னமேயே தம் ஆருயிர் வாழ்க்கைத்துணைவி, பெற்றெடுத்த உயிர்க்கனிகளாம் சேய்கள் யாவரையும் கிண்ணிப் பிச்சை எடுத்து மானம்போகவிட மனமில்லாது கொலைபுரியும் கோரக்காட்சி! படிதாண்டாப் பத்தினிகள், வேலையில்லாத் திண்டாட்டத்தினால் சொல்லாது கொள்ளாது விட்டு ஓடிப்போன கணவன்மாரைத் தேடிக் கண்ணீரும் கம்பலையுமாய்க் கப்பரையும் கையுமாய்க் கஞ்சித்தொட்டியை நாடும் வேதனைத் தீயெழுப்புங்

காட்சி! பெண்டிர் உடலை மறைத்து மானததைக் காப்பாற்றிக் கொளளக கையகலக கநதைககும் கதியறறு உயிர் நடுங்கி உளளம நடுங்கி உடல நடுஙகிப் பிணமாகும காட்சி.

உழைககவோ தயாா, வேலையிலலை; கிடைப்போாக்கு உழைத்தும போதிய ஊதியமிலலை. கஞசிக்கும் கதியில்லை; கட்டக் கநதலுமில்லை, பட்டாடை பாாததறியான; பல் சுவை உணவைக் கேட்டறியான்; உழைப்பையே வழிபாடாகக் கொண்ட பாட்டாளிமகன், 'ஏற்பது இகழ்சசி' என்ற ஒளவைப் பாட்டி வாழநத நாட்டில் இரபபதே வாழககையாகிவிட்டதே! கண்ணைபபிடுஙகி உயிரையரிக்கும் இக்காட்சி ஒரு பக்கம் மறு பககம; நகததில் மண்பட்டறியான, குனிநதறியான்; அவனுக்கு வளமாாந்த வாழவு, அடுககடுககான பட்டாடை பொதி மாடென சுமகக அவன் பெண்டிர்ககு நலல இழையாபரணஙகள். உடல கொழுகக உண்டி, உலலாசவாழவிறகாக மாடி இலலம. என்னே ஏறறத்தாழ்வு? மன்பதை பொறுககுமா இந்நிலையை? பொறுப்பின இறைவன்தான் பொறுப்பனோ? இவவிழிநிலைக் கோா முடிவு காணல கட்டாயம மனபதையில இஃதே உயிாக் கேளவி

மழையிலலை; வளமிலலை; பயிரில்லை; விளைவிலலை; எனவே, உணவிலலை என்ற காரணம் ஒவவாது ஒவவாது மழை யாருக்குந் தானில்லை எல்லோருமா இன்று வறுமைவாய்ப்பட்டு வதை படுகின்றனர்.

வாழ்ககை ஒரு உயிர்க்கலை அவ்வுயிாக்கலையாம் வாழ்க் கைக்கு உயிராயிருபபது பண்பட்ட அறிவு பசிக்கவலையில் பண்புக்கவலை பிறக்குமா? வயிறறுக்கவலை வதைக்கையில் கலைக் கவலை எழுமா? எழும என எண்ணுதலு மிழுக்கன்றோ?

பொருள்மிகப படைததோா நிதிமிகப பெற்றோா வாழ்ககை வளம் நனிமிக உடையோா, கலைவளாதது மனபதைகாக்கும் மனமுடையோர் அனைவரும் செய்யற்பாலது ஒன்றுளது. அன்று தலைகொடுத்தும் தமிழகாக்க வநத வள்ளல் குமணனிடம தாம் பெற்ற பரிசிலைப பெருஞ்சிததிரனாா் எனற பெருமிதப்புலவன் தம மனைவிக்கு, 'இது பழநதூங்கு முதிரததுக கிழவன் திருந்துவேல குமணன நலகிய வளனே' இதை,

"நின் நயநதுறைநர்ககும் நீ நயந்துறைநாககும
பன்மாண கறபின நினகிளை முதலோாககும
கடுமபின் கடுமபசிதீர யாழநினை
நெடுநகுறி யெதிாப்பை நலகியோாக்கும
இனனோாககும எனனுது எனனோடும சூழாது
வல்லாஙகு வாழ்தும் என்னுது நீயும
எல்லோர்க்கும் கொடுமதி மனைகிழவோயே."

பசித்தோர்க்கும் இன்னார்க்கு என்று வரையறை செய்யாமல் எல்லோர்க்குங் கொடு யானும கொடுபபேன் என்றபடி, அத்தகு பண்பாட்டில் வளர்ந்த அனைவரும் மனிதகுலமும் அதனோடு மனிததருமமும் பண்பும் அணு அணுவாக அழிந்து வரும இந்நேரத்தில முன்னோர்கள் வைததுப்போன பெருநிதி பெற்றோராயினுஞ்சரி, போககாலத்தில் கிடைத்த வாய்பபின் பயனைச் ,ஈட்டினோராயினுஞ்சரி, வாரி வாரி இல்லையென்னாது வழஙகி மன்பதை காபபதே மக்கட்பண்பு என்பது ஒருதலை. 'பாண்பசிப் பகைஞனை' அழிக்கக் 'கருஙகைக் கொல்லனை நெடுவேல் வடித்தி' என்று இரககும நிலைககு அன்றைய அவலநிலை தமிழ்வீரன தோயன்மாறனைத் தூண்டியாங்கு இன்றைய வேதனை நிலையும ஏறறததாழ்வும மலிந்து உழுததுவரும இன்றைய சமுதாயததை அழிதது ஒழித்து அதன்மீது ஏற்றத தாழ்வற்ற, பறிததல, சுரண்டல ஒழிந்த ஒபபிலாத ஒரு சமுதாயததைக் காணத தம என்பிலும் நரம்பிலும் இதயத்துடிப்பிலும போராட்ட உணாசசி மேலிட்ட சமுதாயப புரட்சி வீராகள் தம் புரட்சிக்குத,

> ' தனி ஒருவனுககு உணவில்லை யெனின
> சகத்தினை யழித்திடுவோம '

என்ற அமரகவி பாரதியின் புரட்சி சஙகநாதம ஒரு தீயாகவும,

> ' இரந்தும உயிாவாழ்தல் வேணடின பரந்து
> கெடுக உலகியற்றி யான்.'

என்ற பொய்யில் புலவன் வள்ளுவரின் எழுச்சிநாதம் அப் புரட்சித் தீயினுக்கு ஆககமளிக்கும உயிா அளியாகவும மாறும. அக்காலை எழும் ஊழித்தீயன்ன புரட்சி உலைவாயிலில மனித கோடிகள் பெரும உழைப்பால் கட்டிய கலைகளும, சமுதாயமும் அழிநதேவிடும் இத்தகைய மறுககவோ, மறைக்கவோ முடியாத உண்மைநிலையை அறநிலையுணர்நது, அன்பும் அருளும, பண்பும பயனுகவும பெற்றுச் செந்நாபபுலவன் வள்ளுவன செபபிய வழியில் வாழும் யாரும் அறிவது திண்ணம

ஆக 'எல்லோர்க்கும் கொடுமதி மனைகிழவோயே' என்ற பெருஞ்சித்திரனாரின் கொடைக்கீதத்தின் நாதம் தமிழனுடைய
மும, உயிரிலும, உள்ளததிலும, எண்ணத்திலும்,
துடிப்பிலும் எழும்பி எழுமபி உயிர்க்கலையாம வாழ்க்கை கலையை, ஏக்கமற்ற, குறைவற்ற, பண்புமிக்கதொன்றாக ஆக்கி மன்பதை காக்க ஒலிப்பதாக.

ஓம்

# திருக்குறளைப் பரப்பும் சீரிய வழிகள்

திருவுரு

திருக்குறள் உலகப் பொதுமறையாய்த் தமிழின் திருமறையாய்த் திகழ்கின்றது. திருவள்ளுவநாயனுர், செம்பொருள் துணிவினராய்த் தெய்வத் திருவினராய்த் திகழ்கின்றனர் அவர் தம் திருவுரு பன்னூறு ஆண்டுகளாகத் தமிழகப் பொதுநெறியாய்ச் சைவத்திருநெறியாய் விளங்கும் சித்தாந்தத் தவத்திருவுருவாய்ப் போற்றிப் பூசித்து வருகின்றனர் உலகோா

இக்காலப் பாழ்ங்கோளர் சிலர் திருவுரு வேண்டா; திரு அடையாளம் வேண்டா, போற்றிப் பராவுதல் வேண்டா எனப் பொய்நெறிபற்றிப் புகலகின்றனர் அவாகள் வள்ளுவருக்கும் வள்ளுவப்பயனுக்கும் மாண்புசெய்வார்போல், அவா ஒரு சமயத்துக்கு உரியவரல்லர். எனவே அவர்தம் திருவுரு சைவச் செவ்வுருவாய் இருத்தல்கூடாது அவர் நூலுள எச்சமயத்தையும் விளங்க எடுத்துக் கூறவில்லை. ஆகவே அந்நூலும் ஒருசமயச் சிறப்புநூல் ஆகாது என்று ஆழ்ந்து நோக்காது அறைகினறனர். அவை ஒருசிறிதும் பொருந்தா என்பதை விளக்கி வலியுறுத்த அகச்சான்றுகள் பலவுள. அவற்றை விடுத்துப் புறச்சான்றாக உலகவழக்கில் அன்பார் கிறித்துவர், இசுலாமியா, புத்தர், சமணா, வைணவர், எக்கொள்கையுமில்லார் யாவரும் புலால் சேரா உணவைச் 'சைவ' உணவென்றே பகாந்து வருகின்றனர். அம்மட்டோ அவாதம்முள்ளும் புலால்நீத்தாரைச் சைவராகி விட்டாா இவர் என ஒருப்பட்டுக் கூறிவரும் வழக்கும் காணப்படுகின்றது எனவே புலவுத்துறந்த பொய்யில் அந்தணா சைவரே. திருவள்ளுவநாயனுரும் சைவரே சைவம் என்பது கொலையும் புலையும் அகற்றிய அன்புநிலை. இதனையே திருவள்ளுவநாயனுர் வரும் திருப்பாட்டின்வழி அருளுகின்றனர்.

> "கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
> எல்லா உயிரும் தொழும்." —திருக்குறள், உசுo.

இம்முறையால் தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனுர் திருவுருவைச் சென்னை மயிலாபபூரினகணணுளள அவாதம

திருக்கோவில் திருவுருவின்படி அமைத்து வழிபடுதல் அனை வாக்கும் கடன். காந்தியடிகள் திருவுருவை அவர்கொளகை உலகப்பொது என்று கொண்டு மாற்றி அமைதது வழிபடுவது மாண்பாகுமா? அதுபோலவேதான வள்ளுவப்பெருந்தகை யார்க்கும திருவுருவு இன்றியோ மாற்றியோ வழிபடுவது மாண் பாகாது மயிலாப்பூர் வள்ளுவாகோவில் திருவுருவுருவே 'சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்' அமைத்துள்ள திருவுரு. திருவுருவ வழிபாடின்றி ஏதுஞ்செய்தல் அமையாது. ஆருயிர்க்கு அன்புசெய்யவே ஆண்டவனால் உடல்அமைத்துக் கொடுக்கபபடுகின்றதென்பது வளளுவர்வாய்மொழி. அங்ஙனம் இருப்ப அன்பு செய்தற்கு வேண்டிய வளளுவர் திருவுருஇன்றி எப்படி வழிபடமுடியும? எனவே திருவுரு அமைதது வழிபாடு செயக.

அருச்சனை

திருக்கோவில்களில் மலர்தூவிப் போற்றுதலாகிய அருச் சனை நூற்றெட்டு என்னும எண்ணும, மூநூறு என்னும் எண்ணும், ஆயிரத்தெட்டு என்னும எண்ணும கொண்ட முறை யாற் செய்கின்றனா. நாமும் அறத்துபபால பொருட்பால் என்னும் இரண்டுபால்களிலும் உளள அதிகாரங்கள் நூற்றெட்டு, எனவே ஒவ்வோர் அதிகாரத்தின் முதற்பாட்டைச் சொல்லி நூறறெட்டு அருச்சனை செய்யலாம்.

பாயிரம நான்கு, துறவு மூன்று, ஊழ் ஒன்று ஆக எட்டும் நீங்கலாக இல்லறம் முபபது அதிகாரமாகும் அஃதாவது ஐந்தாவது இல்வாழ்க்கை முதல் முப்பததுநான்காவது நிலே யாமை முடிய ஆகும். இம் முப்பது அதிகாரத்தும் உள்ள திருப்பாட்டுக்கள் மூந்நூறும் சொல்லி அருச்சிக்க.

திருக்குறள் முழுவதையும் சொல்லி ஆயிரத்தெட்டு என் னும் எண்ணுக்குமேலாக அருச்சிக்க, திருவள்ளுவநாயனர் திருவிழாவிலும், திருவுலாவிலும அவர்தம் திருமுன் ஆண்பெண் அனைவரும் அமைதியாக இருந்து 'காதலாகிக கசிந்து கண்ணீர் மல்கி' ஒருவர் ஓத அவர்பின் ஓதிவருதல் வேண்டும், எல்லார் திருக்கைகளிலும் திருக்குறள் இருத்தல் வேண்டும். அருச்சனை புரியுங்காலும் ஒருவர் ஓத, ஒருவர்பின் ஒருவராய் அனைவரும்

ஓத ஒருவர் மலர் தூவல் வேண்டும். மலருக்கு ஈடாகத தளிரும் தூவலாம்.

பரப்பும்வழி

ஆண்பெண் ஒவ்வொருவரும சிறியார் பெரியார் உள்ளிட்டுத் தனித்தனியே நாள்தோறும பத்தொன்பது அதிகாரம் ஓதி வருதல் வேண்டும். அங்ஙனம் ஓதிவரின் ஒருகிழமைக்குள் (ஏழுநாள்) திருக்குறள் முற்றுக முற்றுபபெறும. இப்படியே மீண்டும மீண்டும் ஓதிவருதலைக் கடப்பாடகக் கொளளுதல் வேண்டும் குடுமபததில் அனைவர்களும் ஒன்றுசேர்ந்து நாடோறும நாலரை அதிகாரம் நாற்பததைந்து திருபபாட்டுக்கள் வள்ளுவா திருவுரு முன்னிருநது ஓதிவருதலவேண்டும் அப்படி ஓதினல் ஒருதிஙகளில் நூல்முற்று றும. இஙஙனமே மீண்டும் மீண்டும் ஓதிவருதலவேண்டும்

சிறுவர் சிறுமியர் பயிலுதற்பொருட்டு விரும்புவார் பெயாகளை முனனரே பதிவுசெய்துகொண்டு காலமும் இடமும் வகுத்து அனைவாகளையும அங்கு வரச்செய்து ஒருகிழமைக்கு ஒருமுறை ஒனறோ இரணடோ அதிகாரஙகளை ஒபபுவிக்கச் செய்து பிழையற ஒபபுவிப்பாாக்கு அதிகாரம் ஒன்றுக்கு அரையணுவிற்குக் குறையாமல் நன்கொடை வழங்கல்வேண்டும்.

மூன்று திஙகளுககு ஒருமுறை மாணவரிடையே திருக் குறளபோட்டி அமைததுத் தக்க பரிசுகள வழங்கல, ஏழை கட்குத் திருககுறள் படிககத்தூண்டச சுவடிகளை நன்கொடை யாக வழஙகல், வீடுகளினும கழகங்களினும பல்வேறு திருக் குறளை அழகுறப பொறித்தல், எழுதுங் கடிதஙகளில் (Letter paper) தலைப்பில் ஒன்றிரண்டு திருககுறள் பொறித்துவைததல். கூடுமானவரை ஒருவரோடொருவர் உரையாடுமபொழுதெல்லாம் திருககுறள கையாளுதல், திருக்கோவிலுக்குச் செலலுங்கால் திருக்குறளும தத்தம சமயநூலகளுள சிறந்ததொன்றும உடன் கொண்டு செலலுதல், ஆங்கு அமைதியாக இருநது ஓதுதல், இவைபோன்ற பிறவும் என்க.

—இனியன்.

# திருவள்ளுவர் திருநாள்

[பண்டிதர். கா, பொ இரத்தினம். எம். ஏ, பி ஒ. எல்.
தமிழ்மறைக் கழகத் தலைவர்]

தமிழ்மறை எனவும் பொதுமறை எனவும் போற்றப்படும் திருக்குறளை இயற்றிய திருவள்ளுவர் யாவருடைய பாராட்டுக்கும் உரியவர். அவருடைய திருநாள் தமிழரின் தனிப்பெருந் திருநாள்; தமிழினத்தை ஒன்றுபடுத்தும் ஒப்பற்ற திருநாள்; அன்பும் அருளும் அறமும் ஆட்சி செய்யுந் திருநாள். ஆதலினால், சாதிமத பேதமின்றியும், அரசியற்கட்சி வேறுபாடின்றியுந் தமிழ்மக்கள் யாவரும் ஒவ்வொருவீட்டிலும் அவருடைய திருநாளைக் கொண்டாட வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறோம்.

அவருடைய திருநாளை, மாசி உத்தரம் என்று ஒருசாராரும், வைகாசி அனுடம் என்று மற்றொருசாராருங் கருதுகின்றனர். இதனாலே சில இடங்களில் மாசி மாதத்திலும் வேறு சில இடங்களில் வைகாசி மாதத்திலும் திருவள்ளுவர் திருநாளைக் கொண்டாடி வருகின்றனர். இந்த இரு நாட்களில் ஒன்றினைக் கொண்டாடுதலே நல்லது என முடிவுசெய்து, இதுபற்றிய கருத்தினை அறிவிக்குமாறு தமிழ் அறிஞர்கள் சிலருக்கும், தமிழ்ச்சங்கங்கள் சிலவற்றுக்கும் எழுதியிருந்தோம். பெரும்பாலானோர் வைகாசி அனுடத்தைத் திருவள்ளுவர் திருநாளாகக் கொண்டாடுதல் நன்று என அறிவித்துள்ளார். ஆகவே, இனி வைகாசி அனுடத்தையே திருவள்ளுவர் திருநாளாகக் கொண்டாடுமாறு தமிழ்மக்கள் யாவரையுங் கேட்டுக்கொள்கிறோம்.

**இவ்வாண்டில், திருவள்ளுவர் திருநாள் வைகாசித் திங்கள் கரு-ஆம் நாளாகிய (28—5—53) வியாழக்கிழமையாகும்.**

இந்நாளைத் தமிழ்மக்கள் வாழும் இடங்களில் எல்லாம் ஒவ்வொரு வீட்டிலும் கொண்டாடச் செய்வதற்கும், ஆண்டு தோறும் வரும் திருவள்ளுவர் திருநாளை அரசினர் விடுமுறை நாளாக்குவதற்கும் எங்கள் தமிழ்மறைக்கழகம் முயல்கிறது. இம்முயற்சி நன்கு நிறைவேறுதற்கு இன்றியமையாதவற்றைச் செய்யுமாறு தமிழர்கள் வாழும் இடங்களிலுள்ள தமிழர்களின் சங்கங்களையும், கலாசாலைகளையும், மடங்களையும், பத்திரிகைகளையும், தமிழறிஞர்களையும் கேட்டுக்கொள்கிறோம். இதுபற்றிய வேறு செய்திகளை அறிய விரும்புவோர், 'தமிழ்மறைக் கழகம், இல, 44, 33 ஆம் ஒழுங்கை, கொழும்பு 6' எனும் முகவரிக்கெழுதுக.

"அரியவற்றுள் எல்லாம் அரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல்" (தமிழ்மறை, ௪௪௩)

# செய்திகளும் குறிப்புக்களும்

*இல்லறவாழ்வின் மேன்மை*

*உ. பி. கவர்னா திரு. கே எம். முன்ஷி அவர்கள் அனைத்திந்திய மக்கள 'ஆதமசுத்தி' மாநாட்டை 28—1—53-ல லட்சுமணபுரியில் திறந்து வைததபோது கூ;*

*"திருமணம் எனபது மக்களின் உடல் இனபத்துக்காகமட்டுமன்று. அஃது உயிா வலிமை விளைவு இந்தியாவில குடும்பவாழ்ககையும தூயதன்மையும முதன்மையானசிறப்பைப் பெற்றனவாகும விரைந்து முயனருல் இவறறிற்கு மீணடும முதனமை உண்டாககலாம. தாழ் நிலையில அகப்பட்டுளள பெணகள குழந்தைகள் நெறிதவறியோா முதலியோாகளைக குடுமபவாழ்வில ஈடுபடச செயவது மிகவும சிககலானதுதான இதிற் பலவறறைக் கூாநதுநோகக வேணடியிருககின்றது. இம்மாநாடு இதறகு ஏதாவது கழுவாய் ீதடினுல நனறு*

*நெறிதவறி நடப்பதற்குப் பொருளாதார நிலைமை மட்டுந்தான் என்று கூறுதற்கில்லை. வேறுபல காரணஙகளும உணடு*

*நகாப்புறஙகளிலுளள ஆடவாகளில் பெருமபானமையோர் தமமைச சேர்ந்த பெண்பாலாகள இனறித தனியாக வாழ்கினறனா வரதட்சணை முறையினுல ஆடவாகடகு விரைவில மணமபுரிய முடிவதிலலை. இரவில நெடுநேரமவரை நிகழும் கேளிககைப் பொழுதுபோககுகளினுல ஆணகளும பெணகளும நெறிதவறுமபடி நோகினறது மேலைநாட்டவா வழககமுறைகளின் மோதுதல காரணத்தானும நமமவரின உயிரொழுகக மேன்மைகள மாறுதல பெறுகினறன. நம நாட்டுபபெணகளின் தூயமை மிக முதன்மையாகக கருதப்படுகினறது. மணமெனபது ஆண பெணபாலாரின உயிாசசோக்கை எனத தூயதாக மதிக்கபபெறுகினறது.*

*மேலைநாட்டு மககளின் பழக்கவழக்ககளால மேற்குறித்த மதிப்புககள குறைவுறலாயின. திருமணஞ் செய்தலெனபது, வெறுந்தேளவை; களிப்புககாகச செயதுகொள்ளும ஒரு சடஙகெனருகிவிட்டது இவை தவிர திரைப்படக்காட்சி வேறு தீமை விளைத்துள்ளது நாளிதழ்கள, திரைபபடக காட்சிகள, பாட்டுககள முதலியனவும கூடச சோந்துளளன ஆடவா, மகளிா தொடாபுபட்ட தூயதனமையைத் திரைப்படஙகள் மிகுதியாகக குலைததுவிட்டன. இப்புதிய கேடடைக களையததகக முறையைக ...ும."*

**குறிப்பு:** *தற்காலம் நம நாட்டில் நல்லொழுக்கம் திறம்பிக் கொணடேவருகிறது. அதற்கு நம் நாட்டு அடிபபடைக்கலவியின் அமைப்புமுறைச சீர்கேடேயாகும நலலொழுகக வாழ்ககைக்குக கடவுள உணடெனனுங கொள்கை இனறியமையாது வேணடப்பெறுவதொனருகும. அககொள்கை நாளுககுநாள் அருகிக்கொணடே வருகினறது. தறகாலக கல்விகற்ற அறிஞாகள, நேரில காணபதையே நமபுகின்றனர். கடவுள உணடெனபதற்கு இவ்வுலக நிகழ்வுகளும யாரும் தம உடலையே தம நிலையில் அமைககமுடியாமையுமே போதிய சான்று பகாகினறன. அவ்வாறிருப்ப நமபாததேனே கடவுட்கொள்கையை நமபாததால கணவன் மனைவியா காதற்கொள்கைகளும், இலலறமாணபும கைவிடப்பட்டு நாளுககுநாள் சீர்குலைநது வருகினறன. இசசீாகேட்டை நனகு*

நுனித்தறிந்தே அறிஞா, உ. பி. கவானா திரு கே. எம. முன்ஷி அவா கள் மிக விளக்கமாக அறிவுப்பொருத்தமாக எடுததுரைததிருப்பது, மிகப் பாராட்டற்குரியது; அவாகள் காலத்தால் ஆற்றியுள்ள இசசொற் பொழிவைப் போற்றி மகிழ்கின்றேம. நாட்டு நன்மக்கள இதுபோன்ற நல்லறிஞர் பொனமொழிகளைப் போற்றி ஒழுகிவருவாாகளென எணணு

## தொன்மை அழியா நன்மைத்தமிழ்

தாம்பரம் 'இந்தி வித்தியாலயததின' நானகாவது ஆணடு விழாவில தலைமைதாஙகிய சென்னைமாநில ஆட்சியாளா திரு. ஸ்ரீபிரகாசா அவா களின் சொற்பொழிவுச சுருககம ஒவ்வொரு நாடடின் தாய்மொழியும செவ்வையாக வளாநது முன்னேறவேண்டும் அதற்கு வேணடும துணையை ஆட்சியாளா உள்ளிட்ட எலலாரும் புரிதல வேணடும

நாட்டு மொழியைப பேசும மககளிடம இந்தியை வலுகட்டாயமாகத் ரிக்ககூடாது இந்தி எனது அருமைத தாயமொழியாக இருநதாலும அது வளமானமொழியன்று வருத்தமில்லாமல் எளிதாகக கறறுக கொள்ளககூடியதும அன்று. மேலும அவ் இநதி எஙகும எலலாராலும ஒன்றுபோற் பேசப்படுவதும அனறு. அது தேசீய மொழிககு அத் துணைத தகுதிவாய்ந்ததும அனறு. பெருமபான்மையோரால் பேசப்படும் ஒருகாரணம் பற்றிக்கொண்டனா. அப்பொழுது நான் எதிாததுளளேன்.

இந்தி பேசுவோா எல்லோரும் ஒருவரோடொருவா புரிந்துகொள்ளு முறையில் பேசவில்லை காந்தி அடிகள் பேசிய இநதியும சரியானதல்ல தேசிய மொழியாகின்றதென்ற காரணததால அமமொழியினைச சிதைத் துக கொலைசெய்ய யான் இணஙகேன. இநதி மொழியாளா, தமிழா போன்ற ஏனைமொழியாளர் இந்தியைப் படிக்கவேணடுமென்று நினைக கின்றாகள். ஆனல், தமிழ்போன்ற பிறமொழிகளைக் கற்கக கருதுவது மில்லை, அது தவறு; அவாகளும பிறமொழிகளைக கற்கவேணடும்

ஆஙகிலம இந்திபோன்ற மொழிகள் ஒரு நூற்றாணடுகருள் எத துணையோ மாறுதலும் திரிபும் சிதைவும அடைநதிருக்கின்றன சென்ற நூற்றாண்டிலுளள ஒருவன இப்பொழுது மீணடுவந்து பேசுவானுனல. அவனுககு ஒன்றும் அமமொழியில் இப்பொழுது பேசுவோர் பேசசுப் புரியாது. அதுபோலவே அவன் பேசுவதும யாருக்கும் புரியாது. உலகததில் எலலா மொழிகளும் அப்படிததானிருக்கின்றன.

ஆனல், தமிழ்மொழியோ இரணடாயிரம ஆணடுகள் ஆகியும அனறு போல நின்று நிலவுகினறது மிகக ஆற்றலும, இனிமையும எளிமையும், அழகும், வளப்பமும, வேகமும் பிறவும கொணடு விளஙகுகின்றன. இரண்டாயிரம் ஆணடுகளுக்கு முனனுளள ஒருவன மீணடு எழுநது வந்து பேசினல் இனறுள்ளவாகளுககு நனருகப் புரியும். இவாகள் பேசுவதும் அவனுககு நன்ருகப் புரியும்.

யானும் தமிழின் அழகு, இனிமை, எளிமை, தொனமைநலம நோககிக கற்கமுயன்றேன. சில சொற்களே கற்றேன, காரணம அரச ஙகயில எல்லாரும் ஆஙகிலததில பேசுவதே.

குறிப்பு: ஆட்சியாளா அவர்கள் நடுநின்றாய்ந்து உணமை உரைத்தது மிகமிகப் பாராட்டத்தககது. இந்நாட்டகதது அத்தகைய

செம்மையோர் பலரறிந்தாருள் ஒருவரைக் காண்பது அருமை என்பது மிகையாகாது. ஆட்சியாளர் இரண்டாயிரம் ஆண்டு என்று கூறுவது கடைச் சங்கத்திறுதிக்காலந்தொட்டே ஆகும். தலைச்சங்கத் தொடக்கந் தொட்டு எண்ணினால் பதினாயிரம் ஆண்டுகளுக்கு முன்னுள்ளவன் மீண்டெழுந்துவந்து பேசினாலும் இன்றுள்ளாருடன் எவ்வகை மாறுதலுமின்றி ஒருவரோடொருவர் உரையாடுதல் முடியும்.

இவற்றிற்குக் காரணம் எம்மொழியினும் சிறந்த இலக்கண வரம்புடைமை, தனித்தியங்கும் ஆற்றலவன்மை, பிறமொழிகளை அங்ஙனமே எடுத்துக் கலவாது தமிழியற்கைப் பண்பிற்கேற்பக் கையாளும் திறமை, பிறஎழுத்துக்கலவாமை உலகவழக்கிலும் நூல்வழக்கிலும் ஒன்றுபோல் நின்று நிலவுதல், பண்டைய இலக்கியப் பண்பாடுகள் அப்படியே இன்றைய இலக்கியங்களிலும் மேற்கொள்ளுதல், எச்சொல்லையும் எளிதாகத் தன் வண்ணமாக்கும் தனித்தமிழ் மாண்பு, தமிழ்ப்புலவர்கள் தொன்மை கெடாது பேணிவரும் நன்மை முதலியன.

ஒருசிலர் உழைப்புக்கஞ்சி இலக்கணம் வேண்டா; பிறமொழிகளை அவ்வாறே கையாளவேண்டும், அதுவே மொழிவளர்ச்சியின் குறி என்றெல்லாம் கூறினும், செம்மைத் தமிழ்நன்மக்கள் அவற்றை ஒருசிறிதும் ஏற்றுக்கொள்ளாது தொன்மைச் சான்றோர் சென்ற நன்மைவழியே நடந்து தமிழின் அழகும், இனிமையும், தனிமையும், தொன்மையும் ஓம்பிவருவது பாராட்டற்குரியது.

மேலும் தமிழ்ப்பெரும் புலவர்களும் பெருமக்களும் வேண்டத்தக்க அறிவியல்நூல்களை எல்லாம் பண்டைச்சான்றோர் கைக்கொண்டு ஒழுகிய முறையிலேயே தனித்தமிழ்வண்ணமாய் மொழிபெயர்த்து மேலும் வளம் படுத்துவார்களாக. எடுத்துக்காட்டாகச் சாம்புநதம் என்னும் பொன்னை நக்கீரர் கூறவருங்கால் "நாவலொடு பெயரிய பொலம்" என்றனர்.

# மதிப்புரை

## தில்லைச்சிற்றம்பலப் பெருங்கோயிலின் பழமையும் திருச்சித்திரகூட அமைப்பும்

[வெளியிட்டோர் தில்லைத் திருமுறைக்கழகத்தார், தேரடிக் கடைத் தெரு, சிதம்பரம். விலை அணா நான்கு.]

இந்நூல் தில்லைச்சிற்றம்பலப் பெருங்கோயிலின் உண்மையினையும் இடையே புகுந்து இன்னல்பல இழைத்துப் பலவுயிர்க்கொலைக்கும் அல்லலுக்கும் மூலகாரணமாயுள்ள திருச்சித்திரக்கூட நிலையிலாப் பொய் அமைப்பினையும் நடுநின்றாய்ந்து வரலாற்றுச் சான்று, கல்வெட்டு, மேலை நாட்டு மெய்யுணர்வுத்தவத்தோர் எழுதிய வழிநடைக்குறிப்பு, பிற்காலப் பெரும்புலவர்களாகிய வைணவ ஆசிரியன்மார் வரைந்துள்ள நடுநிலை வழாக் குறிப்புக்களையும் கொண்டு 'ஆட்சியில், ஆவணத்தில், அயலார் காட்சியில' கிடைக்கும் கட்டுரைகளையும் கொண்டு செவ்வனே விளக்குகின்றது.

இந்நூல் வடிவிற் சிறிதாய்த் தகையிற பெரிதாயச் சிறிய பெருந்தகை ஊய்ந்து திகழுகின்றது. இந்நூல் செந்தமிழும சிவநெறியும மேற கொண்டு ஒழுகும செயபொருட்டுணிவினா இருபாலாா அனைவா கையிலும கைககணியாய என்றும திகழததக்க தொன்றுகும் சமய ஒற்றுமையை நாடும தககாா ஒவ்வொருவா கையிலும் இருக்கவேண்டுவது. வீண்வழக்காட முயலும் வைணவாகளும் கூட வாஙகி உணமையுணாந்து அமைந்து நன்மையெயதுதற்குச சிறந்த வழிகாட்டியாகவுள்ளது

இதன் ஆசிரியர் தமிழ்ப்பெரும்புலவா, சிததாந்தப் பேராசிரியர் திருவாளா சபா. சிவப்பிரகாசம பிள்ளையவாகள ஆவா. இவாகள் ஆராய்சசித் திறனும், நடுநிலையும, காழ்ப்பின்மையும் மிகவும போற்றற் குரியன. நூல் திட்பநுட்பமும, எளிமையும, இனிமையும, தெளிவும, விளககமும் அமைந்துள்ளன. யாவாகளும வாஙகியும வாஙகுவிததும உணமையுணாந்து நனமை எய்துவாராகளாக.

**குறிப்பு** சமயப் பொறுமையும் சமய ஒற்றுமையும வேணடுமென்று சான்றோா பலா பாடுபடும இந்நாளில அவற்றிற்கு ஊறுவிளைகக ஒருசிலா தோன்றியிருககின்றாகள் எனபதைககாண அவாதம் அறியாமைககும், அன்பின்மைக்கும், அவலவேட்கைககும கழிபேரிரக்கங்கொண்டு வருநத வேணடியதாக இருககினறது ஒற்றுமை என்று சொல்லிப் பிறா உரிமையைப் பறிகக முயலுவது வேற்றுமைவிளைக்கும விததினும் கொடிது. இந்நூல 18-19-ஆம் பககங்களில் காணப்படும கிராசுமுனிவரா வரைந்துள்ள ஆஙகிலககுறிப்பால் மாலடியாகள ஆட்சிததுணையின் அடாததுணை கொண்டு கி பி 1597-ல் நிறைவேற்றிய முறைகேட்டால நிகழ்ந்துள்ள உயிரககொலைகள பல எனபதைக்காண எவரே வருந்தா திருப்பா.

பின் முறைமன்றம்புககுக கோவிந்தராசப்பெருமாளுககுப் பெரு விழா ஏதுமினறி நாள்வழிபாட்டோடு அமைந்துவிடுவதாக உறுதிசெயது உடன்பாட்டுத தீாப்பையும் மீறித திரும்பவும ஒற்றுமைக்கு ஊறுவி ளைக்கஉனனுவது தககதனறெனக் கழறுவதே தக்கது. எததுணையோ சைவககோவில்களில பெருமாள் சுற்றுககோவிற்கண இடமபெற்றிருககக காணலாம். அஙகெல்லாம பெருமாளுககுப் பெருவிழாஇன்று. இந்நூல பக்கம 9-இல காண்க. மேலும திருசசெந்தூாத் திருககோவில சுற்றில் பெருமாள் இடமபெற்றுளளாா அண்மையில புதுப்பிததுக கருஙகற் பணி அமைததுளள சைவததிருவினா பெருமாளுக்கும அததிருப்பணியே அமைததுளளாாகள. பெருமாளை வரிசையில பேணிவரும் நனமாணபு கண்டு நம் தில்லை வைணவாகளும ஒழுகி ஒற்றுமைககு ஊறினறி உதவி காண்பாாகளாக. அரசியற சட்டததிற்கு அமைந்து வாழ்வாாகளாக.

**குறிப்பு:** 5 அணா தபாற்றலை யனுப்பி மேற்கணட நூலைப் பெற்றுக்

---

திருநெலவேலித், தென்னிந்திய சைவசிததாந்த நூற்பதிப்புக்
கழகததிற்காக, சென்னை 2-140, பிராட்வே,
அப்பர் அசசகத்தில், திரு. வ. சுப்பையா அவாகளால
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியா: வ. சுப்பையா.

நெல்லை அருணகிரி இசைக்கழக ஏழாந் தமிழ்த் திருவிழாவில்

திருநெல்வேலித் தென்னிந்திய தமிழ்ச்சங்கச் சார்பில்

**13—2—1953-ல்**

நடைபெற்ற

# அரசியலறிவு மாநாடு



**முதல் வரிசை**: எஸ. எஸ். பிளளை, எஸ். இராமசாமி கோனூர், பி.எ.,பி.எல், A. R சண்முகம் பிள்ளை, அ. சீனிவாசராகவன எம. ஏ., வே. தியாக ராச ஐயர், எம்.ஏ., எல்.டி., வ. பொன்னுசாமி பிள்ளை, எம். ஏ., ரெ. சேஷாசலம, எம்.ஏ., இராவ்சாகிபு எம. வி சுப்பிரமணிய ஐயா, எம்.ஏ., எல்.டி, இராவ்சாகிபு கு. அருணாசல கவுண்டா

**நடு வரிசை**: வ. சுப்பையா பிள்ளை, மு. காசிவிசுவநாதன் செட்டியார், பொ. முததுககருப்ப பிள்ளை, வித்துவான் வே. மாணிக்கவாசகம பிள்ளை, வி. சஙகா நாராயண பிள்ளை, கண. மு. மு. சாத சாததப்ப செட்டியாா, வெ. நடராச பிள்ளை, பி.ஏ, எல்.டி., மு சுப்பிரமணியன் செட்டியார்.

**பின் வரிசை**: புலவர் இ. மு. சுப்பிரமணிய பிள்ளை, புலவர், பு. சி. புன்னை வனநாத முதலியாா, தேவார இசைப்புலவர் சுந்தரமூர்ததி ஓதுவாா, சே. ஆ. சுப்பிரமணிய பிள்ளை, இராம கனக சபாபதி பிள்ளை, வித்துவான் அ. க. நவநீத கிருட்டிண பிள்ளை, சி. ச. அருணாசலம் பிள்ளை




சிலமபு ௨௭ } திருவளளுவா ஆண்டு ௧௯௮௪, மாசி மாச, 1953 { எ

# தவஇருக்கைத் தமிழ்முனிவர்

இருக்கை

நம் செந்தமிழகதது முநதையோா கண்டு வழங்கிவரும் முதுமொழி 'படடடை வாயததால பணிவாய்க்கும' என்பது. அதுபோனறே இருககை வாய்ததால ஒருககம வாய்ககும் என்பதுங் கொள்க இருக்கை—ஆசனம ஒருககம—மன ஒடுக்கம் ; உரன ுவ இருககையைத தவஇருககை எனக்கூறு வர். தவஇருக்கை எனினும் யோகாசனம எனினும ஒன்றே இவ் இருககையை நாளும விடாது கால, அரை, முக்கால், ஒன்று, ஒன்றரை, இரண்டு, இரண்டரை நாழிகை அளவிற்குக் குறையா மல் அவரவர்களுடைய காலவாய்பபு, இடவாய்பபுகட்குத் தகக வாறு பயினறு வருதல இன்றியமையாதது ஒன்று அங்ஙனம் பயின்று வருவது உடலுரம, உளஉரம, உறுபபுத் திண்மை, உரைவண்மை முதலிய பலநலம வாயதது வாழ்வதறகு வாயி லாகும்.

பயன்

மேலும் மடியின்மை, ஊக்கமுடைமை, ஆளவினையுடைமை, அஞ்சாமை, ஆண்மை, நோயின்மை, நோன்மை, அறிவுடை மை, அன்புடைமை, எழிலுடைமை, ஏர்உடைமை, நெடுவாழ்நாள், நிறையுடைமை முதலிய பல நலம் வாய்ததுப் பண்புடையராய்ப் பயனுற வாழ்தற்கும வழியாகும. இவ் இருக்கையைப் பயிலுந்தோறும் அளவாக மூச்சடக்கி அளவாக விடுவதுமாகிய அரும்பயிற்சியும் 'வினையால் வினையாக்கிக் கோடலபோல்' தானே வந்து பொருந்தும். இப்பொருத்தம் பின் தனி மூச்சுப் பயிற்சி பயிலுங்கால் பெருந்துணை செய்யும்.

நூல்

இப்பயிற்சி இஞ்ஞான்று செய்துவரும் பல்வேறு வகையான நம் நாட்டகத்தும் பிறநாட்டகத்தும் ஆகிய உடற்பயிற்சிகட்கெல்லாம் தாய்மையாய் வாய்மைச் சிறப்பினதாய் உள்ளது. இதுகுறித்துத் திருமூலநாயனார் பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே ஆவடுதுறை அரசின்கீழ்த் தேவிருக்கை மேவி உள்ளத்துறை இறையொடும் ஒருங்கிய மனத்தராய் அருளால் உலகுய்ய உரைத்தருளிய தமிழாகமத்தின்கண் சால்புற விளக்கியுள்ளார்.

பயில்வோர்

இப்பயிற்சியினை, கற்கும் மாணவரும், கற்பிக்கும் ஆசிரியரும், உழைக்கும் திருவினரும், விழையும் காதலரும், பிழையில் பெரியாரும், சிறுவர் சிறுமியரும், மற்றும் யாவரும் உடல் வளர்த்துக்கு உட்கொள்ளும் உணவினும் மிக்கதாய் உளத்தூய்மை, உணர்ச்சிவாய்மை, உரனுடைமை, அறனுடைமை முதலிய திறம்பல பெருகப் பயிலுதல் வேண்டும். பயிலுங்கால் இறையுண்மையும், அவனை மறவாமையும், பல்உயிர் ஒருமையும், நல்அருள் மாண்பும் குறிக்கோளாகப் பயிலுதல் வேண்டும். இப்பயிற்சியால் திண்ணமாக நோய்வாராதென்பது நூற்றுக்கு நூறு உண்மை.

பெரும் பயன்

இப்பயிற்சியினைச் செப்பமொடு காலமுண்டாகவே காதல் செய்து பயின்று வருதல்வேண்டும். காலமுண்டாகவே என்பதனை இரட்டுறமொழிவதால் பெறப்படும் மிக்க இளமையும், நெடுவாழ்நாளும் கொள்க. இதனைக் கல்லூரிகளிலும், பள்ளிகளிலும், இல்லங்களிலும், பயிற்சிக் கூடங்களிலும், கழகங்களிலும் கிழமையொடு பயிலுதல் வேண்டும். பயிற்றுவிக்கும் பண்பாளர் பலரும் வேண்டும். இப்பயிற்சியால் நாடும், மொழியும், நன்னெறியும், பீடும், பண்பும் சிறந்தோங்கி உலகிடை நன்மதிப்பும் என்பது எண்ணம்.

இப்பயிற்சியினைத் தமிழாகமம் போன்ற முன்னூல்களினும், அதனைத்தழுவியும் தற்பழக்கமாயும் பின்னுள்ளார் செய்த பின்னூல்களினும் கண்டுகளிக்கலாம். ஆனால் கொண்டுய்த்துப் பயில்வது மிகவும் அருமை. நம் தவப்பேற்றால் நம்மிடையே இந்நாள் நிலவும் தவமுனிவர் திரு. அ. பொன்னண்ணக் களத்தில் வென்றூர் என்னும் பொய்யில் புகழினர், செந்தமிழ்ப் புலவர்,

பிள்ளைமைத்துறவர், தமிழ்ப் பேராசிரியர், தஞ்சை மாவட்டக் கழக ஆட்சியைச் சார்ந்த குற்றாலம், திருவாரூர், ஒறுத்தநாடு முதலிய பல்வேறிடங்களிலுள்ள உயர்நிலைப் பள்ளிகளில் மயர்வறக் கற்பிக்கும் மாண்புறும் ஆசிரியராகப் பன்னெடு நாள் போதித்த பண்பாளர். இந்நாளும் தம் இல்லமே கல்லூரியாகப் புலவர் வகுப்பு நடத்திப் புலவர் பலரை உலகுக்கு அளித்து வருகின்றனர்.

இவர்கள் அறுபதாம் அகவை முடிவுறுகாறும் பயிற்சியை நாடாது பின் பயிற்சி நலம் ஓர்ந்தும், பயின்றோர் திறங்கண்டும், அவர் அன்பொடு கூறும் இன்ப உறுதி உரைகொண்டும் பயில முயன்று, அயரா உழைப்பால் பயின்று நலம் பல பெற்று 'நான் பெற்ற இன்பம் நானிலம் பெறல் வேண்டும்' என்னும் நன்னோக்கத்துடன் தம்பால் வருவார்க்கும், கல்லூரி, பள்ளி, கழகம், அலுவலகம், பொதுமன்றம் முதலிய இடங்கட்கு வலியச் சென்று மலர்ந்த முகத்தொடும், மாண்புறு மனத்தொடும், இனிய மொழியொடும் முப்பத்திரண்டு இருக்கைகளையும் ஒவ்வோர் இருக்கையின் பெயர், தன்மை, வலுப்பெறும் நரம்பு உறுப்பு முதலியன, அதனால் அகலும் நோய்கள், நோய் அணுகாமை முதலியன நவின்று செய்தும் செய்வித்தும் வருகின்றார்கள்

தவமணி

அம்முறையில் சென்னைக்கண் அமைந்துள்ள நம் 'சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்' மாடியில் ஆட்சிப் பொறுப்பாளர் முன்னிலையில் 28-2-1953 வைகறையில் கழகப் புலவர் அலுவலாளர் பலரும் குழுமிய கூட்டத்திடையே காண்பார் வேட்கையுறக் கருத்துரைத்துக் களிப்பொடும் செய்து காட்டினர். அவர்கள் அகவையானது வரும் மார்ச்சுப் பதினைந்துடன் எழுபத்துமூன்று நிறைவுற்று எழுபத்து நான்கு துவங்கப் பெறும். அவர்கள் தோற்றம் கழிபேரிளமைக் கட்டமை உடலொடு காணப்பெறுகின்றது. அமைதித்தோற்ற அழகு பொலிகின்றது. 'மொய்த்துவளர் பேரழகு மூத்தவடிவம்' யாதுளதோ என்று திகழ்கின்றது கரந்தைத் தமிழ்ச்சங்கத்தார் உவந்தளித்த '**தமிழ்த்தவமணி**' என்னும் தனிச்சிறப்பு முற்றும் பொருந்தும் என்று உற்றுக்காண்பார் உரைக்கும் வண்ணம் ஒளிர்கின்றது இத்தகைய நலத்தை நாமும் பெற இறையருள்வராக!

அவர்கள் தம் வால் நரைமுடிகள் பயிற்சிச் சிறப்பால் கருத்து வருகின்றது இப்புதுமையினைக் கண்ணுறுங்கால் திருமூல நாயனார் அருளிய 'உரோமங்கருக்கும்' என்னும் திருமொழியின் உண்மைப்பொருள் எண்மையாக விளங்குகின்றது. நம்

பெரியார போன்று முதுமையில் தொடங்குவார்க்கு வால்நரை முடி கருக்குமாயின் இளமைதொட்டுப் பயில்வார்க்கு நரை ஏது, திரை ஏது, மூபபேது, பிணி ஏது, பிற ஏது என்று முன்னுமின். முடியின்கருமை மேன்மேலும மழைககருமையாய்த தழைக்கும் என்பது பிழையிலவாய்மை. உடல் நலத்தால உளநலமும், உள நலத்தால் உணர்வு நலமும், உணாவு நலத்தால் ஒருமையின்பும பிறந்து மறநதும் தீமை புரியாது அறமே புரிநது சிறந்து வாழ்வா என்பது ஒபபமுடிநத செப்பமாம்.

வரலாறு

தவயோகசிததா தாயுமானச்செல்வர் தமிழும சிவமும வளர்ப்பதற்குச் சார்பிடமாயிருநத திருசசிராபபள்ளி மாவட்டத தைச் சார்நத பொங்குந் தமிழககரையாம் செங்கரையூரில் அருள்பெருகத் தோன்றியவர் தநதைதன் தந்தையாம் பெயரனுர் குழந்தைக் களத்தில்வென்ருர் எனனும் ஒண்மைச் செல்வா. புலமைமிக்க புரவலர் இராமநாதபுர வேநதவைப புலவரால் பாடப்பெற்றவர் அப்பாடற்கண் 'செங்கரை நகர்க்கு வேநதர்' என்னும சிறபபும் எய்தியவா தொன்றுதொட்டுத தமிழ்பபுலமை வாய்நத தனிபபெருங்குடியில தோன்றியவா நம் தமிழ்ததவமணி

என்ருர்

இவாதம் அருமைத் தநதையாா திருப்பெயர் அழகபபக் களத்தில் வெனருர். தாயா திருப்பெயர் கணணமமாள் எனப பெறுஉம் கிருட்டிணஅம்மாள் நம பொன்அண்ணுக்களத்தில் வென்ருர்க்கு உடன் பிறநதாா பெண்பால நால்வர் ஆண்பால் இருவர். பெண்பால பிறப்பினர் அனைவரும் சிறந்து வாழ்கின் றனர்.

குடிப்பிறப்பின் சிறப்பாலும், கற்றபெரும் தமிழ்ப்புலவர் சார்பாலும, முன்னைத தொடர்பாலும் 'பிள்ளைமைக்கல்வி, கட்டிளமைக்கல்வி, புலமைக்கல்வி முதலிய அனைத்தும் எளிமை யாகக் கைவரப்பெற்றனர் மதுரைத தமிழ்ச்சஙகஞ் சென்று பயின்றுளளாாகள். திருமுறைக் கல்வியும, சித்தாந்தக் கல்வியும் திருவருள துணையால் சிறக்கத் தெளிந்தனர். செந்நெறி ஒழுக்கம பூண்டனர். சிவன் ஐந்தெழுத்தும், திருவெண ணீறும், அவனடி மறவா அன்புறு தொழுகையும இன்புறக் கொண்டனர்.

சிறந்தது பயிற்றல்

தமிழகத்துறவு குடும்பத்துடனிருந்து சிறந்தது எனப்படும செம்பொருளை எய்த முயலும் முயற்சியேயாம, அம்முயற்சியில இவர்கள மணமாகாது பிள்ளைமையிலேயே மெய்த்துறவு வாய்ந்தமெய்தவத்தர். எ குடும்பம் பேணும வடிவில தவமும் வாய்க்க வேண்டும் என்பதன் பொருட்டும், ஏன்றுட்கு அருந்துணை ஆற்றுதற்பொருட்டும் தாயததிடையே தம்பிமுறையாம் சின்னமணிக களததில வென்றுர் என்னும செல்வனை அன்பினல் மகனமைக்கொண்டு தம் தங்கை சௌந்தரவல்லியின், ஒரே மகளாராகிய மணியம்மாளை மணமுடிப்பித்து உடைமையும் பிறவும் ஒருங்கீந்து வாழ்வித்து வருகின்றனர் இஃதன்றே நீத்தார் கடமை. இம்மகற்கு மககட் செலவமும் வாழ்வும் வாய்த்துள.



இவாகள பன்னெடுநாள வாழ்நது தவ இருக்கையைப் பல ஊர்களிலும் பலர்க்கும் பயிற்றுவிததுச் சித்தாநத சைவத் திறம விளக்கிச சிறககச் சிவன தாளிணையைத தொழுவோமாக.

இவாகள் செய்து போதரும இப்பயிற்சியினை வல்விரைவில் செமமையான விளக்கததுடனும, படங்களுடனும் ஒரு நூல் வடிவில் வெளியாக்கித தமிழ்த்தாய்க்கு அணிசெய்யத தமிழ்ப் பெருமக்கள் துணைபுரிவார்களாக. திருவருள் முன்னிற்பதாக.

போற்றுபொன் அணணுக களததில்வென றுாபுகழார்
தோற்று தவஇருககை சொல்பயிற்சி—ஆறறுதமிழ
அன்ப ரெலாம்பயினறு ஆற்றலநாள செலவமுறறிஙகு
இன்பமுடன வாழ்க இனிது

—ஆசிரியர்.

# மருத்துவம் வாழ்கவே*

[திரு. கா. சுப்பிரமணிய பிள்ளை, எம். ஏ., எம் எல் ]

அகவல்

சென்னை மாநகர்த் தங்க சாலை
எண் இருநூற் றைந்தென்னும் அகத்தே
நெல்லை மூதூர் பிறந்த செம்மல்
நல்லறி வாளர் சண்முக சுந்தர
புவனை குருபர மருத்துவத் தலைவர்
தவநிறை பெரியார் தனிஅருள் பெற்றுக்
கொடுக்கும் மருந்துகள் குவலயந் தன்னில்
அடுக்கும் யார்க்கும் அமுதம் போல்வன
குட்டம் காசம் குன்மம் கடியநோய்
கட்ட மேகம் கடுநீ ரழிவு
தேட்கடி பாம்புத் தீக்கடி விடங்கள்
முதலிய எந்நோய் தன்னையும் நொடியில்
அதரரி யாமல அகற்றவல் லனவே
எவ்வகைச் சுரமும் ஐந்து பொழுதினில்
நையத் தொலைத்து நலங்கொடுப் பனவே
தங்கம் சூதம் முத்து மணிகள்
பங்க மின்றிப் பதிந்த செந்தூரம்
ஆயிரம் செலவுசெய் தாற்றிய மருந்து
மாயிரு வுலகில் மறுவில் லாதது
முன்னியது முடிக்கும் முருகன் அருள்போல்
துன்னிய நோயைத் தொலைத் தெல்லாரும்
மன்னி! வாழும் நயந்து பயத்தலின்
முருகன் மும்மணிச் செந்தூர மென்னும்
அருமைப் பெயரொடு அலங்கல் காண்மின்
மாண்புடை மருத்துவம் நீடுழி வாழ்கவே

* சித்த மருத்துவர் திரு சண்முக சுந்தரனாரைப் பற்றிப் பாடியது

# கண்ணகிப் பெயர்க்காரணம்

[வித்துவான், திரு. ஆ. சிவலிங்கனார், மயிலம்]

கண்ணகிப் பெயர்க்காரணத்தை மூன்று வகையில் கூறுவர் மூன்று திறத்தார்

(1) 'கர்ணகி' என்றது 'கண்ணகி' என்றாயிற்று. கர்ணம் என்பது காது என்று பொருளபடும. கர்ணம் வழியாகப் பிறந்தவளாதலின் கண்ணகி எனப பெயர்பெற்றாள், கோவலன் மனைவி. இக்கொள்கையைக் கோவலன் கதை என்ற நூல் கூறும்.

"ஐந்து தலை நாகமது அந்தக குழந்தை தன்னைக
காரியெனறு தானறிநது கனமாக ஏதுசெயயும்
கனனவழி யாயபபிறநத கட்டழகி யாகுமெனக
கணணகியாள் என்றுசொலலிக கன்னிககுப் பேர்கொடுத்து"

எனபது அநநூலின கூறறு

(2) 'காணிகா' அல்லது 'கர்ணகா' என்ற வடசொல்லின் திரிபே 'கண்ணகி' யென்பது இது உயாதிரு. மு. இராகவ அய்யஙகார் அவர்கள கூற்று.

(3) கண்ணகத்துள்ளாள் என்ற காரணம் பற்றிக் கண்ணகி என்ற சொல் உருபபெற்றது என்பது மூன்றாவது கொளகை

இனி இவறறை ஆராய்வாம்.

முதற் கொளகையாகிய 'கர்ணவழியாய்ப் பிறநதவள் கண்ணகி' என்றது எட்டுணையும பொருநதுவதன்று என்பதை யாவரும் அறிவா. கோவலன் கதை சிலபபதிகாரத்தை ஆதாரமாக வைததுக் கொண்டோ அல்லது அதனைப பாாக்காமலேயே தெருக்கூததாடிகள் திரிததுககொண்ட கதையினைக் கொண்டோ கற்பித்து எழுதபபட்டதாகும சிலப்பதிகாரத்துடன் முக்கியமான இடங்களில் மாறுபட்டிருப்பதால் அநநூல ஒரு புனைவே என்பதில ஐயமில்லை ஆதலின அதனைப்பற்றிய ஆராய்ச்சியை விடுத்து இரண்டாவது கொளகையாகிய 'கர்ணிகா' அல்லது 'கர்ணகா' என்பதன் திரிபு 'கண்ணகி' என்ற கொளகையைப் பறறி இனிக் காண்போம்

உயாதிருவாளா மு இராகவ அய்யங்கார் அவாகளின் கருத்தினைச் சுருக்கித் தருகின்றேம்

"காணிக அலலது கர்ணக என்ற வடசொலலுக்குத தாமரைபபொகுட்டு என்பது பொருள். தாமரைப்பொகுட்

டினை மகளிர்க்கு உவமை கூறுதல உண்டு. கர்ணிக போன்றவள் கர்ணிகை அப்சரசுக்கள் பதினொருவருள் கர்ணகா என்பது ஒருத்தியின் பெயர் என மகாபாரதததால் அறியப்படும் அதற்குப் பொருள் 'பொகுட்டுப் போனறவள' என்பதாகும். 'கண்ணகி' என்பதற்கும அப்பொருளேயாம. இவ்வாறு கொள்ளுதற்கு இளஙகோவடிகள் வாக்கு சானறு பகருகின்றது.

கவுந்தியடிகளும கோவலனும் கண்ணகியும உறையூா நீங்கி மதுரைக்குச செல்லும இடைவழியில் வேட்டுவாஊரில் தங்க நோந்த காலத்து, வேடுவரும அவர் மகளிரும அததேவிக்கு விழாவயர்நது வரிக்கூத்தாடினா என்றும அக்கூததில தேவியின் ஆவேசம கொண்ட சாலினி என்பாள் அஙகுக் கோவலனுடனிருந்த கண்ணகியை அணுகி அவளை நோக்கி,

'இவளோ
கொஙகச செல்வி குடமலை யாட்டி
தென் தமிழ்ப் பாவை செயதவக கொழுந்து
ஒருமா மணியாய் உலகிற் கோஙகிய
திருமாமணி' (சிலப் 12-47-9)

எனப் பாராட்டினள் என்றும் இளஙகோவடிகள கூறுகின்றார். தமிழகத்தும் பிற நாடுகளிலும தெய்வமாகக கொண்டாடப் பெறும சிறப்புக் கண்ணகிககுப் பினபு நிகழப் போவதால், அந்நிகழ்ச்சியை இவவாறு முன்னறிநது குறிபபிட்டனள அச்சாலினி என்க. கொஙகிளங கோசா தஙகள நாட்டகத்து வழிபட்டமையின் 'கொங்கச செலவி' என்றும, சேர வேநதன் கோட்டம் எடுத்து வணஙகலின் குடமலையாட்டி என்றும், பாண்டிய சோழர்கள விழாவெடுததுக் கொணடாடுதலின் 'தென் தமிழ்ப்பாவை செய்தவககொழுநது' என்றும, இலங்கையரசனும மாளுவ வேந்தராலும் அவ்வாறே போற்றப்படுதலின் 'ஒருமாமணியாய் உலகிற் கோஙகியவள்' என்றும் கண்ணகி குறிப்பினுற் சிறப்பிககப பெற்றமை காண்க. இங்ஙனம் குறிப்பிற் கூறப்பட்டவற்றுள ஒரு மாமணியாய் உலகிற் கோங்கிய திருமாமணி என வருந்தொடர் ஈண்டு சிறிது ஆராய்சசிக்குரியதாகின்றது. இத்தொடருள் இருமுறை 'மாமணி' எனக் கூறியிருபபது ஓர் உட்கருததைக் கொண்டதாகும. ஒரு பொருட்சிறப்பின்றி இளஙகோவடிகள கூறியவைதயே கூறார். கண்ணகியை உலகுக்கு ஒரு மாமணியானவள் என முன்னர்க் கூறிவிட்டமையால் திருமாமணி என்பதில உளள 'மணி' அவள் இயறபெயரைக் குறிபபிற் குறித்தற்கே வந்ததாம். 'திருமாமணி' என்பது 'திருமகள் தங்கும் சீரியமணி' எனப் பொருள் படும். மணி என்பது தாமரை மணி. அஃதாவது தாமரைக்

கொட்டை. கொட்டையுள்ள பொகுட்டினைக் கொட்டை எனறலும் உண்டு. அதற்கேற்ப மணியுள்ள பொகுட்டினை ஈண்டு இளங்கோவடிகள் மணி என்றார். இதனால் மணி போன்றவள் இவள் என்று கூறிய முகததால், பொகுட்டுப் போன்றவள் என்ற பொருளுள்ள கர்ணக என்ற வடசொல்லை நினைவுபடுத்தி அதன் திரிபாகிய கண்ணகி என்ற இயற்பெயரைக் குறிப்பித்தார் இளங்கோவடிகள"

இவ்வளவும அய்யங்கார் அவர்கள கருத்து. இனி இதனை ஆராய்வோம.

(1) இளங்கோவடிகள பிற இடஙகளில் தாமரைப் பொகுட்டினை உவமை கூறினார் அலலா கண்ணகிக்கு பிற மக ளிர்க்கேனும கூறினரல்லர்.

(2) மணி என்ற சொல்லை, அடிகள, ஒளிமணிப் பொருளி லேயே ஆண்டிருக்கின்றனரா.

"மலையிடைப் பிறவா மணியே யென்கோ"

'திருததகு மாமணிக கொழுநது"

என்பன காணலாம

(3) 'ஒருமா மணியாய் உலகிற் கோங்கிய திருமாமணி' எனபதறகு அடியார்ககு நலலார், "இவவுலகுககு முழுமாணிககம் போன்று உயர்சசி பெற்ற பெண்ணுருக் கொண்ட திருமணி" என உரை கூறியது கொண்டும், 'திருததகு மாமணிக் கொழுந்து' என்ற இடத்து திருத்தகு மாமணி—முழு மாணிக்கம் எனப பொருள் 'எழுதியது கொண்டும் அவரும் மணி என்பதே பொருள் எனக கொண்டனா என்க.

(4) கர்ணிக அல்லது கர்ணக இச் சொற்களுடன் கண்ணகி என்ற சொல்ஒப்புமை காணப்படுவது கொண்டு மிக வளைந்து சுற்றிக் காரணம் காட்டுவது ஏற்புடைத்தாகாது.

(5) அவ்வாறு காட்டலாம எனின் இவவாறும் காட்ட லாம் அன்றோ?—மணி என்பதற்குக் 'கண்' எனவும பொருள உண்டு

"கருமணியிற் பாவாய்நீ போதாயாம வீழும்
திருநுதற் கிலலை யிடம." . (திருக்குறள் கககூ)

என்ற குறளில் மணி என்பது அப் பொருளதாதலைக் காண்க. இதனால் மணி என்றதால் கணணைக்குறித்ததாகக் கொண்டு, 'ஒருமாமணி......திருமாமணி' என்ற தொடர்கு "இவ்வுலகிற்கு

முழுமாணிக்கம் போன்று உயர்ச்சி பெற்ற அழகிய கருவிழியாள்" எனப் பொருள் கொள்ளவைத்து கருங்கண் என்னும் நினைப்பினையூட்டி அதனால் அவள் பெயராகிய கண்ணகியைக் குறிப்பிற் குறித்தார் இளங்கோவடிகள் எனக்கொள்ளலாம். இவ்வாறு கொள்வதும் ஏற்புடைத்தாகாது அன்றோ?

(6) 'கொங்கச் செல்வி' முதலியன கண்ணகியின் பின்னிகழ்ச்சிகளைக் குறிப்பிற் குறித்தவாறே 'திருமாமணி' என்பதும் ஒன்றைக் குறிப்பிற் குறித்தற்கே வந்ததாகும் அஃதாவது இயற்பெயரைக் குறிப்பிற் குறித்ததாகக் கொள்ளல் வேண்டும்' என்பர் அய்யங்கார் அவர்கள் 'கொங்கச் செல்வி' முதலியன பின்னிகழ்ச்சிகளைக் குறிப்பிற் குறித்தற்கு வந்தன என்றால் திருமாமணி என்பதும் பின்னிகழ்ச்சியினைக் குறிப்பிற் குறித்தற்கே வந்ததாதல் வேண்டும் அவ்வாறு காட்டும் தொடரே ஏற்புடைத்தாகும்

(7) 'ஒரு மாமணியாய்....... திருமணி' என இருமுறை மணி என்றது கூறியது கூறலாகாதோ எனின் ஆகாது. பின்னருள்ள 'மணி' என்பதற்குப் பொருள் வேறுண்டு. அதனையே யீண்டு ஆராயவேண்டும்

'மணி' என்ற சொல் சைன சமயத்தில் வீடுபெற்ற உயிரைக் குறிக்கும். உயிர்கள், மணியுயிர், பொன்னுயிர், வெள்ளியுயிர், செம்புயிர், இரும்புயிர் என ஐவகைப்படும் அவை முறையே, வீடுபெற்ற உயிர், தேவர் உயிர், மக்களுயிர், மக்களிற் கீழாயினார் விலங்குகளின் உயிர், நாகர் உயிர் ஆம்.

> "மணியுயிர் பொன்னுயிர் மாண்ட வெள்ளியின்
> அணியுயிர் செம்புயிர் இரும்பு போலவாம்
> பிணியுயிர்" (சிந்தா. 3111)

என்று சிந்தாமணிப் பாடலில் வருதல் காண்க. இவற்றையே விரித்துக் கூறுதலும் உண்டு.

> கருமம் பிறப்பும் கருநீலப் பிறப்பும்
> பசும்ம பிறப்பும் செம்ம் பிறப்பும்
> பொன்னன் பிறப்பும் வெண்ணைப் பிறப்பும்
> என்றிவ் வாறு பிறப்பினும் மேவி
> பண்புறு வரிசையிற் பாற்படுப் பிறந்தோர்
> கழிவெண் பிறப்பிற் கலந்துவீ டணைகுவர்"
> (மணிமே. 27 150—155.)

என்ற மணிமேகலையடிகளைக் காண்க சமண் மதத்தின் ஓர் பிரிவாகிய ஆசீவகமதத்தினரின் உயிர்ப்பாகுபாடு மேற்சொன்னவை.

மணியுயிரினை 'மணி' என்றே கூறுதலும் உண்டு.

"மாரியினுக் கொளி...... ......நின்
இணைமலாச சேவடி கொடுத்த என்பவே"  (சீவக. 3100)

"மணிநிலை விசும்பொடு வரஙகள் ஈவன"  (சூளா. இரத. 62)

"மணிஞாலம் உடையாயை"  (சூளா. இரத. 64)

என்ற இடங்களைக காண்க. இவற்ருல மணி எனபது சைன வழக்கில்—ஆசீவக வழக்கில் வீடுபெற்ற உயிரைக் குறிக்கும் என்பது பெற்ரும் இதுகொண்டு இனித் திருமாமணி என்ப தற்கு எளிதில் பொருள் காணலாம்.

'திருமாமணி' கண்ணகியின் பின்னிகழ்ச்சியைக் குறிப்பிற் குறித்ததற்கே வநதது என்பது எம துணிபு அஃதாவது, "கொஙகச் செல்வி முதலியனபோல இதுவும இவ்வுடலை விட்டு நீஙகும் இவள் உயிர் பின்னர் வீடுபெற்ற உயிராகும் அஃதாவது மணியுயிராகும் என்ற குறிப்பினை த தனனகத்துக கொண்ட தாம" என்னலாம பின்னுல் கொஙகச் செல்வியாக, குடமலை யாடடியாக, தவககொழுநதாக, ஒரு மாமணியாக விளஙகப போவதற்குக் காரணம இவள அடுதது மணியுயிராகப் போவதே என்று கூறுவதில், பின்னிகழ்ச்சிகளுககுக கூறும காரணமும் தொடாபாகப் பின்னிகழ்ச்சியொனறையே கூறுதலும் எவ்வளவு பொருத்தம

இதுகாறும் கூறிவநதவாற்ருல் காணிக அல்லது கா்ணக என்ற வடசொல்லின் திரிபாகக்கொளவது கணணகி எனற சொறகு ஏற்றதாகாது என்பதும, திருமாமணி என்பதில் உளள 'மணி' என்பது சைனசமயத்து 'மணியுயிா' என்ற பொருளைக கொண்டதென்பதும் போதரும

இனி மூன்ருவது காரணமே சிறக்கும் என்பதற்குச் சில கூறுதும சிறந்த அழகிய ஒரு குழநதையைக கண்டவுடன 'அதன் உருவம கண்ணிலேயே இருக்கின்றது' என்று உலகில் கூறுவதை நாம கேட்கின்ருேம பார்ததவா கண்ணகத்தெல் லாம இருந்த காரணமபற்றி ஒரு பெண் குழநதைக்குக் கண்ணகி எனற பெயரையிட்டு வழஙகியிருககலாம அதுவே பின்னா பெணகுழந்தைகட்கும் இயற்பெயராக வழங்கப்பட்டிருக்க வேணடும். பேகன் என்ற வளளலின மனைவியும் கண்ணகி என்ற பெயருடையவளே இப்பெண்பாற் பெயர்ககேற்ப ஆண்பாற் பெயராகக் 'கண்ணகன' என்ற பெயா காணபபடுகின்றது 'கண்ணகனா' என்பது ஒரு பழம புலவரின் பெயா பொகுட்டுப போன்றவள கண்ணகி என்னின் கண்ணகன் என்பதற்குக கூறலாம காரணம என்னை? 'கண்ணகததான்' என்ற பொரு ளில வரும 'கண்ணகன்' என்பது 'கண்ணன்' எனவும வரும

'கண்ணன்' என்ற தமிழ்ச்சொல்லுக்குக் கம்பர் ஓரிடத்தில் பொருள் கொண்டது ஈண்டு நினைவிற்கு வருகின்றது.

மிதிலைநகரில் இராமன் வீதிவழியாகச் சென்றுகொண்டிருந்தான். அவனைப் பல மகளிர் கண்டனர். கண்டவர்கள விழித்தகண் இமையாதபடி கண்டனர் இதனைக்கொண்டு கமபர் கூ

வீதிவாய்ச செல்கின ருன்போல் விழித்திமை யாது நின்ற
மாதரார கண்க ளூடே வாவுமான தேரிற் செல்வான்
யாதினும உயர்நதோர தன்னை யாவாகரும கணணன என்றே
ஓதிய பெயர்க்குத் தானே யுறுபொருள் உணாத்தி விட்டான
(கமப. உலாவிய 6)

"மிதிலைநகர வீதிவழிச் செல்கின்றவனைப்போல இமைத்தல் செய்யாது விழித்து நின்ற மாதர்களின கண்களூடே தாவிப்பாய்கின்ற குதிரைகளைப் பூட்டிய தேரின் மீது செல்பவனுன அவ்விராமன் எபபொருளினும சிறநத பெரியோர்கள தன்னைக 'கண்ணன்' எனறு கூறியுள்ள பெயர்க்குத தக்கபொருளைத் தானே, யாவாகரும் உணர்த்தி விட்டான்"

என்பது இபபாடலின் பொருள் இராமனைத திருமாலாகக் கோடலின் கம்பா, திருமாலுககுரிய பெயாகள் பலவறறுள் கண்ணன் என்ற பெயரை மனததுககொண்டு, அது தமிழ்ச் சொல்லே என்பாரோடு உடன்பட்டவராகிக 'கணணகத்துள்ளான' 'கண்ணன' என அதற்குக காரணம கண்டு தாம் கண்ட பொருளை இராமன விளக்கியதாக உண்மையொடு புணர்நத கற்பனைமூலம் விளககியுளளாா இதனுனும் கண்ணகி என்பது கண்ணகத்தாள் என்னும் பொருளுடையது என்னலாம

இதுகாறும் கூறியவாறருல் கண்ணகத்துளளாள எனற காரணததாலேயே* கண்ணகி என்பது தோன்றியிருக்க வேண்டும் என்பதும பின் அதுவே இயற்பெயராம என்பதும் இதன் ஆண்பாற் பெயர் கண்ணகன் என்பதும புலனும கண்ணததன் கணணன் என்ற பழம புலவர்களின பெயாகளும் கண்ணகன் எனபதன் பொருள் உடையனவே

* கண்ணகி Kannaki, N. Perh கண+அகம Kannakı, the wife of Kovalan and the heroine of Chilappatıkaram, கோவலன் மனைவி. . பேகன் மனைவி (புறம: க௪௩.) (Lexicon. p. 691. பகுதி. 2) இதில் கண+அகம் எனப் பிரித்தலும் காண்க.

# நூல்நிலையம்

[தென்னாப்பிரிகா - டர்பன் - திரு ச மு. பிள்ளை அவர்கள்]

'கவி நிறைந்த நூல் இன்பமயமன்றோ?' எனககவிஞா 'உமார்கயாம்' கூறியுள்ளது நோக்கததகககது நூலகள கவியின்பம பெற்று மிளிருமேல, அவையுள்ள நிலையம் அகததையும அறிவையும் ஒருவழிப்படுத்தும இன்பப் பூஙகாவாகும் நூலகள நிறைநத ஒரு நூலநிலையத்தில நாம் நுழைந்தால், உலககககவலைகளை நாம அறவே மறநது, உள்ளத்திற்குகநத ஒரு புதிய உலகில் புகுவதாக உணாவோம்.

சிலவேளைகளில, எபபோதும உழன்று கொண்டிருக்கும இவ்வுலகம் சலிப்பைத தருகின்றது மக்களின வெறும பேச்சும, வீண் சண்டைகளும வெறுப்பையுண்டாக்குகின்றன. ஆதலின், அறிஞர் நூலுலகிறபுகுநது நுண்ணிய பொருளகளை ஆய்ந்து இன்பம் நுகர்கின்றனர்.

நூலைப்பற்றி மாண்டெயின் என்னும் பெரியார் 'எனது முதிர்ந்த வயதிலும, நான் தனிததிருக்கும வேளையிலும நூல் எனககு இன்பமளிக்கின்றது, சோமபேறித்தனத்தால் உண்டாகும் மனப்பாரத்தை ஒழிக்கின்றது. யான விருமபாத நண்பர்களினின்றும், நீங்கியிருக்க அது உதவி செய்கின்றது என்து வாழ்க்கையின் பிரயாணததில எனககு அது இதம ்க்கும கட்டுசசோறுகப பயன்படுகிற'தெனப் புகழ்நதுளளாா.

அனடோல் பிரான்ஸ என்ற பிரஞசு நாட்டு நூலறிஞர், 'நூல் என்பது ஒருமாய சூத்திரம். அதினின்று பல உருவங்கள், பல தோற்றங்கள, பல யுகஙகள், பல சிநதனைகள யாவும் தோன்றி மனத்தைக கலைத்து, இதயத்தைப் பண்படுத்துகின்றன நூல என்பது சென்ற கால உலகிற்கும், ஏனைய சிறந்த உலகங்களுக்கும் நமமைத் தூககிச்செல்லும் ஒரு மாயக் கருவியாகும்' என்று கூறுகின்றாா.

தெய்வீகமளிக்கும் நூல்நிலையத்திலே நாம புகுநததும், நம்மிடத்துள்ள கீழ்மையான, நிலையற்ற, புன்மையான குணங்கள் யாவும் மறைகின்றன; நிலையான, விபபபான பல சிறநத குணங்கள பரிணமித்து வளர ஆரம்பிக்கின்றன; ஒவ்வொரு மனிதனது இதயத்தில் தெய்வததிருவொளி திகழ்

கின்றது: அவ்வொளியைக் காணாதபடியே அவன் வாழ்ந்தாலும், மாண்டாலும், அவ்வொளி அம்மனிதன் இதயத்தில் புதைந்தே கிடக்கின்றது

டாக்டர் ஹரி ரோபட்ஸ் கூறியாங்கு, நூல்நிலையம் மனித உலகிற்கு அளிக்கும் உதவி யாதெனின், அது நம் நாட்டு அறிஞரின் வாழ்க்கையையும், சிந்தனைகளையும், நம் நாட்டு எளிய மக்களது அன்றாட வாழ்க்கையில் நடைபெறும் வேலைகள், அவர் தம் எண்ணங்கள், செய்கைகள் முதலியவற்றோடு சம்பந்தப்படுத்துவதாகும்.

நல்ல சிறந்த வாழ்க்கை நடத்துவதற்கு நமது சொந்த அறிவும், அறிவுடையோர் போதனைகளும் முதன்மையானதாகும். நம் அறிவை வளர்ப்பதற்கு நூல் பல கற்கவேண்டும்; இந்நெறியிற்பெறும் அறிவாற்றான் நம் அனுபவம் முதிர்ச்சியடையும்; எண்ணங்கள் பெருமிதமுறும், ஏனைய காரியங்களில் காலத்தைச் செலவழிப்பது போலவே, நூல்நிலையத்திலும் எத்தனையோ மணி நேரத்தைக் கழிக்கலாம் அதிலும், ஆயிரக் கணக்கான நூல்கள் உள்ள இடத்தில், இன்ன நூல்களைத்தாம் படிக்கலாமென்று தேர்ந்தெடுப்பது சிரமமாகும் படிப்பவர் புத்தகங்களைத் தேர்ந்தெடுப்பதில் தேர்ச்சி பெற்றிருக்க வேண்டும்

எல்லா மனிதரும் எல்லா நூல்களையும் படித்துவிட முடியாது; குறிப்பிட்ட பல நூல்களில் இருந்துதான், மனிதன் தனக்குத் தேவையான மனவுணவு உட்கொள்ள முடியும். மனநிலைக்குப் பொருத்தமான நூல்கள் அவன் மனத்தை வளர்ச்சியுறச் செய்கின்றன 'நாம் படிக்கவிரும்பும் புத்தகமே, நாம் படிக்கவேண்டிய புத்தகம்' என்று ஸ்டிவென்ஸன் கூறியுள்ளார்.

தொரே எனனும் பெரியார், 'முதலில் சிறந்த நூல்களைப் பயிலவேண்டும். இல்லையேல் அவற்றைப்படிக்க உனக்கு வாய்ப்புக்கிடைக்காது' என்கிறார். ஆகவே, முதலில் எவையெவை நல்ல நூல்கள் என்று முடிபுகொள்வது இன்றியமையாதது. அதற்கு நூலாராய்ச்சியில் அனுபவம் வாய்ந்த அறிஞரது அபிப்பிராயத்தைக் கைக்கொள்ளவேண்டும். உண்மைக் குறைவாயுள்ள நூல்நிலையமாகிய அரண்மனையில் தங்க ஒருவன் ஆசை கொண்டானாகின், அவன் அறிவுத்துறையில் இறங்கி உழைக்க ஆயத்தமாக இருக்கவேண்டும். சிலசமயம் இது அவனுக்கு மிகக்கடினமாக இருக்கலாம் அறிவின் மீது ஆவல் ...யாக இருந்தால், அதன் முடிவை அவன் எளிதில் எய்து

வான் மனிதனுடைய மனததைப பூரிக்கசசெயது உயாநத தான - திடுக்கிடச்செயயும, புதிய புதிய சிநதனைகளை ஊட்டும நூல்களே சிறந்தன சோமபேறியால அவற்றைப்படிககக இயலாது; பயநகொளபவன் அவற்றைசகண்டு அஞசுவான்.

நூலநிலையததிலிருநது நூலாராய்ச்சி செய்யபபுகுவோன சுறுசுறுப்பு, ஊக்கம, துணிவு இவைகளை உடையவனுக இருகக வேண்டும்; புதையலை எடுகக விரும்புகிறவன் படுகிறபாடு, நூலாராய்ச்சி செய்பவனும் அடைய நேரிடும; பல தடவைகள் ஏமாற ஏறபடும, ஆனுல விடாமுயறசியுடன் வேலை செய்தால் வெறறியடையலாம் ஜோாஜ சாநதாயனு என்னும அறிஞா 'உலகில நடைபெறும் சம்பவங்களை உண்மை வழியாகத் தெரிவிப்பது இலககியததின் பண்பாகும' என்று கூறியிருக்கின்ருா.

எவவளவோ நிகழ்சசிகளுக்கிடையில் நாம வாழ்கின்ருேம. ஆனுல அவைகளின் உண்மை நிகழ்சசிகளை நாம அறியாதிருக்கின்ருேம நாம வாழ்ககையில அறிநத உண்மைகளை யெல்லாம பெரிய நூல்கள் தெளிவாக எடுததுக் காட்டுகின்றன. இவவித நூலகள் நமது வாழ்க்கையின உண்மைகளைப பாதுகாத்து வைததுள்ளன அவை நமககுப பரநத அறிவையும, விரிநத சிநதையையும தருகின்றன மனிதா தம் குணஙகளை நன்கறியும் திறமையையும, அறம அறமல்லாதவைகளைப பகுத்தறியும வனமையையும் அவைசளாலேயே நாம பெறுகிருேம அவைகளே எக்காலததுமுளள பெரியோாகளது உயரிய சிந்தனைகளையும அவாகளது அரிய அனுபவங்களையும் நமக்குத் தெரிவிககின்றன

'கடந்த காலங்களுடன் எஙகளை ஒன்றுபடுததும் திருமொழியே! இவ்வுலகை நீத்த பெரியோாகளுடன் பேசும் பாக்கியம் நின்னுலே கிடைததது உனது வன்மையாலேயே நாங்கள உணரும் உணர்ச்சிகளையும், எங்களுக்கு நேரிடும் செயல்களையும, எங்களின் பின் இருப்போர் அறியமுடியும்' என்ற பொருளுடைய ஒரு கவி இருநதுவருகிறது.

முன்னே முடிவுகட்டியவாறு, நூல் நிலையம் உண்மைக்கு உறைவிடமான அரண்மனையாகும். இங்கு மனிதன் தன்னைத தானே சந்திக்கின்ருன். இங்குக கவிகளிடமிருநதும், கலைஞாகளிடமிருநதும பல்லாயிர ஆண்டுகளாக மக்கள் கூட்டம் கண்ட கனவையும், கொண்ட துயரையும், வாழ்ந்த வாழக்கையையும், அதன் வெற்றி தோல்விகளையும் தெரிந்துகொள்கின்ருன். கீர்த்திக்கு முன்னதாக ஒருவன் வாழ்க்கையில் அடையவேண்

டிய கவலைகளையும், வாழ்க்கைப்போரில் மனிதன் எவ்வளவு துணிவுடன இருககவேண்டுமென்பதையும் அறிகின்றான். இன்னும் ஏனைய நாட்டினர், அவரது நாகரிகம், கலை, சமயம் யாவையும் அவன் அறிவதால் அவனுடைய மனம மிக விரிவடைகின்றது அவனுக்கு ஆவல் அதிகரிக்க, அதிகரிக்க, நூலின்மேல் பெரியதோர் வேட்கை உண்டாகின்றது 'சேர் ஆர்தர் கேனன் டோயல்' அறிஞர் தமது 'மாயக்கதவு வழியே' என்ற நூலில், "உனது புததகநிலையம் எவ்வளவு சிறியதாயிருப்பினும சரியே, அதைபபற்றிக் கவலை வேண்டாம். அறைக்குள் நுழைந்து, கதவைத் தாழிட்டுக் கொள். கதவை அடைககும்போதே உலகக் கவலைகளையெல்லாம் வெளியே பறக்க விட்டுவிடு மாண்டு சென்ற அறிஞரது இனிய கூட்டத்துள செல், கவலை, துன்பம், துயரம் நுழையாத இன்ப உலகிலே நீ இருபபதாகக் காண்பாய். வெளியில் இதுவரை உன்னுடன் இருந்த கீழ்மககள் மறைந்து விடுவா. அமைதியும் அறிவும் குடிகொண்ட மூதறிஞர், உனக்காக அஙகுக் காததுக்கொண்டிருபபர். அங்கு அடுக்கி இருக்கும் அவருடைய நூல்களில் உன் பாாவையைச் செலுத்து நீ விரும்பும மனிதனைத் தெரிநதெடு அம் மனிதனுடைய நூலைக கையிலெடுத்ததும், அது உன்னைக் கனவுலகிற்குக கொண்டுபோய் விடும்" என்று எழுதியுள்ளாா.

ஆகவே, புததகஙகளைப் படிப்பதால் நாம் விருமபிய அறிஞருடன், புதிய புதிய உலகங்களுககுப போகலாம இது தான் நூல்நிலையம் நமக்களிக்கும் பேறு.

## தமிழ்மொழி

பழஙகால உயர்தனிச செம்மொழிகளில் ஒனறாக இலகுவது நம் **செந்தமிழ் மொழி.** இதனிடம பல்வகை அரிய சீரிய கூரிய நூல்கள் உளளன. இதன மெல்லிய இனிய கவாசசி மிக்க அமைப்பு முறையை மேலைநாட்டு அறிஞர்கள் பலருஙகூட வியந்து பாராட்டியுள்ளனா. அதற்குக காரணம, உயிரப்புச செட்டு, எளிதில பலுககும ஒலியமைப்பு; ஒலிகள வன்மை மெனமை இடைமையென மூப பகுப்பாக அமைந்த நெறிப்பட்ட இயற்கை, என்றுங் குனறா இளமை மாணபு முதலியன. இததகைச சிறப்புமிகக நம் தமிழ்மொழியை நன்கு பயின்று உலக முழுதும் பரப்புதல் தலையாய கடனும தொண்டுமாகும்.

—செல்லூர்க்கிழார்.

# உவமைச்சிறப்பு

[வித்துவான், திரு கோ. பாலசுந்தரநாயகர்]

மக்கள் பேசும்பொழுதும், செய்யுள் இயற்றும் பொழுதும் தம் கருத்துக்களைப் புலப்படுத்தற்குக் கொள்ளும் முறைகள் பலதிறப்படும். அவற்றுள் குறிப்பிற்பொருளுணர்த்துவனவும், வெளிப்படையாகப் பொருளுணர்த்துவனவும் அடங்கும். எச்சத்தானும், முன்னத்தானும், அடைமொழிகளானும், பிற வற்றானும் பொருளுணர்த்துவன குறிப்பின் பாற்படும். இவை, நுண்ணறிவுடையோர்க்கே யன்றிப் பிறர்க்கு எளிதின் விளங்கா. வெளிப்படையாவது யாவர்க்கும் எளிதில் விளங்குவதாகும்.

இவையேயன்றி மெய்ப்பாடும், உவமையும், உலக வழக்கினும் செய்யுள் வழக்கினும் பொருளினையுணர்த்தும் சிறப்புடையவை. மெய்ப்பாடாவது, சுவை வேறுபாட்டினால் மெய்க்கண்பட்டு வெளிப்படத் தோன்றும் உள்ள நெகிழ்ச்சி. உவமையாவது, ஒரு பொருளோடு முன்னரே நன்கறியப்பட்ட சிறந்த பொருளைச் சிறப்பு, நலன், காதல், வலி ஆகிய நான்கினையும் அடிப்படையாகக் கொண்டு உவமிப்பது.

இவ்வுவமையும் மெய்ப்பாடும் பொருளினை அறிதற்குத் துணை செய்கின்றன. இதனானன்றே, ஆசிரியர் தொல்காப்பியர் பொருளிலக்கணத்தில், பொருளியலின்பின், மெய்ப்பாடு, உவமை ஆகிய இரண்டியலையும் அமைத்து இலக்கணம் செய்தது. ஊஉ மெனக் பேராசிரியர், "மற்றிது (உவமை) மேல் எவ்வோத்தினோடு இயைபுடைத்தோ வெனின்,—மேற்பொருள் புலப்பாடு கூறிய மெய்ப்பாட்டியலோடு இயைபுடைத்து என்னை? உவமத்தானும் பொருள்புலப்பாடு கூறுகின்றாகலின" என்று கூறினர். (தொல்—உவம. சூ க)

ஆதலின், கருதிய பொருளினை நன்குபுலப்படுத்தற்கு உவமை ஆளப்படுகின்றதே யன்றி அழகுபயத்தற்குமட்டும் ஆளப்படுவதில்லை என்பது போதரும்.

"உவமப் பொருளின் உற்ற துணரும்
தெளிமருங் குளவே திறத்திய லான." (தொல். உவம உ0)

என்ற நூற்பா காண்க

சிலர், இவ்வுவமை, உபமா என்னும் வடசொல்லின் திரிபெனவும், வடமொழியினின்றும் தமிழிற்கு வந்ததெனவும், தமக்கு வேண்டியவாறு உணராது கூறுவர். அவர், நீரம்

என்பது நீர் என்றும், மீனம என்பது மீன் என்றும, வானம் என்பது வண்ணம் என்றும், லோகம் என்பது உலகம் என்றும் தமிழில வழஙகுகினறன வென்றும், இதனால் தமிழ்ச்சொற்கள் வடமொழியினின்றும் வந்தவை என்றும, தமிழாககுத தனி மொழியும், மரபும, நாகரிகமும் வடமொழியினின்றே வந்தன வென்றும் கூறுவர்.

அவா கூறுவது எததுணையும பொருந்துவதனறு. ஒரு சொல் இரண்டு முதலிய மொழிகளில வழஙகக் காண்கின்றோம. அவற்றுள கீ (நெய்) என்னும் சொல், உருது மொழியிலும், ஆங்கிலமொழியிலும பயின்று வருகின்றது அதனால், உருது மொழியினின்றும் ஆங்கில மொழி தோனறிற்றென்றல் பொருந்துமா? அஃதேபோல், வடமொழியிலும் தமிழிலும வழங்கும் ஒரு சொல்லைக்கொண்டு வடமொழியினின்று தான் அம்மொழி வந்ததென்பதும் ஒல்லாது

தமிழ்மொழி தோன்றிய காலத்து, அதற்குப பல சொற்கள அமைககபபட்டன அது, தனிததியங்கும செம்மொழி. இது குறிததே மேனாட்டு மொழிநூலவல்லுநரான அறிஞர்கள், விரிவான நூலகள பல எழுதியுள்ளனா. அது கொண்டு தமிழமொழியின சிறப்பினை யறியலாம அன்றியும, தமிழ் மொழிககும் தமிழகத்திற்கும் ஏறப இலக்கணம எழுதிய தொல்காப்பியர், மீன் என்னும் சொல்லுக்குப் புணாசசி விதியொன்று கூறியுள்ளார் அது வட சொல்லின் திரிபாயிற் விதிகூறுவாரல்லர் வண்ணம் என்பது தமிழ்மொழி வர்னம என்பதன சிதைவன்று என்று பேராசிரியர் கூறுவர். உலகு என்பதும் தமிழ்மொழியே உவமை யென்னும் தமிழ்மொழிக்கு உரை வகுத்தும், அதனை உவமஇயல என இயற்படுத்தும, வடசொல்லாயின் தொலகாபபியர் விதிகூறார். ஆதலின், உவமையென்பது தமிழே

தவிர, உவமை, உலக வழக்கிலும் வழங்கப்படுகிறது. அங்ஙனம் வழங்குங்காலும், சுருங்கிய சொற்களால் குறிதத பொருளை அறிவிக்கின்றனர். ஒருவன் மற்றொருவனை இழித்துரைக்க நோககவிடத்து, "இவன் ஒருநாய் போன்றவன்" என்கின்றான். இதில், சொற்கள் சுருங்கியுள்ளன. பொருளோவெனின், நாய் இழிந்த பொருள்களை விரும்புதலும், கண்ட இடமெல்லாம் ஓடிச் செல்லுதலும், வரன்முறையின்றி யிருத்தலும், பிற நாய்களைக் கண்டால் சினந்து குரைத்தலும போன்ற இழிகுணமுடையவன் என்பதாகும் இப்பொருளைக், கேட்பானும் எளிதில் அறிந்து கொள்ளுவான். உயர்த்திக் கூறுதல் முதலிய பல விடஙகளி

னும் இவவுவமை ஆளப்படுகின்றதைக காண்கின்றோம. இங்ஙனம் கூறுதலால, ஒருவகை யழகும தோனறுகினறது.

இவ்வுவமை, முன்னா நன்கு தெரிந்த பொருளாய் இருத்தல் வேண்டும் அங்ஙனமிருநதால்தான் எளிய முறையில் பொருள் இனிது விளங்கும. இதுபோழ்து, மாணவாக்குப பாடம கற்பிக்குங்கால, அறிநததுகொண்டு அறியாதது உணர்த்தல்வேண்டுமென்று கூறும கொளகை போன்றதே இவ்வுவமையின் அமைப்புமாகும். இதனுல், உவமை, உலக வழக்கில் பொருளுணர்த்தும் அழகும, அதனைத் தமிழர் கையாளும் திறனும நன்கு விளங்கும.

இனி, செய்யுளில உவமை வருமாறு நோக்குதும. செய்யுள இயற்றும் புலவன், தான் கூறககருதிய பொருளினை, வரையறையுள்ள செய்யுளடிகளில் அமைக்கற்பாலன். சொற்பெருக்கம் இன்றித் தான் கருதிய விரிநத பொருளினை உவமை முகத்தால் விளக்குதலே அவனுககு ஏற்புடைததாகின்றது. அதனுல் செய்யுளில உவமையை அமைககின்றுன். இளமபூரணர், "இதனுற் (உவமை) பயன் என்னை மதிப்பதோ வெனின், புலனுகாதன புலனுதலும, அலங்காரமாகிக கேட்டோாக் கின்பம் பயத்தலும" என்று கூறினர். (தொல். உவம. சூ - க) இதனுல், உவமை, புலனல்லாதவற்றை இன்பம் பயக்கும முறையில் அறிவிக்கும் என்று கொள்ளுதல் வேண்டுமேயன்றி, பொருள் அறிவித்தலும் அலங்காரமாய் இருத்தலும் என இரண்டு பயன் தனித்தனி கொளளுதல் பொருத்தமின்று

"தாமரைபோல் வாண்முகத்துத் தையலீர" என்றவழி அலங்காரமாய் இன்பம் பயக்கும் என்றுகொள்ளுதல் தக்கதன்று. இதிலும, பொருள் புலப்பாடு அமைந்துள்ளது. அது யாதோவெனின், முகம், தாமரைபோல் மலர்ச்சியும் அழகும் பெற்றுள்ளது என்பதே இவ்வாறே உவமை யாண்டுவரினும் ஏதேனும் ஒரு சிறந்த பொருளைப் புலப்படுத்துமேயன்றி, வாளா அணியின்பம் என்பதொன்றைமட்டும் புலப்படுத்த வராது என்பதை, உவமையமைந்த ஒவ்வொரு செய்யுளினும் காணலாம். வள்ளுவனர், தாம் எழுதிய திருக்குறள், இரண்டடி வெண்பாவினுல் யாக்கப்படுதல்பற்றிப் பெரும்பாலும் தமது விரிந்த கருத்துக்களை உவமை வழியாகவே அமைததுள்ளனர்.

"களித்தானைக் காரணம் காட்டுதல் கீழ்நீர்க்

௬௨௯)

"தலையின் இழிந்த மயிரனையர் மாந்தர்
இழிந்தக கடை." (திருககுறள்: ௯௬௪)

என்பன போன்ற பல பாக்கள், உவமையினுற் பெரும்பொருள் பயந்து, சுருங்கி யமைந்திருத்தலைக் காணக. இங்ஙனமே, பல குறட்பாக்களைக் காணலாம்.

மற்றும், இவ்வுவமை உயர்ந்ததாய் இருத்தல்வேண்டும்.

"உயர்ந்ததன் மேற்றே உள்ளுங் காலை" (தொல், உவம ௩)

என்பது அதற்குவிதி. தவிர, உவமையினைக் கண்டவாறெல்லாம அமைக்காதிருத்தல் வேண்டுமென்று, அதற்குரிய சில மரபுகளைத் தொல்காப்பியனுர் விதித்தனர் அம்மரபுகளை அமைக்குமபோதும வேறுவேறு சிறந்த பொருள்கள் தோன்றுகின்றன உவமையைப் பொருளாக்கிக் கூறுதல், பொருளுக்கு, இது உவமையாகாதென்பதும, பல பொருள்கள சேர்ந்தால் இதற்கு உவமையாம் என்பதும் அம்மரபின்பாற்படும

இவ்வுவமையினின்றும, வேறு பல அணிகள தோன்றுகின்றனவென்றும், வடமொழி அணியிலக்கணத்திற் கூறப்படும அணிகள் அனைத்தும் உவமையை அடிப்படையாகக்கொண்டு வந்தவை யென்றும வடநூலுணர்ந்தார கூறுப தண்டியலங்காரம் முதலிய அணியிலக்கண நூல்கள தமிழில வருவதற்கு முன், உவமை யொன்றுமே தமிழர்க்குத் தலைசிறந்த பொருளாகத் தெரிந்து, சில உட்பிரிவுகளோடு விளங்கிற்று தொல்காப்பிய உரை ஆசிரியர்கள, வடமொழி யிலக்கணம் கற்றதனுல், சில உவமைகளுக்கு வடமொழிப்பெயர் கூறியிருக்கின்றனர

தொல்காப்பிய உவமவியலைக்கற்றுப புலவர்கள், பாக்கள் இயற்றிய அக்காலத்தில, உயர்வு நவிற்சி முதலிய அணிகள செய்யுளில அளவின்றி விரவாதிருந்தன அதனுல், அப்புலவர்கள், "பொய் பிறந்தது புலவர் வாயில" எனறு அறியாதார சிலர் இப்பொழுது கூறும் இழிசொற்கு இலக்காகாது போயினர பின்னர், தமிழில் தனியாக அணியிலக்கணம ஏற்பட்டது. அதனைக்கற்ற புலவர்கள, அவ்வணிகளைத் தழுவித் தமது நூலில், "**வாளை, குளத்தினின்றும துள்ளிக் கமுகின் கழுத்தை யொடித்து, திங்களைப் பிளந்து, அமுததாரையை யொழுக்கி, விண்ணிற படர்ந்து, கங்கையை உழக்கி, மீண்டும் மண்ணுலகுக்கு வந்தது**" என்பது போன்ற பாக்களை இயற்றி அவ்விழிசொற்கு இலக்காயினர்

அன்றியும், அவர்கள எழுதியுள்ள நூல்கள அனைத்தும் பொய்யெனப்பட்டு, உண்மைகளும இன்மைகளாகின்றன ஆதலின, இனியேனும தமிழ்ப்புலவர்கள், உவமையையும் அதன் மரபுகளையும் அறிந்து, செய்யுளியற்றிப பிற்காலத்துப புலவர் போன்று இழிக்கப்படாது, உண்மையை யுணர்த்துவார்களாக.

# தமிழர் அடிப்படை அறங்கள்

[வேலூர்க்கிழார் திரு செ ரெ. இராமசாமிபிள்ளை]

அறமாவது: பெரியோர்களால சிறநதவெதன வகுக்கப் பட்ட வழியில் நடத்தல் அது காலததானும தேசத்தானும் வேறு வேறு தன்மையின் மாறுபடும் எலலா நாட்டுககும் எக்காலததுமம ஒததன பலவுண்டு அவை. பிறர்க்கு நன்மை செய்தல், செய்நநன்றியறிதல், வேறொருவன் மனைவியை விரும் பாமை, உண்மை பேசுதல, ஈகை முதலியனவாக வகுக்கப்பட் டுளளன அவைகளின் விரிவு திருக்குறள், நாலடியார், நான் மணிக்கடிகை, திரிகடுகம, பழமொழிநானூறு முதலிய பதினெண்கிழ்க்கணக்கு நூல்களிலுமம, பிற எல்லாவகை நூல் களிலும் காணலாம்

## (க) செயநநன்றியறிதல்

அவவாறு வகுக்கபபட்ட அறஙகளுள, செயநநன்றியறித லும ஒன்று செய்நநன்றியாவது ஒருவனுக்கு ஒருகாலததில் இன்றியமையாத ஒன்றையாயினும் ஒருவன் உயிர்க்குக் கேடு நேர்ந்த காலத்தாயினும உதவி செய்து, அத்துன்பத்தை நீக்குதல். ஆனால், அவவுதவி, அளவில் சிறிதாகத் தோன்றலாம. அதன் பயன் அளவைக்கருதினால், மிகமிகப் பெரிதாக இருக்குமம. இந்த உண்மையை நாம் நாளதோறும் கண்டுமகேட்டும் அறிநது தெளிந்து வருகின்றோம்.

ஏழை ஒருவன் பட்டினிகிடநது வருந்துகின்றான். அவன் மனைவி மக்களும் அவனுடன் பசியால வாடி வருந்துகினறனர். அதனை ஓர இரக்கமுள்ள செல்வன் காண்கின்றான். கண்டதும் அவன் மனம் தாழவில்லை. அவ்வேழைக்கு ஒரு திஙகள் அளவுக்கு உணவுப்பொருள கொடுதது அவாகள் எல்லோரின் உயிரையுமம காபபாற்றுகின்றான் அதனால அககுடுமபம் பிழைததெழ வாயபபு உண்டாகின்றது. இவ்வாறு தக்க காலத்தில் ஒன்றை உதவுதலே ‘அறம’ எனப்படுகின்றது அநத நலனை உணர்வதே செய்ந்நன்றியறிதல் ஆகுமம. ஆனால், இக்காலத்தில் ‘அவன் என்ன உதவி செய்து விட்டான்’ என்று உதவி செய்தவனோடு மாறுபட்டுரைக்கின்றனர். அஃது அறமும் ஆகாது செய்ந்நன்றி மறந்ததுமாகும் இதனைத் திருவள்ளுவர் தம் அறநூலில்,

'எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு (திருக் ௧௧0)

என, அறிவுறுத்துவா ராயினர்

இதனையே பழங்காலத்துப் புலவர் பெருமான் ஆலத்தூர் கிழார் என்பவர், 'செய்நன்றி கொல்லல்' என்று நன்றி மறத்தலைக் குறிப்பிடுகின்றார். அவர் அது குறித்துக்கூறும் கருத்துரை மிகமிகச் சிறந்ததாய், மக்கள் நலனுக்கு ஏற்றதாய், தமிழ்மக்கள மனப்பண்பை விளக்குவதாய் அமைந்துள்ளது. ஆகலான், அச் செய்யுளை ஈண்டெடுத்துக் குறித்துத்தருகின்றாம்.

'ஆன்முலை அறுத்த அறனில் லோர்க்கும
மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும
பார்ப்பார்த் தப்பிய கொடுமை யோர்க்கும
வழுவாய் மருங்கின் கழுவாயு முளவே
நிலம்புடை பெயர்வ தாயினும் ஒருவன்
செய்தி கொன்றோர்க்கு உய்தி இல்லென
அறம் பாடிற்றே. .....' (புறம் ௩௪)

இதன் பொருளாவது. 'பசுவின் மடிவையறுத்த அறங்கெடுத்தோர்க்கும், மாட்சிமைப்பட்ட அணியணிந்த பெண்களின் கருவைச் சிதைத்தோர்க்கும், பெரியோர்க்குப் பிழை செய்த கொடியோர்கட்கும் கெடுதல் வந்தகாலத்து அவைகட்கெல்லாம் கழுவாய் (பிராயச்சித்தம்) உண்டு. உலகமே அழிந்துபோவதாக இருந்த போதினுங்கூட, ஒருவன் செய்த நன்றியை மறந்தோர்க்கு அக்குற்றந் தீர்வதற்குக் கழுவாயே இல்லையென அறநூல்கள் முழங்குகின்றன' என்பதாம்.

பசுமாட்டின் மடி அறுத்தல், பெண்கள் கருவை அழித்தல், பெரியோர்க்குப் பிழை செய்தல் முதலிய கொடுஞ் செயல்களைச் செய்த அறக்கொடியோர்க்கும் மன்னிப்பு (கழுவாய்) உண்டு ஆனால், ஒருவன் செய்த நன்றியை மறந்தவர்க்கு மன்னிப்பே இல்லையென, இரண்டாயிரம் மூவாயிரம் ஆட்டுகட்கு முன்பே கண்டு தெளிந்து, அதை உலக மக்கட்கு உணர்த்திய பெருமை, தமிழ்ப் பெருமக்கட்கு உரியதாக இருக்குமானால், தமிழர் அறப் பண்பாடு எவ்வளவு உயர்ந்ததாய், சிறந்ததாய், வியக்கத் தக்கதாய் இருக்கின்றது பார்மின்கள்

புலவர் திருமகனார் கம்பநாடர், தம் தமிழ்ப்பெருங்காப்பியத்தில் இதற்கு விளக்கவுரை போன்று இதனைப் பிழிவாக உரைத்து இதனைத் தெருட்டுவாராயினர். அச்சாரம் :

'சிதைவகல் காதல தாயைத தந்தையைக குருவைத தெய்வ
பதவி அந்தணரை ஆவைப் பாலரைப் பாவை மாரை
வதைபுரி குநாகரும் உணடாம் மாற்றலாம ஆற்றல் மாயா
உதவிகொன் றாக்கென் றேனும் உய்யலாம உறுதி உணடோ'

என வருவதாம். இன்னும் பிறநூல்களினும் வற்புறுத்து இவ் வறத்தைக் குறிக்கோளாகக் கொண்டு நிறுவுதல பழநதமிழர் தம அறமுறைக்கு எடுத்துககாட்டுக்களாக விளங்குவன ஆகும்.

'யாதும் ஊரே யாவரும கேளிர்
தீதும் நன்றும் பிறாதர வாரா'

என்னும் அறவுரைகளை எற்றைக்கு யார் கிளநதனர்? தமிழா! தமிழர்! அன்றோ?

தமிழன் அற்றைக்குக் கண்ட கனவுதான் இற்றைக்குப பலப்பல இடஙகளில் பன்மொழிகளில பேசபபடுகின்றன; எழுதப்படுகின்றன, போரினும் அறந்திறம்பாப் புதுமுறை கண்டவர் தமிழா; இவ்வடிபபடையிலேயே இற்றைநாள நாடு கள கிளர்நதெழுகின்றன.

செய்ந்நன்றியைத திட்டிக்காட்டிய எம் தீநதமிழர் நெஞ்சப் பாஙகுதான் என்னே! என்னே! சொல்லிய நாவின் செம்மை என்னே! என்னே! எழுதிய கைவண்ணந்தான் என்னே! என்னே! என இறும்பூதெயதுவ தன்றி அவாதம கடப்பாட் டிற்கு யாம் செய்யும் கைமமாறென்னே!

## (உ) நிலையாமை

உலகததில் காணபபடும உயிருள பொருளும் உயிரில் பொருளும ஒருகால் தோன்றியனவே. அவை தோன்றியபின் வளாச்சியடைகினறன, பயன் கொடுக்கின்றன, பின் அழி கின்றன. இந்நிகழச்சி, இயற்கையாகவே நிகழநது வருகினறது. இத தன்மையை நாம நாள்தோறும் கண்டு வருகின்றோம்; கேட்டும வருகினறோம, ஆனல் அதை நாம கருதி உணாவ திலலை உலகம தோன்றிய நாள்தொடடு, இதுகாறும் தோனறி யழிநத உயிர்ப்பொருள்களையும் பிறவற்றையும கணக் கிடப்புகின், அவை எண்ணி லடங்கா

ஒரு கொடியில்—செடியில்—மலரும்பூ, மாலையில் போதாக இருநது, இரவில் மலர்கின்றது; காலையில் நன்கு விரிநது மணங் கமழகின்றது, மாலையில் வாடி மணமின்றி உதிர்நது விடு கின்றது அதன் செவ்வியெஙகே? நிலையாமையையே யனறோ அது காட்டுகின்றது மக்கள் விலங்கு பறவை முதலியன

எல்லாமும், குழந்தையாய், இளந்தையாய் இருந்து, பின் முதிர்ச்சி யடைகின்றன. இவை யெலலாம் நோக்கும்போது, அவவப் பருவங்கள் நிலையாமையையே தெரிக்கின்றதன்றோ?

இன்று ஒருவன் அரசன்; நாளை அவனே ஆண்டி; இன்று ஒருவன் இரநதுண்போன, நாளை அவன் கொடுக்கக் குறையாத பெருஞ் செல்வன; இன்று ஒருவன் காளை, நாளை அவன் கிழவன்; நேற்று ஒருவன் இருந்தான், இன்று அவன் இறந்தான், இன்று இன்பம்; நாளை ததுன்பமெனை, வண்டியின் உருளை போல, ஆறிடு மேடும பளளமும்போல, ஒருநிலையினறி மாறி மாறி வருகின்ற காலநிலையைக் காண்கின்றோம ஆ! எததனை மாடமாளிகை நிறைந்த நகரங்கள், இனறு வெற்றிடமாக-பாழ்ப் பறநதலையாக—முள்ளும் கலலும் செறிநத கொடுஙகாடாக—பாம்புகள் வாழும புற்றிடமாக—நரிகள் திரியும் நலிவிடமாக இருக்கின்றன என்னே! நிலையாமையின் காட்சி.

அரசர்களென்றும புலவர்களென்றும வள்ளல்களெனறும் வீராகளென்றும தமரெனறும பிறரெனறும பிறந்தோா, இருந்தோர், இறந்தோராகவே தெரிகின்றது! ஆகவே, உலகம் நிலையறறது; இதை அறிஞா நன்குணர்நதனர் அவர்கள யாவரும் தழக்குப புகழ்நிறுவிப்பொன்ற உடல்பெறவேண்டுமென்று வற்புறுத்துவா ராயினா தாம ஆக்கிய நூல்கள்மூலம இதையே வற்புறுத்தித் தத்தம் கருததைவிளககிச் செலவாராயினர். அவ்வாறே பழங்காலப புலவராகிய ஐயாதிச் சிறுவெணடேரையார் என்பவர், இதனை வற்புறுத்தி அழகாக எடுத்து விளக்கியருள் வாராயினர் அதன் கருத்தும பொருளும் படிக்கப படிக்கத் தெவிட்டாத தீஞ்சுவைத்தாகலின், அச செய்யுளை இதன் கீழே

'இருஙகடல உடுததஇப் பெருங்கண மாநிலம
உடையிலை நடுவணது இடைபிறர்க் கின்றித்
தாமே ஆணட ஏமங காவலா
இடுதிரை மணலினும பலரே; சுடுபிணக
காடு பதியாகப் போகிய தததம
நாடு பிறர்க்கொழியச சென றுமாயந தனரே
அதனால், நீயுங் கேணமதி அததை வீயாது
உடம்பொடு நின்ற உயிரும இலலை.
மடஙகல் உண்மை மாயமோ அன்றே,
கள்ளி வேய்ந்த முள்ளியம் புறஙகாட்டு
வெள்ளில் போகிய வியலுள் ஆஙகண்
உப்பிலாஅ அவிப்புழுக்கல்

கைககொண்டு பிறக்கு நோக்காது
இழிபிறப்பினோன் ஈயப் பெற்று
நிலஙகல ளுக விலஙகுபலி மிசையும
இன்னு வைகல் வாரா முனனே
செயந்நீ முன்னிய வினையே.' (புறம ௩௬௩)

இதன் பொருளாவது . 'பெரிய கடல்சூழ்ந்த இநதப பெரிய நிலவுலகத்தை உடைமரததின் இலையளவு சிறிய இடமும பிறர் யாரும் ஆளாவாறு, தாமே ஆணடுவநத பாதுகாததலையுடைய மன்னர்கள, கடறகரைககண் ஒதுக்கபபடட மணலை யெண ணினும எண்ணிலடஙகா அததனை அளவினராவர். அவாகளும் இறநதுபோய்ச் சுடுகாடே தமககுரிய அரணமனையாகததங்கி அவரவர் நாடுகளைப் பிறா கொளளுமாறு அவா பெயரும் மறைநதுபோய்விட்டன. அதனல நீயுங் கேடபாயாக, அழி யாது உடமபோடு கூடிநின்ற உயிருமில்லை இறந்து மடிதல் உணமை, யாயமில்லை கள்ளிமூடிய புளமிக்க சுடுகாடடிடததது, வெற்றிடமிக்க விரிந்த இடததது, உபபிலாத அவிச சோற்றினைக் கையில் எடுததுகொண்டு வேறுபார்க்காது, இழிந்த பிறப்பின ஞற் கொடுக்கபபெற்று நிலமே உண்கலமாககொண்டு ஏறறு, பலிச்சோற்றை உண்கின்ற துனப நாள வாரா முன்பாக நீ நினைத்த நலலனவற்றைச் செய்வாயாக' எனபதாம்.

'தாமே யாண்ட ஏமங காவலா' என்பது, ஏகசககிரவர்ததி யாய்த தனக்கு ஒபபாரும், மிக்காரும் இன்றித தாமே தமக்கு உரிமையாககொண்ட பெருமிதமுடையராய் என அவாதம் ஆற்றலை விளக்கிநின்றது. அவரும ஒருகாலததில், வறுமைய ராவர் என்பதைக் குறிகக 'உபபிலாஅ அவிப்புழுக்கல....இன்னு வைகல் வாராமுன்னே' எனக் குறிக்கபபட்டது

## (௩) அரசர் முறைமை

அரசராவார் மககளைப் பாதுகாத்து அவர்களை நன்னெறிச் செலுததும வீரபபண்பினராவா அவ்வரசர் தம் குடிமக்களை அறமுறைதவறுது குற்றஙகண்டவிடத்து ஒறுத்தும், அவர்க்கு வேண்டும் நல்லன செய்துவரும அறமுறையராயிருததல் வேண் டும. அவர்கள நாட்டுமககள் நலனெறியிலேயே கண்ணுங் கருததும் உடையராய், அவர் உவபபன செய்வோராயிருநதால் நாடு செழித்து வளம பெருகும. அஃதில்லாதிருநதால உலகம் தலைதடுமாறி, அவரவா தாமதாம் கண்டதே காட்சி கொண் டதே கோலமாய், நினைத்தவாறு செய்ய, அதனல் அறம் திறமபி மறம வளர்ந்து அமைதி குன்றி, அச்சமும பகையும்

வளர்ந்து நாடு காடாய் மாய்ந்தொழியும். இவ்வுண்மையை உணர்ந்த நம் நாட்டுத் தமிழரசர்கள், பசுங்கன்றுக்காகத் தம் மகனைத் தேர்க்காலில்வைத்து ஏற்றிக் கொன்றும், கதவைத் தட்டிய குற்றத்துக்காகத் தம் கைகுறைத்துப் பொன் கை பூட்டியும் முறைசெய்தமை நன்கு தெளிவுறுகின்றது.

அந்த முறையில் இளந்திரையன் என்னும் பழங்காலப் புலவர் பெருமகனார், அரசன் நடக்கவேண்டிய நன்முறையை நன்கு விளக்கிக் காட்டுகின்றார். அச்செய்யுள் கற்பார்க்குக் கழிபேரின்பம் பயப்பதாய், நவில்தோறும் நவில்தோறும் நயமிக்கதாய் அமைந்துள்ளதாகலின், அதனை இதனடியிற் குறிக்கின்றாம்

'கால்பார் கோத்து ஞாலத் தியக்கும்
காவற் சாகா டுகைப்போ னாணின்
ஊறின் றாகி ஆறினிது படுமே
உய்த்தல் தேற்றா னாயின் வைகலும்
பகைக்கூழ் அள்ளற் பட்டு
மிகப்பல் தீநோய் தலைத்தலை தருமே' (புறம் ௧௮௫)

இதன் பொருளாவது : 'உருளையை அச்சில் கோத்து உலகத்தில் நடத்தும் உலகமுறையாகிய வண்டியைச் செலுத்துகின்ற அரசன் சிறப்புடையனானால், உலகம் இடையூறில்லாமல் நல்வழியில் நடக்கும், அதைச் செங்கோல் முறை மாறிச் செலுத்த வல்லனாயின் நாள்தோறும் பகைவரின் பகையாகிய குழம்பிய சேற்றில் அமிழ்ந்து, அளவிறந்த தீயவையாகிய கெடுதல் ஒவ்வோரிடங்களிலும் உண்டாகும்' என்பதாம்.

வண்டி அச்சாணியில்லாவிட்டால் குடங்கவிழ்ந்து வண்டியும் ஒடிந்து வண்டியிலிருப்போர்க்கும் கேடுசெய்தல்போல, அரசன் செங்கோல்முறை மாறினால் தானும் கெடுவதோடு உலகமும் கெடுமென்பதை விளக்க 'கால்பார் கோத்து ஞாலத்தியக்கும் காவற் சாகாடு' எனப்பட்டது

# பாராட்டுரை*

[திரு அ சீனிவாசராகவன், எம். ஏ]

அறிஞா பெருமக்களே! அன்புள்ள தாய்மார்களே!

இத்தமிழ்த் திருநாளில், சைவசித்தாந்தக் கழகத்தார் சார்பில் நடைபெறும் இவ் அரசியலறிவு மாநாட்டில் 'அரசியலறிவு' என்னும் அரியதொரு புதுநூல் அரங்கேற்றப் பெற்றது. அரஙகேற்றம் என்பதென்ன? அறிஞாகள் கூடிய பேரவையில் நூலை வாசித்துக்காட்டி இது சிறநத நூல்தான் என்று எல்லோராலும ஒப்புக்கொளளப் பெறுவதாகும நூல் தநத பேராசிரியர்களை ஐவரும் பேசிய பேச்சுகளிலிருந்து நூலைபபறறி நன்கு அறிந்திருபபீாகளை அவர்கள் பேச்சுகளைக கேட்கும்போது உஙகள உள்ளமெலலாம என்ன நிலையில் இருநதன என்பதைகக்கண்டேன இப்போது உங்கள பிரதிநிதியாக நின்று பேசுகிறேன

2500 ஆண்டுகளாகப பரவிய கருததுலகை, ஐந்துநாழிகையளவில இவ் அறிஞாகள நமககு ஆராயநது காட்டினார்கள. இவாகளுடைய பேசசுகள திருவளளுவர் தோன்றிய ஆசியாக் கணடததையும், பிற அரசியல் ஞானிகள நால்வர் தோன்றிய ஐரோப்பாக் கண்டத்தையும ஒருஙகு இணைத்தன இருபெருங் கண்டங்களை இணைதது மிகபபரநத அரசியல கருததுலகை நாழிகையளவுக்குள் தெளிவாக்க முயன்ற இபபேராசிரியர்கள், தஙகள அருஞ்செயலில வெறறியும் கண்டாாகள இவர்கள் எடுத்துக்கொணட அரசியல ஞானிகளோ காலமொன்றையே வென்று நின்றாாகள இபபேச்சாளர்களோ காலததிலும செயலிலும் வெற்றி கண்டார்கள

மாாக்சு, இஙகிலாந்தில பிறந்து, சொமனியில வாழ்ந்து அரசியலைக் கண்டான் பிளேட்டோ, ஜனநாயகததை ஒப்புக்கொண்ட கிரேககர்களிடையே வாழநது அரசியலைக் கண்டான் ஜனநாயகம் பேசிப் பேசிப் பதவிகளைத தகுதியற்றவர்கள பெறுகிறார்கள். அவர்களால நாட்டில் நல்லாடசி நிலவாது என்று பேசினான். அவன் எழுதிய குடியரசு என்ற நூலில் நம குடியரசை அவன் ஒப்புக்கொளளவில்லை அரசு என்பது அறிஞாகள் கையிலிருக்க வேண்டும என்று வற்புறுத்தினான அரசியல அறிவு நிறைந்த பண்பட்ட அறிஞா கூட்டத்திடத்தே

* நெல்லை அருணகிரி இசைக கழகத தமிழ்த்திருநாள 13—2—1953 அரசியலறிவு மாநாட்டில் தூத்துக்குடி. வ உ. சி. கல்லூரி முதல்வா, பேராசிரியா திரு. அ. சீனிவாசராகவன் அவாகள், எம. ஏ. வழஙகியது.

ஆட்சிபபீடம் ஒப்படைககப் பெறவேண்டும் என்று வறபுறுத்

ஏதேன்சு நகர ஜனநாயகத்தில் கண்ட குறைவால ரூசோ, பிரெஞ்சு நாட்டில் அரசியலைப் பற்றிப்பேசினன். ரூசோவின அரசியலறிவில் தெளிவில்லை என்று திரு தியாகராச ஐயா அவர்கள சொனனாகள் உரிமை பெறற மனிதன கட்டுப் பாடற்றவனயிருநதான இது அவன் கண்ட பிரெஞ்சு தேசத்து அரசியல் அரசு, மககள நலததைமட்டும கவனிததிருககும மககள் எல்லா உரிமையோடும வாழவேண்டும் என்றன இங்ஙனம் அவன் சொல்வதறகுக காரணம அநத ரூசோ விலங காக வாழந்தான், பகுததறிவின்றி வாழ்ந்தான்.

பிளேட்டோ துறவியாக வாழ்ந்தவன். அன்றடம் பாராளு மன்றததின்முன் பல்வேறு சமயஙகளில் கண்ட அரசியல் உண்மைகளை ஆராய்நது சிறநதனவற்றைப பினபறறினன். அவன் காலததில அமெரிக்கா குடியேற்ற நாடு ஆனல் ஆதிக்கம அரசு செலுததியது அங்கே பெரும்பாலோா ஆஙகி லேயர். மற்றவர் ஐரோபபியா இவர்கட்குள் பகைமை வளாந்து கொண்டிருந்தது. இச்சமயததில பாக, "அமெரிக்கர் சொலவது நோமையானது; அவாகள கேடபதை வழஙக வேணடும்," எனறன. பிரெஞ்சுமககள சுதநதிரபபுரட்சி செய்த போது, இவாகள செயதது தவறு எனறு கணடிததுப பேசிய பாக, அமெரிககா புரட்சி செய்த காலதது, அவாகள கேட்கும சுதநதிரததை வழஙகவேணடும எனறு வற்புறுத தினை இதிலிருநது பர்க் ஒரு கொளகையிலலாதவன எனறு சொல்லத்தோன்றும ஆனல பாக கொளகையற்றவனல்லன். நடைமுறை செயல்முறைகளை ஆராயநது அஙஙனம கூறியவன

"எல்லோருக்கும ஒறறைககால் இருந்தால் சமநிலை சரி யாக இருக்கும," என்று ஆங்கில ஆசிரியர் ஜி கே. ஜெசட்டன் கூறினர். அதறகாக எல்லா மனிதாகளின் காலகளையும் வெட் டிச் சோகக முயன்றல அதைவிடப பேதைமை வேறிருக்க முடியாது இதைத்தான் பாக சொன்னனை ஒவவொரு நாட்டு அரசியல அமைப்புகளும அவவந நாட்டுமக்களின் உயிாநாடி யில ஒரு பகுதி. அவ அமைபபை உடனே சீர்திருததி விட வேண்டும் என்று முயனறல் அவன அறிவிலலாதவன்.

ஏகல என்ற ஜொமன் தததுவஞானி, "கருதது என் பதுதான் சததியம்" என்றன் காரல் மாாக்சு, பொருளாதார சக்திகளின் மோதல்தான் அரசியலின் அடிப்படைத தத்துவம் என்றன் பொருளுககு அப்பால் பொருளே இல்லை என்றன்.

மேல் நாடுகளில் இயந்திரங்கள் தோன்றித் தொழிற்புரட்சி ஏற்பட்டது. தொழிலாளிகள் துன்புறச் செல்வர்கள் பெரு நிதியைத் திரட்டினார்கள் இதைக் கண்ட மார்க்சு, பொருளாதார மோதுதலை உண்டுபண்ணித தான் வாழ்விலும் அரசியலிலும முன்னேற்றம் காணவேண்டும் என்றான்

இந்த மார்க்சின் கொள்கையை ஏஞ்சல, ரேகசி, ஸ்டாலின முதலியோர் நடைமுறையில் கொண்டுவநதனர். அவர்களில் இன்று ஸ்டாலின் மட்டுமே இருக்கிறான். இங்ஙனம் எதத னையோ விதமான சக்திகள் நாட்டில் உள்ளன ஆனால நம் நாட்டு அரசியல் ஞானியாகிய திருவள்ளுவா, "நாளைக்கு என்ன செயய முடியும?" என்று கேட்டார

நெருநல் உளனொருவன இன்று
பெருமை யுடைத்திவ் வுலகு." (திருக ௩௩௬,

என்றார வள்ளுவர் எதிர்காலததைபபறறி எதுவுமே சொல்ல முடியாது என்பது வள்ளுவரின் அரசியல்கொள்கை "அறிதோறும் அறியாமை கண்டற்றால்" என்பா. இறநதகாலத்தைப் பறறியும்கூட அறியமுடியாது என்பதுதான் அவா கருத்து.

தமிழ்நாட்டு அரசியல் நிலைமையைத திருவள்ளுவர் நேரில் கணடார் முடியாட்சி முறையே வள்ளுவர் காலததில் தமிழகததில இருநதது எநத இசைக்கருவியும இசையின் பத்தை வழங்குவதில் தபபுவதில்லை அதுபோல அறததின் அடிபபடையில அமைககபபெற்ற ஆட்சி, முடியாட்சியாக இருநதாலென்ன? குடியாட்சியாக இருநதாலென்ன? அள பாட்சியாகக் காட்சி யளிககவேண்டும் என்று அவர் கருதினா. கணட அரசியல் உண்மைகளைத் தநதார்.

"சென்றிடுவீா எட்டுத திககும—கலைசசெலவங்கள் யாவும
கொணர்ந்திஙகு சோபபீா !"

என்றா பாரதியாா மேனாட்டு அறிவு நமககுத் தெரிந்தால்தான், நம நாட்டு அறிவின் சிறப்புப புலனாகும் சீரணசகதி யில்லாதவனுக்குச் சீரணத்திற்கு மருநது கொடுத்தது போலாகும ஆதலின் மேலைநாட்டு அரசியல்உண்மைகளை விளககும் இந்த "அரசியலறிவு" நூல்போன்ற ஆயிர மாயிரம் நூல்கள நம நாட்டுக்குத் தேவை. அவற்றை நமமவா வாசிகக வேணடுவதும மிக மிக இன்றியமையாததாகும் என்றும் கூறி என்னுடைய பாராட்டுரையை முடிக்கிறேன். நனறி. வணக்கம்.

# இரங்கற்பா*

[திரு இராம. சிவநேசன்]

(நேரிசை ஆசிரியப்பா)

ஞாலக் கதிர்மணி; நற்றமிழ் மாமணி;
சீலத் திருச்சியிற் செழிப்புறும் லால்குடிக்
கோல மாநகரத் தோன்றிய குணமணி;
ஆலமஉண் டோனை அனைய அருள்மணி,
பாவலர் நாவலர் பண்புடன் போற்றுந்
தேவ தாரெனச் சிறக்கும் செம்மணி;
குடிப்பிறப் பொழுக்கங் குணம்சால் வாய்மை
நடுச்சொல் இவையணி நலந்திகழ் நன்மணி,
ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்ல
தூதிய மில்லை உயிர்க்கெனும் மொழியை
ஓதியும் உணராப் பேதை மாக்கட்
கேதிலன் பாலெடுத் தியம்பிய தனிமணி,
ஆன பரம சிவனெனும் அளியோன்!
ஞான வித்தகன் நல்லடி எய்தும்
அந்தமில் பேற்றை அடைந்தனன் மாதோ!
நந்தன மார்கழி நாளிருபத் தேழினில்
அன்னோன் பிரிவை அறிந்த ஆழுதல்
கன்றும் புள்ளும் காவும் பூவெலாம்
என்றும் அழுது ஏங்குறும் என்னின்
மாந்தர் அடையும் வருத்தமென் னுரைப்பாம்!
புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின்
வலவன் ஏவா வானவூர்தி எய்துப,
என்னுஞ் சொற்கிலக் கான எம்மிறை
மன்னிய புகழுடல் வளர்ந்து
நின்று நிலைஇயர் உலகிடை நிலைத்தே.

---

* லால்குடி. L N. பரமசிவம் பிள்ளை அவர்களின் பிரிவு குறித்து 10—1—53-ல் பாடிய இரங்கற்பா.

# சிற்றுயிர்க்குற்றதுணை

[வித்துவான் திரு ந. சண்முகசுந்தரன், திருவதிகை.]

இவ்வுலகத்து வாழ்க்கையைத் தனித்து இன்மையாக நடத்தமுடியுமா? பலரின் துணைக்கொண்டே நடத்தமுடியும் அதுபோல உயிர்கள் தனித்து நில்லாமல பல துணைகளோடு இயங்குகின்றன அத்துணைகளில் உயிரை நன்னெறியில் செலுத்துவதும், சிறந்த துணையாக விளங்குவதும், அறிவை விளங்கச் செய்வதும கல்வி ஒன்றேயாகும்

கல்வியானது நூற்கல்வி தொழிற்கல்வியென இருவகைப் படும மேனமேலும அறிவை விளஙகச செய்யவேண்டுமென எண்ணமுறுவாரக்கும, உலக இயற்கைப பொருள்களை ஆராய் வோர்ககும நூற்கல்வி இன்றியமையாததொன்றும்

சிறிதும் ஒளியின்றிக்கிடந்த ஓர் இருட்டறைக்குள் பகலவன் ஒளியை உட்செல்ல விடுத்தால அஃது அவ்வறையின இருளை நீக்கி அதனை மிகுந்த ஒளியுடன் விளங்கச் செய்தல்போல அறியாமை இருளடைந்து கிடக்கும் நம மனதில் நூற்கல்வியென் னும் கதிரவன் ஒளியைச செல்லவிடுதது நம மனதின் அறியாமை இருளை நீக்கச செய்தால நமதறிவு ஒளியுடன் பொலிந்து விளங்குமல்லவா?

இக கல்வியைப்பற்றி நம் செந்நாபபுலவர் இரணடு அதி காரஙகளால் விளககமாகக் கூறியுள்ளார். உடன்பாட்டு முகத் தாலும் எதிரமறையாலும "கல்வி", "கல்லாமை" என்ற அதி காரங்களால் அங்கையுள் நெல்லியெனத் தெளிவுறக கூறி யுள்ளார்.

அவனவன் அறிவுக்குத தகுந்த நூல்களையும, கற்கவேண் டிய நூல்களையுமே கற்கவேண்டுமென்றும், பினனுல அவன் வாழ்க்கையை அதன்படி நடத்தவேண்டும என்றும் வற்புறுத்திக் கூறுகின்றா கற்றபின் அதன்படி நடவாவிட்டால அவன் வாழ்க்கை பயன் அற்றதாய்ப போய்விடும்.

மேலும் வள்ளுவர், பொருட் செலவம் முதலானவை எல்லாம் அழியுந்தன்மையுள்ளன எனவும, சிறநதன அல்ல வெனவும் கருதி,

"கேடில் விழுச் செல்வம் கல்வி" என்றும், ஏனைச் செல் வங்கள் பிறவிதோறும் தொடர்ந்து வாரா, கல்வி ஒன்றே பிறவி தோறும் தொடர்ந்து வருமென்று,

"ஒருமைக்கண் தான் கற்றகல்வி ஒருவற்கு
எழுமையும் ஏமாப்புடைத்து." (திருக் ௩௯௮)

எனக் கல்விச் செல்வத்திற்கும் பொருட் செல்வத்திற்கும் உள்ள வேறுபாட்டைப் பளிங்குபோல எடுத்துக்காட்டுகின்றார்

மற்றும், பொருட்செல்வத்தைவிட கல்விச்செல்வத்திற்கே சிறப்பு, புகழ் ஆகையால 'பாடம் ஏறினும் ஏடது கைவிடேல்' என்ற முதுமொழிப்படி,

"யாதானும் நாடாமால் ஊராமால் என்னொருவன்
சாந்துணையுங் கல்லாதவாறு" (திருக் ௩௯௭)

என்று கூறுகின்றார்

இம் மேன்மையுள்ள கல்வியின் பெருமையை நாலடியில்,

"இம்மை பயக்குமால் ஈயக் குறைவின்றால்
தம்மை விளக்குமால் தாமுளராக் கேடின்றால்
எம்மை உலகத்தும் யாம்காணேம் கல்விபோல்
மம்மர் அறுக்கும் மருந்து."

கல்வியைப்போல அறியாமையைப் போக்கக்கூடிய மருந்தை எவ்வுலகத்தும் காணேம் என்று வியப்புறக் கூறுகின்றது

ஆனால், இத்தன்மையுள்ள கல்வியைக் கற்றலினால் மேலும் பயன் உண்டோ எனபதற்கு நமது சைவத்திரு குமரகுருபர அடிகளால்,

"அறம்பொருள் இன்பமும் வீடும் பயக்கும்
புறங்கடை நல்லிசையும் நாட்டும்—உறுங்கவலொன்
றுற்றுழியுங் கைகொடுக்கும் கல்வியி னூங்கில்லை
சிற்றுயிர்க் குற்ற துணை."

என்று மனிதர் அடையவேண்டிய அறம் பொருள் இன்பம் வீடு ஆகிய நான்கினையும் பெறுவதற்குக் கல்வி துணையாக விளக்கும் என்று நீதிநெறிவிளக்கத்தில் கூறியுள்ளார்

இவற்றுள், அஃது அறந்தருதலைப்பற்றிச் சிறிது ஆராய்வாம். அறத்தைக் கல்லாதாரும் செய்யக் காண்கின்றோமே யெனின், அவர்கள் நூல்களிற்கூறிய அறப்பயன்களை உணராராகலின் அவர் செய்யும் அறம் பிழைபாடுடைத்தென்று பிறர் கூறின் அதைச் செய்தலை விடினும் விடுவர் ஆனால் கற்றவரோ நூல்களிற் கூறிய அறப்பயன்களை நன்கு உணர்ந்திருப்பாராகலின் தாம் செய்யும் அறம் முறையன்றென்று பிறர் கூறினும் அதைச் செய்தலினின்று தவறார்.

கல்லாதவர் பொருளைக்கொண்டு அறஞ்செய்ய புகினும், நூல்களிற் கூறிய முறைப்படி தக்கவழியில் அதனைச் சிறக்கச் செய்ய அறியாதவர்களாயிருக்கின்றனர் கற்றோர் சிறு செல்வத்தைக்கொண்டு பேரறத்தைச் செய்து பெரும பயனையடைவர்.

'உறக்குந் துணையதோ ராலம்
பிறப்ப நிழற்பயந் தாஅங—கறப்பயனும
தான்சிறிதே யாயினுந் தககாாகைப் பட்டக்கால்
வான்சிறிதாப் போாதது விடும்."

என்று நாலடியிற் கூறியுளளது.

இனி, அது பொருள் தருதலைப்பறறிச சிறிதாராயவோம். கல்லாதாா எக்காலததும செலவமுடையரா யிருததலரிது. ஏனெனிற் கல்லாதவரதுபொருள பிறராற கவரப்படினும், வேறு வழிகளிற் கேடுறினும அப்பொருளை அவர் மீண்டும் பெறலரிது கற்றூர் செல்வத்தை யிழபபினும் மீண்டும் கல்வியினுதவியால் அதனை எளிதாகப் பெறுவர்.

சங்ககாலப் புலவர்களின் வரலாற்றைப் பார்க்கும்பொழுது கல்வியறிவினாலேயே பல மேன்பாட்டை யடைநதுளளனரென்று தெரிகிறது தாம்பெற்ற செல்வத்தைப் பலருக்கும் கொடுத்து விட்டு மறுநாளே மண்ணாளும மன்னர்களிடததுச் சென்று அளவிறந்த பொருள்களை யானைமேலும் புரவிமேலுமெ ஏற்றி வநதார்கள் என்பதைச் சஙகநூல்களிலே கண்கூடாகக் காண லாம் "கற்றோர்க்குச் சென்றவிடமெலலாம சிறபபு" என்ற மொழிப்படி கல்வியறிவில் சிறநதவர்கள் எவ்விடம் சென்றாலும் புகழ்ச்செல்வம் பெற்றே வருவர் என்பது திண்ணம்.

சங்ககாலபபுலவர்களின் நிலையை நோக்குமிடதது கல்வி பொருட் செல்வத்தையும் கொடுக்கும எனபது அடியிற்கண்ட உருவெனத தெறறென விளங்கும்.

இனி, அஃது இன்பந் தருதலைப்பற்றிச் சிறிதாராய்வோம். கல்லாதவரிடத்துப் பெரும் பொருளிருப்பினும் அதனைத் தக்க நாகரிக வழியிற் செலவுசெய்து இன்பநுகர்ச்சி அறியாதவர் களாயிருக்கின்றனர். இதனைச் சில நாட்டுப்புறஙகளிலுள்ள செல்வந்தர்களிடம் இன்றுங் கண்கூடாகக் காணலாம். அவர் கள், "ஈத்துவக்கும் இன்பம் அறியார் கொல்" என்றபடி, கல்வி யறிவின் விளககமின்மையால் தம் பொருளைப் பொய்யான இன்பங்களிற் செலவழித்துத் தம் வாழ்நாளை வீணே கழிக்கின் றனர். இதனைக்குறித்தே,

"உண்ணு ளொளிநிரு ளேங்கு புகழ்செய்யான்
துன்னருங் கேளிர் துயாகளையான்—கொன்னே

வழங்கான பொருளாகாதிருப்பானேல அஆ
இழந்தானென றெண்ணப் படும்.''

என்று நாலடியார கூறுகின்றது.

இனி, அஃது வீடுபேற்றையும அளிக்கவல்லது என்பது.

"ஈதற்குச செயக பொருளை யறநெறி
சோதற்குச செய்க பெருநூலை—யாது
மருள புரிந்து சொலலுக சொல்லை இம்மூன்று
மிருளுலகஞ் சேராத வாறு"

எனனுந் திரிகடுகப பாட்டினுல் உணரலாம மேலும, வீடடைதற்கேதுவாகிய அறம், பொருள, இன்பம் என்னுமிவற்றை இமமையில முறையாகச செய்ய அதுவே, மறுமையில் வீடு பேற்றை யளிக்கும.

உயிாககு உறுதுணையாக இருந்து அறம் பொருள இன்பம் வீடு என்ற நான்கினையும அளிககக்கூடிய இநநூற் கல்வியை

"உற்றுழி உதவியும் உறுபொருள கொடுத்தும
பிற்றைநிலை முனியாது கறறல நனறே.''

எனப புறநானூறறிலும,

"கைப் பொருள் கொடுத்தும கறறல
கறறபின கண்ணு மாகும்''

என சீவகசிந்தாமணியிலும், கற்பதின் அவசியத்தை வற்புறுத்திக் கூறுகின்றன

ஆகவே, பெற்றோர்கள தம் மக்களுக்கு அறிவைப புகடடும கல்வியைக் கற்பிகக வேண்டுமென்பது கூறாமலே விளங்கும். வள்ளுவரும் மக்களை அறிவுடையோராகச் செய்தல் தந்தையின கடமையாக,

"தநதை மகற்காற்றும் நன்றி அவையத்து
முந்தி யிருப்பச செயல்.''

என்று விளக்கமாகக் கூறியுள்ளார். அக் கருத்தையே பொன் முடியார் புறநானூற்றில் அவரவர் கடமைகளைக் கூறுகின்ற பொழுது தநதையின் கடனுக "சான்ருேனுக்குதல் தந்தைக்குக் கடனே'' என்று விளக்கமுறக் கூறியுளளார்

இவை விளக்கமுறச் செய்கின்ற கல்வியை நாட்டில் பரப்புவதற்கு அரசியலார் பெருமுயறசி யெடுத்துக்கொள்ள வேண்டும். ஆனல், அரசியலாரோடு நாட்டுமக்களும ஒத்துழைக்க வேண்டும். ஒத்துழைப்பு இல்லையேல் அரசியல் திட்டமெதுவும் செவ்வனே நடைபெருறு. கல்வித்திட்டத்தில்

தான் அரசியல் உயிரப்பு அமைந்துள்ளது. நிகழ்கால அரசிய லும் எதிர்கால அரசியலும் செவ்வனே நடைபெறவேண்டு மானால் அத்திட்டம் நாட்டிற்குகந்த நன்முறையில் அமைக்கப் படவேண்டும்

ஒரு நாடு செம்மையடைய—பண்பாட்டையடைய அடிப படை கலவிதான் நாட்டு மக்களுக்கு எல்லாம் உண்மையான பயனுள்ள கல்வியைப் புகட்டிவிட்டால் எல்லா இன்பமும் எளி தாய்க் கிட்டிவிடும் என்று கம்பர் கூறுகின்றார்.

"எகம்முதற் கலவி மூளைதெழுந்து எண்ணில் கேள்வி
ஆகம முதலதிணை பணைபோக்கி அருந்த வத்தின்
சாகம தழைத்து அன்பு அரும்பித் தருமம் மலர்ந்து
போகம் கனி ஒன்று பழுத்தது போலு மன்றே."

இப்பாட்டின் கருத்து வருமாறு :—கலவியாகிய முதற் பொருள் முளைதது எழுந்து, கேள்வியாகிய பல கிளைகளைவிட்டு, நன்முயற்சியாகிய இலைகள் தழைதது, அன்பாகிய அரும்பு அறமாக மலர்ந்து இன்பமாகிய கனியைப் பழுத்ததுபோலாகும் என்பது ஆகவே, கல்வியானது எல்லா இன்பத்தையும் அளிக் கும் எனபது விளங்கும்.

நம் நாடு குடியரசாகத் திகழ்கின்றது மக்களால் தோந் தெடுக்கப்பட்டவனே அக் குடியரசுக்குத் தலைவனாக ஆகின்றான். மக்கள் அறிவுடையவராக அமைந்திருந்தால்தான் அவர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவனும் அறிவுடையவனாக இருக்க முடியும் தலைவன் அறிவுடையவனாக இல்லையேல் நாடும் சீர் குன்றித் தாழ்வுநிலை யடையும்

பண்டைக் காலத்துத் தமிழ்நாட்டரசர்கள் வயதில் முதிர்ந் தோரின் நெறியில் செல்லாமல் அறிவில் முதிர்ந்தோரின் நெறி யிலேயே சென்றார்கள் என்பதற்குச் சான்றாகப் பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன்,

'ஒரு குடிப் பிறந்த பல்லோ ருள்ளும்
மூத்தோன் வருக வென்னா தவருள்
அறிவுடை யோனா றரசுஞ் செல்லும்'

என்று கூறியுள்ளான் ஆகையினாலும் 'அறிவுடை யொருவனை அரசனும் விரும்பும்' என்ற மொழிப்படியாலும் அறிவுடையோ னையே அரசர்கள் விரும்பி வந்தார்கள் என்பது நனிவிளங்கும்.

எனவே, 'கற்றாரைக் கற்றாரே காமுறுவர்' என்ற வாக் கின்படி நாட்டுத்தலைவன் அறிவுள்ளவனாக இருந்தால்தான் அறிஞரை விரும்புவான். இல்லையேல் கயவரைத்தான் விரும்ப நேரிடும் ஆகவே, தலைவன் அறிவிற் சிறந்தவனாக விளங்க வேண்டும்.

மேலும் நாட்டிற்கு உயிர்போன்றவன் தலைவனே ஆவன். மக்கள் உயிரை அவன் உயிரபோலக் கருதுவதே தலைவனின் தலைசிறந்த கடமையும் பண்புமாகும

"நெல்லு முயிரன்றே நீரு முயிரன்றே
மன்ன னுயிரத்தே மலர்தலை யுலகம
அதனல் யானுயி ரென்ப தறிகை
வேனமிகு தானை வேந்தர்க்குக் கடனே.'

என்று சஙககாலப்புலவராகிய மோசிகீரனுரும கூறியுளளார் ஆகவே, நாட்டுத்தலைவன் அறிவுடையவனுகவும, மக்கள உயிரைத தன்னுயிராகக் கருதுபவனுகவும் விளங்கவேண்டு மென்பதேயாகும்

இல்லையேல், நெல் உணவை யானைக்குக் கவளமாகக் கொடுப்பின் பன்னுட்காகும் அவ் வுணவையே அவ் வானை யானது தனித்துபபுக்கு உண்ணின் உட்கொளளுவதைக் காட்டிலும தன் காலினுல் பெரிதும் கெடுக்கும்.

அது போலவே, அறிவிலான் ஆட்சி செயபபுகின் நாட்டின் சீர்நிலை குனறிவிடும்.

" யானை புகக புலமபோலத்
தானு முணணு னுலகமுங கெடுமே"

என்றா பிசிராநதையார்

ஆகவே, நாட்டுத் தலைவன் அறிவுடையவனுக வர வேண்டுமானுல், அரசியல் அறிவுடைமையாக நடக்க வேண்டுமானுல்; நாடு அறிவில் உயர்நிலையாகவும், அறத்தின் சிகரமாகவும், பொருளின் கருவூலமாகவும், இனபத்தின உறைவிடமாகவும, திகழவேண்டுமானுல் மககள் அனைவரும் உயிர்க்கு உறுதுணையாகவும அறம் பொருள இன்பம வீடு நான்கினையும் தருவனவாயும், அறிவுகுழவியைத தாய் போன்று நன்னிலையில் வளர்க்கின்றதாயும் சிறப்புற்று விளங்குகின்ற கல்வியைப பெறல் வேண்டும்.

நம நாட்டு மக்கள் அனைவரும் கல்வியின் சிறபபை உணர்நது தம்மின் தம்மக்கள் அறிவுடைமையாகச் செய்து மாநிலத்து மன்னுயிர்க்கெல்லாம இனிதாகும்படி நாடு நன்னிலையில் விளங்கச் செய்வீராக

# உள்ளிருள் நீக்கும் ஒளிவிளக்கு

[திரு ப இராமலிங்கன், குடியேற்றம்]

'வள்ளுவன் றன்னை உலகினுக்கே தந்து வான்புகழ்கொண்ட தமிழ் நாடு' என எழும்பியது மண்ணதிர விண்ணதிரப் புரட்சிக் கனல் வீரன் அமரகவி பாரதிதன் உள்ளக்கீதத்தின் நாதம ஆம். அறிவின் கடலைககடைநத அமுதாம திருக்குறளை, உலகம உய்ய, மன்பதை மாண்புடன் வாழ, அகிலத்தோர் உள்ளிருள் நீக்கும் மனமணி விளக்காகவும, அம்மனமணி விளக்கின் ஒளியாகவும, அவ்வொளியின் பயனாகவும அளித்தாரன்றோ நாயனார் மண்ணின் வாழ்க்கையின் மாசு இருள் கடியும கலங்கரை விளக்கமது விண்ணின் வாழ்க்கையின ஒரு தொலை நோக்கி அது.

மானில வாழ்க்கையாம் இன்பபுரிப்பயணத்தில மனம எனும் தோணி பற்றி மதியெனுங் கோலையூன்றி உலகவாழ் வெனும் ஆழ்கடலில் 'மானம, பணபுடைமை, அறிவுடைமை, அன்புடைமை, ஈகை, கல்வி, கேளவி, சான்றாண்மை, கொல லாமை, கள்ளாமை, நன்றியறிதல், குடிமை, இலவாழ்க்கை ஆய பல்பண்டங்களை ஏற்றிசசெல்லுங்கால் வாழ்க்கைக்கலத் தைக் கயமை, கல்லாமை எனும் திமிங்கிலங்கள் தாக்காமலும், நல்குரவு, இன்னாசசொல, வெகுளி ஆய சூறாவளி மோதாமலும, நிறையழிதல், செருக்கு வெஃகுதல் எனும் பாறையின் கண் இடியுண்டு அழியாமலும தடுத்து ஆட்கொள்வான் வேண்டி வாழ்வாரகள உள்ளிருள்நீக்க நாயனாரேத்திட்ட நந்தாவிளக்கது.

விண்ணின்வேட்கை மேலீட்டால் புலானமறுத்துப் புறங் கூறாமை ஓர்ந்து, மானங்காத்து, விருந்தோம்பி, அனபும் அறனும், பண்பும் பயனுமான வீடு பேறாக அடைய இல வாழ்க்கை இரதத்தைச் செலுத்துங்கால, இகல், உட்பகை, கொடுங்கோன்மை எனும மன இருள் மேகங்களூடே பாய்ந்து வாழ்க்கை இன்பமாம் வானூர மதியத்தைப படமெடுத்துக் காட்டச சென்றாப்போதான் வள்ளுவன் எனும தமிழ் விஞ்ஞானி அமைத்த தொலைநோக்கு ஆடி அது

அறிவுக் கண்கொண்டு, மனமணி விளக்கை ஏற்றி அத தொலை நோக்கியாம் முப்பால் நூல் வாயிலான் நோக்குவோம காணும் அற்புதக்காட்சி பாரீர்; அதன் மாண்புறு மாட்சியும் கேளீர்.

'தானலாதுலகமில்லை,' என்ற ஆன்றோர் தம் மொழிக்கிணங்க தம் தமிழ்மறையில் முதற்கண், 'ஆதி பகவன் முதற்றே உலகு' எனும் பேருண்மையை, வாழ்க்கை மணங்கமழாது பயனில் நாத்திகம பேசி நாறித்திரியும் நாத்திகர் முகத்தில் அறைகிறார். அங்ஙனே வெற்று ஆத்திகம் பேசி உயிர்கள்பால் தினையளவேனும் உள்ளன்பு இன்றிய என்பு தோல் போர்த்து எதிதிதித்திரிந்து இறைவன் பேரால, ப பறிதது வாழும [illegible], ஆண்டவன் 'வேண்டுதல் வேண்டாமையிலான்' என்று இடிததுக கூறிப்பொசுக்குகிறா நம் தேவா

ஐம்புல வேடுவரை வேட்டையாடக் கட்டவிழ்ததுவிட்டு வெறு நாமஙகளிலும், உருததிராக்கங்களிலும், மொட்டையடித்தலிலும் பொருளற்று உரககக கததுவதிலுமே, பததியுளது என்று திரியும பிததர்களைப பாாததுப,

"பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர ஒழுக்க
நெறிநின்றா நீடுவாழ் வாா'

எனுங் குறளீட்டிகொண்டு தாக்குகிறா

யடைததும, முணு முணுத்தும, காட்டிடைத ீநதும கனலிடையுழன்றும் கமணடலம கையிலேநதி பூவுலகு வாழ்வது பொயயென மதிதது வாழ்வது தான் தவம எனக கொண்டு திரியும் நுண்மாண் நுழைபுலம் இல்லாப் போலி வேடதாரிகட்கு,

"உற்றநோய நோனறல் உயிாககுஉறுகண செயயாமை
அற்றே தவததிற்கு உரு"

எனத தவததிறகு உண்மை இலககணமுங்காட்டி உருவையும திட்டிககாட்டுகிறா நநதம் தெய்வத தமிழகததின தவராசன்

போாக்கோலம பூண்டு உயிாகுடிக்கப பாரில் போட்டியிட்டு வல்லான் வகுததே வாய்ககால் எனும பெரு இழுககுககிணஙக படைப்பலமிலலா மககளை அவர்தம் பிறபபுரிமையாம் தன்னுரிமையைப பறிகக அணுக்குண்டுப் பூதஙகளை ஏவி ஒரு பாவமுமறியா தாய், சேய், என்றும் பாராமல் கொனறு குவிக்கின்றனரே ஏகாதிபத்திய எததாகள்—அவாகளை அழைததுத்

"தனனுயிா நீபபினும செயயறகத் தானபிறிது
இனனுயிா நீக்கும வினை."

என்ற கொல்லாமை எனுங்கருவிகொண்டு வீழ்த்துகிறார் தெய்வப்புலவா.

இன்னணம படைப்பலம் காட்டி அச்சுறுத்தி மன்பதையை அடிமைக் கேணிக்குள் அகப்படப புதைதது வாழ்வு ப எக்காளமிடும ஏகாதிபததியக் கும்பலைப பாாதது —

"வேலன்று வென்றி தருவது மன்னவன்
கோலதூஉங் கோடாது எனின்"

எனும் எச்சரிக்கையையும் விடுத்து,

பின்னர் அவர்களைத் தேய்க்கும படையையுங்காட்டி அதட்டி அவர்கள் அழிவையும் கணிததது விடுகிறார்,

'அலலற்பட்டு ஆற்றாது அழுத கணணீரன்றே
செல்வத்தைத தேய்க்கும் படை.'

என்ற குறள் முகத்தான்.

மற்று, அக் கொடுங்கோலாட்சிக் காலாகள பிடியிலகப்பட்டு வாழவிழந்து வளமிழநதது அடிமையில் அழுதகண்ணீருடன் வாடுமக்கட்கு ஆறுதலளிக்கும நம்பிக்கை ஒளி அளிக்கும உரிமை விடிவெள்ளியைத் தரிசிக்க அழைததுச் செல்லுகிறார் பொதுமறை வகுதத பெருநாவலா.

பகலில் பகைவனைப் பார்ததுப் பதுங்கி இரவில உறஙகு பவர்மீது குண்டு மழைபொழிநது உயிர்குடிக்கும் அணுக்குண்டு குள்ளநரிக கூட்டங்களைப் பார்ததுப் பரிகசிததது,

'விழித்தகண வேலகொண் டெறிய அழித்திமைப்பின்
ஓட்டன்றோ வன்க ணவர்க்கு.'

என்ற குறளில் பகைவரின் வேலபார்ததுக் கண்ணிமைபபதே பேடிகள்தஞ் செயல என உண்மை வீரத்திற்கு விதிவகுத்தும் அதற்கே பல்லாண்டும பாடுகிறார் முபபால்நூல ஓதிய முப் பாவலர்

கலையின் பேரால, இசைக்கலையின் பேரால, நடிபபுக் கலையின் பேரால் நஙகையர் தம பண்புக்குப் பங்கம் வைததும் கற்பிற்குக் களங்கம விளைககும கலைகொல்லிகட்குப பேராண்மை ஊசி ஏற்றுகிறார், ஆண்மையின முன்னோடி தூதா.

'பிறனமனை நோககாத பேராண்மை சான்றோர்க்கு
அறனொன்றோ ஆனற ஒழுககு'

என்ற அவாதம குறள் எனும மமமா அறுககும் மருந்தை ஊற்றி

மேனியெலாம மினுக்கிப் போலி அணிகளைச் சுமக்கும பொதிமாடுகளையும் நாட்டழகி, உலகழகிப போட்டிகளில் கலந்து கொளளக் கற்பைக் காற்றில் பறக்கவிடும பொய-வேட, புற-அழகிகட்கு,

"பெண்ணின் பெருந்தக்க யாவுள கற்பென்னும்
திண்மை யுண்டாகப் பெறின்."

என்ற குறள் கொண்டு தலைமேல் தட்டி, கற்பில் எந்த நாடு இந்த நாட்டுக்கு ஈடு-இந்திரர் சொல கண்ணகியின் எழில் நிறை கொள் நாடாயிற்றே, என்ற நினைப்பை ஊட்டுகிறார்

தேன்கொழித்துப் பாலோட்டிய பல்வளங் கொழித்துப் பாரினை ஆள்வோம் என்று உரத்துப்பேசி உரிமை பெற்றபின் ஆளவந்தாரான பின்பு, கஞ்சியின்றிக் கலங்கவும், குந்த நிழலின்றித் தவிக்கவும், எச்சிலைக்கு எதிர்கால இந்நாட்டின் வாழைக் குருத்துக்களான ஏழைக் குழந்தைகளை நாயோடு போராட விட்டுக் கஞ்சித் தொட்டியேகதி எனக்காட்டி நாடாளவந்தார்க்கு —நாடு, ஆட்சி என்றால் என்ன என்று விளக்கம் கூறுகிறார்,

"உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்
சேராது இயல்வது நாடு."

என்ற குறள் வாயிலாக.

அத்தகு அவலநிலையில், மாற்றுக் கட்சியினர் தோன்றி நாட்டை நலந்தோர் பாதையில் அழைத்துச் செல்லாவிடில், 'பல குழுவும் பாழ்செய்யு முட்பகையும் வேந்தலைக்கும் கொல் குறும்பும்'—தோன்றிப் பெருகும் எனவும் எச்சரிக்கை வாணத்தைத் தொடுக்கிறார்

இல்லறத்தை இகழ்ந்து மேலாந்த துறவறத்தைத் தூக்கிப் பேசும் மக்கள்தம் பதடிகளை அழைத்து, 'அறம் எனப்பட்டதே இல்வாழ்க்கை' 'அஃதே அனைத்தறம்' எனச்சாடுகிறார்

மாடுண்டு, கன்றுண்டு, மக்களுண்டு என்பதெல்லாம் கேடுண்டு எனும்படி கேட்டு விட்டோம் கேள்மனமே,' என்று அந்தராத்மாவோடு பொய்வாதம் புரிந்து வாழ்க்கையாம் இன்ப புரிசசோலையை வறட்சிப்பாலையாக்கி வாழும் சீழ்ப்பிடித்த அவர்கள்தம் உள்ளப்புண் புரைதீர,

"...... மாற்ற இனிதே தம்மக்கள்
சிறுகை யளாவிய கூழ்."

"மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம் மற்றவர்
சொற்கேட்டல் இன்பஞ் செவிக்கு."

"பெறுமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த
மக்கட் பே றல்ல பிற"

என்ற குறள்-பெனிசிலின்-ஊசிகளை ஏற்றுகினறார் பெருநாவலர்.

விலாப்பெருக்க உண்டு கொழுத்துத் தொந்திசரிந்த வாழ்வு வாழ்வதற்கே இல்வாழ்வு என்ற போக்கில் வாழும் மனித மரக்

கட்டைகளை நோக்கி, அறனும்—அன்பும், பண்பும்—பயனு மாகப் பெற்று, 'இருந்தோம்பி இல்வாழ்வதெல்லாம் விருந் தோம்பி வேளாண்மை செய்தற்பொருட்டே' எனத் திருந்தி மனிதர்களாக்குகின்றார்.

ஏழை, வறிஞர்களைக் கண்டாங்கு அங்காடிப் புலிபோலப் பாயும் மாக்களைப் பார்த்து,

> "அன்பின் வழியது உயிர்நிலை அஃதிலார்க்கு
> என்புதோல் போர்த்த உடம்பு"

எனக் கதறுகிறார்.

ஏற்றத்தாழ்வு எனும் செறிகடலில் வீழ்ந்து வறுமை, இன்மை, பஞ்சம், பட்டினி எனும் முதலைவாய்ப்பட்டுழன்று, மானம்விட்டு, இரந்தும் உயிர்வாழ்தலை எண்ணிடவும் கூசிடும் அவரது தமிழ் நெஞ்சம் உண்மையில் ஒரு புரட்சியின் எரிமலை யாகின்றது அதனின்றும் புரட்சிக்கனலை அது உமிழா நிற்கிறது. எழுகின்றது சண்டமாருதப் புரட்சியின் பேரொலி. "ஏ, படைத்தோனே-நீ பரந்து, பரந்து அலைந்து அலைந்து கெடுக, கெடுக" வென்றே சாபம் இடுகிறார் தமது,

> "இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து
> கெடுக உலகியற் றியான்"

என்ற ஊழித்தீ கக்கும் குறள் வாயிலான

ஆக வள்ளுவனார் தந்த குறள் ஓர் நற்பண்புகள் நிறைந்த பேழை, உலக அறங்களனைத்தும் தன்னகத்தே கொண்டுள்ள பெட்டகம்; அஃது ஓர் உலகப் பல்கலைக்கழகம்; அது சொல்லாத உண்மையில்லை; கூறாதபொருளொன்றில்லை, கண்டு தெளியாத அறநெறியில்லை; அதை, 'எல்லோர்க்கும் கொடுமதி' என்று தமிழ் அணங்கினுக்குக் காணிக்கையாகத் தந்து போனார் தெள்ளுதமிழ் வேதஞ்செய்பின் மாய மதிக்குயவன். அது துற வறம் பூண்டோர்க்கு ஒரு தூண்டாவிளக்கு. இல்லறத்தோர்க்கு இருளோட்டும் இரவி. நாடாளவார்க்கு நல்லமைச்சு. வாகை சூடும் படைவீரர்க்கு வீரமுரசு. ஓதற்கெளிது; உணர்தற்கரிது. சிந்தைக்கினிது. செவியினுக்கினியது; இருவினைக்கு மாமருந்து. அதன்கண் அறனறியலாம்; பொருளறியலாம்; இன்பின் திறனை யும் தெளிந்து திளைக்கலாம் மன்பதைவாழ, மாநிலம் செழிக்க, பண்பொளி வீச, இல்லற மணங்கமழ, வீரம் பொங்க, பகை யொழிந்து பசி யொழிந்து பாரினில் வாழ்வதனை ஓர் இன்பபுரிப் பயணமாக்க பொய்யாமொழிப் புலவன் தமிழகத்தின்கண் ஏற்றிவைத்த உள்ளிருள் நீக்கும் ஒளிவிளக்கு அது.

# செய்திகளும் குறிப்புக்களும்

*தமிழர் திருநாள்*

தமிழ் இலக்கிய மன்றம், அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலை நகர். இம்மன்றச் சார்பாக 1953, சனவரித் திங்கள் 20-ம் நாள் 'தமிழர் திருநாள்' மிகவும் சிறப்பாகக் கொண்டாடப்பெற்றது. உதவித் துணைவேந்தர் திரு எ. இராமநாத பிள்ளை முதல்நாள் விழாவிற்குத் தலைமை பூண்டார்கள். தலைவர் முன்னுரையின் சுருக்கம் "சென்னையே தமிழ்நாட்டின் தலைநகராக வேண்டும். தமிழ்நாட்டின் எல்லைகள் வடவேங்கடமும் தென்குமரியுமே. சென்னையில் ஆந்திரா பங்கு கேட்பது சிறிதும் பொருந்தாது" என்பதே.

திரு. வித்துவான் மெ. சுந்தரம் அவர்கள், திரு. வித்துவான் ஆ. பூவராகம் பிள்ளை அவர்கள், டாக்டர். அ. சிதம்பரநாதச் செட்டியாரவர்கள், வித்துவான் மு. அருணாசலம் பிள்ளை அவர்கள் ஆகிய நால்வரும் முறையே சிலப்பதிகாரத்தைப்பற்றிச் 'சிலம்பு' எனும் சொல்லின்மை, புகார், மதுரை, வஞ்சிக்காண்டம் எனும் பொருள் பற்றி விளக்க விரிவுரை ஆற்றியுள்ளார்கள்.

திரு. டாக்டர் அ. சிதம்பரநாதச் செட்டியார் அவர்கள் விரிவுரையில் தமிழ் நாட்டு எல்லை அதற்குத் தொல்காப்பியப் பாயிர மேற்கோள் தமிழ்நாட்டுத் தலைநகர் சென்னையே, அதில் ஆந்திரா பங்கு கேட்பது சிறிதும் பொருந்தாது என வலியுறுத்தியுள்ளார்கள்.

தலைவர் முடிப்புரை, இடையிடையே திருவாட்டி சிவகாமசுந்தரி, திருவாளர்கள் பூபதி, மகாலிங்கம், இராமநாதன் ஆகியோர் இசைப் பாடல்கள் நிகழ்ந்தன. செயலாளர் கே. எ. திருஞானசம்பந்தம் நன்றி நவில விழா இரவு 8 மணி அளவில் இனிது நிறைவேறியது எனவும்,

மறுநாள் 19-தேதி மாலை 5-30-மணி அளவில் இசைமணி மயிலம் பி. வச்சிரவேலு முதலியாரவர்களால் தக்க பின்னணி இசையுடன் இசையரங்கம் ஒன்று இனிது நடைபெற்றதெனவும் தெரியவருகிறது.

*தமிழர் திருநாள் கலையறிவுக் கழகம் — சலகண்டபுரம், சேலம் மாவட்டம்*

15—1—53 மாலை 7 மணிக்கு, 'சன்மார்க்க சபை' பசனைக்கூடத்தில் தமிழர் திருநாள் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. செயலாளர் திரு. ப. கண்ணன் அவர்கள் அனைவரையும் வரவேற்றனர். முதுபெரும் புலவர் புலவரேறு ஆசிரியர் அ. வரதநஞ்சைய பிள்ளை அவர்கள் தலைமை பூண்டார்கள். தலைவர் தம் அருமபெரும் முன் உரையில்

"தமிழின் பெருமை, தமிழர் பண்பாடு, சங்ககாலத் தமிழ்மக்களின் மாண்பு, தற்போதைய தமிழ்மக்களின் தாழ்நிலை, ஆந்திரப் பிரிவினை மூலமாகவே தனித்தமிழ் நாடும் பிரிந்து தமிழிலேயே தமிழாட்சி நடத்தல்" முதலியவற்றைப்பற்றி மிகவிரிவாகக் கூறினார். பிறகு இங்கா நாட்டாண்மைக் கழக உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியர் புலவர் வீ. பசுவையா அவர்கள் 'பண்டைத் தமிழர் கலைகளிற்சில' என்பதுபற்றி விரிவுரை ஆற்றினார்கள்.

பின்னர்த் தலைவர் அவர்களால் முன்மொழியப்பட்டு அடியிற்கண்ட தீர்மானம் அனைவர்களாலும் ஒருமனமாய் ஏற்றுக்கொள்ளப்பட்டு நிறைவேறியது.

1. (அ) ஆந்திரநாட்டுப் பிரிவினையை நாங்கள் முழுமனதோடு ஆதரிக்கிறோம். அதேபோல் கேரளம், கர்நாடகம் ஆகிய இருமாகாணங்களின் கோரிக்கைகளையும் ஏற்றுக்கொண்டு அவற்றையும் பிரித்து தனித் தமிழ் நாட்டுக்கு எல்லைகளை வகுத்து சென்னை உள்ளிட்ட தமிழ்நாடு தனியே பிரிந்து தமிழே அரசியல் மொழியாகத் தமிழர் ஆட்சி நடைபெற வழிவகை செய்யுமாறு இந்திய அரசினர் சென்னை அரசினர் அரசியல் கட்சியினர்கள் அனைவரையும் இக்கூட்டம் கேட்டுக்கொள்கிறது.

(ஆ) தமிழ்நாட்டுக்கு எல்லை வகுக்கும் வகையில் வடஆற்காடு மாவட்டத்தில் இணைந்திருந்த சித்தூர் திருப்பதி முதலான தமிழ்ப் பகுதிகளை அரசினர் நிர்வாக வசதியின் பொருட்டு சென்ற 1911-ம் ஆண்டில் பிரித்து சித்தூர் மாவட்டமாக்கியதைக் கவனத்தில் கொண்டு அப்பகுதிகளையும் கேரளத்தோடு சேர்ந்துள்ள நாஞ்சில் நாடு தமிழ்ப் பகுதிகளையும் தமிழ்நாட்டோடு இணைக்க வேண்டுமென்று இக்கூட்டம் வற்புறுத்துகிறது.

(2) ஆந்திர மாகாணத்திற்குத் தலைநகர் ஆந்திராவில் தானிருக்க வேண்டும். சென்னை தற்காலிகமாகவும் தலைநகராக இருக்கக்கூடாது என்றும், தலைநகர், கவர்னர், உயர்நீதி மன்றம் ஆகிய எல்லாவற்றையும் அவர்கள் தனியே அமைத்துக்கொள்வதுதான் நியாயமானது, முறையானது என்றும் இக்கூட்டம் கருதுவதோடு இவ்வகையிலேயே செய்வாற்றும்படி அதிகாரமுள்ள சம்பந்தப்பட்டவர் அனைவரையும் இக்கூட்டம் கேட்டுக்கொள்கிறது

லேடி இராமநாதன் பிரிவு

திரு. சர் பொன்னம்பலம் இராமநாதன் மனைவியார் லேடி இராமநாதன் 31—1—53 பகல் 2 மணிக்கு யாழ்ப்பாணம் சுன்னாகம் இராமநாதன் கல்லூரியில் உள்ள தம் இல்லத்தில் தம் 83 ஆம் அகவையில் இறைவன் திருவடிப் பேறெய்தினார்

இவர் ஆஸ்திரேலியா நாட்டில் பிறந்தவர், பிரிட்டனில் **மிஸ். ஹாரிசன்** என்ற பெயரால் அழைக்கப்பட்டவர். இலங்கைக்கு வந்தவுடன் 1907-ல் சர். இராமநாதனை மணம் புரிந்து கொண்டார். அப்பால் லேடி இராமநாதன் என்ற பெயரால் இந்தியாவிலும் இலங்கையிலும் வழங்கப் பெற்றார்.

இவர் சைவசமய நூல்களை உன்னிப்பாகக் கற்றவர், சைவசமயக் கொள்கைகளை இலங்கையிலும் வெளிநாடுகளிலும் பரப்பினார், தம் கணவர் இராமநாதன் அமெரிக்கா, இங்கிலாந்து முதலிய நாடுகளில் சைவசமயக் கொள்கைகளைப்பற்றிச் சொற்பொழிவாற்றச் சென்றபோது அவருடன் உதவியாகச் சென்றார். இவர்தம் சிறப்பை அறிந்து இலங்கைப்பல்கலைக் கழகம் **டாக்டர் ஆப்லா** என்னும் பட்டத்தை 1942-ல் வழங்கிப் பாராட்டியது. இராமாயணத்தை இவர் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளார். இன்னும் பல நூல்களும் எழுதியுள்ளார்.

இராமநாதன் கல்லூரி, பரமேசுவரா கல்லூரி ஆகியவைகள் இவரால் நிறுவப்பெற்றனவே. கொழும்பிலும் கோடைக்கானலிலும் சிவபெருமான் திருக்கோவில்கள் கட்டியுள்ளார்.

சிலகாலமாக அவர் நோயுற்றிருந்த போதிலும் சைவசமய நெறிக்கும் தமிழ்மொழிக்கும் வேண்டும் பணியை ஆற்றத்தவறியதில்லை. தமிழர் முறைப்படி உடையணிந்தவர், இந்திய நாட்டிடத்தும், இந்திய மக்களிடத்தும் பேரன்பு கொண்டவர், இவர்க்கு ஒரு புதல்வியார் உளர், அவரே இலங்கை அஞ்சற்பகுதி அமைச்சர் திரு. எஸ். நடேசன் இல்லக்கிழத்தியாராவர்.

**குறிப்பு:** அயல்நாட்டில் பிறந்து அவ் அயல்மொழிப் புலமை பெற்றவராக இருந்தும் தமிழ்மொழிக்கும் சைவசமயத்துக்கும் இவர் செய்த பணி என்றும் மறக்கற்பாலதன்று. இவர்தம் நல்லுயிர் இறையடி இன்பத்தில் திளைத்து இலகுவதாக.

இரஷ்ய நாட்டுத் தலைவர் ஸடாலின் பெருமபிரிவு

பொதுவுடைமை நாடாகத்திகழும் ரஷ்ய நாட்டுத் தலைவர் ஸடாலின் சிலநாட்களாக நோயுற்றிருந்து மூளையின் இரத்தக்குழாய் வெடித்து 5—3—53 இரவு 9-50க்குக் காலஞ்சென்றார். அவர் தம் பிரிவு பொதுவாகப் பாட்டாளி மக்கட்கும், சிறப்பாகச் சோவியத் ரஷ்யாவுக்கும் பேரிழப்பாகும். அவர் தம் பெரும்பிரிவு குறித்து வருந்துகின்றேம்.

இராசகோபாலாச்சாரியார் கருத்து.

மதுரைக் கலாசாலையில் 3-3-53ல் சென்னைமாநில முதல்அமைச்சர் திரு. இராசகோபாலாச்சாரியார் பேசியபோது ஆங்கிலமொழியைப் பற்றித் தம் கருத்தை அறிவித்ததாவது:

ஆங்கிலமொழி ஆங்கிலேயருக்குமட்டும் சொந்தமல்ல. நம் கலைமகள் பலவேறு மக்களுக்குப் பலவேறு மொழிகளைக் கொடுத்தாள். ஆங்கில மொழியை ஆங்கிலேயருக்குத்தான் உரியது என்று நாம் ஏன் நினைக்க வேண்டும்? அமெரிக்கர்களும் ஆங்கிலம் பேசுகின்றனர், அவர்கள் அமெரிக்காவுக்குப் புறப்பட்டபோது, ஆங்கில மொழியைத் தங்களுடன் எடுத்துச் சென்று, அதையே தங்கள் தாய்மொழியாக வைத்துக்கொண்டனர். அதனால் இங்கிலாந்திலிருந்த ஆங்கிலம் ஒன்றும் குறைந்துபோய்விடவில்லை. இதுதான் சரியான திருட்டு! கொள்ளை!

"ஆங்கிலேயர்கள் நம்நாட்டுக்கு வந்தார்கள், சில காரணங்களால் அவர்கள் ஆங்கில மொழியைவிட்டுச் சென்றனர். இதை நாம் அவர்களுக்கு ஏன் திருப்பிக்கொடுக்கவேண்டும்? அதைத் திரும்பப்பெற அவர்கட்கு உரிமை இல்லை; அம்மொழி நம்முடையது; ஆங்கிலேயர்களை அனுப்பிவைத்தவுடன் ஆங்கிலத்தையும் அவர்களுடன் அனுப்பிவைப்பது கட்டாயமில்லை. பழைய முறைப்படி அது நம்முடையதே. ஆங்கிலேயர் முறைமன்றங்களையும் சட்டதிட்டங்களையும் விட்டுச் சென்றுள்ளனர். இவற்றையெல்லாம் ஆங்கிலேயருக்கு நாம் திருப்பி அனுப்பிவிட்டோமா? இங்குள்ள ஆறுகளில் ஆங்கிலேயர் அணைக்கட்டுக்களைக் கட்டினர். ஆங்கிலேயர் அவற்றைக் கட்டினார்கள் என்பதற்காக நாம் அவற்றை இடித்துத் தள்ளிவிட்டோமா? உலக வரலாற்றின் நிலையினால் நாம் ஆங்கிலேயர்களிடமிருந்து கற்றறிந்த மொழியானது இன்று உலகமொழியாய்த் திகழ்கின்றது; விஞ்ஞானத்தின் மொழியாக விளங்குகின்றது. ஆராய்ச்சியின் மொழியாகவும் சிறந்த அரசியல் மொழியாகவும் வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் அறிவாற்றலின் மொழியாகவும் இயங்குகின்றது. மிகச் சிறந்த உண்மைகள் ஆங்கிலத்தில்தான் உண்டாகின்றன. நம் தாய் மொழியைப் புரிந்துகொள்வதுபோல் எளிதாக ஆங்கிலத்தைப் புரிந்து கொள்கிறோம்.

"ஆகவே, வரலாற்றுமுறையினால் பெற்ற ஆங்கிலத்தை நாம் விட்டுவிடக்கூடாது. கீழ்மையிலிருந்தே எப்போதும் மேன்மைஉண்டாகின்றது. நூற்றைம்பது ஆண்டுக் காலம் ஆங்கிலேயர்களிடம் அடிமைப்பட்டுக் கிடந்த தாழ்மைக்கு இரப்பு ஈடாக உலகின் மிகச் சிறந்த இலக்கியமும் சிறந்த புதிய விஞ்ஞான முன்னேற்றங்களும் கொண்ட ஒரு மொழி நம் பல்கலைக்கழகங்களுக்கும் படித்த இளைஞர்களுக்கும் கிடைத்துள்ளது. மக்களின் ஒவ்வொரு எண்ணத்தையும் உணர்ச்சியையும் தம் நூல்களில் படம்பிடித்துக் காட்டும் நூலாசிரியர் சேக்ஸ்பியர் ஒருவரே என்பதை உணர்தல் வேண்டும். இத்தகைய பெருமை பொருந்திய ஆங்கிலத்தை நாம் கற்றுப் பயனடைவோமாக.

"உலகமொழியாகிய இதைப் புறக்கணிக்காமலும் வெறுப்புணர்ச்சி கொள்ளாமலும் கற்றுப் பயனடையவேண்டும், படித்தவர்கள் உடல் உழைப்பில் ஈடுபடவேண்டும்" என்றார்.

கற்றவர்கள் உடலுழைப்புக் கொள்ளவேண்டுமென்றபோது கூறிய தாவது.

"படித்த சிறுவர்களும் சிறுமிகளும் தாங்கள் படித்தவர்கள் என்பதை மறந்து உடலுழைப்பில் ஈடுபடவேண்டும் (படிக்காதவர்களைப் போலவே) என்ற எண்ணந்தான் இன்று இங்கு என் மனத்தில் மேலோங்கி நிற்கின்றது. நாடு முன்னேற்றமும் செழிப்பும் அடைய இதுதான் வழி. படித்த ஆண்களும் பெண்களும் தாங்கள் உயர்ந்தோர்கள் என்று எண்ணக்கூடாது. உடலுழைப்பில் ஈடுபட வாய்ப்பு நேரும்போதெல்லாம் படித்தவர்கள் தங்களது படிப்பை மறந்து, உடலுழைப்பைச் செய்யக் கற்றுக்கொண்டாலொழிய நம் நாடு முன்னேற முடியாது. மிகத் தூய்மையற்ற வேலைகளைக் கூடக் கையினால் செய்ய அவர்கள் முதன்மையாக இருக்கவேண்டும். அப்போதுதான் இந்தியாவின் ஏழ்மைப்பிணி நீங்கும் இல்லாவிட்டால் ஏழ்மைநோய் நம் நாட்டை அரித்துக்கொண்டுதான் இருக்கும் முன்னேற்றத்திட்டங்களில் முதலீடுசெய்யப் பணமிருக்காது, பிறரிடஞ் சென்று கடன் வாங்குவது கெட்டவழக்கம்; பிறரிடமிருந்து தானம் வாங்குவது அதைவிடக் கெட்ட வழக்கம், நாமே பாடுபட்டு உழைத்தாலன்றி இந்தியாவை முன்னேற்றஞ் செய்யமுடியும். கட்டாயமாகக் கற்றுக் கொள்ளுங்கள்; ஆனால், உழைக்கும்போது படித்தவர்கள் என்ற உணர்ச்சியை மறந்து படிப்பில்லா மக்களுடன் சேர்ந்து உழையுங்கள்: இதுவே; கல்லூரி மாணவர்களுக்கு நான் கூறும் மந்திரம்" என்று கூறினார்

குறிப்பு: அரசியல் அமைப்புத் திட்டத்தில் ஆங்கிலம் பதினைந்து ஆண்டுகளில் நம் நாட்டிலிருந்து அகன்றுவிடவேண்டுமெனத் திட்டம் வகுத்துள்ளார்கள். அக் காலவரையறைப்படி இதுகாலை மூன்றாண்டுகள் கழிந்துவிட்டன. இதனை மக்கள் தலைவர் இராசேந்திர பிரசாது அவர்கள் இம் மூன்றாண்டைக் கழித்துக்கூறி இன்னும் ஆங்கிலம் நம் நாட்டை விட்டுப் பன்னிரண்டாண்டில் போய்விடுமென்று கூறினார்கள். பல்கலைக் கழகத் துணை வேந்தர்களும் கவர்னர் சென்ரலாக இருந்து பணியாற்றித் தற்காலம் சென்னைமாநில முதலமைச்சராகத் திகழும் திரு ச. இராச கோபாலாச்சாரியாரவர்களும் ஆங்கிலத்தை நம் சொத்தென்றும் அதை நன்கு பாதுகாத்துப் போற்றி நம் நாட்டிலேயே என்றும் நின்று நிலவவிட வேண்டுமென்றும் மேற்காட்டியவாறு கூறுகின்றார்கள். நாட்டு மக்கள் எதைப் பின்பற்றி நடக்கவேண்டுமென்பதை உணர்ந்து செய்வார்களாக.

# மதிப்புரை

## திருவாசகம் திருவெம்பாவை - கதிர்மணிவிளக்கப் பேருரை

[கிடைக்குமிடம்: சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், 1/140, பிராட்வே, சென்னை-1., விலை ரூ. 1—8—0]

### திருப்பேர்

இப்பேருரையாசிரியர் "பாண்டிவள நாட்டில் பூங்குன்ற நாட்டுத்தலை நகராகிய மகிபாலன்பட்டி மகாமகோபாத்தியாய முதுபெரும்புலவர் சைவசித்தாந்த வித்தகர் பண்டிதமணி மு. **கதிரேசச் செட்டியார்** அவர்கள் ஆவர். இருபெருந் திருவும் ஒருங்கமைந்த பொருவரு சிறப்பினராகிய இவர்கள் ஆளுடைய அடிகள் அருளிய எட்டாந் திருமுறையாகிய இத் திருவாசகத்தின்கண் உள்ள **திருச்சதகம், நீத்தல் விண்ணப்பம்** என்னும் இருபெரும் பகுதிகட்கும் இனிய விளக்கவுரை கண்டு செந்தமிழ்க்கும் சிவநெறிக்கும் சீரிய தொண்டியற்றிச் செயற்கருஞ் செயல் செய்த பெரியாராய்த் திகழ்கின்றனர்.

அவற்றின் தொடர்பாய் உள்ள 'திருவெம்பாவை' என்னும் செழுமை வாய்ந்த விழுமிய செம்பொருட் பகுதிக்கு இப்பொழுது இவ்விளக்கவுரை யாத்து வெளிப்படுத்தியுள்ளார்கள். இவ்வுரையும் முன்போன்று எல்லா நலங்களும் ஒருங்கமையப்பெற்றது. திருவாசகச் செழும்பொருட்கு இப் பாவை உயிர்போன்றது. அவ் உயிரை உணர்வுடன் யாத்து நுகர்ந்து மாளா இன்பம் ஆளச்செய்யும் உணர்வொளி விளக்கம் தருவது **கதிர்மணி விளக்கப்பேருரை.** இம்மெய்யுரையின்றேல் உண்மை காணமுடியா தென்பது பொய்யுரையன்று, பொருளுரையே.

### நூற்சிறப்பு

ஆண்டவன் அருள்மொழியால் 'பாவைபாடிய வாயால் ஒரு கோவை பாடுக' எனமொழிந்தருளிப் பாவையும் கோவையும் பயனுற எழுதுவார் முன்னதும் பின்னதுமாய முழுவதும் எழுதி முற்றுவித்தருளினர். ஒரு புடை ஒப்பாக அடிகள் தொடங்கி அருளிய '**நமச்சிவாய வாஅழ்க**' என்பது தொகையாகவும், '**திருவெம்பாவை**' வகையாகவும், '**திருச்சிற்றம்பலக்கோவை**' விரியாகவும் கொள்ளுதல் சாலும். நூற்பொருள்களெல்லாம் திருவைந்தெழுத்தின் பொருள்களே என்பது செம்பொருள் துணிபு. இவ்வுண்மை

> "அருள்நூலும் ஆரணமும் அல்லாதும் ஐந்தின்
> பொருள்நூல் தெரியப் புகின்" —திருவருட்பயன், கூ-ஐந்-க

என்னும் மெய்கண்ட மொழியான் உணரலாம்.

### வேண்டல்

நம்பேராசிரியரவர்கள் முன்னைப் பேராசிரியர் அருளிய திருச்சிற்றம்பலக் கோவையாரின் மெய்யுரையே போன்று கருத்துச், சொற்பொருள், காட்டு, விளக்கம், உள்ளுறை, ஒப்பால் பெறப்படும் உண்மை நுண்பொருள், செம்பொருள் துணிபு முதலிய நலம்பல கெழும நவின்றனர் மெய்யுரை. அவ் உரைமாண்பின் ஒருசிறு பகுதியை விளக்க உன்னி

எஞ்சும் இம்மதிப்புரை. அம்மையப்பராய்த்

அம்பலவாணர் தம் திருக்கையால் எழுதிய திருவாசகச் செழும்பனுவற்குத் தகைசால் சிறப்பமை நம்பேராசிரியர்வழிக் கதிர்மணிவிளக்கம் வரத் தண்ணளி புரிவாராக. நாமெல்லாம் தவங்கிடந்து வேண்டுவோமாக

## ஒப்பு

தமிழ்மரபின் தனிச்சிறப்பாகப் 'பேதை, பெதும்பை, மங்கை' என்னும் முத்திறப்பருவமும் ஒத்துற முதல்எட்டுத் திருப்பாட்டுக்களுக்கும் நுண்மாண் நுழைபுலத்தோடுசெம்பொருள் அருளின்நுகர்புலமும் ஒருங்கு சேர விளக்கம் விரிவாக விளங்குகின்றது ஐந்து முதல் பன்னிரண்டு வரை ஆண்டுகள் எட்டாகும். 'அவைகளைப் பன்னிரண்டு ஆண்டுககன்னிப்பெண் தொடக்கம் ஒவ்வொரு திருப்பாட்டுக்கு ஒவ்வொருவராகப் பிறரொடு சேர்ந்து எழுப்புவதாகக் காணும் விளக்கம் மிகவும் விழுமியது. ஒரு புடையாகப் பேதை, பெதும்பை, மங்கை என்னும் பருவம் மூன்றும் புலம்பு, புணர்வு, புரிவு என்னும் நிலையோடொக்கும் இம்மூன்றும் முறையே கேவல, சகல, சுத்தம் என்ப நுகர்புலம்—அனுபவ அறிவு.

## தீக்கை

செம்பொருள் துணிபில் தீக்கை மிகச்சிறந்தது. அதனைப் பதின் மூன்றும் திருப்பாட்டாகிய 'பைங்குவளைக் கார்மலரால்' என்று தொடங்குவதன்கண் காணப்படும் ஒப்புக்களால் மிகப்பொருத்தி விளக்கியிருப்பதுடன் இயற்கை நலங்களும் தீக்கைக்குத் துணை செய்கின்றன எனனும் குறிப்புப் போற்றிப் புகழ்ந்து கைக்கோடற்குரித்து தீக்கைக்கு வேண்டுவன அருளாசானல் காணடல், கருதல், தீண்டல், கட்டுரைத்தல் என்பன. இவை முறையே நயனம், மானசிகம், பரிசம், வாசிகம், என்ப. இவற்றைக்குறிக்கும் குறிப்பு முறையே 'காமலர், செங்கமலம், அங்கம் குருகினம், அரவம்' என்னும் சொற்பொருள்களை இயற்கையொடு பொருத்தி மெய்யுரை கண்டு விளக்கும் மாண்பால் விளங்கும் இப்படியே ஒவ்வொரு திருப்பாட்டிலும் சித்தாந்தத்தோடொத்துச் செம்பொருள் கண்டுள்ளார்கள். அதனை அனைவர்களும் பல்காற் பயின்று அகமுறத் ர்பாலர.

## பன

இவ் ஒரு நூலைக் கற்பார் இதனகண் நுணுக்கமாக எடுத்தாளப்பட்டுள்ள தொல்காப்பியம், திருக்குறள், பரிபாடல், பத்துப்பாட்டு முதலிய சங்க நூல்களும், திருமுறை, மெய்கண்ட நூல் முதலிய அருள் நூல்களும், திருவாதவூரடிகள் புராணம், பாகவதம், திவ்வியப்பிரபந்தம், நைடதம், திருவிளையாடல் புராணம், கந்தபுராணம், தாயுமானர், குமரகுருபரர், கலைசைப்பதிற்றுப்பத்து முதலிய பொருள நூல்களும் ஆகியவற்றின் அருமை பெருமைகளை எளிதிற் கற்றுணர்வர்

நம்பேராசிரியரவர்கள் திருவருளால் செய்து முடிக்க எடுத்துக் கொண்ட திருவாசகத் திருத்தொண்டு நிறைவுற நெடுவாழ்நாளும், உடல், உளம், உணர்வு முதலியவற்றின் உரமும், நலமுதலிய துணைகளும் முழுமுதற் சிவபெருமான் அருள்வாராக. யாமும் வேண்டுவோமாக.

---

திருநெல்வேலித், தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்
கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.




சிலம்பு உஎ } திருவள்ளுவர் ஆண்டு கசூஅச, பங்குனி எப்ரல், 1953 { பரல் அ

# வாஞ்சுவகுத்த தமிழகஎல்லை ஒவ்வா

திரு வாஞ்சு அவர்கள் வகுத்தமைத்த பரிவுரைக் குறிப்பின்படி ஆந்திர நாட்டின் தென்பால் எல்லை சித்தூர்வரையும் அமைவதாகத் தெரியவருகின்றது அஃது இயற்கை அமைப்புக்கும், பண்டையோர் கொண்டுள்ள தண்டமிழ் முறைகட்கும், கலைபபண்பிற்கும், கடவுள் வழிபாட்டிற்கும், ஆங்குள்ள தொன்மைதொட்டு வாழும் நன்மூதாளர் மொழியமை கொள்கைக்கும் முற்றும் மாறாக அவர் கருதத்துக் கூறுவது தறகால வெளிப்படைத் தோற்றக்குறிப்பு நோக்கி ஆகும்

தற்பொழுது சித்தூர்சசில்லா என வழங்குவது மிகமிக அண்மையில் ஆட்சி அமைவு நோக்கி முன்னுள்ள ஆட்சியினர் கடப்பை, நெல்லூர், வடார்க்காடு என்னும் மூன்று மாவட்டங்களினின்றும் ஆந்திரப் பகுதியில் சில கூற்றங்களும் (தாலூகா) தமிழ்ப்பகுதியில் சில கூற்றங்களும் பிரித்தெடுத்து ஒன்றுசேர்த்துப் புதிதாகப் படைத்துக்கொண்ட மாவட்டமாகும் இவ்வுண்மைகள் எல்லாம் வரப்போகும் எல்லை வரையறை முதன்மையர் முன்பு தமிழகப் பெருந்தலைவர்கள் சான்று காட்டித் திருப்பதி மலையின் வடபாலவரைத் தமிழக எல்லை என வற்புறுத்தி உண்மையும் நடுவுநிலைச் செம்மையும் தோன்ற அமைக்க வேண்டுவன செய்வார்கள் மத்திய அரசியலாரும் உண்மை நோக்கி முடிவுசெய்வார்கள் என நம்புகின்றோம். தமிழகப் பெருமக்களும் அங்ஙனமே எதிர்பார்க்கின்றனர். அதற்கு வேண்டும் கிளர்ச்சியும் ஆங்காங்கே செய்வர்.

தொன்மை

ஏறத்தாழ ஆறாயிரம் யாண்டுகளுக்கு முன்னுள்ளதாக எல்லாராலும் கருதப்படும் ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்

பியப் பாயிரத்து "வடவேங்கடம் தென்குமரி, ஆயிடைத், தமிழ் கூறும் நல்உலகத்து" என்று தமிழக இருபால் எல்லை ஓதியருளப்பட்டுள்ளது இவ் எல்லை மாறுமல் சங்க நூல்களிலும் சிலப்பதிகாரம் முதலிய சான்ருோ நூலகளிலும் காணலாம்.

தமிழ்

திருப்பதித் திருக்கோவிலின்கண் திருமால் அடியவராம் ஆழ்வார் பன்னிருவாகளாலும் பாடியருளப்பெற்ற நாலாயிரச் சீர்நூல் பனுவல் திருப்பாட்டினை முறையாக ஓதி நாளவழிபாடு சிறப்புவழிபாடுகள இன்றும அன்பார்வ அறிவுசோ மெய்யடியார்கள தமிழிலேயே செய்து போதருகின்றனர். அதைப்பற்றி நடுநிலை மன்றத்துக்கண் வழக்கேற்பட்டு ஆய்ந்து உண்மை கண்டு அணைமையில் தொன்மைத் தமிழ்முறைப்படியே வழிபாடு ஆற்ற வேண்டுமென்று முறைமைத்தீர்பபும அளிககப்பட்டுள்ளது. திருப்பதி தமிழ்ப்பண்பாடுள்ள எல்லையே என்பதைக் கண்கூடாகக காட்டும் வலிய சான்று ஆண்டுள்ள தமிழ்க்கல்லூரியே ஆகும். திருப்பதித திருக்கோவிலின்கண் காணப்படும கல்வெட்டுக்கள் அனைத்தும் தமிழே. அதற்கு வழங்கும் திருப்பதி திருவேங்கடம் திருமலை என்னும் திருபபெயர்களும தமிழே. இவற்றைஎல்லாம எலலை வரையறை முதன்மையாபால் நன்கெடுதது விளக்கின் அவர் தாமாகவே முறைசெய்வர் என்பது துணிபு தென்பால் எலலையாகிய கன்னியாகுமரித் திருக்கோவிலின்கண் இன்றும் தேவார திருவாசகங்கள் ஓதப்படு

குறிப்பு

மததிய அரசியலார் மொழிவாரி மாகாணப பிரிவினையை மனங்கொண்டு நேர்மை வழியில் கையாளத்தொடங்கி ஆவன செய்வது அறமுறை திறமபா அனைவராலும் மிகவும் பாராட்டத்தக்கது. மொழிவளர்சசியால் கலைவளர்சசியும, கலைவளர்ச்சியால் பண்புபபெருக்கமும், பண்பினுல் ஒற்றுமையும், உழைப்பும, பொருள்நிலையும் ஓங்கும் அலுவலாளர்களுள் வேலைகளைப் பகிர்ந்துகொடுதது ஊக்கமூட்டித் தொகுதி தொகுதியாகச் செயற்படுததின் வேலைகள் எளிதாகவும கடிதாகவும மிகுதியாகவும் செய்யபபடும் என்பது சொல்லாமலே அமையும் அம்முறையில் நம பிறப்பினராய் (சகோதரர்) இணைந்திருக்கும் மலையாள கன்னட அன்பர்களும் பிரிந்து தத்தம மொழி, நாடு, பொருள்நிலைகளை வளர்ப்பார்கள். நாமும நம் தாய்மொழியாந் தமிழ், நாடு, பொருள்நிலைகளை வளர்ப்போமாக. மாகாண மத்திய ஆட்சியினரும் வேண்டுவன செய்து நிறைவுறுத்துவாராக.

ஆசிரியர்.

ஓம
திருச்சிற்றம்பலம்

# திருக்கோவையார் ஆராய்ச்சி

[சித்தாந்த பண்டிதர், திரு. ப. இராமநாத பிள்ளை]

பொருள்

பொருள் மூவகைப்படும. அவை, கட்புலனாவது, கருத்துப் புலனாவது, கலப்புப புலனாவது என்ப கட்புலனாவது காண் பாரககு வேறாய், உருவுடையதாய், சுட்டி அறியப்படுவதாய், தோன்றி ஒடுஙகுவதாய், நிலையில்லதாய் உள்ள அழிபொருள. அதனைக் கடல் மலை யாறு நிலம் முதலனவாகக் காணபபடும் உலகம் எனவும, உடல் உறுப்புக்கள் எனவும் கூறலாம இவை தொழிலும பண்பும் வாய்ந்த பண்புடைப்பொருளகள் அன்பு அறிவு செறிவு முதலிய பண்புகளைக கருததுக்குப புலனாகக் கொள்வதல்லது கண்ணுக்குப் புலனாகக்கொளவதில்லை. எனவே, அதனை கருத்துக்குப் புலனாவதெனவும அருவப்பொருள் எனவும் கூறுவர் ஆணும பெண்ணும் பூணும அன்பால் மருவி இன் புறும ஐமபுல இன்பததைக கலப்பின்தன்மையால் பிரிக்க முடியாதபடி உணர்வின்கலபபால் உணர்விறந்துணர்வதோர் ஒப்பில இன்பம் என்று கூறுவதல்லது வேறு ஒருவாற்றானும் கூற ஒண்ணாதது இதுவே அக இன்பம் இதனை அகம எனக கூறின் ஆகுபெயரால அகததுநிகழ் இன்பத்தினைக் குறிக்கும. இது பற்றியே பரிபாடற்கண களவுப்புணாச்சியாகிய அகததமிழ் சிறந்ததென்று ஓதபபெற்றது அது வருமாறு :

" தள்ளாப் பொருளியல்பின் தணசமிழாய் வந்திலா
கொள்ளாஇக் குன்று பயன் " —பரிபாடல், ௯-௨௫, ௨௬

எனவே, அக இன்பத்தினை அருவமுங்கடந்த அறிவுப்பொருள் எனக் கூறலாம்.

நிலைப்பன

உருவப பொருளும அருவப்பொருளும் காரணத்தினின் றும் காரியமாய்த தோன்றிச் சின்னாட்கள் நின்று பயன்தந்து மீண்டும் காரணத்தில் ஒடுங்கிவிடுவன. எனவே இவற்றை நிலையாப்பொருளகள என்போம். இவை அறிவுடையனவல்ல. அறிவில்லாத மாயா காரியப்பொருள்களே. மாயை அழியாது.

அறிவிக்க அறியும் இயல்புவாய்ந்த உயிர்களும் தானே அறியும் தன்மைவாய்ந்த கடவுளும என்றும அழிவில்லாத நிலைத்த பொருள்களே உயிர்க்கு அறிவிப்பது கடவுளே. உயிர் மாயாகாரிய உடற்சார்பினல் தோற்ற ஒடுக்கம் உள்ளதுபோல் காணப்படும அஃது ஆற்றுத்தண்ணீரைக் குடத்தின்கண் முகந்து கொண்டுவந்து வீட்டகத்து வைத்து அன்பாற் பருகி இன்புற்று ஆற்றுநீர் இருக்கிறது, ஆற்றுநீர் இருந்தது, ஆற்று நீர் முடிந்தது என்று கூறும கூற்றுக்கள் எல்லாம் குடத்தின் சார்பால ஆற்றுநீர்க்கு வந்ததல்லவா? அதனை ஒக்கும்.

எனவே பேரறிவுப் பொருளாகிய கடவுளும், அதனைச் சார்ந்து பேரின்பந்துய்க்கும பெற்றிமைவாய்ந்த சிற்றறிவுப் பொருளாகிய உயிரும முறையே துய்ப்பிப்பதும துய்ப்பது மாகிய இனபொடு நிலைப்பன. இதுபற்றியே திருவள்ளுவ நாயனரும்,

> "பொருளல்லவற்றைப் பொருளென் றுணரும்
> மருளானும் மாணப் பிறப்பு." —திருக்குறள், ௩௫௧.

என்றருளினர்.

இன்பம்

உண்மை அறிவு இன்பம என்னும் மூன்று தன்மைகளும் ஒப்பில் முழுமுதலாம் கடவுளுக்கு உள்ளன உண்மை அறிவு என்னும இரு தன்மைகளும் ஆவிகளுக்கு உரியன. உண்மைத் தன்மை ஒன்றே மாயை வினைமலங்கட்கு உரியது. யார் யார் எவ் வெப்பொருள்களான் இன்பந்துய்ப்பினும் அவ் இன்பம் அனைத்தும் இறையருள் இன்பத்திறையே.

அறம் பொருள் இன்பம் என்னும மூன்றும் முறையே உண்மை இன்பம் என ஒருபுடை ஒபபுநோக்கிக் கூற லாம். இம்மூன்றனுள் இன்பம அகம் எனவும, அறமும் பொருளும புறமெனவும் கூறப்படும வீடு எதன்கண் அடங்கும் எனின் புறத்தின்கண் அடங்கும் பேறு அகத்தின்கண் அடங் கும. இன்பம் பொருள் அறம் வீடு பேறு ஐந்தும் முறையே படைத்தலொடு காத்தல் துடைத்தல் மறைத்தலெனச் சொல்ல லாம வேறொருவகையான் நோக்கின் இவ ஐந்தும முறையே குறிஞ்சி. முல்லை, பாலை, மருதம், நெய்தல் எனவும் கூறலாம். இவற்றிற்குச் செம்மை பசுமை கருமை பொன்மை வெண்மை என நிறமுறை ஒப்பும் அறையலாம். இவை அனைத்தும் அடங் கத் திருவள்ளுவநாயனர,

" கண்டுகேட்டு உண்டுயிர்த்து உற்றறியும் ஐம்புலனும்
ஒண்டொடி கண்ணே உள." —திருக்குறள், ௧௧௰௧.

எனத் தாம் அருளிய தெய்வத் திருத்தமிழ்ப் பொதுமறையின் கண் அருள்வாராயினர்.

ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியத் தமிழ்முனிவரனும் இன்பத்தினையே முன் அமைத்துக் கூறியருளினர். அது வருமாறு :

" இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு
அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கில்
காமக் கூட்டங் காணுங் காலை
மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள்
துறையமை நல்யாழ்த் துணைமையோர் இயல்பே"
—தொல் பொருள் ௯௨.

ஒழுகலாறு

இன்ப ஒழுகலாறு அன்பினில் விளைவது. இவ் அன்பே இல்வாழ்வின் பண்பு. இதன் புடைபெயர்ச்சியே அறம். இவற்றிற்குத் துணையாவதே பொருள். பொருட்சார்பே ஆட்சி ஆட்சித் துணையே நண்பு நண்பின்சிறப்பே வாழ்க்கைத்துணை. வாழ்க்கை நெறியே 'மலர்மிசை ஏகினான் மாண் அடிசேர்'க்கும் நன்னெறி. இதுவே 'சிறந்தது பயிற்றலாகிய இறந்ததன்பயன்'* ஆட்சி வீட்டாட்சியும் நாட்டாட்சியும் என இருவகைப்படும். வீட்டாட்சிப் பயிற்சியிலார் நாட்டாட்சிக்கு உரியரல்லர் " அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை,பண்பும் பயனும் அது,"† " ஈறிலாப் பதங்கள் யாவையும் கடந்த இன்பமே என்னுடை அன்பே,"‡ " அன்பினில் விளைந்தஆர் அமுதே"§ என்னும் அருள்மொழித் திருப்பாட்டுக்களான் மேலன வலியுறுத்தப் பெறும்.

இவ் ஒழுகலாற்றினை ஒரு கோவைப்படுத்தி நல்லனநாட்டுவதே அகப்பொருட் குறிப்பு அகப்பொருள் வகையாம் களவு கற்பு என்னும் துறைகளின் விரியே கோவையாகும் இக்கோவை உய்த்துணர்வார்க்கு நாடகத்தமிழாய் நன்னலம் பெறத் தோன்றும் இயல் இசை நாடகம் மூன்றும் முறையே உயிர் உள்ளம் உடல் எனக் கூறலாம் இம் மூன்றும் நினைவு சொல் செயல்—உன்னல், உரைத்தல், உழைத்தல் எனவும் கூறத் தகும்.

* 'காமஞ்சான்ற' தொல். பொருள் - ௧௯௨. † திருக்குறள், ௪௫. ‡ 'மாறிநின்' அ. கோயில் - ௧. § 'அம்மையே' அ. பிடித்த - ௩.

இவ் அகத்தமிழினை ஆண்டவன் தொடர்போடும் அடிமை நினைவோடும், குடிமைமாண்போடும், மிடிமை அகல மெய்யுணர்வு கைவரப்பெற்ற செம்பொருட்டுணிபினராம் முனிவர் பெருந் தகையார் ஆளுடைய அடிகளார், அருளினர். அந்நூல் 'திருச் சிற்றம்பலக் கோவையார்' என்னும் திருப்பெயருடன் திகழ்

அடிகளார் மூவர்க்கும் முந்தியவராய்ச் சங்க காலத்துக்குச் சற்றுப் பிந்தியவராய்த் திகழ்ந்தனர் என்பது தேற்றம். அதனால் சங்கத்தொகை நூலின் பெரும்பான்மை எண்முறைபற்றித் தாம் அருளிய திருக்கோவையாரின் கண்ணும் நானூறு திருப்பாட்டுக் களே அருளி உள்ளனர். எட்டுத் தொகையுள் ஐந்து 'சுட்டி ஒருவர் பெயர் கொளப்பெறா' அகத்தமிழாகும் அவை, நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறு நூறு, கலித்தொகை, நெடுந் தொகை என்னும் அகநானூறு என்பன இவற்றுள் நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு என்னும் மூன்று நூல்களும் தனித் தனி நானூறு பாட்டுக்கள் கொண்டன எஞ்சிய பதிற்றுப் பத்து, பரிபாடல், புறம் என்னும் மூன்றனுள் புறம் நானூறு பாட்டுக்களைக்கொண்டது.

இப்பொழுது வழங்கும் கோவைநூல்கள் அனைத்தும் திருக்கோவையாரின் அடிச்சுவட்டொற்றிப் பின் எழுந்து திகழ் வனவே திருக்கோவையாரை மேல்வரியாகக்கொண்டு இலக் கண விளக்க நூலாரும் நூற்பா யாப்பாராயினர். அது வருமாறு:

"முதற்பொருள் கருப்பொருள் உரிப்பொருள் முகந்து
களவு கற்பெனும் வரைவுடைத் தாகி
நலனுறு கலித்துறை நானூ றாக
ஆறிரண் டுறுப்பும்* ஊறின்றி விளங்கக்
கூறுவது அகப்பொருள் கோவை ஆகும்."

—இலக் பாட்டியல் - ௫௬.

தலைவன்

கோவை நூற்கண் பாட்டுடைத்தலைவன் அந்நூற்கு உரிய வன். களவித் தலைவன், அந்நூற்கண் பேசப்பெறும் திணை துறை கைகோள் முதலிய பொருள்கோட்கு உரியவன் இவனே பாட்டகத்துறும் பயன் எய்துபவன். இவனே ஒழுகலாற்றுக்கு உரியவன். பொருள்கோள் முறையை இறையனார் களவியல் கூறுவது வருமாறு:

*க. அகத் - க௩௩.

"திணையே கைகோள் கூற்றே கேட்போர்
இடனே காலம் எச்சம் மெய்ப்பாடு
பயனே கோளென்று ஆங்கப் பத்தே
அகன்ஐந் திணையும் உரைத்தல் ஆறே." —இறை. கற்பு-உ௩.

பாட்டுடைத்தலைவன் கிளவித்தலைவன், உள்ளிட்ட நாட்டுக்குத் தலைவன் ஆவன் பாட்டுடைத்தலைவன் குறுநில மன்னனைப் பெருநில மன்னனைய், முடியுடைவேந்தனைய், வேநதாக்கு வேந்தனைய் உள்ளோனுவன். கிளவித்தலைவன் வீட்டுக்குத் தலைவன் ஆவன். ஏனைக கோவை நூற்களுக்குப பெரும்பான்மையும் பிறந்து வளர்நது பெருகிச் சிறந்து இறந்து தடுமாறும் மக்களையே பாட்டுடைத் தலைவனகக் கொண்டுள்ளனர் ஆனல் நம் திருக்கோவையார்க்கு அனைத்துயிர்க்கும் வேந்தனும் அம்பலவாணனையே பாட்டுடைத் தலைவனகக்கொண்டருளினா முழுமுதற் சிவபெருமானே வேந்தன் என்பது "வேந்தன் மேய தீம்புனல் உலகம்" என்னும் ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியனார் நூற்பாவானும உணர்க. அந்நூற்பாவிற்கு இந்திரன் என உரை கண்டது இயைபில் உரையாம. என்னை? முல்லை குறிஞ்சிகட்குச் சேயோனும் மாயோனும சேயும் தாயும் ஆவர் அம்முறையில் மருதத்திற்குச சேயும தாயும தந்தையுமாய்த் திகழும் போகம் ஈன்ற புண்ணியனுகிய கண்ணுதற் கடவுளாம் சிவபெருமானே இயைபுடையன் ஆவனன்றி இயைபில்லாத இந்திரன் ஆண்டைக்கு அமையாமையான் என்க மேலும் தொகைநூல் வைப்பு முறையில் ஐங்குறுநூறு மருதத்திற்கு ஆகும். நற்றிணை முல்லைக்கும், குறுந்தொகை குறிஞ்சிக்கும் ஆகும். இவ்விரண்டிற்கும் கடவுள் வாழ்தது முறையே மாயோனுக்கும் சேயோனுக்கும் அமைந்திருப்பதுபோன்று ஐங்குறுநூற்றுக்கு அம்மையபபராம் சிவபெருமானுக்கு அமைந்துள்ளது அத்திருபபாட்டு வருமாறு.

"நீல மேனி வாலிழை பாகத்து
ஒருவன் இருதாள் நிழற்கீழ்
மூவகை உலகும் முகிழ்த்தன முறையே."
—ஐங்குறுநூறு, கடவுள் வாழ்த்து.

௧. காட்சி*

பிறப்பு முதலிய பத்தும் ஒத்துப் பால்வகையான் எதிர்ப்பட்ட தலைவன தலைமகளை முன்கண்டறியாத திருவுரு அமைப்பால் ஐயுறுகின்றனன் அவ் ஐயுறவு வெவ்வேறு உருவகமாகா

*'திருவளர் தாமரை' திருக்கோவையார், ௧.

மல் மலர் உருவகமாக மலர்ந்திருப்பதும் ஓர் மணமே. மேலும் மாலை என்பது பெண்ணைக் குறிக்கும் சொல்லாதலாலும் இயை புற இயைந்தது.

தாமரை மலரும், நீலமலரும், குமிழமலரும், கோங்க மலரும், செங்காந்தள் மலரும் ஒவ்வோர் உறுப்பாகக்கொண்டு தெய்வமணம் கமழுகின்ற மாலை (பெண்) வல்லிக்கொடிபோல் நுடங்கி, அன்னநடை வாய்ந்து வடிவுவளரும காமன் வெற்றிக் கொடிபோன்று விளங்காநின்றது. என்ன வியப்போ!

தாமரையால் முகமும், நீலத்தால் கண்ணும், குமிழால் மூக்கும, கோங்கால் முலையும, காந்தளால் கையும உருவகமாகப் பெறப்பட்டன. ஆயின் தாமரை முகம், நீலக்கண், குமிழ்மூக்கு, கோங்கமுலை, காந்தள்கை என்றிருப்பின் தாமரைபோலும் முகம் என உவமையாகும் முகத்தாமரை, கண்ணீலம, மூக்குக் குமிழ், முலைக்கோங்கு, கைக்காந்தள் எனக் கூறின் உருவக மாகும எனவே முகத்தாமரை என்பதன் பொருள் முகமாகிய தாமரை எனப்பெறும்.

(தொடரும்)

# அழகு

'திரு' என்பது கண்டாரால் விரும்பப்படும் தன்மை நோக்கம் இதுவே அழகு தாமரை, நீலம், குமிழ், கோங்கம, காந்தள் முதலியன பூவையுணர்த்தின. அப்பொழுது அவை அடையடுத்து நின்றதோர் ஆகுபெயா ஈசா தில்லை என்பதை எல்லாப் பூக்களோடும் கூட்டுக. ஈசா திலலை என்றதனுல அவன் நினைப்பும், அவனருளாலே எல்லாப் பொருள்களும் படைத்துக்காத்தத் துடைக்கப்படுகின்றன எனனும உணமை யும புலனும் பொருட்பயன் கொள்ளுவதன் முன்னம் அப் பொருள் ஆண்டவன அருளால் தரப்பட்டதென்னும் தனி மாண்பு ஒருவன் உள்ளத்தில் தோன்றுவது எத்துணைச சிறந்தது பாாமின்! அந்நினைவு அப்பொருள் பொதுமையதெனபதும, உரிமையும் தகுதியும் உள்ளார்க்கெய்தும் அருமையுடைத் தென்பதும் பெறப்படும்.

—இனியன்.

# சிறுகோட்டுப் பெரும்பழம்

[திரு. க குமரன் குடியேற்றம்.]

'இயற்கையின்பத்தையே நுகர்ந்து இயற்கையொடொன்றி வாழ்ந்த தமிழன் தன் பின்னோருக்கெனச் சேர்த்துவைத்த சேமநிதி—வாழ்க்கை வரலாறுகளைப் படமெடுத்துப் பேசவைக்கும் ஆற்றலற்ற பண்டைநாளில் வாழ்ந்த தமிழன் தன் நுண்ணறிவினால் தன் வரலாறுகளைப் பினனோாக் குணர்த்துவான் இயற்றிய பேசும்படம்—கன்னியின் காதல் நோக்கு ஒருபக்கம வருதத, அதேசமயத்தில் நாடுகாக்கும் கடமை ஒருபுறம தன்னை ஈர்க்க—'பெற்ற தாயினும் பிறநத பொன்னாடு நற்றவ வானினும் நனி சிறந்தனவே' எனறு போரில மறவர்கள மடிநதவற்றைக் காட்டும் எண்ணற்ற நடுகற்கள.

'மாசிலா மனமே தூய அறம்' என மதிததுக் கணணோட்டத்துடனே ஆளவேண்டும எனும் கோளபடைத்து ஆளும் நேரத்திலே 'கொலையிற் கொடியோரை வேந்தொறுத்தல பயிரின் இடையிலே ஏற்படும களையைப போக்குவது போன்றதாம் எனமதித் தரசாண்ட மன்னாகளின் வரலாறு காட்டும கல்வெட்டுக்கள்' என்றெலலாம் பலபடப பாராட்டிப் பேசத்தகுவன சில இருக்கினறன. அவை யாவை? அவையே பத்துப் பாட்டு, எட்டுததொகை, பதினெண கீழ்க்கணக்கு எனற நன்னீர்மை படைத்த தொன்னூல்கள்.

அவைகளில் நல்ல குறுந்தொகையில் நூற்றுக்கணக்கான பண்பட்ட புலவாகளின பாடலகள காணபபடுகின்றன. அநநூல தமிழரின் அகவாழ்வைத திறமபடக் கூறுபடுத்திக் கூறுவதாம். அக குறுநதொகைத தேனில் ஒருதுளியைச் சுவைததுநெடுநாள் மறநத தமிழர்களின் செந்நாக்கிலே சொட்டவைத்துப் பண்டினிமைபெற்று மகிழட்டும் என மதித்துச் சொட்டுறன்; சுவைக்க.

அவன் ஓா சாரல் நாடன்; அவள் ஓர் குறிஞ்சி நிலத்தள்; இருவர்க்கும எவ்வாறோ காதல் ஏற்பட்டு முதிர்நதது. இயற்கைப் புணர்ச்சி, இடநதலைப்பாடு, பாங்கற்கூட்டம், பாங்கியிற் கூட்டம் எல்லாம் முடிந்து இரவுக்குறியில் வந்து பழகிப் போனான். அநநேரத்திலே தலைவியின்தமர் தலைவியைப் பிறருக்கு வரைவு எதிர நினைத்தனர். அப்போது தலைவி தன் தமரிடம்கூறித் தடுத்து விடலாமென்றாலோ நாணம் மிகவுடையள்.

ஆகலின், குப்பைக் கோழிகளின் போரைப்போல, அவைகளே சண்டையிட்டு அவைகளே விலக்குவாரின்றி விலகி அமைவது போல—அவளுடைய காமநோய்க்கு அவளே இறையாகி அவளே தனக்குள் ஆறுதல் சொல்லி அமைந்தனள். தலைவன் பால் செலுத்திய அன்போ அசைக்க முடியாதது. அன்பிற்கும் உண்டோ அடைக்குந் தாழ்! அதனால் தலைவனிடம் இரவில் சந்தித்து நன்றாகப் பழகி இன்பமடைந்து வந்தாலும் அவளுக்கு அமைதி ஏற்படவில்லைபோலும்! இக் கருத்தை அவள் உடல் காட்டிவிட்டது. ஏன்?

தலைவன் வரும் ஆறு அரியும், அராவும், வாள்வரியும் இரை தேடும் இராப்பொழுதென்பது ஓர் வருத்தம!

ஏதிலார்வரையத் தமர் உடன்படுவர் என்ற ஐயம் மற்றோர் வருத்தம்!

ஊரார் கூறும அம்பலும கௌவையும் இன்னொன்று!

இவற்றால் அலைக்கப்பட்ட தலைவி தலைவன் வரைவுநீட்டித் தலைப் பொறாமல், காமநோயும் நீட்டிப்ப உடலிளைத்து, கற்புக்கு ஊறு ஏற்படின் இன்றே, இப்பொழுதோ உயிர் விடுவள் என்ற நிலை ஏற்பட்டது. இந் நிலையைத் தலைவி தலைவனிடம் கூறி விரைவில் வரைந்துகொள்ள வேண்டுமென வற்புறுக்கலாம். ஆயின், அவள் ‘முந்தை யிருந்து நட்டோர் கொடுப்பின் நஞ்சும் உண்பர் நனி நாகரிகர்’ என்பதை உணர்ந்தவளாதலின் தலைவனுக்கு நேரே கூறிற்றிலள். இந்நிலையில் அவளுடைய கண் போலும் உயிர்போலும சிறந்த காதற்றோழி தன் பாங்கைக் கண்டு யாதுஞ் செய்யாமலிருக்க முடியுமா? உடுக்கை யிழந்த போது கையன்றோ நட்பு!

ஒருநாள் இரவில் குறிக்கண் வந்து கூடிப்போகும் தலைவனைத் தோழி கண்டு பேசலுற்றாள்.

தோழி:—சாரல் நாட! செவ்வியை ஆகுக! இவ்வமையந் தவறின் பேரிடர் பெறுவை சொல்லிவிட்டேன். பிறகு என் மேற் பழி கூறாதே. நானொன்று கூறுவன் கேள். நீ நின் மலைக்கணுள்ள வளப்பத்தை எனக்கு

[தலை]வன் :—என்ன! சமயந்தவறின் பேரிடர்வரும் என்பதற்கும், என் மலைவளங் கூறற்கும் என்ன தொடர்பு! இருப்பினுங் கூறுவன். என்மலை மிக்க வளமுடையது. பலவின் விளைவால் பாரெல்லாம் மணமவீசி மக்களைத் தேனீக்களாக்கித் தன்னிடத்தே ஈர்க்கும் சிறப்புடையது. என்ன பலா தெரி

யுமா? அதுவும் வேர்ப்பலா. மிக்க இனிமையுடையது. அதை நாங்கள் பாதுகாப்பது எப்படித் தெரியுமா? உங்களைப்போல வேலிகட்டியோ, முள் சார்த்தியோ அல்ல. இயல்பாகவே மூளைத்த வேரல்மூங்கிற் புதர்களே வேலிகள்! புரிந்ததனையோ? நான் வளங் கூறிவிட்டேன். நீ எனக்கு வரும்இடர் கூறுவை.

தோழி:—ஓ! வரும்இடரா? அது பின் கூறுவன். நான் கூறுவது உன் மலைவளங்களிற் காணப்படவில்லையா?

தலைவன்:—என்ன அது?

தோழி:—நின் மலையில் எங்கேனும் பாதுகாப்பற்ற இடத்திலே முளைத்த கொம்புப்பலா இருக்கின்றதா? அம்மரத்திலே மெல்லியதாகவும—சிறியதாகவும்—தாங்க முடியாததாகவும்—மரத்தின் உச்சிக்கண் அமைந்துள்ளதாகவும் உள்ள மரக்கொம்பிலே ஒருபெரிய—இருகையாலும் தழுவலாகாத—பலாப்பழமொன்று தொங்கக் கண்டனையோ? நின்மலையிற் காணுகிலாலும் வேறு எங்கேனும் கண்டதுண்டோ?

தலைவன்:—புதுமை! புதுமை!! இதுபுதுமை! எனக்கு வேர்ப்பலா அன்றிக் கொம்புப்பலா தெரியாது! அதிலும் சிறு கொம்பில் பெரும்பழந் தொங்குவது கேட்டதுங் கிடையாது. அவ்வாறிருந்தால் கீழே திட்டென்று விழுந்துவிடாதோ?

தோழி:—ஆ! இஃது அறியாமை! நீ நன்றாகக் கண்டு வைத்திருந்தும் காண்டற் பகை கூறுகின்றனை.

பவன்:—ஆ! என்றும் பொய்த்தறியாத என் நா இன்று வாயிழந்தது என்று கூறுவது என்னை?

தோழி:—ஆம்! நீ வாய் இழந்தனை—வாய்மையையும் நீ நன்றாகக் கண்டுவைத்து நேசித்த பாதுகாப்பற்ற தலைவி நின்பாற் காதலுற்றுப் பெற்ற காமக்கனி மிகப் பெரிதாகி அவளுடைய சிற்றுயிர்க் கொம்பிற்குத் தாங்கற்கரிதாகி உயிர்போம் நிலையிலே, உள்ள உரத்தால் நீ காணப்பெறும் உடல்பெற்று நின் முன்வந்தாள் என்பதனை உணர்ந்தனையோ? அது நன்கு உணர்ந்தனையாயின் பாதுகாப்பில்லா இடத்திலே முளைத்த கொம்புப்பலாவிலுள்ள சிறுகொம்பில் பெரும்பழந் தொங்கிக் கீழ்வீழ் நிலையை உணராயோ? இப்போது புரிந்ததா நின் வாய்மை! அப்பழம் எதுவென்றும் புரிந்திருக்குமே!

நின்பாற் றலைவியின் காதலோ பெருவரவிற்று! அவளை வரைய ஏதிலர் காத்துக்கொண்டிருக்கின்றனர்! ஏதிலர் மணம் பேசிவரின் உயிரினுஞ் சான்ற கற்பிழந்து உயிர்வாழத் துணி

யாள் மயிரிழந்து வாழாக் கவரியன்ன தலைவி! நீயோ இவ்விர வுக்குறியையே பெரிதென மதித்து நாள நாள்பயின்று கால நீட்டித்து வரைந்துகொள்ளாயாயின் நின் உயிர்போற் றலைவியை இழக்கநேரிடும். எனவே செவ்வியை ஆருக கால நீட்டிக்காமல் விரைவில் வரைந்துகொள்க!

தலைவன்.—தோழி! என் அறியாமையை யான் நன்குணர்ந்தேன். ஆம! அவள்..........

"சிறுகோட்டுப் பெரும்பழந் தூங்கி யாங்குஇவள்
உயிர்தவச் சிறிது காமமோ பெரிது"

நின்பால் நன்றியுடையேன். இன்றே சென்று வரைவுக்காவன செய்வன்.

பிரிந்தனா தோழியுந் தலைவனும்.

மேற்கண்ட காதற்காட்சி பழந்தமிழரின் காதல் மாட்சிகளிலே யொன்று. மேற்குறித்த செய்தியில் தோழி தலைவனிடந் தலைவியைக் குறித்து இரந்தமை கறபுமாண்புக கன்றோ? களவிற்கூடி மகிழ்ந்துசென்ற தலைவனுடைய போக்கைக் கண்டிக்கத் தோழி கையாண்ட கருவி என்ன தெரியுமா? அதுதான் சிறுகோட்டு (கொம்பு)ப பெரும்பழம்! தலைவனும் தலைவியும் குறிஞ்சி நிலத்தவர்கள அவர்கள் நாடோறும பார்த்துப் பயின்ற மரம பலாமரம அம மரத்திலுள்ள சிறுகோட்டுப பெரும்பழமே தலைவனைத் திருத்தியது இவவாறு இடத்திற் கேற்ப இயற்கையோடியைந்த உவமையைத் தோழி கூறியதன் காரணம அக்காலத் தமிழர்கள் இயற்கையோடு எந்நேரமும பொருந்திவாழ்ந்து, அதை ஊடுருவிப பார்த்துத் தங்கள் ஒழுக்கத்தைச் சீரபடுத்திக்கொள்ளும அளவுக்கு அதனோடு பழகி வளம்பட வாழ்க்கை நடத்தியதாலன்றோ? இக காட்சியைப் படம்பிடித்துக் காட்டிய கலவியிற் பெரியார யார்? அவரே கலைவல்ல பரணரின நண்பர் கபிலர். அவர் பாட்டு இன்னும் பல்லாயிரம ஆண்டுகள் வாழி!

'வேரல் வேலி வேர்க்கோட் பலவின
சார லுட செவ்வியை ஆகுமதி!
யாரஃ தறிந்திசி னோரே சாரற்
சிறுகோட்டுப் பெருமபழந் தூங்கி யாங்கிவள்
உயிர்தவச் சிறிது காமமோ பெரிது.' —குறுந்தொகை ௧௮.

# மதுரைநாயகம்பிள்ளை வரலாறு*

[திரு. வ. திருவரங்கம் பிள்ளை]

கல்வி கேள்வி அறிவொழுக்கங்களிலும் சிவபத்தி அடியார் பத்தியிலுஞ் சிறந்து, சைவசமயத்தைப் பரவச்செய்யு முயற்சியில் தமது ஆயுள்காலம் முழுமையும் பயன்படுத்திவந்த இப்பெரியவர் விரோதிகிருது ஆண்டு ஆடித்திங்கள் கூ-ஆம் நாளன்று திருச்சிராப்பள்ளியிற் பிறந்தனர். இத்தென்றமிழ் நாட்டிற் றமிழ்மொழியையும் சைவசமயத்தையும் விளக்கி மகா வித்துவானென்னத் தமிழ்ப்புலவர்களாற் கொண்டாடப்பெற்ற திரு மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கட்கு இவர் உறவினர். அவர்களோடும் அவர்கள் மாணாக்கரான திரு. தியாகராயச் செட்டியார் முதலான அரும்பெருந் தமிழ்ப்புலவர்களோடும் நட்புரிமை கொண்டவர். நாகை வெளிப்பாளையத்தில் முறைமன்றில் 55 ஆண்டுகள் இவர்கள் அமீனாவேலை பார்த்து வந்தமையால் இவர்களது வாழ்நாளின் பெரும்பகுதி நாகை வெளிப்பாளையத்திற் கழிந்தது. இவர்கள் அங்கிருந்த காலத்திற் றமது இளம் பருவத்திலேயே நல்லார் இணக்கமும் சைவசமய நூல் உணர்ச்சியும் பெற்றுவந்தனர். அப்போது நாகூரிலும் நாகபட்டினத்திலும் புத்தக வியாபாரம் நடத்திவந்த இயற்றமிழ்ப்புலவரும், அன்பு, அருள், அமைதி, பொறை முதலான உயர்குணங்களிற் சிறந்து விளங்கினவருமான திரு வெ நாராயணசாமிப் பிள்ளையவர்களை அடுத்து அவர்கள்பால் திருவிளையாடல் பெரியபுராணம் முதலான உயர்ந்த சைவசமய இலக்கியங்களையும் பிறவற்றையும் பாடங்கேட்டு உணர்ந்து சிவபத்தியிற் சிறந்து வளர்வாராயினர். அக்காலத்தில் வைணவ சமயத்திற் கற்றவர் ஒருவர் வெளிப்பாளையத்தின்கண் திருமாலின் பெருமைகளை எடுத்துச் சொற்பொழிவு செய்கையில் தாம் எடுத்த பொருளைக்கடந்து முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானை அளவுகடந்து இகழ்ந்துகூற அதனைக்கேட்டு மனம்பொறாமல், இப்பெரியவர் அப்போது தமிழ்நாட்டின்கட் சைவசித்தாந்த சண்டமாருதமாய் நிகரற்று உலாவிய சிவஞானச்செல்வரும் சித்தாந்த ஆசிரியருமான மறைத்திரு. சோமசுந்தர நாயகரவர்களைச் சென்னையிலிருந்து வரவழைத்து, அவர்களாற் சைவசமய உண்மைகளை எவரும் அறிந்து களிக்கும்படி செய்தனர். அவ்வளவோடு நில்லாமல், நாகையிற் சிவஞானியாய் விளங்கிய மறைத்திரு. வீரப்ப செட்டியார் முதலான சிவநேயர்களின் துணையைப்பெற்று வெளிப்பாளையத்தின்கண் இவர் ஒரு சைவசித்தாந்த சபையை பெறுத்தினர்.

---

* இது, ஷெயார் உலக வாழ்வு நீத்தகாலை வரையப்பெற்றது.

அந்நாளில் நாகையிற் பிறந்து சிறுவயதினராய் ஆங்கில கலாசாலையில் கல்விபயின்றுகொண்டிருந்த திரு. சுவாமி வேதாசலம் அவர்கள் தமிழும் கற்கும் விருப்பம் மிகஉடையவராய், அப்போது நாகையிற் புத்தக வியாபாரம் செய்துகொண்டிருந்த இயற்றமிழாசிரியர் திரு. வெ. நாராயணசாமிப் பிள்ளையவர்கள் திருவடியை அடுத்து அவர்கள்பால் தமிழ் இலக்கண இலக்கிய நூல்களை வரன்முறையாகக் கற்றுவந்தனர். மிகச்சிறிய பருவத்தே ஆங்கில மொழியோடு தமிழையும் செவ்வையாகக் கற்றுவந்த சுவாமிகளிடத்தே இப்பெரியவருக்கு மிகுந்த அன்பு உண்டாயிற்று. மேற்குறித்த இயற்றமிழ் ஆசிரியர் முன்னிலையில் இவர்கள் இருவர்க்கும் உண்டான நட்பு நாளுக்குநாள் வளர்ந்து வரலாயிற்று. ஆசிரியராலும் இப்பெரியவர் நட்பினாலும் சுவாமி வேதாசலம் அவர்கள் மிகவுந் திருத்தமாக வளர்ந்து புலமை நிரம்பினார்கள். பிறகு இப்பெரியவர் முயற்சியினாலேயே சுவாமிகள் மறைத்திரு சோமசுந்தர நாயகரவர்களைச் சித்தாந்த ஆசிரியராகக் கொண்டனர். இப்பெரியவர் சைவ சித்தாந்த உண்மைகளைப் பலநூல் மேற்கோள்களோடு கலலுங் கரையச் சொற்பொழிவாற்றவல்லவராய் இருந்ததோடு சுவாமிகளையும் அடிக்கடி நாகைவெளிப்பாளையம் திருச்சிராப்பள்ளி முதலான இடங்களுக்கு வருவித்து அவர்களால் சொற்பொழிவுகள் செய்வித்தார்கள். நாகையிற் சைவசித்தாந்த மகாசமாஜம் கூடியபோது இவர்கள் செய்த உதவி மிகப் பெரிது. இப்பெரியோர் சாவதாரி ஆண்டு கார்த்திகைத் திங்கள் 5-ஆம் நாள் நாகைவெளிப்பாளையம் சைவசித்தாந்த சபைக் கட்டடத்தை இரண்டாயிர ரூபாவரையில் திரட்டிப் புதுக்கிக் கட்டினர். 1909-ம் ஆண்டு நவம்பர்த்திங்கள் இவர் வேலையிலிருந்து விடுதி பெற்றபின் உறையூரைத் தமக்கு இருப்பிடமாய்க்கொண்டு, அங்குள்ள அன்பர்களை ஒன்றுசேர்த்துப் பெருந்தொகை திரட்டி வாகீச பக்தஜனசபைக் கட்டடத்தைப் பிங்கள ஆண்டு தைத்திங்கள் 10-ஆம் நாள் அமைப்பித்தார். இன்னும் இவர் செய்த நன்மைகள் பல. சிலநாளாக இருமல் நோயாயிருந்து தமது 75-ஆம் அகவையில் 1920-ஆம் ஆண்டு ஏப்பிரல் திங்கள் 3-ஆம் நாள் சிவபெருமான் திருவடிநீழலை எய்தினர்.

இப்பெரியவர்தம் மனைவியாரான திருவாட்டி அம்மணி அம்மையார் அவர்கள் இவர்தம் நல்லியல்புக்கு ஒத்தவர்களாய் இல்லறத்தைச் செவ்வையாக நடத்துவதிலும், விருந்தினரை உபசரிப்பதிலும், சிவனடியார்க்குத் தொண்டு புரிவதிலும், கணவனார் குறிப்பறிந்து அன்புடன் ஒழுகுவதிலும், சமையற்றொழிலிலும் சிறந்து விளங்கினார்கள். தங்கணவனார் சிவபதவி

அடைதற்குச் சிறிதேறக்குறையப் பதினோராண்டுகளுக்குமுன் இவ்வம்மை சிவனடி சேர்ந்தார்.

நிக்கேற்ற ஓா அருமையான ஆண்மகனையும் நான்கு பெண்மகாரையும் பெற்றனர். இவா மகனா திரு. பரமசிவம் பிள்ளை, சுவாமி வேதாசலம் அவர்கட்கு மாணவகராய் அவர்போல் சிததாந்தச சொற்பொழிவுகள் சிறக்கச்செய்து ர். திருவருள் வாழ்க!

நாகைவெளிப்பாளையம் சைவசிததாந்த சபையின் அடியவரும்,
உறையூர் வாகீச பக்தஜனசபை நிறுவியவருமான

**திருவாளர் மதுரைநாயகம் பிள்ளையவாகள் பிரிவுகுறித்த
இரஙகற பாககள்***

[மறைமலையடிகள்]

மணியொளிபோ லெனக்குயிராய மன்னுசிவம் அருள்சுரந்து
துணிவுடைய பிள்ளைமையாம் பருவத்தே துணையாகப்
பணிவுடைய நினைததந்தென் பரிசின்கண துரிசகற்றி
அணிசெய்த பானமையெலாம அறிந்தறிந்து நைவேனால்.

ஆராத அனபினுடன் அடிபணிநது ீகற்ற
நாரா யணகுரவன் திருவடியை ஈானநணுகிச
சாராது போயினனேற் சான்றோயநின பெருஙகேணமை
சேராது பலவாறுய்ச சென்றிருப்பேன் சிறியேனே.

குரவன் ஒருபாற் சீாதிருததக குழைந்த அன்பால மறறொருபால்
விரவி எனைநீ சீாதிருதத வெய்ய கதிராற் பகல்விளஙகி
இரவு மதியால் நினறொளிரும இனிய கால எலலையென
உரவாய் வளாந்தேன் தன்மையெலாம் உனனி உருகி உழல்வேனால்.

நானே கடவுள் என்றுரைககும் நலமில் நூலின வழிபற்றி
யானே உழனற அந்நாளில் இதனின் வேறும் உண்மைநெறி
தேனே யனையாய் உணடெனறு தெருட்டி மேலுந் தெய்வவருள்
ஊனே புகுந்து போந்தெதன அடியேம உயய உவநதருளி.

சொல்லும் பொருளுந் தொடாபாகத தொல்லோர் கண்ட மெய்ந்நெறியாய்ச்
செல்லுஞ் சைவ சிததாந்தத தெவிட்டா அமிழ்தந் தெளிதெடுததுக்
கலலுங கரையக கறைதேயக் கருததுள் ஊறக கரைகட்கச
சொல்லுஞ் சோம சுநதரனபால் தொண்டு புரியத தொடுததனையால்.

---

* ஷியாா மறைந்தகாலை அடிகளாா இரஙகிக் கூறியன.

அறிவு நூலின் பொருள்களெலாம் ஆராய்ந் தறிந்தே அழகாகச்
செறியுந் தீந்தேன் சுவையொழுகச் சிவமும அன்புஞ் சோர்ந்தொழுகப்
பொறிகொள் தூவிக் குயிலிசையும் பொருந்தி யொழுகப் புகல்திறத்தோய்
சிறியன் சொல்லும அவைகூட்டிச செவிவாய் மடுததுக் களித்தனையால்.

சின்னஞ் சிறிய காலததே சிறந்த தந்தை இழந்தேற்குக்
கன்னல் மொழிசேர் தமிழ்க்குரவா இருவ ரோடு காதல்மிகும
அன்னை யனைய நினறனையும அரிய துணையா அடைந்திருந்தேன்
பின்னை யிருவா பிரிந்தேகப் பெரிய துணையாய்ப் பிறங்கினையால்.

சிறகக வளாந்த இந்நாளிற் சிவததின் பெருமை தெரிநதமட்டும்
பிறகக மாக அடியேனும் பினஎன் சாாபிற் பிறைமதிபோல்
நிறக்க வளரு நின்மகனும் நிகழ்த்தும் உரைகேட் டுவந்ததனை
மறகக்ப் பிரிந்தாய இனிநின்போல மகிழ்வாா உளரோ வையகததே.

திருவருள்சேர் நினதுளத்தைச சிவனடிக்கே ஒப்புவிததாய்
உருவருநின் எழிலுடமபை உருத்திரற்கே உவந்தளிததாய்
இருமைவளா புகழுடம்பை எந்தையடி யாாககளிததாய்
அருமைமகார் துயாகூர அளித்ததுவும் அழகாமோ

இம்மைதனிற் பிரிந்தாலும் இனியொருகால் இசைநதிடலாம
அம்மைதனில் நீபிரிந்தால் அணுகுவதும உண்டாமோ
எம்மையிலும இவையெலாம் இறைசெயலால நிகழுவதால்
நமமையவன் அருள்வழியில் நடத்துவது நனறுமே.

---

# எழுச்சிகொள் தமிழா!

[நாகை வேலன்]

இதுகேள்! இதுகேள்! என்னரும தமிழா!
இன்றுனக் குளதெனை நீநினை நதிடுமோ
ஆட்சியின் அமைப்பை அறிந்தனை யோகொல்!
அன்னியர் ஆட்சியை அகற்றி இந்நாள்
அரியதன் னாட்சியை அமைத்து விட்டாய்!
அருஞ்செயல்! அருஞ்செயல்! ஐயமே இல்லை!
ஆயினும இந்நாள் உனநிலை எனன?
சீரிய உன்தாய் மொழிக்கிடம எஙகே?
...னியநல் லாட்சி இதுவெனக் கூறின்
...தனி மொழிக்கோர் ஆட்சி உணடோ?
...ண்டில் இந்நிலை இழிவே அன்றோ!
எனவே இன்றே எழுச்சிகொள் தமிழா!

# அன்பு

[செல்லூர்ககிழார். திரு. செ. ரெ. இராமசாமிபிள்ளை]

'முன்பு பின்பின்றி மூவுலத்தினும், அன்பின் நல்லதோர் ஆக்கமுண்டாகுமோ' என்பது, கல்வியிற் பெரியராகிய கம்பர் கண்ட உண்மை. 'அன்பின் வழியது உயிர்நிலை' என்பது வள்ளுவர் கண்ட மறைப்பொருள்.

இவ்வன்பு எங்கே இருநது கிளைக்கின்றது? உயிருளள பொருளகளின் நெஞசததடததின் நின்றனவேு? எனவே, அன்பு ஒன்றினுல்தான் உலகமே இயங்குகின்றது அன்பு ஒன்ருல் செயற்கரிய செயல்களை யெல்லாம் செய்து முடிக்கலாம. அன்பிறைற் பிணைப்புண்ட ஆணும பெண்ணுமாகிய இருவரோ, அன்றி ஆணும் ஆணுமாகிய இருவரோ, பெண்ணும் பெண்ணு மாகிய இருவரோ ஒவ்வொருவர்க்கு வரும இன்பத துன்பங் களைத் தத்தமக்கு வநதனவாகவே கருதி அதனுல் தம் தம் உயிரிழக்க நேரினும் அதைத்தம் உயாந்த குறிக்கோளாகவும் இன்பமாகவும் கொண்டு செயலில் இறங்குகின்றனா இவ்வன்பு இல்லையேல் உலகம் ஏது? இன்பம ஏது? ஒன்றும இல்லையாய்க் காடாய்—மண்ணுய்ப்—பாலையா—யன்றேு இவ்வுலகம பாழ் பட்டு நிற்கும்! இவ்வன்பு ஒன்றினுல் விலஙகுகளும் பறவை களும் பிற உயிரினங்களும கட்டுண்டு ஒருமனத்துடன் வாழ் கின்றன பார்மின்கள்!

விலங்குகளிற் கொடியனவாகிய சிஙகம புலி கரடிகள் மக்களையோ வேறு விலங்குகளையோ கண்டவுடன் அவைகள் மேல் துடுமெனப் பாய்ந்து கொன்று சின்னு பின்னப் படுத்து கின்றன இவைகள் தம் இனததிடத்தும் தம பிணவிடத்தும் குட்டிகளிடததும் எவ்வளவு உள்ளநெகிழ்வுடையனவாய் அன்பினவாய்க் காணபபடுகினறன கருவுயிர்த்து இளைத்துப் போயிருககும் தம் அரிய பிணவுக்கு மாட்டை யாடடை யானையை அடித்துக கொன்று இழுத்துச் செனறு அவைகளின் தசைக்கூறுகளைத தம நகங்களால் கிறியெடுததுப புய்த்துக் கொடுத்து ஊட்டி மகிழுமானுல், இவைகளின் அன்பின் திறத்தை என்னென்பது! மானினங்கள் புலலருநதித் தம் பிணை களையும் குட்டிகளையும் தம் பக்கலில் அமர்ததிக்கொண்டு மெல்லிய குளிர்ந்த மென்மலர் பரநதுகிடக்கின்ற மலைச்சரிவு களில் படுத்துக் கண்படை கொள்கின்றன! ஏன்? தன்னந தனி யாகத் தூங்கமுடியாமலா? அன்று! அன்று! அஃதே அன்பின்

ஆவாகிய பசுவை நோக்குவோம ; பசுமாட்டை அதற்குரிய வன் மேய்புலத்துக்கு ஓட்டிச் செல்கின்றான்; செல்லும்போது அதன் இளங்கன்றைத் தாம்பிற பிணித்து ஓர் தறியில் கட்டி விடுகின்றான்; அக் கன்றினைப் பிரிந்து சென்ற தாய்ப பசுவுகருப் புல்லை மேய்தற்கு மனம் ஒருப்படவில்லை. அது, கன்றை நினைந்து கதறுகின்றது; அதையே நோக்கி ஓடுகின்றது. பின்னும் அதற் குரியான் அதனை வந்து ஓட்டிக்கொண்டு செல்கின்றான் அது தன் மடியினின்றும பால் பில்கி வழியக் கன்றை நினைநது கதறு கின்றது ; வீறிட்டு அலறுகின்றது, புற்கள் புலங்களில் பசசைப பசேலெனப் படர்ந்து அடர்ந்து தேங்கி ஒளிரநது கிடக்கின்றன. அதிற்செலுத்துகிறான் அதற்குரியான். புற்களில் வாய்வைதது ஒருவாய் கறிக்கும் ; கன்றையுனனும, அலறும் ; கசிந்து நின் றுருகும் ; இவவாறே பகல முழுதும். பொழுது சாய்ந்து அது, தன் கட்டுத்துறைக்குச் செல்லுங்காறும கதறி இரங்குமானல் அதன் தாய்மை அன்புதான் என்னே ! என்னே !

இதன் இயற்கையை நன்குணர்ந்தன்றே மணிமொழிப் பெருமான் இறைவன்பால் தமக்கு அன்பு பெருகவேண்டு மெனறு அவனிடம் விண்ணப்பித்துக கொண்ட காலை,

'கற்றாவின் மனமபோலக் கசிந்துருக வேண்டுவனே' என்று வேண்டுகோள் விடுப்பாராயினா.

பல்வகைப் பறவையினங்களைக காண்மின் ! புறாக்கள் சிட்டுக்குருவிகள் பருநதுகள் கழுகுகள் முதலிய எண்ணிறநத எப்பறவைகளை நோககினும் அவைகள் ததமம இனங்களிடத் தும் தம் காதலரிடத்தும் குஞ்சுகளிடததும் எவவளவு அன் புடையனவாக இருக்கின்றன குருவிகள் முட்டையிடுதறகுக் காலத்தை முன்னரே நன்கு கூர்த்தறிநது கூடுகட்டுகின்றன ; அதில் முட்டையிடுகின்றன ! அடைகிடக்கின்றன ! குஞ்சுகளை வெளிப்படுத்துகின்றன அவைகட்குத் தம அறிவுணாவு கை வருங காறும் இரைகளைத் தம் வாயாற் கொளவிக் கொணர்ந்து ஊட்டி வளர்தது இறகு முளைத்துப பறககும பருவம வநத வுடன் அவைகளைப பறவை காட்டி அவைகள நன்றாகப் பறக்கப் பழகிய பின்னரேயே விட்டு விட்டுத தாம பிரிந்து செல்கினறன. என்ன கடமை ! என்ன கடமையுணர்வு ! எவ்வளவு பேரன்பு பார்மின்கள் ! அன்பு அவைகளின் மனததை எவ்வாறு ஈர்த்துப புண்படுத்தி யிருக்கிறது !

மக்களிற் பெரும்பான்மையினர் பல்வேறு தொழில் செய்தும் பொய்சொல்லியும வேறுபல இழிவழி போநதும்

ஊதியம் பெற்றுத் தம் மனைவிமக்கட்கு வேண்டுவன செய்தல் எதனால்? இவ் அன்பென்னும் முகிழ்ப்பினா லன்றோ?

இதன் உண்மையை விளக்கப் பெருநாவலர்,

'அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார்
மறத்திற்கும் அஃதே துணை.'

என, அருளியதும் இங்கு உன்னிப்பாக நோக்கற்பாலது.

இவ்வாறு எல்லா வுயிர்களிடத்தும் காணப்பெறும் அன்பென்னும் அரும்பொருள், தலை இடை கடையென முத்திறத்தினவாக அவைகளின் ஏற்றத்தாழ்வு முறைகளால் வகுக்கப் பெற்றனவாக இலகுறும்.

தலையன்பு தம் அன்புக் குட்பட்டார் நிலையைக் காணாதிருந்தும் கேட்ட மாத்திரத்தான் மனம் நெகிழ்வது; இடையன்பு கண்ணுற் கண்ட மாத்திரத்தான் வருவது; கடையன்பு கண்ட பின்னர் உறுவது.

இம் முத்திறப்பண்பும் அவரவர் மனநிலை சூழ்நிலைக்கேற்ப அமைந்திருக்கின்றன. இவ்வன்பு யாண்டுக் கிளர்ந்தெழும்? தம்மொடு தொடர்புடையாரிடத்தும் தொடர்பில்லாமலும் தம் பண்பும் அவர் பண்பும் ஒத்திருப்பதாகக் கண்ட விடத்தும் முறுகியெழும். இதற்கு எடுத்துக் காட்டாக மங்கையர்க்கரசியாரும் பிசிராந்தையாரும் கோப்பெருஞ் சோழனும் தற்காலப் பெரியாராயிலகிய காந்தியடிகள் தொண்டரும் சான்றாவார்.

இவ்வன்பு ஒன்றினாலே செயற்கருஞ் செயல்களெல்லாம் செய்ய முடிகின்றது; காணவொண்ணா இறைவனையுங் கூடக் காணமுடிகின்றது. இதனாலேயே,

'என்பே விறகா இறைச்சி அறுத்திட்டுப்
பொன்போல உடலைப் பொரிய வறுப்பினும்
அன்போ டுருகி அகங்குழைவார்க் கன்றி
என்பொன் மணியினை எய்தவொண் ணாதே'

என்ற திருமொழியும் எழுந்தது. இத்தலையன்பு மேலீட்டினால் தாம் கருத்திற் கொண்ட காதலரையோ நண்பரையோ பெரியாரையோ பிறரையோ நினைக்குந்தோறும் பார்க்குந்தோறும் கேட்குந்தோறும் மறைந்து துச்சிலில் ஒதுங்கியிருந்த உள்ளன்பு முறுகியெழுந்து கரைபுரண்டு வெள்ளமாக ஓடுகின்றது. ஏன்? அன்பினால்.

இவ்வன்பின் மேம்பாட்டு நன்னிலையை,

'அன்பேயென் அன்பேயென் றனபால் அழுதரற்றி
அன்பே அன்பாக அறிவழியும்—அன்பன்றித
தீாததம் தியானம் சிவார்சசனைகள் செயயுமது
சாததும் பழமன்றே தான.' (திருக்களிறறு ௫௫)

எனத திருக்களிற்றுப்படியாரில ஆண்டவனுக்குச் செலுததும தீாததம ஆாசசனை முதலியன அவன றனக்கு ஏற்றதன்றென வும் அவனுக்கேற்றது இவவன்பு ஒன்றே யென்றும் வரையறுத் துணாத்துவாராயினா எங்குநிறை கண்ணுதற பெருந கடவுளை மணிமொழிப் பெருநதகையாரும, 'ஈறிலாப் பதங்கள் யாவையுங் கடநத இன்பமே என்னுடை அன்பே' என, இன்ப மென்றும் அவ் வின்புத்தினின்றும் கிளாந்தோங்கி நிறகின்ற அன்பெனறும அதினும் என்னுடை அன்பென்றும் உரிமை பாராட்டி விளிபபாராயின், அன்பின் சிறப்பை எததகைச் சொல் லால் சுட்டி யுரைப்பது? எவ்வெழுததால் எழுதிக்காட்டுவது? ஆ! அன்பு அளவெல்லையைக் கடந்தது; பெரிது; உயரிது; மலையினும் மாணப்பெரிது.

திருமூலதேவரும் அன்பும் இறையும் ஒன்றென்பா;

'அன்பும் சிவமும் இரணடென்பா —,,
அன்பே சிவமாவ தாரும அறிகிலாா
அன்பே சிவமாவ தாரும அறிநதபின
அன்பே சிவமாய் அமாந்திருந் தாரே.'

என்பது அவர் தெளித்துரைத்த அரிய பெரிய அஃகியகனற அறிவுரையாகும்.

இதில் அன்பு வேறு, இறைவன் வேறனறு, அன்பே இறைவன், இறைவனே அன்பு என்று கட்டுரைபபதில் எவவளவு நுணுககரு செறிந்திருக்கின்றது நுணுகிக் காண்மின ஆங்கில மொழி வல்லுநரும (God Is Love, Love Is God) என்பதும் இக்கருததின் அடிபபடையின் எழுந்ததே. இதனுலே 'எவ வுயிாக்கும் அன்பாயிரு' என்ற திருமொழியும எழுவதாயிற்று.

இதற்கு எடுததுக் காட்டாகப பலரைக் குறிக்கலாம. ஆனல் கட்டுரை அதனல் நீளுமாகலின் நீட்டம் வேண்டாமைப பொருட்டு இவ் அன்பின் திறத்திற் சிறநத பெரியா ரொரு வரைச சான்று காட்டி இதனை முடிக்கக் கருதுகின்றேன. அப பெருநதகையாா கண்ணபப ராவா. ஏன் ஈண்டுக் கணணப்ப ரைக் குறிக்கின்றே னெனின், மற்றத தொடர்புடை யாரிடதது எழும் அன்பினும் தொடர்பற்ற கட்புலன் முதலியன கதுவாத இறையிடத்துக் காட்டும அன்பு பெரிதாகலின்.

கண்ணப்பர் அறம் இன்னதென்றறியா வேட்டுவக்குலத் தார்; அவர் ஒருகால காட்டிற்கு வேட்டமாடச் சென்றார்;

வேட்டமாடிய வழியில் காளத்திமலை காட்சியளித்தது அதனைக் கண்டார், அதனுள் சென்று காண எண்ணினார்; சென்றார், கண்டார்; அம்மலையுச்சியில் இறைகோயில்; அதனுள் நடுவண் இறையுருவைக் கண்டார்; கண்டதும் நெருப்பிலிடு வெண்ணெ யென அவர் நெஞ்சுருகிற்று; ஊற்றிருந் தொழுகின நெடுங்கண்; அன்பே உருவானார் ஆள் வழக்கற்ற காட்டில் இருக்கின்றாரே எம் இறையென அவர் மனம் எண்ணிற்று, அவ்வன்பு மேலீட்டினால் அங்கேயே இருந்தார் தன்னுடன் வந்த வேடுவர் யாவரையும் மறந்தார்; தன் தோழர்களான நாணன் காடன இருவரையும் மறந்தார்; கட்புலனும் பிறவற்றைக் காண்டற் கொருப்படாதாயிற்று இந்நிலையில் தன்னையும மறந்த நிலையில் ஆண்டவன் திருவுருவைக் கண்டவண்ணமே கண்டு காததுக்கிடப்பாராயினார அவா இறைவன் உணவுக்காக வேட்டமாடத்தான் வெளிச்செல்லுவார்; மற்றக்கால மெல்லாம் அதைவிட்டு அகலார; வேட்டமாடி விலஙகுகளைக்கொன்று நெருபபுண்டாக்கி அவைகளை வாட்டி அம்பால் கிழித்துத் தசை தசையாக எடுத்து உண்டு சுவைபார்தது சுவைமிகுதுள்ள தசைக்கூறுகளை இறைவறகுப படைத்துண்பிப்பார. இவ்வாறு குடுமித்தேவாபால் இடையறா அனபு பூண்டு கிடப்பதையறிநத இவர் தோழாகளான நாணன் காடன் இருவரும இவரை தம் ஊருக்குச்செல்ல மிகமிக அழைத்தும் இவர் ஒன்றும் பேசா திருத்தல் கண்டு ‘தேவுமால் கொணடான் இநதத் திண்ணன்’ என எண்ணிச் சென்றனா.

பின்னா ஒருநாள ‘இறைவன் மிகப்பசித்திருக்கின்றான, இவற்கு விரைவில ஊன் கொண்டுவர வேண்டு’மென வில்லும் அம்புங கைக்கொண்டு விரைந்து காடு நோக்கிச் சென்றாா. வேடடமாடி நறுஞ சுவை ஊன் கொண்டு இறைவனுக்குப் பசி மிகுமேயெனக் கருதி விரைந்தோடி வநதாா. இறைவன் இவர் அன்பின் திறத்தை உலகோர் அறிய வெளிப்படுப்பான் எண்ணித் தம் கண்ணொன்றிற் செந்நீகால இருநதான் அதனைக் கண்ணப்பா கண்டார். மனந்துணுக்குற்றாா; துடிதுடித்தார்; ஓடினார்; அழுதார்; தொழுதார்; அரற்றி அழுவாராயினார்.

‘பாவியேன கண்ட வண்ணம் பரமனார்க் கடுத்த தென்னோ
ஆவியில இனிய எஙகள் அத்தனாக கடுதத தெனனோ
மேவினா பிரிய மாட்டா விமலனார்க கடுதத தென்னோ
ஆவதொன் றறிகிலேன்யான் என் செயகேன.’

என வருந்திக் காட்டுக்குள் ஓடினார்.

(தொடரும்)

# அதியன் அன்புக்கோடை

ப், கா. கணபதி]

இலக்கியம என்பது, இயற்கையறிவும் நுட்பம் செறிநத புலமைவளமும் அரிதின ஆய்ந்த நேர்மையான உரமசேர் உள்ளமும் வாழ்க்கையில் தோய்நத பயிற்சியும் உடைய ஒரு சிரிய புலவனால் வடிக்கபபடும் கருவூலம் அதனை, உலகில் வாழ் பவர்கள் ஒவவொருவரும் அவரவா நிலையில நின்று அவரவர்க்கு இயன்ற அளவிலேயே பயன்பெற முடியும. அவவாறன்றி, அனைவரும் போற்றவேண்டும், அல்லது தாம் கண்ட அவ் ஒப்பறற பெருமபயனைத தாம பெற்றவணணமே உலகில் தனித தனி வகையான அறிவுவனமை யுடையவர்கள அனைவரும தாம் பெற்ற அறிவுநிலையிலேயே பெறவேண்டும், அதற்கு அதனை அதன நிலையிலிருநது படிபபடியாக எளியநிலைககுக கொணாந்து அதனை அநநிலையில் மாற்றினால்தான் முடியும் எனற நோக குடன பலர் நலல இலககியஙகளைப பலபல வனப்புடன பல் வேறுவகைச சிறப்புடன் வெளிப்படுத்துகின்றனர். அத்துடன் தாம் வரையக்கூடிய நூல்களையோ அன்றிக் கட்டுரைகளையோ படிப்பவர்கள இலக்கிய அறிவுடனேயே உயர்நத இலக்கியங் களைப் பயிலத் தூண்டுமாறு எழுதுதல் நாட்டுக்கு நலன் மிகப் பயக்கும என எண்ணுகின்றேன்.

அததகு இலககியங்கள், எட்டுத்தொகை, பததுபபாட்டு, பதினெண் கீழ்ககணக்கு முதலியவும, ஐமபெருங காபபியமும் ஏனைச் சிறு காபபியஙகளுமாம அவற்றுள் புறநானூறு என் பது அககாலதது அரசர்கள புரவலர்கள் வீரர்கள இவாகளுடைய வரலாறு, வீரம அறம கொடை முதலியவற்றின் சிறபபுக்கள் முதலியவற்றைக் குறித்துப் பல்வேறு காலத்திருந்த புலவர்கள் பாடிய பாட்டின் தொகுப்புநூல் என்ப

இவர்களில் அதியமான் என்ற அரசனைப்பற்றிய ஒரு செய்தியே ஈண்டு எடுத்துக்கொளளப் படுகிறது. அதியமான் நெடுமானஞ்சி என்ற அரசன். அவன் நற்பண்புகளமைந்த பெரு வீரன்-வள்ளல். அவன் ஆற்றிய போர்கள் எணணில. அவன் பெற்ற வெற்றியோ பலபல. அவனுடைய மெயமமுழுவதும் போர்க்குறித் தழும்புகளே நிரம்பியிருக்கும அவனைக் காணச் சென்ற வறுமையாளர்கள் மீண்டும வறுமையென்ற வன்கண்மை யைக் காணார். அவனிடம் பரிசுபெற்ற புலவர்கள் அளவிலர். அவனைப் பாராட்டிய சான்றோரும் அப்படியே.

ஒருநாள் அருள்கனிந்த பெரியாரொருவர் அதியமானிடம விலையிடற்கரிய நெல்லிக்கனி யொன்றினை வழங்கிசசென்ருர். அக் கனியின் பெருமையினை உணர்நத அதியமான் 'அதனைப் பெறற்குரிய பேறுபடைத்த பேரரசி ஔவையாரே! அவர் நாட்டின் நற்ருெண்டு குறித்து, ஒரு இடத்தில ஓரூரில் நிலைவர மாக இராமல் அலைந்துகொண் டிருபபவராதலினுல, அவரைக் கண்டுபிடிக்க இயலாத காரணத்தாலேயே இககனியை அவ ருடைய உயிர்நண்பராகிய நமமிடம் அப் பெரியாா அளித்துச் சென்றிருககவேண்டும் எனத துணிந்தான் துணிந்த அவன் அங்ஙனமே ஔவையாா அவைக்களத்திற்கு வநதஞான்று அவரிடம் அக் கனியினை ஈநதான்.

அதியமான தமபால வைத்திருககும ஆழமான அனபை யும் பெருமதிப்பையும உணர்ந்த ஔவையாா, தம் உளத்தில் சுரந்துவரும் அன்பின் எழுச்சியால் அவனை வாழ்த்த எண்ணி வாழ்த்துகிருா புலவர்கள வாழ்தத எண்ணின் அது வள முடைய பாட்டாகததானே அமையமுடியும?

'வலம்படு வாய்வாள ஏந்தி ஒனஞர்
களமபடக கடந்த கழல்தொடித தடக்கை
ஆரகலி நறவின் அதியா கோமான்
போரடு திருவிற் பொலந்தா ரஞ்சி
பால்புரை பிறைநுதற் பொலிந்த சென்னி
நீலமணி மிடற்று ஒருவன் போல,
மன்னுக பெரும நீயே, தொல்நிலைப்
பெருமலை விடரகத தருமிசைக கொணட
சிறியிலை நெல்லித தீங்கனி குறியாது
ஆதல் நின்னகத் தடககிச
சாதல் நீஙக எமக்கீத் தனையே.''

இவ்வாழ்தகின் வனப்பையும் பொருட் செறிவையும் நுட் பத்தையும் பாருங்கள். முதலிலேயே மங்கலச்சொல்லால் குறிக்க வேண்டும என்ற நோககுடன் "வெற்றியுண்டாகும்" என்ற பொருளில் "வலம்படு" என்று தொடஙகுகின்ருா அடுத்து அவன் கையில் தாங்கியுள்ள வாள் என்றுந் தப்பாதது என்று குறிப்பதற்காக 'வாய வாள்' என்கின்ருா. பல போர்களைக் கடந்து அவையிற்றின் பரிசாக அணிகலன் அணியப்பெற்ற அவன் கை மிக விரிந்ததாம்! ஔவையாருக்கு அதியமானின் பெயரைச் சொல்லி அழைப்பதிலேயே ஒரு தனிக கிளர்ச்சி உண்டாகின்றது. அதனுறருன் 'ஆர்கலி நறவின அதியர் கோமான்' என்று அழைக்கின்ருா. "பால்புரை

சென்னி" என்பது, பால்போலும் வெண்மையான சந்... தலையிற் சூடிய என்று பொருள். "நீலமணி மிடறறு ஒருவன் என்பது, கழுத்தில் நஞ்சை யடக்கியதால் நீலகண்டன் என்ற பெயர்பெற்ற சிவபெருமானைக் குறித்தது ஒருவன் என்பது, சிவபெருமானின் பெயர்களுள் ஒன்று "ஒருவன் என்னும் ஒருவ போற்றி" என்பது திருமுறை தேவாகள் திருப்பாற் கடலைக் கடைந்தகாலத்து, அதன்கண் தோன்றிய நஞ்சினைத் தானுண்டு, அமுதினைத் தேவர்களுக்கு அளித்தமைபோல, சாவாமையை நல்கக்கூடிய நெல்லிக்கனியைத் தமக்கு அருளிய மையை நினைநது, நஞ்சுண்ட சிவபெருமான்போல வையத்தில் நீ என்றும நிலைத்து வாழக! என வாழ்த்தினர் 'அருமிசை' என்பது, உச்சியைக் குறிககும; குறித்ததனல் கனியின் அருமை பெறப்படுகின்றது. 'ஆதல்'—அதனலாய ஆக்கம்

ஔவையாருக்கு அதியமான் அருநெல்லிக்கனி ஈந்த பெருமையை,

"மால்வரைக்
கமழ்பூஞ் சாரற் கவினிய நெல்லி
அமிழ்துவிளை தீங்கனி ஔவைக் கீந்த
உரவுச் சினங் கனலும ஒளிதிகழ் நெடுவேல
அரவக் கடற்றானை யதிகனும்"

என்று பததுப்பாட்டுள் ஒன்றாகிய சிறுபாணாற்றுப்படையும் பாராட்...

## இயற்றமிழ்

தமிழ்மொழி இயல் இசை நாடகம என முப்பகுப்புக் வழங்குகின்றது அவற்றுள் இயல் எனபது, இயற்கையானது. அதாவது பேசசு வழக்கத்தில் பேசப்படுந் தமிழும், ஏட்டு வழக்கில் உரையில் வழஙகும் தமிழுமாகும். ஒரு சில மொழிகள் ஏட்டில் மட்டும இருக்கின்றன, நாட்டில் பேசசு வழக்கில் நில்லாதொழிந்துள்ளன. நம் தமிழ் மொழி என்றும் நின்று இருவகை வழக்கினும் நிலவும இயற்கையதாக இருத்தலான், வானமளாநததனைத்தும் அளக்கும் வணதமிழாக இருததலான், அவ்வியற்கை கொண்டு 'இயற்றமிழ்' என ஒரு பகுதியைப் போற்றினர். 'சீரிளமைத் திறம்வியந்து செயல் மறந்து வாழ்த்துதுமே' என்றார், பேராசிரியர் சுந்தரம் பிள்ளை.

—செல்லூர்க்கிழார்.

# வழிப்போக்கர் *

[பேராசிரியர் பெருமழை, புலவர். திரு. பொ வே. சோமசுந்தரனார்]

அருள்கெழுமிய பெரியோர்களே! திருநெறிக்கழகச் செல்வர்களே! வணக்கம். இன்று, இக்கழகத்தில் சொற்பொழிவாற்றும் வாய்ப்பு நான் எதிர்பாராத வகையில் கிடைத்ததாகும். வழிப்போக்கில இத்திருத்தொண்டு எனக்குக் கிடைத்தமையானும், "திருநெறிக் கழகம" என்னும் உங்கள் கழகத்தின் பெயராகிய சொற்றொடர்க்குப பொருள், உயரிய வழிபபோக்கர் கூட்டம் என்பதே ஆகலானும, நண்பா வயி-பாலசுப்பிரமணியனார் தாங்கள் எப்பொருள்பற்றிப் பேச எண்ணுகிறீர்கள் என்று என்னை வினவியபோது, வழிப்போககர் என்னும பொருளபற்றிப் பேசுவல் என யான் கூறினேன்

முனனறிவிப்புப் பெரிதும் இன்றித் திடீரெனத் தொடங்கிய இச்சொற்பொழிவைக் கேட்க, இத்துணைப பெரிய கூட்டம் கூடியிருத்தல் கண்டு நான் பெரிதும் மகிழ்ச்சியும், வியப்பும் எய்துகின்றேன். இனி யான் என் கடமையை மேற்கொண்டு நடத்துவேன்

வழிப்போககா என்னும் இத்தலைப்பின்கீழ் யான் அறிந்துள்ள சில சைவசித்தாந்த நுணுககஙகளையே உங்கட்குக் கூற எண்ணியுள்ளேன். அவவுண்மைகளை அறிதல் திருநெறிக்கழகத்தார்க்கு மிகமிக இன்றியமையாதது தோன்றும்

ஓரிடத்தினின்றும் மற்றோரிடத்திற்கு ஊர்திகளினுதல், காலால நடநதாதல செல்பவரைத்தாம யாம வழிப்போக்கா என்று கூறுகின்றோம். இததகைய வழிபபோக்கரில் ஒருவரை யாம் எதிாகண்டு, நீயிா எங்கிருந்து புறப்பட்டீர்? எங்குச் செலகின்றீர்? எதற்காகச் செலகின்றீர்? என வினவினால், இவ்வினக்கட்கு அவா சிறிதும் தயங்காமல் உடனே மறுமொழி தருவர். இத்தகைய கேள்விகட்கு விடைதெரியாத வழிப்போக்கரும உளரோ! குறிக்கோளின்றி வழிப்போவார் யாரே உளர்!

ஆனால் வழிப்போக்கர்களில், தாம் எங்கிருந்து புறப்பட்டோம்? எவ்வழியே? எங்குச் செல்கின்றோம்? ஏன் செல்கின்றோம்? என அறியாமல் ஏதோ ஒன்றனுற் செலுத்தப்பட்டுத் தம் மனம்போன வழியெல்லாம் சென்று சென்று உழலும்

* மன்னார்குடி தாலுகா—புதுக்குடியில், திருநெறிக் கழகத்தே பேசியது.

குறிக்கோளற்ற வழிப்போக்கர்கள் சாலப் பலர் உளா என்றால், நீங்கள் வியப்படைவீர்கள் அத்தகைய வழிப்போக்கர்தாம் யார் கொலோ? என அறிந்துகொள்ளவும் அவாவீர் அல்லிரோ?

அத்தகைய வழிப்போக்கர்களுள் ஒருவனே யானும். என் முன் கூடியிருக்கும் நீங்களும, ஏன் உலகில பிறந்துழலும எல்லா வுயிரும் என நம் மெய்ந்நூலகள் கூறுகின்றன.

இவ்வுலகில் பிறததற்கு முன்னர், யாம் எங்கிருந்தோம்? இவ்வுலகவாழ்வென்னும வழிபபோக்கில் யாம் ஏன் ஈடுபட்டு நடக்கினறோம? இவ்வுடல் நீததபின்னர் யாம் எஙகுச் செல் வோம? என அறிந்து வாழ்க்கைவழிநடப்பார் நமமனோரில் ஒருசிலர் உளரோ! இல்லையோ! அஃதையமே? ஐயமே ஆயினும், இவையிற்றை யாம அறிநதாலும், அறியாதிருப்பினும நாம் விரைந்து விரைந்து செலலும் வழிப்போககாகளே. நமது நடையைமட்டும் யாம் நிறுததமுடிவதில்லை. இஃதொரு வியப் பன்றோ?

அன்பர்களே! நமது முன்னையோா இததகைய செய்தி களைத தமது கூர்தத அறிவால் நுண்ணிதின் ஆராய்ந்து இவ் வினைகட்குத் தெளிவான விடைதநதிருககின்றனா அமமெய்ந் நூற்கருத்தைப் பலகாலும ஓதிஉணாநது அம மெய்நநூற்களின் கருததோடியைய நம வாழ்கையை போககை நேர்செய்துகோடல் அரிய மானிடப பிறப்பினை எய்திய நம் கடமையாகும

பெரியோர்களே! ஒரு வழிபபோக்கன், தன ஊரிலிருநது புறப்பட்டுச சேணிடையுள்ள மற்றோா தேயததிற்குச செல்லுங் கால், காலகளால நடநதும, இரவு வநதுற்றவிடததே விடுதிகளிற் றங்கி உறங்கிககிடந்தும், பகல் வந்தவுடன மீண்டும வழிப் போகும முயற்சியை மேற்கொண்டும், யாறுகள எதிரபபட்டுழி ஓடஙகளாற் கடநதும், கடல் எதிர்பபட்டுழி மரக்கலததேறியும் தான் செல்லும தேயததைச் சென்றடையக் காண்கிறோம் அன்றோ? அஙஙனமே நமது வாழ்க்கைப போக்கும அமைந் திருக்கின்றது தன்னைத்தான் அறிந்துகொள்ள வியலாத ஒரு மமமர்கொள இருள உலகததினின்றும், நமது வழிபபோக்குத் தொடஙகுகின்றது இடையே இம மண்ணுலகத்திற் பிறப்புக்க ளாகிய ஊாதிகளிலே, வினைவழியே இயங்குகின்றோம. சாவு என்னும் இரவு வநதுற்றவுடன் ஊாதிகளினின்று இறஙகி ஓய்வு கொளகின்றோம மீண்டும் பிறப்பு என்கிற பகலில் நமக்கேற்ற ஊர்திகள் பெற்று நமது வழிப்போக்கைத தொடஙகுகின்றோம். இந்த நீண்ட யாததிரையின் முடிவிடம யாது? யாம இவ்வியாத் திரையினுற் சேரவேண்டிய இடம் யாது? அவ்விடம, அழி

வில்லாப் பேரின்ப வீடேயாம என மெய்ந்நூல்கள் கூறுகின்றன எனவே, இருள் உலகினின்றும், அருள் உலகிற்கு—ஒன்றுமறியா மூடநிலையினின்றும் முழுதுணர்ந்து முழுமைப் பேரின்ப மெய்தும் மெய்யறிவு நிலைக்கு யாம் யாத்திரை செய்கின்றோம். இவ்வியாத்திரையைச் செய்து இத்தகைய பேரின்ப உலகை அடையவேண்டும என்ற எண்ணம் நமக்கில்லை; நம் எண்ணமில்லாமலே இவ்வழிப்போக்கில் யாம் ஈடுபட்டுளளோம். இங்ஙனம் கூறுவதைவிட நம்மைத் தனது பேரருள் காரணமாக இவ் வின்னல தரும இருள்உலகினின்றும், இன்பமேயான அருள் உலகிற்கு யாதோ ஒருபொருள் உந்திச் செலுத்துகின்றது என்று கூறுதலே உண்மைக்குப் பொருந்துவதாம். நாம செய்யும் செயல்களை ஆராய்ந்து காணின் அது நம் செயலன்றித் திருவருளின செயலேயாதல் விளஙகும் நல்லிசைபபுலவா கணியன் பூஙகுன்றனார்,

"................... மின்னொடு
வானம் தண்டுளி தலைஇ ஆனாது
கல்பொரு திரங்கும் மல்லற பேயாற்று
நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆருயிர்
முறைவழிப படூஉம் எனபது திறவோர
காட்சியிற் றெளிந்தனம' (புறம் கஅ௨)

என்றெடுத்தோதியபடி, ஆருயிர் அதன்தன் ஊழாகிய வெள்ளத்தே மிதவைபோல உநதபபட்டுச் செல்லவேணடும் என்பது அததிருவருளின் கருத்தாகும குறிக்கோளற்று இவ்வுலகததே பிறப்புக்களிலே மீண்டும மீண்டும் பட்டு இவ்வுலகிற் பிறந்தோர் உறுவது பெருகிய துனபம் என்னும் மெய்ம்மை நம் உணர்விற்றோன்றி, மெய்யுணாந்த பின்னரே அவ்வீடாகிய இன்பவுலகை எய்தட்டும என்பது அவ்விறைவனின் திருவருட் கருத்தாகும்.

அன்பர்களே! இருள் உலகினின்றும தம வழிப்போக்கினைத் தொடங்கிய நிலையிலுளளன புல் மரம முதலிய ஓரறிவுயிர்கள். அருள் உலகை மிக அண்மியநிலையில் உளளவன் மனிதன். ஒரு மனிதன் ஆண்டவனுடைய திருவருள கருத்தைக் குறிப்பானுணர்ந்து, இவவுலகில் மானிட வாழ்க்கைக்கென வள்ளுவராதிய ஆன்றோர் விதித்தன மேற்கொண்டு, விலக்கியன விலக்கித தன் வாழ்க்கையைச் செலுத்தவல்லனாயின், அவன் இவ்வொரு பிறப்பிலேயே அந்தமில் இன்பத்து அழிவில் வீட்டுலகினை எய்தியவனாவான். திருவருட் கருததைத் தம் தெய்வப் புலமையான் உணர்ந்து மானிட வாழ்க்கைக்கு நெறிவகுத்தோதிய சான்றோர்களில், திருவள்ளுவரை ஒப்பாவார் உலகிற் பிறந்ததில்லை என்றே தோன்றுகிறது கப
வானவனாக வாழக்கையினூடே மாற்றியமைக்கும் தெய்வத்

திருவருட்பிழம்பே திருக்குறள் என்னும் மெய்ந்நூல் என்று உணர்மின்கள் அந்நூலின் பெருமையை அயல்நாட்டினர் அறிந்த அளவிற்குத் தமிழ்மக்கள் அறிந்து போற்றாமலிருப்பது பெரிதும் வருந்தத்தக்கதொன்றாம். திருநெறிக் கழகத்தாராகிய நீங்கள் அனைவரும் திருக்குறளை நன்கு பயின்று, அது காட்டிய நெறியே நம் வழிப்போக்கிற்குரிய நெறியாகக் கொள்ளல் வேண்டும் என்பது எனது விருப்பம்

மனம் போனபடி ஒழுகுவது விலங்கொழுக்கம். தம் போக்கை உயரிய ஒரு நெறிப்படுத்திச் செலுத்துவதே மானிடர்க்குரிய சிறந்த ஒழுக்கமாம். இம்மையிற் கட்டுப்பாடுடைய அறநெறிச்செலவு, மறுமைக்கண் கட்டற்ற பேரின்ப வாழ்க்கைக்குக் காரணமாம்.

இனிக் கடவுளில்லை, உயிர் இல்லை, அறம் மறம் ஏதும் இன்று, மறுமையின்று வீடின்று,

"மனம் விரும்பு உணவுண்டு நலவத்திரமணிந்து மாதர் மூலை தொட்டு மலர்சூடி விளையாடி மருவ வருகின்ற சுகமே கண் கண்ட சுகம் இதே கைகண்ட பலன்" என வாய்த்ந்தன விளம்பித் திரியும் மாக்களும் பல மக்கட் கூட்டத்தே உள இவர் ஆரவாரநீர்மை கண்டு, அந்தோ! உலகில நாத்திக உணர்ச்சி மேலிட்டு வளர்கின்றதே! அது உலகை விழுங்கிவிடாதோ? ஆயின நாம என் செய்தும்! அது பரவாவண்ணம் யாமும் கழங்கண்டு, அதற்கு எதிர்பேசி, அதனை வீழ்த்த வேண்டாவோ? எனக் கருதுவாரும, அவ்வழி முயல்வாரும் பல இன்று உளர். அச்செயல் பயனில்லாத வீண் செயல்களிற் றலைசிறந்ததென்பது என் கொள்கை. ஞாயிற்று மண்டிலத்தை இருள் விழுங்கி விடுமோ! என்று அஞ்சி அவ்விருள் பரவாமல் அணையெடுக்க முயல்வார் போல்வர் நாத்திகவுணர்ச்சியைத் தடுக்க முற்படுவோர்.

ஆதலால், அன்பர்களே! நீங்கள் நாத்திகத்தை எதிர்க்கும் முயற்சியில் ஒருசிறிதும் தலைப்படவேண்டா. நாத்திகம் தன்பால் மெய்ப்பொருளற்ற ஒரு பொய்க்கொள்கை. அதனை மக்கள் ஏனைய சமயங்களைத் தழுவுவது போன்று வழிமுறை வழிமுறையாகத் தழுவியதில்லை. சுருங்கக் கூறின், நாத்திகவுணர்வு ஒரு மனிதனின் இளமைதொட்டு முதுமைகாறும் தொடர்ந்து அவன்பால் நிற்கவும் ஆற்றலற்றது. ஆதலின், அது தோன்றிய இடத்தேயே சின்னாளில் மாண்டுகெடப்பதொன்று. அவ்வாறு தானே நிலைத்தற்கியலாததொன்றனைப் படைகொண்டு புடைத்தழிப்பானேன்!

வரலாற்றுக் கண்கொண்டு பார்க்கும் போதும் நாத்திகம் பேசுவோர் எந்தக் காலத்தும் இருந்து பேசிவந்துள்ளனர். இறைவனை உள்ளீடாகக் கொண்ட சமயங்களையே மக்கள் தலை முறை தலைமுறையாகத் தொடர்ந்து பின்பற்றி வந்தனர். அவை கள் தம்முள் ஒன்றை ஒன்று முரணியவாகத் தோன்றினும ஒவ்வொன்றும் தமக்குள் ஏதேனும் ஒரு உண்மையையே தழுவி இருத்தலால் தழைத்து வளரலாயின. நாத்திகக் கொள்கையை மட்டும் ஒரு கூட்டமேனும் தழுவி வளர்த்ததில்லையே? இஃ தொன்றே அது உலகிற் பரவ வலியற்றதென்றற்குப போதிய சான்றும்

இனி, ஒரு பொருளினை உணர்தற்குக் காண்டல் கருதல் உரை என மூன்றுவகை அளவைகளை மேற்கொளவர் சான்றோர். இம்மூன்றனுள் முதற்கண் உள்ள காண்டல் அளவையே பெரிதும் வலியுடையதாம் ஆகவே வாழ்க்கையை மனிதன் எவ்வாறு செலுத்துதல் வேணடும என்று வாயினாற் கூறுமல் தனது ஒழுக்கத்தாலேயே உணர்த்தும் பெரியார் ஒருவரை நீஙகள் உங்கள் குழுவிற் பெற்றிருத்தல் ஒரு பெறும் பேறேயாகும் உங்கள திருநெறிக் கழகத்தில் ஒருவராய் உள்ள பெரியார் அரங்கசாமியைப்பற்றி நான் உங்கட்குச் சிறிது சொல்லுதல் வேண்டும். ஏனெனில மானிடவாழ்க்கையை நன்குணர்ந்து அதற்கேற்பத் தம வாழ்வினை முறைசெய்து வாழும் பெரியார் அவர். அவர் போன்ற உண்மைமனிதரைக் காண்டல் மிகவும் அரிதாம்.

நறிய மணஙகமழும் மலர் ஒன்று, தான் இருக்குமிடத்தினின்றும் நாற்றிசையும் தனது மணத்தைப் பரப்பித் திகழுமாறு போல, இப்பெரியாருடைய சிறநத ஒழுக்கமே ஈண்டு ஒரு தெய்வ நெறிக கழகத்தைத தோன்றச செய்தது என்று அறிகின்றேன் சிலயாணடுகட்கு முன்னர், பெரியார் அரங்கசாமியின் வாழ்க்கைப் பண்பையும், பெருந்தகைமையையும, என் நணபர் சிலர் என்னிடம் கூறினர்கள் எளிய வேட்கோவர் (குயவர்) குடியிற் பிறந்து, பாண்டம் வனையும் தங்குடித் தொழிலையே மேற்கொண்டு, அதனல் வரும் ஊதியத்தைக் கடவுள் தொண்டினும வறியோர்க்கு அனனம் வழங்குதலினுமே செலவிட்டு, நாள்முழுதும் கடவுட் காட்சியிற ரேய்நத சிநதையுடையராய், நாளைக்கு வேண்டுமே என்று எபபொருளையும பேணுதவராய், வாழ்க்கை நடத்தும அவர் வரலாறு, எனக்கு மிகமிக வியபபுண்டாக்கியது இத்தகைய சிறப்புடைய வாழ்க்கையை மேற்கொண்டு செலுத்திய சான்றோரை, யான் சேக்கிழாரடிகள் இயற்றிய திருததொண்டர் வரலாற்றின்கண் ஓதியுணர்ந்ததன்றி, கணகூடாகக் கண்டதில்லை. ஆதலான், அத்தகைய பெரியாரை

ஒருமுறை காணுதல் வேண்டும் என்னும் விருப்பந் தூண்ட இரண்டாண்டுகட்கு முன்னர் யான இவ்வூர்க்கு வந்தேன். அப்பொழுதும் நண்பர் வை பாலசுப்பிரமணியனாரும் என்னுடன் வந்திருந்தனர்.

அப்பொழுது அந்திமாலைப்போதாயிருந்தது. இதே திருக் கோயில் வாயிலில், பெரும்பாலும் அமைதியே நிலவியிருந்தது; மக்கள் வழக்கம் ஏதும் இல்லை. பெரியார் அரங்கசாமி, கோயி லின் முன்றிலில் நிற்கும் தருநிழலிலே அமைதியுள் மூழ்கியிருந் தார். எங்களைக் கண்டு பரபரப்பின்றி அமைதியாகவே புன் முறுவலுடன் வரவேற்றார். அவர் திருமுகத்தில் தெய்வவொளி, அல்லது அறிவொளி சுடர்ந்து திகழ்ந்தது.

மெல்லென அவர் அமைதியைக் குலைக்காதபடி அவருடன் யான் அளவளாவிப் பேசினேன். நண்பர் பாலசுப்பிரமணிய னார் எங்கள் பேச்சைக் கேட்டுக் கொண்டு அமைதியாக அமர்ந் திருந்தார். ஒருமணி நேரம் பேசியிருக்கலாம். அவருடைய உள் வாழ்க்கையின் சிறப்பினை யான் நன்குணர்ந்து கொண்டேன். கடவுளுடைய திருப்பெயரை ஓதியவுடன், அவர் கண்கள் தாரை தாரையாய் நீருகுத்தன. சிற்சில செவ்விகளில் அவர் தமமுள் தேம்பித் தேம்பி எழும் அழுகையை யாங்கள் அறியாமல் மறைக் கவும் முயன்றார். அவர் உண்மைநிலையை அறிந்தவுடன் என் னுள்ளம் எனக்குள் பெரிதும் நாணமெய்தித் தலைகுனிய லாயிற்று.

நண்பர்களே! தெய்வப் புலமைத் திருவள்ளுவனார், தமது மெய்ந்நூலில், முதலதிகாரத்தில் இரண்டாவது திருக்குறளி லேயே, கல்விப்பயன் இன்னதென வரையறை செய்து தெரித் தோதிவிட்டார். அவ்வருமைத் திருக்குறள்,

> " கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்
> நற்றா டொழாஅ ரெனின் "

என்பதாம்.

நான் மெய்ந்நூல்கள் பலவற்றை இடையறாது ஓதிவந்துள் ளேன். பெரியார் அரங்கசாமி என்னளவு நூற்பயிற்சி உடையர் அல்லர். அங்ஙனம் இருந்தும் கல்விப் பயனாகிய இறையன்பு அவருளத்தே பாற்கடல்போற் பெருகி அலையெறிந்து திகழ்கின் றது. நூல்களைப் பெரிதும் பயில்கின்ற என் மனத்திலோ அவ் வன்பு ஒருசிறிதுதானும் உளதோ? இலதோ? என்று ஐயுற வேண்டிய நிலையில் உள்ளது. கற்றதனால் ஆயபயன் என்னையோ?

இத்தகைய பேரன்பு வழிமுறையிற் பற்பல பிறப்புக் களிலே உருவாதல் வேண்டும் என நூல்கள் கூறுகின்றன. அவ்

ருடைய உளப பண்பாட்டைக் கண்டு யான் அன்று பெரிதும் வியந்தேன். அவர் இம்மண்ணுலகில் நம்மனோரில் ஒருவராய் வாழுகின்றபோதே, அவர் உளளம் கடவுள் உலகிற் குடியேறி, கடவுளன்பிற் றிளைதது, இன்புற்று வாழ்கின்றது. இததகைய பெரியாரைக் காண்பதுவே ஒருசிறந்த பேறும்

ஆடம்பரமற்ற அவர் வாழ்க்கை, உங்கட்கும், எனக்கும் அதன் அருமையை உணர்ந்த ஏனையோர்க்கும, காண்டல் அள வையாக அமைந்து ஊக்கம தருகின்றது அவர் நீடூழி இறை யன்பிற் றிளைத்து இவ்வுலகில் வாழ்வாராக.

இறுதியாகத் திருநெறிக் கழகத்தாராகிய நுங்கட்கு ஆக்க மாக அமையும சிவஞானசிததியாரின் இரண்டு செய்யுட்களை மட்டும கூறி என சிற்றுரையை முடிப்பேன். அவையாவன

“ஒழுக்கம அனபு அருள்ஆ சாரம உபசாரம் உறவு சீலம
வழுக்கிலாத் தவம தானங்கள வந்திததல் வணஙகல் வாயமை
அழுக்கிலாத் துற வடக்கும அறிவொடர்ச்சித்த லாதி
[illegible]லா அறஙகள ஆனல் இரஙகுவான பணியறஙகள”
[illegible]யார. ககங)

என்றும்,

“மனமது நினைய வாக்கு வழுதத மந்திரஙகள் சொல்ல
இனமலா கையிற கொணடங கிசசிதத தெய்வம போற்றிச
சினமுத லகற்றி வாழும செயல அறமானல யாககும
முனமொரு தெய்வம எஙகும் செயற்குமுன னிலையா மன்றே”
(சித்தியார. ககச)

என்றும எழுநத மெய்ம மொழிகளேயாம.

இந்த இரண்டு செய்யுட்கும் எடுத்துக்காட்டாகத் திகழ்ப வர் பெரியார அரஙகசாமியார. திருநெறிக் கழகத்தார் எல்லோ ரும் இவற்றை மனதில் இருத்திக்கொள்ளல வேண்டும் மானிட வாழ்க்கையின் பயனாகிய வீடெய்த முயலும் நல்லோராகிய யார்க் கும இவை வழிகாட்டியாகும. இமமையில் நலலொழுககம இல லாதாரிடதது இறையன்பிருத்தலும இலலை. ஒழுக்கம் உயிரி னும் ஓமபபபடுதல் வேண்டும். கடவுள் உண்மை தெளிதல வேண்டும. கடவுளினபால் மெய்யன்பு செலுததி வழிபடுதல் வேண்டும. சிவன செயலாலேயே எலலாம நிகழ்கின்றது என் னும் மெய்யுணர்ச்சி எய்துதல் வேண்டும். தன்முனைப்பறுதல் வேண்டும. மெய்நூல்களைப படித்தல் வேண்டும. இவையே பெருநெறி பிடிதொழுக வேண்டும, என இராமலிஙக அடிக ளார வேண்டியதூஉமாம. அறிவுடைய சானறோர்களே! இவ் வளவோடு என் சிறறுரையை முடித்துக் கொள்கின்றேன்.

# மைவரை உலகம்

[வித்துவான் திரு. தி. மு. சங்கரலிங்கம்]

பரந்துபட்ட இவ்வுலகிற்கு ஞாலம், நானிலம் என்ற பெயர்கள் உண்டு. ஞாலம் என்பதன் பொருள் தொங்குதல் என்பது. இவ்வுலகைச் சுற்றிலும் காற்று மண்டலம் சூழ்ந்திடத் தொங்கிக் கொண்டிருக்கிறது. இதைப் பற்றியுங்கூடத் திருக்குறளிற் சொல்லியிருக்கிறது. அதாவது,

"......வளிவழங்கு மல்லன்மா ஞாலம்!....." (அறம் ௨௪௫)

என்பது. ஆகத் தொங்கியிருக்கும் பொருள் என்றே ஒரு நாளில் அழிந்துபடும் என்பது அறிவுடையார் கூற்று.

நானிலம் என்பது ஆகுபெயராகக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ற நான்கு பெரும்பிரிவாலாகிய உலகத்தைக் குறிப்பிடும் சொல்லாகத் திகழ்கிறது. குறிஞ்சி என்பது மலையையும், மலைசார்ந்த இடத்தையும், முல்லை என்பது காட்டையும், காடு சார்ந்த இடத்தையும், மருதம் என்பது வயலையும், வயல் சார்ந்த இடத்தையும், நெய்தல் என்பது கடலையும், கடல் சார்ந்த இடத்தையும் குறிப்பிடும். திணையைக் குறிப்பிடும்போது பாலை என்ற ஒரு திணையை உடன் வைத்து எண்ணி ஐந்திணை என்றே வழங்கப்படுகிறது வழக்கில். ஆனால் நான்கு நிலத்தையே கொண்டு நானிலம் என்றனர்; பாலையை எண்ணவில்லை. பாலை என்ற நிலப்பகுதியை ஒரு தனிநிலம் என்றே கருதிலர் முன்னோர். ஏன்? குறிஞ்சி நிலமான மலையும், மலைசார்ந்த இடமும், முல்லை நிலமான காடும், காடுசார்ந்த இடமும் தன்னுடைய இயல்பான நிலையில் மாறுபட்டு விளங்குவதே பாலைநிலமாகும் என்று வழங்கிவந்ததால் என்க. என்னை? நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரமென்னும், முத்தமிழ்ச் சுவைமிகு நற்றமிழ் இலக்கியத்திலே,

" முல்லையும் குறிஞ்சியும் முறைமையிற் றிரிந்து
நல்லியல் பிழந்து நடுங்குதுய ருறுத்துப்
பாலை என்பதோர் படிவங் கொள்ளும் "

என்று களங்கமில் புலமை இளங்கோவடிகள் இனிமையோடு எடுத்துரைக்கின்றார். ஆகையின் பாலை என ஒரு தனிநிலம் இன்மையின் ஒழிக்கப்பட்டது என்க.

இவ்வாறு நான்கு பெரும்பிரிவுகளை உடைய நானிலப் யை நான்கு உலகமாக்கி நற்றமிழ்ப்புலமையை நாடறிய

காட்டுகிறார் ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியனார். இதோ பாருங்கள் அவர் காட்டும் நான்கு உலகம்

" மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும் "

என்று கூறி இதனை முறையே முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்று விளக்குகிறார் இந்நான்கு உலகத்தில் மைவரை உலகத்தைப் பார்ப்போம்.

இது குறிஞ்சியான மலையும் மலைசார்ந்த இடமுமாகும். குறுகுதலை உடையது குறிஞ்சி என்பர். இந் நிலத்தின் ஒழுக்கம் புணர்ச்சி. அஃதாவது இப்பிறப்பில் முன்பின் தொடர்பில்லாத தலைவனும் தலைவியும் ஊழ்வலியால் எதிர்ப்பட்டு உடலும் உணர்வும் ஒன்றுபடுவதாகும் இந் நிலத்திற்குப் பொழுது கூறும் தொல்காப்பியர் கூதிர், யாமம் என்ற இரண்டும் உரியது என்கிறார் இதற்குரிய காலத்தை ஐப்பசி, கார்த்திகை என்று குறிப்பிட்டுச் சிறந்த உரை காண்கிறார் உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியர். " மாயோன்மேய ......." என்ற தொல்காப்பிய நூற்பாவிற் கூறப்பட்ட முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்பதற்குத் தொடர்பு காண்பாம்.

" போகசெல்லாம பாலை புணர்தல் நறுங்குறிஞ்சி
ஆக்கஞ்சேர் ஊடல் அணிமருதம்-நோக்குங்கால்
இல்லிருத்தல் முல்லை இரங்கல் நறுநெய்தல் "

என்ற பாடலிலிருந்து

" அறவோர்க் களித்தலும் அந்தணர் ஓம்பலும்
துறவோர்க் கெதிர்தலும் தொல்லோர் சிறப்பின்
விருந்தெதிர் கோடலும் "

ஆய அன்பு வாழ்வு, அறவாழ்வு, இன்ப வாழ்வு நடத்துதலை என்றும், தலைவனும் தலைவியும் உணர்வு, உடல் ஒன்றுபடுவதைக் குறிஞ்சி என்றும் குறிப்பிடுகிறார் ஆக இல்லிலிருந்து கற்பொழுக்கமுடன் கணவனொடு கண்ணும் இமையும்போல் துணையாகி ஒன்றுபட்டு அன்பும், அறனும் உடைத்தாய இல்வாழ்க்கை நடத்திப் பண்பும் பயனும் அடைந்து வாழ்வதற்கு நல்லறஞ் செய்யவேண்டுதலின் முல்லையை முதலில் வைத்தார். அவ்வாறு,

" அன்பும் மடனும் சாயலும் இயல்பும்
என்பு நெகிழ்க்கும் கிளவியும் பிறவும்
ஒன்றுபடு கொள்கையொ டோராங்கு முயங்கி" (அகம் உ௨௫)

இல்லறம் நடத்தவேண்டுமாயின் குறிஞ்சி ஒழுக்கமான கூட்டமின்மையான் நிகழாமையின் புணர்பொருட்டாய குறிஞ்சியை முல்லையின் பின் வைத்தார் என வைப்புமுறையை ஒழுங்கு செய்து சிறப்பு கூறுகின்றார் நச்சினார்க்கினியர்.

இனி, குறிஞ்சி என்பதைத் தொல்காப்பியர் "மைவரை உலகம்" என்று ஏன் குறிப்பிட்டார் என்பதை நோக்கின், மலை என்பது நீண்டதோர் வடிவுடன் இருத்தல் வேண்டும் இதனாலன்றோ மலைகட்கு 'நெடுவரை' என்று பெயர் வரலாயிற்று. அவ்வாறு உயர்ந்து நீண்டு வானைத்தழுவ நின்ற மலையே மேகங்களைத் தடுத்துக் கடுமையுறச் செய்து உலகம் உய்ய மழைபொழியச் செய்து வளமுறச் செய்வதாகும் அவ்வாறு பரந்து செல்லும் மை போன்ற கருமையான மேகங்கள் தவழ்ந்து செல்வதாலன்றோ மலைக்கு மைவரை என்று சிறப்புப் பெயர் வரலாயிற்று. மழையின்றேல் உலகில் உயிர்வாழ முடியாது மழைதந்திடும் மைவரை உலகமான குறிஞ்சியின்றேல் ஏனைய மூவுலகங்கள் நலமுறுது என்னே?

"நெடுங்கடலும் தன்னீர்மை குன்றும் தடிந்தெழிலி
தானல்கா தாகி விடின"

என்ற வள்ளுவர் வாய்மொழிப்படியே வருணன்மேய பெருமணல் உலகமான நெய்தல் நிலம் மழையின்றேல் நலமுறுது என்பதைத் "தடிந்தெழிலிதான் நல்தாகிவிடின்" என்பதால் தெரியவருகிறது

"விசும்பிற் றுளிவீழின் அல்லால்மற் றாங்கே
பசும்புற் றலைகாண் பரிது"

என்ற திருக்குறளால் மழையிருந்தாலன்றோ உயிரும் பயிரும் ஓங்கி வாழமுடியும்; மழையில்லாவிடில் பசும்புற்றலையுங் கூடக் காண்பது அரிது என்று தெரிகிறது எனறால மரம், செடி, கொடி முதலியன எப்படியிருக்கமுடியும். இதனால் மழையிருந்தாலன்றி முல்லைநிலமான காடும், காடுசார்ந்த இடமும் நலமடையாது என்பதறியலாம்.

மக்கள் உயிர்வாழவேண்டுமானால் உணவன்றோ இன்றியமையாது வேண்டும் உணவின்றேல் வாழ்வதுதான் எப்படி? ஏன்? இதைப்பற்றி அனுபவித்து வாழும் நமக்குத் தெரிந்தது தானே அவ்வாறு பசிப்பிணி ஓட்டும் பண்புடைய மருந்தான்

உணவுபபொருள் விளையும் நிலமான வயலும், வயல்சார்ந்த இடமுமானது மருதநிலம்தானே ! அங்கு மழையின்றேல் உணவுப்பொருள் உண்டாகின்ற மருதநிலம் பயனுறாது இதோ பாருங்கள் ! இக்கருத்தைத்தரும் வள்ளுவர் குறள் :

"விண்ணின்று பொய்ப்பின விரிநீர வியனுலகத்(து)
உள்நின் றுடற்றும பசி."

என்பது இவ்வாறு பயிரும் உயிரும தழைக்க மழைபெய்து வளங்களுடன் நலங்கள் தழைக்கச்செய்யும் குறிஞ்சி நிலத்தை "மைவரை உலகம்" என்று சிறப்பித்தார் தொல்காப்பியர் என்றால் என்னே இதன்பெருமை ! இவைகளால மைவரை உலகமான மழைதரும குறிஞசிப் பகுதியே, முல்லை, மருதம, நெயதல் என்ற மூன்று உலகத்திற்கும் தலையாயது, உயிர் போன்றது என்பது உளளஙகை நெலலிக்கனியெனத் தெளிவி திற் புலனும்.

இத்தகைய சிறப்புமிக்க மைவரை உலகமான குறிஞ்சி நிலத்திற்கு இறைவன் யார ? என்பதைப் பாரப்போம் முலலை நிலததிற்குத் திருமால என, மருத நிலததிறகு இநதிரன் என, நெய்தல் நிலத்திற்கு வருணனென அவ்வந நிலங்கட்குத் தலைமைக கடவுளரை நியமிதத தொல்காப்பியர் மைவரை உலக மான குறிஞசிக்கும் "சேயோன் மேய" என்று முருகனைக் குறிபபிடுகிறார். சேயோன மேய என்ற தொடர் செம்மை நிறம பொருநதிய முருகனைக் குறிக்கிறது இதுபறறியன்றோ முருகன் சேய், செவவேள, சேயோன் எனபபட்டான்

அக்காலததில மழைவேண்டுமென்றால குறவர் பெருமக்கள மலையுறைதேவான முருகனை வழிபாடுசெயது பூப்பலியிட்டு மழையைப பெற்றும், மிகுமழை பெய்யுங்காலத்து வேணடா என்றிருப்பின வழிபாடுசெய்து பூபபலியிட்டு மழையைத் தடுததும் வந்தனர். இவ்வாறு மக்கள உளமகிழ வேண்டிய தெல்லாம வேண்டியாஙகு அளிததுவாழும் முருகன் உறையும் இடம் குறிஞசி என்பதை,

"மலைவான வான்கொளகென உயர்பலி தூஉய்
மாரியான்று மழைமேக குயாகெனக
கடவுட் பேணிய குறவா மாக்கள்
பெயலகண் மாறிய உவகையா சாரற்
புனததினை பயிலும் நாட! (புறம் ௧௪௩)

என்ற சங்க இலக்கியத் தண்டமிழ்ப் பாட்டாலறிகிறோம்.

உலகம் கடலுள் மூழ்கியிருந்து தோன்றிய பகுதிகளில் முந்தியது மலைப்பகுதி. அங்குதான் மக்கள் தோற்றம் உண்டாகியது என்பர் ஆராய்ச்சியாளர். மலைப்பகுதிக்குரிய தெய்வம் முருகன் என்பதால் தாங்கள் தோன்றிய நிலத்துக்குரிய தெய்வமான முருகனை மக்கள் வழிபடு கடவுளாகக்கொண்டு வாழ்ந்தனர் ஆதலால் சங்ககாலமுதலாகத் தமிழ்நாட்டில் முருகன் வழிபாடு சிறந்திருந்தது. வழிதவறிச்செலலும் மேகங்களைத் தடுத்து மழைபெய்யவைத்துச் சிறத்தலையுடைய குறிஞ்சி நிலமான மலைபோலவே, வழிதவறிசசெலலும் வாழ்க்கையை உடைய மக்களையும் தடுத்தாண்டு அன்பு பெருக, அறிவு வளர வைத்து அருகுள்ள தெய்வம் நலம்பெற வைக்கிறது எனபதும்

இவ்வாறான குறிஞ்சி நிலத்தில் மக்கள் இறைவனை வழிபடும் முறை விந்தையானது. வேலன் என்பான் முருகன் அருள் பெற்றுக் காந்தட்பூச் சூடி ஆட, ஆட்டத்திற்கேற்ப வேடப் பெண்களும் ஆடுவர் இத்தகைய வழிபாட்டின் விளக்கம் திருமுருகாற்றுப்படை செம்மையுறக் கூறும்.

குறிஞ்சி நிலத்திற்கூடிய தலைவன், தலைவி செம்புலப் பெயல் நீர்போல, அன்புடைநெஞ்சம் தாம், கலந்தவராய் 'நின்னிற் பிரியேன், பிரியின் உயிர்தரியேன்' என வாக்குறுதி பெற்றுப் பிரிந்தனர் தலைவன் பொருள்தேடப் பிரிந்ததால் தலைவி உடல் பசந்தது. இதைக்கண்ட பெற்றோர் மகளை மலையுறை தெய்வம் தீண்டியதெனக் கருதி மறியறுத்துப் பூசைபோட்டனர் இதைப் பற்றிய விளக்கமெல்லாம் இலக்கியங்கள் நன்கு எடுத்தியம்பும். மைவரை உலகத்தின் மாண்பினைக் குறிஞ்சிப்பாட்டு, குறிஞ்சிக்கலி, குன்றக்குரவை, திருமுருகாற்றுப்படை, பிற இலக்கிய நூல்கள் முதலியன சிறப்புறக் கூறுகின்றன.

மக்கள் நலம்பெற மைவரை உலகம் வாழ்க!

# பூங்குன்றனும் இளங்கோவும்

[வித்துவான், திரு. த. வடிவேலு]

கருததிலூறிய காட்சிகள் பலகண்ட கணியன் பூங்குன்றன் சான்றோர் சாற்றுமுண்மையைச் சான்றாகக் கொண்டு உலகமே ஊழின் வழித்தாகும என்னுங கருததை உலகநதேற உரைககலானார்

அவர் நன்றோதீதோ பிறரால் வருவதன்று எல்லாம் விதியா லாவதே, துன்பமும அதன் நீககமும் அவ்விதமாவதே; சாதலும பின்னாலேற்படுவதன்று கருவினுதிககும் பொழுதே பொருந்தியுளளது; வாழ்தலே இனிதென்றோ இன்னாதென்றோ கருதேன்; யாற்றின் நீரோட்டததுடன் செல்லுங்கலம்போல உயிரானது ஊழின் வழியே செல்லுமென்பதைச் சான்றோ ருரையால் உணர்ந்தோ மாதலின உலகில் மிக்கோரை வியவேன், இழிநதோரை இகழேன்

"யாது மூரே யாவருங கேளிர
தீது நன்றும பிறாதர வாரா
நோதலுந தணிதலு மவற்றோ ரனன
சாதலும் புதுவ தனறே வாழ்தல
இனிதென மகிழ்ந்தன்று மிலமே முனிவின்
இனனா தென்றலு மிலமே மினனொடு
வானந் தண்டுளி தலைஇ யானாது
கல்பொரு திரஙகு மல்லற் பேயாற்று
நீர்வழிப் படூஉம் புணைபோ லாருயிர
முறைவழிப் படூஉ மென்பது திறவோர்
காட்சியிற் றெளிந்தன மாகலின் மாட்சியிற்
பெரியோரை வியத்தலு மிலமே
சிறியோரை யிகழ்த லதனினு மிலமே" (புற. 192)

நாமடைவ தெல்லாம் நம்மூழின பயனே ஆதலால் இவ்வுல கில் ஒருவரால் ஒருவர்க்கு நன்றோதீதோ விளைகின்றதென்ப தில்லை அதனையுணர்ந்தோர் எல்லாவூரும எமதூரேஎன்பதையும எல்லாரும் எமது சுற்றத்தாரே என்பதையும உணர்வீர் எனக் கூறி அவரவர் ஊழே அவரவர் உறும் பயனுக்கு வித்தாவது எனவே தமக்குத்தாமே இன்பமுந துன்பமுந் தேடுபவர் நாமே என்பதை உணர்த்திப் பழியற வாழ்க என எம்மை விருந்து ஒளியிலுய்த்தார்.

சங்ககாலப் பூங்குன்றன் கருத்தினைச் சங்கத்திறுதியிலோ அன்றேல் அதன்பின்போ வாழ்ந்த இன்பத்துறவி இளங்கோவடிகள் ஒன்றுமறியாத பாமரனும், கற்றுத்தேறியும ஊழ்நன்றாகாத மற்றோரும் உண்மையென்பதை யுணருமாறு சிலம்பின் வென்ற சேயிழைநங்கையின வரலாற்றுச் சான்றுகொண்டு காட்டினர்.

சிலம்பின்சிற்பி ஊழ்வினையே உலகிற்கு ஊன்றுகோலென்பதைத் தெளிந்தார், உலகோரும தெளியுமாறு சிலம்பின் பதிகத்திலே,

> "அரசியல பிழைத்தோர்க் கறங்கூற் றாவதூஉம
> உரைசால் பத்தினிக் குயர்ந்தோ ரேத்தலும்
> ஊழ்வினை யுருத்துவந் தூட்டும் என்பதூஉம
> சூழ்வினைச் சிலம்பு காரண மாகச்
> சிலப்பதி காரம் எனனும பெயரால
> நாட்டுதும யாம ஓர் பாட்டுடைச் செய்யு"ளென்றார.

மூன்றிலும முன்னைய இரண்டும நிகழப் பின்னதொனறே காரணமாகும எனபதை விளக்கவே ஊழ்வினையுருத்து வந்தூட்டு மென்பதை யிறுதியிற் கூறினார். கதை கூறுங்காரணத்தைப் பதிகத்தில கூறிய அடிகள கதைநிகழ்ச்சி ஊழின்வழிகொண்டே நிகழ்வதனை ஏற்ற இடந்தோறும சுட்டிச்செல்லுகையில கானல்வரியிலேயே ஊழ்வினை யுருத்ததாதலின் கோவலன் மாதவியைப பிரிந்தான் என்று தொடங்கினர்.

> " மாயப் பொயபல கூட்டு மாயத்தாள் பாடினளென
> யாழிசைமேல் வைத்துத்தன் ஊழ்வினை வந்துருத்த தாதலின
> உவவுற்ற திங்கள் முகத்தாளை.......... .. .. " (52)

கோவலன் தான் பிரிந்தானெனத் தொடங்கி நாடுகாண்காதையில் கோவலனுங் கண்ணகியும ஊழ்வினை உள்ளத்தைத் தூண்டுதலாலேயே தம்மகம் விட்டுப் புறப்பட்டனரென்றார்.

> "காரிருள் நின்ற கடைநாட் கங்குல்
> கடைஇ யுள்ளந் துரப்ப
>
> காவிரிவாயிற் கடைமுகங்கழிந்து " (3—33)

(171) "ஒழிகென வொழியாதூட்டும் வல்வினை" யெனவும் ஊர் காண்காதையில் கவுந்தியடிகள் கூற்றாக "வல்வினை யூட்டு" மெனவும " தீதுடைவெவ்வினை யுருத்தகாலை " யெனவும் நளன்

தமையந்தியை இடையிருளில் விட்டு நீங்கியது "வலவினை யன்றோ", எனவும்,

காடுகாண் காதையில் கவுந்தியடிகள் கூற்றாக

"இறந்த பிறப்பின் எய்திய வெல்லாம்
பிறந்த பிறப்பிற் காணாயோநீ"  (156-7)

முற்பிறப்பிற் செய்தனவே இப்பிறபபிற்கு வித்தாகும் எனக்கூறினார்

அடைக்கலக் காதையில் மாடலன் கூற்றாக

"இம்மைச செயதன யானறி நலவினை
உமமைப் பயனகொல் ஒருதனி யுழந்தித
திருத்தகு மாமணிக் கொழுநதுடன் போந்தது"  (91-3)

கோவலனே நீ இப்பிறப்பில் தீவினை செய்திலை, முற்பிறப்பு வினையே இவ்விதத் துயருறற்கு ஏதுவாயது எனவும,

கொலைககளக் காதையில் மன்னனுக்கு வினை ஊட்டுங் காலம் வந்துற்றதனால் ஆராயாது தன மனைவியின் சிலம்பு கள்வன்கையதாளுல் கொன்று சிலமபு கொணாக என்றான்.

"வினைவிளை கால மாதலின் யாவதும
சினையலர் வேமபன் தேரா னாகி"  (148-9)

எனவும்,

"தீவினை முதிர்வலைச சென்றுபட் டிருந்த
கோவலன் ........ ........ ....."  (159)

கோவலன் பண்டை ஊழ்வினையுருத்தலால வெட்டுண்டா னெனவும

ஊர்சூழ்வரியில கணணகியின் அவலக் கூற்றாக..

"என னுறு வினைகாணா இதுவென உரையாரோ"

"ஈர்வதோர் வினைகாணா இதுவென உரையாரோ"

"உண்பதோா வினைகாணா இதுவென உரையாரோ"

இறந்து கிடக்கும் கணவனுடல் கண்டு புலம்புபவள் மன்னன் தவறிழைததனால் நீ இறந்தாய்; அதனையறியாதோர் எனது வினையே காரணமெனக் கூறுவா எனவும,

வழக்குரைகாதையில கண்ணகி மன்னவனை நோக்கி ஊழ்வினை தூண்டலால் உன்னிட மடைந்து கொலையுண்டான் என் கணவன்,

" வாழ்தல் வேண்டி ஊழ்வினை துரப்பச
சூழ்கழல் மன்னு நின்னகர்ப் புகுந்திங்கு
என்காற் சிலம்பு பகர்தல்வேண்டி நின்பாற்
கொலைக் களப்பட்ட கோவலன் மனைவி."

வஞ்சினமாலையில் கண்ணகி வாய்மொழியாகவே,

" முற்பகற் செய்தான் பிறன்கேடு தன்கேடு
பிற்பகற் காணகுறூஉம் பெற்றியகாணா "

கட்டுரை காதையில் கதையின் முக்கிய செயலான கோவலனிறப்பிற்கு ஊழே காரணமென்பதை மதுரை யழற்பட்ட காலை மதுராபதி யென்னும் தேவதை கூறுமிடத்து கலிங்க நாட்டிற் சிங்கபுரம் கபிலபுரமென்ற இரண்டு ஊர்களையு மாண்ட மன்னராகிய வசுவுங்குமரனும் பகைமை கொண்டமை யால் ஒரு நாட்டிலுள்ளோர் மறு நாட்டிறகுள் வரல்கூடா தெனச் சட்டமிட்டிருந்தனர் அந்நாளில் கபிலபுரத்தவனை சங்கமனென்பான் வாணிபத்தின் பொருட்டுச சிங்கபுரத்தை யடையவே சிஙகபுரதது மன்னன் ஏவலன் பரதன், வணிகனை சங்கமனைக் காட்டிக் கொலைசெய்வித்தானெனவும், அவன் மனைவி நீலியெனபாள் பதினன்கு நாட்களின் பின்பு மலையி லேறித தானுறற துயரை அதற்குக் காரணமாயிருந்தோரு முறுவரெனக் கூறிக் கீழே விழுநது இறநதாளெனவும், அப்பா தனே கோவலனுகப் பிறநதா னெனவும் முந்தை ஊழ்வினையால் இபபொழுது வாள்வாய்ப் பட்டிறநதான், அவனிறந்தமைக்கு மன்னன் காரணமாகான்

" உம்மை வினைவந் துருதத காலைச
செம்மையி லோர்க்குச செய்தவ முதவாது."

எனக்கூறி ஊழே உலக நிகழ்ச்சிகள் யாவற்றுக்கும் காரண மென்பதை உறுதியாக வலியுறுத்தினர்.

குன்றக்குரவையிலே கண்ணகியைக் கண்டு வினவிய மகளிர்க்குக் கண்ணகி வினைவந்தூட்டியதால் கணவனையிழந்து வந்தேனென்றாள்.

" மணமதுரையோ டரசுகேடுறவல்வினைவந் துருத்தகாலைக்
கணவனையங் கிழந்துபோந்த கடுவினையேன் யானென்றாள்."

எனவும், காட்சிக் காதையிற் சாத்தன் வாயிலாக வினையே மன்னவன் கோல் வளைதற்குக் காரணமாயிற்று.

"வாக்வினை விளைதத கோலை மன்னவன்
செல்லுயிர் நிமிர்ததுச செஙகோ லாக்கியது."

எனவும் கூறி ஊழ்வினையே உலகோர் வாழ்விற்குங் கேட்டிற்குங் காரணமாவது. ஊழின்றேற் பிறப்பின்று ஊழினலேற்பட்ட இப்பிறப்பில் இனிமேலும் பிறப்பிற்கு வித்தினைத்தேடாது நல்லவழியடைதற் கேற்றதான அல்லவை கடிந்து நல்லவை செய்யுமாறு அறவுரை பகர்ந்தார். கணியன் பூங்குன்றன் கருத்தினையே இளஙகோவடிகள் உலகந்தேற வரலாற்று வாயிலாக உணர்த்திக் காட்டினர் ஊழினையறிந்து உ

தொல்காப்பியனளித்த மணவன்

தமிழணஙகி னெழிலழி யத்தான் பொரு து
தொல்காப் பியனருனு மோதகு தியாதா
மைந்தனையே தையலவள கணவ ஞக்கி
யிருப்பதே ழியலுடைய வமம ஞளன
என்றமே யவளெழிலை யெடுத்துக் காட்டி
எஙகியவள் தவியாது தாங்கு மாறு
இலஙகிழையாள் இயல்பெல்லாம் இனிதி ஞேர்ந்து
இயைநத தொல்காப்பிய மெனுமியற்போ பூணடு
இன்றுமவள் எழிலினையே யெம்முன் காட்டி
எந்நாற்குந் தொன னூலா யிலஙகு மாறு
தமிழன்னை மேற்கொணட பரிவி னலே
தாரணியோா தாம்புகழத் தந்தான் மாதோ.

## இசைத்தமிழ்

தமிழ்மொழிக்கண பாடற்பகுதியை இசைத்தமிழ எனத தனியாக அமைத்து வளர்த்தனா. இசை எவர் மனததையும் இசைய வைப்ப தென்னும் பொருளது. இசைக்கு மயஙகாத பொருள் யாதுமில்லை. இதனுனே இறைவனையே நம்பியாரூரரும் 'ஏழிசையாய் இசைப் பயனுய' எனறா. இசை கட்புலன் கதுவா 'ஒன்று. அது கேட்போர் செவிக்கால் வழியே சென்று உள்ளத்தடததே பாய்ந்து இன்பப் பயிரை வளர்க்குந் தகையது. அவ்விசை குழலினும் நரம்பினும குரல்வளையினும் நின்று எழும் நுண்மையைப் பல்லாயிரம் யாண்டுகட்கு முன்னரேயே தெளித்துணர்ந்து பண்ணிசைத்து முறைப்படுத்துவாரானல் இத்தமிழிசை எவ்வளவு தொன்றுதொட்டது பார்மின்! இத்தகைய முத்தமிழில் ஒன்ருன மூவா இசைத தமிழோ டொன்றித் தோயந்து இன்புற்று உலக மக்களும இன்புற வளாப்போமாக. —**செல்லூர்க்கிழார்.**

# நல்லரசு

[கவிமணித்தாசன்]

வறுமை யழிந்திட வாட்டிடும் நோயெலாம மாளுதற்கும்,
சிறுமை செயும்பல துன்பம் துறந்தினி வாழ்வதற்கும்,
பெருமை வருமபல பொற்புறும் நற்கலை ஆவதற்கும்,
அருமைத் திருநல ஆட்சி அமைவது நல்லரசே!

நிலமெலாம் நீர்வளம நெஞ்சு வளத்தால் மிளிர்ந்திடவும,
தலமெலாம் கைத்தொழிற் சகதிகள் ஓஙகி வளர்ந்திடவும்,
புலமெலாம் பூமபொழில், பொன்விளை நாடாய்ப் புதுககிடவும்,
நலமெலாம் கூடிடும் நற்குடி நாடிடல் நல்லரசே!

அன்பொடு இல்லறம் நல்லறம் ஆகிச சிறந்திடவும,
வன்பொடு ஏழ்மை மடமை விதிசசொல் இறந்திடவும்,
நண்பொடு நானிலம் ஞானமும் நற்பயன் உற்றிடவும்,
பணபொடு காதலும பாஙகுறச் செய்வது நலலரசே!

பெண்ணுமோர் கணணெனப் பேணி வளாக்கும பெருந்தகையார்,
நண்ணுமோா ஒண்பொருள் நானிலச சொநதம எனுமபெரியாா,
எணணுமோா எணணமால் பாரினை மாறறும் அருந்தவத்தார்,
ரமோா ஆககப் பணியினர் வாழ்வது நல்லரசே!

சாதிக் குலஙகள சமைப்பாா, சனுதனம் ஆணடிடுவார்,
மோதிப் புரட்சியில் மூழ்குவாா, தன்னலம் வேணடிடுவாா,
நீதிக் கடிப்படார், நெஞ்சினில கள்ளமே பூண்டிடுவார்,
ஏன் செயலினா, சேரா திருப்பது நல்லரசே!

தாய்மொழிச் சேய்மொழி, தக்கபாா தொன்மொழிச செல்வமதை,
வாய்மொழி வாயிலாய், மாணகலை நூல்களாய்ப் பெற்றிடவும,
ஆய்வழி செய்வோர், அனைவரும் செல்வச சமததுவக்கால்
பாய்வழி இன்பமே பண்ணுவாா, வாழ்வது நல்லரசே!

# செய்திகளும் குறிப்புக்களும்

*தில்லைத் திருமறைக் கழகம்-சிறப்புக் கூட்டம்*

இக்கூட்டம் 1—2—'53, ஞாயிறு மாலை 6-30 மணிக்குத் தில்லைச் சிற்றம்பலத்துப் பொன்னம்பலவாணர் திருக்கோவில் ஆயிரக்கால் திருமண்டபத்துக்கண் கழகச் சார்பில் நிகழ்ந்தது. கழகத்தலைவர் திரு. ஆ. சு. கணபதிப் பிள்ளையவர்கள் தலைமை பூண்டார்கள்.

பேரவை தில்லைவாழ் அந்தணர்களாலும், செந்நெறிச் செல்வர்களாம் சித்தாந்த சைவர்களாலும், திருமாலநெறிசேர் திருவுடைப் பெருமக்களாலும், நகரப்பெருமக்களாலும, வெளியூர் அன்பர்களாலும பெரும் சிறப்புடன் நிகழ்ந்தது.

இவ் அவை முறையல்லா முறையால் என்றுமில்லாதபடி இன்று தில்லைக் கோவிந்தராசப் பெருமாளுக்குப் பெருவிழாக் கொண்டாட வேண்டுமெனனும வலுக்கட்டாயம சில வைணவர்களால் கொள்ளப்பட்டு மேற்கொண்டு விண்ணப்பங்களும, வேண்டாத் தூற்றுதல்களும மேன்மேலும் பெருகுவதுகண்டு அதைக் கண்டித்து நன்னெறி முறையில் எப்போதும்போல் ஒற்றுமைவாழ்வே உயர்வென உணர்த்தக்கூடியது. இதைப் பொறுத்துக் "தில்லைச் சிற்றம்பலப் பெருங்கோயிலின் பழமையும், அதன்சார் திருச்சித்திரக்கூட அமைப்பும்," என்னும பொருள் பற்றி அன்பு, அறிவு, நடுவுநிலைமை, செந்நாப்புலமை, பண்பு, கடவுட் பற்று முதலிய பல நலம் வாய்ந்த பயனுடைச் சான்றோர் பலர் பேசினர். அவற்றின் சுருக்கம வருமாறு

க. E. S. வரதராச ஐயர் B. A., அவர்கள்—தில்லைத் திருச்சிற்றம்பலக் கோவில் வரலாற்றுக் காலத்துக்குப் பன்னெடு நாட்களுக்குமுன்பே தொன்மையே உள்ளது. அது சித்தாந்த சைவர்கட்குரிய சிவன் திருக்கோவில். இதனை அகப்புறச் சான்றுகள் பலவுடன விளக்கினார்கள். தேவார ஆசிரியர் காலத்துக்குப் பன்னெடு நாட்களுக்குப் பின்புதான் கோவிந்தராசப் பெருமாளுக்கு இடங்கிடைத்தது என்பதையும் வலியுறுத்தினார்கள். அந்நாட்களில ஏனைச் சிவன் திருக்கோவில்களில் நடக்கும் முறைப்படி தில்லைவாழந்தணர்களே சுற்றுக்கோவில் முறையில் வழிபாடாற்றி வந்தார்கள் எனவும் விளக்கினர்.

உ. N. S. சிதம்பரேசுவர தீட்சிதர் அவர்கள் தில்லைத் திருக்கோவில் கூத்தப்பெருமானுக்கே உரியதென்றும், திருமாலடியவராகிய திருமங்கை மன்னன், குலசேகராழவார் திருப்பாசுரங்களின்படி தில்லைவாழந்தணர்களே வழிபாடு ஆற்றிவந்தனர் என்றும, பிற்காலத்து நேர்ந்த கலகம் ஒன்றினால் கூத்தப்பெருமான் சேரநாட்டிற்கு எழுந்தருளச் செய்யப் பெற்றனரென்றும், அக்காலை கோவிந்தராசப் பெருமாளுக்கு இடப் பெருக்கமும வழிபாடும வைணவர்கள் தேடிக்கொண்டார்கள் என்றும திருநீற்றுச் சோழப் பெருவேந்தன தில்லைக் கோவிந்தராசப் பெருமாளைக் கடலிடம் புகச்செய்த பின்னர் அச்சுத தேவராயர் புதுக்கிக்கட்டி நாடோறும் நிகழும ஏற்பாடு முதலிய சிற்சிலவற்றைத் திருமால் வழிபாட்டினர்க்கு அமைத்தனர். அதுவல்லாமல் எந்தவகையான பெருவிழாவோ சிறப்போ அந்நாளதொட்டு இந்நாள்காறும நடந்ததில்லையென்றும நடத்தத்துணிவது பொருத்தமில்லையென்றும கூறினர்

௩. சிதம்பரம் வேதபாடசாலை நரசிம்ம சாத்திரிகள் திருமால் வழிபாட்டினராகிய வைணவ நண்பர்கள் சிலர் இதுபற்றித் தம்மை வினவினாராகத் தாம் விடையிறுத்தவாறே கூறுவதாகக் கூறினர்

தில்லைத் திருக்கோவில் கூத்தப்பெருமானுக்கே உரியதென்றும், தாம் சிவபெருமானையும் திருமாலையும் ஒப்பவணங்குந் தன்மையரென்றும், ஒரு கோவிற்கண் முதன்மையாக வழிபடப்பெறும் கடவுளர்க்குப் பெருவிழாக் கொண்டாடும் இடத்து அக்கோவிலகத்துச் சுற்றுக் கடவுளராக வுள்ள ஏனைய திருவுருவங்கட்கு நாள்வழிபாடன்றிப் பெருவிழாவோ பிறவோ செய்வது நூல்வழக்கிற்கும் உலகவழக்கிற்கும் முற்றும் மாறுபட்டதென்றும், முதன்மைக் கடவுளர்க்கே பெருவிழா உண்டென்றும், சுற்றுக்கடவுளர்க்குப் பெருவிழாக் கிடையாதென்றும் நாம் வழிபடும் எந்தக் கடவுளரையும் நாம் மேற்கொண்டு வழிபட்டுவரும் கடவுளராகவே கருதுதல் வேண்டுமென்றும், இப்போது வைணவர்கள் செய்யவிரும்பும் விழா நூன்முறைக்கும், பொருந்துமாற்றிற்கும், பழக்க வழக்கத்திற்கும் எவ்வகையாலும் ஒவ்வாதென்றும் ஆண்டுதோறும் இருமுறை நடக்கும் நடராசப் பெருமான் திருவிழாவினையே பெருமாளின் திருவிழாவாகப் பாவித்தல் வேண்டும் என்றும், வைணவர்களுக்குரிய திருவரங்கத் திருக்கோவிலில் எழுந்தருளியிருக்கும் விநாயகப்பெருமானுக்குச் சதுர்த்தி விழாச்செய்யச் சைவர்களுக்கு இடங்கொடுப்பார்களா? மாட்டார்களல்லவா? அதுபோல் இங்கும் வைணவர்கள் இடம்பெற முடியாதென்றும் கூறினர்

௪. C இராமலிங்கம் M. A., அவர்கள்—ஆடவல்லான் கூத்தின் தொன்மையும் அக்காட்சியினை அகக்கண்ணுற்றுக் கண்டு இடையறாது எண்ணி எண்ணி அறிதுயில்கொள்ளும் கோவிந்தராசப் பெருமானின் கோலத்தையும், கூத்தப்பெருமானின் உருவ அருவத்தன்மையினையும் சிறப்பாக விளக்கிக் குறிப்பாகக் கூத்தப்பெருமானுக்கே எல்லாவகை உரிமையும், பெருமையும், சிறப்பும் இருப்பனபோல் ஏனைத் தெய்வங்களுக்கு இல்லையென்றும், பிறிதொரு தெய்வத்திற்கு உயரிய சிறப்புத் தராதென்றும் கூறினார்கள்.

௫. வித்துவான் வி. மு. சோமசுந்தரம் பிள்ளையவர்கள் வெள்ளாற்றங்கரையிலுள்ள வட அக்கராசபுரத்துப் பெருமாளை அச்சுததேவராயர் காலத்தே தில்லைக் கோயிலில் நிலைநாட்டினார்களென்றும், இப்போது வைணவர்கள் கூத்தப்பெருமான் வழிபாட்டிற்கு இடையூறு செய்து கொண்டிருக்கிறார்கள் என்றும், பெருமாளுக்குப் பெருவிழாக் கொண்டாடத் தில்லைக்கோவிலில் சிறிதும் இடமில்லையென்றும், தில்லைவாழந்தணர்கள் தங்கள் உரிமைகளை விட்டுக்கொடுக்கக் கூடாதென்றும், வடமொழியிலுள்ள நாள்வழிபாடு, பெருவிழா வழிபாடு முதலியவற்றினை விரைவில் வெளிப்படுத்த வேண்டுமென்றும் கூறினார்கள்.

௬. அண்ணாமலைநகர் A இராமசாமிப் பிள்ளை, M. A., L. T. அவர்கள் மன்றத் தலைவர் என்னும் பெயர் தில்லைக் கூத்தப்பெருமானுக்கே உரியதென்றும், அதனை வலியுறுத்தக் கல்வெட்டுக்களும் சிறந்த நூல்களும் உளவென்றும், பெருமாள் மன்றத்தலைவர்—சபாநாயகர் எனப் பெயர் பெறுவது திருமால் வழிபாட்டினர் “தில்லைத் திருச்சித்திரகூடமான்மியப்” புனைந்துரைகள் என்றும், அவ்வாறு பொய்யாக உயர்த்திக்கூறுதல் முறையாகாதென்றும், வைணவர்கள் பெருவிழா — பிரம்மோற்சவம்

கொண்டாட விரும்புவது நாகூர்த் தர்க்காவிலும் வேளாங்கண்ணி மாதா கோயிலிலும் நமது தெய்வத்தைக் கொண்டாட விரும்புவது போலாகும் என்றும் கூறினார்.

எ. அண்ணாமலைநகர் வித்துவான் மு அருணாசலம் பிள்ளை அவர்கள், இமயமலையிலும் கன்னியாகுமரி முனையிலும் சிவனும் சத்தியும் இருக்கும் திருக்கோவில் திருக்கோலங்காண்பார், நாவலந் தீவாகிய இந்தியா முழுவதிலும் சிவாலயங்கள் ஆகும் என்பதை அறிவார்கள் என்றும், சிவம் ஒன்றே மேன்மையாகிய பரத்துவப் பொருளென்றும், தில்லைக்கோவில் மிகமிகத் தொன்மைவாய்ந்ததென்றும், நந்திவர்மப் பல்லவனால் எட்டாம் நூற்றாண்டில், கோவிந்தராசர் கோவில் அமைந்ததென்றும், இரண்டாம் குலோத்துங்கனால் பெருமாள் கடத்தப் பட்டாரென்றும், கிருட்டிண தேவராயர் காலத்தில் கோவிந்தராசர் ஆலயம் இல்லை என்றும், பின் அச்சுததேவராயர் காலத்தில் அமைந்த தென்றும், இவைகளுக்கான கல்வெட்டுக்களும் பிறவும் உண்டென்றும், ஒரு சமயத்திலும் பெருமாளுக்குப் பெருவிழா நடந்ததில்லையென்றும், தில்லைவாழந்தணர்கள் தங்கள் உரிமையை எப்போதும் விட்டுக்கொடுக்கக் கூடாதென்றும், வைணவர்கள் நடந்துகொள்வது முறையாகாதென்றும், முப்பெருங் காப்பியங்களிலும் பிற சங்கநூற்களிலும் சிறப்பாகக் கூறப் பெறுபவர் சிவனேயென்றும் கூறினார்கள்

அ. அண்ணாமலைநகர், ஆராய்ச்சியாளர் க வெள்ளைவாரணர் அவர்கள், சைவர்கள் சிவன் வேறு திருமால் வேறு என்று வேறுபாடு கொள்பவர்கள் அல்லர் என்றும், தேவார திருவாசகங்களை ஓதுவதுபோல், பிரபந்தங்களையும் கொள்வார்கள் என்றும், எல்லாத் தெய்வங்களும் பொருளால் ஒன்றே என்றும், சமநோக்கம் உடையவர்கள் சைவர்கள் என்றும், அவர்கள் திருக்கோவில்களில் எங்கும் திருமால் திருவுருவங் களும் இருப்பதைக் காணலாமென்றும், விசயநகர அரசர் காலத்தில் திருமாலுக்கு இடம் சிறிது அகலப்படுத்த முயன்றபோது, நேர்ந்த கலகத் தால் தமது உரிமையைக் காப்பாற்றத் தில்லைவாழந்தணர் இருபதின் மருக்குமேல் உயிர்துறக்க நேர்ந்தமை வரலாற்று வெளிப்படை என்றும், சென்ற நூற்றாண்டில்தான் சிதம்பரத்தில் ஓர் அமைதி ஏற்பட்டதென்றும், அவ் அமைதியைச் சிதைக்கவே வைணவர் இப்பொழுது பெருவிழாக் கொண்டாட முனைந்துள்ளனரென்றும், இஃது அரசியற் சட்டத்துக்கு முற்றிலும் மாறுபட்டதென்றும், சிதம்பரம் கோவிலில் வைணவர்களுக்கு எவ்வித உரிமையும் கிடையாதென்றும், வெளியூரிலுள்ள ஒரு சில வைணவ நண்பர்களே பெரிதும் இம்முயற்சியில் ஈடுபட்டுள்ளார்கள் என்றும், அவர்களுக்கு இங்குள்ள நிலைமைகளை அறிவிப்பது நமது கடமை என்றும், அதனை நிறைவேற்றவே இக்கூட்டம் நிறுவப்பட்ட தென்றும், இதனை உணர்ந்த வைணவ நண்பர்கள் இனியேனும் இம் மாதிரி முயற்சியில் ஈடுபடமாட்டார்கள் என்று நம்புகின்றேன் என்றும் கூறினார்.

தலைவரவர்கள் முடிப்புரையில் தங்கள் ஆசிரியர் சபா சிவப்பிரகாசம் பிள்ளையவர்கள் இயற்றிய "திருச்சிற்றம்பலப் பெருங்கோயிலின் பழமை யும் திருச்சித்திரகூட அமைப்பும்" என்ற ஆராய்ச்சிக் கட்டுரையில் 1 Jesuit Father N. Pimenta. 2 C S Srinivasachariar 3 Bala-subramania Iyer 4. சிறந்த தமிழாராய்ச்சியாளரும் ஸ்ரீவைணவரும் ஆகிய Rao Sahib M Raghava Iyengar Swamigal முதலாயினோர் உள

ளுறைகளை விளக்கினதோடு இச் சிதம்பரத் திருக்கோவில் தொன்று தொட்டே சைவர்களுக்கு உரியதென்றும், வைணவர்கள் ஒதுக்கிடம் பெற்றது பிற்காலத்தவர்களின் இடைநுழைப்பே என்றும், திருமாலுக்குப் பெருமை கூறவந்த புதுவை வைணவர் புராணம் பொய்யும் புளுகும் மிடைந்த புனைந்துரை என்றும், அவர் பொய்யே கட்டி நடத்திக் கூறிய கூற்றின்படியும் பிரமாண்ட புராணம் முதலிய நூல்களிலே சித்திரகூடப் புராணத்திற்கு யாதொரு அடிப்படையும் கிடையாதென்றும், அந்நூலுக்கு 1913-ம் ஆண்டிலே “தில்லைத் திருச்சித்திரகூட மான்மிய சூன்யத் தோற்றம்” என்ற ஒரு மறுப்புநூல் உண்டென்றும், எடுத்துக்காட்டி இவைகளால் வைணவர்கள் பெருவிழாக்கொண்டாட எவ்வித்தும் உரிமையுடையவர் அல்லரென்றும், இதுபற்றிச் சைவர்கள் எப்போதும் விழிப்போடு நடந்துகொள்ளுதல் வேண்டும் என்றும் கூறினார்கள்.

‘திருமால் பிரமோற்சவம் கொண்டாடுவது அறவே கூடாதென்ற தீர்மானம்’ ஒருமனதாக நிறைவேற்றப்பெற்றுப் பெருமக்களிடம் கையொப்பம் வாங்கப்பட்டது. இரவு 10 30-மணி அளவில் நன்றி கூறுதலோடு கூட்டம் இனிது நிறைவுற்றது.

## தூத்துக்குடி சைவசித்தாந்த சபையின் 69-ஆவது ஆண்டுவிழா

தூத்துக்குடி சைவசித்தாந்த சபையின் அறுபத்தொன்பதாம் ஆண்டு நிறைவு விழாவை வரும் விசய வைகாசித் திங்கள் 10, 11 (1953 மே-மீ 23, 24) ஆம் நாட்களில் நடாத்த உறுதிசெய்யப் பெற்றிருப்பதாக அமைச்சர்கள் தெரிவிக்கின்றார்கள்.

## வாலாசாபாத் இந்துமத பாடசாலைக் கட்டிடத் திறப்புவிழா

வாலாஜாபாத் இந்துமத பாடசாலையின் சார்பிலுள்ள வள்ளலார் மாணவர் இல்லத்தில் புதுக் கட்டிடத்தைச் சென்னை ‘கலகி’ இதழாசிரியர், திரு ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்களும், மேற்படி கட்டிடத்தின் ஓர் அறையாகிய இராமசாமிக் கூடத்தின் நன்கொடையாளர் மஞ்சக்கொல்லை, உயர்திருவினர் ராம. ச. இராமசாமி முதலியார் அவர்கள் படத்தைத் திரு. மார்த்தாண்டம் பிள்ளை, பி. ஏ., பி. எல்., எம். எல் சி., அவர்களும், பாடசாலையின் சார்பில் அமைந்துள்ள மாணிக்கம் அச்சகத்தை ரூ. 10,000 செலவில் வாங்கியளித்துள்ள திருமயிலை டீ மாணிக்கச் செட்டியார் அவர்கள் படத்தைச் சென்னை நகராண்மைக்கழக உறுப்பினரும் அறிவு நூல்வணிகருமான உயர்திரு, எம். ஆர் அப்பாதுரைப் பிள்ளை பி ஏ. அவர்களும் திறந்துவைத்தார்கள்.

பாடசாலை மாணவர் இல்லங்களைப் பார்வையிட்டபிறகு, சிறுவர்களின் பலவகை விளையாட்டுகளையும், கோலாட்டம், ஆசனம், கோபுரங்கட்டல் முதலியவைகளையும், பேச்சு, பாட்டு, நடிப்பு முதலியவைகளையும் கண்டு மகிழ்ந்தார்கள்.

## நூல்நிலைய சங்க வெள்ளிவிழா

மயிலாப்பூர் பி. எஸ். உயர்நிலைப்பள்ளியில் நூல்நிலைய சங்கத்தின் வெள்ளிவிழா 5 4 53-ல் நிகழ்ந்தது அப்போது தலைமைதாங்கிய முதலமைச்சர் திரு. இராசகோபாலாச்சாரியார் கூறியதாவது.

தற்காலம் புற்றீசல்போல் தோன்றி மறைந்துவரும் நாள், கிழமை, திங்கள் இதழ்களினால் அரிய பெரிய நூல்களைப் பயிலும் இயற்கை மக்களிடை நாளுக்குநாள் குறைந்துவிட்டதென்றும், புத்தகங்களிலும் மக்கள் பயில வேண்டாதன பல உள்ளன வென்றும், நூல்கள் மக்கள் போன்று, யானைபோன்று நெடுநாட்கள் வாழ்வன ஆகையால் அவற்றை எல்லோரும் விரும்பிக் கற்கவேண்டுமென்றும் வற்புறுத்திக் கூறினார்.

## வாலாசாபாத்து இந்துமத பாடசாலை ௩எ-ஆம் ஆண்டு நிறைவுவிழா

5-4-53-ஆம் நாள் இப் பாடசாலையின் ௩எ-ஆம் ஆண்டு நிறைவுவிழா சென்னைமாநில நிலவரி அமைச்சர் திரு எம். ஏ. மாணிக்கவேலு நாயகர் அவர்கள் தலைமையின்கீழ் சிறப்புற நிகழ்ந்தது. அதுகாலை 'அஜாக்ஸ் சுபிராடக்ஸ்' முதலியவற்றின் முதலாளியான திரு ஏ. எம். எம். முருகப்ப செட்டியாரவர்கள் மாணவர்கட்குப் பரிசுகள் வழங்கினார்கள். சென்னைமாநிலக் கல்வித்துறை துணையாட்சியாளர் திரு. நெ. து. சுந்தர வடிவேலு எம் ஏ. எல் டி. அவர்கள் மாணவர்கட்கு அறிவுரை பகர்ந்தார்கள். இராமநாதபுரம் நாட்டாண்மைக் கழகத் தலைவர் திரு சி உ சுப. உடையப்பர் எம். எல் சி அவர்கள் கொடியேற்றுவிழா ஆற்றினார்கள். இந்நிகழ்ச்சிகளின் இறுதியில் பாடசாலைச் செயலாளர் திரு. வா தி. மாசிலாமணி முதலியாரவர்கள் யாவர்க்கும் நன்றிகூற விழா இனிது முற்றுற்றது.

## திருவாசகம் - திருக்கழுக்குன்றப் பதிகத் திருவிழா

திருப்பனந்தாள் காசி மடத்துத் தலைவராக விளங்கும் **காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள்** அவர்கள் மணிவாசகப்பெருமான் அருளிய திருக்கழுக்குன்றப் பதிகப் பாடல்களை வேதகிரீசர் திருக்கோயிலிலே அமைக்க வேண்டுமென்று திருவுள்ளங் கொண்டு அவைகளைக் கற்பீடங்களில் பொன்னெழுத்துக்களில் பொறிக்கச் செய்து வழங்கியுள்ளார்கள் இவைகளைப் பங்குனி உத்தர நன்னாளாகிய 29—3—53-ம் நாள் ஞாயிற்றுக்கிழமையன்று காலை 9 மணி யளவில், சென்னை மாகாண நில வருமான அமைச்சர் **திரு M A மாணிக்கவேலு நாயகர் அவர்கள்** திறந்து வைத்தார்கள். அவ்வமயம் சைவ சித்தாந்த மகாசமாஜத் தலைவர் **திரு ச சச்சிதானந்தம் பிள்ளையவர்கள்** திருவாசகத்தைப் பற்றிச் சொற்பொழிவாற்றினார்கள்.

## எம் பி. களின் தமிழ் ஆர்வம்

இந்தி பேசப்படுகின்ற பார்லிமெண்டு உறுப்பினர்களுக்குத் தமிழ் மொழிப் பயிற்சி செய்வதற்காக ஒரு வகுப்புத் தொடங்குவதென்று மேற்படி உறுப்பினரைக் கொண்ட இந்தி சங்கம் முடிவு செய்துள்ளது இதைச் சங்கத் தலைவர் சேத் கோவிந்ததாசு 28-3-53-ல் அறிவித்தார்

இந்தி பேசுவோர் அம்மொழி தெரியாதவர்கள்மீது அதைத் திணிக்க முயல்வதாக ஒரு பகுதியாரிடையே நிலவும் தவறுள்ள கருத்தை நீக்கவே இவ்வாறு ஏற்பாடு செய்யப்பட்டதாகக் கூறப்படுகிறது. சேத் கோவிந்ததாசும் ஏனைய பதினைந்து பார்லிமெண்டு உறுப்பினர்களும் மேற்படி தமிழ் வகுப்பில் முதற் குழுவினராகச் சென்று தமிழ்மொழியைக் கற்பர். வணிக அமைச்சர் திரு டி டி. கிருஷ்ண ஆச்சாரி தலைமையில் 5-4-53-ஆம்நாள் கல்விஅமைச்சர் மௌலானாஅசாத்து இதனைத் துவங்கி வைத்தார்.

குறிப்பு தமிழ்மொழிபற்றிக் கொண்ட வடவர் ஆர்வம் போற்றற்குரியது.

பாண்பசிப் பகைஞனுகி தம்மூர்க்கருங்கொல்லனை 'வேல்வடித்தி' என்று பெற்று வேறுகொண்டு வறுமைப்புலியினது கொடுவாயி னின்று காத்தருளப்பிறந்த அந்த மறத்தமிழன்—தோயன் மாறன்தன் புரட்சிஒலி மங்கிவிட்டதுவோ!

மற்று, அற்றை ஞான்று,

'பாடலோர்த்தும் நாடகம் நயந்தும்
வெண்ணிலவின் பயன் துய்த்தும்' (பட்டினப் ௧௧௩-௪)

வாழ்ந்தது தமிழகம் இற்றை ஞான்று மறத்தமிழனது வழித் தோன்றல்கள் கிண்ணிப் பிச்சைக்கு, உண்டு கொழுத்து உயிரிரக்கம் ஒருசிறிதுமின்றிய கனனெஞ்சாதம் தாழிட்ட தலைக்கடையில் அவர்கள் வழங்கும் கஞ்சிக்குக், கையது கொண்டு மெய்யதுபொத்தி, 'அம்மா பசி! அப்பா பசி!!' என்ற உயிரைப்பிடுங்கும் வேதனைக் குரலெழுப்பிக் காலிறுகின்று நடைப்பிணமாகின்றனரே!

இனியன்று செல்வங்கள் யாவும் காவாது பண்டமாற்றப் பட்டு, இன்மை என்றநிலை இல்லாமையான கொடுப்பாரும், கொள்வாருமின்றி மக்கள் தம்வாழ்வில் பொருள் யாவாக்கும் வழங்கப்பெற்று இருந்ததென்பது மலையிலக்காம். அந்நிலையி னின்று சறுக்கி வீழ்ந்தது இன்று ஏற்றத் தாழ்வெனுஞ் செறி கடலில் தமிழன வாழ்வு. அன்று,

'வான் முகந்தநீர் மலைப் பொழியவும்
மலைப் பொழிந்த நீர் கடற்பரப்பவும்
மாரி பெய்யும் பருவம்போல
நீரினின்று நிலத் தேற்றவும்
நிலத்தினின்று நீர் பரப்பவும்
அளந் தறியாப் பலபண்டம்
வரம் பறியாமை வந்தீண்டி' (பட்டினப் ௧௨௬-௩௨)

நிறைந்து, 'செல்வம் எத்தனையுண்டோ புவிமீது அத்தனையும் படைத்து' வாழ்ந்தது எந்தையார் வாழ்ந்திட்ட இந்நாடு. இன்றோ மனிதன் அணுவணுவாக அழிய அளவிட்டுப் போதாப் படி அளக்கப்பட்டதே! என்ன அவலம்!

இனி,

'மழை தோயும் உயர் மாடத்துச
சேவடி செறி குறங்கின
பாசிழை பகட்டல்குல்
தூசுடைத் துகிர்மேனி

மயிலியல் மானோக்கின்
கிளிமழலை மென் சாயலோர

குழலகவ, யாழ் முரல
முழவதிர, முரசியம்ப
விழ வறாப்' (பட்டினப்: ௧௪௫-௫௮)

பேரின்பப் பெருவாழ்வு வாழ்ந்தனரே, நம் பொன்னாடுபெற்ற 'இந்திரர் சொல் கண்ணகி' வழிவந்த பண்டைமகளிர் மழை தோயு முயர்மாடத்து மச்சுவாழ்வு வாழ்ந்தமக்கள் குச்சுவீடு மற்று, குந்த நிழலற்றுப் பட்டினத்து வீதிகளில் சுற்றியலைகின்றனரே 'தூசுடை யணிந்த' துகிர்மேனி மங்கையர்கள்—பட்டுப் பட்டாடைக் கட்டிக் கிழித்திட்டப் பாவையர்கள்—வாழ்ந்த தமிழகத்தின் கண்ணே இன்று கட்டக் கையகலக் கந்தையுமின்றி, கையதுகொண்டு மெய்யது பொத்திக் கலங்கித் தவித்துக் கேட்பாரற்றுப் பாழ்பட்ட சத்திரஞ் சாவடிகளில் செத்துக் கிடக்கின்றனரே ஏழைத் தாய்மார்கள்.

அன்றோர் கண்ணகிக்கு ஒரு கோயிலெழுப்பப், பரிகசித்துப் பகைத்தவனைப் பொருது, பகைவென்று, அவன் நாண, அவன் நாடு தலைகுனிய அவன் வன்முடியிலேயே இமயத்து ஓர் கல்லினைச் சுமந்துவரச்செய்து, அக்கற்புத்தெய்வத்திற்கு உருவத்தையமைத்துக் கோயிற் சமைத்தானே, அறத்திற்கும், மறத்திற்கும், புகழிற்குமே வாய்ந்த கருணைமறவன் சேரன் செங்குட்டுவன்! வீழ்ந்ததே பாண்டியன் செங்கோல்!! ஒழிந்து பட்டதே அவன்றன் அரண்மனைவாழ்வு, ஒரு மறக்கற்பு கண்ணகியின் கண்ணீர்க்கு!!! இன்று எண்ணிலடங்காக் கண்ணகிகள் தவிக்கின்றனரே பகைத்தோர் பழிக்க! ஏ நீதிதேவதையே! நீ எங்குற்றாய்? கண்ணகியோடு நீயுமழிந்தனையோ? மற்று இதற்குத் தீர்ப்பளிப்பதார்? ஆம்! ஆம்!! அன்றே கொல்வான் மனிதன்—நின்றே கொல்லும் மக்கள் மறவெழுச்சிக்கு உறுதுணைசெய்யும் உயிர்க்கருணைத் தெய்வம்.

அந்தோ! எத்தனை நாள் ஏங்கிக்கிடப்பது ஏழைமக்கள். இங்குப் புகழ்நிலைஇய, மொழிவளர, அறநிலைஇய அகனட்டில் ஆக்கிய சோற்றுக்கஞ்சி வெள்ளமாங்குப் போக, அதன்கண் எருதுகள் நடமாட, வீதிகள் சேறாகிறதுமே அன்று. இன்று நிலவும் அவலநிலைக்கு—கதியற்றநிலைக்குக் கஞ்சித்தொட்டிகள் சான்றாக இருக்கின்றனவே ஆங்கே அணிவகுத்து ஏங்கிய முகத்தினராய் ஆழ்ந்த கண்களுடன், உடலுளதோ என ஐயப்படுமளவிற்குப் பசியால் ஒட்டியவயிறு, சாறுபிழிந்த கருப்பஞ்சக்கைபோன்ற, நடக்கும்—என்புக்—கூடுகள், இத்தகு அவல

நிலைக்கு வழியுமுளதோ என அல்லும் பகலும் அனவரதமும் நினைந்து நினைந்து உருகும் நலலோாமனததை நடுங்கவைத்து உள்ளத்தை நோகவைககின்றதே!

ஏ! மனபதைப்ப! இநத வாழ்பபிறநதும வகையறறுத் தவிக்கும் உம மினசதிற்கு வாழ்வுதானிலையோ? தாழ்வுதாஞு என்றென்றும்? இதுதான முன்னை வினையோ! விதியின் விபரீதப் பேய்விளையாட்டோ? உற்ற விதிகரும் மூணட முன் வினைக்கும் மாறறுக்காண மறவேநதா மரபினிலுதிதத மறத்தமிழனே உன்கையில் அறப்போர் எனும் சமமட்டி யில்லையா? எடு விதியினதலையை சுககல் நூறுக்க. ஏ எழுத்தாளனே! எடு உன எழுதுகோலை தீட்டுக அறப்புரட்சி மெருகிட்டு. எழட்டும் எணடிசையும் புரட்சிததீ, மககள ஒன்று, மாநிலம் யாவர்க்கும பொது வாழ்ககை வளங்களனைததும எவர்ககுஞ் பொதுநிலை என அதிரட்டும மண்ணும் விண்ணும எழுச்சிக்கனல் எஙகணும வாட்டட்டும். கருகி ஒழியட்டும ஏற்றத தாழ்வுப் பிடைபிடித்த உலுதத இந்தச சமுதாயம. அமைக பொது வாழ்வு. பொஙகட்டும நல்வாழ்வு—புதுவாழ்வு நீஙகட்டும் நிலமிசையினினறே இல்லை எனற கொடுமை. எடுததிடுவீர் அறப்புரட்சிவாளை—கொடுமதியோர் குலைநடுஙகவே!

இனி பகுபபோம் யாவர்க்கும அன்று பட்டினப்பாலை பாடிய புலவனுரைக் கண்டு, இன்றும் அஙஙனே நம இயற்கை யனனை கொழிககும.

> 'வடமலைப் பிறந்த மணியும் பொன்னும
> குடமலைப் பிறந்த ஆரமும அகிலும
> தெனகடல் முததும குடகடல் துகிரும்
> கஙகை வாரியும காவிரிப் பயனும
> ஈழத் துணவும காழகத் தாக்கமும்' (பட்டினப்: கஅஎ-கக)

ஆய அனைததையும உன்னிபபார் அன்று,

> 'பெரும் பாழ் செய்தும அமையான்
> மலையகழ்க குவனே, கடல ஹாககுவனே
> வான்வீழ்க குவனே, வளிமாற் றுவனே' (பட்டினப்· உஎ0-உ)

என

> 'வடவர் வாடக் குடவர் கூம்பப்
> (பகைவர்) திறல் கெடச சீறி'யும் (பட்டினப்: உஎசு-எ)

மறத்திற்கும் அறத்திற்கும துணைபுரிநது வாழ்ந்தானே பண்டைய மறததமிழன். அந்த வான்கவைநதஇன்பவாழ்வைச் சமைப்போம்; வாழ்வோம்; நலமாய் வாழ்ந்திடுவோம்.

# இலங்கை சுற்றினேன்

[செல்வி C. தேவி, M. Sc. நாகர்கோவில்]

வகுத்தான் வகுத்த வகையால், கொடுமலையாளக் குடியிருப் புடையோள் எனினும் இமயம கண்ட சேரலனும், இலக்கியம் கண்ட இளங்கோவும தோன்றிய சேரநாட்டின செந்தமிழ்ச் செழுமலரெனும் இச்சிறுமியின் உள்ளதது இலக்கியச சிந்தனை கள சில சிதறலேனும அரும்பி முகிழ்த்த நாட்கள் பல. சங்கத்து இருப்பிலே இருநதும, கற்போா நினைவிலே நடநதும் வளாநத கன்னிததமிழ, நிலங்கடநது, நெடுஙகடல தாண்டிப் பல்வேறு நாடடினரால பாராட்டிப போற்றப்படும எனும் இன்னோரன்ன நல்லுரைகள என் தமிழாசிரியை வழிச் செவி மடுத்துளளேன். ஆகலின, அருநதமிழ்ச் செல்வியை அலைகடல சென்றேனும கண்டு அளவளாவும பேரவா என் உள்ளதுப் புன்னுள சுடர்விட்டு இலஙகியது

'இலக்கணமும், இலக்கியமும வரமபு கண்டோன்' எனும் பரஞ்சோதியாரின திருவிளையாடற சொற்றொடரால, 'தமிழ் வளளல் மீனாடசிசுந்தரம பிள்ளையவாகள் வாடாத் தமிழ்மாலை புனைந்த பெரியாா ஆறுமுக நாவலரின் வரலாறறினை, இநநாள் வாழும, தமிழமறை கண்ட தவப்பெருஞ்செலவா திரு சுததா னந்த பாரதியார் வரைநது வெளியிட்ட தமிழ்நூல ஒன்றினை என் இலஙகைத்தோழி சில யாண்டுகளின் முன்னர் மன முவப்ப எனககளிததாள் வரம்பு கண்ட இலக்கியப்பண்ணை களின் வரலாற்றினை செநதமிழ்ச்சோலையிடைச் செமமலர் கொய்யும என்னை யார் என்று அறிய விழைதல் வேண்டுவ தொன்றன்றோ?

"யாழால் எழுந்த யாழ்ப்பாணததின் தமிழே யாழிசை போல் இனிமையானது" எனும அந்நூற் சொற்றொடா தனித் தமிழ் உள்ளததினை இழுததமை வியப்பன்று. 'யாழிடைப் பிறவா இசையே என்கோ' எனச் சோழநாட்டுக் கோவலன் வாயினில உதிதத இளங்கோவின இன்கலைஓவியததினுக்கு 'யாழ்' கட்கின்னாதாகலின் அதனிடைப் பிறவாத இசையே எனபேறு என்ற அடியார்க்கு நலலார் உரையினை அறிவேனேயன்றி, யாழி னும் இனிய தமிழ்மகள் களிநடம் புரியும் கற்பக நாட்டினைக் கண்டனளல்லள். அருகிலே அமையும் எழிலுடை இலங்கை நாட்டின கன்னித்தமிழ் மொழியினைக் கண்டு, ஆண்டு

பும் அருமை பெருமைகளையும் பொருந்தவுணரும் பெற்றி யினளாய் தனித்தமிழ மணம்பூண்ட என தோழியும், யானும தமிழப்பணியினுக்கு அன்னையெனும் சென்னையினின்றும வான வூர்தி இவர்ந்து, வேலையில் இலங்கை என்னும தலைநகரைப் பற்றிய உளககாட்சிகள் விரையப் பறநது சென்றேம் சிறிது போழ்தில் என் முனனுலை வானவூர்தியில வீற்றிருநத பெண் மணி யொருத்தியின் மடியில மடிநதுகிடநத—"யான் கண்ட இலங்கை" எனப பெயரிய தமிழ்நூல என இலக்கியக் கண்களை இழுத்தலும், 'நறுநதமிழ் நஙகாய்! நலகாய் அதனை' எனறலும், அவவம்மையாரின் பெருநதகைமையால சில பககஙகளை விரைவி னிற் புரட்டினேன் அதிலும் பேராசிரியா மு வரதராசனூர் வரைந்த நூல் எனில என் தமிழ் வேட்கைக்கு அளவும உண்டுகொல?

"இநத வேறுபாட்டைக் கண்ட நம்நாட்டுத் தமிழ்மக்கள் யாழ்ப்பாணத் தமிழை இலககணத்தமிழ் எனறும, தூய தமிழ் என்றும புகழத தொடங்கிவிட்டாாகள். விளஙகாத மொழியை உயர்நத மொழி எனபதும, எளிதில் விளஙகாத பேச்சை அருமையான பேசசு என்பதும, விளஙகாத உரைநடையை சிறநத தமிழ்நடை என்பதும... .. ......... ..நமககு வழக்கந் தானே!" எனும சொறறொடாகள கலலாப புல்லாககு நல்லோா சொனன பொருள எனப போகாது, இலங்கையில வழஙகும் தமிழைபபறறிய என பழைய நினைவுகளைச சிறிதளவு மாறறும் வழி கண்டேன அபபொருள எவாவாய்க கேட்பினும மெய்ப் பொருள கண்டு, கேட்டு உணரும வாய்பபினை விரைவினில நல்குவாயாக என இறைவனை வேண்டலும, அருகே அமைநத விழியாலே மொழி பேசும எழிலாள எனும என தோழி "இருநதனை காணடி, அருநதமிழ அரசி!" என வேறொனறு கூறுவாளபோல, அழைததலும 'இரதமலானை' எனற இடத்து விமானம இறங்கியது யாங்கள் இருவேமும ஆஙகிலேயரின் நாகரிகக்கடல தோய்நத கொழும்புப பட்டினததைப பலவேறு கோணங்களினின்றும சுறறிப் பாாததோம. தமிழ்நாட்டகத் திருந்து பெரும புலவர்களை வரவழைததுச சொல்வின செல்வத் தேன் அருநதும நீாமையராய, வெளளவததைச் சைவமஙகையர் கழகத்தையும, அருள வளளலின் நினைவுசசினனமெனும் விவேகானநத கழகத்தையும, தமிழவேட்கையுற்ற எஙகள் நினைவிலே குறிததுக்கொணடோம எனினும என் தோழி பெருவிருபபொடு என்னை "நறுமலர்க் கோதாய், நாம் கண்ட கனவென்ன? இங்குத தங்குதலினும, யாழினும இனியாா வாழும் பெரும் பகுதியினா எங்குளர் என அறிவோம," என வினவ,

புகைவண்டி ஏறி மறுநாட்காலை எழிலுறு யாழ்நகரை யண்மி ளேம் தென்னுட்டுத் தமிழ்த்தென்றல வந்தது காணுய்! என்ற அந்நல்லாளின் பொன்னுரை என்னைச் சிலப்பதிகார உலகி னுக்கு இழுத்தமை கண்டேன்.

காரைக்குடி, திருச்சிராப்பள்ளி போன்ற பெரும்பகுதி களும யாழ்பபாணததை ஒதத மேடு பளளமில்லாத தரை நில மாம் எனினும், பூவாரும சோலை இருமருங்கும நிலவி, குயில கள புரிநது இசைபாடும காவிரியனைய யாழ்நகரில யாண் டும யான கண்டிலேன் ஆறு இலலா ஊருக்கு அழகு பாழ் எனில், யாழ்நகர் யாற்றழகு தோயாத ஒன்றனறோ!

'கொககுவில' எனப் பெயரிய சிறறூர் யாழநகரினின்றும் நான்கு கல தொலைவிலுளளது. எஙகள இருவேழும் வரவினை எதிர்நோககியிருநத அருநததி எனும பெருநதிருவினளை, அடை தற்பொருட்டு ஊர்தி (Bus) ஏறினேம. சிறிது போழ்தினில் வணணா பணணை எனற பகுதியை அடையவே, வயதுசான்ற தமிழ அன்னை எனத்தகும ஒரு மூதாட்டியின் சின்னம் அவ வூர்தியில் ஏறுதல் கண்டேன் போதிய இடம இலாது போகவே அருகே அமாநத என தோழியை நோககி, அவவமமையார் பொறுமையற்றவராய் "அரககி இரு" எனறூா எனனலும் முலையின முறுநகை யொத்தவளாகலானும, இளமை தோயும் பொனனழகு பொலிவுற்றவள ஆகலானும, மயக்குறறவள் போல, தோழி மறுமொழி கூறலாயினள. "அம்மா!" என்னை அரக்கி எனும அளவு எனன தீயதனமையைக கணடுகொண் டனை? தமிழ தவழும் பெண்பாலாரிடையும அரககிய ருளரோ? அததன்மைககு இவவுரையன்றி மறறு எவவுரையும் சான்று பகராதே.................இவவாறு தண்ணிலவு கணட தாமரைஎன்ன உளமும உயிரும தளர்நது தோன்றினள். ஆனல, அயலே அமைந்த எனபால் புதியதோா புனமுறுவல் தோன்றியமை கணட அச சிறுமகள்—'தகைசானற தோழி! புதுமை ஏதாவும் கண்டனையோ? என வினவுழி, வாடின மலர் மறுமணம பெறறுப புதுமை உற்றவணணம், செவிசாய்க்கவே, 'நன்று என் தோழி! நறுநதமிழ நங்காய்! 'அரககி' என அப் பெருமகள் அறையினும், ஈண்டு நீ அரககியும அலலை; அஙஙனம் நினைதத நீயும தவறிலலை; அவ்வண்ணம் அறைநத அருந்தமிழ் அன்னையும தவறிலள; காலச்செல்வனே பெருநதவறுடையன்! காலம என்பது கறஙகுபோற் சுழன்று, மேலது கீழா, கீழது மேலா மாறிடும் தோற்றம் என்பது மறநதனை—'அருககு' எனும் அழகிய சொல் மருவுதலபெறறு அரககி என்ருயிற்று. அருக்கி வினையெச்சமேல் சிறிது தள்ளி இருக்க என்பதே அதன்

பொருள் என யான் சொல்லாராய்ச்சி உலகினுக்கு இழுக்துச் செல்லும் அவளகத்துப் பொருளபொதிநத புதியதோர் முறுவல பூததது. 'சொலலுலகிற் புதுமை புனைய விழைந தனையோ?' என்றாள். யான் பெருமிதம கொண்டேன.......... நநதாவிற்றேழியின் நனமனை நணணினேம். நறுநதமிழ் நலலாரைக காண்பதுவும் நன்றெனற நல்லுரை மெய்யுரை யன்றோ என்றமை என் நினைவிலே நினறது.

"அமமா வணககம்
வருக, வருக குருகிருபாநிதே
திருவடி தீணடப்பெறற இச்சிறு குடில்
...... ... ......................... ....."

எனும மனோன்மணீயச் சொற்களினும் மாண்புற வரவேற்ற அருந்ததியை என்றும மறததற்கியன்ற வொன்றன்று விருநது வநதபோது என்னுறுமோ? என்று காணுடு விடுதது 'அறமபுகா இலஙகை மாநகா' எயதிய அருநதவசசெல்வி வருந்தினளாம் அவ்விலககிய நினைவினுககு இலக்கியப பணபாயினள் அவளது தமிழ் இலககிய உலகம சூழநத அறையொனறினுள நுழைந் தோம இலககிய நூறகள பல கணடேன் தமிழ்மணம வீசியது. ஏறக்குறைய ஆறு திஙகளவரை யாழ்ப்பாணததும் அதனைச் சுற்றிய இடஙகளிலும சென்று, ஆங்கு வதியும மக்களுடன் சொல்லாடிபபழகும் வாய்பபுப பெறறமைககு அருநததி அமமை யாருக்கு எனறும பல்லாண்டு கூறும பான்மையேம அறி வொளிசான்ற அறிவுடை நங்காய! 'நநதாவில்' எனபது எவ் வளவு தூய்மையான சொல்! 'நநதா விளககே நாமிசைப்பாவாய்' என்பது இலககியமன்றோ? செவவிய கற்பின் திறனைச செப்பும் பெற்றிமேற்கொண்டு தோனறிய சொற்றொடாகளில நினபெயர் பொலிகினறமை—'வடமீன் புரையும கற்பு போன்றவற்றில் மிளிாதல் காணாய்! வளாஎழில் தோகாய்' எனனலும் அத திருமகள விடுதத இன்னுரைகள் பொன்னுரைகள எனத் ததுமபி எனபால வழிநதன.

"தஙகளது தனிததமிழபபற்றும் இலக்கியசசெறிவும் மெச்சுததறகுரியன ஆனால, இததகைய தனித்தமிழப்பறறு எங்கள நாட்டு நலலாரிடம் மிகுதியாக இனமையாலன்றோ— 'சைவசமயக்' கொளகைகளை (ஆகமங்களை) வடமொழியிலே எழுதினா. 'உபோற்காதம்' 'பிரகாசிகை' 'சூசகம்' போனறு தலைப்புக் கொடுக்கவும, 'பிரசங்கம்' 'உபநியாசம' செய்யவும 'சபாநாயகரா'க இருக்கவும் தமிழச் சான்றோாகள் தலைபபட்ட னர். 'பிரகடன பததிரம' வெளியிட்டனர்," என மறைமுகமாக

அண்மையில் வெளியான 'மறைமலையடிகள்' எனும் நூலகத்து 'புலவர் அரசு' அவர்கள் வரையவும் நேர்ந்தது எனத் தளர்ந்த குரலில் வெளிப்போந்த தொடர்களிலமைந்த 'தமிழ்ச் சான்றோர்கள் யார்? என்றறியும் விருப்பு மேற்கொண்டோளாய என் தோழி செல்வி அருகே நிலவிய நூலொன்றினை எடுத்துச் சில பக்கங்களைப் புரட்டிக்கொண்டிருந்தாள் சிறிது போழ்தில் முன்செல்வம் இல்லாதார் பெற்ற பொருள் கண்டு பேருவகை மீதூரவதுபோல மகிழ்வுடன் என்னண்டை வந்து, கையகத்து நிலவிய நூலின் சில சொற்களையும் சொற்றொடர்கள் சிலவற்றையும் காட்டினாள் 'ஆம்' அது ஆறுமுக நாவலர் பதிப்பித்த பெரிய புராணம். இலக்கணமும், இலக்கியமும் வரம்பு கண்டவர் எனச் சிலரால் புகழப்பெற்ற அப்பெரியாரிடம் தனித்தமிழ்ப் பற்று நிலவாமை எண்ணி மருண்டேன். என்னையோவெனில், மேற்கிளந்த அந்நூலில் உபோற்காதம், சூசனம்போன்ற பிற மொழிச் சொற்கள் மிளிர்ந்தமையால் எங்க தமிழ்மொழியின் விதியினை எண்ணி வருந்தினேன். நாவலர் அவர்களின் திருவிளையாடல் வசனம்.......... .ஆங்காங்கே அவர் விடுத்த வரைவுகள் எனுமவைகளைக் கண்ணுற்றேன். பரஞ்சோதியார் கூட வருந்தும் அளவு வடமொழிச் சொற்களை அள்ளி இறைத்திருக்கிறார் தமிழ்மொழியின் நாவலர் பெருமான்! கடல்கடந்த இந்நல்லவரின் உள்ளத்தத்த தூய்மை கலந்த செம்மொழிப்பற்று அரும்பாது போயது பெருங்குறையாகும் நாவலரின் தமிழ் வரைவுகளைப் புரிந்துகோடற்கு வடமொழி அறிவும் இன்றியமையாதது எனின், அன்னார் பணி தமிழ்ப்பணியன்றன்றோ?' அவரது கடிதமொன்றில்—'இலேகைகர் வேதனம்' என்ற தொடர் காணப்படுகிறது இதன் பொருளைத் தெரிந்துகொள்ள எந்தத் தமிழ் நூலும் உதவாது என்னில் அப்பெரியாரின் மொழிப்பற்று தமிழ்ப்பற்றுமன்று. கலப்பில்லாத தமிழ் மொழியைச் செவ்விய இலக்கிய இலக்கணத் துணைகொண்டு வளர்ப்பது மேன்மை என அறிஞர் கூறக்கேட்டுளேன். மணிப்பிரவாள நடை வரைந்த சிலராலன்றோ,

'அன்றியும் தமிழ்நூற் களவிலை அவற்றுள்
ஒன்றே யாயினும் தனித்தமி ழுண்டோ?
அன்றியு மைந்தெழுத் தாலொரு பாடையென்
றறையவே நாணுவர் அறிவுடை யோரே'

என இலக்கணக் கொத்தாசிரியரும், Even Tamil, however, does not show a single work or poem that is not in someway influenced by Aryan Culture என Dravidian literature வரைந்த திரு K. A நீலகண்ட சாத்திரியாரும்

தமிழ்மொழியினுக்குப் பழிமாலை சூட்ட விழையலாயினர் என்பேனுயின், இலக்கிய உலகு சிறுமியைப் பொறுத்தருளும்.

'கல்வியின் வரம்பு கண்டோன் கடவுள்மாக் கலைகள் எல்லாம் வல்லவன்' என்னில் நற்றமிழ் புனையவல்லவன என் ருருதல் இயலாத தொன்றனறோ? நாவலர் எனும் நீர்மைய ராதல் வேறு பொற்றமிழ் பொதுளிய புலமையவன் என்பது வேறு இத்தன்மையால் 'சைவம் எனும் பயிர்வளாக்கும் எழிலிபோலவான்' என்றழைத்த மகாவித்வான் மீனுட்சிசுந் தரம் பிள்ளை—'தமிழ் வளர்க்கும் எழிலி' என்று வரையாது விடுத்தமை மேற்கூறிய மொழிப்பற்றினை எண்ணியே போலும்!

வசன நடை கைவந்த வள்ளலார் பரிதிமாற் கலைஞன் என்பதினும் உரைநடை வரைந்த உயரியர் எனனல சிறப் புடைத்து. எனனையோவெனின —"ஸ்தலங்களை—ஜீர்ணேத் தாரணம் செய்தற்கும் நித்திய பூசை முதலிய இல்லாத ஸ்தலங் களிலே நித்தியபூசை நடத்துவதற்கும.......... ... ...." இவைகள் நாவலரின் கைவண்ணம்

"காரகொண்ட கரடதட கயமுகவ அஙகுசக்
கரராச திருமஙகளம
கருணேச நல்லேடங கைலாச புரிவாச
கவினேறு கணராசனே"

இது அவாவாய் வண்ணம்

விசனிக்கிறேன்—பததினி—பகிரங்கப்படுத்த—சஙகீதம்—பரஸ்திரி கூட்டம — சைவதூஷண பரிகாரம — விசேஷம்—பிரார்த்தனை—அபிஷேகம—உபதேசம் எனும் இததகை வட மொழிச் சொறகளுக்கு ஒலனுமவாயெல்லாம முயனறல செல் லும் வாயெலலாம செநதமிழச சொற்கள வழிமறிதது எதிர் கொள்ளாவோ?. ... . . ......

மறுநாள் மாலைவேளை ஈழத்துணைவு என்று பட்டினபபாலை பகருதல அறிவேமாதலின யாழ்ப்பாணத் துறைமுகமும, கடற் கரையும காண உள்ளக்கமலம விரும்பினளாதலானும, பொழுது போக்கிற்காக நடநதோம "மிசசம் தூரம உண்டு இஙகிருநது—ஆகையால் கெதியாக நடக்கவேண்டும" எனறாள அருநததி. அச் சொறகள என்செவி புகாமுன 'அன்னய் இவள் ஒருத்தி சொறறது காண்' என என் கலைததோழியை நோககினேன். மிசசம—கெதி எனும இருசொற்களும் யாழ நகரில வேறு பொருளில் வழங்குகின்றன. "மிசசில் மிசைவான் புலம்" "எச்சத்தாற் காணபபடும்" "கதி யிழக்கினும் கட்டுரை இழக்கி

லேம்" இவை இலக்கிய உலகிடை மிளிர்வன. எஞ்சியது என்ற பொருளபடும் தன்மை மாறி, சால—தவ—உறு—மிகுதி என்ற பொருள் இச்சொற்கு நிலவுவதும் வியப்பே கெதியும்—விரைத லாகுமேல் மொழியின் மாற்றந்தான் என்னே! வண்ணார்பண்ணை தாண்டிக் கடற்கரை யண்மினேம எனது இலங்கைச் செலவினல் மேன்மேலும் இலக்கிய இன்பம் பெறுகின்றேன் என்ற பெரு விருப்பு எனககின்பமளிததது. இலக்கிய உலகம் எனககறிவிக் காத சில என இளமைத்தமிழ் உள்ளத்தினை இழுத்தமை கண் டேன். 'அம்மா நீவிர் இருவீரும் வெற்றிலை பாவிக்கிறதுண்டா?' என்றாள். என் தமிழ் அறிவு ஈண்டு உதவிபுரியவில்லை. 'கான மயிலாடக்கண்டிருநத வான்கோழி தானும அதுவாகபபா வித்து'—என்ற வெண்பாவில் பாவித்தல் என்றமையின் பொருள் பயன்படுத்துதல் அன்று என்றமை உணரலாம. அருந்ததியம் மையாரின் புதுமை சான்ற சொற்கள் சில தென்னாட்டிற்கே விருநதாவன. சிறிது நடநதோம. 'பேந்து நாளைக்கும் வரலாமோ?' வழியில் அழகிய வாசிகசாலை அமைநதுளகறி வாயோ? என்றாள். பெயர்ந்து (பின்னர்) பேந்து என மருவியது போலும! தமிழ்ககருவூலமை, நூல்நிலையம் என்பன அறிநதிருந்த மையான் வாசிகசாலையின் நுண்பொருள் உணர விழைநதேன். வாசிகம—செய்தி என்றே பொருள்படும எனில் வாசிகசாலை யில் செய்தித்தாளன்றி வேறு யாதும் இலலையோ?

மறுநாள் விரும்பியாங்கு நாவலர் வீதியிலமைந்த நூல்நிலைய மொனறினை எயதினேம் அநநிலையப் பொறுப்பாளா 'குசேலர் சரிதம்' எனும் சிறிய தமிழ்நூலினை அளிக்கவும, அதனுள் நுழைந்தேம உண்டியும உறையுளும், பெருக இன்மையால், வறுமைககு இலக்கியமாய, குசேலரின மககள நிலை நவிலப்படு கிறது. "சிறுவாகளுககுச் சிதமணிப பூணே பூண்" எனற சொற்றொடரிலுளள சிதம எனற சொல்லினுக்கு, அநநூலின் இறுதியில வெண்மணி என்று பொருளா வரையபபட்டிருநதமை கண்டேன். வறுமையால வாடிய மகாா வெண்மணியை அணிந் தார் எனறலினும, வறுமை பூண்டார் எனறல் சிறபபுடைத் தாகாதோ? ஆம சிதம வறுமை என்றும் பொருளபடும........... .......என எண்ணமிட்டேன் எனினும் அறிவுடையாா ஆவதறி வாா ஆகலின் அன்னார்யார் என அறிய விழைந்தேனுயப பொறு மையுடன் நோககினேன்—எனனல் நமபமுடியவில்லை. தொல் காபபியத்தைப பதிப்பிதத கணேச ஐயர்... எனில வேறு என் சொல்வது.

மற்றுமொரு முறை நோய்வாய்ப்பட்டார் வதியும் நிலையத்தி னுக்குச் செல்லும வாய்ப்புப் பெற்றேன். ஒருத்தி மற்றவளை

நோக்கி என்ன வருத்தமோ என்றாள். வருத்தம் நோய் எனப் பொருள் பெறும் போதும்! பிணி, வருத்தம், எனும் இருசொற்களும் வெவ்வேறு பொருள் குறிக்கின்றமை தொல்காப்பிய மெய்ப்பாட்டியல் விளங்கக்கூறும். இவ்வேற்றுமை இலங்கை நாட்டினை என்னோ நிலவாது போயது அறிகிலேன்.

"மூப்பே பிணியே வருத்தம் மென்மையோடு
யாப்புற வந்த இளிவரல் நான்கே"

(தொல் மெய்ப்பாட்டியல் சு)

செந்தமிழ்ப்பற்று மேற்கொண்டு வெளிவரும் பத்திரிகைகள் சில உளவோ என வினவலுற்ற போழ்து 'ஈழகேசரி' எனும் கிழமை வெளியீட்டைக்காணும் வாய்ப்புக் கிட்டியது! 'கேசரி' எனும் சொல் தமிழோ என்ற ஐயம் எழுந்தது. அதன்கீழ் 'தாபகர்' என்ற வடமொழிச்சொல் சுடர்விட்டு இலங்கியது. 'நிறுவியவர்' என்றால வரும் இழுக்கு என்னை? சுருங்கக்கூறின் இலங்கையில் 'செந்தமிழ்ச்செல்வி' போன்ற வெளியீடுகள் ஒன்றேனும் இல்லை எனின் அறிஞர் வரதராசனார் வரைந்தமையில் மாசுளதோ? நற்றேன் ஒழுகும் நறுந்தமிழ்ப்பாடல் கேட்ட என் செவியும் வேட்ட என் மனமும் இன்புற்று எதையும் ஏற்கில வாயின தண்ணமிழ்தம் போன்ற தமிழின் சுவையறிந்த யாங்கள் இலங்கையின் பல்வேறு பகுதிகளை அண்மி இலக்கியப் புதுமையிற்றோய விழைந்தோம்.

(தொடரும்)

திரு. ரா க. சண்முகஞ் செட்டியார் பிரிவுகுறித்து இரங்கிய

## கையறுநிலைப் பா

[நாஞ்சில், திரு. கா. கணபதி]

அஞ்சாத நெஞ்சுரமும் அறிவின் கூர்வும்
அன்புநிறை தெள்ளமுத இன்ப நோக்கும்
எஞ்சாத புன்முறுவல் பொதிந்த பேச்சும்
எத்திசையும் அரசியலார் அழைப்பு வாய்ப்பும்
வஞ்சமற்ற வள்ளலவர் வாய்மை சான்ற
வாணிகத்தில் நிதிக்கணக்கில் திறமை மிக்க
செஞ்சொல்வல சண்முகனுர் மறைந்த தேயம்
செந்தமிழ்நா டெனில்என்ன செய்கு வோமால்.

# கோசர்

[திரு. புலவர், கா. கோவிந்தன் எம். ஏ.]

"தன் ஆட்சிக்குக் கீழ்ப்படியாத, தன் அரசோடு ஒத்த பெருமைவாய்ந்த பேரரசுகளாம்" என மௌரியப பேரரசன் அசோகனால் சிறப்பித்துக் கூறப்பெற்ற தென்னிந்திய அரச இனங்கள நான்கனுள் சத்யபுத்ரர் என்னும் இனமும் ஒன்று. இச் சதயபுத்ரரே கோசராவா என்று வரலாற்று நூலாசிரியர் பலரும் கருதுவர்.[1] "நாலூர்க் கோசா நன்மொழிபோல" எனவும,[2] "வாய்மொழி நிலைஇய சேண்விளங்கு நல்லிசை வளங் கெழு கோசா" எனவும்,[3] கோசர் வாய்மொழி வழுவாதவர் என்று சங்கநூல்களிலும அறிவிக்கப்பட்டுள்ளமையால்போலும் அவர்கள் சத்யபுத்ரா என அழைக்கப்படலாயினர்.

கோசர்க்குரிய நாடு துளுநாடு என்று பழந்தமிழ் இலக்கியம் பகருகிறது[4] மங்களூரை நடுவிடமாகக்கொண்ட, துளு மொழி வழங்கும் நாடே துளுநாடாம் என்றும, கேரளநாட்டிற்கும், துளுநாட்டிற்கும் எல்லையாகச் சந்திரகிரி அமைந்துளது என்றும், அந்நாடே அசோகனால் சத்யபுத்ரர் என அழைக்கப் பெற்ற கோசர் நாடாம என்றும வரலாற்று ஆசிரியர் பலரும் முடிவுசெய்வர்.[5] கோசர், 'கொங்கிளங் கோசா' (சிலம்பு : உரை பெறு கட்டுரை) என்றும் அழைக்கப்பெறுவதால், அவர்கள் ஆட்சி கொங்காநாட்டிலும் பரவியிருந்தது என்று கொள்ளலாம்; "கொங்குநாடு, மேல் கொஙகநாடும, குடகு மைசூர் பகுதிகளும அடஙகிய கங்கதேசம்" என்பா திரு. மு. ராகவையங்காரவர்கள ,[6] "கோவை, தென்சேலம் மாவட்டங்களைக் கொண்ட நாடு" என்பர் பேராசிரியர் சிமித் அவர்கள்.[7] "நான் மொழிக் கோசர் என்றும் இன்னோர் வழங்கப்பெறுவர்; நான் மொழி என்பதற்கு வேறுபொருள உரைகாரரால கூறபபடுவதாயினும், நாமக்கல் சாசனமொன்றால் (Ep. Rep. 11. 1906)

1. K. A. N Sastri, Cholas · 28, V. A. Smith, Early History · 174.
2. குறுந் : 15. 3. அகம : 205.
4. மெய்ம்மலி பெரும்பூட் செம்மற் கோசர்.... தோகைககாவின் துளுநாடு—அகம : 15.
5. K, A. N. Sastri, Cholas · 218, V. A. Smith, Early History : 396, 402.
6. சேரன செங்குட்டுவன் : 110.
7. V. A. Smith, Early History : 112.

நாமோரிநாடு எனத் திரிந்து புதியதாக நாடொன்று அறியப்படுகின்றது, அதனால், பண்டு அந்நாடு இக் கோசராட்சிக் குரியதாக யிருந்ததோ என்று கருதக்கூடியதே"[1] என்ற மு இராகவையங்கார் கூற்றும ஈண்டு நினைவுகூரற்பாலது.

இவ்வாறு, கோசர், விந்தியமலைக்குத் தெற்கே, மேற்குக் கடற்கரையை அடுத்து உள்ள துளுநாட்டினர் என்பது வரலாற்றுப் பேராசிரியர்களாலும், பழந்தமிழ இலக்கியங்களாலும் உறுதி செய்யப்பட்டிருப்பவும், "நம முன்னோர், வடநாட்டவரை வேறு வேறாகவே பிரித்து வழங்கினர்; வேங்கடத்தும்பர் மொழிபெயர் தேயம் என்பதை அவர்களேகூறி, ஆண்டு உறைந்தவரை வடுகர் என்றும், அதற்கு அப்பாற்பட்டவரை (விந்தமலைக்கு அப்பாற்பட்டவரை) வடவடுகா (அககால மகத நாட்டினா) என்றும் குறித்துள்ளனர், கோசராவாா வடவடுகர் எனப்படுவா; இவர் கிழக்கு வங்காளத்தைச் சோந்தவராக லாம் என டாகடர் கிருஷ்ணசாமி ஐயங்காரவர்கள் கருதுதல் பொருத்தமுடையதே ஆகும"[2] என்று கூறுவர், திருவாளர் மா இராசமாணிக்கம் பிள்ளையவர்கள்.

வடநாட்டவரை வேறு வேறாகவே பிரித்து வழங்கினர் நம் முன்னோர் என்ற அவர் கூற்றை ஏற்றுக்கொள்வதாயின், தங்களுக்கு மிக மிகச் சேய்மைக்கண் உள்ள மோரியரை, அவர் இனப்பெயர் அறிந்து வழங்கிய புலவர்கள், மோரியரை நோக்கத் தமக்கு அண்மையில் வாழ்ந்த கோசரையும் அவர் இனப்பெயர் கொடுத்தே அழைத்திருத்தல் வேண்டும் ஆனால், அவர்களை, அவர்கள் இனப்பெயரால் அழைக்காது, தங்களுக்கு மிக அண்மையில், வடக்கே வாழும் தெலுங்கு கன்னடியரினும் அவர்கள் சேய்மைக்கண் வாழ்வதால், வடுகர் என்றுமட்டும் அழைக்காது, வடவடுகர் என்று அழைத்தனர் என்று கொள்வது, வடநாட்டவரை வேறு வேறாகவே பிரித்து வழங்கினர் என்பதனோடு முரண்படுவதாம. விந்தமலைக்கு அப்பாற்பட்டாரை, வடவடுகர் என வழங்கினர் என்பதற்குச் சான்றாகக் காட்டும் புறநானூற்றுச் செய்யுளில்,[3] அச்சொல் மேலவரிக்கண், 'தென்பரதவர்' என வந்ததற்கு ஏற்ப, எதுகை நோக்கி 'வடவடுகர்' எனக் கூறப்பட்டுள்ளதேயன்றி, திருவாளர் பிள்ளையவர்கள் கொள்ளும் கருத்தில் கூறப்பட்டிலது. மேலும், வடக்கிற்கும் வடக்கு என்று பொருள்படுமாறு 'வடவடக்கு' என்ற தொடர் ஆளப்படுதல் வழக்காறன்று.

1. சேரன் செங்குட்டுவன். 111.
2. சோழர் வரலாறு : 33, 34.
3. தென்பரதவர் மிடல்சாய வடவடுகர் வாளோட்டிய—புறம்: 378.

கோசர் கிழக்கு வங்காளத்தைச் சேர்ந்தவர் என்று கூறுவர் திரு பிள்ளையவர்கள், இஃது உண்மையாயின், அவர்கள் தமிழ்நாட்டில நுழைய விரும்பினர் என்றால், அவர்கள் தமிழகத்தின் வடகிழகக்கு வழியாகவே நுழைந்திருத்தல வேண்டும்; ஆனல், அவாகளை தமிழகத்தின் வடமேற்குவழியாக நுழைந்தனா என்றே திரு பிள்ளையவர்கள் கூறுகின்றார்கள்[1] இம் முரண்பாட்டையும அவர் நோக்கிலர்போலும்! விந்தியமலைக்குத தெற்கே, சேரநாட்டின் வடஎல்லைக்கண் மேற்குக் கடற்கரையைச் சார்ந்த நாட்டினராக, வரலாற்று ஆசிரியாகளாலும, பழந்தமிழ்ப் புலவர்களாலும் ஏற்றுக்கொள்ளபபட்ட கோசரை, விநதியமலைககு வடக்கே துரததி, கிழக்கு வஙகாளததில் வாழச் செயதமையினாலேயே இத்தகைய முரண்பட்ட முடிவுகளை வெளியிடலாயினா திரு பிள்ளையவர்கள

மோரியர் தென்னாட்டின்மீது படையெடுத்து வந்தகாலை அவரோடு கோசர்படையும் வடுகாபடையும் இருந்தன எனவும், அபபடை மூன்றனுள கோசாபடையே தமிழ்நாட்டினுள முதற்கண் நுழைந்தது எனவும கூறுவர் திரு பிள்ளையவர்கள்[2] திருவாளர் பிளளையவர்கள கொள்கைபபடி, மோரியர் வடகோடியினர், கோசா இடைபபட்டவர் வடுகர் தெற்குத்திசைக்கண் உள்ளவர் என்பது முடிபாம், அஃதாவது, தமிழகத்தின வடஎல்லையை ஒட்டி முதறகண் வடுகரும், அவரை அடுத்து வடவடுகராகிய கோசரும, அவருக்கும் அபபால் மோரியரும வாழந்தனர் என்பதாம். இஃது உண்மையாயின், இம்மூவரும் தமிழகத்தின்மீது படையெடுக்கின்றனர் என்றால, தமிழ்நாட்டினுள் முதற்கண் படையொடு நுழைவோர், தமிழகத்திற்கு அண்மையில், தமிழக எல்லைக்கண இருக்கும் வடுகராக இருததல்வேண்டுமே ஒழிய, அவரைக கடந்து, அவர்க்கும் அபபால், அவருக்கும் வடக்கில் வாழ்வோராகிய கோசராக இருத்தல் இயலாது; அது போர்முறையும் ஆகாது; ஆனல், தமிழ்நாட்டினுள் முதற்கண் நுழைந்தபடை கோசா படையே என்று கூறுகிறார் திரு. பிளளையவர்கள். இஃது எவ்வாறு பொருந்துமோ அறியோம். மோரியர் தென்னாட்டுப் படையெடுப்பை உரைக்கும் சங்க இலக்கியஙகள், அப்படையெடுபபில தூசிப் படையாகச் சென்றது வடுகாபடையே என்று குறிப்பிடுகின்றனவேயன்றி, கோசர்படையைக் குறிப்பிடவில்லை,[3] என்பதையும் நினைவுகூர்நது நோக்குக

---

1. 2. சோழா வரலாறு: 35.
3. முரணமிகு வடுகா முன்னுற, மோரியர்
தென்திசை மாதிரம் முனனிய வரற்கு. —அகம் 281.

துளுநாட்டைத் தமக்குத் தாய்நாடாகக் கொண்டு வாழ்ந்த கோசர், காலம் செல்லச் செல்ல, தாயகத்தின் நீங்கி கிழக்கு நோக்கிச் சென்று வாழத் தொடங்கினர் என்பதற்கான சான்றுகள் சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன. ஆதனெழினி என்பானுக்குரிய செல்லூர்க்குக் கிழக்கேயுள்ள நியமம் என்ற ஊர் கோசர்க்கு உரியது என்ற செய்தி அகநானூற்றுச் செய்யுட்களால் அறியப்படுகிறது[1]

"அவர் (கோசர்) இடம் நெய்தலஞ்செறு எனச் சில அடிகள் குறிக்கின்றன" என்று கூறி, அதற்கு ஆதாரமாக, "கோசர் இளங்கள் கமழும் நெய்தலஞ் செறுவின் வளங்கெழு நன்னாடு"[2] என்ற செய்யுளைக் காட்டுவர் திரு பிள்ளையவர்கள்[3] வயல்களில் நெய்தல் மலர்ந்திருக்கும் காட்சிகள் பல சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன, "செறுவில் கள்நாறு நெய்தல்" (குறுந்: 296); "செறுவில் பூக்கும் நின்னூர் நெய்தல்" (குறுந் 309) கரந்தைக் கொடி விளைந்த வயல் "கரந்தையஞ்செறு" (அகம்: 226) என அழைக்கப்படுவதுபோல், நெய்தல் மலர்ந்த வயல் "நெய்தலஞ்செறு" என அழைக்கப்படுதல் சங்க இலக்கிய மரபு ஆதலின், கோசர் இளங்கள் கமழும் நெய்தலம் செறுவின் வளங்கெழு நன்னாடு" என்ற அப்பகுதி, "புதிய தேன் மணக்கும் நெய்தல் மலர்கள் மலர்ந்த அழகிய வயல்களையுடைய கோசர் நாடு" எனப் பொருள்படுமே ஒழிய, "நெய்தலஞ்செறு என்ற பெயரால் ஒரு இடம் உளது, அது கோசர்க்குரியது" என்று பொருள்கொள்ள இடந்தராது

"வாட்டாறு என்ற ஊரையும், செல்லூர் என்பதை ஆண்ட எழினி ஆதன் என்பவனைக் கோசர் எதிர்த்தனர், அவன், செல்லூர்க்குக் கிழக்கே கோசரோடு போரிட்டு வேல் மார்பில் தைக்கப்பெற்று இறந்தான்" என்று கூறி, அதற்கு ஆதாரமாக,

"அருந்திறற் கடவுள் செல்லூர்க் குணாஅது
பெருங்கடல் முழக்கிற்றாகி, யாணர்
இரும்பிடம் படுத்த வடுவுடை முகத்தர்
கடுங்கண் கோசர் நியமம்" —அகம்: 90.

"கடலாடு மகளிர் கொய்த ஞாழலும்
கழனி உழவர் குற்ற குவளையும்
கடிமிளைப் புறவிற் பூத்த முல்லையொடு
பல்லிளங் கோசர் கண்ணி யயரும்
மல்லல் யாணர்ச் செல்லிக் கோமான்

1. அகம்: 90, 216. 2. அகம் 113 3. சோழர் வரலாறு 34.

எறிவிடத் தலையாச் செறிபுரை வெள்வேல்
ஆதனெழினி அருநிறத் தழுத்திய
பெருங் களிற்று எவ்வம் போல." —அகம் 216.

என்ற அகநானூற்றுச் செய்யுட்களைக் காட்டுகின்றார் திரு. பிள்ளையவர்கள்[1]

கோசர் வாழும் நியமம் என்ற ஊர், செல்லூர்க்குக் கிழக்கே உள்ளது. அக் கோசர் போரில் பட்ட வீரப்புண்ணுலாய வடுநிறை முகத்தினர்; அச் செல்லூர்க்கு அருகே இளங்கோசர் பலர் ஒன்றுகூடி கடலாடு மகளிர் கொய்யத் தந்த புலிநகக் கொன்றையினையும், கழனியுழவர் பறித்துப் போட்ட குவளையினையும், காவற்காட்டில் மலர்ந்த முல்லையோடு கலந்து கட்டிய கண்ணியணிந்து விளையாடுவர்; அச் செல்லூர் ஆதனெழினி என்பானுக்கு உரியது; அவன் களிற்றின் மீதும் வேல் எறியும் வீரம் மிக்கோன்; அவன் எறிந்த வேலேற்ற களிறுகள் பெரிதும் துன்புறும் என்ற இவையே அவ்விரு செய்யுட்கள் அறிவிக்கும் செய்திகளாம்; வேண்டுமானால், கோசர் ஆதனெழினியின் செல்லூர்க்கு அண்மையில் வாழ்ந்தவர் என்றும், ஒருகால், அவர்கள் அவன் அவைக்கள வீரர்களாக இருந்திருத்தலும் கூடும் என்றும் கொள்ளலாமேயன்றி, திரு பிள்ளையவர்கள் கூறுமாறு, ஆதனெழினி கோசரோடு போரிட்டு இறந்தான் என்று கொள்வதற்குச் சிறிதும் இடமின்மையினை இப் பாக்களை ஒருமுறை உணர்ந்தாரும் உணர்வர்.

நாடோடி வாழ்க்கையைக் கைவிட்டு நிலைத்த குடியினராய் வாழத்தொடங்கிய கோசர், உழவுத் தொழிலைத் தமக்குரிய தொழிலாக மேற்கொண்டிருந்தனர்; காட்டை அழித்துப் பண்படுத்தி உழுது பயறு விளைத்திருந்தனர் கோசர். அந்நிலத்தில் அன்னிமிஞிலி என்பாளுடைய தந்தை மேய்த்துவந்த பசு புகுந்து மேய்ந்துவிட்டது; அச்சிறு குற்றத்திற்காகக் கோசர், அவள் தந்தையின் கண்களை அழித்துச் சிறுமை செய்தனர்; அவர் கொடுஞ்செயல் கண்டு சினங்கொண்ட அன்னிமிஞிலி, "தந்தையின் கண்களைப் போக்கிய கோசரை அழித்துப் பழி வாங்குவதற்கு முன், கலத்தும் உண்ணேன், தூய ஆடையும் உடேன்" என்று வஞ்சினம் கூறி, அக் கோசரை அழிக்க வல்லோன், அழுந்தூர்க்குடையோனாகிய திதியனே என்பதறிந்து, அவனிடம் தன் குறையுரைப்ப, அவனும், அவள் பொருட்டுக் கோசரை வென்று, அத் தவறுக்குக் காரணமாய்

1 சோழர் வரலாறு 35.

ரைக் கொன்றான்; அதுகண்டு அவள் அகமகிழ்ந்தாள் என்ற வரலாற்றைப் பரணர் அறிவிக்கின்றார்.[1]

கோசர் நிலத்தில் விளைந்த பயிரைப் பசு மேய்ந்த சிறு குற்றத்திற்கு அவர்கள் அளித்த தண்டனைக் கொடுமைக்குப் பழிவாங்குதற் பொருட்டே, திதியன் கோசரை அழித்தான் என்று தெளிவாகக் கூறப்பட்டிருப்பவும், "கோசர் சோழ நாட்டை அடைந்து அழுந்தூர் வேளான திதியனைத் தாக்கினர்" எனப் பிள்ளையவர்கள் கூறுவது[2] சிறிதும் பொருந்தாது.

கோசர் பெருவீரராய் விளங்கினர் என்பதை அறிவிக்கும் பழந்தமிழ்ப் பாக்களே, அவர்கள் போர்ப்பயிற்சி பெறும் முறையையும் விளக்கிக் கூறுகின்றன; இளங்கோசர் பலர் கூடிப் படைக்கலம் பயிலுங்கால், தம் பயிற்சிக்குத் துணையாக, முருக்க மரத்தான் இயன்ற இலக்கை வைத்து, அதன்மீது படைக்கலம் எறிந்து அழிக்க முயலவர் என்ற செய்தியைக் காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் என்ற புலவர் அறிவிக்கின்றார். இச் செய்தியை அறிவிக்கும் புறநானூற்றுச் செய்யுளையே ஆதாரமாகக்கொண்டு, "சேரன் தானைத்தலைவனும், முதிரமலைத் தலைவனுமான பிட்டங்கொற்றன் என்பானைக் கோசர் தாக்கினர்; போர் நடந்தது; முடிவு தெரியவில்லை"[3] என்று முடிப்பார் திரு பிள்ளையவர்கள். அப்பாட்டைப் பாடிய புலவர், அப்பாட்டுடைத் தலைவனாகிய பிட்டங்கொற்றனின் போர்ச் சிறப்பைப் பாராட்ட, "இளங்கோசர் படைக்கலம் பயிலுங்கால், பலமுறை தம் படைக்கலத்தை, முருங்கை மரத்தானியன்ற இலக்கின் மீது எறியினும், அம்மரம் அழியாது நிற்பதைப்போல, நீயும் நின்னொடு பொருவார் நின்மீது படைக்கலம் பல எறியினும் அவற்றால் தொலையாது வெற்றிபெறுகின்றனை" என்று கூறுவதல்லது, பிட்டங்கொற்றனுக்கும் கோசர்க்கும் பகை உண்டு என்பதையோ, கோசர் அவனோடு போரிட்டனர் என்ற செய்தியையோ அறிவிக்கவில்லை என்பதை அச்செய்யுளை ஒருமுறை

---

1. "பயறு ஆபுக்கென
வாய்மொழித் தந்தையைக் கண்களைந் தருளாது
ஊர்முது கோசர் நவைத்த சிறுமையிற்
கலத்தும் உண்ணாள், வாலிதும் உடாஅள்,
சினத்திற் கொண்ட படிவம் மாறாள்,
மறங்கெழு தானைக் கொற்றக் குறும்பியன்
செருவியல் நன்மான் திதியற் குரைத்தவர்
இன்னுயிர் செகுப்பக் கண்டு சினமாறிய
அன்னி மிஞிலி."
—அகம். 262.

2. சோழர் வரலாறு · 36.

3. சோழர் வரலாறு · 35.

நோக்கினாரும் உணர்வர். ஆதலின் திரு. பிள்ளையவர்கள் கூறுவது பொருந்தாமை உணர்க. இதோ அச்செய்யுள் :

"வெள்வேல்
இளம்பல் கோசர் விளங்குபடை கன்மார்,
இகலினர் எறிந்த அகலிலை முருகின்
பெருமரக் கம்பம் போலப்
பொருநர்க்கு உலையா நின்வலன் வாழியவே"[1]

கோசர், சேரர்க்குப் பகைவனும், வேளிர் பலர் பெரும் பொருள் சேர்த்துவைத்துப் பாதுகாத்துவரும் பாழிக்குரியோனு மாகிய நன்னன் என்பானுடைய மாமரத்தை வெட்டித் தம் நாட்டிற்குக் கொண்டுசென்றனர் என்பர் பரணர்[2] நன்னன், தன் தோட்டத்துப் புனல்தந்த பசுங்காய் ஒன்றைத் தின்றதன் தப்பிற்காக ஒரு பெண்ணைக் கொலைபுரிந்தான் என்ற கொடுஞ் செயலைப் பொறுதுபோலும் அப் பெண் கொலைக்குக்காரணமாய அவன் மாமரத்தை வெட்டினர் கோசர் !

நன்னனுக்குரிய பாழிப்பறந்தலையில், அவன் நண்பன் மிஞிலி என்பானோடு போரிட்டு, வெளியன் வேண்மான் ஆஅய் எயினன் என்பான் இறந்தானாக, அதுகண்டு ஆற்றாது அழுத அவன் உரிமை மகளிர் துயரைப் போக்கியோனும்,[3] தன்னைப் பாடிவரும் பாணர் முதலாயினோர்க்குப் பரிசாக யானை பல அளிக்கும் இயல்புடையோனும்,[4] மதுரை நகர்க்கண் வாழ் வோனும்,[5] ஆகிய அகுதை என்பானைக், காவல்செறிந்த இடத்தே வைத்துப் பாதுகாத்தனர் கோசர்[6] கோசர் நன்னனோடு போரிட்டு அவன் படைவலி அறிந்துள்ளனராதலின், அவனால் அழிவுறாவண்ணம் தடுக்கவே, அகுதையைத் தாம் பாதுகாத்த னர் எனக் கொள்ளுதல்கூடும். கோசர், நன்னன் மாமரத்தை வெட்டியது, தனக்கும், தன் நண்பன் மிஞிலிக்கும் பகைவனாகிய வெளியன் வேண்மான் ஆஅய் எயினனோடு நட்புப்பூண்டு, அவன் உரிமைமகளிர் துயர் போக்கியமையால், தனக்குப் பகைவ

1. புறம். 169.
2. "நன்னன்
நறுமாகொன்று நாட்டிற் போக்கிய
ஒன்று மொழிக் கோசர்" —குறுந். 73.
3. அகம் 208
4. அகம் 76, 113, புறம். 283, குறுந் : 298.
5 புறம். 347.
6. "புன்தலை மடப்பிடி அகவுநர் பெருமகன்
அமாஅய் வண்மகிழ் அஃதைப் போற்றிக்
காப்புக்கை நிறுத்த பலவேற் கோசர்" —அகம். 113.

ளுகிய அகுதை என்பானுக்கு அடைக்கலம் அளித்தமையால் நன்னன் தம்பால்கொண்ட பகை காரணமாதலும் கூடும்.

தமக்குப் பகையாவர் எனக் கருதியோரையெல்லாம் அழிப்பதையே தொழிலாகக்கொண்ட கோசர், தமக்குப் பணியாது நின்ற மோகூரைத் தாக்கினர், மோகூர் பணிந்திலது; ஆகவே கோசர்க்குத் துணையாக மோரியர் என்பார் வந்தனர்; போரின் முடிவு தெரிந்திலது.[1] இம்மோகூர் தென் ஆர்க்காட்டுக் கோட்டத்தில், ஆத்தூர் கணவாய்க்கு அண்மையில் உள்ள மோகூராக இருக்கலாம் என்று அறிஞர்கள் கருதுகின்றனர்.[2] என்று திரு பிள்ளையவர்கள் கூறுகின்றனர். கோசர்களாலும், பின்னர்ச் சேரன் செங்குட்டுவனாலும் தாக்கப்பெற்ற மோகூர் மன்னனாகிய பழையன், பாண்டியர் படைத்தலைவனாகிய பழையன் மாறனே ஆதலின், அவன் மோகூர் பாண்டி நாட்டில் யாண்டேனும் இருத்தல்வேண்டும்; ஆகவே, அம்மோகூர், மதுரைக்கு வடகிழக்கில் உள்ள திருமோகூர் என்ற ஊராக இருக்குமே யன்றிச் சோழர் ஆட்சிக்குட்பட்ட தென் ஆர்க்காடு மாவட்டத்தில் உள்ள மோகூர் அன்று கோசர் தாக்கிய மோகூரைத் தென்ஆர்க்காடு மாவட்டத்தைச் சேர்ந்த மோகூரைத் தென் ஆர்க்காடு மாவட்டத்தைச் சேர்ந்த மோகூராகக் கொள்ளலாம் என்ற அறிஞர்களோ, "மோகூர் என்ற பெயரில் பல ஊர்கள் இருப்பதால் கோசர் தாக்கிய மோகூர் எது என்பதை முடிவு செய்வதில் விழிப்பாக இருத்தல்வேண்டும்" என்று எச்சரிப்பதும் காண்க.[3]

பாண்டியன் மறவனாகிய மோகூர்ப் பழையன் என்பானைக் கோசர் தாக்கியதன் முடிவு யாது என்பது அறியப்படவில்லை எனினும், கோசர், பாண்டியமன்னன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் ஏவல்கேட்கும் வீரராய், அவன் அவைக்களத்தின்கண் விளங்கினர் என்று மதுரைக் காஞ்சி கூறுகிறது; (771-774) தன் படைத்தலைவனோடு போரிட்ட கோசர்தம் போர்வன்மையினை நேரில் கண்டறிந்த பாண்டிய மன்னன், அக் கோசர் தன் படையில் இருப்பது தனக்குப்

1. "வெல்கொடித்
துனைகாலன்ன புனைதேர்க் கோசர்
தொன்மூதாலத்து அரும்பணைப் பொதியில்
இன்னிசை முரசங் கடிப்பிகுத் திரங்கத்
தெம்முனை சிதைத்த ஞான்றை மோகூர்
பணியாமையிற் பகைதலைவந்த
மாகெழுதானை வம்ப மோரியர்" —அகம்: 251.

2. சோழர் வரலாறு: 36.

3. K A. N. Sastri Cholas 28.

பெருமையும் சிறப்பும் அளிக்கும் செயலாம் என்று க
அவ்வாறு கொண்டான் போலும் !

தமிழரசுகளை அழித்துத் தமிழகத்தில் குழப்ப நிலையைத் தோற்றுவிக்க முயன்ற, தமிழகத்திற்குப் புதியராய கோசரை வென்று, அவர் நாட்டையும் கைப்பற்ற எண்ணினான் கிள்ளி வளவன் என்ற செய்தியை நக்கீரர் அறிவிக்கின்றார்;[1] இவ்வாறு எதிர்ப்பட்டார் எவரையும் தமக்குப் பணியவைத்தன்றி மீளவதில்லை என்று வஞ்சினம் கூறித் தாக்கும் கோசரை எதிர்த்து ஓட்ட முயற்சித்தவன் கிள்ளி வளவன் ஒருவனே என்று சங்கச் செய்யுட்கள் அறிவிப்பவும், "வடவடுகரான கோசரை இளஞ்சேட் சென்னி என்னும் சோழன் எதிர்த்து வாகை புனைந்தான்; மேலும் இவன் குறைவினையை முடிப்பதற்காகப் பாழிநகர் வரை பகைவரைத் தொடர்ந்து சென்று, வடுகர் தங்கியிருந்த பாழியை எறிந்து, வம்பவடுகர் தலைகளை அறுத்து அழித்தான்"[2] என்பர் திரு. பிள்ளையவர்கள்.

அவ்விளஞ்சேட் சென்னி, வடுகரை வென்று, அவர் கைப்பற்றியிருந்த பாழியை எறிந்து சேரநாட்டில் பெரு வெற்றி பெற்றான் என்பது உண்மையே என்றாலும்,[3] அவன், கோசரையும், அவர்க்குத் தலைமைபூண்டுவந்த மோரியரையும் வென்றான் என்று கொள்வதற்குரிய சான்று ஒன்றும் கிடைக்கப்பெறவில்லை; இளஞ்சேட் சென்னி இவ்வாறு முறியடித்த படையெடுப்பு, மோரியர் படையெடுப்பாயின், புலவர்கள், அவன் மோரியரை முறியடித்ததுபற்றி ஒன்றுமே கூறாது, அம்மோரியர்க்குத் துணையாகவந்த வடுகர், கோசர் இவர்களை முறியடித்ததைமட்டும் கூறினர் எனல் பொருந்தாது. இளஞ்சேட்சென்னி மோரியரை எதிர்க்கவுமில்லை; அவர்க்குத் துணையாகவந்த கோசரை அழிக்கவுமில்லை; அவர் அவ்வாறு பொருள்கொள்வதற்குக் காரணமாகிய "வட வடுகர்" என்ற தொடர் வடக்கே வாழும் வடுகர் என்றல்லது வடுகர்க்கும் வடக்கே வாழ்வோர்

---

1. "வளங்கெழு கோசர் விளங்குபடை நூறி
நிலங்கொள வெஃகிய பொலம்பூட் கிள்ளி" —அகம் 205.

2. "சோழர் பெருமகன்
விளங்குபுகழ் நிறுத்த இளம் பெரும் சென்னி
குடிக்கடன் ஆகலின் குறைவினை முடிமார்
செம்புறழ் புரிசைப் பாழி நூறி
வம்ப வடுகர் பைந்தலை சவட்டிக்
கொன்ற யானை" —அகம் : 375.

3. "தென்பரதவர் மிடல்சாய
வட வடுகர் வாளோட்டிய" —புறம் : 378.

ராகிய கோசர் என்று பொருள் தாராது என்று முன்னரே கூறி யுள்ளேம.

வடுகரை வென்று பாழியைக் கைப்பற்றினன் இளம்பெருஞ் சென்னி என்று கூறும் அவ்வகநானூற்றுச் செய்யுளில், வரும் "குறைவினை" என்ற தொடருக்கு அரைகுறையாகப் பகை வரை முறியடிப்பது என்று பொருள் கொள்கின்றார் திரு. பிள்ளையவர்கள் "குறைவினை" என்பதைத அறிவிக்கும், அதே செய்யுள் முதற்கண் "குடிக்கடன் ஆகலின்" என்ற தொடரை யும் அறிவிக்கிறது. அத் தொடரையும் இணைத்து நோக்கிய வழிப்பெறப்படும் பொருள்: வேளிர் பெரும் பொருள் சேர்த்து வைத்த பாழியைக் கைப்பற்றுவதைச் சேரரும், வடுகரும் தம் குடிக்கடனாகக் கொண்டதைப்போன்றே, சோழரும், பல தலை முறையாகத் தம் குடிக்கடனாகக் கொண்டிருந்தனர்; இளம் பெரும் சென்னி காலமவரை, பாழி சோழரால் கைப்பற்றப் பெறவில்லை; ஆகவே, பாழியைக் கைப்பற்றுவதாகிய தம் குடிக் கடன், குறைவினையாக இருப்பதைப் போக்க, இளம் பெருஞ் சென்னி, பாழியை எறிந்தான்; அப்பொழுது அதைக் கைப் பற்றி ஆங்கிருந்த வடுகர் பைந்தலைகளைச் சவட்டினன் என்பதே.

பழந்தமிழ் இலக்கியங்களில், மோரியர் தென்னாட்டுப் படை யெடுப்பைப்பற்றிய குறிப்புகள் நான்கு இடங்களில் காணப் படுகின்றன எனினும், அவற்றால் பெறப்படும் விளக்கம்; வடுகர் முன்னுற மோரியர் தெற்கே வந்தனர், கோசர்க்கு மோகூர் பணி யாமையின் மோரியர் துணை வந்தனர் என்ற இரண்டே ஆகும். பிற நிகழ்ச்சிகள் பற்றிய குறிப்பே காணப்படவில்லை. மோரியர் செயல் எனத் திரு. பிள்ளையவர்கள் கருதும் கோசர் செயல்க ளுள்ளும், சேரநாட்டுப் பிட்டங்கொற்றனையும், செல்லூர் வாட் டாறு இவற்றிற்குரிய ஆதன் எழினியையும் வென்றனர் என் பதும், சோழன் இளஞ்சேட்சென்னியால் முறியடிக்கப்பட் டனர் என்பதும் எங்கும், எப்போதும் நிகழாத செயல்களாம் என்பது முன்னரே கூறப்பட்டுளது. இவை நீங்கிய ஏனைய கோசர் செயல் செயல்களுள்—நன்னன் நறுமாவைக் கொன் றது—அகுதையைக் காத்தது—அழுந்தூர்த் திதியனால் தண் டிக்கப்பெற்றது—மோகூரைத் தாக்கியது—ஆகிய இச் செயல் களை, இது முடிந்தபின் இது முடிந்தது என்று நிரல் படுத்துக் கூறும் சான்று ஒன்றும் கிடைக்கப்பெறவில்லை. மோரியர் தமி ழகத்திற்கு மிகச் சேய்மைக்கண் உள்ளவரே எனினும், அவர்கள் அந்நாட்டின்மீது படையெடுக்க தேர்ப்படையோடு கூடிய பெரும் படையுடன் வருகின்றனர் என்றால், போகுமிடத்தின் இயற்கை யறியாது போகார். தமமால அறிய இயலாதுபோயின், தமக்குத்

துணையாக வரும் தமிழகத்தின் அண்டை நாட்டினராகிய வடுகர் வழியாகவேனும் அறிந்தே போவர். ஆக, இவற்றையெல்லாம் நோக்காது, கோசர் செயல் எல்லாம், மோரியர் ஏவலின்படி நிகழ்ந்தன என்று கொண்டு, "மோரியர் தமிழகத்தின் படை வலிமையையும், இயற்கையமைப்பையும், பிறவற்றையும் அறியாத வடநாட்டினராதலின், மோரியர் துளுவநாட்டை முதலில் வென்று, சேரநாடு சென்று, பிறகு வாட்டாறு சென்று, பின்னர்ச் சோணாடு அடைந்து, திதியனிடம் தோல்வியுற்று, பல இடங்களில் வழி தெரியாது திரிந்து, மீண்டும் சோணாடு புக்கு முறியடிக்கப்பட்டனர்" என்று திரு பிள்ளையவர்கள் முடிவு கட்டிக் கூறுவது ஏற்கத் தக்கதன்று.

இதுகாறும் கூறியவாற்றான், அசோகனால் சத்யபுத்ரர் என அழைக்கப்பட்டவரே கோசர்; அவர் நாடு துளுநாடு; அவர்கள் தமிழகத்தில் புகுந்து, சோழநாட்டில் குடியேறி, உழுதொழில் மேற்கொண்டு வாழ்ந்தனர்; ஆதன் எழினி என்பானுக்குரிய செல்லூர்க்குக் கிழக்கே உள்ள நியமம் என்ற ஊர் அவர்க்கு உரியதாக இருந்தது; நன்னன் நறுமாவைக் கொன்று, அவன் பகைவன் அத்தை என்பானைப் பாதுகாத்தனர். தாம் விளைத்த பயிரை மேய்ந்தது பசு என்பதற்காக, அப்பசுவுக்குரியோன் கண்களைப் போக்கியதனால், அழுந்தூர்த் திதியனால் அழிக்கப் பெற்றனர்; தமக்குப் பணியாத மோகூர் மன்னனை மோரியர் துணைகொண்டு தாக்கினர்; இறுதியில் பாண்டியன் படைவீரராகத் தொழிலாற்றினர்; இவை கோசர் வரலாறும் என்பதும், அவர்கள் வாய்மை வழுவாத பெருவீரர்களாம் என்பதும் உரைக்கப்பட்டன

## ஞாயிறு

ஞாயிறென்பது பகற்பொழுதைச் செய்கின்ற சூரிய மண்டிலம். இதனை ஞாயிறென்றால் மக்கட்குத் தெரியாது. சூரியனென்றால் உணர்வர் தமிழச்சொல் செல்ல வடசொல் இங்கே ஆட்சிகொண்டது. மலையாள நாட்டினர், இன்றும் 'படிஞ ஞாயிறு' என்றே பகர்வர் நாம் இதனைக் கூறியறியோம். என்னே தமிழ் வளர்ச்சி! ஞா + இறு = ஞாயிறு. ஞா - பொருந்துதல், சார்தல், சார்ந்ததான காலத்தை, இறு, முடிப்பது செய்வது. காலத்தை வரையறுப்பது என்பது பொருளாகும். இளங்கோவடிகளும் 'பகற்செய்வான் மறைந்தனனே' என்றார் பகற்செய்வான் என்றதற்கேற்ற தூய நேரடியான சொல்லே ஞாயிறு என்ற சொல். ஞாயிறென்றசொல் கிழமைக்கு மட்டும் வழங்கப்பெறுகின்றது. இச்சொல்லே வழக்கில் சூரியனுக்கும் கொணருதல் வேண்டும்.

—செல்லூர்க்கிழார்.

# மாங்குடி மருதன் இயலோவியம்*

[புலவர், திரு பொ. வே. சோமசுந்தரனார்]

## க. காஞ்சிகொண்ட காவலன்

பாட்டும் தொகையும் கீழ்க்கணக்கும் எனச் சான்றோர் எண்ணும் வழக்கில் முன்னிற்கும் சிறப்பினையுடைய தண்டமிழ்த் தெரியல் ஒருபது பாட்டினுள், ஆறும் எண்ணு முறைக்கண் நின்ற மதுரைக் காஞ்சி என்னும் தீந்தமிழ்ச் சொல்லோவியம் மாங்குடி மருதனார் என்னும் நல்லிசைப் புலவரால் தீட்டப்பட்டது.

இவ்வோவியம் பெற்றோன், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் என்னும் பாண்டியமன்னனாவான். இவ்வேந்தன் வரலாற்றினை அறிவிக்கும் சான்றுகள் பலவுள்ளன.

நெடுஞ்செழியன் இளஞ்செழியனாக இருக்கும்பொழுதே அரசுகட்டிலும் வெற்றியும் இவனைத்தேடி எய்தின. நெடுஞ்செழியனின் தந்தை இவனைச் சான்றோர் இனத்திருந்தே வளர வேண்டும் என்று கருதி, "அறன் அறிந்து மூத்த அறிவுடையார்" குழாத்தோடு உறையும்படி செய்திருந்தான். அம் மன்னன் அவைக்களத்தே விளங்கிய சான்றோர்களில் தலைசிறந்தவர் மாங்குடி மருதனார் ஆவர். இப் பெரியாரின் கூட்டுறவு நெடுஞ்செழியனைச் செந்தமிழ் இலக்கண இலக்கியங்களை நன்கு உணர்ந்து மகிழும் புலவனாக ஆக்கியது. நெடுஞ்செழியன் செய்யுள் இயற்றவும் வல்லன் ஆயினன், திருவும், தெளிவும் ஒருவழி நிற்றல் இவ்வுலகில் அரிய நிகழ்ச்சியே அன்றோ!

இவ்வாறு புலவர் பெருமக்களோடே பயின்று, இளமையிலேயே புலமை உள்ளம் வாய்க்கப்பெற்று வளர்ந்த இம் மன்னன் தலையில், தக்கபருவம் வந்து எய்துதற்குமுன்னமே அவனது ஆகூழ் கோமுடியைச் சூட்டிவிட்டது. இந் நிகழ்ச்சிக்குக் காரணம் நெடுஞ்செழியன் தன் அன்புடைத் தந்தையை அப்பருவத்தே இழந்தமையேயாகும்.

நெடுஞ்செழியனுடைய தந்தையின் திருவடிக்கீழ் அடங்கிக் கிடந்த பகைமன்னரும், குறும்பரும், அம் மன்னன் மறைந்தவுடன் தலைதூக்கி நின்றனர். "பாண்டிய மன்னன் அரியணை

---

* இக்கட்டுரையிற் கூறப்படும் நெடுஞ்செழியன் வரலாறு புறநானூற்றினும், மதுரைக் காஞ்சியினும், நெடுநல்வாடையினும் உள்ள சான்றுகளானும் உய்த்துணர்வானும் வரையப்பட்டது.

மீது இன்று அரசன் என்னும் பெயரோடு கோமுடிகொண்டு வீற்றிருப்போன் ஆறறுப பாலகனே அல்லனோ!" என அவர் எண்ணுந்தோறும்,

"படுமணி இரட்டும பாவடிப் பணைத்தாள
நெடுநல் யானையும தேரும மாவும
படையமை மறவரும் உடையம் யாம"

எனத் தம்மையும் வியநதுகொணடனர். இவாகள் அமைச்சரும, இவர் கருத்தினைக குறிபபான அறிந்து,

"விழுமியம் பெரியம யாமே நம்மிற்
பொருநனும இளையன் கொணடியும் பெரிது"

என எடுத்தோதுவாராயினர்.

"இளைதாக முண் மரநகொல்க" என்னும் திருக்குறளையும் இவாகள நினைநதனர்போலும! முடிசூட்டுவிழா முடியுமுன்னரே இம் மன்னர்கள் ஒருங்குகூடித் தம் போர்முரசததை முழக்கத தொடங்கினா; இநநிகழ்ச்சி,

"உரை செய திகிரி தனையுருட்டி ஒருகோலோச்சி உலகாண்ட
அரைச னொதுஙகத் தலையெடுத்த குறுமபுபோன்ற தாககாமபல்"

என்னும் கம்பநாடர் கூற்றை நினைவூட்டுகின்றதன்றோ!

சோச் சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறை—சோழன், திதியன், எழினி, எருமையூரன், இருங்கோவேண்மான், பொருநன் என்னும—இரு பெருவேநதரும் ஐமபெரு வேளிருமாகிய—எழுவரும தததம படையோடு ஒன்றுகூடினா, பால்மண மாறாத திருவாயினையுடைய சிறுவன் நெடுஞ்செழியன் ஒருவன்மேல போரிடவே இவ் வெழுவரும் புறப்பட்டனர்; பேதைமை! பேதைமை!—பேராசை பேரிழவு!

"ஒலித்தககால என்னும் உவரி எலிப்பகை
நாக முயிர்ப்பக் கெடும்"

என்பது மறை. கோமுடிகொண்ட விழாநாள் இன்னும் முடிந்திலது வேநதர் பெருமான் நெடுஞ்செழியன் தன் அவைக்களததே சான்றோா வாழ்தத வீற்றிருக்கும அமயம், பகைமன்னரின் படை எழுச்சியை அறிநத ஒற்றா காற்றெனக் கடிதுறறனர். மெல்ல நெடுஞ்செழியனின் செவியருகே சென்று, தாம் கொண்டுற்ற செய்தியை மறைவாக விளம்பினர் ஒற்றாமொழி கேட்டலும், இளையநெடுஞ்செழியனின் முகததாமரை நனகுமலர்ந்து ஒளிவீசிற்று; பகைவர் பேதைமையை எண்ணினன்; அம மலர்ந்த முகத்தே ஒரு புன்முறுவல் ஒளியும் தவழ்நது திகழ்ந்

தது "வைகல் எண்டேர் செய்யும் தச்சன் திங்கள் வலித்த காலன்னோன் எனும், நாடுகெழு திருவிற் பசும்பூண் செழியன் பீடும் செம்மலும் அறியார் கூடிப்பொருதும் என்று" முரசம் முழக்கிய இரு பெருவேந்தரும், குறுநிலமன்னரும், அளியரோ! அளியர்!! ஒருபகல் வாழ்க்கைக்கு உலமருவோரே!!!

"இன்னுமை இன்பம்" எனக்கொள்ளுந் திண்மையுடையான் நெடுஞ்செழியன். முடிசூட்டு விழா இன்பம்! அதனினும் இன்பம் போர்க்களம் புகுதல்! ஆதலின், தனக்கு ஒற்றர் மறைவிற்கூறிய செய்தியை அவ்வவையினர் அறியக்கூறினன்; மேலும்,

"நகுதக் கனரே நாடுமீக் கூறுநர்
இளையன் இவனென உளையக் கூறிப்
படுமணி இரட்டும் பாவடிப் பணைத்தாள்
நெடுநல் யானையும் தேரும் மாவும்
படையமை மறவரும் உடையம் யாமென்(று)
உறுதுப்பு அஞ்சா துடல்சினஞ் செருக்கிச்
சிறுசொற் சொல்லிய சினங்கெழு வேந்தரை
அருஞ்சமஞ் சிதையத் தாக்கி முரசமொடு
ஒருங்ககப் படேஎ னாயிற் பொருந்திய
என்னிழல் வாழ்நர் சென்னிழற் காணாது
கொடியன்எம் மிறையெனக் கண்ணீர் பரப்பிக்
குடிபழி தூற்றும் கோலே னாகுக
ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் தலைவ னாக
உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பிற்
புலவர் பாடாது வரைகவென் னிலவரை
புரப்போர் புன்கண் கூர
இரப்போர்க் கீயா இன்மையான் உறவே." (புறம் எஉ.)

என்னும் வஞ்சினக் காஞ்சியை அப்புலவர் குழாத்தின்முன்னர் ஓதினன். இச் செவ்வியில், இத்தகைய செய்யுளை இயற்றும் அவன், "மெய்த்திரு வந்துற்றாலும் வெந்துயர்வந் துற்றாலும் ஒத்திருக்கும் உள்ளத்து உரவோன்" ஆதல் ஒருதலை. இத்தகைய தெளிவு மாங்குடி மருதனாரை உள்ளிட்ட நல்லிசைப் புலவரான் இம் மன்னிளங்குமரன் எய்தினன்போலும்.

இம்மன்னர் பெருந்தகை, "இடுக்கண் வந்துற்றகாலை எரிகின்ற விளக்குப்போல நடுக்கமொன்றானும் இன்றி நக்கனன் உரைத்த" இவ்வஞ்சினக் காஞ்சிப் பாட்டே மதுரைக் காஞ்சியின் தாய் என அறிதல் வேண்டும். இதன் அகட்டிலேயே நெடிய மதுரைக் காஞ்சியின் கருத் தோன்றலாயிற்று. இவ்வஞ்சினக் காஞ்சியின் அகட்டில் அமைந்த,

"ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் தலைவ னாக
உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பிற்
புலவர் பாடாது வரைக என்னிலவரை"

என்னும் அடிகளை வித்தாகக்கொண்டே "பெருகுவள மதுரைக் காஞ்சி" தோன்றலாயிற்று ஒருகால், மதுரைக் காஞ்சியின கண் முன்னிற்கும "ஓங்கு திரை" என்ற சொற்றொடர் இவ் வஞ்சினக் காஞ்சியின்கண் அமைந்த ஓங்கிய என்னும சொல் லின் எதிரொலியேயாகவும இருத்தல கூடும்.

"நானிலம் அதனின் உண்டு போர் என நவிலின் அச் சொல் தேனினும் களிபபுச் செய்யும் சிந்தைய"னாகிய அவ் விளவேந்தன அண்மையிலேயே (குழந்தைக்கிடும அணியாகிய) கிண்கிணி களையப்பெற்ற தன் இளஞ்சேவடிகளில் வீறுடைய வீரககழல்களை வீக்கினான்; அண்மையிற் குடுமி களையப பெற்ற தன்னிள நெற்றியில வேம்பின் ஒண் தளிரோடே உழிஞைப் பூங்கொடியையும் மிலைந்தான், அணிததாகக் குறுநதொடி கழிக்கபபட்ட தன் இளங்கையிற் கொடிய விற்படையைப் பற்றி னான். "இவ்விளைஞன் அண்மையிற்றானே பாலுணவொழித்து அடிசில் உண்டனன்" எனச் சான்றோர் பலரும அவன இள மைக்குப் பரிந்தனராய,

"கொற்றம் நீள்குடைக் கொடித்தேர்ச் செழிய!
நின்று நிலைஇயர் நின் நாணமீன்! நில்லாது
படாஅச செலீஇயர் நின்பகைவர் மீனே!"

எனத் தம் அன்பு கெழுமிய சொல்லால் வாழ்த்தா நிற்ப, நால் வகைத தொலபடையோடும புறப்பட்டுத தலையாலங்கானம் என்னுமிடத்தே தன் பகைவர் எழுவரையும தான் ஒருவனே ஆகி எதிர்ததான்; அவ்வழி,

"விழுசசூழிய விளங்கோடைய
கடுஞ்சினதக கமழ்கடாஅத(து)
அறுபட்ட நறுஞசென்னிய
வரைமருளும் உயர்தோன்றல
வினைநவின்ற பேரியானை
சினஞசிறந்து களனுழக்கவும்
மாவெடுத்த மலிகுரூஉத்துகள்
அகல்வானதது வெயில்கரப்பவும்
வாம்பரிய கடுந்திண்டோ
காற்றெனனக் கடிதுகொட்பவும்
வாண்மிகு மறமைந்தா
தோணமுறையான் வீறுமுற்றவும்" (மதுரைக்: ௪௩-௫௪)

போர்த்தொழில் தொடங்கிற்று. அப்போர்க்களத்தே இரு முடியுடை வேந்தரும் ஐமபெரு வேளிரும் அவர் தம் படைஞரும்

கொன்று குவிக்கப்பட்டனர். வெற்றிமடந்தை நெடுஞ்செழியன் வியன்மார்பில வாகையம பூந்தொடையல சூட்டி அவ்வீரனை மணந்தாள. இவ வெற்றியை உலகம புகழ்ந்தது, நல்லிசைப் புலவரும் அரசவாகை முதலிய துறைகளில வைததுப் புகழ்நது பாடினா மாங்குடி மருதனுர் அவவமயம் செழியனைப் புகழ்நது பாடிஞரல்லர்

நினைத்தவுடனேயே செய்யுள இயற்றும் ஆற்றல் நல்லிசைப் புலவாகட்கு உளது. இஙஙனம் பாடுதலே ஆசுபாடுதல் என்ப. ஆசுபாடும வனமையுடைய புலவரும், தம்முட் பன்முறை சிந்திததுப பாடுமபாட்டு மேலும் சொற்பொருளகளின இன்பம பொதுளிய தீஞ்சுவைப் பாடலாம் அன்றே! வைகல் எண்டோ செய்யும தசசன் திங்கள வலித்த காலன்ன திண்ணிதாம் அப்பாட்டு

தம் முன்னே கூறிய வஞ்சினத்தை முடித்து, வாகை கொண்ட நெடுஞ்செழியனின் நிலவரையை உடனே பாடுவர் மாஙகுடி மருதனா. ஆனல அதற்குரிய செவவி பெறுதல் அவாககு அரிதாயிற்று வெற்றிமடநதை, மேலும் மேலும் தலையாலங்கானததுச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழிய னைத தமிழகத்தினும், வேறு வேறு நாடுகளினும், போாக்களம் காட்டி வரவேறறாள. அவவப் போர்க்களநதோறும வாகை சூட்டி மணககவும மணநதாள். இந் நிகழ்ச்சிக்கிடையில், அவன் அமர்நது வீற்றிருக்கும் செவ்வி ஒன்றனைப பெறுதல் புலவர்கக அரிதாதல இயல்பே அன்றே தன்னிலவரையைப் புலவர் பாடுதல வேணடும் என்பதில் நெடுஞ்செழியனுக்கு எததுணை விருப்பம! செவ்வி பெறாக்குறையே குறை.

மாங்குடி மருதனுரின் பொங்கி முற்றிய வாலுணர்வினூடே மதுரைக்காஞ்சி நன்கு வளாநது அதறகுரிய அழகெலலாம் முதிாநது திகழ்வதாயிற்று மதுரையும அதனைச் சூழ்ந்த நில வரைப்பும அவா உளளத்தே உருப்பெற்று உயர்வடைநதன; இவை முதற் பொருளும கருப பொருளுமே அன்றோ! பாட்டுககு உயிராய்ச் சிறபபது திணைபபொருளேயாம. ஆதலால் நிலவரைப பைப பாடிய பாட்டிற்கு எத்திணையை உயிராக அமைத்தல் வேணடும? புறததிணைகளில் காஞ்சிததிணையே நெடுஞ்செழிய னுக்குப பொருநதுவதாம் என மருதனுர் தோநது கொண்டனர். காஞ்சி நிலேயாமை கூறுவதாயிற்றே! மன்னன் மனத்தை மகிழ் விக்க வேறு எத்தனையோ துறைகள் இருபபவும், வாழ்வின்கண் நிலைபெற்ற மன்னனுக்கு, நிலையாமை அறிவுறுப்பானேன்?

(தொடரும்)

சர். ரா. க. சண்முகம் செட்டியார் பிரிவுகுறித்துக் கூறிய

# இரங்கற்பா

[திரு புலவர் அரசு]

க. செந்தமிழ்த்தாய் மனங்களித்த திருமகனே!
கோவைநகர்ச் செல்வக கோவே!
செந்தமிழின் னிசைவாழப் பண்வாழத்
தொண்டியற்றிச சிறந்த செம்மால்!
செந்தமிழா தனித்தலைவா! சண்முகபேர்
வணிகர்குலச் சீர்தகி யாளா!
செந்தமிழின் இயறகலையாரு சிலம்பினுரை
தெளிதெழுதுஞ் செஞ்சொல் லாளா!

உ. பொருளாதா ரக்கலையில் நிகரில்லாப்
பெரும்புலமை பொருந்தி நின்றாய்!
இருளார்ந்த சட்டநெறி விளங்குறுநல்
விளககமென இலகி நின்றாய!
தெருளார்ந்த கலைஞருக்குத் திருவாகிப்
பெருநதொண்டிற் சிறந்து நின்ற
உருவாளா! நீபிரிந்தாய் என்பதையெம்
உளமிங்ஙன் ஒப்பி டாதே.

ங. ஆயிரததொண் ணூறறுதொதாண
அக்டோபாபன னேழில் தோன்றி
ஆயிரதொள் ளாயிரத்தைம் பான்மூன்றில்
... ...ில் அகன்ற
சேயவனே நிகா ஆர். கே. சண்முகனே!
நினையின்ற செநத மிழ்த்தாய்
வாயிரஙகித் துயருழக்கப் பிரிவதுதான்
வாய்மைகொலோ? வணிக ரேறே?

௪. தமிழிசைஅண் ணாமலையோ டுறவிருந்து
வளர்த்ததனைச் சாற்று வேமோ?
அமிழ்தனைய தேவாரப் பண்ணாராய்ந்
தரசிருந்த அணிசொல் வேமோ?
இமிழிசைசேர் சட்டசபை களிலினிய
பணிபுரிந்த தியம்பு வேமோ?
தமிழரசே! கொச்சியிலே திவானாகிச்
சமைத்தபணி சாற்று வேமோ?

௫. நிகரிலாப் பெருங்கோயில் தமிழிசைச்சங்

தகவுறுமக் கோயிலுறு வாழ்ச்சியிலே
களிப்புறுமுன் தளர்ந்தாய் அந்தோ!
இகலறுமண் ணாமலைப்பல் கலைக்கழகத்

தகவுபெறு பணியிழந்த தமிழ்நாடுந்
தமிழுமினிச் சார்த லெங்கே?

௬. உரிமையுற்ற இந்தியரின் பொருளமைச்சு
முதற்பெற்ற உனைப்பிரிந்து
பரிவுறுதாய் மனைமக்கள் சுற்றமநட்புப்
படுந்துன்பம் பகர்த லெங்கே?
விரிநிலவு கமழ்கொன்றை யணிசடையன்
அடிநீழல் மேவிவாழ் வாய்!
தெரிவறியேம் எம்முளத்தும் இனிதிருந்து
நன்றாக்கிச் சிறந்து வாழி!

# திருவள்ளுவர் நாள்

தெய்வப்புலமைத் திருவள்ளுவர் இறைவன் திருவடியடைந்த திருநாளே திருநாளாகக் கொண்டாடப்படுவது. இது நம் கழகச் சைவப் பஞ்சாங்கத்திலும் ஒரு முப்பது ஆண்டுகளாகக் குறிக்கப்பெற்று வருவது. எனினும் உண்மை தெரிவதில் பற்றுக்கொள்ளாதவர்கள், மாசி உத்தரத்தைத் திருநாளாகக் கொண்டாடி வரலாயினர். அரசியலார், ஆண்டில் எத்திங்களில் எந்நாளிலாயினும் கொண்டாடுதல் இன்றியமையாதது என்றுமட்டும் குறிப்பிட்டுள்ளனர். நம் செல்வியில் திரு கா. பொ. இரத்தினம் அவர்கள் வைகாசித் திங்களில் வரும் அனுட நாளே பேரறிஞர் வீடுபேறடைந்த பெருநாளென்றும் அன்றே யாவரும் ஒருமித்துக் கொண்டாடிச் சிறப்பிக்கவேண்டுமென்று கட்டுரைகளும் வரைந்துள்ளார்கள்.

யான் திரு. தருமபுர ஆதீனப் பல்கலைக் கல்லூரித் துணைத்தலைவராக வேலைபார்த்தஞான்று அவ்வாதீன நூலகத்திலுள்ள ஏடுகளை வரிசைப்படுத்தி வருங்காலத்துத் திருக்குறள் உரையேடொன்றில் அடியிற் காணப்பெறும் வெண்பா குறிக்கப்பெற்றுள்ளது. அது,

தும்பமதி உத்தரத்தில் கோள்களுயர் சீர்பெறவே
இம்பருலகு செய்துதிரு வள்ளுவனார்—செம்பவள
மேனியான் சீரடியில் மேவுதிரு நாளனுடம்
தானிடப நன்மதியே தான்.

இச்செய்யுளிற் கண்டாங்கு தெய்வப்புலவர் மாசித் திங்கள் உத்திர நன்னாளில் தோன்றினரென்பதும் வைகாசித் திங்கள் அனுட நன்னாளில் சிவப்பேறடைந்தனரென்பதும் புலனாம்.

ஆகவே வைகாசித் திங்கள் அனுட நாளே திருவள்ளுவர் திருநாளாகக் கொண்டாடத்தக்கது.

இவ்வியாண்டு 28-5-53 வியாழக்கிழமை யன்று திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகச் சார்பில் சிவஞான முனிவர் நூல் நிலையத்தில் சித்தாந்த வகுப்பு மாணவர்கள் திருவள்ளுவர் செந்தமிழ்ப் புலவர் கல்லூரி மாணவர்கள் முதலியவர்களிடையே அத்திருநாள் வழிபாட்டுடன் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. கல்லூரித் தலைவர் முதலியோர் ஏற்பாட்டை யெடுத்துரைத்து விளக்கஞ் செய்தார். இனி, ஒவ்வொரு ஆண்டிலும் வைகாசித்திங்கள் அனுட நாளையே திருவள்ளுவர் திருநாளாகத் தமிழ்நாட்டிலுள்ள சங்கங்களும் தமிழறிஞர்களும் கொண்டாடவேண்டுமென்று அன்புடன் வேண்டிக்கொள்

"புலவரகம்"
நெல்லை.
28—5—53

ப.
பெருநாவலர், பேராசிரியர் தலைவர்.

## தென்னிந்திய தமிழ்ச்சங்கம், திருநெல்வேலி
## புலவர் மாணவர் தேர்வுத் தகுதி விளக்கம்

1953 மாசித் திங்களில் நடைபெற்ற தேர்வில் வித்துவான் முதனிலை, வித்துவான் புகுமுகவகுப்பு இவற்றின் தேர்ச்சிமட்டும் அடியிற் குறிக்கப் படுகின்றன.

### வித்துவான் முதனிலை

| | பதிவெண். | பெயர். |
|---|---|---|
| (1) | 123. | நா. கிருட்டினமூர்த்தி |
| (2) | 121. | க. இளங்கோவன் |
| (3) | 109. | சு. சடையப்பன் |

| கல்லூரியின் பெயர் | பரிசு. |
|---|---|
| காசிவாசி சுவாமிநாத சுவாமிகள் செந்தமிழ்க் கல்லூரி, திருப்பனந்தாள் | முதற் பரிசு ரூபா 40. |
| ஷை | 2-ம் பரிசு ரூபா 30. |
| ஷை | 3-ம் பரிசு ரூபா 25. |

### வித்துவான் புகுமுக வகுப்பு

| | பதிவெண். | பெயர் |
|---|---|---|
| (1) | 130. | பெரு. லலிதாபாய் |
| (2) | 105. | ப. இராமசாமி |
| (3) | 107. | வே. வடுகநாதன் |

| கல்லூரியின் பெயர். | பரிசு. |
|---|---|
| திருவள்ளுவர் செந்தமிழ்ப் புலவர் கல்லூரி திருநெல்வேலி | முதற் பரிசு ரூபா 20. |
| அரசர் கல்லூரி, திருவையாறு | 2-ம் பரிசு ரூபா 15. |
| காசிவாசி சுவாமிநாத சுவாமிகள் செந்தமிழ்க் கல்லூரி, திருப்பனந்தாள் | 3-ம் பரிசு ரூபா 10. |

### தேர்ச்சியுற்றவர் பதிவெண்

#### வித்துவான் முதனிலை வகுப்பு

முதற் றகுதி:—107, 109, 111, 113, 114, 115, 116, 120, 121, 122, 123.

இரண்டாந் தகுதி:—95, 105, 108, 112, 117, 118, 119, 124, 129, 131, 132, 136, 134.

மூன்றாந் தகுதி:—93, 94, 96, 97, 102, 103, 104, 128, 130, 133.

### வித்துவான் புகுமுக வகுப்பு

முதற்றகுதி:—105, 107, 116, 125, 130, 132.

இரண்டாந் தகுதி:—106, 109, 115, 118, 119, 120, 121, 122, 128, 131, 133, 134. 135, 136, 137, 139, 140.

மூன்றாந் தகுதி —97, 98, 99, 101, 103, 104, 111, 113, 114, 126, 127, 129, 138.

### வித்துவான் இறுதிநிலை

| | |
|---|---|
| இதற்கு விண்ணப்பித்த மாணவர்கள் | 29 |
| எழுதியவர் | 27 |
| தேர்ந்தவர் | 15 |
| தேறாதவர் | 12 |

முதல் தகுதியில் தேர்ந்தவர்கள் பதிவெண் —38, 40, 49, 50, 52, 53, 54, 55, 64

இரண்டாம் தகுதியில் தேர்ந்தவர்கள் பதிவெண்:—51, 56

முதற்பரிசுக் குரியவர் தருமபுரம் கீழ்த்திசைப் பல்கலைக் கல்லூரி மாணவர் பதிவெண் 64 செ சிங்காரவேலன

இரண்டு, மூன்றும் பரிசுக்குரியார் பெயர்வகையைப் பின்னர் வெளியிடப்பெறும

திருநெல்வேலி, 2—6—53. } பு. சி. புன்னைவனநாதன், புலவர்குழுத்தலைவர், தென்னிந்திய தமிழ்ச்சங்கம்.

# செய்திகளும் குறிப்புக்களும்

திராவிடக்கழகத்தார் பிள்ளையார் உடைப்பு

நம் நாட்டில பாழ்ங்கொள்கை (நாத்திகம்) பரப்பிவருகின்ற திராவிட கழகத்தின சார்பில 27—5—53-ல பிள்ளையார் உருவம் கனிமண்ணாற்செய்து சென்னையிலும், சென்னையைச்சார்ந்த சுற்று வட்டாரங்களிலும் ஏனைய இடங்களிலும உடைக்கப்பட்டது. சமயப்பற்று மிக்க ஒரு சிலரால் பல்லிடங்களில திராவிடக்கழகத் தலைவர் ஈ. வெ. ரா. உருவத்தை மண்ணாற் செய்து உடைத்தலும, மதுரை போன்ற சில நகரங்களில் ஷேயாரின கொடும்பாவி கட்டி இழுத்து நெருப்பிட்டுக் கொளுத்தியும, இயக்கங்கள பலவிடத்தும் நிகழ்ந்தன.

**குறிப்பு:** ஒரு நாட்டில் பழக்க வழக்கங்கட்கேற்ப ஒரு சிலரால் ஒழுக்கத்தை வளர்க்கக் கதைகள், ஓவியங்கள் முதலியன அமைக்கப்பட்டன அவற்றுள் ஒன்றே பிள்ளையார் உருவம். இது, மக்கள் முதன முதல் தோன்றி விலங்குணர்வினின்று மனித உணர்வுபெற்று உயர்வு பெறுதற்கு ஆன்றோரால் வகுக்கப்பெற்ற முறைகளுள் ஒன்றாகும நாகரிகம் பெற்ற நாட்டில் இத்தகைய உருவங்களை அமைத்தது உடைப்

பது, பக்தியே குறிக்கோளாகக்கொண்ட, மக்களின் மனத்தைப் புண்படுத்துவதாகும், அஃதோடு பகுத்தறிவுக்கு ஒவ்வாத ஒன்றுமாகும். ஷை கழகத்தார் இதுபோன்ற கலகத்தை வளர்க்கும் கழகமாக இராமல் நாட்டில் உண்ண உணவின்றி உடுக்க உடையின்றி அலையும் எளியநிலை மக்கட்குப் பசிப்பிணி மாற்றி உணவும், உடையும் வழங்கும் தொண்டில் முற்படுவது நாட்டுக்கு இற்றைஞான்று வேண்டிய முதன்மைத் தொண்டாகும் திராவிடக் கழகம் அதிற் கருத்தூன்றுமா ?

## தூத்துக்குடி சைவ சித்தாந்த சபை

ஷை சபையின் 69-ஆம் ஆண்டுவிழா 23, 24—5—53-ஆம் நாட்களில் மிக்க சிறப்புடன் கொண்டாடப்பெற்றது.

23—5—53 காலையில் திருமுறை ஓதி திருவீதி உலாவந்து திருக்கோயில் திருமடம் முதலிய இறையுறையுள்களில் வழிபாடாற்றப்பெற்றது. விழாவிற்கு மதுரைத் திருஞானசம்பந்த சுவாமிகள் ஆதீனத் திருப்புறம்பயக் கட்டளை விசாரணை சிவப் பெருந்திரு. மாணிக்கவாசகத் தம்பிரான் அடிகளார் தலைமை தாங்கினார்கள் பல அறிஞர்கள் முதல் நாளும் மறுநாளும் சொற்பொழிவாற்றி அரிய சித்தாந்த நுண்கருத்துக்களை மக்கள் உணரும்வண்ணம் கூறினார்கள். மக்கள் கேட்டு இன்புற விழா இனிது முடிந்தது

## இமய உச்சியை எட்டிப்பிடித்தனர்

உலகில், மனிதரால் எட்டிப்பிடிக்க இயலாத மிக உயரமான மலை எனக் கருதப்பட்டுவந்த இமயமலையின் உச்சியாகிய எவரெஸ்ட் (Everest) டை, மே திங்கள் 29-ம் நாள் ஆங்கிலநாட்டு மலையேறும் குழுவினர் அரிதின் முயன்று எட்டிப் பிடித்துவிட்டனர். எவரெஸ்ட் உச்சியின் உயரம் 29002 அடி. இமயத்தின் உச்சியைக்காணும் முயற்சி 1852-ல் துவக்கப்பட்டதாகத் இதழ்ச் செய்திகள் கூறுகின்றன.

உண்மையை ஆராய்ந்து பார்க்குங்கால் இத்தகைய அரிய முயற்சிக்கு அடிகோலியவர் பண்டைத் தமிழ்மக்களே என்பது புலனாகும் "ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித் தாழாது உஞற்றுபவர்" எனும் பொய்யா மொழியைக் கடைப்பிடிப்போர் தமிழரே யன்றோ? சேரன் செங்குட்டுவன் கண்ணகி சிலைக்கு இமயத்தினின்று கல் கொணர்ந்த செய்தியும், மற்றைய தமிழ் மன்னர்கள் வடவரை வென்று இமயத்தில் கொடிபொறித்த செய்தியும், இமயத்தின் வரம்பைக்காண முயன்ற மன்னரும் உண்டு என்பதை உணர்த்தும் வகையில் இமயவரம்பன் என்ற தமிழ்மன்னன் பெயர் வரலாற்றிலே இடம் பெற்றிருத்தலும் ஆராயற்பாலன.

தற்போது இமய உச்சியைக்காணும் முயற்சியில் பங்குகொண்டு வெற்றி பெற்றவருள் இருவர் இந்தியர். மற்றையோர் நியூசிலாந்தைச் சேர்ந்தவர்களாவர்.

பலநாள் தொடர்ந்து முயன்று இமய உச்சியைக் கண்டுபிடித்தறிந்த இவர்களின் ஆற்றலும் ஆண்மையும் போற்றற்குரியன. இஃது வரலாற்றிலே இடம்பெறத்தக்கதோர் நற்செய்தி.

# மதிப்புரை

திருமணம்

[ஆசிரியர்: வித்துவான் பாலூர்க் கண்ணப்ப முதலியார் வெளியிட்டோர் டி. வி. செல்லப்பசாஸ்திரி அண்டு சன்ஸ 2, பிலிபஸ் தெரு; சென்னை - க. விலை ரூபா 1—14—0.]

இந்நூலாசிரியர் முத்தமிழ்த் துறையின் முறைபோகிய வித்தகர். இவர்கள் தமிழ்ப்பெருங்கடலுட் அகப்பொருட் துறையின ஆழ்ந்து ஆய்ந்தெடுத்த முத்தின் குவியல்களே திருமணமெனப் பெயரிய இந்நாடக நூல்.

இதன்கண் தலைமகன் தலைமகள் இருவரையும் கதாநாயகன் கதாநாயகியாகக்கொண்டு, அவர்களுடன் இணைந்து வாழும் பிறரையும் உறுப்பினராக அமைத்துப் புதிய முறையில் அமைத்த அரிய நூலாகும். இந்நூல் தோலை நூலின் கருத்தை அடியொற்றி எழுதிய விருந்து. இதில் தலைவன் தலைவிடா உரையாட்டும் பாங்கன் பாங்கி முதலியவர்களின் அருஞ்செயல், பேசுமுறை முதலியனவும் நேரே நிகழ்வனபோல் ஆக்கி அமைத்த ஆசிரியர் நுண்மாணுழைபுலம் போற்றற்குரியது.

இதனை நாடகமாக நடிப்பதற்கேற்றவாறு தலைப்பு விளக்கங்களும், எளிய இனிய சொல்லமைப்பும் கொடுக்கப்பெற்று ஏற்றதாகத் திகழ்கின்றது. இத்தகைய நூல் பழங்காலக் காதல் முறையும், விருந்து புறந்தந்து அருந்தவர்ப் பேணும் பெருந்தண் வாழ்க்கையாகிய இல்லற மேன்மையும் தமிழர் பண்பாடும் விளங்குதற்கேற்ற தனிப்பெரும் கருவூலமாக மிளிர்கின்றது.

இவ் அரிய நூலை ஆக்கி யுதவிய ஆசிரியரவர்களின் கைம்மாறு பேணுக்கடப்பாட்டை நம் தமிழகமாந்தர் நன்குணர்ந்து வாங்கிக் கற்று நடித்து நாட்டுக்கு நலந்தரும் பண்பை வளர்க்கவேண்டுவது இன்றியமையாக் கடமையாகும்.

தமிழ் வசனத்தை எளிதில் கற்கும் வழி

[வெளியிட்டோர் கி. பெ. சி வ பிரகாசம், நிர்வாகி, பாலகுருகுல வித்யாலயம், விருதுநகர். விலை ரூபா 1—8—0.]

இந்நூல் துவக்கப்பள்ளி மாணவர் பயிலுதற்கேற்றவாறு எழுதப்பெற்ற நூல். இதன்கண் தமிழ் நெடுங்கணக்கின் ஒலி முறைகளும், அதனைப்பலுக்கு (உச்சரித்)தலைக் காட்டும் படங்களும் அமைத்து நல்ல முறையில் வரையப்பெற்றுள்ளது. **உயிரெழுத்து, மெய்யெழுத்து, உயிர்மெய்யெழுத்து**க்களின் தன்மைகளையும் ணகர நகர னகர வேறுபாடுகளையும் விளக்கி ஆசிரியர்கள் கற்பிக்கவேண்டிய முறைகளையும் பிறவற்றையும் தெளிவுபடக் காட்டப்பெற்றுள்ளன. பொதுவாகப் பள்ளி ஆசிரியர்கட்கும் சிறப்பாக மாணவர்கட்கும் பயன் தரும் நூல். இத்தகைய நூலை வெளியிட முயன்று வெற்றிபெற்ற வித்தியாலயத்தாரின் தொண்டு பாராட்டற்குரியது, பயனுள்ளது. இக் குருகுல வித்தியாலயம் போல ஏனைய பொதுப்பணி நிலையங்களும் இப்பயன்படும் துறையில் தொண்டாற்றினால் நாடு, உயர்நிலை பெற்று எக்கழுத்தத்தோடு நிமிர்ந்து நிற்கும். இந்நூலை ஏற்றுக் கற்றுப் பயன்பெறுதல் தமிழ் கூறுநல்லுலக மாந்தர்

**உலக வரலாறு: இரண்டு பாகங்கள்**

[ஆசிரியர் யாழ்ப்பாணம், பருத்தித்துறை திரு. த. இராமநாத பிள்ளை B. A. முதற்பாகம் விலை ரூபா 5. இரண்டாம்பாகம் விலை ரூபா 3]

உலக வரலாறு என்னும் இந்நூல் அமிழ்தினுமினிய நந்தமிழ்மொழி நலனும், ஆங்கில மொழியின் பாங்குறு பயனும் கற்றுவல்ல பேராசிரியர் திரு. த. இராமநாதபிள்ளை யவர்களால் ஆக்கப்பெற்றது.

தம் கூர்த்தமதி நலமாண்புகொண்டு உலக வரலாற்றுண்மையை நெடுநுகத்துப் பகல்போல நடுநின்றாய்ந்து முடிபு கட்டியுள்ளார்கள். இந்நூல் பூமியின் தோற்றம், கற்கால மனிதர் ஏனைய நாட்டினரான எகிப்தியர், யூதர், யவனர், பாரசியர் முதலியவர்களின் வரலாறுகளும், நாகரிக முறைகளும் பிறவும் நன்கு ஆய்ந்து தெளிந்துரைத்துள்ளனர்.

நம் பண்டைக்காலத் தமிழர், அவர்தம் நாகரிகம், அந்நாகரிகத்தைத் தெளிக்கும் கண்ணாடியான தொல்காப்பியம், அதன்கட் காணப்பெறும் தமிழர் அகப்புற வாழ்வுகள், சமய ஒழுகலாறுகள், ஒழுக்கப் பண்புகள், அரசியல் முறை பிற யாவும் தமிழ்நாட்டின் சிறப்பை விளக்கப் போதிய சான்றுடன் ஆய்ந்துள்ளார்கள்.

இந்நூல் முழுதும் துருவி ஆய்ந்து கற்பின் இதன்கண் அறிவாராய்ச்சிக்கு வேறொன்றும் வேண்டுவதொன்றெனும் அளவு தம் பரந்துபட்ட நுண்ணறிவின் மதுகைபால் எடுத்துக் காட்டியுள்ளார்கள். இது தற்காலத்துக்கேற்ற முறையில் தனித்தமிழ் உரை நடையில் வரையப்பெற்றுள்ளது. இந்நூல் பல்கலைக் கழகத்தில் பி. ஏ. எம். ஏ. பட்டம் பெறப் பயிலும் மாணவர்கட்கும், வரலாற்றுண்மை காண விழையும் ஆராய்ச்சியாளர்கட்கும், பேராசிரியர்கட்கும், சமயக் கணக்கர்கட்கும், கலையியல் வேட்கையாளர்கட்கும் பயன்தரும் நூலெனப் பகரலாம்.

ஆசிரியர் இன்னும் இதுபோன்ற அரிய நூல்கள் பல ஆக்கித் தமிழ் அணங்கிற்கு அணிபல அணிந்து ஆரா அயரா ஆய்புல அறிஞராய் இலங்கி வாழ இறை அருள்வதாக.

இப்பணிபோன்ற பலபணிகள் ஆற்றத் தமிழ்நாடு இந்நூலை வாங்கிக் கற்று ஆசிரியரை இத்துறைகளில் ஊக்குமென நம்புகின்றோம். ஆசிரியர் பிறந்த யாழ்நகர் நாவலர்போன்ற மேதைகளைப் பெற்றுப் புகழ் பெற்றோங்கி மிளிர்ந்தது. இன்று அதன் பெருமைக்குக் குன்றா விளக்கமாக ஆசிரியர்போன்றோர் திகழ்கின்றனர்.

---

திருநெல்வேலித், தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்
கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.

அப்பிறப்பு இருவினைக்கீடாகப் பலவகைப்படும். அப்பிறப்பினை ஆண்டவன நலகியருளவதன்றி ஆவிகள் தாமாக எடுத்துக் கொளளா. கொளளுமேல உறுபபுக் குறைவும, உறை (வாழ் நாள)பின் குறைவும எஙஙனம பொருநதும? பிறர்க்குச செய்யும் நன்மை தீமைகளை தமக்கெனச் செய்வார எண்ணுவதே திண்ணிய அறிவாகும நனமை தீமை இரண்டினுக்கும பிறப்புணடு. பிறபபின பயன் மீட்டும பிறபபெடுபபதனறு. பிறவாமை எயதுவதே பிறபபின பயன் மயலால் முனைத்துச் செய்யும செயலால நனமை தீமைப பெயரும பிறப்பும பிறவும் எய்தும. மயலகன்று திருவருள முனைபபால உயலாம அடிமையாய் அவவருள் உளநினறு ஊக்க உஞற்றும் ஒப்பில்செயல் உயிரச செயலபோல் தோனறிடினும இறை செயலே இவ்விறை பணிககே பிறபபறும. பிறவாமை எய்தும இனபம மன்னும.

காரியப்படுத்தா

வினைககீடாப் பிறபபுற்றுழலும உயிர்கள் உடல் எய்துவதன் முனனும எய்திய பின்னும் உலகினை அமைத்திருக்க முடியாதெனபது உறுதி. வண்டி உய்க்கும பகடு அவ வண்டியினைப் பூண்பதன முனனும் பூணடபினனும ஆக்கவில்லை என்பது ஐயுறறகிடமின்றித தெளியற்பாலது ஒனறன்றே? அதுபோல உயிரகளும உலகு உடலகளை ஆக்கி இருக்கமுடியா. பூண்ட பின்னும எனபது பூணட பினபேனும் தனககுத தகுதியான ஒரு வணடியினை அப பகடு அமைதது கொளளுமா என்றால்? கொளளா எனபது தெளிவு பகடு—எருது.

ஆக்கும வினைமுதல்

உலகு உடலகளை உள்ளதாகிய காரண மாயையினின்றும் தன் திருவருள நினைபபால் படைத்தருளியவன விழுமிய முழுமுதல்வனாகிய ஆண்டவன் அவனே வினைமுதற் காரணன். அவனினின்றும வேறல்லாத் திருவருளே துணைக்காரணம். மாயை பொருள் முதறகாரணம் மேவும வினை துணை வேண்டு பொருள் காரணமான, ஞேவில செயறபாட்டிற்குண்டு.

எனவே ஆருயிர்ப்பொருட்டு அனைத்துல குடல்களை ஆண்டவனே படைததளிக்கின்றனன் அவனே காத்தருளுகின்றனன். அவனே துடைததருளுகின்றனன். இவை ஆசான் மாணவா கற்று நனமை எய்துதற்பொருட்டுக் கல்லூரி அமைதது நூலாக்கி நவல்வித்து கறறுத தேரித் தெளிந்தபின்,

மாணுக்கரை வீட்டுக்குப் போகச்செய்வதை ஒக்கும். ஐந்தொழில தலைவனாகிய ஆண்டவனே ஆக்கி அருளுகின்றனன்.

அடியின்பம்

உயிர்களை மாயாகாரிய உடலோடும் உலகோடும் பொருத்தி வாழ்வித்து நிலையா இன்பத்துறுவித்து மலமகற்றி மாணபுறுத்துவன். மாண்புயிர்களை பெருவெளியுலகிலும், திருவருள உடலிலும் திருவடி நிலை இன்பிலும் என்றும் தோய்ந்து வாழ்வுறுமாறு அருளவன். இவற்றையே மெய்கண்டான் நூலாகிய சிவஞானபோதம நூறபா கருததது மேற்கோள் ஏது எடுத்துக் காட்டுடன் விளககுகின்றது இச செமபொருள மூனறும் எக்காலததுக்கும் எந்நாட்டினுக்கும எமமொழியினுககும் எந்நெறியினாக்கும வேண்டத தக்கனவே அதனல் திருக்குறள போன்றதே மெய்கண்டான் நூலும்,

"காணப் படும்உலகம் காணுமஉயிர் காட்டும்இறை
மாணபொருள்கள மூனறும் மதி."

தலைப்பிற் காணப்படும் பாட்டின் பொருள்:

உயர்ந்த உலகமெய்ந்நெறி தொன்மையதாய், என்றும் நின்று நிலவும் நனமையதாய, தனிததியங்கும வனமையதாய், உயிர்பபுச்செட்டு உள்ளதாய், இலக்கண இலக்கியச் செழுமையதாய், எமமொழிக்கும இல்லாத செம்மைப் பொருள இலககணம் உள்ளதாய, எளிமையதாய, இனிமையதாய, விளஙகும கன்னிச் செந்தமிழின் நன்னெறியாம; அந்நெறிக்கண் உரைககப்படும் பொருள் 'வினையின் நீங்கி விளஙகிய அறிவின் முனைவ'னாகிய இறைவன ஒருவனே, அவன்தன் திருவடி இன்பினைத தெவிட்டாது நுகரும் உயிரகள அளவிறநதன; பண்பாடமைநத பயன் எய்தும பல உயிரகளையும தொன்மையும் தொடககமுமாய்ப் பற்றிப பிணிக்கும மாசு, மலம வினை மாயை எனமூனறு, இம் மலப்பிணிப்பகலப பிறப்பினை ஊட்டும திருவருளும மலபபிணிப்பகனறதும சிறப்பினைக் கூட்டும் திருவருளும் ஒனறேயாயினும் நிலை வேறுபாட்டால் இரண்டென்ப; உயிரகள் ஒன்றாய் வேறாய் உடனாய இறையடி இன்பம் துய்க்கும காலசதும் அழிவின்றி நிலைபெறும என்பதே.

# தமிழமுதம்

[தென்னாப்பிரிக்கா—டர்பன்—திரு. ச. மு. பிள்ளை அவர்கள்]

புலவர் உள்ளம் வளம்பெற்ற கருத்துக்களின் விளைநிலம். செவ்விய எண்ணங்கள் நகைமுகஞ் செய்துகொண்டே அங்கு ஊசலாடும். இயற்கைச் செல்வன் இன்ப மணம் வீசவேண்டு வதுதான் அந்த எண்ணங்களெல்லாம் பாவண்ணமாய் உருக் கொண்டு, கோல நடை நடக்கத் தொடங்கிவிடும். சிறந்த புல வர்கள் தெவிட்டாத கலையமுதத்தை விளைக்கின்ற வழியெல்லாம் இவ்வளவுதான்.

ஆனால், இவ்வாறு விளைந்த இப் பாட்டோவியங்கள் சும் மாவா இருக்கின்றன! அவை, தம் புலமைப் பொதிவால் புன் முறுவல் செய்கின்றன. அவற்றினூடு பரந்து பாயுங் கலையமு தால் வருவார் போவாரை எல்லாம் அவை தம்பால் அழைக்கின் றன. அறிவறிந்த மக்களெல்லாம் அந்த அன்பழைப்பை ஏற் றுக்கொண்டு அமுதத்தை உண்ணத் தொடங்கி விடுகிறார்கள். கரும்பு தின்ன அவர்க்கென்ன கூலியா வேண்டும்? தமிழமுதம் நம்மையுந்தான் அழைக்கிறது; வாருங்கள் சென்று செந்தமிழ்த் தீங்கனி உண்போம்.

ஏனாதி திருக்கிள்ளி என்பான் கடைச்சங்க காலத்திற் பொலிந்த தமிழ் மன்னருள் ஒருவன். வீறு ததும்பும் உள்ளம் அவனுடையது.

மாடலன் மதுரைக் குமரனார் ஒரு நல்லிசைப் புலவர். தமிழ்ச் செல்வி நடம்புரியுந் திருமன்று அவர் நெஞ்சகம்.

திருக்கிள்ளியின் பண்புநலங்கள் குமரனார் நெஞ்சம் பறித் தன. புலவர் உள்ளத்தில் அவ்வீரனின் பெருமிதம் வீறுடன் நடமாடிற்று. ஆனால், புலவர்க்கு ஓர் ஐயம். அந்த ஐயத்தை மன்னனிடமே நேரிற் கேட்டுத் தீர்த்துக்கொள்வது என்று முடி வுஞ் செய்துவிட்டார்.

"மன்னா, நீ போர்முகத்தில் முரசெழுப்பி, மாற்றார் படை விலக்கி, வெற்றி நிலைபெற்று விளங்குகின்றனை. ஆக, நின் பொன்மேனியில் பல வடுக்கள் உள்ளன. எனவே, நீ செவிக்கு மட்டுமே இனியை, காட்சிக்கு இனியை அல்லை. மற்று நின் பகைவரோ நினைக் கண்ட அளவிலே புறங்கொடுத்தலின் ஊறுபடா உடம்பினராய்க் கண்ணுக்கினியராய் உள்ளனர். ஆனால் அவர் செவிக்கினியரல்லர். ஆம்! நீயும் ஒன்றில் இனியை. அவரும் ஒன்றில் இனியர். எனினும், இவ்வுலகம் நின்னையே போற்றுமாறென்னை?"

புலவர் கொண்ட ஐயம் இது மன்னன் சொன்ன மறு மொழி என்னவாயிருக்கும? நீங்களே சொல்லுங்கள்.

செல்வச செவிலியின் தாலாட்டு, இன்னிசை செய்ய, மகிழ்ந்த நெஞ்சினராய் உலவ வேண்டும் என்ற ஆசை எல்லாருக்குந்தான் உண்டு பெரும் பொருள ஈட்டவேண்டும், ஈட்டிய பொருட்சுவையைக் கண்டு களிகூற வேண்டும என்ற வேட்கை உலவாத நெஞ்சுடையாா அரியர். ஆனல் ஈட்டிய செல்வத்தைத் துய்க்கும் வழியிலேதான் பலர்க்கும கருதது வேறுபாடு நிகழ்கிறது. செல்வத்துப் பயனே ஈதல் என்ற மொழிவழிப் புகுவோா ஒருசிலா. செல்வச் செழுமையை அறத்தாறறில செலவிடாமற போகட்டும, தாமேனும நுகரலாமன்றோ, ஆனல், தாமுந் துயத்துச் சுவைகாணுது, தக்கார்க்கொன்று ஈதலுஞ் செய்யாதாா பெற்ற செல்வம், செல்வம் அன்று அல்லவா ?

புலவா இப்படிப்பட்ட செல்வா ஒருவரைக் கண்டுவிட்டாா. வழங்கலுந் துய்த்தலுந் தேறாத முழுமக்கு முரசுடைச் செல்வா அல்லரா அவர் ! புலவாக்குக் கொஞ்சம நகைச சுவையோடு பேசவேண்டும என்று ஆவல். அருகிருந்தவர்களைப் பார்த்து மொழிந்தார்.

“அதோ போகிறாரே அவர் யார் தெரியுமா ?”

“என்ன தெரியாததுபோற் பேசுகிறீரே ! நமதூர் நாட்டாண்மைக்காரராயிற்றே அவர். பழுத்த செல்வராயிற்றே !”

“அவரா செல்வர் ! இருந்திருந்து இப்படிப்பட்ட ஏழையையா செல்வர் என்கிறீர்கள !”

“என்ன புலவரே புதுமையாகப் பேசுகிறீர். அதோ தெரிகிறது பாரும நீணட மாந்தோப்பு, அஃது அவருடையது. இப் பசிய வயல்கள், அந்தக் கமபங் கொல்லைகள், அந்தப் பக்கம் தலைதூக்கி நிற்கின்றனவே அப புளிய மரங்கள் எல்லாம் யாருடையன என்று எண்ணினீர் புலவரே !”

“ஆமாம் அவற்றையெல்லாந்தான் அவர் எனது எனது என்று எடுப்பாகச சொல்லுகிறார் அவற்றை எனது எனது என்றல்லவா நானுஞ் சொல்கிறேன் ”

“என்ன, என்ன புலவரே, விடுகதையா விடுக்கிறீர். சற்று விளங்கச் சொல்லுமே, ஒன்றுமே புரியவில்லையே எமக்கு.”

“அவை எல்லாம் அவருடையன என்கிறீர்கள். ஆனல், அவர் அவற்றைத் துய்த்தலுமில்லை. பிறர்க்கு வழங்குதலுமில்லை. எனனுலுந்தான் அவற்றைத் துய்க்கவும் இயலாது.

வழங்கவும் இயலாது. பின் ஏன் நான் அவற்றை என்னுடை யன என்று சொல்லக்கூடாது?''

புலவர் கூற்று உண்மைதானே. எங்கே எபபோது நிகழ்ந் தது இந்த உரையாடல் என்பிரகள. இதோ நாலடியார் என்ற கீழ்க்கணக்கு நூலில உளள ஒரு பாட்டு படிததுவிட்டுப் பிறகு உரையுஙகள, உங்கள் கருத்தை

என்னென தென்றிருக்கும ஏழை பொருளை
என்னென தென்றிருப்பன யானும் —தனதாயின்
தானும அதனை வழஙகான ; பயன துவ்வான ;
யானும அதனை அது.

பாடலில் ஒளிர்கின்ற நகைசசுவை எண்ணி மகிழ்தற்குரியது

தமிழ் என்று எண்ணியவுடனே என்னவோ ஒருவகையான மகிழ்சசிப பெருககம தமிழா உளளமெல்லாம பாய்கின்றது. தமிழா உள்ளம மட்டுமா? காலடுவெல், கிரிபர்சன, கிலேடடர், போப் போன்ற அறிவறிநத பிறநாட்டு மககள உளளமெல்லாம கூட மகிழச்சியால மலாகின்றது "தமிழ்தானே, அஃது இலக கண இலககிய வளஞ் செறிநதது, அழகோவியஙகள பல பொதிநதது; தனிததியஙக வல்ல உயிாபபாறறல மிக்கது; மிகத் திருநதிய வடிவுடையது; செம்மையும பண்பும் சாலச செறிந்தது,'' என்றெலலாம நடுநிலை திறமபாத பன்மொழி வல லுநாகள் அழுததநதிருத்தமாக மொழிகின்றாகள தமிழின பழமையை மொழிநூல நிலைநாட்டுகிறது நிலநூல அதற்குத் துணைபோகிறது. வரலாறும் புதைவெட்டாராய்ச்சியும இலக் கியப் பயிற்சியும் ஒனறுகூடி நநதமிழ்க கருவூலததின தகை மையை விளஙக நவில்கின்றன ஆமாம், தெனறல நலஞ்செய வதில என்ன வியபபு? கரும்பு சுவைபபதிலதான என்ன புதுமை? அகமும் புறமும கலியும் பிறவும பொன்னொளி வீசு வதில்தான் அருமை என்ன இருக்கின்றது! திருவளளுவனா கருததுக் குவிவும, தொல்காப்பியா பொருட்பொதிவும, பததுப் பாட்டின் இயல்வளமும் இனபவூற்றுகள ; தொட்டனைததூறு மணற்கேணிகள்; உண்ணத் தெவிடடாத தெள்ளமுதஙகள். சிலம்புநூற் செல்வமும, நற்றிணை நல்ல குறுநதொகை இவற் றின் அகததிணை உயாசசியும உள்ளததால உனனுமபோது ஆரா இன்பம அளிபபன. இவற்றிற்கெல்லாம இடையே "லெமூரியாவும மொகஞசதரோவும்'' ஒரு பக்கல் தமிழா தொன் மையை நினைவுறுத்திக்கொண்டே இருககின்றன.

புலவர் உள்ளத்தில் இக் கருததுக்கள் ஒவ்வொனறும ஒவ்வோரெண்ணத்தை வித்துகின்றது. பிறகென்ன, அக் கவிதை உள்ளம் புரட்சியால் பொங்குகின்றது; தமிழ் வெறி

யால் துடிக்கின்றது. எனவே, 'தமிழ்-தமிழன்-தமிழக' உணர்ச்யும் புத்துலகக் கருத்துக்களும் தமிழகத்தில் இனி என்றும் ஒளிவீசும என்று சொல்லவா வேண்டும்?

முளிதயிர பிசைந்த காந்தள் மெல்விரல்
கழுவுறு கலிங்கம கழாஅது உடீஇக
குவளை உணகண குயப்புகை கமழத்
தானதுழந்து அட்ட தீமபுளிப் பாகா
இனிதெனக கணவன உணடலின,
நுணணிதின மகிழ்ந்தனறு ஒண்ணுதல் முகனே

இப்பாடலில் தலைவன தலைவியர் தம அன்பு வாழ்க்கை எவ்வளவு நுட்பமாகப பெய்து வைக்கப்பட்டிருக்கின்றது!

தலைவி, பண்பட்ட உள்ளத் தெளிவு வாய்ந்தவள்; தலைவனும் முதிாந்த நாகரிகச செல்வி படைத்தவன். அழுத்தமான அன்புணாச்சி அவாகளிருவரையும ஒருமைப் படுத்திவிட்டது. ஆயின் அவர்கள குடும்பவாழக்கை எவ்வளவோ சிறப்பாய்த் தானே இருக்கவேண்டும்.

குடும்பம் செல்வச்செழிப்பு மிக்கதுதான். ஆனால், தலைவன் பால கொண்ட அன்பு மிகுதியால, தலைவி, தானே சமையல் செயவது வழக்கமாய் இருக்கினறது ஒருநாள தயிர்க்குழம்பு வைக்க எண்ணித தலைவி, தயிரைப பிசைகின்றாள் தயிரோ முற்றிய கட்டித தயிராய் இருக்கின்றது அதைக காநதள் மலரனன மெல்விரல்களால பிசைகின்றபோது விரல்கள் நோவததான் செயகின்றன.

அடுப்பு மூட்டி அக் குழம்பைப பாகஞ் செய்கின்றாள். நெடுக அதைத் துழவிக்கொணடே இருக்கவேணடி நேர்கின்றது. அக் குழமபைத தாளிததபோது எழுகின்ற புகை எங்கும பரவி, அவளுடைய குளிர்நத கண்களில கமழ்கிறது எபபுறம் திரும்பினாலும பாகம கெடடுவிடும என்று நினைத்துப்போனாள தலைவி, அதிலேயே கண்ணுங் கருததுமாய் இருக்கிறாள.

இவ்வண்ணந் தலைவி கருததாகச சமையல் செயயும்போது, இடையிடையே அவளுடைய ஆடையும் நெகிழ்கிறது. அது விலையுயர்ந்த ஆடையாயிருநதும, முளிதயிா பிசைநத அநத ஈரக் கையாலேயே அதை அபபடியே உடுததிக்கொள்கிறாள்.

ஒருவாறுகச் சமையலும் முடிந்துவிட்டது, தலைவனும் வந்துவிட்டான் தான எபபடியெல்லாமோ 'வருநதி'ச் சமைத்த அத்தீமபுளிப் பாகரைக் கணவன் சுவையாய் இருக்கின்றது என்று சொல்லிக்கொண்டு மலர்நத முகததுடன் உணபதுகண்டு, ...ின் உள்ளம் களிபபினால் துளும்புகின்றது. அநத

மகிழ்ச்சிப் பெருக்கம், அவள் முகத்தில் மிக நுட்பமாக அரும்பி மலர்கின்ற அருமையை, இக்குறுந்தொகைப் பாட்டும் மிக நுட்பமாகத்தான் உணர்த்துகிறது.

“கள்ளங் கபடற்ற தூய உள்ளம்” என்றவுடனே நமக்குக் குழந்தை நெஞ்சந்தான் நினைவில் வருகின்றது. அழகு பொலிந்து துளும்ப, மழலைச்சொற்கள் விழுந்து தெறிக்க, அகத்தன்பு முகத்திற் பொலியப்பொலியக் குழந்தைகள் பாய்ந்து தவழுங் காட்சியைக் காண நமக்கெல்லாம் எத்துணைக் களிப்பா யிருக்கின்றது. “கோட்டைப் பவுன் உருக்கிச் செய்த குத்து விளக்கினைப்போன்ற குழந்தைகள், ஆடநடை நடந்தே மண்ணை அள்ளுவர், வீழுவர், அம்புலி வேண்டுவர்,” என்று புலவர்கள் பொன்மொழி புகலும்போது, நம் உள்ளம் உடன் ஆடி மகிழ்ச்சி எய்துகிறது.

பாண்டியன் அறிவுடை நம்பி, குழந்தைகளின் களியாட்டுக்களை—அவை குதித்து மகிழ்ந்து எழுப்பும் இன்னொலிகளை—அதிர்ந்திடும் இளமைப் பொழுதின் அழகு நலத்தை எண்ணி எண்ணி நெஞ்சந் தழைத்தவன். அவன் நெஞ்சத்தில் அந்த ஆட்டமும் பாட்டமுமே என்றென்றும் ஆடும்; பாடும். நெய் யுடை அடிசிலை மெய்ப்பட விதிர்த்தும், இட்டுந் தொட்டும், அள்ளியுந் துழவியும் ஓவியக் குழந்தைகள் செய்யுங் கோலத் தைக் காண்பதிலே அவனுக்கு ஒரு தனி ஆசை

வாழ்கிறோம் வாழ்கிறோம் என்று எல்லாருந்தான் சொல்லு கின்றார்கள். ஆனால், இப்படிப்பட்ட வரையா ஓவியங்களைப் பெறாதவர்கள் எப்படித்தான் வாழ்கிறார்கள் என்று கேட்கிறான் பாண்டியன். அத்தகையாரின் உள்ளமெல்லாம் மகிழ்ச்சி மலராக இருந்துகொண்டு இன்பவாடை வீசுதலுங் கூடுமா? என்பது அவனுக்குத் தீராத ஐயப்பாடாக இருக்கின்றது.

குழந்தையின் குறுவிளையாட்டு உங்கள் நெஞ்சத்தில் ஒளிப்பதிவு ஆகின்ற அருமையை எண்ணுங்கள். பாண்டியன் அறிவுடை நம்பியின் மன வளத்தை நினைவில் இருத்துங்கள் :—

படைப்புப் பல படைத்துப் பலரோ டுண்ணும்
உடைப்பெருஞ் செல்வ ராயினும் இடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்தும்
நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும்
மயக்குறு மக்களை இல்லோர்க்குப்
பயக்குறை யில்லைத் தாம் வாழு நாளே. —புறம். ௧௮௮.

# மாங்குடி மருதன் இயலோவியம்

[புலவர் பொ வே. சோமசுந்தரனார்]

(சிலம்பு ௨௭, பரல் ௧0, பக்கம் ௬௭௨-ன் தொடர்ச்சி)

## ௨. காஞ்சித்திணையின் சிறப்பியல்பு

திரைப் பெருங்கடலில் மிதக்கும் சிறிய கட்டைகள், அத்திரை உந்திய வழியெல்லாம இயஙகுதல போன்று, அஃறிணையுயிர்கள் இயற்கை தூண்டியவழி இயஙகுவனவாதலன்றித், தம் வாழ்க்கைக்கு யாதும குறிக்கோள உடையனவல்ல. இயற்கை அவற்றின் உடலிற பசியுணர்ச்சியைத் தூண்டியவழி, இரைதேடி நுகாநதும், இணைவிழைச்சினைத தூண்டிய வழித் துணைதேடிப் புணர்ந்தும், எஞ்சியபொழுதெலலாம உறங்கியும அவ்விலங்கினங்கள் வாழ்கின்றன மக்கள வாழ்க்கை அச்சிறிய கட்டைகள் போலாது, தான் குறிப்பிட்ட துறைமுகப் பட்டினததிற்குக் குறிபபிட்ட நேரத்தே நெறிகண்டு சென்றெய்தும பொறிச் சிறபபமைநத மரக்கலவியக்கம போன்றது எனலாம்.

மக்கள் வாழ்க்கையே சிறநத பொறியமைப்புடைய மரக்கலம; அம்மரககலததைை நெறியறிநது செலுத்தும் மீகாமன், அவ்வியாக்கை பெற்ற நல்லுயிராகிய மனிதன் அவன் கடத்தற்குரிய கடல் பிறவிப் பெருங்கடல்; அவன் அக்கடலிற் செலுத்தற்குரிய நன்னெறி, அறம பொருள இன்பமென்னும உறுதிப் பொருள்களாம்; அவன குறிக் கொண்டு எய்தற்குரிய பட்டினமே வீடுபேறும எனக.

குறிக்கோள் உடைய வாழ்க்கை யுடைமையாற்றான், மக்கள் உயர்திணை எனச் சான்றோரான் உயாத்தோதப் பட்டனர். அக்குறிககோளை, எய்தற்குச் சிறந்த கருவியாகத திகழ்தல் பற்றியே மானிடயாக்கை, பெறற்கருமபேறெனக் கருதப் படுகின்றது படைப்புப பல படைத்துப பலரோடுண்ணும் உடைப் பெருஞ் செல்வராகிய அரசராயினும், யாரேயாயினும், குறிக்கோளிலாத வாழ்வுடையராயின், அவர் வாழ்க்கை எதும் பயனில்லாத வாழக்கையே ஆகும்.

வீடுபேறென்னும் இக்குறிககோளை எய்துதற் பொருட்டே ஏனை உயிர்க்கில்லாத கல்வி என்னும் இக்கடவுட் செல்வத்தை மக்கட்கு மட்டும் இறைவன் வழங்கியுள்ளான்.
கல்விக்குப் பயன் கூறவந்த நம் பெரியோர்,

"எழுத்தறியத் தீரும் இழிதகைமை தீர்ந்தான்
மொழித்திறத்தின் முட்டறுப்பான் ஆகும்—மொழித்திறத்தின்
முட்டறுத்த மேலோன் முதனூற் பொருள்உணர்ந்து
கட்டறுத்து வீடு பெறும்"

என நுண்ணிதின் ஓதுவாராயினர்.

நூல்கள் சுட்டறிவிற்பட்ட உலகியற் பொருளையே கூறு வல்லன. மக்கட்குக் குறிக்கோளாக அமைந்த வீடோ சுட்டறி விறந்த தொன்றும் சிந்தையும் மொழியும் செல்லா நிலைமைத் தாகிய அவ்வீட்டினை நூல்கள் இலக்கணவகையாற் சொல்லிச் காட்டும் ஆற்றலுடையன அல்ல; ஆகலின், அவ்வீட்டினைக் காரணவகையாலே மட்டும் அவைகள் கூறலாயின. வீட்டினைக் காரணவகையாற் கூறும் பகுதியே காஞ்சித்திணை எனப்படும்.

"ஞானகா ரத்தி னொடு ஞேயமற்ற
ஞாதுருவு நழுவாமல் நழுவி நிற்கும்
ஆனாலும் இதனபெருமை எவர்காகா சொல்வார்
அதுவானல் அதுவாவர் அதுவே சொல்லும்"

எனத் தாயுமான அடிகளார் வியந்தபடி, சொன்னலங் கடந்து நின்ற இன்பவீட்டைச் சொல்லாமற் சொல்லுமொரு நெறியையே காஞ்சித்திணை எனத் தமிழ்ச் சான்றோர் கூறுவாராயினர்.

இனி யாம் அங்கு எடுத்துக் காட்டிய வெண்பாவில் "முத னூல் பொருள்" எனச் சிறப்பித்துக் கூறப்பட்ட பொருளும், இக்காஞ்சித்திணைப் பொருளேயாம். காஞ்சித்திணைப் பொருள் ஏனைத் திணைப் பொருள் போன்று எளிதின் உணரற்பாலதொன் றன்று. காஞ்சித்திணைப் பொருள் பொங்கி முற்றிய உணர்வி னோர்க்கே புலப்படுவதொன்றும். அறம் பொருள் இன்பம் என்னும் மூன்றும் இறுதியில் வீடொன்றற்கே ஏதுவானாற் போன்று, தமிழ்நூல்களாற் கூறப்படும் அகம் புறமாகிய இரு கூற்றுப் பதினன்கு திணைப் பொருளும் அவற்றுள் ஒன்றாகிய இக்காஞ்சியுணர்ச்சியைத் தோற்றுவிக்கும் ஏதுக்களாக, இது மட்டுமே நூற்பயனைச் சிறந்ததாகும். இக்கருத்தானே, ஆசிரி யர் தொல்காப்பியனாரும் இக்காஞ்சித்திணைக்கு,

"பாங்கருஞ் சிறப்பிற் பல்லாற் றானும்
நில்லா வுலகம் புல்லிய நெறித்தே"

என அதன் சிறப்பியல்பு தோன்ற இலக்கணம் வகுப்பாராயினர்.

வீடுபேறு நிமித்தமாகப் பல்வேறு நிலையாமையைச் சான் றோர் சாற்றும் குறிப்பினது காஞ்சி என்பது, இந்நூற்பாவின் கருத்தாகும். அறம் பொருள் இன்பம் வீடு என ஓரினப் படுத்து எண்ணினும், வீடொன்றே உறுபயனாக, ஏனைய மூன்

றும் அதற்கு ஏதுவாமுகத்தான் உறுதிப் பொருள் எனப்படுத லால் வீட்டினை ஒப்பற்ற சிறப்புடையது என்பார் பாங்கரும் சிறப்பு என்றூர். எனவே அவ்வீடுபேற்றிறகு நேரே நிமித்த மாதல பற்றி, நாற்பொருள் பதினன்கனுள இக்காஞ்சி ஒன்றே யாஙகருஞ சிறபபிற்றெனபதும தொலகாபபியர் கருத் தாதற் கிழுக்கில்லை மெயநூல்கள அறங்காட்டலும், பொருள காட் டலும, இன்பங்காட்டலும, எல்லாம் இறுதியின அவைவிற்றின் நிலையாமை காட்டி, வீட்டினைக் குறிப்பாற காட்டுதற் பொருட்டே ஆதலின், பலவாற்ருனும் என்ருர். எனவே நிலை யாமையுடைய பொருள்களும், அறம் பொருள இன்பம், யாக்கை இளமை செல்வம் முதலியனவே ஆதல காண்க.

இனி, நூல்கள் ஓதுவதனுல உறுபயன் இக்காஞ்சி உணாசசி எயதுதலே என்னும கருததுடைமையானன்றே ஆசிரியா இளஙகோவடிகளாரும, தமது ஒப்பற்ற பெருங்காப் பியத்திறுதியில் தம காபபியஙகேட்ட நல்லோரை விளிதது,

> "இளமையும் செலவமும யாக்கையும நிலையா
> உளநாள வரையாது ஒலலுவ தொழியாது
> செலலுந் தேஎ ததகு உறுதுணை தேடுமின்
> மல்லனமா ஞாலத்து வாழவீா!"

எனக் காஞ்சிப பொருளையே இனிதில் உலகிற்குச் செவியறிவுறுப் பாராயினா.

பாடல் சான்ற புலனெறி வழக்கில் "காஞ்சி" என்னுஞ் சொல் "நிலையாமை" என்னும் பொருட்டாம இஃதுணாநத வழி யல்லது பொருளகளிற் பறறுவிடாமையின் இதுவே வீடு பேற்றிற்குச் சிறநத நிமித்தமாயிற்று பொய்யில் புலவராகிய திருவளளுவனாரும், தமது தமிழ்மறைககண் இக்காஞ்சிப பொருள ஒன்றனையே "நிலையாமை, துறவு, மெயயுணாதல், அவா வறுத்தல்" என நான்குவகைபபடுதது ஓதுவாராயினர். எனவே, திருககுறளில் கூறபபடும இந்நான்கு அதிகாரங்களும் காஞ்சித் திணை என்று அறிதல வேண்டும.

இனிக் காஞ்சி நிலையாமை கூறுவது என்பதும், காஞ்சி எப்பொருள் எததன்மைத தாயினும் அப்பொருள் மெய்ப் பொருளை உணர்ததுவது என்பதும், ஒரு பொருளுடையனவே யாம். ஆகவே, காஞ்சியுணர்த்துதல் என்பதறகு மெய்ப் பொருள் உணாத்துதல் என்பதும் பொருளாதல் அறிக.

அந்தணராக, அரசராக, வணிகராக, வேளாளராக எவ் வகுப்பினராயினும், இக்காஞ்சியுணர்ச்சி மருவப் பெற்ருரே

இன்ப துன்பங்களின் இடையேயும், செல்வ வறுமைகளின் ஊடேயும, வாழ்க்கை இனிதெனக் களிப்புடையராகாமலும், இன்னாதென முனிவுடையராகாமலும் சமனிலைநின்று அமைதி தரும் இன்பத்தே இனிதுற வாழவல்லுநர் ஆவர். இவ்வாறு இவ்வுணர்ச்சி மருவாப் பேதை வாழ்க்கையர் அரசவாழ்வினூடேயும அளவிறந்த இன்னல் எய்திக் கிடத்தல் ஒருதலை எனக.

சிறந்த பெருங்காப்பியஞ்செய்த திருத்தக்க மாமுனிவரும் தன் காப்பியத்தே பேரரசனாய்த் திகழ்ந்த சச்சந்தன் இக்காஞ்சி யுணர்ந்த மேலோன ஆதலை, அம்மன்னன் பேதையாகிய கட்டியங்காரன் முற்றுகைக்குட்பட்ட பொழுதும் கலக்கம ஒன்றும் இன்றி விசயையைத் தேற்றுவானாய் விளம்பிய,

> "சாதலும் பிறத்தலும் தானும தம்வினைப் பயத்தினாகும்
> ஆதலும அழிவுமெல்லா மவை பொருட் கியல்பு கண்டாய்
> நோதலும பரிவுமெல்லாம் நுண்ணுணா வின்மையன்றே
> பேதைநீ பெரிதும் பொல்லாய !"

என்னும் செய்யுட்கண் காட்டிப் போதலும், நல்லிசைப் புலவராகிய கம்பநாடரும, தம காப்பியத் தலைவனாகிய இராமன இக் காஞ்சியுணர்ந்த மேலோன எனபதை, "மெய்த்திருப் பதம் மேவென்ற போதினும இத்திருத் துறந்தேகென்ற போதினும சித்திரத்தின் அலர்ந்த செந்தாமரை ஒத்திருந்த முகத்தின" னாய்த் திகழ்ந்தான் என ஓதுமாற்றாற் காட்டிப் போதலும, இக் காஞ்சித்திணையின் சிறப்பினை நன்கு புலப்படுத்துவனவாம.

இனிப் பிற்றைநாள மெய்கண்ட மரபினரும், இக்காஞ்சி உணர்ச்சி கைவரப் பெறுதலையே சாக்கிரத்தே அதீதத்தைப் புரிதல் எனக்கூறி, இத்தகையோர "ஆக்கும முடிகவி ... சாண்டு அறிவையரோடு இன்பம அநுபவித்து அங்கு ஞம அகப்பற்றற்றிருப்பர," என்றும், "ஏடுதரும் மலர்க் குழலார் முலைத்தலைக்கே இடைக்கே, எறிவிழியின் படைக்கடைக்கே கிடந்தும் இறைஞானம் கூடுபவர் கூடரிய வீடுங்கூடிக் குஞ்சித்த சேவடியும் கும்பிட்டே இருப்பர்," என்றும், போற்றிப் புகழ்வாராயினர.

இதுகாறும் கூறியவாற்றால், காஞ்சித்திணையின் சிறப்பியல் பினை ஒருவாறு காட்டினும். இனி இக்காஞ்சியை உணரும தகுதியுடையார்க்கே சான்றோர் உணர்த்த முற்படுவர் அன்றித் தகுதியிலார்க்குக் கூறமாட்டார். மாங்குடி மருதனார் நெடுஞ்செழியனுடன் அவன் இளமபருவந் தொடங்கி உடனுறைந்தவராவார்; மேலும் அம்மன்னன் நல்லிசைப்புலவனுமாய்ச் சிறந்தான்; எனவே, அவன் தகுதிக்கு இக்காஞ்சியே உணர்த்தத் தகுந்த

பொருள் எனக் கண்டே இதனை உணர்ததப புகுந்தனர் என உணர்க.

## ௩. உலகத் தோற்றமோ! செய்யுட் தோற்றமோ!

மாங்குடி மருதனர் தம இனிய செய்யுளை உலகத் தோற்றத் தோடு உடன் தோற்றுவிக்கின்ருர். முதலில செய்யுளோடு உலகமும் தோன்றுகினறது.

> "ஓங்குதிரை வியன்பரப்பின்
> ஒலிமுந்நீா வரமபாகத்
> தேனறுஙகும உயாசிமைய
> மலேநாறிய வியனஞாலதது"

என்னும இவ்வடிகள் மதுரைக் காஞ்சியின் தொடக்கமாக அமைநதுளளன. இவை நான்சடிகளாயினும, வஞ்சித்தூககாதலான் எண்சீாகளே கொண்டுளளன இவ்வெட்டே சீரினுள் அவர் தீட்டிய ஓவியம் கடலும் மலேயும் காடும உயிரும செறிநத ஒரு புதிய உலக ஓவியமாகும்.

இனி, இப்பேருலகிற்குத தோற்றங்கூறுவோர் பல்வேறு விதமாகக் கூறுவர். இவ்வுலகம் அணுககளினின்றும் தோன்றிற றென்பா பண்டைககாலத்து ஆருகத சமயததினர். இவ்வுலகததிற்கு அணுககளே முதறபொருளாம எனறே இற்றைநாள மேலேநாட்டுப பூதநூலோரும் புகல்வதறிக. அணுககள் தமமுட் சோதல் எனனும உறுப்புடைமையால, உறுப்புடைப் பொருள காரியப் பொருளே ஆதல் வேண்டும, அவ்வணுக் களுக்கும் முதலாய் இவ்வுலகந தோன்றுதற்குப் பரம முதற் பொருளாகறபாலது, உறுபபறற ஆறறல வெள்ள மாததிரையேயாய் அமைந்த மாயையே கண்டீா! என்பார், அளவை நூல் வல்ல மறறெருரு சாரார்

இனி, பாடல்சான்ற புலனெறி வழக்கில் நல்லிசைப் புலவரால் இவவுலகத தோற்றம் வேறுவகையாகவும் கூறப்படுதலுண்டு ாண்டு மருதனர் அளவை நூலோா வழிநில்லாது புலவர் வழியே நின்று தமது உலகத்தைப் படைக்கின்ருா.

மிகமிகமிகப் பழைய காலததே இப்பேருலகம் வெறும் நீர்ப் பிழம்பு மாததிரையாகவே ஊழிபல நின்றது அப்பொழுது அதன்கண் நிலமாதல், மலேயாதல, யாதொன்றுமில்லே. பின்னர் அநநீருழி உலகினின்றும மெல்ல மலேகள் தோன்றலாயின. பின்னரும் ஊழிபல சென்று, நிலப்பரப்புக்கள் மேலெழுந்தன. அதன் பின்னா காடுகள்; பின்னர் இயங்குதிணையுயிர்களா; அவ் ிர்களுள் மக்கள் தோன்றினர். இங்ஙனம் உலகத் தோ

கூறுதல் புலவராறு. ஆதலான் மருதனார் இந்நான்கடிகளுள் முதற் கண்ணின்ற மூச்சீருள் முந்நீரை அதன் சிறப்பியல்புக ளோடு தோற்றுவிப்பாராயினர். விண்ணினுயர்ந்து மறியும் பேரலைகள், கட்பொறி எதுவமாட்டாத அகலம், விண்ணை அளக்கும் முழக்கம், எங்குப் பார்த்தாலும் நீர்! நீர்! நீர்!. இவையேயன்றோ கடல் கண்டோம் என்பார் கண்ட காட்சிகள். இத்துணைக் காட்சிகளையும் "ஓங்கு திரை வியன் பரப்பின் ஒலிமுந் நீர்" என்னும் மூன்றே சீர்கள் காட்டுதல் காண்மின். ஈண்டு மருதனார் தோற்றுவித்த கடல், இற்றைக்கு நிலப்பரப்பின் இடை யிடையே சிற்றலை எறிந்து, சிறிதே முழங்கும் சிறுகடல்க ளன்று. இவ்வுலகத்தே நிலமும் மலையும் தோன்றாமல், கடல் ஒன்றேயாய் இருந்த அப்பழம் பெருங்கடலே என்பதனை இதனை ஓதுவோர் உணர்தல் வேண்டும்.

இனி, அக்கடலின் அகத்திருந்து மலைகள் தோன்றுகின் றன. தோன்றுகின்றன என்பதனை நாறிய என்னும் சொல் லாற் கூறுதல் அவருடைய புலச்சிறப்பை உணர்த்தும். நாறிய- முளைத்த என்னும் பொருட்டு. மலைகள் தோன்றுங்கால், முன் னர் அவற்றின் கொடுமுடிகள் அன்றோ தோன்றும், ஆதலால் உயர் சிமைய மலைநாறிய என்றார். கல் தோன்றி, மண் தோன் றிய பின்னர்க் காடுகளும் ஏனைய உயிரும் தோன்றின என்பர் உயிர் நூலோர். டார்வின் என்னும் மேல்நாட்டு உயிர் நூற் புல வன் உரைத்தவாறு புரோட்டப்ளாசம் தொடங்கி குரங்கு இறுதியாக உயிர்கள் வளர்ச்சி எய்திய பின்னர், அக்குரங்கி னின்றே மக்கள் தோன்றியிருக்கலாம். எங்ஙனம் தோன்றி னும், தோன்றுக! நம் மருதனார் தோற்றுவித்த உலகத்தும், உயிர்க்குலங்கள் தோன்றி நிறைந்துவிட்டன என்பதனை, அதோ அவ்வுயர் சிமையத்தை உற்றுநோக்கி உணர்மின்! அச்சிமை யங்களிலே தேன் தூங்குகின்றனவல்லவா? தேன் தூங்க வேண்டுமேல், தேன் வண்டுகளும், தேன் தரும் மலர்களும், மலர் தரும் காடுகளும், பிறவும் தோன்றியிருத்தல் வேண்டுமன்றோ. இங்ஙனமாக நம் மருதனார் இந்நாலடிக்கட் தோற்றுவித்த உலக ஓவியம் முழுமைபெற்றுத் திகழ்தல் காண்க.

(தொடரும்)

# திருக்கோவையார்

[சித்தாந்தபண்டிதர், திரு. ப. இராமநாத பிள்ளை]

(சிலம்பு - உஎ. பரல் கூ. சOஅ-ஆம் பக்கத் தொடர்ச்சி)

ஐயநிலை உவமை

யமன்தூது, அனங்கன்துணை, மடமயில் இம்மூன்றும் துணி பொருள உணர்த்தும உவமை ஆகா. தலைவன் இங்ஙனம் இருக்கலாமோ என ஐயம்கொண்டு கூறுதலால் ஐயநிலை உவமை.

தில்லைமாது என்பது உவமிக்கப்படும் பொருள். எனவே, தில்லைக்கண் உளள மாது என்று துணி பொருள் கொண்டதன்று தில்லைமாது என்பது பொதுப்படப் பெண் என்பது மட்டும் குறித்து நின்றது.

ஐயம நிகழ்நதது தெய்வமோ மக்களோ எனக் கருதப்படினும, இதுகாறும் கண்டறியாத வடிவம ஆதலின் பெரும் பான்மை தெய்வமோ என்றுதான் ஐயம் கொள்ளுதல் கூடும். சிறுபான்மை மக்களுள்ளாளோ என்று ஐயம் கொள்ளுதலும் கூடும்.

தில்லைக்கண் வாழ்வா ரோர் மானுட மாதரோ என்று கூறலாமெனின்? பொருந்தாது. மக்களுககு உவமை கூறுஙகால் மக்களுள்ளே உயர்நதாரைக் கூறுதல பொருந்துமாயினும், மக்களிற சிறநதார் எனறு பெறப்படாது. தலைவன் தலைவியர் ஒபபாரும் மிககாருமஇலலா ஒருவராதல் வேண்டும். எனவே, இவர் சிறநதாராதலால தெய்வமோ என்றுதான் ஐயங்கொள்ளத் தோன்றுவது இயல்பு.

தலைவர் தலைவியர் க. பிறப்பு, உ. குடிமை, ங. ஆண்மை, ச. ஆணடு, ரு உருவம், சா. அன்பு, எ. நிறை, அ. அருள், கூ அறிவு, கO செல்வம என்னும் பத்தின் கண்ணும் ஒப்பாரும் மிக்காரும இல்லா ஒப்புமை உடையராதல் வேண்டும். இதுவே தொன்மைத தமிழகப்பண்பு. இவ்வுண்மை ஆராய்ச்சி வலலுந ரால் ஆறுயிரம யாண்டுகளுக்குமுன் யாக்கப்பட்டதாக் கருதும் தனித தமிழ் முழுமுதல் நூல ஆகிய ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காபபிய நூற்பாவால் காணக. விளக்கம் பககம் சOக காண்க.

...வது இயற்கை அன்பு பண்பு பற்றித் தோன்றுவது செயற்கை அன்பு. இயற்கை அன்பு பண்டும் பண்டும ஒருவர் ஒருவரை இன்றியமையாதவராய்க் கொண்டு நிகழ்த்திய வாழ்க்கைத் துணையாம் ஊழான நிகழ்வது. வடிவம உழைப்பாலும, குன்று ஒழுக்கத்தாலும, மனற வாணன் மலரடி மறவா உளததாலும, என்றும் அவன் பொருள் சேர் புகழ் புரியும திறததாலும் அமைவது.

நிறை

நிறை என்பது நெஞ்சை ஒருவழி நிறுத்தல். அஃதாவது கற்பு இஃது இரு பாலார்க்கும உரிதது ஆண்டவன் திரு ஆணையும அன்னதே. ஒருவன் ஒருத்தியாய் இறைவன் திருவடி அடையுங்காறும் நிறை நெஞ்சினராய் வஞசம இனறி வாழ்ந்து ஒன்றாய் அடிசார்நது அழிவில் இன்பம் துய்த்தற்கு வழியாக வுள்ளது. இதனை முதல்வன் விட்டு நீஙகாது ஒட்டித் தோன் ாமா வடிவால், அடிநூல் உரையால, உறுவரால், பிழைத்தார்க்கு இயறறும ஊறால் காட்டியருளினன். அது வருமாறு: ஓருடம்பு இருவராகி வாழ்வு அருளல், மெய்யடியாாகள உய்ய 'ஒத்த கிழவனும் கிழத்தியும' காண்ப என உரைததருளல், மெய்யடியார்கள் எவரும பன்மனைவியருடன் வாழாமை, ஆளுடைய நமபியினை இருவரொடும் இணைததுக் குறறம எனக் காடடிக் கண்பறிதது, உடல் நோய் உறுதநி மாற்றியருளிக் கூத்து முறையான் வழிபபடுத்தல்.

இவ்வுண்மையினை உணாத்தும் பாட்டு வருமாறு :

ஒருடம பிருவராகி ஒழுகலா றுணாததிப் பின்னிப்
பாருய அடியா தம்பால் ஒருவனே டொருததிப் பணபின்
காருருக கணடன காட்டும கற்பியல் கடப்பார் காண
ஏருரு நமபி கண்கள் இழப்பிததார் இருவ ராலே.

மெய்ப்பாடு உவகையைச் சார்ந்த மருட்கை பயன் ஐயந்தீர்தல்.

"புதுமை பெருமை சிறுமை ஆக்கமொடு
மதிமை சாலா மருட்கை நானகே"

—தொல், பொருள். உருரு.

௩. தெளிதல்[1]

தெளிதல் என்பது ஐயுற்ற பின்னர், கூர்ந்து நோக்கும் போது தலைமகளின் கண் கால் முதலிய உறுபபுக்கள் இயஙகுவ கண்டனன். காண்டலும் தெய்வம் அல்லள் எனத் தெளிந் தனன்

1. 'பாயும்' திருக்கோவையார், ௩.

பாய்ந்து செல்லும் ஆனேற்றினையுடைய அரனாரின் ...லை ஒப்பானுடைய வேல போலும கண இமையா நின்றன. அவளதம சிறிய அடி நிலததைதத தீண்டா நின்றன. கூந்தலிற சூடிய தூய மலாகள வாடா நினறன. ஆதலால், துயரமுற்று ஆராயும மனனே! அழகிய பெரியவாகிய முலைகளைச் சுமநது தேய்கினற இடையினையும் மூங்கில் போலும பெரிய தோள்களையும் உடைய இசசிறு நுதலையுடையாள் தெய்வம் அலலள்.

கணகள இமையா ஆகலின் அவைகள் இமையா நாட்டத்தன என வழங்குவவாயின. கருதது: ஓய்வின்றி மன் உயிர் ஓம்புமு நன்னிலையுள நிற்றலால் கணகள் இமையாவாயின. என்னை? கருததின் வழியே சொல்லும சொலலின் வழியே செயலும நிகழ்வனவாயினமையின என்க சொலலும் செயலும மனத்தின் வழிய என்பதை வரும திருப்பாட்டான் உணாக:

"உள்ளுவன் மன்யான் உரைப்பது அவர்திறமால்
கள்ளம பிறவோ பசப்பு." —திருக்குறள், ககஅ௪.

பெரியார்

பிறர், துன்பம் நீங்கி இன்பம் ஓங்கி என்றும் ஒரு தன்மையராய் வாழவேண்டும் என ஒல்லும்வகை ஓவாது உஞற்றுவோரே பெரியார் என்க. இவரை ஐயர் எனவும கூறுப., இவ் உண்மை வருமாறு:

"வினைசெலன் மரபின் ஐயர்க்கு ஏந்தியது
ஒருகை ... ... ...
—திருமுருகாற். க0எ.

"நிலமிசை வாழ்நர் அலமரல் தீரத்
தெறுகதிாக கனலி வெம்மை தாங்கிக்
காலுண வாகச சுடரொடு கொட்கும்
அவிாசடை முனிவரும் ... ..."
—புறம். ௪௩.

"சுடரொடு திரிதரும் முனிவரும் அமரரும்
இடர்கெட அருளுநின இணையடி தொழுதே."
—சிலப். கஉ. வேட்டுவவரி,

பாயும் விடை - விரைந்து செலலும் ஆனேறாகிய எருது. விடை - ஊணிலும உழைப்பிலும் முறையே விருப்பு வெறுப்பின்றிக் கடனாற்றுவது. விடை என்பது விடுத்தல்; விருப்பு வெறுபபினை விடுததல்.

படைக்கண் என்பது தீயாரை அச்சுறுத்தித் தீவழி விலக்கி நல்வழி விளக்கி அவ்வழியே ஒழுகச் செய்தற்குத் துணையாவது. படையுடையானுக்கு அஞ்சுவதே பயன் தரும் அச்சம. படைக்கு அஞ்சுவது போலியே ஆகும். படைக்கு நீக்கம் உண்டு. படையுடையானுக்கு அஃதின்று. அவன்றன் ஆண்மையும் உடலாற்றலின்கண் இன்று; அவன் தன் அற ஒழுக்கத்தின் கண்ணேயாம் இது,

"வேலன்று வென்றி தருவது மன்னவன்
கோலதூஉம் கோடாது எனின." —திருக்குறள், ௫௪௬.

"இரும்புமுகம் சிதைய நூறி ஒன்னார்
இருமசமம் கடந்தல எனோக்கும எளிதே
நல்லரா உறையும புற்றம போலவும
கொலலேறு திரிதரு மனறம் போலவும்
௫. ஆற்றரும் துப்பின மாற்றோா பாசறை
உளன் என வெரூஉம் ஓரொளி
வலனுயா நெடுவேல் எனனைகண ணதுவே.'
—புறம். ௩௦௯.

ஆடவர்க்கு ஆண்மை வாய்ப்பதூஉம் மகளிர்தம் அரும் பெறற் கற்பினலேயாம். ஆடவர்தம படைகளை நற்பயன்உறச் செய்வது நல்லாராகிய கற்புறு மகளிர் தம் கண்களேயாதலின் படைக்கண் எனறார். எனவே படையைப் படையாகப் படைக்குங்கண் படைக்கண். அது வருமாறு :

காந்தள் கடிகமழும் கண்வாங்கு இருஞ்சிலம்பின்
வாஙகமை மென்தோள் குறவா மடமகளிர்
தாமபிழையார கேளவாத தொழுதெழலால் தமஐயரும்
தாமபிழையார் தாமதொடுதத கோல்.
—'காமா' கலிததொகை, ௩௯.

இவற்றான் தலைவியின் படைக்கண் "தகைசான்ற சொற் காத்தற்குத்" தூய துணையாவது காண்க. தூயதுணை - குருதிக் கறைபடியாது நன்னெறி ஒழுகச்செய்யத் துணையாவது.

## மூவழி

"அம்மா மூலே தேயும் மருங்குல் பெரும்பணை ததோள் இச் சிறுநுதல்" என்று அருளிய வனபபுப் பெரிதும நோக்கத்தக்கது. "செறிவும் நிறைவும் செம்மையும் செப்பும், அறிவும் அருமையும் பெண்பாலான" (தொல். பொருள்-உ௦௯) என்றத னல பெண்பாலார்க்கு வேண்டும் பண்புகள் ஆறு, இவ் ஆறு பண்புமநிறைநதாரைத திருவுடையார் என்பா. திருவுடையார் உருவிலும் செம்மையாய் அழகாய் இருப்பா. இவையே 'உரு

விலும் திருவிலும் பொருவிலர்' என்றழைக்கப்படுவன. பொருவிலர் - ஒப்பில்லாதவர். உறுப்புக்கள் எங்ஙனமிருந்தால் அழகாய் இருக்கும் என ஆயின் 'பிட்டியும் தோளும் கண்ணும் என்னும் மூன்றிடங்கள் பெருத்தும, நெற்றி அடி இடுப்பு என்னும் மூன்றிடங்கள் சிறுததும இருததல் வேண்டும் என்பது புலனும். சண்டுமுலை தோள என்னும இரண்டும பெருத்து, இடை நுதல் என்னும இரண்டும் சிறுதது, அழகோடு விளங்குவதாகக் கூறப் பட்டுள்ளது. இவ்வுண்மை வரும் பாட்டான் உணாக:

> இகல்வேந்தன் சேனை இறுத்தவாய் போல
> அகல அல்குல்தோள கணஎன மூவழிப் பெருகி
> நுதலடி நுசுப்பென மூவழிச சிறுகி...........
>
> ௭க, கOஅ.

மெய்ப்பாடு

மருட்கையின் நீங்கிய பெருமிதம். மருட்கை நீங்கவேண்டுமாயின் புலமை நிரமபிய கல்வி வேண்டும. கலவியால் பெருமிதம் உண்டாம் பெருமிதம என்பது ஆண்மை. ஆண்மை எனினும வீரம எனினும ஒனறே. ஆண்மை என்பது அஞ்சாது தீமையை விலக்கி நனமையைத துலக்கி எல்லாரையும் வாழ்விதது அவர்களால் நன்மதிப்புப பெறுவது. பெருமிதம நானகு வாயில்களான் வரும் என்ப. அவை,

> "கல்வி தறுகண் இசைமை கொடையெனச்
> சொல்லப் பட்ட பெருமிதம் நான்கே."
>
> —தொல். பொருள், உருஎ.

பயன்

தெளிதல் பயன் என்ப தெளிதல் கல்வியான் வருவது. கல்வியின் பயன் அறிவு. அறிவின் பயன ஆய்வு. ஆய்வின் பயன் அகமுறக்கொண்டு கடைப்பிடிததொழுகல

௪. நயப்பு[1]

தெய்வம அல்லள மக்கள் உள்ளாள் என்று துணிந்த பின்னர் வாழககைததுணையாய்க் கோடல் வேண்டும் என நயப்பது முறையேயாம. தெய்வநாட்டம் மிககுள்ளாரும் தெய்வமே ஆவா. மஙகையர்ககரசியார்ககும, காரைக்கால அமமையார்க்கும தெய்வ நாடடம மிக்கிருநதமையும் அதனுல் அவர்கள் அன்றுதொட்டு இனறுகாறும் ஆன்றோர் அனைவர்களாலும் தெய்வமாகப போறறிபபுகழ்நது வழிபாடு ஆற்றிவரப் பெறு கினறமையும் தேற்றமாம என்க. நயப்பெனபது உள்ளம்

1. 'அகல்கினற' திருககோவையாா, ௪.

குழைந்து மென்மையாய்த் தள்ளரிய அன்புகொள்ளுதல் தேர்தலும் தெளிதலும் தாழாது உஞற்றலும் செய்வதன்றே தக்கோர் கடன். வினைசெய்யுமிடத்துக காலம் தாழ்க்கின் தீதாம். அவ்வுண்மை வருமாறு :

"சூழ்ச்சி முடிவு துணிவெய்தல் அத்துணிவு
தாழ்ச்சியுள் தங்குதல் தீது." —திருக்குறள், சுஎக.

பெருமைமிக்க இடுப்பின் கீழ்ப்பகுதியாகிய பிட்டியும், பெருத்த முலைகளும் அவற்றின் பெருமையால் தோற்றமுறுகின்றன இவற்றைக் காண்டலால் நடுப்பகுதியாகிய இடை-இடுப்பு உண்டு; காரணம் இல்லாமல் நெஞ்சே நீ நினைப்பது என்? நன்மையொடு பொருந்தாது உலகோர்க்குத் தீங்கிழைத்தவா தம உடலை ஊரை, உரஞர் மதிலை உறுதுணையைப் பகையாய்க் கருதி அப்பகையைக் கெடுத்தவன், தில்லைக்கண் உள்ளாகிய ஆளவோன், எமமுடைய தலைவன், மாறுபட்ட பகலவனுடைய பெருமை குறையப் பல்லைக கீழ்விழச் செய்தவன், ஆகிய சிவபெருமானுக்குரிய திருப்பழனத்தை ஒக்கும் பல வளையல்களை அணிந்துள்ள இப்பெண்ணுக்கு.

தடம் என்பது 'அகல்கின்ற அல்குல் தடம்' என்றதன்கண் உள்ளது தடம் பெருமை இது, "தடவும் கயவும் நளியும் பெருமை" (தொல் சொல் - ௩௨௫) என்னும் தொல்காப்பிய நூற்பாவான் உணரலாம். அல்குல் என்பது இடுப்பின் கீழ்ப் பகுதியாகிய பிட்டியையே குறிக்கும். குறியைக் குறிப்பதாகக் கொள்ள நேரின் ஆகுபெயராகக் கொள்ளுதல் வேண்டும். அங்ஙனமின்றி அச்சொல குறியை நேரே குறிப்பதென்பது தவறாகும்.

ஆண்டவன் செய்தருளிய அரும்பெரும் செயல்கள் அனைத்தும் ஆருயிரின் பொருட்டே ஆதலின் அவற்றை உண்மை உணர்த்தும உள்ளுறை வண்மையாகக் கொள்ளுதல் பொருந்தும். உருவகம என்பதும் இதுவே. "அடையார்புரங்களைச் செறுதல்' 'பகலோன் பல் உகுத்தல்' 'தில்லை ஈசன்' 'எம்மான்' என்பனவற்றின உள்ளுறையை ஓர்வோமாக.

தெய்வத்திற்கும் தெய்வத்தை மறவாதார்க்கும் தங்கட்கெனப பகையும் உறவும நானிலத்தும் மேனிலத்தும் கிடையா. ஆருயிர்கள் தீமை நீங்கி நனமை ஓங்கி தெய்வத்தை மறவாமைக்கண் வன்மையுற்றுப பிறவிப் பெரும் பயனாகிய பேரின்பப் பெருவாழ்வு எய்தி என்றும ஒரு தன்மைத்தாய்ப போரா இயற்கையுற அவ் ஆருயிரின் பொருட்டு அவற்றின்கண் காணப்படும் தீமையின்மாட்டுப் பகையும் நன்மையின்மாட்டு உறவும்கொண்டு

தீமைநீங்க ஒறுப்பும் நன்மை ஓங்க உவப்பும் புரிவர். இவை பெற்றோரும ஆசிரியரும பிள்ளைகள்மாட்டுச செய்யும இருவகை அன்புச செயலாலும் உணரப்படும.

உவந்துநல்கும நலமே அன்றி ஒறுத்துநல்கும் பொலமும் அன்பேயாம். இவவுண்மை வரும் திருப்பாட்டானும் உணர்க:

"அறத்திற்கே அன்புசார்பு என்ப அறியார்
மறத்திறகும அஃதே துணை." —திருக்குறள், எசு.

'அடையாா புரங்களைச் செறுதல்' என்பது நன்மையில் கூட்டததை நீககி நன்மையுள்ள கூட்டத்தை ஆக்குவதே நன்மையாம அதுபோல் நன்மைககுத் துணையாகாத உடலையோ உறையுளையோ, ஊரையோ, உலகையோ, உறவையோ நீக்குவ தேயாம அடையாா - நன்மையைச சாராதார். அங்ஙனம் நீக்கின் நன்மையுள கூட்டதது ஆககுவதற்கு வாய்ப்பாகும். இஃது ஆளும தலைவா அறமுறை நோக்கி அந்தணமையோடு ஆற்றும செயலாகலின் 'தில்லைஈசன்' என்றருளினர். ஈசன - ஆள்வோன ; ஆண்டவன்.

'பகலோன் பல் உகுததல்' பல் உகுத்தல் என்பது நகை யாகிய மகிழ்ச்சியை அகற்றுதல். முதல்வனை மறபபது தீாதிற னிலலாப பெருமபாவம் என்க. அங்ஙனம் மறந்தாககுத் துணைபோய் உடனகியைநது மகிழ்வது அதனினும் பெரும் பாவம என்க. அஙஙனம மகிழ்ந்தாரை ஒறுப்பது மகிழ்சசிககு வாயிலாகிய பல்லினை உகுபபதேயாம. பல்லுகுப்பதென்பது குற்றம்புரிந்தாா மகிழ்விழநது மனமவருந்தித் தலைகவிழ்ந்து முகம் வாடி நிற்கக் காணபது. இவ்வுண்மை வரும் திருபபாட் டுக்களான் உணாக :

"யாகாவார் ஆயினும் நாகாக்க காவாககால்
சோகாப்பா சொல்லிழுக்குப் பட்டு." —திருக்குறள், கஉஎ.

நாகாத்தல் - சுவையானும சொல்லானும் உடலுக்கும் உயி ருக்கும தீஙகு வாராமல் காத்தல. காத்தல் - தடுத்தல நா வேட்கும சுவையைக குறைத்து வெறுக்கும சுவையை மிகுத்து உண்டு பழகுதல் ஒழுக்கமிககார் கூறும விழுமிய சொற்களைக் கூறி அஃதிலாா கூறும விழுமியதல்லாத இழிவான கடுஞ்சொற் களைச் சொல்லுதல ஒழிதல் அல்லாா கூறும பொல்லாச் சொற் களை அறவே போககி நலலாா கூறும் நயன்சேர்பயன் மொழி களை நாளும் நவிலுதல.

சூரிய னார்தொண்டை வாயினிற் பற்களை
வாரி நெரிததவாறு உந்தீபற
மயஙகிற்று வேள்விஎனறு உந்தீபற. —அ. சாழல - கரு.

இது, தலைவன் அல்லது இறைவன் ஆவான் தன்கீழ் வாழ்வார் தம்மைத்தாமே தலைவரென மதித்துச் செருக்குற்று நெறியல்லா நெறிச்சென்று அறிவு அறைபோக்கித் தீயனபுரிந்து வருவரேல் அவர்தம் செருக்கு அகற்றித் தலைமையும் தனக்கே உளது என நிலைநாட்டி அவர்தம் "புன்னெறி யதனிற் செலனும் போக்கினை விலக்கி, மேலாம் நன்னெறியொழுகச் செய்து, நவை அறுகாட்சி நல்கி" அடிமையாக்குவன். இவையே 'சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடனுதல்' என்னும் கடனும். இதனுல் 'எம மான்' என்று அருளினர்.

இடை உண்டு

அல்குற் பெருமையானும் முலைப்பெருமையானும் இடையுண்டு எனறவாறன்று எனப் பேராசிரியர் நுணித்துணர்ந்து அவையிரண்டும் உண்மையான் உண்டு என்று கூறிய திறம் வியக்கத்தக்கது. அவை பெருமையுறுமுன்னும் இடையுண்டு என்பது போதரும். பின் பெருமை கூறுதல் 'அவை விளங்கித் தோன்றுதல் நோக்கி' என்பது ஐயம் எழுந்தமைக்குக் காரணம் காட்டுதலாகும்.

'உளளியது' என்பது 'வண்டமர் புரிகுழல் ஒண்டொடி மடநதையை, நயந்த அண்ணல் வியந்து உளளியது' என்பதன் கண் காணப்படுவது உளளியது - நினைந்தது. கூட்டத்தை எனக் கூறுவது நோக்கத்தக்கது.

மெய்ப்பாடு

உவகையைச் சார்ந்த மருட்கை, மருட்கை எ‹ வியப்பு எனினும் ஒன்றே. தலைவன் இதுகாறும் கண்டறியாத புதியதொன்று கண்டனன் ஆதலின் வியந்தான. மருட்கையும் நான்கு வாயிலகளான்வரும். அவை,

> "புதுமை பெருமை சிறுமை ஆக்கமொடு
> மதிமை சாலா மருட்கை நான்கே"
>
> —தொல். பொருள் - உ௫௫.

பயன்

'ஐயந்தீர்ந்து மகிழ்தல்' தெய்வமோ மக்களோ என்று ஐயுற்றுத் தெய்வம் அல்லள மக்கள் உள்ளாள் என்று ஐயந் தீர்ந்து கூட நினைந்து மகிழ்தல்.

(தொட(

# திருக்குறள் மாநாட்டுத் தலைமையுரை[1]

[வித்துவான் பண்டிதர் திரு. கா. பொ. இரத்தினம் அவர்கள் எம். ஏ., பி. ஓ. எல், தமிழ்மறைக் கழகத் தலைவர்]

இத்திருக்குறள் மாநாட்டை இவ்வளவு சிறப்பாக நடத்தும் இம் மாநகரின் மக்கள் யாவர்க்கும் நன்றி கூறுகின்றேன். இவர்களுடைய ஒற்றுமை உணர்ச்சியும், தமிழ்ப் பண்பும், திருக்குறட் பற்றும் போற்றத்தக்கன. எமது தமிழ்மறைக் கழகத்தின் முதலாவது மாநாட்டை இங்குச் சிறப்பாக நடத்துதற்கு முன்வந்த திருவள்ளுவர் கழகத்தாருடைய பெருந்தொண்டு இங்கு வந்திருக்கும் இந்தியப் பேரறிஞர்களையும் ஈழத்துப் பேரறிஞர்களையும் வியப்படையச் செய்துவிட்டது. பல மாதங்களாக முயற்சிசெய்து இப்பெரும் பணியைச் சிறப்பாக நிறைவேற்றியுள்ள திருவள்ளுவர் கழகத்தாருக்கு எமது கழகம் மாத்திரமன்றித் தமிழ்மக்கள் யாவருமே நன்றிகூறக் கடமைப்பட்டவர்களாவர். இம் மாநாட்டை நடத்துவது மாத்திரமன்றி இங்குள்ள மக்கள் யாவரையும் தத்தம் வீடுகளிலும் திருவள்ளுவர் திருநாளைக் கொண்டாடவுஞ் செய்த இக் கழகத்தாரின் பெருஞ் செயலை எவ்வாறு போற்றுவது? விடாமுயற்சியின் சிறப்பை—உண்மைத் தொண்டின் பயனை—இன்று இங்கே காணும் வாய்ப்பு இங்குள்ளார் யாவர்க்கும் கிடைத்துளது.

"அருமையுடைத் தென்று அசாவாமை வேண்டும்
பெருமை முயற்சி தரும்."

என்று வள்ளுவர் கூறியதனை இக் கழகத்தார் மெய்ப்பித்துளர்.

### தமிழ்மறையின் தனிச்சிறப்பு

பல்லாயிரம் ஆண்டுகளாகச் சிறந்த நாகரிக வாழ்வை நடத்திய தமிழ்மக்கள் இவ்வுலகத்திலே இன்பமாக எவ்வாறு வாழலாம் என்று ஆராய்ந்தார்கள். அவர்கள் தம் ஆராய்ச்சியின் முடிவாக, அனுபவத்தின் பயனாகப் பல உண்மைகளை அறிந்தார்கள். இந்தப் பேருண்மைகளை—வாழ்வாங்கு வாழும் வழிகளை—நமக்கு எடுத்துக் கூறும் திருநூலே திருக்குறளாகும். இதனாலே, இந்நூல் தமிழினத்தின் மதிப்பொணாத அருநிதியாய்த் திகழுகிறது. சாதி, மத, நிற வேறுபாடின்றி எல்லா மக்களும் எக்காலத்தும்

1 திருகோணமலையில், திருவள்ளுவர் கழக ஆதரவில் திருவள்ளுவர் திருநாளிற் (28-5-53) றொடங்கி நடந்த, தமிழ்மறைக் கழகத்தின் முதலாவது திருக்குறள் மாநாட்டில் நிகழ்த்திய உரை

போற்றுதற்குரிய நன்னூல் இவ்வுலகில இஃதொன்றே. தமிழின் பெருமையையும், தமிழினததின் சிறபபையும, தமிழ்ப பண்பாட்டின் செமமையையும, தமிழறிஞரின் சிந்தனையின உயர்வையும் எடுததுரைக்கும் இந்நேயவ நூலுககு இணையான நூல் உலகிலுண்டோ? சிநதிக்கும வன்மை உளளவாகளையும், உணரும ஆறறல் படைத்தவாகளையும ஈாதது ஈர்தது இன்புறுத்தும் இநதச சிந்தனைக் களஞ்சியத்தின் பெருமையினை அளவிட்டுரைகக முடியுமா? பல துறையாக விரிநது செலலும வாழ்வில் ஏற்படுஞ் சிககலகளைத் தீர்க்கும ஆற்றல் இப் பொதுமறையின் தனிச சிறபபனறோ! நன்மைக்கும தீமைக்கும, அறததுககும மறத்துக்கும, தனனலத்துககும பிறர் நலததுக்கும், மனிதப் பண்புக்கும மிருகப் பண்புககும ஏற்படும போராட்டததிலே மனிதன வெற்றிகண்டு மனிதனுக—அமரனுக—வாழ வழிகாட்டும் அறநூல் இஃது என்பதை அறியாதார் உளரோ?

பகையை, அன்பினுலன்றிப பகையினுல் ஒழிக்க முடியாது; தீமையை, நன்மையினுலனறித தீமையினுல அழிக்க முடியாது என்பனபோனற பேருண்மைகளை அழுத்தந் திருததமாக எடுத்துப பறைசாற்றும நமது தமிழ் மறையின் சிறப்பை எவ்வாறு கூறலாம்!

பண்புடைமை

இநத உலகம இன்பமாக இயங்குதற்கும் அமைதியாக நடப்பதற்கும் பண்புடையவர்கள் பெருகவேண்டும், பண்புடையவர்கள இவ்வுலகில இன்றேல் இந்த உலகமே அழிந்துவிடும் என்பதை,

> "பண்புடையார்ப் பட்டுண்டு உலகம அஃதின்றேல்
> மணபுக்கு மாயவது மண்."

எனும் குறள் கூறுகிறது எவ்வளவு கூரிய அறிவுடையோரும் பண்பில்லாதவர்களாயிருபபின் அவர்கள் மரத்தைப போன்றவர்கள் என வளளுவர் பெருமான் கூறுகிறார்.

> "அரம் போலுங கூரமைய ரேனு மரம் போல்வர்
> மக்கட் பணபு இல்லா தவர்."

பண்பிலாதாரின் அறிவு மாத்திரமன்றி யவர்தம் செல்வமும் பயனற்றதென்பது வள்ளுவா கருத்து. தீமைகளைச் செய்கிறவர்களிடத்தும் பண்பு உடையவர்களாய் நடக்கவேண்டும்! இவ்வாறு நடவாமை மிக இழிவான செயலாகும.

தீமைக்கும் நன்மை

தீமை செய்கின்றவர்களுக்கும் நன்மை செய்தலையே வள்ளுவர் உயர்ந்த பண்பாக—சால்பின் பயனாக—தலையாய அறிவாக—மாசற்றார் குறிக்கோளாகப் பலவிடங்களிலே கூறுகிறார்.

“ இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யாக் கால்
என்ன பயத்ததோ சால்பு ”

“ அறிவினு ளெல்லாந் தலையென்ப தீய
செறுவார்க்கும் செய்யா விடல் ”

“ கறுத்தின்னா செய்தவக் கண்ணும் மறுத்தின்னா
செய்யாமை மாசற்றார் கோள்.”

ஒருவன் தன்னைத் திருத்தி அன்பும் பண்பும் உடையவனாக வாழ்ந்தால் அவனுடைய குடும்பம் செம்மைப்படும்; அவன் வாழும் ஊர் சிறக்கும்; அவனுடைய நாடு நலம்பெறும்; உலகமே உயர்வடையும் இதுதான் வள்ளுவருடைய அடிப்படையான கொள்கையாகும் இதனாலேயே, ஒருவன் மேற்கொண்டொழுக வேண்டிய சிறந்த பண்புகளையும் அவன் நீக்கவேண்டிய தீய குணங்களையும் அவர் எடுத்து விளக்கியுள்ளார்.

உன்னிடத்தும் நீ அன்பு வை

வீடும் நாடும் நலமுற அவர் கூறும் சட்டதிட்டங்கள் அவற்றைப் படிப்போர், கேட்போர் தம உள்ளங்களைத் தொடத் தக்கன. “இதுவரை உண்மை தெரியாது அலைந்தோம், அல்லற் பட்டோம், உமிக்குத்திக் கை ஓய்ந்தோம். இப்பொழுது உண்மையை அறிந்தோம், இனி இன்பமடையலாம், அன்புடன் அமைதியாக வாழலாம்” என்று எண்ணச் செய்வன; எண்ணி எண்ணி நல்வாழ்வு வாழச்செய்வன.

பிறரிடத்து அன்பு வை, பிறருக்குத் தீமை செய்யாதே; என்று மாத்திரம் வள்ளுவர் கூறவில்லை. ‘உன்னிடத்தும் நீ அன்பு வை, உனக்கும் நீ தீமை செய்யாதே; உன்னைக் காக்கும் முறையை அறிந்துகொள்; நோயின்றித் துன்பமின்றி வாழும் வகையைத் தெரிந்துகொள், உனக்கு நன்மை செய்கிறாயா என்று ஆராய்ந்து பார்........என்றும் கூறுகிறார்.

“ தன்னைத் தான் காதலனாயின் எனைத் தொன்றும்
துன்னற்க தீவினைப் பால்.”

“ தீப்பால தான் பிறர் கட் செய்யற்க நோய்ப் பால
தன்னை அடல்வேண்டா தான்.”

"நோய் எல்லாம் நோய்செய்தார் மேலவாம் நோய்செய்யார்
நோயின்மை வேண்டு பவர்."

"அருங் கேடன் என்ப தறிக மருங்கோடித்
தீவினை செய்யான் எனின்"

"தன்னைத்தான் காக்கிற் சினங்காக்கக் காவாக்கால்
தன்னையே கொல்லுஞ் சினம்."

இவைபோன்ற குறள்மணிகள் எத்தகையோருடைய உள்ளத்தையும் உருக்கி உண்மையையுணரச் செய்யுமன்றோ!

பிறர் குற்றம்போல் தங்குற்றங் காணல்

மக்கள் பலர், பிறருடைய குற்றங்களைக் கண்டு அவற்றைப் பரப்புவதிலேயே தம் நேரத்தையும் ஆற்றலையும் வீணாக்குகின்றனர் இத்தகையோர் தம்மிடத்துள்ள குற்றங்களையும் காண்பாராயின் இந்த உலகத்தில் தீமையுண்டாகுமா? என்று கேட்கும் வள்ளுவர் வாய்மொழி புலப்படுத்தும் பேருண்மையை இனியாகுதல் மக்கள் உணர்வார்களா?

"ஏதிலார் குற்றம்போல் தங்குற்றங் காண்கிற்பின்
தீதுண் டோ மன்னும் உயிர்க்கு."

'தீதுண்டோ' எனுஞ் சொல் எவ்வளவு உருக்கத்தையும் இரக்கத்தையும் பிறப்பிக்கிறது இக்குறளைப் பன்முறை படித்துப் பாருங்கள். உங்கள் உள்ளம் உங்களை அறியாமலே உயர்வடையும்; உண்மையிற்றிளைக்கும்.

"தன்னுயிர்க் கின்னாமை தானறிவான் என்கொலோ
மன்னுயிர்க் கின்னா செயல்"

எனும் வள்ளுவர் வாய்மொழியைப் படித்தவுடன் உணர்ச்சி பெறாத உள்ளமுடையவர்களை மக்களென்று கூறலாமா?

அன்பு அறிவு முதலியவற்றின் அடையாளம்

"யாம் சிறந்த அன்புடையோம், உயர்ந்த அருளுடையோம், பரந்த அறிவுடையோம், நல்ல சால்புடையோம், விழுமிய ஒழுக்கம் உடையோம், பெரிய கல்வி உடையோம், நல்ல குலம் உடையோம்," என்றெண்ணியுஞ் சொல்லியும், இவற்றின் காரணமாகப் பிறரால் பாராட்டப்பட்டும் வாழ்வோர், இவற்றின் அடையாளங்களாக வள்ளுவர் கூறுவனவற்றைக் கேட்டறிந்துணர்ந்தவுடன் இவற்றுள் ஒன்றேனும் தங்களிடம் இல்லை என்று கூறும் நிலைமைக்கு வந்துவிடுவார்கள். தமது இழிந்த

மையை — பொய்த்து உயிர் வாழுதலை — உணர்வார்கள். உண்மையாக வாழ—உள்ளத்தாற் பொய்யாது வாழ விரும்பு வார்கள்.

"தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும்"

என்பது உண்மை; முழுதும் உண்மை என்று பறைசாற்றுவார் கள், பண்புடையவர்களாய் வாழ முயல்வார்கள் அன்பு, அருள், அறிவு, சால்பு, ஒழுக்கம், கல்வி, குலம் முதலியவற் றுக்கு அடையாளங்களாக வள்ளுவர் கூறுவனவற்றுட் சில வற்றை ஈண்டுக் குறிப்பிட விரும்புகிறேன். இவற்றை, நாடோ றும் மக்கள் நினைத்துக்கொண்டால் நல்வாழ்வு வாழலாம்; பண் புடையவர்களாகலாம்.

"அன்பிலார் எல்லாந் தமக்குரியர் அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு."

"அல்லல் அருள்ஆள்வார்க்கு இல்லை வளிவழங்கும்
மல்லல்மா ஞாலம் கரி."

"அறிவினான் ஆகுவ துண்டோ பிறிதின்நோய்
தந்நோய்போல் போற்றாக் கடை."

"இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு"

"ஒழுக்க முடையவர்க் கொல்லாவே தீய
வழுக்கியும் வாயாற் சொலல்."

"கற்றதனால் ஆய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅ ரெனின்."

"நலம்வேண்டின் நாணுடைமை வேண்டும் குலம்வேண்டின்
வேண்டுக யார்க்கும் பணிவு"

காந்தியடிகள் போற்றினார்

வள்ளுவர் தந்த இந்தத் தமிழ்மறையின் பெருஞ் சிறப் புக்களை உணர்ந்தே இன்று வரையும் தமிழ்ப் புலவர்கள் வழி வழியாக இதனைப் போற்றி வந்திருக்கிறார்கள்; பிறநாட்டார் பலர் தத்தம் மொழியில் மொழி பெயர்த்திருக்கிறார்கள். வள்ளுவர் கூறியபடி உள்ளத்தாற் பொய்யாதொழுகி உலகத்தார் உள்ளத்தெல்லாம் நிறைந்து விளங்கிய காந்தியடிகள் திருக் குறளைப் படித்தறிதற்காகத் தமிழைக் கற்றார். அவருடைய அடிச்சுவட்டினைப் பின்பற்றி வாழ்பவரும், பூதான இயக்கத்தின் தலைவராய் உலகத்தையே ஆச்சரியமடையச் செய்து வருபவரு மாகிய ஆச்சார்ய வினோபாஜி நாடோறும் இதனை ஓதி வருகிறார்.

இனி வரும் காலத்தில் நமது தமிழினம்—ஏன் உலக மக்கள் யாவருமே—இன்பமாகவும அமைதியாகவும நல்வாழ்வு வாழவேண்டுமெனின எலலாருடைய எண்ணமும சொலலும் செயலும திருக்குறள் வகுதத நெறியிலே செலலவேண்டும். பிறநாட்டினருக்கு வழிகாட்டும முறையில் நாம நமது தமிழ் மறையைப போற்றி அது வகுதத நெறியிலே நின்றொழுகி இன்பமடைய முதலில முயற்சி செய்யவேண்டும் சாதி மத வேறுபாடின்றித தமிழிணைப் பேசும மக்கள யாவரும ஒன்று சேர்நது தமிழப பணபாட்டின களஞ்சியமாக—யாவர்க்கும் பொதுவான நெறியைப் புகலும் பொதுமறையாக—விளங்கும் திருக்குறளைப் போற்றுவோம, அதனுடைய ஆசிரியரின் பெருஞ் செயலை நினைவு கூாவோம்.

வையகமெங்கும் வள்ளுவன் புகழ் பரப்புவோம்

ஒரு நாளேனும் திருக்குறளைப்பற்றி எண்ணாமல், திருக் குறள் என்றொரு சிறந்த நூல் இருக்கிறதென்றுகூட அறியாமல், அறிநதும் அதன் அருமை பெருமைகளை உணராமல், அதனைப் படிததும் அது வகுக்கும் பொதுநெறியில ஒழுகாமல் வாழும மக்களுக்கு அந்நூலின அருமை பெருமைகளை அறிவிததற்கும், அதனில் அவாகளை ஈடுபடச செய்தற்கும எமது தமிழ்மறைச் கழகம எண்ணியது. வையகமெஙகும் ஒரு நாளிலே திருவளளு வர் திருநாளைக் கொண்டாட வேண்டுமெனறும, ஒவவொரு வீட்டிலும் கொண்டாடவேண்டுமென்றுங கேட்டு அறிக்கைகள் வெளியிட்டோம.

தமிழறிஞாகள் மாததிரமன்றிச் சங்கங்களும் பத்திரிகை களும எமது முயறசிக்கு ஆககமும ஊக்கமும நல்கின; கலகி, சுதநதிரன், ஈழகேசரி, செநதமிழ்ச் செல்வி, தமிழ்நாடு, ஆதம சோதி, தாம சக்கிரம, வீரகேசரி, சமூகத் தொணடன் முதலிய பத்திரிகைகள தலையங்கம முதலியன எழுதியும உற்சாக மூட்டின. ஈழத்திலும தமிழகததிலும் மாததிரமன்றி மலாயா, பர்மா, தென்னாபிரிக்கா முதலிய இடங்களிலும் வாழும தமிழ் மக்கள் இன்று திருவள்ளுவா திருநாளைக் கொண்டாடுகிறார்கள். எமது வேண்டுகோட்கிசைநது திருச்சி, சென்னை, இலங்கை வானொலி நிலையங்கள இன்று விசேட நிகழ்ச்சிகளை ஒலிபரப்பு கின்றன. தமிழில் மாததிரமன்றி ஆங்கிலம, சிங்களம், தெலுங்கு முதலிய மொழிகளிலும் திருக்குறளையும அதன் ஆசிரியரையும பற்றிய பேச்சுக்கள ஒலிபரபபபபடுகின்றன. எமது சிறு முயற்சி இவ்வளவு பெரும் பயனை அளித்ததற்குக் காரணம் மக்கள் பலருக்குத் திருக்குறளிலுள்ள ஆாவமேயாகும்.

இந்த ஆர்வத்தை எல்லாரிடத்தும் உண்டாக்கி எல்லா மக்களை யும் உண்மை வழியில் இன்ப வாழ்வு வாழச்செய்வது பேரறிஞர் தங் கடனாகும்.

இவ்வாண்டிலே பெரும்பாலும எல்லா ஊர்களிலும் திரு வள்ளுவர் திருநாளைக் கொண்டாடச் செய்துவிட்டோம். எம்முடன் ஒத்துழைத்த பத்திரிகைகளுக்கும், சங்கங்களுக்கும், தமிழப் பேரறிஞாகளுககும், வானொலி நிலையஙகளுக்கும நன்றி கூறுகிறோம் அடுத்த ஆண்டிலே திருவள்ளுவர் திருநாளை ஒவ்வொரு நாட்டிலும் மாத்திரமன்றி ஒவ்வொரு வீட்டிலும் கொண் டாடச் செய்தல்வேண்டும. இதற்குத் திருக்குறளில் ஈடுபட்ட அன் பர்கள யாவரையும உதவி செய்யுமாறு கேட்டுக்கொள்கிறோம். சமயப்பூசல், சாதிபபூசல், இனவேற்றுமை, புணவேற்றுமை முதலிய பல காரணஙகளாற் பிளவுபட்டுக்கிடக்குந் தமிழினத்தை ஒன்றுபடுத்தும் ஒரு திருநாளாக—தமிழினைப பேசும மக்கள் யாவரும ஒன்றுசோநது கொண்டாடும ஒரு நன்னாளாக—இந்த வள்ளுவர் திருநாள் பொலிவதாக! வாழக தமிழமறை! வாழ்க உலகம்!

## உள்ளுறை

திருவள்ளுவ நாயனா அருளிய தெய்வத் தமிழ்மறையாம் 'கடவுள் வாழ்'த்தின்கண கூாந்து நோக்கின் முதல் மூனறு திருககுறள்கள் முறையே கடவுள் என்றும மாறா உணமை அறிவு இனப உருவினன என்பதை உணாத்துகின்றன. நானகாம குறள பல்லுயிரும பயனுற அருட்பொருட்டே செய் தருளும கைம்மாறிலலாத ஊராணமையை உணாததுகின்றது. ஐந்தாவது இயல்பாகவே பாசஙகளினின்று நீஙகிய தொன்மை ஒண்மையை உணாத்துகினறது. ஆறாவது மெய்யடியாாகளை இவாதந் தூாந்து இயறறிய எழில்நூல் உணமையை உணாத்து கினறது. ஏழாவது ஒப்பின்மையையும், எட்டாவது அறமுறை யருளையும உணாத்துகினறன ஒனபதாவது மேறசொந்த எணகுணஙகளையும எணணி வணஙகலையும, பத்தாவது அன பால் ஒனறாய் அறிவால் வேறாய், ஆறறலால் உடனாயினறு இனபுறததும் பேறறினையும உணாததுகினறன.

உண்மை அறிவின்பம ஊராணமை மாசினமை
ஒணமைநூல ஒப்பின்மை ஓஙகருள்—வணமைஎண்
பணபுளளித் தாள்வணஙகல் பற்றினாககு வீடுபேறு
உண்டொன்றாய் வேறுடனாய் உன்.

# இலங்கை சுற்றினேன் இன்றமிழ் விருப்பினால்

[செல்வி. C. தேவி M. Sc. நாகர்கோயில்]

(சிலம்பு-உஎ, பரல்-௧0, பக்கம் சுருக்ஷ-ன் தொடர்ச்சி)

இலங்கையில் தமிழ்மக்கள் பெரும்பான்மையாக வதியும் பகுதிகளில் யாழ்ப்பாணமும் ஒன்று. தமிழ் விழா போன்ற பொன்விழாக்கள் யாழ்நகரிலே நடாத்தப்பெற்ற நாட்களும் உள. அண்மையில் சென்னபட்டினத்து நிகழ்ந்த தமிழ் விழா வின்போழ்து இலங்கை அறிஞரில் ஒருவர் என அந்நாட்டினரால் எண்ணப்படும் திரு. அருள்நந்தி ஆற்றிய சொற்பொழிவு இலங்கையரல்லாத என்னனைய தமிழ் மகளிர் புரிந்து விளங்கிக் கொள்ளும் தரத்ததன்று. அன்னார் திருவாய் மலர்ந்த சொற்கள் தமிழ்மொழியினவே எனினும் சில புதுமைசான்ற மாறுதல்கள் கண்டேன். எனது இலங்கைச் செலவு ஓரளவு தமிழின் நயத்தை அறிய வாய்ப்பளித்தது என்றால் அது மிகையன்று. உளப்பாட்டுத் தன்மைப் பன்மை இலங்கையரிடத்துச் சிறிது வேற்றுமை உறுகின்ற தன்மையைத் தென் இந்திய மக்கள் விரைவில் உணர்ந்துவிடுகிறார்கள். பல யாழ்ப்பாண மக்கள் வீற்றிருக்கின்ற ஒரு அவையின்கண் உரையாற்றும் அந்நாட்டு அறிஞர் ஒருவர் 'எங்கள் நாடு—எங்கள் மொழி' என்றே இயம்பு வார். நாம்—நமது—யாங்கள—எங்கள்—எனும் சொற்களின் விதியினை கடல்கடந்த அக்கன்னி நாட்டிடை உணரும் வாய்ப்பு சில இடங்களில் பெற்றதுண்டு.

ஒருநாட் காலை, பொழுது புலர்ந்து சிறிது நேரம் சென்ற பின்றைத் தமிழ் அண்ணல் பொன்னம்பலம் இராமநாதன் அவர் களின் நினைவுக் குறியாகிய, மருதனாமடப் பெண் கலலூரியை நோக்கி விரைந்தோம் இருமருங்கும் பச்சைப்பயிர்கள் செழிப் புற்று வளர்ந்தமை கண்டோம். அவற்றின் பசுமையிற் றோய்ந்து மறந்து நின்றபோழ்து உழைப்பாளி ஒருவன் அவண் வந்து எங்களிடம் சில தமிழிலே பேசினான் (யாழ்ப்பாணத்து "கதைத்தான்" என்றுதான் பெரும்பாலும் மக்கள் வழங்கு கின்றனர் என்னையோவெனில் பேசுதல் ஏசுதல் எனப்பொருள் படுமாம்!) தான் செய்வது கமத் தொழில் என்றான். கமம் என்ற பகுதி உழுது பயிர்த்தொழில் செய்தலைக் குறிக்கிறதாம்.

"கமம் நிறைந் தியலும்." (தொல்.-உரியியல்)

கமம் நிறைவு எனும் பொருள்படுதல் தொல்காப்பியத்தால் அறியலாமெனினும் இலங்கையில் கமத்தொழில் நிறைவளிக்கும்

குறிப்பிட்ட ஒரு தொழிலினுக்கு வழங்கப்படுவதென்னென அறிகிலேன்.

உடல் நலிவுற்ற பெண்ணொருத்தியை அவளது தோழி, "ஏன் இவ்வளவு கேவலமாகிவிட்டாய்" என்றமை கேட்டேன். உடல் மெலிவுற்றமையினையேதான் கேவலமாகக் கருதினுள் எனும் பொருளை முதன்முதல் அறிய இயலாது மருண்டேன்.

"ஐயாவும் அம்மாவும் கிட்டடியில் சென்னை வருவினம்," என்றாள் என்னுடன் தமிழ் உறவுபூண்ட உள்ளக்கமலம் வருவினம் என்ற வினைமுற்று இலக்கண வழக்குப்படி தன்மைப் பன்மையன்றோ? பலர்பாற்படர்க்கை எங்ஙனமாகும் என அறிய என் தொல்காபபிய அறிவு பயனளிக்கவில்லை.

உலகில் எம்மொழிக்கும் அமையாத தனிச் சிறப்பொன்று நம் தமிழினுக்கு உளது. கிழவி—கிளவி எனும் இரு சொற்களும் பெரிதும் வேற்றுமையுடையன. இவ்வேற்றுமையினை யாழ்ப்பாண நாட்டிடைக் காணுமையின் பிறா சொல்லோவியங்களுக்குப் பொருள் அறியாது திகைப்புண்ட நாட்கள் பல.

சென்ற யாண்டு 'நாடோடி' என்ற அறிஞர் நகைச்சுவை நிலவ சில சில ஆனந்தவிகடனில் வரைநதிருந்தார் அவற்றில் உண்மைச் சுவையினை நேரிலே கண்டேன். சான்று பின்னர் காட்டுவேன்.

தமிழ் என்று கூறுவதில் எவ்வளவோ இன்பமிருக்கிறது. அதனாலன்றோ தமிழ் தழீஇய சாயலவர் என்றார் அறிஞர். 'இருந தமிழே உனனால் இருநதேன், இமையோர் விருந்தமிழ்தம் என்றாலும் வேண்டேன்.' என்றதும் எதனால?

" செந்தழலின் சாற்றைப்பிழிந்து செழுஞ்சீதச்
சந்தனமென்று ஆரோ தடவினர் "—பைநதமிழை,
ஆய்கின்ற கோன் நநதி ஆகம் தழுவாமல்
வேகின்ற பாவியேன் மீது

என்றிவ்வாறு தமிழ்வெள்ளம் பரந்து ஓடினால் அம்மொழியில் ஒருண்மை மறைந்திருத்தல வேண்டுமன்றோ? இவற்றைச் செவிமடுத்த உள்ளக் கமலம 'இஃது என்ன முஸ்பாத்தி' என்றாள முசுப்பு - ஆற்றி எனும இரு சொற்களும் முசுபபாற்றி என்றாகி இவ்வண்ணம் பிறபொருள் கொண்டதும் வியப்பாகும்.

இவ்வாறு அருந்ததி அம்மையாரின் நல்லுறவால் தமிழில் சில சொற்களின் பொருட்செறிவைக் கண்டபின், நாவலர்

பெருமான் பெயரால் இலங்கும் தெருவழியாக நடந்து சென்றோம. அங்கு வதிந்த "செல்வி—அருள்நாயகி" அவர்கள் யாழ்ப்பாணதது நிலவும் ஆண்பாற் பெயர்கள் சில கூறினர். தனபாலசிஙகம, குணபாலசிஙகம்; காராளசிங்கம என்பன சில. மறைமலையடிகள், பரிதிமாற்கலைஞன் போன்ற பெயர்கள் அந் நாட்டில் ஏன எ...

மட்டக்களப்பு இலங்கையின் கீழ்பபகுதியில் அமைவது. மயிலவாகனா எனற திரு. விபுலானந்த அடிகள் ஆண்டு வாழ்ந் தனர் என நூல்வழியும நுண்ணறிவினர் வழியும் கேட்டுளேன். மட்டககளப்பில் புளியநதீவு ஒரு பகுதி. தமிழ்க்கலை பொதுளிய நலலாள் ஒருததியின் தோழமைகொண்டு நாட்கள் சில கழித் தோம். புலவர் பெரியதமபிப்பிள்ளை எனப் பெயரிய அறிஞர் அழகான பாக்கள் பல ஆக்கியுள்ளார். நடநது 'செல்வாய் காவேரி, புலவா தொழிவாய் காவேரி' என்ற சிலப்பதிகார ஒலிநயம் நிலவும் "கல் ஓயா"ப் பாடல்கள் அருமை வாய்ந்தவை. பெருமையுடன் அவருககு உரிமை அளிக்கிறார்கள். குருக்கள் மடம் எனும் ஊரில அவரது இல்லம் நிலவுகிறது. அதைக் கண்ணுறறபோழ்து புத்தேரி தேசிகவிநாயகம் பிள்ளையின்

"யாகா பிற பிறக்கு அரோபோ மாது எனவரூஉம் ஆயேழ் சொல்லும அசைநிலைககிளவி" இது தொல்காபபிய இடை இயல். கா எனும இடைசசொல் இக்காலதது வழக்கில் உளதோ எனப் பனுள் வினவினேன. அதற்குரிய விடை மட்டக்களப் பில் அறியலாயினேன். சொற்களோடு-கா-சேர்தது உரையாடும் இவ்வழக்கம் அவவூரில் இன்றும கேட்க வியலும். ஆம், பழந் தமிழ் மறையவில்லை!

"நீர் ஏன் அங்கே போவான்" எனும் சொற்றொடரில் 'போவான' எனும எச்சம் பெயராக மாற வழியுண்டாகின்றது. விபுலானந்தர் தஙகியிருந்த சிறு இலலததில் நுழைந்தேன். யாழ்நூல் என் நினைவில தோன்றிமறைநதது. அங்குச் சிறிய தொரு தடாகம். தாமரை மலர்நதது. தமிழ்மணம் வீசியது.

அடிகளாரின் உறைவிடத்தினுக்குப் பொன்னடிபோற்றி விடை பெற்றோம். காத்தான்குடி, நற்பட்டிமுனை எவ்வளவு அழகிய பெயர்கள்! இலங்கையிலேயே மிகபபெரிய பாலம் கல்லடி உப்பொடை என்ற மட்டககளப்புப் பகுதியில் உள்ளது. அதன்கீழ் நாவாயில் வெண்மதி நிலவிடைச் செல்வோர் கேட் கும் ஒலியைப் "பாடுமமீன்" என்கிறார்கள்.

நாட்கள் மாறி இரு கிழமைகள் தோன்றின. புரியை அடைந்தோம் செந்தமிழச் செல்வியில் புது மெருகுடன் தமிழ்க் கட்டுரைகள் வரையும் என் இலக்கியத்தோழி வதியும் தனிப்பகுதியன்றோ?

அவ்வம்மையார் பதினெட்டு அகவையினள். ஆங்கிலப் பட்டமும் அமையப்பெற்றவள். சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் வெளியிடும் ஒவ்வொன்றையும் அவள் அறையகத்துக் கண்டேன் இலக்கிய, இலக்கண நூற்களை அவ்வாறே பாடம் பண்ணிப் பிறர் துய்க்கும் வண்ணம் உளத்திடை இருத்தும் உயர் தமிழ்செல்விகள் நம்மிடை மிகச்சிலர். சங்க இலக்கியங்களைச் செவ்விதின் ஆய்வதில் பெரும் பேரின்பம் கொண்டவள் அக் கமலச் செல்வி. இலக்கியக் கட்டுரை வரைவதே அவளது பொழுதுபோக்கு. தமிழ்நாட்டுப் பெண்பாலார் யாவரும் ஏன் இங்ஙனம் உழைத்தல் இயலாதவொன்று? மற்றுமோர் தாமரைக் கண்ணியும் நீலாம்பிகையும் தோன்றுநாள் எந்நாளோ? ஊழையும் உப்பக்கம் காணலாகுமெனில் தமிழ் நாட்டில் தனிப்பெரும் தமிழ்வெள்ளம் கரைபுரண்டோடாதோ?

இலங்கையிலே தமிழ் வழங்கும் நெறியினைப்பற்றிய அழகிய நூலொன்றினை வரைந்து வருகிறாள் நூற்றுக்கணக்கான தமிழ்க் கட்டுரைகள் 'தாமரைச் செல்வி - இரத்தினபுரி' என்ற பெயரில் இலங்கை மக்களிடை நிலவியுள்ளமை நன்கு அறிவேன். தமிழ்மொழியை நற்பண்பு பிறழாவகை அவ்வம்மையார் விடுத்த சில சொற்பொழிவுகள் தமிழ்விழாவிலே இடம் பெறற்குரியன.

"கண்டகண் வாங்காள் தொழுமுகிழ்த்த கைவிடாள் மண்டுமன மீட்கும மாறறியாள்" என்ற எண்ணிலே தோற்றியது. என்னை என வினவுவீராகில் தமிழ்ச் சோலையில் தமிழ் மலர் கொய்யும் இவ் இருசடை நல்லாளை ஒருமையிற்கண்ட யான் எழுமையும் பெருமையுடையளல்லளோ? என்பேன்.

'அன்னை நீ உரைத்த தொன்றும் அழிந்திலது ஆதலானே நின்னையே தெய்வமாக் கொண்டு இத்தனை காலம் உய்ந்தேன்' என உரைத்த தையல் சனகியானேன். "தமிழமொழி தளிர்க்கக் கணக்கண்டேன் தோழிநான்" எனப்பாடி வாழும் தையலைப் பிரிய என்னுள்ளம் எழவில்லை.

இலங்கையின் எழில் நலங்களையும், செல்வச் செழுமை அன்று இலக்கியவாயிலாக வரைந்தான் கம்பன். 'கடலினை கணமுதது', 'யானகணட இலஙகை' போன்ற பொன்னூற்கள் இந்நாள் நம்மிடை அரும்பி மலர்ந்தன. இவை

களின் ஆசிரியர்கள் துலங்கும் இலங்கையின் வானளாவிய மரங்களும், பன்னிற மலர்களும் நாட்டிற்கு நற்புகழை அளிக்க வல்லன என்றனர். என்றமை சிலராயினும் நினைவுறுவர். எனவே மலைநாட்டுப் பகுதிகளினுக்குச் செல்ல முற்பட்டோம். கண்டி, நுவரேலியா, பண்டாரவிளை, அப்புத்தளை போன்றவை சில இவைகளுக்குச் செல்லவும், ஆங்கு வதியும், மக்களது தமிழ்நடையினை அறிந்துகொள்ளவும் வாய்ப்பினை வளர்தமிழ்த் தோழிகள் எனக்களித்தனர்.

கண்டிமா நகர் கொழும்பைவிடவும் பன்மடங்கு அழகுடையது பெரும்பான்மையும் தமிழ் தெரிந்த மக்களைக்கண்டேன் அங்கிருந்து வனப்புடைய மலைப்பகுதி தொடங்குகிறது. அடுத்தாற்போல கம்பளை, சிலகல் விரைந்தோம் புஸலாவை என்ற ஊரில் வியக்கத்தகும் செய்தி ஒன்று கண்டேன். வெளியூரினர் தங்கி ஒய்வுபெறும் மனைக்கு 'இரைப்பாறும் இல்லம்' (REST HOUSE) என்று வெளியே எழுதி தொங்கவிடப்பட்டிருக்கிறது. இறை, இளை எனும் சொற்கள் தம்மில் மிக வேற்றுமையுடையன. இளைப்பாறும் இல்லம் என்றுதான் வரைந்திருக்கவேண்டும். ஒருகால் இரை நெருடுகிறார்களோ என அறிய எண்ணியவளாய் உள் நுழைந்தேன். இளைப்பாறும் அல்லது ஒய்வுபெறும் வாய்ப்பினையே அங்கு காணலாகுமன்றி, இரைவலனார் யாரையும் கண்டிலேன் என்னைப்போன்று எத்துணை தமிழ் உள்ளங்களோ அவ்வறிவிப்புப் பலகையினைக் கண்டு சென்றிருக்கலாம்! ஆனால் வழிவிடுவார் யாரோ? ழகரத்தின் சிறப்பு எங்குப்போயது?

அடுத்தாற்போன்று அமையும் சிறந்த பகுதி நுவரஎலிய (Nuwara Eliya) பெரும்பான்மையும் தேயிலைத் தோட்டங்களாலும், தாளாண்மைத் தமிழர்களாலும் நிறையப்பெற்றது. "தேயிலைத் தோட்டத்திலே...... ....'' என்ற தமிழ்ப்பாடல் என் நினைவிடை நின்று மறைந்தது. நாற்புறமும் சுற்றினேன். பத்துப்பாட்டின் குறிஞ்சிக்கவியின் மலர்வகைகள் ஆங்கு எங்கணும் பொங்கும் எழிலுடன், நற்றேன் நல்கும் நலவிருந்தாயின. எனவே நுவரஎலியாவை மலர்வனம் எனறே அழைக்கலாம். இருநாள் வாழ்வில் இரு தமிழ்அறிஞர்களை அறியும் வாய்ப்புப் பெற்றோம் தேயிலைச் செடிகளிடை செல்வவாழ்வு நடாத்தும் அம்மக்களிடத்தும் "தமிழ்த்தென்றல்'' வீசும் என்று என்னால் முதலில் எண்ண இயலவில்லை. "தமிழ் முதுமொழி அநாதி'' எனில் வெளிநாட்டிற் சில பகுதிகளிலும் இயற்கையில் இலங்கினால் வியப்பென்னை?

ஆம் திருமதி கே மாரியம்மாவும், அவர்களுடன் தமிழ்த் தென்றல் வீசியவள் செல்வி விசாலாட்சி அம்மையாரும தமிழ் இலக்கிய இலக்கண உலகில் உறவுகொண்டுவாழும் வளளலார் என்றழைக்க விழைகிறேன அவ்விருவரும் தங்கள் ஊர்தியில் வெளிநாட்டுத் தமிழ்மகளிரை ஒரு சடை நல்லாளினைப்பற்றிய வரலாறு வழஙகும் இடத்தினுக்குக கூட்டிச் சென்றனர். சீதா எலிய (Sita Eliya) என்பது வழங்கும பெயர்.

வழிபபாதையின் அருகே சிறிய கோவில், அழகிய சிற்ருறு சுற்றிச் செல்கிறது. உள்ளே சென்ருேம. நான்கு சிலைகள். "சொல்லின் செல்வன் அநுமன் - விதியினையும் விலகக விழைநத இளையாத இலக்குவன் - விலலின் செல்வன் இராகவன் - தவஞ் செய்த தவமாம் தையல் சீதை" எனும இலகக்ய உருவங்கள் கற்சிலைகளாகக் காடசியளிததனர் சிறையிருநத செல்வி சீதை யால் பெயாபெற்றதோ? இவவிடம் எனும சொற்கள் தன் செவிபுகாமுன் அனனுய்! நீ தமிழ் விருப்பினை அன்ருே? இது-பார்! சீதா ஒளிய - என்ற சொல - சீதையின் பெருமையால் ஒளிபெற்றதெனபபடும - இசசொல் நாளடைவில மருவுதல் பெறற சீதாஎலிய என்ருயிற்று! என்னே காலத்தின் செலவு!! இதற்குச் சான்றும உளது. எலிய எனும் சிஙகளச் சொல்லும் ஒளிய என்ற சொல்லிலிருந்துதான் தோன்றியதாகவேண்டும். என்னையோவெனில எலிய எனும சிங்களச சொல் ஒளி என்றே பொருளபடும என்க, என்றிவவாறு என்னுளத்தினுககு ஒளி நல்கிய அபபெண்மணிகள் இருவரையும் வாழததினேன், வணங்

## வேள்வி

காவிடை மரஙகள் தளிரும், முறியும், அருமபும், மலரும, பிஞ்சும், வடுவும, காயும், கனியும, கனிகிழி மதுவும் நனிமிக நல்கி நாளில மக்களை நயப்புறுததுவன காணபின், அவை நல்லறமபுரியத் தூண்டும தொல்லாசிரியர்வழித் தொணடியற் றும தொணடரெனத தோன்றும. மேலும சிவவேள்வி வேட்கத் தூண்டும சிறப்பினராகவும் சிறக்கும். இவ்வுணமை:

"பரந்தவிளை வயற்செய்ய பஙகயமாம் பொஙகெரியில்
வரமபிலவளா தேமாவின் கனிகிழிந்த மதுநறுநெய்
நிரந்தரமநீள் இலைக்கடையால் ஒழுகுதலால் நெடிதவ்வூர்
மரங்களும ஆகுதிவேட்கும் தகைஎன மணந்துளதால்"

— திருஞான-எ.

—இனியன்.

# தோழியின் துப்பு

[கவிஞர் பாவண்ணா, திருவந்திபுரம்]

**தோழி :**

கண்போல் வாய்த்தஎன் கனித்தமிழ்த் தோழி, நீ
முன்போல், வரவர, அன்போ(டு) எனபால்
பழகுவ(து) இலை, ஏன்? அழகு காமாட்சி!

வழக்கம் போலவே வாழ்கிறேன், மற்று
நீயுரைப் பதற்கு நேர்ந்த காரணம் என்?.......
நேயமிக் குடைய என் தோழி நிகழ்த்துவாய?

**தோழி :**

உடுத்த சேலையை அவிழ்த்(து) ஆடையின்றி[1]
அடுத்து நின்றிடல்போல், அழகு காமாட்சி
சோலையில் நேற்(று) எனைத் துரத்திவிட்டு, நீ
மாலையில் நின்றதும் மனமார்ந்த நேயமா?.......

எனக்கு உற்றதுணை ஒன்றினை எண்ணியே
மனமொத்த தோழி, உனையான் அனுப்பினேன்!
நான் சொன்னவாறே நீசெய்து முடித்தாய்
இதிலென்ன குற்றம்? எனை ஏன் தவறாய்
மதிக்கிறாய்?

........அவ்வாறு மதிப்பது நானல்ல
நீதான், இன்றேல் நெஞ்சொத்த என்னை நின்
காதலில் கலந்(து) உத வாதவா(று) ஒழிப்பையோ?

என்னடி, ஒரு புதிர் போடுகின்றாய் நீ?
என்னிடம் காதலா? உன்னையும் ஒளித்தா?
மருண்டவன் கண்ணுக்கு இருண்டதும் பேய்தான்?
ஒருகால் உன்மனம் காதல் உற்றுளதோ? [நகைக்கிறாள்.]

**தோழி :**

கள்ள நெஞ்சமே துள்ளும்; அஞ்சுதல்
கொள்ளும, எல்லாம் உள்ளவா(று) அறிந்தேன்!
கண்டு கொண்டேனடி, கொண்டவுன் காதல்

1. அம்மணம்

**தலைவி :**

...........முற்றும் உளவறிந்தவள் போல்
வளவள என்று நீ உளறுதல் வேண்டா?
என்னடி கண்டாய், என்னிடம் காதல்?
கற்பனைக் காதற் கதைநீ புனைகிறாய்?
அற்ப நீர்க்குமிழிபோல அதுபொய் யாமடீ?

''

எது பொய்யாகும்? யான் சொல்வதா பொய்?
மாமரச் சோலையில மாதுளம நடுங்கிக்
காமுற நிறகும "காட்சி"யும பொய்? நறு—
மணகமைக குட்டையும வணமலர்ப பட்டையும்
ரிப்பனும், புரோசசும நீ பெற்றதும பொய்? ஆம்
இவையெலாம பொய்யேல், இனி, நீயும், நானும
புவியும பிறவும் பொய்தான்! தோழி,
இவை எலாம் மறுக்க இயலா(து) உன்னால்;
அன்றியும, மதிமிகும நின்மனம் வதியும் உன்காதலன்
பேருமூ ஊரும், நீ தினந்தோறும—
சேருமூ இடமும் தெளிவாய அறிவேன்!
'தலை மறைநதிடின் பின்நிலை பிறர் அறியார்'
என நினைந் திடும்தீப பறவையின மனமபோல்
உன்மனம் நினைக்கும்; எனினும் நான் நின்மனம்
தனில வாழ்வதையது நினைத்திலது; அநதோ!

**தலைவி :**

ஏனடி, புளுகிநீ வீணில் கதைக்கிறாய்?
துப்பறிந் தவளபோல் செப்பிவிட் டாயே!
கூறடி பார்க்கலாம் பேரையும் ஊரையும்?

**தோழி :**

சொல்கிறேன் பிறகு எனைத் துணைசெய வேண்டிக்
கொல்வாயே என அஞ்சுவேன்!

**தலைவி :**

...........................................வெல்வாய்த்
தோழி! புரட்டினால் விளைவது பாழே!
வீணுரை வேண்டாம்; வாடி, போகலாம்!

[போகத் தலைப்படுகிறாள்.]

**தோழி :**

ஏன்? அதோ! ஏகாம்பரன் வருகிறான்; பார்!
நானிதோ போகிறேன்; நீ யிங்கே இரு!

[தலைவி காமாட்சி அஞ்சியவாறு அத்திசை நோக்கி ஒருவரு மில்லாமை கணடு தேறுகிறாள்; தோழியைக் கோபிக் கிறாள்; தோழி நகைக்கிறாள்.]

தலைவி :

ஏனடி என்னை ஏமாற்றி நகைக்கிறாய்?

சும்மா சொன்னால், இம்மா திரிதான்,
காதல கீதல் ஒன்று மில்லாதநீ
நடுங்குவதா'மமா' நெடுநாளா பழகிய
எனைநீ ஏய்த்திட முனைநததும் முறையா?
இப்போ தெலாமநீ செப்பா விடினுமமெய்க்
காதலில சிககிய சேதி மெய்தானே?
காதலன் ஏகாம்பரந தான் அலலவா?

தலைவி :

நெஞ்சை ஒளித்தொரு வஞசகம் உளதோ?
நீதான் உண்மையை ஓதிவிட் டாயே!
அதுசரி, நீ யிதை அறிநத தெவவிதம சொல்?
துபபறியுந திறம எப்பொழு தறிநதாய்?

தோழி :

அது மட்டுமன்று; உன் மதிமிகு காதலன்
படிமிசை வாழும ஊர் கஞசிககுடியே?
மாமரச் சோலையிம மாதுளம பறிததான்?
தேமலா சூட்டிக காமாட்சி செயதான்?
அல்லவா? மேலும சொல்லவா?

வி :

(மேலும் வெட்கப்பட்டு) ..........போதும்;
யாவும மெய்யே, என்னுயிாத தோழி!
யாவுமே நீ எவவாறோ அறிநதுளாய்!
மேலுமஉன் துணையினிச சாலவும் வேண்டுவேன்!
ஒப்புக் கொளகிறேன்; செப்படி தோழி நீ
துப்பறிந்த வழி எபபடி என்றே!

துப்பறிந்த முறை செப்புகின்றேன் கேள்!
"எபபோதும் விழிப்பாயிருப்பதுவும்,
மிகச்சிறு செயலையும தவபபெருஞ் செயல்போல்
கூர்ந்துணர்வதும், தோநதைக் கொண்டுபின்
தேராதவற்றை ஒருவாறாய்க் கற்பனை
செய்வதும, துணிநதுபோய் உய்வழி இல்லாத
இடத்தும் ஆராய்வதும், எதனையும் உடனே
முடிவு செய்யாமையும, எதிரியின் நிலைமையில்

நாம் இருந்தால் நாம் எவ்வழி நடப்போம்
என்று நன்கெண்ணி, எண்ணிய வழிசென்(று)
எதிரியின் உளவினை அறிவதும, இடமபொருள்
ஏவலுக கேறப ஆவலாய் நடிபபதும,
பிறவுமே துப்பறி வ,நறகுச சிறநதநற்
பண்புக ளாகும" என்பேன்; தோழி!
இவவழியாய்நது நீ செல்வழி யறிநதேன்!
அன்பால வரினுமயான், முன்போ லன்றிநீ
என் துணை வேண்டிலை, தனிமையே வேண்டினை!
நின துணைவன வருமதிசை நோக்கி நின்றனை
"காலை அரும்பாயப பகல எலலாம போதாய்
மாலைமலரும இநநோய்" கொண் டமையால
பகலையும காலையும் பழிததுநீ மாலையில
நகைமலர்சூடி நன்குகுளித(து) அணிபெறப்
பலகணி திறந(து)உன இருகணால எதையோ
கால அசந்திடும வரை காதலோடு நோககினுய்!
மேலும, பாலும, உணவும, பாட்டும் ஆட்டும
சாலவும முன்போலதான விருமபிலை நீ;
பகலில தூங்குவை; இரவினில் ஏஙகுவை!
அடிக்கடி வெளிக்குச செல்லுவை, ஆஙகே
வெறறிடம நோக்கி விழிநீர் சொரிகுவை!
நிலாவையும நாயையும் சிலபொழுது பழிப்பாய்!
திருமணப் பேசசுயாம் குறிப்பினும் சினவாது
மனமிக ஏஙகுவாய்! மௌனம புரிவாய்!
கனவு கண்(டு) எழுந்துதன் கைப்பொருள் இழந்துபின்
தேடுவாரபோல எதையோ தேடுவாய்!
கனவினைக் கெடுத்த காக்கையைச் சாடுவாய்!
பாட நீ ஒருகால் நாடியாழ் எடுப்பின்
'எப்போ வருவாரோ' எனும் பாட்டையே
தப்பாது பாடுவாய் தனியிறுக்க முடன்!
காமனை, வேளை, சோமனைத் தொழுநீ
கன்னிப் பெண்களைப போலநீ எண்ணிலை;
பருமரம் பின்னிப் படர் கொடிகண்டுநீ
பொருமிப் பொருமை கொண்(டு)ஏங்குவாய்; தனிமையில்
புறங்கையில் அடிக்கடிப புதுப்புது முத்தமிட்(டு)
உறுங்களிப் பினிலமகிழ்ந(து) உனையே மறப்பாய்!
கள்ளரும் நடுங்கும நள்ளிராப் பொழுதே
உள்ளமோ(டு) இனிதுநீ உவநது வரவேற்பதும்,
விளக்கேற்றும் போதெலாம் கலகலென்(று) ஒலிக்கும்
கதவுமுனைக்(கு) எல்லாம் கைநிரம்ப எண்ணெய்

உதவி அதன் ஒலிபனைப் பதமாய்க் குறைப்பதும்
காலணி ஒலித்தால் கலாம் பிறக்கும் என
மாலையில அவற்றைநீ கழற்றுவதும், உன்
காதலுண்மையைக் காட்டப போதிய
ஆதரவாகும், அன்றியும, மாதே!
கள்ளம் பயிலும் நின் கருவிழி யிரண்டும்!
உளளம் பயில்வதை உரைக்கும் நின்திருமுகம!
திருமார்பு இரண்டும் திரண்(டு) இரு கரமபடல்
உரைக்கும! வெளுத்த உன்உதடும உன்உணாச்சியை
மறைககுமோ ஏதிலார் போலநீ மன்றிடைப்
பொதுநோககு நோக்கும புதுநோக்கும காதலை?
தலையா? பூவா? எனநீ பாாபபதும்—
நிலையறிநதிடச்சுழி நெடுகவும் கிழிப்பதும்,—
நின்னிலைக(கு) இரங்கியாம் குறிகேட்கச் செலின்,
“என்னிது வீண்செயல?” எனறெமை யிடிபபதும,—
உள்ளத(து) உளளதை விளள முடியாமல் நீ
மெளள நாணுவதும,—கள்ளமில காதலர்
இணைந்(து) உளபடஙகளைக் காணின எதனையோ
நினைநது பெருமூசசு விடுவதும்,—நெடுநாள்
பழகக மில்லாமலே படிக்குமுன் வெற்றிலை
சிவக்கப்போடடப பழகி வருவதும் உன்
காதலுண் மைக்குப் போதிய சான்றும்!
இவவழி உன்மனக காதலைச் செவவையாய்
அறிநதபின், உன்னுயிர்க் காதலன் யாரென
அறிந்திடும் ‘நோக்கமொடு அணுகினேன் உன்பால்’
மேலும் என்போன்றோர் இடையுறின் வெகுண்டு
‘கஞ்சிக்குடிக்க ஏகு!’ எனப் பலமுறை
அஞ்சயாம் கழறுவாய்; அதனல், கஞ்சிக்
குடியே அவனூர் ஆம எனக் கொண்டேன்!
முற்றத் துறந்த பட்டினத் தடிகளின்
நற்றமிழ் நூலில் ஏகமப மாலையை
ஓய்ந்த போதெல்லாம் ஆய்ந்துநீ வருதலின்
அவன் பெயர் ஏகாமபரன் என அறிநதேன்!
தவறின்றியும பெயர் பொருத்தமும, உங்கள
உளப் பொருத்தமும் தெளிந்து மிக மகிழ்ந்தேன்!
ஒருநாள் மாலை, ஒளித்தவா றன்னை
தருவினேன் துப்பு துலக்கிட; நீயும் உன்
மார்பிடை ஒளித்துவைத் திருந்ததோர் மலரை
ஆர்வமாய்—அதுதான் வாடிக கிடப்பினும்—
முத்தமிட்டிருவிழி ஒத்திக் கொண்டாய்!

பலநாளா-ஒரேகைக் குட்டையால்
மலர்முகம் துடைக்கிறாய், அவையவன் மகிழ்ந்துனைப்
புணர்ந்த போதளித்த பரிசில் என்றுணர்ந்தேன்!
பின் ஒருநாளில் நன்னாநம் தெருவழி
எதிர் பார்த்தபடி இனி(து) அவன்வரும் வழி
கதிர்ஒளி நிலாமுகக காதலர்சசேர, நீ
விடுத்தாய் கவர்பொருள கடிதம் ஒன்(று) அதன்படி
“மாமரச் சோலையில் மாதுளம் நடுங்கிக்
காமுற நிற்கும்; கண்டுகொள மகிழச்சி!”
என்றாபோல எய்திநான் நோக்கினேன்!
அன்றுதான் உஙகளின் ஒன்றிய மனத்தை
நன்றுநான் அறிந்தேன், அதுதான் அன்றியும்
என்துணையின்றி நீ என்றனை ஏய்த்த வா(று)
எத்தனை நாளைக்(கு) இன்பங் கொள்ளுவாய்
இத்தனை நாள்வரை என்னிடம கூறா(து)
இருநததற்(கு) என்ன காரணம் இயமபுவாய்!
இரு, இரு; எல்லாம் அருமையாய் வளர்த்த நம
பெற்றோர்க்(கு) உரைத்து வருகிறேன்!
[போவதுபோல நடிக்கிறாள்.]

தலைவி :

..........................................தோழி,
கற்றோர் விரும்பாச் செயலிது! மற்றும்
தோழிநீதானே என்னுயிர்த் தோழி?
ஆகபபயின்றும் நான்நோகச் செயவதா?
வேண்டாம்; பெற்றோர் அறிதல் வேண்டாம்!
ஈண்டினிக் காதலில் மாண்தமிழ்க் களவுநல்
இனபங் கண்டுநம துன்பம் கெடுக்க
உள(வு) எலாம் அறிந்து நீ உதவுக தோழி!

தோழி :

களவறிந்தவளே கற்பையும் அறிவாள்!
உளமபோல் உனக்கினி உதவுவேன், அஞ்சேல்

ி :

தோழிநீ யறிந்த துப்பினை மெச்சினேன்!
வாழி நீ பற்பல ஊழிகள் நலமே!

---

வேற்றுப்புல மன்னர் வருகையின் பின்னர்
ஆற்று தொழிந்தனர் அருங்கள வியலே

—இனியன்

# தென்னிந்திய தமிழ்ச் சங்கம், திருநெல்வேலி

# புலவர் மாணவர் தேர்வு

இச்சங்கத்தாதரவில் 1953 மாசித் திங்களில், நம் மாகாணத்திலுள்ள தமிழ்ப் புலவர் கல்லூரிகளில் நடைபெற்ற 'புலவர் மாணவர் தேர்வில்' வித்துவான் புகுமுகம், வித்துவான் முதனிலை இவற்றில் பரிசு பெற்றிருப்பவர்கள் பெயர்வகையும் தேர்ச்சியுற்றவர்களின் பதிவெண்களும் மட்டும் குறிக்கப்பட்டுச் சூன் செல்வியில் வெளியிடப்பெற்றன.

இப்பொழுது, வித்துவான் இறுதிநிலைத் தேர்வில் தேர்ச்சியுற்றிருப்பவர்கள், பரிசுபெறுபவர்களின் விளக்கம் தரப்படுகின்றது. இத்தேர்வுக்கு விண்ணப்பித்தவர் 28 எழுதியவர் 27. தேர்ச்சியுற்றவர் 16. தவறியவர் 11. எழுதாதவர் 1.

## முதற்றகுதியில் தேர்ந்து பரிசு பெறுபவர்கள்

1. தருமபுரம், கீழ்த்திசைப் பல்கலைக் கல்லூரி மாணவர்
   பதிவெண் 64. செ. சிங்காரவேலன் — **முதற் பரிசு ரூ. 50**
2. கரந்தைப் புலவர் கல்லூரி மாணவர்
   பதிவெண் 55. சோ. வேங்கடாசலபதி — **இரண்டாம் பரிசு ரூ. 40**
3. திருப்பனந்தாள், K. V. S. S கல்லூரி மாணவர்
   பதிவெண் 49. கு. செல்லையா — **மூன்றாம் பரிசு ரூ. 30**

## முதற்றகுதியில் தேர்ந்தவர்கள்

| | | | |
|---|---|---|---|
| பதிவெண்: | 38. | பெ. கு. ஊரப்பன் | திருப்பதி |
| ,, | 40. | இராம. மாயாண்டி | ,, |
| ,, | 50. | மா. திருநாவுக்கரசு | திருப்பனந்தாள் |
| ,, | 52. | ப. இராகவன் | கரந்தை |
| ,, | 53. | இராம. மாறப்பன் | ,, |
| ,, | 54. | பெ. சு. மகாதேவன் | ,, |

## இரண்டாந் தகுதியில் தேர்ந்தவர்கள்

| | | | |
|---|---|---|---|
| பதிவெண்: | 43. | த. மாணிக்கம் | திருவையாறு |
| ,, | 51. | ச. சுப்பிரமணியன் | திருப்பனந்தாள் |
| ,, | 56. | சுத்தமல்லி. கோ. நடேசன் | கரந்தை |

## மூன்றாந் தகுதியில் தேர்ந்தவர்கள்

| | | | |
|---|---|---|---|
| பதிவெண்· | 41 | ஆ. தே. ஆறுமுகம் | திருப்பதி |
| ,, | 42. | ச. முத்துக்குமாரசாமி | திருவையாறு |
| ,, | 59. | பூ. பரசுராமன் | மயிலம் |
| ,, | 62. | சுப. இலக்குமணன் | மேலைச்சிவபுரி |

**தவறியவர்கள்:** பதிவெண். 37, 39, 44, 45, 46, 47, 48, 57, 58, 60, 62..

**எழுதாதவர்:** 61.

நெல்லை
15-6-1953

பு. சி. புன்னைவனநாதன்
புலவர்குழுத் தலைவர்.

# செய்திகளும் குறிப்புக்களும்

## முத்தையா முதலியார் மறைவு

*அமைச்சு*

தென்தமிழ்நாட்டு வன்திறல் அமைச்சருள் தலைசிறந்த ஒருவர் திரு. முத்தைய முதலியாரவர்கள். 1928-ஆம் ஆண்டில் சென்னை மாநில அமைச்சராக நன்னயம்பெற நற்றொண்டாற்றிய நல்லார். உறுதி கூறி உலகினுக்கு நலம்பயப்பிப்பதே உழையிருந்து விழைவனபுரியும் அமைச்சர்கடன் என்னும் அருந்தமிழகப் பண்பாட்டினை உரனொடும் ஆற்றி மெய்ப்பித்த திறலாளர் தமிழகத் தனித்தொகுதி காத்து எல்லார்க்கும் இனிமைசெய்த தகைமையர். உலகுடன்பெறினும் பழியொடு படராப் பாங்கினர்.

*உறுப்பு*

1933-இல் சென்னை அரசியலவை உறுப்பினராகவும் அமர்ந்து தொண்டாற்றியுள்ளார். நாடும் மொழியும் நன்னெறியும் பீடுற வேண்டுமாயின் அடிப்படைக்கல்லூரி முதல் முடிவுக் கல்லூரிவரை நாட்டகத்துப் பல தோன்றவேண்டும் என்னும் உண்மையைச் சுருக்கமும் விளக்கமும் அமைய எடுத்துக்கூறிப் பல கல்விநிலையங்கள் ஆண்டாண்டுதோன்றி அழகுற இன்றுகாறும் நின்று நிலவி நடந்துவருதற்குக் காரணமாக உள்ளவர்.

*தொண்டு*

தனித்தமிழ் வளர்ச்சியே இனிதெனத் தம்முயிரினும் மேலாகக்கொண்டு ஓம்பித் தமிழ்பேணிய தண்ணளிவாய்ந்த தலைவர். பெருந்தன்மையும், பேராண்மையும், பேரா ஒழுக்கமும் பிறவும் உடைய பெரியார்.

*மறைவு*

30—6—53-இல் தஞ்சை மாவட்டத்துத் தம் சிற்றூர்க்கண் பேரா இயற்கை எய்திப் பெம்மான் அடி உற்றனர். அடியுற்றகாலத்து அகவை எழுபத்து மூன்று.

அவர்தம் ஈடுசெய்ய ஒண்ணா மறைவினைக் குறித்து 6—7—53-இல் உயர்நீதி மன்றத்துக் கையறுநிலைத் தீர்மானம் அட்வகேட் செனரல் V. K. திருவேங்கடாச்சாரியார் அவர்களால் கொணடுவரப்பட்டு உடன்பாட்டொருமனத்தோடு நிறைவேற்றப்பெற்றது.

அவர்தம் ஆருயிர் அடியிணைக்கீழ் அமர்ந்து என்றும் இன்புறுமாக. அவர்தம் சால்புநிறை குடும்பத்துள்ளார் அனைவர்கட்கும் நம் பரிவு உரித்து ஆகுக. ஆறுதல உறுவார்களாக. வாழ்க நற்றமிழ்.

இமயமலை உச்சியைக் கண்ட இந்தியப் பெருவீரர் :

இந்தியாவின் வடவெல்லையாகத் திகழும் இமயமலையின்கண் உள்ள பல உச்சிகளில் எவரெஸ்ட் உச்சியே தரை மட்டத்தைவிட மிகமிக உயர்ந்தது என்பது ஆராய்ச்சியாளர் கண்ட முடிவு. இவ்வுச்சி ஏறக்குறைய 30,000 அடிக்கும் மேற்பட்டது என்றும் சிலர் கருதலாயினர். சில பல நூற்றாண்டுகளாக இதன் உச்சியைக் காண விழைந்து மேல்நாட்டவரும், நம் நாட்டவரும் காண முடியாது வறிதே இறங்கியவர் பலர். சிலர் மீண்டும் வாராமல் மறைந்தும் விட்டனர் எனினும் உயிரை ஒரு பொருட்டாக மதிக்காமல் இந்திய நாட்டில் கடந்த முப்பதாண்டுகளாகத் தம் வாழ்க்கையை நடத்திவந்த நேப்பாள நாட்டினரான திருவாளர் தேன் சிங் என்பார் இம் முயற்சியில் இறங்கி வெற்றிகண்டார். இவருக்குத் துணையாக ஹிலேரி, ஹன்ட் என்னும் மேல்நாட்டினருட்பட சிலரும் சென்றனர். இவர்தம் பெருவெற்றியைப் பாராட்டி ஆயிரக்கணக்கில் பணம் திரட்டிக் கொடுத்தும், வாழ்த்துக்கள் அனுப்பியும் இந்தியத் தலைவர்கள் பலர் உட்படப் பெரும்பாலோர் மரியாதை செலுத்தினர். தற்போது தேன் சிங் தம் மனைவியுடனும், இரு பெண்களுடனும் இங்கிலாந்திற்குச் சென்றுள்ளார்கள்.

சாந்தலிங்க அடிகளார் தமிழ்க் கல்லூரிக் கழகம்

கோவையின் மேற்பகுதியிலுள்ள திருப்பேரூரின்கண் இத் தமிழ்க் கல்லூரிக் கழகம் நிறுவப்பெற்றுள்ளது. திருவாளர் C. S. இரத்தின சபாபதி முதலியார், V. C. சுப்பையா கவுண்டர் அவர்களைத் தலைவர்களாகவும், திருவாளர் C. M. இராமச்சந்திரன் செட்டியார் அவர்களைச் செயலாளராகவும் கொண்டு இக் கல்லூரி நடைபெறுகிறது. பல்கலைக் கழகத்துடன் இக் கல்லூரியை இணைக்கப் பெரிதும் முயன்று வருகின்றனர். இதற்கு முதற்பொருளாக ஒரு நூறாயிரம் கட்டவேண்டியிருப்பதால், தமிழ்ப் பேரறிஞர்கள் பொருளாகவும், நிலமாகவும் நன்கொடை யளிக்கக் கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

திருவள்ளுவர் தமிழ்க் கல்லூரி, சென்னை.

உயர்திரு. மயிலை சிவ. முத்து அவர்களைத் தலைமைப் பேராசிரியராகக் கொண்டு இக்கல்லூரி, இவ்வாண்டு ஜூலைத் திங்கள் 15-ம் நாள் திறக்கப்படுகிறது. நாள்தோறும் மாலை 6-30 மணியிலிருந்து 8 மணி வரை (சனி ஞாயிறு நீங்கலாக) 135, அணைப்பிள்ளைத் தெருவிலுள்ள பிரம்ம சமாஜ பள்ளியில் நடைபெறும். இக்கல்லூரியில் வித்துவான் புகுமுகம், வித்துவான் இடைநிலை, வித்துவான் முடிவுநிலை ஆகிய வகுப்புகள் துவக்கப்படும். ஒவ்வொரு புதன் மாலை 6-30 மணிக்குப் புறநானூற்றுச் சொற்பொழிவு நடைபெறும். தமிழ் பயில விரும்புவோர் அனைவரும் வந்து கலந்துகொள்ளலாம். இக்கல்லூரியில் சேர்ந்து வித்துவான் தேர்வுக்

குப் பயில விரும்பும் அன்பர் அமைச்சா, திருவள்ளுவர் கல்லூரி, 27. கொண்டலேயர் தெரு, சென்னை - 1. என்ற முகவரிக்கு விண்ணப்பிக்கக் கேட்டுக்கொள்ளப்படுகிருர்கள்.

## திருக்குறள் மாநாடு

தமிழ்மறைக் கழகத்தின் முதல் திருக்குறள் மாநாடு திருகோண மலையில் திருவள்ளுவர் கழக ஆதரவில் 23—5—53 முதல் தொடர்ந்து மூன்று நாட்கள் மிகச் சிறப்பாக நடைபெற்றது கலாநிதி வ. பொன்னையா அவர்கள் மாநாட்டைத் தொடக்கிவைததாா பண்டித கா. பொ இரத்தினம் அவர்கள் தலைமைவகித்தார் திருவாளர்கள் அ. ச. ஞானசமபந்தன், ம. பொ சிவஞானகிராமணியார், முதலிய பல அறிஞர் கள் சொற்பொழிவாற்றினுர்கள். ஊர்வலம், கலைக்காட்சி, இசை விருந்து, நாடக அரஙகு முதலியன மாநாட்டுக்குச் சிறப்பளிததன.

## டி. ஆர் வி. சாஸ்திரியார் மறைவு

புகழ் மிக்க வழக்கறிஞரும, சட்டவல்லுநருமான திருவாளர் டி. ஆர். வெஙகடராம சாஸ்திரியாா அவர்கள் ஜுலைத் திஙகள் 2-ம் நாள் பிற்பகல் 1-45 மணிக்கு இயற்கை எய்தினுர். இவர் 6—2—1874-ல் பிறந்தார். வழக்கறிஞராகிப் பெருநிதியம் திரட்டினுர். அரசியல் அலுவல்களில் ஈடுபட்டாா. இந்தி கட்டாய பாடமாக வரப்படாதெனை எதிர்த்து வெற்றிகணட பெரியாருள் ஒருவர். இவா மிதவாதக் கட்சியைச் சார்ந்தவர். முதலமைசசா ராசகோபாலாசசாரியார் உட்பட பலரும் இவர் மறைவுக்கு வருத்தம் தெரிவிததுள்ளனர்.

## திருவள்ளுவர் திருநாள்

பாணடிசசேரி எனவழஙகும் புதுவைமாநகர்க்கண் 23—5—53-ல் 'மககள கான சபா' நிலையத்து உலகப் பொதுமறை தந்தருளிய திரு வள்ளுவ நாயஞர் திருநாள் மிகவும் சிறப்பாகக் கொணடாடப்பட்டது. தக்க மக்கள் பலாக்கு மிகக உவகையோடு சோறளிக்கப்பட்டது அன் பர்கள் இல்லஙகள்தோறும அழகுறுத்தி அருமறையாம திருக்குறள் அகமும் புறமும் வனப்புற எழுதிக குடும்ப வழிபாடாகத் திருக்குறள் பொதுமறை உருக்கமுடன் ஓதப்பெற்றது.

சபா நிலயத்தின்கண பேரவை கூட்டப்பெற்றது. அப்பேரவைக் குக் கோயமபுததூர் அரசினர் கல்லூரித தமிழ்ப் பேராசிரியர் திரு. மு. இராசாக்கணணஞர் தலைமை பூண்டாாகள். பண்டித திருமுருகஞர் சொற்பொழிவாற்றினுர்கள் வாழ்த்தும நன்றியும் வழஙக இனிது நிறை வுற்றது.

# மதிப்புரை

**கொங்கு நாடும் சமணமும்**

[**ஆசிரியர்:** *கோவை கிழார், திரு. சி. எம். இராமச்சந்திரஞ் செட்டியார் அவர்கள்*; **வெளியிட்டோர்:** *கோவை நிலையப் பதிப்பகம் லிமிட்., கோவை*]

இந்நூல் கோவைகிழார் திரு. சி. எம். இராமச்சந்திரஞ் செட்டியார் அவர்களால் இயற்றப்பட்டது. எளிய இனிய நடை வாய்ந்தது. எட்டு அதிகாரங்களும் பின்னுரையும் கொண்டது. பல அழகிய வண்ணப் படங்கள் கொண்டது. சிறப்பாகச் சமணநெறியினர்க்கும் பொதுவாகத் தமிழக மாந்தர்க்கும் கொங்குநாட்டு வரலாறும், சமணநெறியின் வரவும், அது பல்கிப் பரவி செழிப்புற்று ஓங்கிப் பல் புலவர்களை ஆக்கி இலக்கண இலக்கிய வரலாற்று நூல்களுடன் சமயக்கொள்கைகளை உலகியல் வழக்கிலும் புலனெறி வழக்கிலும் நிலவச்செய்த முறைமையும், சமண ஆசிரியச்சான்றோர் நூலாசிரியராகமட்டுமின்றி உரையாசிரியராகவும் போதகாசிரியராகவும் இருந்து இயற்றிய அளப்பருந்தொண்டுகளும் விளக்கமுற அறிவிக்கும் விழுமிய நூலாகும்.

தமிழகமுற்றிலும் இருந்த இருக்கின்ற சமணப்பள்ளி, பாழி, சங்கங்கள் முதலியவற்றின் வரலாறுகளும், ஆங்காங்கே சமணமுனிவர்கள் இருந்து நோற்ற குகைகளும், படுக்கைகளும், ஆண்டாண்டுக் காணப்படும் கல்வெட்டுக்களும், முடிமன்னர் குறுநிலமன்னர் பெருங்கொடை வள்ளல், புரவலர் பொதுமக்கள் முதலாயினோர் நல்கிய சமண்கோயிற் கொடை வளங்களும், தீர்த்தங்கரர் திருவுருவங்களும், கோவிலமைப்பும் திருவிழா வழிபாடு முதலியவைகளும், சமண் சமயக்கொள்கை விளக்கமும் தெளிவாக ஆசிரியரவர்களால் எடுத்தாளப்பட்டுள்ளன சமண கோவில்களைப் பேணி நன்றிகாட்டுங் கடமையை மேற்கொள்ளவேண்டும் என்பது போற்றத்தக்கதே. ஆசிரியர் நடுநிலைவழாது சைவ வைணவப் புலவர்கள் எண்ணிக்கையில் மிக்கிருந்து கோவில்களைப் பெருக்கியதைப்போல் தமிழிலக்கியங்களைச் சமண புலவர்களைப்போல் பெருக்கவில்லை என்பது வரவேற்கத்தக்கது

இந்நூல் கொங்குநாட்டு வரலாறு, சமண்நெறி வரலாறு, சமண் இலக்கிய வரலாறு, புலவர் வரலாறு, புரவலர் வரலாறு, சமண நூல்களின் பல்சுவை மேற்கோள்கள் விளக்குகின்றமையால், இதனை மாணவரும் ஆசிரியரும், பெருமக்களும் வாங்கிக் கற்று வாய்மைகண்டின்புறுவாராக. இது சமண் சமயப் புரவலர் ஒருவர்க்கு அர்ப்பணம் செய்யப்பட்டுள்ளது. அவர்தம் திருவுருவப்படமும் அமையப்பெற்றுள்ளது.

திருநெல்வேலித், தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்
கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.




சிலம்பு உஎ } திருவள்ளுவர் ஆண்டு கூகூஅச, ஆடி ஆகஸ்டு, 1953 { பரல் கஉ

# சேலை திரு. சகதேவர் பிரிவு

*பிறப்பு*

இவர்தம் தந்தையார் திரு சிங்கார முதலியாரவர்களாவர். சேலை என்பது திருவள்ளூர்க்கு அண்மையிலுள்ள ஒரு சிற்றூர். இவர்கள் நிலக்கிழார். இவர்தம் மக்கள் மூவர் அவர்கள் முறையே முதலாவர் கிருட்டிண முதலியார் (தாலூகா காப்பிஸ்ட் எக்சாமினர்) சகதேவ முதலியார், கிருட்டிணசாமி முதலியார் என்ப.

இவர்கட்கு சேலை வட்ட (கிராமம்)த்தில் நாற்பது ஏக்கர் (40) நிலபுலங்கள் உள்ளன. இவை அவ்வட்டத்தின் காற்பகுதியாகும் இவர்கட்கு நடுவுள்ள மகனாக நம் சகதேவ முதலியார் ஆயிரத்து எண்ணூற்று எழுபத்து நான்காம் ஆண்டில் தோன்றினார் இவர்தம் இளமைக்கண்ணே பின்னுண்டாம் வளமைக் குறிகள் பலவும், கண்டார் உளமகிழ்ந்துவப்பத் தோன்றுவ வாயின.

*கல்வி*

திரு. சகதேவ முதலியாரவர்கள் திருவள்ளூர் வெஸ்லி மிஷன் உயர்நிலைப் பள்ளியில் முயற்சியுடன் முறையாகக் கற்று மெட்ரிக்குலேசன் தேர்வில் தேர்ச்சியுற்றுச் சிறந்தனர் இவர்தம் அரும்பண்பும், பெருந்தகை ஒழுக்கமும், திருந்துமொழிப் புலமையும், எல்லோரையும் கவர்வவாயின.

*ஆசிரியத்தொழில்*

தாம் கற்றுப் பட்டம்பெற்று விளங்கிய திருவள்ளூர் வெஸ்லி மிசன் உயர்நிலைப்பள்ளியில் தமிழாசிரியத் தொழிலினைக் கை

ஏற்றுப் பணிபுரிந்தனா. மாணவர் உளங்கொளப் போதிக்கும் மட்டில் மாண்பால் யாவரும விழைந்தனர். இசைமொழி மொழிநதனர் தமிழார்வம மிகக நம் முதலியாா திருவள்ளூர்க்கு அடுததுளள ஏக்காடு என்னும் ஊரிலிருந்து நெறிததொண்டு நேர்மையுடன் ஆற்றிவரும் போதகா சிரி(மிஷனரி)யாகட்கு நம் அருந்தமிழ்ப்பாடம பயிறறிவந்தனர் இபபாடம காலை மணி ஆறு முதல் ஒன்பதுவரை பயிற்றுவர் பின்னர்க் காலந தவறுமல் திருவளளூர் உயாநிலைப பள்ளிக்குச்சென்று போதிபபர். இத் தொழிலகளை இடையறுவன்பால் யாவருளத்தும உவகையுற உளுறறிவருவாராயினர் பின் உற்ற காலமவரை நற்றெண்டியற்றி ஊதியத்தராய் ஓய்வுபெற்றனர்

திருநது மனஞசேர் விருந்து பேணற்காம் பொருந்து மனையறம்பூணப் பொற்பாா உறவினர் விழைநதனா. விழைந்தாங்கு மனைததக்க மாண்புசோ பெண் ஒருததியை ஆய்ந்து மணப்பித்தனர். அவாதம பெயர் தெய்வயானை அமமையார் இருவரும் கருத்து ஒததஉளததராய்க காதல் மனையறம் பேணினர் இறையருளால் இவ் அம்மையார்பால் முறையே மக்கள இருவர் தோன்றினா இவாதம பெயா இலட்சுமி அம்மை, தேவாமிர்தம் என்ப மக்களிருவரை மாநிலததுவிட்டகன்ற மாதினியார் போன்று இவ் அமமையாரும மேனிலை எய்தினர்.

பின் மறுமணமும் நிகழ்ந்தது. அவர்தம பெயர் அன்னத்தம்மையார். இவ் இரண்டாம் மனைவியார்பாலும் பெண்மகள் ஒருததியுள்பட மக்கள அறுவர் தோன்றினர். இவாகள் முறையே சகநாதன், துக்காராமன், காாததிகேயன், சிவானந்தம், மீனுட்சிசுந்தரம், சரசுவதி

இவர் தம்முள் இரண்டாம் மகனுராகிய திரு. துக்காராமன் அவர்கள் நம கழகததில் தலைமைக் கணக்காளராயிருநது பணி புரிகின்றனர். இவாகள் "இவன்தந்தை என்னோறறுன் கொல் எனும் சொல்"லை நிகழ்த்தும் இயல்பமை சால்பினராய் இருப்பது "தந்தை மகற்கு ஆற்றும் நன்றியின்" தகைமைய

மகள் மணம்

தம் அரும்பெறல் மகளாராகிய கற்பும் பொற்பும் ஒருங்கமைந்த திருமதி இலட்சுமி அமமையாரைத் தன் தாய்மாமனர் மகன் திரு. பி. துரைசாமி முதலியாரவர்கட்கு 1919-இல் திரு

மணம் செய்து கொடுத்தனர். திருவருள் துணையால் இருவரும் இல்லறம்பேணி நல்லன எனச் சொல்லறம பலவும் புரிந்து மக்கட்பெற்று வாழ்வாங்கு வாழ்ந்து வருகின்றனர்.

மருகர் நிலை

இவர்கள் 1918-இல் ரெங்கூனில் தம் பெறலரும் முயற்சியால் சிறுகத் தொடங்கிப் பெருக வாழ்வதே சிறப்பென்னும் மொழிக்கிணங்க முதலில் நூல் கட்டடம் (பைண்டிங்) என்னும் நுண்மையவாம் தொழிலில் தொடங்கி, முயற்சி திருவினை ஆக்கும் என்பதற்கொப்பப் பெரிய அச்சுக்கூடமாகப் பிறங்கிப் பேருதியமும தந்து நிலவிற்று. 1928-ல் சென்னையில் அச்சகம் ஒன்று தொடங்கிச் சீரும் சிறப்பும் பொருந்த நிகழ்ந்துவந்தது. இவ் அச்சகப் பொறுப்பாளராய் நம் சகதேவ முதலியாரவர்கள் அமர்ந்து நன்கு நடத்திவந்தனர் கழக நூல்கள் இவ்வச்சகத்தில் சில ஆண்டுகள் பதிப்பிக்கப்பெற்றன. இவ் அச்சகம் பின் விற்கப்பட்டுப் போயிற்று

இரண்டாவது உலகப் பெரும்போர் நிகழ்ந்த ஞான்று ரெங்கூனில் இருந்து இந்தியாவுக்குத் திரும்பவந்து சேலையில் முப்பது ஏக்கர் வரை நிலபுலங்கள வாங்கி உலகு புரக்கும் தாளாண்மையின் மிக்க வேளாண் தொழில் புரிவித்து மேலோர் விழைய நாலோர் மொழிந்தாங்கு வாழ்ந்து வருகின்றனர் இவர் தம் பெண்மக்கள் இருவரையும் 1949-இல் திரு சகதேவ முதலியார் மகனிருவருக்கும் முறையே மணஞ்செய்து ஈந்து அனைவர்களையும் தம்முடன் அமர்த்தி நன்கு பேணி வருகின்றனர்.

சார்பு

நம் சகதேவ முதலியாரவர்கள் பண்புறு மாமனார் மகனைத் தம் மருகராய் விளங்கும் துரைசாமி முதலியார் சார்பில் தாம் இல்லாளை யிழந்து இலலந் துறந்து மக்களை யோம்பும் வழியறியாது சொல்லொணு அல்லலுறுங் காலத்துச் சார நேர்ந்தமை சாற்றற்கரியது மருகரும் தொன்மை உன்னித் தம் இல்லமே அவா இலலமாய்த் தம மக்களே அவர் மக்களாய்க் கருத்திற் கொண்டு வளர்ப்பு, கல்வி, தொழில, மணம முதலிய எல்லாம் அவ்வக்காலத்து அன்புடன் இயற்றி இன்றுகாறும் போற்றி வருவது யாவரும் உணர்ந்த வாய்மை. நம் முதலியாரவர்களும் தம் செய்ந்நன்றி விளக்கமாய் மக்கள் திருமணத்தின்போது 'சாமி செய்ந்நன்றி' எனும் பாமாலை ஒன்றால் விளக்கியுள்ளார்கள். இஃதொன்றே நம் முதலியாரவர்களின் உளத்தூய்மையையும்,

செய்ந்நன்றி மறவா வாய்மையினையும் எடுத்துக்காட்டப் போதிய தாகும்.

கழகத் தொடர்பும் பொதுப் பணியும்

நம் முதலியாரவர்கள் மாணவர்க்கும் மாண்பார் தெய்வத் தொண்டர்க்கும் பன்னெடுநாள் பயிற்றிய பழக்கமிகுதியால் பாடப் புத்தகம் எம்முறையில் அமைவது எளிமையும் இனிமை யும் பயக்கும் என்பது நன்கு தேர்ந்த நல்லோர். எனவே, எவ் வாற்றானும் சிறந்த மணி. திருநாவுக்கரசு முதலியாரவர்கள் தாங்கள் பாடப் புத்தகம் அமைக்கும்போது நம் முதலியாரவர் களின் அரும் துணையை நாடினர். இவர்களும் அன்போடேற்று அரும் துணை புரிந்தனர். இதனால் பாடநூல்கள் பல வெளிவர லாயின இது,

> " செய்வினை செய்வான் செயன்முறை அவ்வினை
> உள்ளறிவான் உள்ளங் கொளல் " —திருக்குறள், ௬எஎ.

என்பதனால் பெறப்படும்.

கழகத் தமிழ்ப் பாடம் 3 முதல் 8 முடிய 6 புத்தகங்களும், கழகத் தமிழ்ப்பாடத் திரட்டு 1, 2 புத்தகங்களும், பாலமிர்தம், நல்லொழுக்கப் பாடம், வாஸ்கோட காமா, பேசாதார் பேசசு முதலிய நூல்களை ஆக்கித்தந்து கழகத்து வழியாகத் தமிழுக்கு அரும்பெரும் தொண்டாற்றியுள்ளார்கள் ஒவ்வொரு நூலினும் ஆசிரியரவர்களின் அரும்பெரும் பண்புகள் ஆடி நிழல் எனப் போதரும்.

இவர்தம் ஆங்கிலப் புலமை நல்லொழுக்கப் பாடம், வாஸ் கோடகாமா முதலிய நூல்களின் மொழிபெயர்ப்புத் திறனால் விளங்கும். அஃதொப்பத் தமிழ்ப்புலமையும் மேற்கூறிய நூல் களில் ஆங்காங்குப் பரக்கக் காணலாம் இவைகள் அனைத்தும் மிகவும் அழகாய் அமைந்துள்ளன. மேலும், கழகத் தமிழ்க் கையகராதி தொகுப்பதற்குப் பேருதவி புரிந்துள்ளார்கள். பிள்ளைத் திருக்குறள் என்னும் நூல் புதிய முறைப்படி எளிய இனிய விளக்க வுரையும், எழுவாய் பயனிலை முதலிய இலக்கணங் களும் அமைய வெளிப்படுத்தியுள்ளார்கள். மேலும், திருக் குறளுக்கு யாவரும் உணருமாறு எளிய விளக்கவுரை வரைய வேண்டுமென்னும் அவா மிக்குடையவர்களா யிருந்தனர்.

பண்புந் தோற்றமும்

முதுமைக்காலத்தும் நீண்டுயர்ந்த நற்றோற்றம் உடையவரா யிருந்தனர்; ஒழுக்கம் உயிரினும் ஓம்பிய விழுமியர். புன்முறுவல்

அரும்பிய வாயினர். மலர்ந்த முகத்தினர். நீறணி நெற்றியர். அகம்புறம் தூய்மையர் ஆகுலமில் வாழ்க்கையர். பிழையினைக் கண்ணோடாது எடுத்துககாட்டி விழைவன செய்விக்கும் திற லினர் இன்மொழியர் எதையும் ஆய்ந்து இயற்றும் ஆற்றலர். பீடுநடை பேணும பெருமையர். மாணவ மாணவியா உளங் கொளக் கற்பிக்கும் ஒண்மையர்.

போதிப்பு

ஓய்வுபெற்ற பின்னரும் மாணவர்கட்கு உளங்கொளப் போதிக்கும் ஊக்கமிக்கவராக இருந்து நோந்தபோதெல்லாம் மாணவர் ஆக்கம் ஒன்றே கருதித் தமிழ்ப்புலமைப படிபபும் ஆங்கில உயர்நிலைப்பள்ளிப் படிப்பும் போதித்து வருவார்கள். இவர்கள் மாணவாகளுடன் மாணவத்தோழர் போன்று கற்பிக் கும் காட்சி கற்றூர்கும் மறறூர்க்கும இறும்பூது பயபபதொன் ருகும். இவர்தம் நற்பண்பால் "உற்றுழி உதவியும உறு பொருள் கொடுத்தும், பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே" என்னும கட்டுரை பொருளுரையாகத் திகழ்ந்து மாணவர்களை யும் அவ்வழி ஒழுகப்பண்ணும் செவ்வியதாகும். தமிழ்ப்புலவர் கள்பால உடனுறைவின் பயன்கொள்ளும் ஒண்மையில மிக்க ஆர்வம் உடையவர் அள்ளிக்கொள்வன்ன பேரன்பினர்.

இறையடி எய்துதல்

சின்னாள் உற்ற தளர்வு நோயால் 28-7-1953 செவ்வாய்க் கிழமை பகல் 11-40, மணிக்குத் தம் நெடுநாட் சார்பகமாம் தம் நன் மருகர் இல்லத்துத தம் எழுபததொன்பதாம் அகவையில் சிவனடி நீழல எய்தினா அவர்தம் ஆருயிர் என்றும் இன்பம் பெருகத்துய்தது வாழக அவர்தம் கால்வழிக் குடும்பததார்க் கும் மருகர் குடும்பத்தாாகரும் எங்கள் பரிவும ஆறுதலும் பயன்தரப பரமர்தாள பணிவோமாக.

சேலைச் சகதேவன் செம்பொருளின் தாள்சேர்ந்த
வேலைஎழிற் செவ்வாய் மிளிர்ஆடி—நூலையுணர்
மெய்ப்புலவன் ஆஙகிலத்தும் மிக்கோன்மன பன்னூல்கள்
செய்புகழோன் வாழி சிறந்து.

—இதழாசிரியர்.

# காரைக்காலம்மையார்

[திரு. வா. இராமலிங்கம் பிள்ளை]

காரைக்காலம்மையார் புராணத்தில் கணவன் அனுப்பிய மாங்கனிகள் இரண்டிலொன்றைச் சிவனடியார் உண்ண உதவி, எஞ்சியிருந்த ஒன்றைக் கணவனுக்குப் படைத்தனர் அம்மையார். அக் கனியின் சுவை மிகுதிகண்ட பரமதத்தன் மற்றொன்றையும் படைக்கும்படி சொல்ல அம்மையார் இறைவனை வணங்கிப் பெற்ற கனியைப் படைத்தார். அது முன்னையதினும் சுவை மிக்குடையதாகக் காணப்படவே அது கிடைத்த தன்மையைக் கேட்ட கணவனுக்கு நடந்ததை நடந்தபடி அம்மையார் உரைத்தார். கணவன் அதன் உண்மை தெளிய மற்றொன்று திருவருளால் பெற்றளிக்க வேண்டினன். மீண்டும் இறைவனைப் பிரார்த்திக்க அம்மையார் கையில் கனியொன்று எய்தியது. கணவன் கையில் கொடுத்தனர். கொடுக்கவும் அது உடனே மறைந்தது. அந்நிலையில் அம்மையாரை உலக மாதர்கள் போலன்றி வேறு தெய்வீகம் உடையவராகும் உண்மையைக் கண்டு அச்சமேற்கொண்டு இனி நீங்கவேண்டுமென்ற துணிவு கொண்டு நின்றான். ஆனால் அக் கருத்தை எவருக்கும் வெளியிட்டானல்லன்.

வணிகனும் தன்கைப் புக்க மாங்கனி பின்னைக் காணான்
தணிவரும் பயமேற் கொள்ள வுள்ளமுந் தடுமா றெய்தி
யணிகுழ லவரை வேறோ ரணங்கெனக் கருதி நீங்குந்
துணிவுகொண் டெவர்க்குஞ் சொல்லான் றொடர்வின்றி யொழுகு நாளில்.

அன்றுமுதல் அம்மையாருடன் தொடர்பின்றித் திருநீலகண்ட நாயனாரும் அவர் மனைவியாரும் அயலறியாமல் வாழ்ந்ததைப் போலவே வாழ்ந்துவந்தான். பின்னர் பிரிவுக்கு வேறு காரணங் காட்டி வேற்றூர்சென்று செல்வம் திரட்டி வேறிடம் சென்று உலகியல் நடத்துதற்கு வேறு மணம் முடித்துக் கொண்டு வாழ்ந்தான். பின் மணந்த மனைவிக்கு ஒரு பெண் மகவு பிறந்தது. ஆனால் அவர்களிடம் தன்னுடைய முன் செய்தியைச் சொல்லாமலே அம் மகவுக்கு முன் மனைவியாகிய அம்மையாரின் பெயரை இட்டிருந்தான்.

பின்பு அம்மையாரின் சுற்றத்தார்கள் இவனது வாழ்க்கை வளம் கேள்வியுற்று அறிந்து அம்மையாரை அங்கு அழைத்து வந்தபொழுது எதிர்கொண்டு மனைவி மகவுடனும் சென்று அவர் காலில் விழுந்து வணங்கினான்.

கணவன்றாள் வணங்கக் கண்ட காமர்பூங் கொடி யனாரும்
அணைவுறும் சுற்றத் தாரபால அச்சமோ டொதுங்கி நிற்ப
உணர்வுறு கிளைஞா வெளகி யுன்றிரு மனைவி தனனை
மணமலி தாரி னாய்நீ வணங்குவ தென்கொல் என்றா.

வணங்கியபோது சுற்றத்தார்கள் இது என்ன ஒவ்வாத செய்கை என அவனை வினவியபொழுதுதான், தான் முன்பே அவர்பால் தெய்வீகம் கண்டு விலகினமை சொல்லி அவா மானிடா அலலர், நற் றெய்வமாதலால் - என் தொழுகுலம் ஆதலின் - நான் பெற்ற மகவுக்கு அவர் பேரிட்டேன்; பாதங்களில் வணங்கினேன்;

மற்றவர் தமமை நோககி மானுட மிவாதா மல்லா
நறபெருந் தெயவ மாத லறிந் தகன்ற பின்பு
பெற்றவிம் மகவு தன்னைப் பேரிட்டே னாத லாலே
பொற்பதம் பணிந்தேன் நீரும் போற்றுதல் செய்மின் என்றான்.

இங்கே கணவன் வணங்கியபொழுதுதான் அமமையார் அச்சம்கொண்டு ஒதுங்கி நினறா எனபபடுகின்றது. எனவே, அதுகாறும அமமையாரின் உள்ளம கணவன் மனைவி எனுங் கட்டுப்பாட்டிலேயே வேறறா சென்றவா மீண்டிலராம என்ற பண்பில் நின்றமையும், கணவா சுற்றத்தாரிடம் தன் உள்ளத்துக்கொண்ட உறுதியை வெளிப்பட உரைதத பின்புதான் அவர் நிலையறிநது அச்சங கொளகின்றா இவர்பால் எய்திய அச்சம கணவரின் உண்மை உள்ளத்தை நாம் இதுகாறும் கருதாதிருநதோமே என்பதாலும இனி உலகவாழ்வு நமக்கினி யன்று என்ற தன்மையாலும் எழுநதது இவ் வசசததால் மனநெகிழசசி வேறுனபோதுதான, தன் தசையுடம்பு நீத்து இறைவன திருவடிபோற்றும் கணத்துள் தாமும ஒருவராகப் பேய்வடிவை ஈசனபால் இரநது பரவிப பெறுகின்றார்.

முனனம கணவன்பால நிகழ்ந்த அசசம தெயவததனமை திகழப்பெற்ற அமமையோடு பொயமுயககாம போகவாழ்வு கூடாது என்றுகொண்ட உறுதியான மனவெழுசசியைத் தந்தது பின்பு அம்மைபால் நிகழ்ந்த அச்சமும அபபடியே கணவனுக்காகத் தாங்கிய வனப்புநின்ற தசைபபொதி கழிக்கக் காரணமாயிறறு எனவே இரண்டிடத்தும் அச்சம் நிகழநதது உலகியல் கழிக்கவும உறுதியில் திளைக்கவுமே காரணமாயிற் றென்பது கண்டுதெளிதல் கடனாகும்.

இவ்வாறன்றிப் பரமதத்தன் கொண்ட அச்சத்தை வேறு விதமாகக்கொண்டு அவன் அமமையாரைக் காளி, கூளி, பிடாரி என்பனபோலச் சிறுதெய்வமாகக் கொண்டான் என்றும்,

அவன் அவ்வாறுகொண்ட அச்சத்தினால்தான் பின்னவள்பாற் பெற்ற மகவுக்கு அம்மையார் பெயரை இட்டனன் என்றும் சிலர் கூறுவது ஏற்புடைத்தன்று. பெயரிடுதல் கடனே என்பது சேக்கிழார் சுவாமிகள் வாக்கிலேயே திகழ்வது காணலாம்.

மடமகள் தனைப் பெற்று மங்கலம் பேணித் தான்முன்
புடனுறை வஞ்சி நீத்த வொருபெரு மனைவி யாரைத்
தொடர்வற நினைந்து **தெய்வத் தொழுகுலம்** என்றே கொண்டு
**கடனமைத் தவர்தம்** நாமம் காதலசெய் மகவை இட்டான்.

இங்கே தெய்வத் தொழுகுலம் என்றும் முன் பாட்டிலே "நற் பெருந் தெய்வம் ஆதல், நானறிந் தகன்ற பின்பு" என்றுங் குறிக்கப்பட்டிருத்தல் சேக்கிழார் அடிகள் சீரிய வாக்குகள் என்பதை நாம் நேரியபண்பில் கண்டு மகிழவேண்டும்.

இனி, ஷை புராணத்தில பரமதத்தன் இரண்டாம் முறையாக அச்சம எய்துவது அவனிடம சுற்றததார்கள அவனுடைய முதல்மனைவியாகிய அமமையாரைக் கொண்டுவந்தணைந்த தன்மையை முன்னதாக அறிவிக்குமபடி சொலலியனுபப அவர்கள வந்து சொன்னவுடன நிகழ்ந்தது.

வந்தவ ரணைந்த மாற்றம் கேட்டலும வணிகன் றானும
சிந்தையி லச்சம எய்திச செழுமணம் பினபு செய்த
மைநதொடி தனையுங் கொணடு பயந்தபெண மகவி னோடு
முநதுறச செலவே னென்று மொய்குழ லவர்பால் வந்தான்.

இதில் முந்துறச் செலவேன் என்று சொல்லப்படுவதாலும் மனைவியுடனும், மகவுடனும் வநததாக வுள்ளபடியாலும் அவன் தொழுந் தெய்வமாகவேகொண்டு நின்றான் என்ற பண்பை இனிது விளக்குகினறது. அன்றிச் சிறு தெய்வமாகக் கருதியிருப்பின் கேட்டபோது பயந்து வேறிடத்தில் ஒளிக்க முற்பட்டிருக்க வேண்டுமேயன்றி, எதிர்கொண்டு முன்வர மனம் எழாது, அதுவும் மனைவி மகவுடன்வர அறவே மனம் எழாது எனபது உலகப் பழக்கத்தாலும் இனிது காணலாம். எனவே பரமதத்தன் செயலனைத்தும பழுதற்ற உறுதியுள்ளத்தால் உண்மை கடைப்பிடித்துச் செய்ய வேண்டுவனவே செய்த சிறப்புடையன என்றல் எவ்வாற்றானும் பிழையாகாது எனத் தெளிவோமாக.

வெண்பா

அச்சந் தருவதிவண் ஆன்றோர் பழிப்பனவே
பொச்சாப்பும் இச்சைவழி போகுதலும — துச்சமெனத்
தேறிச் சிவனடியைச் சிந்திக்கிற் றீங்கிலவாம
நீறணிந்தே நிற்பீர் நெறி.

# [1] இலக்கிய விமர்சனம்

[பேராசிரியர் திரு. ஜி. சுப்பிரமணியபிள்ளை, எம். ஏ., பி. எல்.]

தமிழ் இலக்கியப் பயிரினைத் தழைத்தோங்க வளர்ப்பதற்குத் தாவிவரும் புதுப்புனலுள், இலக்கிய விமர்சனமும ஒன்று. ஆனால் விமர்சனம் என்பது தமிழச்சொல் அன்று, வடமொழிச் சொல். அதற்குத் தமிழில் ஆராய்ச்சி என்றுதான் பொருள். எனவே, இலக்கிய விமர்சனம் என்பதற்கு நூலின் திறனாய்ந்து தெளிதல் என்று பொருள் கூறலாம. ஒரு நூலினைக் கற்று விட்டால்மட்டும் போதாது. முதலில் அதனைக் கசடறக் கற்க வேண்டும. பின்னர் தான் பழுதறக்கற்ற நூலினைப் பலபடியானும் சீர்தூக்கிபபார்த்து அதன் நலன் தீமைகளை ஒப்புநோக்கி உணரவேண்டும இதனையே விமர்சனம் செய்தல் என்பர்.

இலக்கிய விமர்சனம் என்பது நமக்கு இப்பொழுது புதுமைபோலத் தோன்றலாம். ஆஙகிலக் கல்வி நம நாட்டில் பரவததொடஙகிய பின்னரே இலக்கிய விமர்சனமும் நம்மிடையே தோன்றலாயது என்று எண்ணுவாரும் உளர். ஆங்கில மொழியிற்கூட சுமார் ஐந்நூறு ஆண்டுகளுக்குமுன் விமர்சனம் என்னும் இலக்கியப பகுதி தோன்றியதிலலை. ஆங்கில அறிஞர்கள் கிரீக், ரோமன் மொழிகளிலுளள இலக்கியங்களைக் கற்றுத தேர்ந்த பின்னரே விமர்சனம் செய்யப் பழகலாயினர் ஆனால், தமிழ்மககளுக்கு இது மிகமிகத் தொன்றுதொட்டுவந்த பழக்கம். பல புலவர்களும் கூடிப் பாக்களை இயற்றி, அவற்றின் திறனை ஆராய்ந்து, தமிழைச் சுவைப்பதற்கென்றே பாண்டிய மன்னர் தமிழசசஙகங்களை நிறுவினா. அவை தோன்றி இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேல் ஆகிவிட்டது. நூல்களை இயற்றும புலவர்கள தமிழ்ச் சங்கத்திலே கொண்டுபோய் அவற்றை அரங்கேற்றவேண்டும். அவ்விதம அரஙகேற்றிய நூலினை அஙகுப் பல புலவர்களும் கூடியிருந்து பல கோணங்களினின்றும ஆராய முற்படுவர். நூலின குணம் நாடிக் குற்றமும நாடி அவற்றுள் மிகைநாடி மிக்கனகொண்டு, சிறப்பினைக்கண்டு, கொண்டாடிப போற்றுவர். இலககிய விமர்சனததிற்கென்றே தமிழ்ச் சஙகஙகள் இருந்து வந்தன என்று சொன்னால மிகையாகாது. நெற்றிக் கணணைக் காட்டினும் குறறம் குற்றமே என்று நக்கீரன் எழுபபிய வெற்றி முழக்கம் ஒவ்வொரு தமிழன் காதிலும் இன்றும ஒலித்துக் கொண்டிருக்கிறது. சண்பகமாறன் என்னும் பாண்டியனின் சந்தேகத்தைப் போக்கித தருமி என்னும ஏழைச் சிறுவனுக்குப்

1. திருசசி வானொலியில் பேசியது.

பொன்முடிப்பு வாங்கித் தருவதற்காக ஆலவாய் அரனார் 'கொங்குதேர் வாழ்க்கை' என்ற பாடலைப்பாடிக் கொடுத்தார். அப்பாடலில் பெண்களின் கூந்தலுக்கு இயற்கை மணம் உண்டு என்றதுபோன்ற கருத்து காணப்பட்டது. அது தவறு என்றும், எந்தப் பெண்ணின் கூந்தலுக்கும் மணம் செயற்கையே ஒழிய இயற்கையன்று என்றும் அஞ்சாது அறைந்து கூறினார் நக்கீரனார். தாம் கண்டு தெளிந்த உண்மையைக் கடவுள் முன்னரும் கலங்காது கூறலே கடமை என்று நக்கீரர் அவ்வாறு கூறினார். இது இலக்கிய விமர்சனத்திற்கு மிகப் பழையதோர் எடுத்துக் காட்டாகும். திருக்குறள் நூலினைத் தமிழ்ச்சங்கத்தில் அரங்கேற்றுவதற்குத் திருவள்ளுவரும் அரும் பாடுபட்டிருக்கிறார் திருவள்ளுவமாலையில் பலபுலவர்களும்கூடித் திருக்குறளை விமர்சனம் செய்திருப்பது யாவரும் அறிந்ததே.

சங்ககாலம் தொட்டு இன்றுவரையுள்ள தமிழ் நூல்களை நாம் துருவிப் பார்க்கும்பொழுது ஓர் உண்மை பளிச்சென்று புலப்படும் ஒவ்வொரு ஆசிரியரும், தாம் இயற்றும் நூலினைப் பல அறிஞர்களும் எடைபோட்டுப் பார்த்து, ஏற்றத்தாழ்வுகளைக் கண்டு குற்றம் கூறுதிராகள்; ஆதலால், பிறர் குறைகூறாது போற்றும் விதத்தில் தமது நூல் நன்கு அமையவேண்டும் என்ற கவலையோடு அதிக கவனம் செலுத்தியே பாடி எழுதி முடித்திருக்கிறார்கள். இதனை நூல்களில் வரும் அவையடக்கச் செய்யுள்களினால் அறியலாம் உதாரணமாகக் கம்பராமாயணத் தலைப்பில் கம்பர் கூறும் பாடல் ஒன்றைப் பார்க்கலாம் :—

"முத்த மிழ்த்துறை யின்முறை போகிய
உத்த மக்கவி கட்கொன் றுணர்த்துவன்
பித்தர் சொன்னவும் பேதையர் சொன்னவும்
பத்தர் சொன்னவும் பன்னப் பெறுபவோ."

இதைப் போலவே சேக்கிழாரும் தமது பெரிய புராணத்தில் அவையடக்கம் கூறுகின்றார் :—

"செப்ப லுற்ற பொருளின் சிறப்பினால்
அப்பொ ருட்குரை யாவரும் கொள்வரால்
இப்பொ ருட்கென துரைசிறி தாயினும்
மெய்ப்பொ ருட்குரி யார்கொள்வர் மேன்மையால்."

இவற்றால், இப்புலவர்கள் யாவரும் தமமுடைய காவியங்கள் தக்கோர்களால் திறனாய்ந்து மதிப்பிடப்படும் என்பதை நன்குணர்ந்தே அவற்றை அதற்கியன்றவாறு செய்து முடித்துளார்கள் என்பது தெற்றெனெ விளங்கும்.

இவ்வாறு மிகப்பெரும் புலவர்களும்கூட ஒரு குற்றமும் வந்துவிடக்கூடாதே என்று நன்கு கவனம் செலுத்தியே தம் நூல்களைப் பாடியிருக்கிறார்கள். பிறர் கூறும் அனைத்தையும்

அப்படியே ஏற்றுக்கொள்வது என்பது தமிழ்ப் புலவர்களுக்கு இயலாது ஒவ்வொரு நூலையும சல்லடைக்கண்போல் அரித்துத் துளைத்துச் சிறு குற்றத்தையும் விடாமல் எடுத்துக் காட்டி விடுவார்கள் மலைபடுகடாம் என்ற பாட்டுக்கு எத்தனை எத்தனை குற்றங்களை அக்காலப் புலவர்கள் எடுத்து விரித்தனர் என்பதை யாப்பருங்கல விருத்தியுரையிற் காணலாம். இவ்வளவுக்கும், அதனைப் பாடிய பெருங்கௌசிகனார் என்னும் புலவர் சங்கத்துச் சான்றோரில் ஒருவராவர் பத்துப்பாட்டு என்னும் சங்கத் தொகுதியில் ஒன்றாக அவரது மலைபடுகடாம் சேர்க்கப்பட்டிருக்கிறது. அவ்வாறு குற்றம் கூறுதல் அடாது என்றே பெரும் பான்மையோர் அக்காலத்தும் கருதினர். கம்பரைக் குறை கூறிய காளமேகப் புலவரின் பாடலும் இலக்கிய விமர்சனத்தைச் சேர்ந்ததுதான். அவர் பாடியது என்ன ?

" நாரா யணனை நராயணனென்ன றேகம்பன
ஓராமற் சொன்ன வுறுதியால்—நேராக
வாரென்றால வாளென்பேன் வாளென்றால் வள்ளென்பேன்
நாரென்றால் நாளென்பேன் நான் "

இவ்வாறு குற்றம் கூறுவதையே குறிக்கோளாகக்கொண்டு செய்யப்படும விமர்சனம அழிப்பு விமர்சனம் இதனால் யாதொரு பயனும் விளைந்துவிடாது. பயனுடைய விமர்சனம் ஆக்கவிமர்சனமாக இருத்தல் வேண்டும அதனை Creative Criticism என்று கூறுவர். அங்ஙனம ஆக்க விமர்சனம் செய்து காட்டியவர்கள் அடியார்க்கு நல்லார், பரிமேலழகர், நச்சினார்க்கினியர்போன்ற சிறந்த உரையாசிரியர்களும, திவ்வியப்பிரபந்தங்களுக்கு விரிந்த வியாக்கியானங்கள் செய்துள்ள பெரிய வாச்சான்பிள்ளை போன்ற சுவைஞர்களுமாவர்.

கவிதைகளையும் காப்பியங்களையும யாப்பவன் கலைஞன். அவற்றை உருகிப்பருகி உள்ளம் வியப்பத் திறனாய்ந்து தெளிபவன் சுவைஞன ஒரு நூலின் சிறப்பை எவ்வாறு நயையற நவிலவேண்டும், சொற்குற்றம பொருட்குற்றங்களை எவ்வாறு ஒதுக்கவேண்டும், சுவையுடையன பயனுடையன எவ்வாறு நுகரவேண்டும் என்றெல்லாம விரிய எடுத்து விளம்பும பழைய விமர்சன நூல் யாதும நமக்குக் கிடைக்கவில்லை தொல்காப்பியச் செய்யுளியலில் வரும சில குறிப்புக்கள் தவிர இலக்கிய விமர்சனத்திறகுரித்தான நூல் எதுவும் தமிழில இல்லை

இவ்வாறாகத் திறனாய்ந்து தெளியும் பழக்கம் பிற்காலத்தில் எப்படியோ அறவே அற்றுப்போய்விட்டது விமர்சனப்புனல் ஒழுகியோடிய காலவாயும வற்றிவறண்டு கிடந்தது பின்னர் இருபதாம நூற்றாண்டிலே மேல்நாட்டுக் கல்வி பரவத்தொடங்கிய

பொழுதுதான் திறனாய்ந்து தெளியும் பழக்கமும் புத்துயிர் பெற்றுப் பழைய கால்வாயும் தூலக்கப்பட்டிருக்கிறது. அதில் புதுப்புனலும் சிறிது ஊறிவருகிறது. அது பெருவெள்ளமாகத் திரண்டு பாய்வதற்கு நல்ல அறிகுறிகளும் தோன்றியுள்ளன.

பழைய அண்ணாவிமுறையில் குருட்டுப்பாடம் படிக்கும் வழக்கம் மலையேறிவிட்டது. எதை எடுத்தாலும், அது எப்படி? ஏன்? எதற்கு? என்ற வினாக்கள் எழுகின்றன. அவற்றுக்குச் சரியான விடையளிப்பதுதான் விமர்சனத்தின் வேலை. இக்காலத்து இலக்கிய விமாசனமுறையே புதிது. முற்காலத்தைப் போன்றையதன்று. ஆங்கிலத்தில் இலக்கிய விமாசனம்பற்றி எத்தனையோ நூல்கள் எழுதப்பட்டுள்ளன. அவைபோல் தமிழில் ஒருநூல்கூட எழுதப்படாமலிருப்பது வருந்தத்தக்கது. இதில் இலக்கியச் சுவைஞர்கள் நன்கு கவனம் செலுத்தவேண்டும். இந்தத் துறையில் தமிழில் இன்னும் நல்ல வளர்ச்சி ஏற்படவில்லை என்றுதான் சொல்லவேண்டியிருக்கிறது. காப்பியங்களில் வரும் கதாபாத்திரங்களில் இங்கொன்றும் அங்கொன்றுமாய் எடுத்து ஆராயப்பட்டுளதே தவிர, நூல் முழுதையும் ஒருசேர நோக்கிக் கண்டு விமாசனம் எழுதப்படவில்லை. ஒரு காப்பியத்தை எடுத்துக்கொண்டால், அது பலவகை உறுப்புக்களையுங்கொண்ட ஓர் உயிர்ப்பிராணியைப் போன்றது. அதன் பல உறுப்புக்களையும் தத்தம் தொடர்பிலே சிதையாதவாறு பதியவைத்து, ஒன்றோடு ஒன்றினை ஒப்பிட்டு நோக்கிக் காப்பிய ஒருமைத்தன்மைக்கு ஊறு விளைக்காமல் சீர்தூக்கிப்பார்த்தால் தான் உண்மைவிளங்கும். அதனைச் சின்னாபின்னம் செய்து, பிய்த்து வைத்துப்பார்த்தால், சந்தர்ப்பங்கள் நழுவிப்போய் விடும். கவிஞனின் உண்மை நோக்கத்தையும், உயரிய உள்ளத்தையும் உருத்தெரியாமல் குலைத்துவிடும். பாத்திரங்களின் குணாதிசயங்களைக் கவிஞனின் கருத்துக்கேற்பப் பழுதற எடுத்து அலசவேண்டும். அஃகியகன்ற அறிவோடு நுண்மாண் நுழை புலம் காட்டிய பாட்டின் பண்புகளையும் பாவிகச் சுவடுகளையும் [illegible] டும்.

தமிழ் இலக்கிய விமாசனம் தமிழ் இலக்கிய மரபுகளுக்கும் தமிழ்நாட்டுப் பழக்க வழக்கங்களுக்கும் உகந்ததாய் இருக்க வேண்டும். இப்பொழுது இலக்கிய விமாசனம் செய்வோரிற் பலரும் மேல்நாட்டு இலக்கியங்களைப் படித்துவிட்டு, அவற்றின் இலக்கண விதிகளையும் கருத்துக்களையும் அளவுகோலாகக் கொண்டுவந்து தமிழ் நூல்களை ஆராய்ந்து அளவிடமுயலுகின்றனர். இது சிலவேளைகளில், சுள்ளிகொண்டு கடலாழம் காணமுயல்வது போலவே ஆகிவிடுகிறது. அரிஸ்டாட்டல்,

ஹேகல், பிராட்லி, ஹட்சன் போன்ற மேல்நாட்டறிஞர் ஆய்வுரைகளையே அதிகம் படித்துவிட்டுத் திடீரென்று ஒரு தமிழ் நூலினை எடுத்து விமர்சனம் செய்துவிடுவது எவ்வளவு தப்பான காரியம்? தொல்காப்பியரையே உரைகல்லாக வைத்துக்கொண்டு ஒவ்வொரு நூலையும் மதிப்பிடும் செந்தமிழ்வாணர்களும் இருக்கத்தான் செய்கிறார்கள். இத்தகையோர் விமர்சனமும் காலத்துக்கொவ்வாததாய்ப் பரந்த நோக்கின்றிப் பாழ்பட்டுவிடுகிறது. விமர்சனப் பூங்காவிலே இன்னொரு புதுச் சூறாவளியும் தோன்றியிருக்கிறது. இது கட்சிப் பூசலில் சுழித்தெழுந்த புயலாகித் தன் கருத்துக்கொவ்வாத எழில் மலர்த் துணர்களையும், இன்சுவைக்கனிகளையும் உதிர்த்தெறியப்பார்க்கிறது. கட்சிபில்வெடிப்பதெல்லாம் விமர்சனம் ஆகாது. காய்தல் உவத்தல் இன்றி நடுநின்று காண்பதே சுவைஞனின் நோக்கமாக இருக்கவேண்டும்.

பத்திரிகைகளில் வரும் புத்தக விமர்சனம்வேறு, இலக்கிய விமர்சனம் வேறு. அச்சுப்பிழைகளை எண்ணிப் பெருக்குவதும், கனத்தை எடைபோட்டு மதிப்பைச் சுருக்குவதும், வெறுப்பு விருப்புக்களால் குற்றங்குணங்களைப் பொறுக்குவதும் இலக்கிய விமர்சனம் ஆகாது. யாரும் எவரும் எந்த நூலையும் விமர்சனம் செய்யலாம் என்பது கூடாது. நிரம்பிய நூல்கள்பல கல்லாமலே விமர்சனம் செய்யத் தொடங்குவது அரங்கின்றி வட்டாடல் போன்றதுதான். தமிழ் இலக்கிய விமர்சனத்திற்குத் தமிழ் அறிவு நன்கு பெற்றிருத்தல் வேண்டும். தமிழ்மொழி வரலாறு, தமிழ் இலக்கிய வரலாறு, தமிழ்நாட்டு வரலாறு, இவற்றை நன்கு அறிந்திருக்க வேண்டும். உலக வரலாறும் உலகியல் தத்துவமும் உடன் உணர்ந்திருப்பது உத்தமம். தான் விமர்சனம் செய்யும் நூலினைப்பற்றிய வரலாற்றையும், அதன் ஆசிரியன் வாழ்க்கை வரலாற்றையும், அவன் செய்த பிறநூல்களைப்பற்றியும் நன்கு தெரிந்துகொள்ளவேண்டும். பிறகு, தான் எடுத்துக்கொண்ட நூலிலே நன்கு திளைத்து அதிலே தன் அறிவு தோய்ந்திருக்க வேண்டும். ''நவில்தொறும் நூல்நயம் போலும்'' என்றார் திருவள்ளுவர். நல்ல நூலினைப் படிக்கப்படிக்கப் பலபல புதுமைக் கருத்துக்களும் அழகுகளும், பிறர் கண்டிராவாறு தனக்குத் தோன்றிக்கொண்டேயிருக்கும். அவற்றைப் பிறருக்கு அறிவிக்கும் ஆற்றல் தனக்கு உண்டு என்பதைத் தெரிந்தபின்னரே, ஒருவன் விமர்சனம்செய்ய முற்படவேண்டும். ஜெர்மன் அறிஞர் கோயிற்றே என்பவர் இதனைப்பற்றி நன்கு கூறியுள்ளார். "பாட்டின் திறனுய்ந்து தெளிதல் என்பது தற்காலத்தெழுந்த புதுமைப் பயிற்சி. அதை நடத்தும்முறை என்ன தெரியுமா? நீங்கள் ...ப் படித்தால் அதில் நன்றாக ஊறித் திளைத்து, உங்கள்

மூளையில் வேலைசெய்ய விட்டுவிடவேண்டும். அப்பொழுதுதான் அதன் குணநலன்களைச் செவ்வனே ஆராயும் ஆற்றல் உங்களுக்கு ஏற்படும்," என்கிறார் கோயிற்றே. திருவாசகம் தேவாரங்களைச் சிறந்த முறையில் விமாசனம் செய்து தந்த இராமலிங்க அடிகள் இந்த முறையைத்தான் கையாண்டதாகத் தெரிகிறது. சுந்தரர் தேவாரத்தை அவர் படித்தறிந்த அநுபவத்தை இனிதெடுத்து இயம்புகிறார் :—

"தேன்படிக்கும் அமுதாம்உன் திருப்பாட்டைத் தினந்தோறும்
நான்படிக்கும் போதென்னை நான்அறியேன் நாவொன்றோ
ஊன்படிக்கும் உளம்படிக்கும் உயிர்படிக்கும் உயிர்க்குயிரும்
தான்படிக்கும் அநுபவங்காண் தனிக்கருணைப் பெருந்தகையே.'

இவ்விதம், படிக்கும் நூலோடு இரண்டறக்கலந்து, தான்வேறு அந்த நூல்வேறு என்னாதவாறு ஒன்றுபடும் நிலையிலேதான் திறனாய்ந்து தெளியும் திறம் ஏற்படுகிறது.

உணர்ச்சி, அறிவு, தகுதி மூன்றும் உடையவனே சுவைஞன். அவனே இலக்கிய விமர்சனத்திற்கு இசைந்தவன். வெறும் கல்வியால் மட்டும் பயனில்லை. ஒரு கலையை ஆராயும் சுவைஞன் அந்தக் கலையிலே ஈடுபட்டுத் தன் முழு மனத்தையும் அதனுள் புகுவித்தவனாக இருக்கவேண்டும். அதனைக் கலைக் கண்கொண்டும் காணவேண்டும். இதற்கு வெறும் பகுத்தறிவு மட்டும் போதாது. கலையைச் 'சுவைக்கும்' விதத்திலே அவன் அறிவு அமையவேண்டும். கலை, கவிதை, இலக்கியம் எல்லாம் அறிவுக்கு அப்பாற்பட்டனவாய் இதயத்தை இளக்கி இன்பவுணர்ச்சிகளை எழுப்பவல்ல எழிற்பொருள்கள். அவற்றை உணர்வு ததும்ப நுகரவேண்டும். பின்னர் அறிவு நிரம்ப ஆராயவேண்டும். இசையுணர்ச்சியே இல்லாத ஒருவன் பண்ணையும், பதம் ஏழையும், பலவோசைத் தமிழினையும் எண்ணவும் தான் முடியுமா? பின்னர் அவன் ஆராய்வது எப்படி? அது போன்றதே இலக்கிய விமர்சனமும். ஒரு நூலினுட் புகுந்து ஆராய முற்படுகின்றவர்கள் அந்த நூலிடைக் கலந்த உளத்தராய், அதன் கவினைக் கண்டறியும் கருத்துடையராய் இருக்கவேண்டும். ஒரு நூலிலே அழகு இருக்கவும் செய்யலாம், இல்லாதும் போகலாம். விமர்சனத்தின் முடிவு எத்தகையதாய் இருப்பினும், அது பின்னர் நிகழவேண்டியது. முதலில், நூலினை அழுந்தக்கற்று, அதனை முழுதும் முடிமுதல் அடியின் காறும் ஒருங்கே நோக்கி நுனித்து அறியும் திறனைப்பெறவேண்டும். பின்னர் பல்லாற்றானும் ஒப்பிட்டு உண்மையை உணரவேண்டும். வேண்டுதல் வேண்டாமைத் தூண்டுதலின்றி, நாணல் கோணல்களால் நடுநிலை அழியாமல், சீர்தூக்கி மதிப்பிடுதல்வேண்டும். [illegible] டைய காலம், அவன் வாழ்ந்த

சூழ்நிலை, நூல் தோன்றுவதற் கேதுவாகிய நிகழ்ச்சிகள், நூல் நுதலிய பொருள், ஆசிரியனின் குறிககோள, உள நூலோடு ஒட்டிய வாழ்ககைப் பண்புகள் முதலியவற்றைத் தற்காலப் போக்கோடு ஒப்பிட்டு ஓர்தல்வேண்டும் கலைஞன் கனவிலும் கணடறியாத விருப்பு வெறுபபுககளை நூலினுள வலிநது திணித் துக்கொண்டு நாம் எடைபோட ஆரமபித்தால், நாம உண்மை யைக் கண்டு கூறினவர்கள் ஆகமாட்டோம நாம் அடையும் முடிபுகளும் பெரியதொரு நாணுக நாணுத்தரும்.

அடுததபடியாக, தகுதி என்பதும் மிக அவசியம். கடவுள் நம்பிக்கையே இல்லாத ஒருவன் திருவாசக நூலினை எடுத்து ஆராய்கிறுன் என்றுல், அவனுடைய ஆராய்ச்சி பொருத்தமாய் எஙஙனம் இருக்கமுடியும்? அது பிழைபட்டுததான் இருக்கும். இதற்குப் பதிலாக அவன் ஒரு நாத்திக நூலினை நாடியெடுத்து நன்கு ஆராய்தல் கூடும் இதுவன்றி, முடிபுகளை முதலிலேயே தயார்செய்து வைததுக்கொண்டு ஆராயததொடங்குவது பேதைமையாகும்.

குற்றமே காணும் குறியுடன் ஒருவன் ஒரு நூலினை எடுத் தால், அதன் அழகு நயங்களையும், உயாவு சிறப்புகளையும் அவன் கண்ணிருநதும் காணமாட்டான் கண்டாலும் கூறமாட்டான். உண்மையை ஒளித்துப் பொய்யைப புலபபடுத்துவான். ஓர் அழகிய நகரைச் சுற்றிக்காணும ஒருவன், கண்ணுக்கும் கருத் துக்கும் விருநதளிககும் காட்சிகளைக் கண்டு களியாமல், மறைந்துகிடக்கும் குப்பைக் குவியல்களையும், மண்ணுக்குக் கீழ் ஓடும் அழுக்கு நீர்த்தாரைகளையும் கிண்டிக் கிளறிப் பார்த்து விட்டு அருவருப்புடன் மீண்டானுனல், அவன் நகரைக் கண்ட வன் ஆவானு? சுவையும மணமும நிறைந்த கனிகள் குலைகுலை யாய் அலைந்தாடும் சோலையிலே வேப்பம்பழம் விரும்பும் காக்கையைபபோல், விமர்சனம செய்வோர் மனம இருததல் கூடாது மஞ்சட் காமாலைக்காரனுக்குக் காண்பதெலலாம் மஞ்சளாகவேயிருக்கும். அவன் காட்சிக் கோளாறுகளைக் காட்சிப் பொருள்கள்மேல் ஏற்றிக் கூறுவது நேர்மையாகாது. ஒருவன் என்ன நோக்கத்துடன் ஒரு நூலினைப் படிக்கிறுனே, அதை எந்த முறையில் சுவைக்கிறுனே, எநத அளவுகோலால் அளக்கிறுனே, அதற்கியைந்தவாறுதான் அவன் விமர்சன முடிவுகளும இருக்கும். ஒரு நூலினைத் தான் சுவைத்த விதத் திலே பிறரையும சுவைக்கச்செய்து, அழிவழக்குரையாது, கலை யறிவைப் பெருக்குவதுதான் இலக்கிய விமர்சனம்.

# திருக்கோவையார் ஆராய்ச்சி

[சித்தாந்தபண்டிதர், திரு. ப. இராமநாத பிள்ளை]

(சிலம்பு - உஎ. பரல் கக ருய0ச-ஆம பக்கத தொடர்சசி)

உட்கோள்[1]

மக்கள் உள்ளாள் என்று தலைவன் நயந்தனன். நயநதபின் சென்று எய்த நினைந்தனன். நினைந்தவன் தன்மாட்டு அவளுக்கு உண்டாகிய காதலை அறிய உன்னினன் உன்னிக் காதலை அவள் கண்ணிறகண்டு தனனுள் கொள்ளாநின்றனன். இதுவே உட்கோள் என்ப.

மின்னலையும பாமபையும ஒத்துக் காண்டற்கு அருமையும் துவள்வும் உடைய இடையையும, பெருநதோளினையும உடையாளது படைபோலும கண்கள் பிறழுமதோறும பிறழும் தோறும் பொதுநோக்கத்தாற் பிணியும, உள்ளக்கருதது வெளிப்படுக்கும நாணேடு கூடிய சிறப்பு நோக்கததால் அதற்கு மருநதும் ஆகாநினறன எனக்கு நகையும அமிழதும உயிரும் ஆயவன் ; தில்லைக்கண் சிந்தாமணிபோன்று மெய் அன்பாகட்கு நினைத்தவை கொடுபபோன், அன்பரல்லாத தேவர்கள அறியாத அநதணன். அவனுடைய திருஅடிகளை வாழ்த்தாதவர் பிணியுறுவர். அதுபோல் படைக்கண்களால் யானும பிணியுறு

இடை சிறுகி இருக்கவேண்டும் என்பதனை ருய0க-ஆம் பக்கததிற் காண்க. சிறுகுதல் என்பது நுணுகுதல் என்று பொருளதரும். நுண்மை திண்மையுடையது. அஃது 'அச்சாணி'யாற். காண்க. சிறுகவேண்டிய பகுதிகள் 'நுதல் அடி நுசுபபு' என்ப இமமூன்றும முறையான நோக்கின் நுதல் நுசுப்பு அடி என அமையும். இம்மூன்றும் ஒருபுடை ஒபபாக எண்ணல் இயக்கல் இயங்கற் கருவிகளாக விளங்கும். இயக்கும் பொருளை உய்த்துணர்வதுபோன்று இடையினையும உய்ததுணருமாறு மின்னல் ஒப்புக் கூறுவாராயினர். பெண்பாலார் பிறர்பால் பேசநேரின் சொறசுருக்கமும் பொருட்பெருக்கமும்

1. 'அணியுமமிழ்து' திருககோவையாா, ௫.

காலக்குறுக்கமும் உடையவாய்ப் போதல்வேண்டும் என்னும் உள்ளுறையும மினனல ஒபபில பொருநதுவதாகும். இவ வுண்மை வரும் திருபபாட்டான் உணாக

"அன்பு நாரா அஞ்செழுததும் நெஞ்சு தொடுக்க அலாதொடுத்தே
என்புள் ளுருககும் அடியாரைத் தொழுது நீங்கி வேறிடத்து
முனபு போலத் திரைநீக்கி முதல்வா சாததுப் பணிகொடுதது
மின்போல் மறையும சஙகிலியார தம்மை விதியாற் கணணுற்ருர்"

—கஉ. ஏயாகோன-உஉசு.

அணி

அணி அழகுசெய்வது இவ்வழகிஞல் உண்டாகும் மகிழ்ச்சியை நகை என்பர். அபபொருள பயக்கும் வாயிலாகிய அந் நகை என்னும் சொல் அணிக்கும பெயராயிறறு அணிகலன் முதலியவற்ருல் வரும் அழகு செயற்கை அழகு. இயறகை யழகு உழைப்பால் நல் உளததால் ஒழுக்கால் ஒப்புரவால் இசையால் ஊராண்மையால் பேராண்மையால் செம்பொருட் சிறப்பு முதலியவற்ருல் உண்டாவது இவ் இயற்கை அழகே ஈடும் எடுப்பும இலலா, எழில் தருவது. இதுபற்றியே கற்புடைத் தெய்வமாம பொற்புடைக் கண்ணகியை நலம் பாராடடும் 'சிலை வலான் போலும் செறிவினன்' ஆகிய கோவலன் "மறுவின் மங்கல அணியே அன்றியும், பிறிதணி அணியப் பெற்றதை எவன் கொல்" (சிலப். உ. மனையறம்-சுரு, சுச) என்று இயற்கை அழகையே சிறப்பித்துப் பாராட்டுதல் காண்க. "கற்ருேர்க்குக் கலவி நலனே கலன்" என்னும (கரு) குமரகுருபர அடிகள் திருப்பாட்டானும் உணா்க "நெஞசத்து நலலம் யாம் என்னும நடுவு நிலைமையால் கல்வி அழகே அழகு," என்னும் (கருக) நாலடியார்ப பாட்டானும உணாக.

திருவள்ளுவப் பெருந்தகையாரும "நுண்மாண் நுழை புலம் இல்லான் எழில்நலம், மண்மாண் புனைபாவை அற்று" (சOஎ) என்று அருளவாராயினர். இவ் அழகின் மெய்ம்மை, பிறவுயிர் பேணும் பெற்றியால் ஏற்படும் வெற்றிக் காலணியால், மேல்நோக்காம் மெய்யுணாவு நோககிஞல் பொன்போல் மிளிரும் பொற்புடை ஒளிமேனியால், நிலையாமை உணர்த்தி நிலைப்பதை அடைந்து பேரின்பம உறசெய்யும் பெருநெறித் திரு அடையாளமாகிய திருவெண்ணீற்று அழகால், அறவழி நின்று பிறர்க்கும் உணர்த்தி அவர்களைப் பீடுற நிற்பிக்கும் பேற்ருல் அழகும் இளமையும் என்றும் நின்று நிலவும் என்பதனுல் பெறப்படும். இவ்வுண்மை வரும் திருப்பாட்டான் உணர்க:

"தழல்கொள் காலினர் காலனைக் காய்ந்தவர்
தழல்கொள் மேனியர் சாந்தவெண் ணீறணி
அழகர் ஆலநிழல் கீழ்அறம் ஓதிய
குழகர் போற்குளிர் நாகேச் சுரவரே." —ரு. கசுசு-அ.

தழல்கொள்மேனி - ஒளிகொள்மேனி சாந்தம் - சந்தனம்; உண்மை உணர்வால் பெறும் அமைதி அழகு - பிறர்நலம் பேணும் பெற்றிசால் தூய உளத்தால் தோன்றும மேனி அழகு அறவழி நிற்பாரே அறம் ஓதற்கு உரியார்; அவர்க்கு அழகும் இளமையும ஒருங்கு அமையும், அதனுல் குழகு அழகு இளமை என்னும் இருபொருளும் பயப்பதாயிற்று. அழகுக்கு உறைவிடம் இளமையாதலால் இடமும் இடத்து நிகழ்பொருளும் போல் இயைந்தது எனலும ஆம.

"மழவும குழவும் இளமைப் பொருள." —தொல். சொல்-௩கக.

கழல் - பிறவுயிர் காத்த ஆண்மையால் பெறும் மாண்பார் இவவுண்மை வரும் திருப்பாட்டான் உணர்க:

"சுழலும் இசைவேண்டி வேண்டா உயிரார்
கழலயாப்புக் காரிகை நீர்த்து." —திருக்குறள், எஎ௭.

அமிழ்து

அமிழ்து காண்டலானும் தீண்டலானும கருதலாலும் மாண்ட மனத்தோடு மாந்தலானும வல்லார்வாய்க் கேட்டலானும் உயிர்தளிர்க்கச் செய்யும் ஒப்பில்லாத உரை உரு ஊண் என்ப உயிர் தளிர்த்தல் என்பது பிறவாப் பெருநெறி எய்திச் சிறப்பென்னும் செம்பொருட்கு அடிமையாய் இறவாநிலை எய்தி "என்றும் இன்பம் பெருகும் இயல்பினோடு, ஒன்று காதலித்து உள்ளமும ஓங்கிட" நின்று நிலவுதல். அதற்குத் துணையாக உடலோடு நின்று நிலையுதலையும் ஒருபுடை ஏற்றுரையாகக் கூறலாம். உடலளவு உடை நிலையாது. உயிரளவு உடல் நிலையாது. உயிரே அழிவின்றி என்றும் நிலைப்பது அமிழ்துகழி பெருஞ் சுவையோடு உறுதி பயப்பது. உறுதி - வீடு பேறு. இவ்வுண்மை வரும் திருப்பாட்டான் உணர்க:

"உறுதோ றுயிர்தளிர்ப்பத் தீண்டலாற் பேதைக்கு
அமிழ்தின் இயன்றன தோள்." —திருக்குறள், கக0சு.

தளிர்த்தல் - இன்பத்தால் தழைத்தல்.

ஆவி

ஆவி காதலிக்கப்படும் பொருள்கள் எல்லாவற்றினும் சிறந்தது. காதலிக்கப்படும் பொருள் பலவற்றுள்ளும மிகச்

சிறந்தவை கனி, கட்டி, கற்புறுநல்லார், தனிமுடி வேந்தாட்சி, ஆவி, ஆண்டான் என்னும் அறுவகைப் பொருள்களுமாம். இவ் அறுவகைப் பொருள்களும் அகம் புறமாக அமைந்துள்ளன. பகுக்குங்கால் முறையே மும்மூன்றாகப் பகுக்கலாம். அகம் புறத்திற்குத் துணையாகும். புறம் வீடுபேற்றுக்குத் துணையாகும். இவ்வுண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க:

“கனியி னுங்கட்டி பட்ட கரும்பினும்
பனிம லர்க்குழல் பாவைநல் லாரினும்
தனிமு டிகவித் தாளும் அரசினும்
இனியன் தன்அடைந் தார்க்கிடை மருதனே.” —தி. ௫௪-௧0.

“என்னில் ஆரும் எனக்கினி யாரில்லை
என்னி லும்இனி யானொரு வன்உளன்
என்னு ளேஉயிர்ப் பாய்ப்புறம் போந்துபுக்கு
என்னு ளேநிற்கும் இன்அம்பர் ஈசனே.” —டு. உ௧-௧.

ஆவியினும் சிறந்தது ஆவி உய்தற்காய நல்லொழுக்கம். நல்லொழுக்கம் என்பது செம்பொருளை மறவாது தம் பயன் கருதாது பிறப்பினையுறாது சிறப்பினை யுறுமாறு செய்யும் இறைபணி என்க இவ்வுண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க:

“ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும்.” —திருக்குறள், ௧௩௧.

“நாம்அல்ல இந்திரியம் நம்வழியின் அல்லவழி
நாம்அல்ல நாமும் அரன்உடைமை—ஆம்என்னில்
எத்தனுவில் நின்றும் இறைபணியார்க்கு இல்லைவினை
முற்செய்வினை யுந்தருவான் முன்.”
—மெய்கண்டார், ௧0 - உ - ௧.

இல்லைவினை - ஏறுவினைப் பிணிப்பு இல்லை. முற்செய்வினை - ஏன்றவினை. தருவான்முன் - ஊட்டுவிக்கும் உடையான்தன் அடிநினைவால் அவன் திருமுன் உடனாய்க் கழியும். உடனாய்க் கழிதல் உள்ளத்துறாது உடலளவாய் நிற்றல். ஏறுவினை - ஆகாமியம். ஏன்றவினை - பிராரத்தம்.

வழக்கு

“ஈறிலின்பம் பயக்கும் இறைவனோடு சார்த்த அணியும் அமிழ்தும் ஆவியும் இறப்ப இழிந்தனவே ஆயினும் பொருளாதுபுரைவே புணர்ப்போன் குறிப்பின், மருளற வரூஉ மரபிற்றென்ப” எனப் பேராசிரியர் திருக்கோவையார் உரைக்கண் அருளுகின்றனர். ஆண்டவனுக்கு ஒப்பாக ஒரு பொருள்

உணர்வு

மெய்ப்பாட்டுப் பொருள் உணர்வு கண்ணினால் யாப்புற அறிதல். "மெய்ப்பாடு என்பது பொருட்பாடு; அஃதாவது, உலகத்தார் உள்ள நிகழ்ச்சி ஆண்டு நிகழ்ந்தவாறே புறத்தார்க்குப் புலப்படுவதோர் ஆற்றான் வெளிப்படுதல்" என்பர் பேராசிரியர். உள்ளத்து நிகழ்ந்தவற்றை முக வேறுபாட்டானும் சொல் வேறுபாட்டானும் கூர்ந்துணர்வார் தேர்ந்து தெளிந்துணர்வர். இவ்வுண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க:

"அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்
கடுத்தது காட்டும் முகம்."　　—திருக்குறள், எ0க.

"கண்ணினும் செவியினும் திண்ணிதின் உணரும்
உணர்வுடை மாந்தர்க்கு அல்லது தெரியின்
நன்னயப் பொருள்கோள் எண்ணருங் குரைத்தே."
—தொல். மெய்ப் - உஎ.

உணர்வுடை மாந்தர் - நுண்ணிதின் ஆராய்ந்துணரும் அறிவுடைத்திறலோர்

மெய்ப்பாடு

'உவகையைச் சார்ந்த பெருமிதம்.' ஈண்டு உவகை யுணர்வு பற்றியும், பெருமிதம் கல்வி பற்றியும் வந்தன.

பயன்

தலைமகளது குறிப்பறிந்து மகிழ்தல்.

அவள் உடன்பாட்டுக் குறிப்பு அவள் நாட்டத்தான் உணர்ந்தான்.

"நாட்டம் இரண்டும் அறிவுடம் படுத்தற்குக்
கூட்டி உரைக்கும் குறிப்புரை யாகும்."
—தொல் பொருள் கக.

கைக்கிளை

, தெளிதல், நயப்பு, உட்கோள் என்னும் ஐந்தும் கைக்கிளையின்பாற்படும். அகத் தமிழின்கண் கைக்கிளை வருதல் அமையாது எனினும் "களவிக் கோவையின் எடுத்துக் கோடற்கண் காட்சி முதலாயின சொல்லுதல் வனப்புடைமை நோக்கி அருளினார்" என்க. இக்குறிப்பு வரும் நூற்பா வருமாறு:

"முன்னைய நான்கும் முன்னதற்கு என்ப."
—தொல். பொருள், ருஉ

# விழுமியான்

[வித்துவான், திரு. ஆ. சிவலிங்கனார், மயிலம்]

மூத்தவனை வானவர்க்கும் மூவா மேனி
முதலவனைத் திருவரையின் மூக்கப் பாம்பொன்று
ஆர்த்தவனை யக்கரவ மார மாக
அணிந்தவனைப் பணிந்தடியார் அடைந்த அன்போடு
ஏத்தவனை யிறுவரையில் தேனை ஏனோர்க்கு
இன்னமுத மளித்தவனை யிடரை யெல்லாம்
காத்தவனைக் கற்குடியில் விழுமி யானைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன் நானே.

அப்பர் அடிகளின் இத் திருத்தாண்டகத்தைப் படித்த காலத்தில் ஈற்றடி எம் மனத்தை யீர்த்தது. அதில் 'கற்பகத்தை' என்ற சொல் தடித்த எழுத்துக்களில் காணப்பட்டது ஒரு பதிப்பில். உடனே அதுபற்றிப் பார்க்கையில் கற்குடி யிறைவன் திருப்பெயர் கற்பகநாதர் எனத் தெரியவந்தது. 'கற்குடியில் கற்பகத்தை' எனச் சேர்த்துக் கூறியிருப்பின் மன அமைதி கொள்ள நேரும். ஆனால் 'கற்குடியில், விழுமியானைக் கற்பகத்தை' என இடையில் 'விழுமியானை' என்பது இருப்பது காரணமாக மனம் அமைதிகொள்ளவில்லை. 'விழுமியான்' என்பதற்கு மேம்பட்டவன், 'சிறந்தவன்' எனப் பொருள்கள் உள. இதன் நேர் வடசொல் 'பரமன்' என்பது. எனவே 'கற்குடிப் பரமன்' என்று பொருள்படும்படிக் 'கற்குடியில் விழுமியான்' என நாவுக்கரசர் நவின்றனர்போலும் என நினைத்து மன அமைதி கொள்ளலாயினேம். பின்னர் சம்பந்தர், சுந்தரர் தேவாரங்களைக் காண்போம் என்று அவர்கள் கற்குடி யிறைவனைப் பாடிய பதிகங்களைப் பார்த்தேம். சம்பந்தர் பதிகத்தில் 'விழுமியான்,' 'கற்பகம்' என்ற சொற்களையே காணவில்லை. சுந்தரர் பதிகத்தில் இரண்டு பாக்களில் 'கற்பகம்' என்றசொல் வந்துளது.

நிலனே நீர்வளி தீ நெடுவானக மாகிநின்ற
புலனே புண்டரிகத் தயன்மாலவன் போற்றிசெயும்
கனலே கற்பகமே திருக்கற்குடி மன்னிநின்ற
அனல்சேர் கையினனே யடியேனையும் அஞ்சலென்னே.

அலையார் தண்புனல்சூழ்ந் தழகாகி விழவமரும்
கலையார் மழவர்சேர் திருக்கற்குடிக் கற்பகத்தை
சிலையார் வாணுதலாள் நல்லசிங்கடி யப்பனுரை
விலையார் மாலைவல்லார் வியன்மூவுல காள்வரே.

" சிறந்துழி ஐயம் சிறந்தது என்ப
இழிந்துழி இழிபே சுட்டலான." —தொல். பொருள், ௯௨.

சிறந்துழி - மக்களினும் மிக்கோனும் இடத்து. இழிந்துழி - மக்களுள் இழிந்தோனும் இடத்து. மக்களினும் மிக்கோனைக் கூறும் திருப்பாட்டு வருமாறு :

" முன்னைவர் தெரிந்தோன்றும் முருகனோ பெருகொளியால்
தன்னேரில் மாரனோ தார்மார்பின் விஞ்சையனோ
மின்னேர்செஞ் சடையண்ணல் மெய்யருள்பெற் றுடையவனோ
என்னேஎன் மனந்திரித்த இவன்யாரோ என்கின்றார்."

—கா. புராட். ௯௨௯.

முருகன், மாரன், விஞ்சையன், அருள் ஆகிய நால்வர் தம் குறிப்பால் முறையே அறம் பொருள் இன்பம் வீடு என்னும் உறுதிப்பொருள் நான்கும் பெறப்படும். முன்னியது முடிக்கும் ஆற்றலமை முருகன் ஒப்பால் பிறர் அன்பாய் போற்றி அனைவர்க்கும் இன்பம் ஆக்கும் ஆண்மையும், மாரன் ஒப்பால் ஒருவன் ஒருத்தியாய் வாழ்தலன்றிக் கனவினும் பிறர்மனை நோக்காத பேராண்மை நிறையும், விஞ்சையன் ஒப்பால் முத்தமிழ்ப் புலமையால் நத்தும் செம்மையும், திருவருள் ஒப்பால் உரனும் உருவும் திருவும் ஒருங்கமையப் பெற்றமை இறைவன் திருவருட்பேற்றால் என்னும் வாய்மையோடு ஆண்டான் அடிமை வழக்குப் பூண்டொழுகும் அகம் புறம் தூய்மையும் பெறப்படும். (தொடரும்)

## காதற்சிறப்பு

இருவரும் பெண்பாலர்கரிடும் பெருமான் பேரருளால் 'உயிரொன்று உளமும் ஒன்று ஒன்றே சிறப்பெனை' ஒப்பனர். இதுவே உயிர் எய்தும் முறை இயைபு. என்னை? இறைவன்பால் உண்மை அறிவு இன்பம் மூன்றும் உள. உயிர்கள்பால் உண்மை அறிவு என்னும் இரண்டே உள்ளன. மாயையின்பால் உண்மை ஒன்றே உளது. இன்பம் துய்க்கும் ஒருயிர் ஆண்பெண் என ஈருருக் கொண்டு அவ்வின்பத்தை நுகர்கின்றமையான் என்க. சிறந்த பொருளை மிக்க கொள்ளை கொள்ளும் அமைவர் கொள்கலம் பல கொள்ளல் பயனுடைப் பண்பாம் அன்றே! இவ்வுண்மை,

" ஆனந்த வெள்ளத் தழுந்துமொ ராருயிர் ஈருருக் கொண்டு
ஆனந்த வெள்ளத் திடைத்திளைத் தாலொக்கும் அம்பலஞ்சேர்
ஆனந்த வெள்ளத் துறைகழ லோனருள் பெற்றவரின்
ஆனந்த வெள்ளம் வற்றாது முற்றாவின் வளங்கிளரே."

என வருதலால் ஓர்க. (அ. திருக் - ௧.)

—இனியன்

இப்பாக்களில் சுந்தரர் 'திருக்கற்குடிக் கற்பகம்' எனக் கூறியிருப்பதுகொண்டு 'திருக்கற்குடி யிறைவன் பெயர் 'கற்பக நாதர்' என்பதாவேபோலும்,'' என எண்ணினேன்.

இந்நிலையில் சேக்கிழாரடிகளின் நினைவுவரவே, 'அவர் மூவர் வரலாறுகளையும் கூறிய விடங்களில், அம்மூவர்களும் சென்று வணங்கிய திருத்தலங்களையும், அத் தலங்கள் சிலவற்றிற்குச் சிறப்பு நிகழ்ச்சிகள், பெயர்கள் முதலியவற்றைக் கொண்ட அடைகளையும் கூறிச் சென்றனராதலின் அவரது பெரிய புராணத்தைக் கண்டு தெளியலாம்' என எண்ணிப் பெரிய புராணத்தைப் பார்த்தேம். சுந்தரர் வரலாற்றில் சுந்தரர் பல தலங்களையும் வணங்கிக்கொண்டு வந்தவர் கற்குடி வந்தும் இறைவனைப் பாடி வணங்கிச் சென்றார் என்ற இடத்தில்

"வீடு தருமிக் கற்குடியில்
விழுமி யாரைப் பணிந்திறைஞ்சி
நீடு விருப்பில் திருப்பதிகம்
நிறைந்த சிந்தை யுடன்பாடி"

எனக் கூறினார். சேக்கிழாரும் 'கற்குடியில் விழுமியார்' எனச் சேர்த்திருப்பது கொண்டும், அப்பரது அருள்மொழியில் 'கற்குடியில் விழுமியாரை' என வந்ததுகொண்டும், கற்குடி யிறைவன் பெயர் 'விழுமியான்' என்பதேயாகலாம் என மீண்டும் எண்ணவேண்டியதாயிற்று.

மன அமைதி யில்லாதவர் அமைதிநாடிப் பொழில், கடற்கரை முதலிய இடங்களை நாடிச்செல்வர். யாமும் அமைதிநாடி தருமபுர வெளியீடு அறிவுரைப் பூம்பொழிலில் புகுந்தேம். புகும் வழியில்,

"பொழிலில் புகுந்தால் வெப்பம் தோன்றுவதில்லை. நறுமணம் வீசுகிறது. பலநிறப் பூக்கள் கண்ணைக் கவர்கின்றன. இயற்கையன்னையின் மடியில் இறைவன் பேரருட் டிறத்தோடு உறவாடி, கொஞ்சிக் குலாவியிருக்கும் பறவைகள் தம் குரலால் செவிக்கு இனிமையைச் செய்கின்றன. சுருங்கச் சொன்னால் இவ்வண்ணமாக மனிதன் கண்டு கேட்டு உண்டு உற்று அடையும் எல்லா இன்பங்களையும் பொழிலிற் புகுந்து அடைகின்றான் என்னலாம். இந்த அறிவுரைப் பூம்பொழிலினும் அப்படித்தானே அடையவேண்டும்!"

என்று யாரோ கூறியது காற்றில் மிதந்துவந்து கேட்டது. ஆம்! இப்பொழிலில் இன்பம் எய்தலாம் என்றே நுழைந்து

கண்டுகொண்டே சென்றேம். சென்ற எமக்கு மன அமைதிக்குரிய வகையில் ஒரு பொருளும் கிடைத்தது. அளவற்ற மகிழ்ச்சி கொண்டேம். இதோ அப்பொருள் :—

"திருச்சிராப்பள்ளிக் கருகில் உய்யக்கொண்டான் திருமலை என்ற திருத்தலமும் சிறு குன்றின்மேல் சிவாலயமும் இருக்கின்றன. அது பாடல்பெற்ற தலம். திருக்கற்குடி என்று தேவாரத்தில் பெயர்கொண்டது. அவ்வூரைப் பல்லவன் நந்திவர்மன் பிரமதேயமாகத் தானம் தந்ததினல் அது நந்திவர்ம மங்கலம் என்று பெயர் பெற்றிருந்தது. அப் பல்லவனுக்கு வயிரமேகன் என்ற பட்டம் இருந்தது. அதினுல் அவன் வெட்டின வாய்க்காலுக்கு வயிரமேகன் வாய்க்கால் என்ற பெயரும் ஏற்பட்டது. பண்டைக்காலத்தில் இத்தலத்து மூர்த்திக்குத் திருக்கற்குடி ஆழ்வார் விழமியார் என்ற பெயர் இருந்ததாகவும் கல்வெட்டுக்கள் கூறுகின்றன. பின்னுளில் அம்மூர்த்தியின் பெயர் உய்யக்கொண்ட நாயகன் என்று மாற்றப்பட்டது. அது உய்யக்கொண்ட சோழனுல் மாற்றப்பட்டது என்று அறியலாம். மலையின் பெயரும் உய்யக் கொண்டான் திருமலை என்றும், வாய்க்காலின் பெயரும் உய்யக்கொண்டான் ஆறு என்றும் மாறிவிட்டன. இந்த ஆலயத்திற்குச் செம்பியன் மாதேவியார் பல அருமையான திருப்பணிகளை செய்தார். அவர் செய்த காலத்தில் சுவாமியின் பெயர் 'பரமேசுவரர்' என்றும் 'விழமியார்' என்றுமே யிருந்தன. திருக்கற்குடிப் பரமேசுவரருக்கு வழிபாட்டிற்காகப் பராந்தகன் மாதேவர் மகளான செம்பியன் மாதேவியார் நிலதானம் செய்ததாக ஒரு கல்வெட்டுக் கூறுகிறது. (458 of 1908). பிறகு காந்தளூர்ச்சாலை கலமறுத்த இராசகேசரிவர்மன் பத்தாமாண்டில் (கி. பி. 995) அதே தேவியார் முப்பது மாணிக்கம் வயிரம் பதித்த ஒரு பொன்முடியை நந்திவர்ம மங்கலத்துத் திருக்கற்குடி ஆழ்வார் விழமியார் ஆலயத்திற்கு அளித்ததாக ஒருகல்வெட்டுக் கூறுகிறது (459 of 1908)." இவ்வளவும் அறிவுரைப் பூம்பொழிலில் "செம்பியன் மாதேவியார்" என்ற தலைப்பில், கோவை கிழார் எழுதப்பட்ட கட்டுரையில் உள்ளன. திருக்கற்குடிக் கல்வெட்டுக்களில் இறைவன் பெயர் 'விழமியார்' என்றிருத்தலை நாம் அறிதல்வேண்டும்.

அப்பரது காலம் கி. பி. 7-ம் நூற்றாண்டின் தொடக்கம். செம்பியன்மாதேவியார் காலம் 10-ம் நூற்றாண்டின் இடைக் காலம் (949-95). சேக்கிழார் காலம் 12-ம் நூற்றாண்டின் இடைப்பகுதி. எனவே 12-ம் நூற்றாண்டு வரைத் திருக்கற்குடி இறைவனுக்கு 'விழமியார்' என்ற பெயர் வழங்கி வந்திருக்கின்றது எனநாம் அறியலாம். 'கற்பகம்' என்ற பெயர் என்

வாறு வந்ததென்று தெரியவில்லை. அப்பாரது வாக்கில் வந்ததைக் கொண்டு அப்பெயரே நிலைத்துப் பின்னர் கற்பகம் என்ற பெயர் எப்படியோ மக்களிடையில் வழக்காற்றில் வந்திருக்கவேண்டும். பின்னர் வந்த சுந்தரரும் அப்பரது வாக்கைக்கொண்டும் மக்கள் வழக்கத்தைக் கொண்டும் 'கற்குடிக் கற்பகம்' என்றார் போலும்! எவ்வாறாயினும் விழுமியார் என்ற பெயரும் இருந்திருக்கின்றது. கல்வெட்டாராய்ச்சியில் மிக்க வல்லுநரான சேக்கிழார் 'விழுமியார்' என்ற சொல்லை மேற்கொண்டது கல்வெட்டாராய்ச்சியின் நுண்மாண் நுழைபுலத்தை யன்றோ நன்கு விளக்குகின்றது! சேக்கிழார் காலத்திலும் விழுமியார் என்ற பெயரும் வழக்கில் இருந்திருக்கலாம். 'கற்பகம்' என்ற பெயரும் இருந்திருக்கலாம்.

இனி 'விழுமியார்' என்ற சொல்லின் பொருள் வளர்ச்சியைக் காணலாம். 'விழுமம்' என்ற உரிச்சொல்லடியாக 'விழுமியார்' தோன்றியது. "விழுமம் சீர்மையும் சிறப்பும் இடும்பையும்" என்பது தொல்காப்பிய நூற்பா. (தொல். சொல். உரி. 57). 'விழுமம்' என்பது 'சீர்மை,' 'சிறப்பு,' 'இடும்பை' என்ற மூன்று பொருள்களைக் குறிப்பால் உணர்த்தும். ஈண்டு 'இடும்பை'யை யுணர்த்துவதைத் தவிர மற்றவற்றை யுணர்த்தும் முறையினைக் காணலாம். 'சிறப்பு' என்பது பிறரால் செய்யப்படுவது. 'சீர்மை' என்பது பிறரால் செய்யப்படும் சிறப்பினை ஏற்றுக்கோடற்குரிய தகுதியாகும். எனவே 'விழுமம்' என்பது முதலில் சிறப்பு என்ற பொருளுணர்த்திப் பின்னர் 'சீர்மை' என்ற பொருளுணர்த்துவதாயிற்று எனலாம்.

"கேடில் விழுப்பொருள் தருமார்." (குறுந்தொகை. உஅ)

"வீதலறியா விழுப்பொருள்." (கலித்தொகை. அக)

என்ற விடங்களில் 'சிறப்பு' என்ற பொருளும்,

"விழுமிய பெறலருங் பரிசில் நல்குமதி." (பத். மதுரை. 294 5)

"பெருநான் இருக்கை விழுமியோர் குழீஇ
விழைவுகொள் கம்பலை." (பத். மதுரை 325 6)

என்ற விடங்களில் 'சீர்மை' என்ற பொருளும் வந்தமை காணலாம்.

சீர்மையுடையார் - விழுமம் உடையார்; விழுமியார்' எனப்பட்டார். அவரவர் கொண்ட துறைகட்கேற்பச் சிறப்புச் செய்வர் மக்கள். சிறப்புச் செய்யத்தக்க வீரனயின் அத்துறையில் அவன் விழுமியான் ஆவான்.

(விழுமம்) பெறுவர் அன்றோ. கடவுள் தரும் வீடும் விழுமம் உடையதாகும். வீடு விரும்பத்தக்கது - போற்றத்தக்கது - சீர்மையுடையது.

“விழுமிய பெறலரும் பரிசில் நல்கும்” என்றவிடத்துப் பரிசிலாகிய வீடு விழுமியது எனக் குறித்தது காண்க. விழுமிய பொருள் தருபவன் விழுமியான் ஆவான். எனவே வீடு தருப வன் - விழுமம் தருபவன் விழுமியான் என இறைவனுக்குப் பெயர் வந்தது.

வடமொழியாளர் நம் தமிழ்ச்சொற்களைத் தம் மொழியில் நேராகவும் மொழிபெயர்த்தும் மேற்கொண்ட வகையில் கற்குடி யிறைவன் பெயர் ‘விழுமியார்’ என்றிருப்பது கண்டு அதனை மொழிபெயர்க்கவேண்டிப் ‘பரமன்’ என்று மொழிபெயர்த்தன ராவர். விழுமம் என்பது சீர்மைப் பொருளில் வந்து பெருமை (Pride) என்ற பொருளதாயினை நிலைகொண்டு, பெருமை யுடையவன்—மேம்பட்டவன் என்ற பொருளில் ‘பரமன்’ என்று கூறி இறைவனைப் ‘பரமேசுவரன்’ என்றனர் போலும்! கல்வெட்டு ஒன்றிலும் ‘கற்குடிப் பரமேசுவரர்’ என்றுள்ளமை யும் காணலாம. ‘விழுமியார்’ என்பதற்கேற்பப் ‘பரமேசுவரர்’ என்றதும் வழக்கில் இருந்ததுபோலும்! ஆனால் ‘கற்பகநாதர்’ என்பது பிற்காலத்தில் எவ்வாறு வந்ததோ? ஆராய்ந்து காண வேண்டும்.

## மணிமேகலை

இஃது, ஐம்பெருங்காப்பியங்களுள் ஒன்று. யாற்றொழுக்குப்போலச் செம்மை சான்ற அடிகளையுடையது; இது, சிலப்பதிகாரப் பெருங்காப்பியத்தின் கதையோடு தொடர்புடையது; இதன்கண் அறமும், தமிழர் ஒழுகலாறும், வருணனைப் பகுதிகளும் செறிந்து கற்பார் நெஞ்சம் களிமகிழ்கொள்ளுமாறு அமைந்து செல்லும் சீர்மையாய்ந்தது. இதன்கண் வருஉம் மக்கள்தம் நிலையாமை உணர்ந்து அறஞ்செய்யத் தூண்டும் அரிய வுரை செம்மை நிரம்பிய நீர்ச்சுவைத்தாகும். அஃது:

“தவத்துறை மாக்கள் மிகப்பெருஞ் செல்வர்
ஈற்றிளம் பெண்டிர் ஆற்றாப் பாலகர்
முதியோர் என்னான் இளையோர் என்னான்
கொடுந்தொழி லாளன் கொன்றனன் குவிப்ப இவ்
அழல்வாய்ச் சுடலை தின்னக் கண்டும்
கழிபெருஞ் செல்வக் கள்ளாட் டயர்ந்து
மிக்க நல்லறம் விரும்பாது வாழும்
மக்களிற் சிறந்த மடவோர் உண்டோ?” (மணி ௬: ௯௭ - ௧௦௪)

—செல்லூர்க்கிழார்

# கானகத்திலே காதல்

[திரு. பா. இளங்கோவன்]

இயற்கையிலேயே உல்லாசமான இதயம் பெற்றவள் இளவெயினி. கள்ளங்கபடமற்ற கன்னித்தன்மை வாய்ந்தது அவளது இதயம்; பனிக்குளிர்ச்சியின் பசுமை படர்ந்த காலையிலே கதிரவனின் ஒளி பரவுவதைக் கண்டு ஒலியெழுப்பும் பறவைக் கூட்டங்களின் களிப்பைப்போலவே இயற்கையானமகிழ்ச்சி துள்ளிக் குதித் திகழ்ந்தது அவளிடம்.

கவலையையே அறியாத குழந்தைப் பருவத்தை அப்பொழுதுதான் கடந்திருந்தாள் அந்தக் கன்னி. வேதனையை அறியாத வேடிக்கை—விநோதமான விளையாட்டு—அழகான குறும்பு—சிறுபருவச் சுபாவம்—இவை அனைத்தும் அமைந்த இன்பக்குழவியாகவே இருந்தாள் இதுவரை! ஒரு விநாடிக்குள் வீட்டையே தலைகீழாக மாற்றிவிடுவாள்! செல்லப்பெண்ணாகவே பதினேழு ஆண்டுகள் வளர்ந்துவிட்டாள். சின்னஞ் சிறிய சிறுமி அவள், பயமறியாத பளிங்கு மனப்பான்மையோடு சிட்டெனப் பறந்து திரிவாள் பகல் முழுவதும்! ஆனால், இருள் கவிழ்ந்ததும், ஒரு சிறிய ஆட்டுக்குட்டியைப் போன்று அடங்கி அயர்ந்து உறங்கிவிடுவாள்.

வானப் பெரும்பரப்பில் கன்னங்கரிய முகில்கள் கூடிக் குலவி குலைந்ததைப் போலவே—கடுமையான மழைபெய்து ஓய்ந்ததைப் போலவே—ஒருநாள், அவளது வேடிக்கை, விளையாட்டு, குறும்பு எல்லாம் எங்கேயோ எவருக்கும் தெரியாமல் மங்கி மறைந்துவிட்டன! பெண்மையின் பொலிவு தரும் அமைதி அவளை அணைத்துக்கொண்டது!

அவளுடைய அன்னை, இளவெயினியிடம் குடிகொண்ட இந்த மாற்றத்தைக் கவனித்தாள். அவளது வேடிக்கையும் விளையாட்டும் குறும்பும், இவளுடைய இதயத்தில் இன்பத்தைத் தான் இழைய பின்னியது.

புத்தம் புதியதொரு பெண்ணாக மாறி இருந்தாள் இளவெயினி. இமைப்பொழுதில் நிகழ்ந்துவிட்டதைப் போலவே இருந்தது இந்த மாபெரும் மாற்றம். அடக்கமும் அமைதியுமே அவளுக்கு அழகாக, ஏற்றதாகத் தோன்றியது. அன்னைக்கு—பெண்மையின் முழுப்பொலிவும் அதில் குழைந்திருந்தது. ஆனால், கவனிப்பாரற்றுக் களையிழந்து காணப்பட்டது வீடு. உல்லாசமும் உவகையும் ததும்பும் உரையாடல்களையும் உற்சாக

மூட்டும் அவளின் பாடல்களையும் இப்பொழுதெல்லாம் எவரும் கேட்க முடிவதில்லை. இலைகள் இழந்த மரத்தைப்போலவே ஒரு மூலையில் மூடிக்கிடந்தது யாழ். அவளுடைய அறிவின் திறத்தையும், அடக்கத்தையும் காணும் வேளையெல்லாம், அன்னை வியப்படைவாள். மனையை மகிழ்ச்சியும் புன்னகையும் தவழும் இடமாக்கும் அவளது அழகின் சிரிப்பை இழந்துவிட்டாள் அந்த அன்னை.

முன்னரெல்லாம் அதிகாலையில் விழித்தெழுந்துவிடுவாள் இளவெயினி. ஆனால், அந்தப் பழக்கமும் இப்பொழுது மாறிவிட்டது! நெடுநேரம் கழிந்த பின்னர்தான் படுக்கையைவிட்டெழுவாள்........ஏன்?........நீண்டநேரம் நித்திரை செய்கிறாளா என்ன?........உணவின் அளவையும் இப்பொழுது குறைத்துக் கொண்டாளே! சிலவேளை, கேட்பவர்கள் உள்ளம் புண்ணாகும் அளவுக்கு ஆழ்ந்த பெருமூச்செறிகிறாள்..........!

எல்லாவற்றையும் கவனமாகக் கண்காணித்து வந்தாள் அன்னை. அவளுக்கும் வாட்டம் இல்லாமலில்லை. இளவெயினி பெருமூச்செறியும்போதெல்லாம், உள்ளத்தை எவரோ கிழித்தெறிவதைப் போலவே இருந்தது அந்த அருமை அன்னைக்கு! எந்த நேரமும் மகளைப்பற்றியே அவள் சிந்தித்தாள். "இளமையின் குளிர்தோப்பிலே தனித்து நிற்கிறாள்; அதன் இனிமையை இயற்கையுடன் கலந்து சுவைக்கும் துணையோடு அவளை இணைத்து வைத்துவிட்டால், பிறகு எல்லாம் சரியாகிவிடும்!" என்று அவளுக்குள்ளாகவே முடிவுசெய்து கொண்டாள்

நாட்கள் பல நகர்ந்தன.

இளவெயினுக்கு உலகமே கசந்தபோது, அவள் பாலைப் பருகவில்லையென்றால், அறுசுவை அடிசில் உண்ணவில்லையென்றால், அதில் வியப்பேது? தன் மகள் தனிமையிலேயே இனிமை காண்பதை நோக்கும்போது, அன்னைக்கு ஐயம் தோன்றுவதாயிற்று. ஒருகாலத்தில் அவளும் இளமைப் பருவத்தினளாக இருந்தவள்தானே!

இளவெயினியுடன் நெருங்கிப் பழகும் அவள் தோழியிடம் இதைப்பற்றிக் கேட்டுவிடவேண்டும் என்று கடைசியில் முடிவு செய்தாள் அன்னை. அதேநேரத்தில் இளவெயினியின் தோழி பொற்கொடியும் வீட்டிற்குள் நுழைந்தாள். பழம் நழுவிப் பாலில் வீழ்ந்ததுபோலாயிற்று அன்னைக்கு. நகைமுகம் காட்டி அவளை வரவேற்றாள்.

"வா, பொற்கொடி! எங்கே இரண்டு நாட்களாக இங்கே வருவதே இல்லையே? உன் தோழி (இளவெயினி)யை மறந்து விட்டாயா என்ன?"

"அஃதெல்லாம் இல்லையம்மா! அவள்தான் என்னை மறந்து விட்டாள்! வந்தாலும் வாவென்றழைப்பதில்லை; ஏதாவது பேசினால்கூட 'ஆம்' 'இல்லை' என்ற இரண்டே வார்த்தைகளோடு தன் பேச்சுக்கு முற்றுப்புள்ளி வைத்துக்கொள்கிறாள்!" என்று உரிமையோடு முறையிட்டுக்கொண்டே அன்னை எதிரில் அமர்ந்தாள் பொற்கொடி.

"அவளைப்போன்ற கலகலப்பான பெண்ணைக் கண்டதே இல்லையென்று கூறுவாயே; இப்பொழுது என்ன வந்துவிட்டது உன் தோழிக்கு! என்னிடம்கூட சரியாகப் பேசுவதில்லையே? உனக்கு ஏதாவது தெரியுமா?" என்று ஆராய்ந்தாள் அன்னை.

"எனக்கென்னம்மா தெரியும்" என்னும்போதே அவளுடைய பொய்மையைக் குரல் காட்டிக்கொடுத்துவிட்டது.

"என்னிடம் பொய் சொல்லாதே, பொற்கொடி! உனக்குத் தெரியாமல் இருக்க முடியாது; எதையோ நீ மறைக்கிறாய்!" அன்னை கடிந்துகொண்டாள் "சொல்லம்மா எதையும் என்னிடம் மறைக்காதே! எனக்கும் தெரிந்தால்தானே அதற்கேற்றவாறு நாமும் நடந்துகொள்ளலாம்!" என்றாள் மீண்டும்.

தோழி பேசவில்லை; வாய்வரை ஓடிவந்த வார்த்தைகளை அச்சம் அடித்துத் துரத்திவிட்டது. தலைகுனிந்து தரையில் கீறிக்கொண்டிருந்தாள்.

சிறிதுநேரம் மௌனமாகவே கழிந்தது.

"என்னம்மா, பேசமாட்டேன் என்கிறாய்! மகளைப்பற்றி அன்னையிடம் கூறுவதில் கூடவா இவ்வளவு தயக்கம்! சரி, சொல்லவே வேண்டாம்! போ, போய் உன் தோழியோடு பேசிக் கொண்டிரு!" என்றாள் அன்னை, பொய்க் கோபத்தோடு.

பொற்கொடி தயங்கினாள்; உமிழ்நீரை விழுங்கிக்கொண்டாள்; பிறகு மெல்லக் கூறத்தொடங்கினாள்.

"அன்றொருநாள், மலர்கள் கொய்வதற்காக மலைச்சாரலுக்குப் போயினோம், அம்மா. எழில் நிரம்பிய இயற்கை கொழிக்கும் மலைச்சாரல் அது. காட்டு மலர்களின் மணம் கமழ்ந்தோடி வந்த காற்றில் மிதந்து அலைந்துகொண்டிருந்தது! சிற்றருவியின் சலசலவென்ற ஒலி, மகரயாழின் இசையைப்போலவே அந்தக்

சாரல் முழுவதும் சூழ்ந்து எதிரொலித்துக் கொண்டிருந்தது. வண்ணமலர்க் கூட்டத்தின் வண்ணங்கள் கண்ணைப் பறித்தன. மாலைக்கதிரவனின் இன்பமான அழகில் தங்களை இழந்து இசைபாடிக்கொண்டிருந்தன பறவைகள். நெஞ்சை நெக்குருகச் செய்யும் இத்தகைய இயற்கை அழகிலே எங்களை மறந்து விளையாடிக்கொண்டிருந்தோம். எங்களது குரலைக்கேட்ட பறவைகள், கூடுகளைவிட்டு கூவதெரியாத குஞ்சுகளைவிட்டு வெருண்டோடியது அருகில் ஓடிய அருவியில் நீர்குடித்த மான், எங்களையே சிறிதுநேரம் நோக்கி நின்றுவிட்டுப் புதருக்குப்பின் ஓடி மறைந்தது!..... ......இவற்றையெல்லாம் கண்டபின், கடைசியில் வேங்கைமலர் பறிக்கச் சென்றோம்..........."

இந்த இடத்தில் தனது பேச்சை நிறுத்திவிட்டு, நிமிர்ந்து அன்னையை நோக்கினாள் பொற்கொடி. அன்னை, ஆவலும் ஆசையுமாக இவளையே நோக்கிக்கொண்டிருப்பது கண்டதும், ஏதோ ஒன்று அவள தொண்டையை அடைத்தது; தயங்கினாள்.

"உம.......வேங்கை மலர் பறிக்கச் சென்றீர்கள்........பிறகு ........?" என்று அன்னை துவக்கி வைத்தாள்.

தோழி தொடர்ந்தாள :

"ஆனால், அந்த மலரோ உயரத்தில் இருந்தது; எனவே எங்களுக்கு எட்டவில்லை. குதித்துக் குதித்து மலரைப் பறிக்க முயன்றோம் நாங்கள் குதித்து மேலே சென்றதும அந்த மலர்களும மேலே சென்றுவிடுவதைப் போலவே எங்களுக்குத் தோன்றியதம்மா! உடனே, "புலி, புலி என்று கத்தினோம்!"

"ஏன்........?" என்று இடைமறித்தாள் தாய்.

"புலி, புலி என்று கூச்சலிட்டால், உடனே வேங்கைமலர் கீழே தாழ்ந்துவரும என்று எவரோ சொல்லக் கேட்டிருக்கிறோம், அமமா; அது நினைவுக்கு வந்தது; ஆகவே 'புலி புலி' என்று கத்தினோம்........அபபொழுது........?"

"அப்பொழுது என்ன?"

"எவனோ ஒருவன் எங்கள் முன் ஓடிவந்து நின்றான்! புலி எவ்வழி சென்றது?' 'எந்தப் பக்கமாக அந்தப் புலி போயிற்று?' என்ற வினாக்களை வீசினான்!....நாங்கள் திகைத்தோம்........"

"யார் அவன்?"

"யாருக்குத் தெரியும், அம்மா! அகன்று விரிந்த அவனது அழகுமார்பை மங்கையரின் விழிகளைப்போன்ற செங்கழுநீர்

மாலை அணி செய்துகொண்டிருந்தது. அவன் குழலில் வெட்சி மலர்சூடி இருந்தான். கூர்மை பொருந்திய அம்பையும், வான வில் போலவே வளைந்த வில்லையுமே தோள்களில் வைத்திருந்தான். அவன் எங்களை நிமிர்ந்து நோக்கியவாறே, இனிமையான குரலில், ‘புலி புலி யென்றீர்களே, எங்கே அந்தப் புலி? எப் பக்கம் சென்றது? உங்களுக்கு ஏதாவது துன்பம் நேர்ந்ததா?’ என்று வரிசையாகக் கேள்விகளை அடுக்கினான்!”

தோழி நிறுத்தினாள். அன்னை எதுவும் பேசவில்லை. எனவே மீண்டும் சொல்லத் தொடங்கினாள் :

“அவனைக் கண்டதும், எங்களுக்கு மிகவும் நாணமாகி விட்டது! ஒருவர்பின் ஒருவராக மறைந்து நின்றுகொண்டோம்! ஆனால், அவன், அம்மா, துணிவோடு, ‘கன்னங்கரிய ஐவகைக் கூந்தலையும், அழகிய பிறை நெற்றியையும் உடைய மடநல் லீர்! உங்களுடைய சிவந்த வாய்கூடப் பொய்யினைப் பேசுமோ?’ என்று,—நாங்கள் மறுமொழி பேசாமல் நாணி நின்றும்கூட அதைப் பொருட்படுத்தாமல், பேசினான்! வெண்ணிறப்புரவிகள் இரண்டு பூட்டிய தேரேறிவந்த அவனுடைய கண்கள், உங்கள் மகளின் கண்களைக் கவ்வின; கயிறு கட்டிப் பிணைத்ததைப் போலவே தழுவி நின்றன, அம்மா, இருவர் விழிகளும்! பொய்யாமொழியாரின் குறள் ஒன்று என் நினைவிற்கு வந்தது அப்பொழுது...........”

அன்னை பெருமூச்சுவிட்டாள். அவள் உள்ளத்தைப் படம் பிடித்துக் காட்டுவதைப்போலவே அமைந்திருந்தது அந்த நெட்டுயிர்ப்பு. தோழி பேசிக்கொண்டிருந்தாள் :

“சிறிது நேரம் இப்படியே கழிந்தது. பிறகு அவன் சென்றுவிட்டான். செல்லும்போது, இளவெயினியைத் திரும் பித்திரும்பி நோக்கியவாறே சென்று தேரேறினான். மாலைக் கதிரவன் மறையும் மேற்றிசையில் விரைந்தது தேர். அவன் சென்ற திக்கையே கண்ணிமைக்காமல் நோக்கிச், சிலைபோல நின்றாள் இந்தச் சிற்றிடையாள்!........பிறகு நான் ஏதோ கேட்கவே, அதற்கு எவ்வித தொடர்புமின்றி ‘அவர்....போன வர்....தோழி....ஆண்மகன்........’ என்று ஏதேதோ உளறிக் கொட்டினாள்!”

“இவ்வளவு நடந்திருக்கிறதா?” என்றாள் அன்னை நீண்ட தொரு பெருமூச்சோடு.

தோழியும் தனது பேச்சை அவ்வளவோடு முடித்துக் கொண்டு, “இதுதானம்மா நடந்தது! அறிவுடையார் எல்லா

முடையாரல்லரோ? இதற்கேற்ப அவர்கள் நடந்துகொள்வார்கள்!" என்று முடித்தாள.

இங்ஙன், மலர் கொய்யச் சென்று மணாளனைத்தேடி மணவினை முடிக்கும, காதல்வாழ்வைத் தன்னகத்தேகொண்ட சங்க இலக்கியங்களுள் அகமும் ஒன்று இப்பாடல், ஒபபற்ற ஒரு ஒளிமணி, காலம் கடநதும் சுவை கடவாது நின்று இன்பம் பயக்கும அழகிய இளமாமணி இத்தகைய மாசிலாமணிகளைச் சஙகஇலக்கியம எனும் எழில் பேழையினுள் காணக்கிடப்பன. அவைகளில ஒன்று இந்த அகப்பாட்டு. பெயர்மட்டும் கற்பனை.

அபபாட்டு அடியிற் காண்பது·

கானகத்தே கண்ட தலைவன்மீது தலைவிகொண்ட காதலை, தோழியின் வாயிலாக, தலைவியின் அன்னைக்கு அறிவிப்பதாக அமைந்துளது அநதப் பாடல்.

" அன்னாய வாழிவேண டன்னை நின்மகள்
பாலு முண்ணாள் பழங்கண கொண்டு
நனிபசந் தனளென வினவுதி யதன்றிறம்
யானுந் தெற்றென வுணரேன் மேனாள்
மலிபூஞ் சாரலென் றோழி மாரோடு
பொலிசினை வேஙகை கொய்குவஞ் சென்றுழிப்
புலிபுலி யெனனும பூசறோனற
வொண்செங கழுநீக கணபோ லாயிதழ்
ஊசி போகிய சூழ்செய மாலையன்
பககஞ் சேர்த்திய செசசைக் கணணியன்
குயமண டாகஞ் செஞ்சாந்து நீவி
வரிபுனை வில்ல னொருகணை தெரிநதுகொண்
டியாதோ மற்றம் மாதிறம படரென
வினவி நிற்றந் தோனே யவற்கண
டெம்முள் ளெம்முண மெய்மமறை பொடுங்கி
நாணி நின்றனெ மாகப் பேணி
யைவகை வகுதத கூந்த லாயநுதன்
மையீ ரோதி மடவீர் நும்வாய்ப்ப
பொயயு முளவோ வென்றனன் பையெனப்
பரிமுடுகு தவிாதத தேர னெதிர் மறுதது
நினமக ளுண்கண பன்மா ணோக்கிச
சென்றோன் மன்றவக் குன்றுகிழ வோனே
பகன்மா யந்திப் படுசுட ரமையத
தவனமறை தேஎ நோக்கி மற்றிவன்
மகனே தோழி யென்றனள்
அதனள வுண்டுகோண மதிவல் லோர்க்கே."

—அகநானூறு : ௪௮

# மாங்குடி மருதன் இயலோவியம்

[புலவர். திரு. பொ. வே சோமசுந்தரனார்]

(சிலம்பு-உஎ. பரல்-கக. சகூசு-ம் பக்கத் தொடர்ச்சி.)

முடிகெழு வேந்தர் மூவருள்ளும், படைவிளங்கு தடக்கைப் பாண்டியர் குலத்தோர் அறனும், மறனும், ஆற்றலும், அவர்தம் பழவிறன் மூதூரப் பண்பு மேம்படுதலும், விழவு மலிசிறப்பும், ஒடியா இன்பத்து அவருடைய நாட்டுக் குடியும், கூழின் பெருக்க மும், அவர்தம வையைப்பேரியாறு வளனூரந் தூட்டலும், பொய்யாவானம் புதுப்பெயல் பொழிதலும பிறவும் சொல் லோவியமாகத் தீட்டப்புக்க மருதனார், தஞ்செய்யுளின் தொடக் கத்தே மலைநாறிய வியன் ஞாலத்தின் தோற்றங்கூறுதல், அப் பாண்டியரின் குடிப்பழமை கூறுதற் பொருட்டேயாம். மாயிருஞாலந் தோன்றி, அதன்கண் மன்னுயிர்கள் தோன்றி, அவ்வுயிர்கட்கு மன்னர்குடி தோன்றிய அம்முதலூழியின் முற் பகுதியிலேயே தோன்றி மூத்தகுடி படைகெழுதடக்கைப் பாண்டியர்குடி என்பது, அவ்வூழியிலேயே பாண்டியர் அரு ளாட்சி நிகழ்ந்ததனைக் கூறுமாற்றாற் பெறவைத்தார். இனி நிலை யாமையுணர்த்தப் புக்கவர், தோன்றும் பொருள்களே மீண்டும் அழியும் பொருள்களாதல்பற்றி, முன்னர்த் தோற்றங் கூற லானார் எனினும் பொருந்தும். எங்ஙனமாயினும், இத்தோற்று வாயின் வாயிலாய்க் குடிப்பழமை கூறுதல் வெளிப்படை.

## ச. குடிமை நலம்

மாந்தர்க்குரிய மாண்புகளுள், குடிமைநலம் தலைசிறந்த தாகும். சான்றோரான் வகுத்துக் கூறப்பட்ட நற்குணங்களை மேற்கொண்டு, அவற்றின் காரியமாகிய நல்லொழுக்கங்களின் வழுவாமல், வழிமுறை வழிமுறையாகக் கடைப்பிடித்து ஒழுகி வருகின்ற குடியையே குடி எனச் சிறப்பித்துக் கூறுவர். இத் தகைய குடி, காலத்தானே எவ்வளவாகப் பழங்குடியாகுமோ, அவ்வளவாக உயர்ந்த குடியெனக் கருதுதலும் உண்டு. சால் புடைய பழங்குடிப் பிறந்த திருவுடையார்க்குப் பிறர் கற்பி யாமலே, அன்பு நாண் ஒப்புரவு கண்ணோட்டம் செப்பம் பெரு மிதமின்மை அற்றமறைத்தல் பணிவுடைமை ஈகை இன்சொல் உடைமை இகழாமை முதலிய நற்பண்புகள் எல்லாம் தாயப் பொருள்போன்று இயற்கையிலேயே அமைந்துவிடுகின்றன. இவரைக் கருவிலே திருவுடையார் எனலாம். குடிப்பிறப்பில் லார், கல்வி, செல்வம் முதலிய பிறவேதுகள் நிரம்பப்பெற்ற

வழியும், குடிப்பிறந்தாரளவு சான்றாண்மையுடையராதல் அரிதே யாகும்.

இனி, பொய்யில் புலவராகிய வள்ளுவனாரும், இக்குடிமை நலத்தைத் தமது மெய்ந்நூலிலே பெரிதும் பாராட்டுதலைக் காணலாம். இக்குடிமைநலம், குடிமை என்னும் ஓரதிகாரத்தே அடங்காமையான், பெருமை, சான்றாண்மை முதலிய வேறு வேறு அதிகாரங்களாக வகுத்துக்கொண்டும் இக்குடிமைநலமே கூறுகின்றார். குடிமை அதிகாரத்தின் முதற்குறளிலேயே,

> "இற்பிறந்தார் கண்ணல்ல தில்லை இயல்பாகச்
> செப்பமும் நாணும் ஒருங்கு"

என, அதன் ஒப்பிலாச் சிறப்பைத் தெரித்தோதுதலும், அவ்வருமைத் திருக்குறட்கு விளக்கம் கூறப்புக்க ஆசிரியர் பரிமேலழகனாரும், அழகுக்கு அழகு செய்வாராய் "இவ்வை இற்பிறந்தார்க்காயின, ஒருவர் கற்பிக்கவேண்டாமற் றாமே உளவாம்; பிறர்க்காயிற் கற்பித்த வழியும் நெடிது நில்லா வென்பதாம்," என, நுண்ணிதின் விளக்கிச் சேறலும் காண்க.

இனிக் கண்ணகியாரும், பாண்டியன் நெடுஞ்செழியனுக்குத் தங்கணவன் களவு கொள்ளும் சிறுமையுடையான் அல்லன் என்றற்குச் சான்று காட்டுவாராய், "ஏசாச் சிறப்பின் இசை விளங்கு பெருங்குடி, மாசாத்து வாணிகன் மகனை யாகி," எனக் குடிமை நலத்தைக் கூறிக்காட்டலும் காண்க. தத்துவ நூலுடையோரும், இக்குடிமை நலம் உண்மையை ஒப்புக்கொண்டு, இந்நலம் ஒருவற்கு உம்மைச் செய்த நல்வினையால் வரும் என்று ஓதுப.

வடநூலாரும், தங்காப்பியத் தலைவர் குடி, மிகமிகப் பழங்குடி எனக் காட்டற்பொருட்டு, எங்கள் மன்னர் "கதிரவன் மரபினர்" என்றும், அல்லது "திங்கண் மரபினர்" என்றும், இன்னோரன்ன முறையில் பொருந்தாப் புனைந்துரை கூறுதலை, அவர்தம் நூலுள் யாண்டும் காணலாம். வடநூல்பற்றி நூல் செய்த கம்பர், வில்லி முதலியோரும், "ஆதித்தன் குலமுதல்வன் மநுவினையார் அறியாதார," என்றும், திங்கண் மாமரபினிற் பிறந்து இசையுடன் சிறந்தோர்," என்றும், குலமுறை கிளத்துதல் காண்க. அறிவற்ற பூதங்களாகிய ஞாயிற்றுமண்டிலமும், திங்கண் மண்டிலமும், மக்கட்குக் குலமுதல்வராதல் வியப்பே! இங்ஙனம், பொருந்தாவகையிற் றமிழ்நாட்டுப் பண்டைப் புலவர்கள் தமிழ் வேந்தர்க்குக் குடிப்பெருமை கூறிற்றிலர். "மண் தோன்றிக் கல்தோன்றாக் காலத்தே முன்தோன்றி மூத்த குடி," என, இயற்கையொடு பொருந்தவே அவர் கூறுதலைக் காணலாம்.

ஆனால், பிற்றைநாளில் செந்தமிழ்ப்புலவர்கள் பலரும், தம் முன்னையோர் மெய்ம்முறையினின்றும் வழுவி, எங்கள் செந்தமிழ் வேந்தரும், ஆதித்தன் குலமுதல்வரும், திங்கள் மாமரபினருமே ஆவர் எனத் தத்தம் நூல்களிலே கூறுவாராயினர்.

மதுரைக்காஞ்சியில் மருதனார் இவ்வுலகத்தே முதன்முதலாகப் பாண்டியர் அருளாட்சியே நிகழலாயிற்று எனக் கூறுமாற்றால், மூன்று தமிழ்வேந்தர் குடியுள் வைத்தும், பாண்டியர் குடியே பழங்குடியாகும் எனக் காட்டுவாராயினர். பாண்டியர் என்னும் சொல், "பண்டு" என்னும் சொல்லடியாகப் பிறந்த பண்டையோர் என்பதன் மரூஉ எனக் கருதுவாரும் உளர். இவ்வாறு பாண்டியர் குடிமாண்புணர்த்திய புலவர் பெருமான், இனி அம் மன்னரின் மனமாண்புணர்த்தப் புகுந்து, அவர் தம் அருளாட்சியின்கீழ் இப்பேருலகம் நிகழும் காட்சியைப் பத்தொன்பது அடிகளிலே வரைகின்றார். அவை:

"வலமாதிரத்தான் வளிகொட்ப
வியன்ஞாண மீன் நெறியொழுக
பகற்செய்யுஞ் செஞ்ஞாயிறும்
இரவுச் செய்யும் வெண்டிங்களும்
மைதீர்ந்து கிளர்ந்து விளங்க
மழைதொழில் உதவ மாதிரம் கொழுக்கத்
தொடுப்பின் ஆயிரம் வித்தியது விளைய
நிலனும் மரனும் பயனெதிர்பு நந்த
நோயிகந்து நோக்குவிளங்க
மேதக மிகப்பொலிந்த
ஓங்குநிலை வயக்களிறு
கண்டுதண்டாக் கட்கின்பத்து
உண்டுதண்டா மிகுவளத்தான்
உயர்பூரிம விழுத்தெருவில்
பொய்யறியா வாய்மொழியாற்
புகழ்நிறைந்த நன்மாந்தரொடு
நல்லூழி அடிப்படரப்
பல்வெள்ளம் மீக்கூற
உலகம் ஆண்ட உயர்ந்தோர் மருக!"

என்பனவாம். சொல்லென்னும் பூம்போது தோற்றிப் பொருள் என்னும் நல்லிருந்தீந்தாது நாறும் இவ்வினிய அடிகளின் பொழிப்பு வருமாறு:

"நிலத்தின் வலப்பக்கம் பற்றியே எப்பொழுதும் காற்று இயங்கும்படியும், அகன்ற திரளையுடைய நாளாகிய விண்மீன்கள், உலகில் நலமே சிறத்தற்குரிய நன்னெறிபற்றி இயங்கவும், பகற்காலத்தை உண்டாக்கும் சிவந்த ஞாயிற்று மண்டிலமும், இராக்காலத்தே நிலவொளி பரப்பும் திங்கள் மண்டிலமும், தம்

குற்றமற்றனவாய்த் திகழா நிற்பவும,
உலகத்தே உழவர் முதலியோர் ஆற்றுநதொழில் வளம்படும்படி பருவம் பொய்யாதே தம பெய்தற் றொழிலைச செய்து அவர்க்கு உதவிசெய்யவும், இவவாற்றால் திசைகளெல்லாம் பொழி லடர்ந்து செழிக்கவும, உழவர் வித்திய கூலங்கள், ஒன்று ஆயிர மாக நன்கு விளையுமபடியும், குறிஞ்சி முதலிய நால்வகை நிலங் களும தேன் முதலிய பொருளகளை வழங்கா நிற்பவும், மா பலா வாழை கமுகு முதலிய மரங்கள் தீங்கனிகளையும, மலர்களையும் மிக்கு வழங்கவும, இவ்வாற்றால் உயிரினஙகள், உடலும் உளமும் நோயில்லனவாய் எழிலுற்று விளங்கும்படியும், திசை தாங்கும் களிறுகள், தனுசுமை நீங்கப்பெற்றுப் பொலிவுடையனவாய் மேன்மையுறும்படியும், யாண்டும, கண்டு கண்டு அமையாத காட்சியின்பம் மிக்கும, யாண்டும உயிர்கள் தின்றுதின்று தீராத உணவுபபொருள் மிக்கும் கிடப்பவும், உயரிய மாடங்கள் நிரல்பட நிறகும் சீரிய தெருககளிலே உறையும, பொய் என்ப தொன்று உளதென்றே அறிந்திலாத வாய்மையுடையாரும், புகழ் மிக்காருமாகிய நல்ல மாந்தாகளுடனே நல்லூழிகள் பற்பல இவ்வுலகம தம்மடிப்பட்டு மாறாதே வரவும, எதிர் காலததே உலகம் உளள துணையும், தம புகழை மக்கள் பெரி தும் வியந்து போறறும்படியும், இவவுலகைத்தை ஆட்சி செய் தருளிய உயர்நதோருடைய மரபிலே தோன்றிய மாண்புடை யோனே !" என்பதாம.

ஆற்றுப்படலமும, நாட்டுப் படலமும், நகரப் படலமும், அரசியற் படலமும எனப் பற்பல படலங்கள் வகுத்துக் கொண்டு பிற்றைநாட் புலவர் அவற்றில் ஓதும் பன்னூறு செய் யுட்களும் சிறந்த ஆட்சிக் கீழமைந்த உலகக்காட்சியை இப் பத்தொன்பதே அடிகள் காட்டும் அளவு நுண்ணிதிற் காட்ட மாட்டா. செங்கோன்மையை விளக்குதற்குரிய சான்றுகளை இப்புலவர்பெருமான் தேர்ந்து கூறுமமுறை மிகவும் நுணுக்கம் வாய்ந்தது. ஒரு அரசன் ஆட்சிக்கீழ் வாழும் மாந்தர் ஒழுக்க முடையராய் வழ்ந்தனர் எனல் அவ்வரசன் செஙகோன்மையை விளக்கப போதிய சான்றாகமாட்டாது. "அசசமே கீழ்களது ஆசார"மாதலின் தன் குடிகளைக் கோல்கொண்டு தாக்கியும், அடக்கி ஆசாரமுடையராக அல்லது ஆசாரமுடையார் போல ஒழுகச செய்தலகூடும். இவையெல்லாம் செங்கோன்மையைக் காட்டப் போதியன அல்ல செங்கோன்மை பிறழாத மன்னன் அரியணையில் அமர்ந்துள்ளமைக்கு அறிகுறியாதெனில், அந் நாட்டிலே மழைவளம் மிக்கிருத்தல்வேண்டும்; யாறுகள் ரது நீர்பபெருக்கெடுத்து ஒழுகுதல்வேண்டும்; யாண

டும் பூம்பொழில்களும் இளமரக்காக்களும் செழித்தோங்கி உலகமே கண்டு கண்டமையாத காட்சியின்பம் நல்குதல் வேண்டும்; உயிர்கள் பசியும் பிணியும் இல்லாமல், உடலுரம் பெற்று எழிலுடன் இருத்தல்வேண்டும்; அவர் குடைநீழலிலே வாழும் மாந்தரோ, இங்ஙனம் உலகம் செழித்தலாலே தம் வாழ்க்கைக்கு யாதாமொரு குறைவும் காணமாட்டாமையால், பொய் பேசுதல், களவு காண்டல் முதலிய தீவினைகளைச் சிறிதும் அறியாதவராக வாழ்தல்வேண்டும்; பிறநாட்டினர் அந்நாட்டின் நலங்களைப் புகழ்ந்து பேசுதல்வேண்டும். இவையே, நல்லரசாட்சியை விளக்கிக்காட்டும் நற்சான்றுகளாம் எனத் தேர்ந்து இவ்வகையானே அப்பாண்டிய மன்னர் மன்னற மாண்பினை மருதனார் ஓவியப்படுத்துரைக்கலானார் என்க.

இத்தகைய ஊழியை இவர் நல்லூழி என்றும், இவ்வூழியில் வாழும் திருவுடைய மாந்தரை நன்மாந்தர் என்றும், இவை யிற்றிற்கெல்லாம் காரணமாயமைந்த மன்னரை மன்னர் என்றது உயர்ந்தோர் என்றும் இப்புலவர்பெருமான் சொற்றிறம் தோன்றக் கூறும் அழகினை என்னென்பாம்.

பொய் பேசார், வாய்மையே மொழிவர் என்பது அம் மாந்தர்க்குச் சிறப்பன்று பொய் என ஒரு தீவினை உளது என்றே அவர் அறிந்திலாமையே அப் பொன்னூழிமாந்தரின் சிறப்பாகும். அஃதாவது: ஒருவன் ஒன்றனைக்கண்டு அதனைப் பிறருக்குக் கூறநேர்ந்துழித் தான் கண்டாங்கே கூற அறிவானல்லது, கண்டகாட்சியைத் தன் உளத்தே கரந்துவைத்துத் தான் பிறிதொன்றனைப் படைத்து மொழியும் வினையினை அவன் ஒருசிறிதும் அறியமாட்டான் என்றவாறும் வாய்மை என்ற தமிழ்ச்சொல் வாயினது இயல்பு என்னும் பொருளுடையது. மெய்ம்மையென்பது உடலின இயல்பு என்னும் பொருட்டு; உண்மை, உள்ளத்தின் இயல்பு என்னும் பொருட்டு இவை மூன்றும் பொதுவில் மெய்பேசுதல் எனனும் பொருளையே குறிப்பதாயினும், உள்ளம் வாய் உடல் என்னும் மூன்று கருவிகளின் செயல்களும், ஒன்றனோடு ஒன்று முரணாமல் (மனம் வாக்கு காயம் என்னும் திரிகரணங்கள்) ஒன்றுபட்டு இயைவதே. அஃதாவது: உள்ளத்தே கருதிய தொன்றனை அவ்வாறே கூறுதலும், கூறிய படியே நடத்தலும் ஆகப் பொருந்துவதே - மெய்ம்மை எனப்படும் என்றும், இம்மூன்றனுள் ஒன்று இயையாவிடத்தும், அது மெய்ம்மை எனப்படாதென்றும் இம்மூன்று சொற்களும் நமக்கு உணர்த்துகின்றன. கொடுங்கோல் ஆட்சிக்கீழ், முக்கருவிகளானும் நேர்மையுற ஒழுகுவம் எனக் கடைப்பிடித்தொழுகும் சான்றோரும், ஒரோவழி அக் கடைப்பிடிவிடுத்துப் பிறழ்ந்து

நடத்தற்குரிய செவ்விகள் பலப்பல அவர்க்கு எய்தியவண்ண மாகவே இருக்கும். மற்று செங்கோன் மன்னர் ஆட்சியிலே! கீழ் மக்களும் பொய்முதலிய தீவினைகளை நயத்தற்குரிய செவ்வியை ஒரு நாளும் பெறுதலின்மையாற் பொயயென்னும் ஒன்றை அவர்கள மறந்தே போவர் அல்லது பொய்யினை அறியவேமாட்டார் அல்லரோ!

பகுத்தறிவும், மெய்யுணர்ச்சியும்

ஈண்டு மருதனார் காட்டும இந நல்லூழிக் காட்சியினின்றும், அபபுலவா பெருமான், உலகிலே பருவமழை பொய்யாதுபெய்து வசியும் வளனும் சுரததறகும், மழைவறநது பசுமபுற்களும் தலை காண்பரிதாயத் தீய்நதுபோமளவு வற்கடம் உண்டாதற்கும், அவவக்காலததே வாழ்கின்ற மாநதரின் நல்லொழுக்கமும், தீயொழுக்கமுமே காரணம் என்னும் கருத்துடையா என்பது தெளியப்படும். இத்தகைய கொள்கைகள் பகுத்தறிவிற்குப் பொருந்துவனவாமோ! காற்றும், மழையும், நாளும, கோளும், இயங்குதற்குரிய பூதசத்திகள் வேறாகவுள்ளன; அச் சத்திக் கியைய அவை இயங்குவனவாதலல்லது, மாந்தருடைய ஒழுக்கம் அவையிற்றிறகுக் காரணமாதல் யாண்டையது? ஒருகால், இன்னோரன்ன மொழிகள், இல்லனவேனும் இனியன நல்லன என்றெடுத்துப் புலவராற் கூறப்படும் புனைந்துரைகள் ஆகும் என நாம் கொள்ளல் வேண்டுமெனறி அவைகள் உண்மைகள் ஆகமாட்டா என்றோமோ! எனின், அறியாது கூ

அறிவற்ற பூதசத்திகளும் தாமே இயங்கும் இயல்புடையன அல்ல அப் பூதசத்திகட்கும் அகச் சத்தியாயிருந்து, அவை யிற்றை இயக்கும சத்தி வேறொன்றுளது, அதுவே, சிவசத்தி எனப்படும். பூதசத்திகளையும, நம் பகுத்தறிவு கடைபோக அறியும் ஆற்றலற்ற புல்லறிவாதலே அறியாதார் அறியாதாரே உலகத்திறகாதல், உலகத்தின் நிகழ்ச்சிகட்காதல், உள்ளீடாய் அமைநத காரணததைப பகுத்தறிவாற் காண்டல இயலாது. பகுததறிவென்பது, கைவிளக்குப் போன்றதொரு சிற்றறிவே யன்றோ! கைவிளக்காலே திசைகளை கவ்விக்கிடக்கும பேரிருளிற் புதையுணட பொருளனைததையும் காண்டல் ஒல்லுமோ! கைவி ளக்கின் ஒளிபுகாக் காரணத்தால், அதற்கப்பால் பரந்துகிடக்கும் பேரிருளில் யாதொனறும் பொருள் இல்லையென புகல்தல் சாலுமோ?

கடவுள், அறம், மறம், அன்பு, அருள், மறுமை, ... முதலியன, ஒருபொழுதும் பகுத்தறிவாற் காணப்படுவன அல்ல இன்னோரன்ன மெய்பபொருள்கள் திருவருள் விளக்கம் என்னும மெய்யுணர்ச்சி யுடையார்க்குமட்டுமே தெள்ளிதிற் பலவைவல

வாம். திருவருள விளககமுடையாா, இவவுலகம
களால் இயஙகுவதென்னும கொள்கையுடையர் அல்லர். அவர், இவ்வுலகம மெய்யறிவுப பொருளாகிய இறைபபொருளின் திரு வருட் சத்தியாலே—ஆக்கியும, காததும, அழித்தும் இவ் வாறமுல்—இயக்கப்படுகின்றது என்னும் தெளிவுடையா ஆவார். இத்தெளிவிறகுக் காரணமும், அததிருவருள் தமக்குணர்ததிய தென்பதலலாது பிறிதொன்றனை நாடிக் காணுா.

இனி, திருவருள் விளககமாகிய மெய்யுணர்ச்சி மருவப் பெற்ற சான்றோரில், தலைசிறந்தவராகக் கருதபபடும திருவள்ளு வனும், திருக்குறளிலே;

"இயல்புளிக் கோலோச்சும் மன்னவ னாட்ட
பெயலும விளையுளுந் தொக்கு."

என்றும்,

"முறைகோடி மன்னவன் செய்யின் உறைகோடி
ஒல்லாது வானம் பெயல்."

என்றும், இம்மருதனாரோடொப்ப மன்னறமே, உலகின் நன்மை தீமைகட்குக் காரணமாம் என்று கூறுதலும், பகுத்தறிவாளர் எவ்வாற்றானும உணரப்படாத இம்மை மறுமைகளின் இயல் பைத் தெள்ளத் தெளிய விளக்கிப்போதலும காண்மின். இத் திருவள்ளுவரின் இத்தகைய மெய்ம்மொழிகளைப் பிறநாட் புலவர்கள் பெரிதும் போற்றித் தத்தம் நூல்களிலே அமைத்துக் கோடலும் காண்க. திருவருள் விளக்கத்தால் மட்டுமே காணப் படும் உண்மைகள், வெறும் சடஅறிவு மாத்திரையேயான பகுத்தறிவிற் கெட்டமாட்டா என்றும், மெய்யுணர்வுடையோர் மொழிகள் மீண்டும் மெய்யுணர்வு எய்தத்தகுந்த திருவுடை நல்லோர்க்கு நன்கு விளங்குவன அல்லாது, புல்லறிவாளர்க்குப் பொருளற்றனவாகவே காணப்படும் என்றும் உணர்க. பகுத் தறிவின் சிறுமையையும், திருவருள் விளக்கத்தின் பெருமையை யும் எடுத்துக்காட்டுவாராய் நந் தாயுமான அடிகளாரும்,

"அருளால் எவையும் பாரென்றான்—அத்தை
அறியாதே சுட்டியென் அறிவாலே பார்த்தேன்
இருளான பொருள்கண்ட தல்லால்—கண்ட
என்னையுங் கண்டிலன் என்னேடி தோழி."

என ஓதுதல் காணக.

(தொடரும்)

# உன் எண்ணம் என்னே?

[வித்துவான் திரு. தி. மு. சங்கரலிங்கம், திருவாபாத்தூர்]

தருமமிகு சென்னையென இராமலிங்க வள்ளல்
சாற்றுதலை நகரான தனியெழில்சேர் நங்காய்!
திருவுடைநற் றமிழ்நாடு எனும்நம்பி யின்பால்
சேர்ந்துபல நலம்பெற்றாய்! சிறந்துமிக வாழ்ந்தாய்!
ஒருமனமோ டுன்னலமே பெரிதெனயாம் கண்டு
உளமகிழ்ந்தோம்; வாழ்ந்திட்டோம், நும்மேன்மை கேட்டு
பெருமைகொண்டோம் பன்னாளும் பீடமைய ஒன்றிப்
பேராரும் இமயத்தின் சிகரம்போல வாழ்ந்தாய்.

நும்பெருமை உணராமல் வீணரென வந்தோர்
நுவலரிய நின்காதல் மாண்பறியாத் தீயோர்
வம்புளங்கொள் நலமறியா ஆந்திரர்க்கா முகராய்
வளஞ்சேர்நின் மேற்காதல் கொண்டுவிரும் புகிறார்!
செம்பொருளின் திறமமையும் தமிழ்நாட்டு வீரர்
சிந்தைநொந்தார் இதுகேட்டு, நின்சிறப்போங் கிடவே
தம்பெருமை தனைக்காக்க உழைத்திடப்பின் வாங்கார்
தாவிலுயிர் கொடுத்தேனும் நாடோறும் காப்பர்.

வாழ்விலெலாம் ஒன்றாகி வளம்பெற்ற நின்னை
வாடிவருந் திடயாங்கள் விட்டிடோமிஃ துண்மை;
தாழ்வமைந்த அவர்விருப்பம் போலமைந்தால் யாங்கள்
தரித்திடோம்இவ் வுயிர்வாழ்க்கை; சண்டைமிகச் செய்வோம்
காழ்வமையும் அவரோடு நன்றியின்றி வாழின்
கவினமையும் நின்னன்பர் போராட்டம் செய்வோம்
பாழ்அடையாத் தமிழ்நாடாம் நம்பியுடன் வாழப்
பார்த்திருப்போம் உண்மையிது; உன் எண்ணம் என்னே?

சீரிசையா ஆந்திரரின் கொடுஞ்செயலைக் கண்டு
சிந்தைநொந்தார் அறிவுடையார், நின்காதல் தேர்ந்தார்;
நாரிசையும வழிகாட்டும் வரலாறு காட்டி
நாட்டுகிறா தமிழ்நாட்டின் பாலதென்றே உன்னை;
ஏரிசையும் தலைநகராம இன்பிசையும் நங்காய்!
என்னென்பேம் ஆநதிரரின் அறிவீனச் செயலை!
பாரிசைந்த தமிழ்நாட்டோ டொன்றிமிக வாழப்
பண்புடனே எண்ணுகிறேம; உன் எண்ணம் என்னே!

பெருமைமிகு தமிழ்நாட்டின் தலைநகராம் மாதே!
பீடறியா விதத்தினிலே உனைப்பங்கு கொண்டு
திருவுடைய தமிழாகளும் ஆந்திரரும் வாழச்
செப்புகிறார் இச்செயலைச் சிநதித்துப் பார்த்தால்
ஒருமனைவி தனையிருவர் பகிர்ந்தின்பம் கொண்டே
உவந்துலகில் வாழ்வதுபோல் உற்றிடுமே யன்றோ?
பொருள்நிறைய வந்திடினும் கற்பினையே காத்தார்
பொருந்துமெனக் கூறுவரோ? உன் எண்ணம் என்னே? ௫

தற்காலத் தலைநகராய் உனைக்கொள்ள எண்ணிச்
சாற்றுகிறார் ஆந்திரராம் கழிகாமக் காரர்
நற்காலத் திணுக்காகத் தன்தலைவி தன்பால்
நாடுமவர் பயன்துய்க்க விடுவாரோ? தமிழர்!
நிற்காத்தல் தமிழ்நாடாம் நம்பியுடன் வாழ
நேயமுடன் பல்லறிஞர் உழைத்துவரு கின்றார்;
நற்கோல வாழ்வினையே பெரிதெனயாம் காண
நாடுகிறேம்; உறுதிவிட்டோம்; உன் எண்ணம் என்னே?

# கொரியாப்போர் வரலாறு

போர்நிறுத்த ஒப்பந்தத்திற்கென்றே தனியாக வடகொரிய சார்பில் வகுக்கப்பட்ட கட்டிடமான பகைநீக்க மாளிகையில் ஐ நா. கமயூனிஸ்டு தலைமைப பகைநீக்கப் பேச்சாளர்களான லெப்டினன்ட் கர்னல் வில்லியம ஹாரிஸனும், ஜெனரல் நாம் இல்லும் ஒப்பநததில் கையொப்பமிட்டனர்.

இங்குக் கையெழுததானவுடன் ஒப்பந்தத் தாள்கள் யாவும் உடனேயே இருதரப்புப் படைத்தலைவர்கட்கும் அனுப்பப்பட்டன. நேச சுப்ரீம கமாண்டரான ஜெனரல் மார்க்கிளார்க அங்குள்ள மணிப்படி பிற்பகல் 1-க்கு முன்சானில் கையெழுத்திட்டார் இதற்கு $1\frac{1}{2}$ மணிக்கு முன்பாக அவர் சிங்மன்ரீயைப் பார்த்தார். கையெழுத்தான 72 மணி நேரத்துக்கெல்லாம் இரு தரப்புப் படைகளும் 150 கல் தொலை நீளமுள்ள போர்முனை எங்கும் $1\frac{1}{2}$ கல் தொலைவில் பின்தங்கி நின்றன.

1950 ஜூன் 25-ம் நாள் வடகொரியப் படைகள் தென் கொரியாமீது போர் துவங்கியதை அடுத்து அதேநாளில் பாதுகாப்புப் பேரவை அதை ஆராய முற்பட்டது. அப்போது இந்தியப் பிரதிநிதி பெனகல் நரசிங்க ராவ்தான் அதன் தலைவராக இருந்தார். வடகொரியர்கள் போரை நிறுத்தவேண்டுமென்ற வரலாற்றுச் சிறப்புக்குரிய முடிவு நிறைவேறியது. யு. எஸ். ஏ முதன்மையான பங்குகொள்ளப் பிற நட்பு நாடுகளின் உதவியுடன் 27-7-53-ஆம நாள்வரை போராட்டம் நிகழ்ந்தது. மூன்றே திங்களில் கம்யூனிஸ்டுகள் தென் கொரியாவைக் கைப்பற்றி ஐ. நா. படைகளை டேகூ முனைக்குத் துரத்திவிட்டனர். இதையடுத்துதான் ஜெனரல் மக் ஆர்தர் இஞ்சானில் கடற்படையைச் செலுத்திப் பின்னிருந்து தாக்கி வடகொரியப் படை வன்மையைச் சிதைத்தொழித்தார்.

ஐ. நா. படைகள் வெற்றிமேல் வெற்றிபெற்று யாலூநதிக் கரையை நோக்கிப் பாய்ந்தன. முப்பத்தெட்டாவது அட்சரேகைக்கப்பால் நகரவேண்டா என இந்தியா எடுத்துக்கூறிய நல்லுரையை ஏற்றுக்கொள்ளவில்லை. கிறிஸ்து மசுக்குள் வீடு திரும்புவோமென்று சங்கொலிசெய்து மக்ஆர்தர் படைகளுக்குக் கிளர்ச்சியுண்டாக்கினர். ஆனால் 1950 நவம்பரில் சீனத் தொண்டர் படைகள் போரில் நுழைந்து அவர் திட்டங்கள் யாவற்றையும் தவிடுபொடியாக்கியது. சீனர்கள் போரிற் கலந்துகொள்ள மாட்டார்கள் எனத் தவறாக மதிப்பிட்ட மக் ஆர்தர் போரை மிகுதிப்படுத்தத் துவங்கியபோதுதான் பதவியி

லிருந்து நீக்கப்பட்டார். இதையடுத்து வெற்றி தோல்விகள் இருதரப்புக்கும் இயற்கையாகப்போகவே, 1951-சூன் திங்களில் முதலமுதலாகப் போர்நிறுத்தப் பேச்சுகள் துவங்கின. அப்பேச்சில் கம்யூனிஸ்டுக் குற்றவாளிகள் யாவரையும் கட்டுப்பாடின்றி ஒப்படைக்கவேண்டுமென எதிர்த் தரப்பினர் வற்புறுத்தி வந்தனர். எனவே, அப்பேச்சு இதுவரை இழுக்கடிக்கப்பெற்றன.

இந்தக் கொள்கையை இருதரப்பினருக்கும் உகந்த முறையில் உருவாக்க இந்தியா வெளியிட்ட முடிபு, நட்புநாடுகளின் திருத்தத்துடன் முதலில் ஐ. நா. அவையில் நிறைவேறிய போதிலும கமயூனிஸடுகள் அதை ஏற்கவில்லை ஆனால் பின்னர் அம் முடிபின் அடிப்படையிலேயே போர் நிறுத்தம் ஏற்பட்டது. இதற்கு முட்டுககட்டையாகத தென்கொரிய முதல்வர் ரீ இருபத்தேழாயிரம் வடகொரியக் குற்றவாளிகளை விடுதலை செய்தார். இதுவும் ஒருவாறாகக் கொள்ளப்பெற்றது. இப்போது நடுநிலைக் குழுவின் தலைமையும் இநதியாவுக்கே கிட்டியுள்ளது. உலக அரஙகில் இஃது இந்தியாவுக்குள்ள நன்மதிப்பை விளக்கு

27-7-53-ஆம் நாள் இரவு 10 மணிக்குப் போர் முடிந்தது. போர் முனையிலிருந்து துந்துபிவாத்தியக் குழுவினர் மூன்றாண்டுப் போரை முடிக்குமாறு பேரொலி செய்தனர். நடுநிலைப் பகுதியின் சுற்றுக் கூட்டத்தினர் படைக் கருவிகளிலிருந்து தோட்டாக்களைச் சுழற்றினர் இடையே இரண்டரைக்கல் தூரம் வரை விட்டுநிற்குமாறு கேட்டுக்கொண்டனர்.

அவ்விடத்தின் விடியற்காலை மணி 5-40-வரை ஆங்காங்கே இருதரப்புப் படைகளுக்கும் கைகலப்பு இருந்ததாகவும் பின்னர் யாவும் தணிந்துவிட்டதாகவும் 8-வது போர்க்குழு அறிக்கை

26-7-53-ஆம் நாள் போர்நிறுத்த ஒப்பந்தத்தில் கையெழுத்திடுகையில் தென் கொரியாவின் சார்பில் மேஜர் ஜெனரல் சோய் டுக்ஷின் உள்பட பல நட்புநாடுகளின் தலைமையாளர்கள் அங்கிருந்தனர். போர் நிறுத்தத்தில் தென்கொரியாவும் ஒத்துழைக்கும் என்பதற்கு அறிகுறியாக அவர் நேரில் வந்திருந்தது எடுத்துக் கொள்ளப்பட்டது.

—இதழாசிரியர்.

# செய்திகளும் குறிப்புக்களும்

## தூத்துக்குடி, சித்தாந்தப் பேராசிரியர், சித்தாந்த முதுபெரும் புலவர், திரு. ந. சிவகுருநாதபிள்ளை அவர்களின் 81 - (எண்பத்தொன்று) ஆவது ஆண்டுப் பிறப்புநாள்

குறித்த பிறப்புத்திருநாள் ககூஅச-ஆடித் திங்கள் 27-ஆம் நாள் (11-8-1953) செவ்வாய்க்கிழமை ஆகும். அந்நாள் எங்கள் சபைச்சார்பில் ஒரு பேரவைகூட்டி அவர்களுக்கு வாழ்த்துரை வழங்கப்பெறும். அப்பேரவைக்கு, தூத்துக்குடி 'சபார்டினேட்' மன்ற நீதிபதி திருவாளர் S. மகராசபிள்ளை அவர்கள் B. Sc., B. L., தலைமை தாங்குவார்கள். வெளியூர் அன்பர்கள் தங்கள் வாழ்த்துரைகளை அனுப்புவிக்க வேண்டுகின்றேன்.

**தூத்துக்குடி, சைவசித்தாந்தசபை அமைச்சர்.**

**குறிப்பு:** நம் பேராசிரியரவர்கள் இந் நெடுநாளும் நலத்தொடும் உரத்தொடும் வளத்தொடும் வலத்தொடும் வாழ்தற்கு வாயில் செந்தமிழும் சிவநெறியும் சித்தாந்தமும் தம் உடல் உளம் உயிராய ஒல்லும்வகை ஓவாது ஓம்பிவரும் ஒண்மையே. இவர்களே "அறனறிந்து மூத்த அறிவுடையா"ராவர். இத்தகைச் சான்றோர்தம் "கேண்மை திறனறிந்து தேர்ந்து கொளல்" வேண்டுவது நம்பெருங் கடமையாகும். இவர்கள் தம் இடையறா எண்ணம் மொழி செயல்களால் நம் மெய்ம்மைச் சைவ சித்தாந்தம் எங்கும் பரவுதலும், கற்றாரும் கற்பிப்பாரும் கருத்துறுவாரும் ஆகிய நற்றவத்தோர் நாளும் பெருகுதலும், அவர்கட்கு ஊக்கமும் ஆக்கமும் ஒருங்கமையப் பட்டம் பல வழங்கலும் வளர்வதாயின. இத்தகையார் திருமுன் நம் ஆர்வம் மிக்க வணக்கமும் வாழ்த்தும் இணக்கமுற ஒப்பித்து இன்னும் இத்தவத்தோர் பன்னெடுநாள் வாழ்ந்து பணியாற்ற இறைவன் திருவடியைப் பரவிப் பணிவோமாக. திருப்பேரூர்ப் புராணத்திலுள்ள '**காலவ முனிவர் வழிபடுபடலம்**' பொருள் விளக்கத்துடன் பிறப்பு நாள் நினைவுமலராக வெளியிடப்பெறும் எனவும் தெரிகிறது. **—ஆசிரியர்.**

## ஈழத்து நவாலியூர், திரு. சோமசுந்தரப் புலவர் பிரிவு

இப்புலவர் பெருந்தகை தம் எழுபத்தேழாம் அகவைக்கண் நவாலியூரில் தம் இல்லத்து 11—7—1953-இல் அன்னம் பயிலும் தில்லைப் பொன்னம்பலவாணர் பொன்னடி எய்தினர். இவர்கள் தந்தையார் கதிர்காமர் ஆவர். புலவர் தமிழும் ஆங்கிலமும் சால்புறக் கற்றுப் புலமையுற்றனர். நுண்மாண் நுழைபுலச் செல்வராயினர். வட்டுக்கோட்டைச் சைவக் கலாசாலையில் ஆசிரியப்பணி ஏற்று அருந்தொண்டாற்றினர். தம் பதினைந்தாம் அகவைமுதலே செந்தமிழ்ப்பாவும் உரையும் தாவின்றித் தமிழ்த்தொண்டாற்றினர். **உயிரிளங் குமரன் முதல் தாலவிலாசம்** ஈறாக இருபத்து நான்கு நூல்கள் வெளிவந்துள்ளன. வெளிவரவேண்டுவனவும் பல. பாக்கள் பதினாயிரத்துக்கு மேல் என்ப.

வட்டுக்கோட்டையார் 1938-ஆம் ஆண்டில் தனிப்பெரும் புலவரைப் பாராட்டி மூவாயிரங்கொண்ட வெண்பொற் கிழி ஒன்று விழைந்தளித்

தனர் 1927-ஆம் ஆண்டில் யாழ்ப்பாணத்துப் பெருமக்கள் புலவர் பட்டம் வழங்கிப் போற்றினர். மேலும் ஆங்காங்கெய்திய சிறப்புக்களும் அளப்பில. புலனடக்கம் உற்றார் புலவரெனத்தக்கார் என்பதற்கேற்றார் நம்புலவர். சான்றாண்மை குன்றா ஆன்றவர். செந்தமிழும் சிவனெறியும் மூன்றுறப்பேணும் செல்வர் இறையடி நிறையின்பெய்தி வாழ்வாராக. குடும்பத்தார்க்கு எங்கள் பரிவும் ஆறுதலும் உரியவாகுக.

## நாட்டுக்கொவ்வா நலமில் கல்வித் திட்டம்

தற்பொழுது நாட்டிற்புகுத்தப்பட்டு நல்லோர் பலரும் நடுங்கற் கேதுவாகிய கல்வித்திட்டம் நாவலந்தீவாம் பாரதநாட்டில் வேறெங்கும் மேற்கொள்ளாத புதுத்தப்பெற்ற புதுமைவாய்ந்தது. பெரும்பாலும் நம் நாடு அறியாமை மிகுந்தது. முதியோரும், சின்றாரும் உடன்பிறந்தாரும் எழுத்தறிவு எய்தப்பெறாத பழுத்த அறியாமைச் சிறப்பினர். பெரும்பாலும் செல்வமும் முதன்மை (அதிகாரம்)யும் மிக்காரவீட்டு மாணவர் சூழ்வொன்றே கற்றற்குப் பெருந்துணையாவது. ஏனையாருள் ஒரு சிலர் தாம் கல்லாப்பிழையினை ஓர்ந்து தம் மக்களையேனும் முட்டுப்பாட்டுக்கு இடையே கற்பிக்கமுயலினும் அக்கம்பக்கத்துள்ள தன்னொத்த பிள்ளைகளின் சேர்க்கையால் விளையாட்டை விரும்பிக் கல்வியை வெறுக்கின்றனர். ஆசிரியர் செய்யும் அடக்குமுறையாலும் பள்ளியில் வரை அறுத்துள்ள காலத்திட்டத்தாலும் ஒருவாறு வேண்டாவெறுப்பாகக் கற்றுப் பயிற்சியினால் சிறிது கற்கவும் முற்படுகின்றனர்.

இந்நிலையில் அம்மாணவர் பள்ளியைவிட்டால் வெளியிலும் வீட்டிலும் விளையாடுவதும், பெற்றோர்கட்கும் மற்றையார்கட்கும் துன்பம் இழைப்பதும் பெரும்பான்மை என்பது உலகறிந்த உண்மை. அந்நிலையில் பள்ளியில் படிக்கும் கால அளவைப் கூட்டவேண்டுமென்பதே பிற்போக்கான மாணவர்களின் பெற்றோர் நினைப்பு. அப்படியிருக்கும் போது உள்ள காலத்தையும் குறைக்கவேண்டும் என்று திட்டமிடுவது அரைகுறைக் கல்வியும் கற்காது அறியாமை இருளிலே இருத்தற்குப் பெருந்துணை செய்வதாகுமன்றி அறிவு வளர்தற்குப் பேரிடையூறுமாகும். எனவே பொருந்தாத்திட்டத்தைக் கைவிட்டு நாட்டுக்கேற்ற வழக்கமான முறையில் கல்விபயிற்றுமாறு செய்விப்பதே அறமும் முறையும் அறிவும் ஆகும். இதுவே 'உலகத்தோடு ஒட்ட ஒழுகலாம்' நலமும் ஆகும்.

## வாலாஜாபாத் இந்துமத பாடசாலை

இப்பாடசாலை நாட்டுக்கும் மொழிக்கும் நற்றொண்டு ஆற்றி வருகின்றது. கல்வியும் கைத்தொழிலும் செல்வம் எனக்கொள்ளும் நல்லொழுக்கமும் உடலுரமும் ஒருங்கமைந்த நன்மாணாக்கர் பன்னூற்றுக் கணக்கான மாணவர்களை நாட்டுக்கு நல்குகின்றது. 28-7-53-இல் சென்னை அரசியல் தொடக்கக் கல்வியின் ஆய்வுரை (ஆலோசகர்) யாளர் திரு. ஜி. இராமச்சந்திரன் அவர்களும் ஏனைக் கல்வி முதன்மையரும் பாடசாலை, மாணவர் இல்லம், தொழிற்சாலை முதலியவற்றைப் பார்வையிட்டு உவந்து வாழ்த்துரை வழங்கியுள்ளார்கள். அத்தனையும் போற்றத்தக்கனவே. சிறந்த ஒன்றைக் குறிக்கின்றாம். "இது பையன்களுக்காக மட்டும் நடைபெறுவதால் பெண்களுக்கும் உதவ ஒரு பகுதி நடைபெறுவதாக. அதுவும் நடைபெறுமானால் ஸ்ரீ. மாசிலாமணி அவர்களின் வேலை முழுமை பெறும்."

# மதிப்புரை

**டாக்டர் குமரப்பா (வாழ்க்கை வரலாறு)**

[இந்நூல் திரு. மீ. விநாயகம் அவர்களால் யாக்கப் பெற்றது. வெளியிடுவோர்: 'லட்சுமி புத்தக நிலையம்' மகன்வாடி, வாதா. விலை ரூபா, 2-8-0.]

இதன்கண் தென்னாட்டுச் செம்மல் குமரப்பா மேனாடெய்தி மிகு புலமை கணக்காய்வு பொருள்நிலை முதலியவற்றில் பெற்றுத் துரை எனவிளங்கிப் பெரும் பொருள் தொகுத்துப் புகழுடன் வாழ்ந்தனர். அடிகளார் நாட்டியக்கம் நலம் பயப்பதொன்றென் றுணர்ந்தவே அதனோடியைந்து தமிழகப் பண்பாடு தலைசிறக்க அறமுறை திகழத் தொண்டாற்றினர். இவ் வரலாறு இருபத்தெட்டுத் தலைப்புக்களைக் கொண்டது. சிக்கனமும் ஒழுங்கும் உயிரினும் சிறக்கக் கொள்ளும் பகுதி பீகார் நிலநடுக்க விடுதலைப் பொதுப்பணிப் பொருள்துறை நடைமுறையில் காணலாம். இப்படியே ஒவ்வோர் அருஞ்செயலும் உலகம் கைக்கொண்டொழுகும் ஒண்மையதாகும். இனிய எளியநடை. நல்ல பதிப்பு. தமிழகம் இதனைப் பெற்றுக் கற்று ஒழுகிக் கடனாற்றுமாக.

**வெள்ளி விழா மலர்**

[வெளியிட்டோர்: திருவள்ளுவர் கழகம், தென்காசி. விலை ரூபாய் ஐந்து.]

இம்மலர் திருவள்ளுவர் கழகத்தின் இருபத்தைந்தாம் ஆண்டு நிறைவு விழா வெளியீடாகும்.

இது உலகப் பெரும்புலவராகிய திருவள்ளுவரின் அறநூலாகிய திருக்குறட் பெருநூலைக் குறித்துப் பேரறிஞர்கள் பலர் தாம் மேல்நாட்டுக் கீழ்நாட்டு நூல்களின் வழி ஆய்ந்து கண்டு தெளிந்துணர்ந்து வள்ளுவர் வாய்மொழியின் ஒட்பத்தை உலகிற்கு எடுத்துக் காட்டிய கட்டுரைத் தொகுதியாகும்.

உலகில் புலவர் பெருமக்கள் பல்வகையினர். வள்ளுவர் அப்பல்வகைப் புலவர்களாக ஒருருக் கொண்டனைய ஒண்மையர். இவர் சமயக் கணக்கர் மதிவழி சேராது உலகியல் கூறிப் பொருளிதுவென உணர்த்திய மேதகையர். இத்தகைப் பெரியாரின் சிறப்பையும் அவர் நூலின் மாண்பையும் உலகம் முழுதும் உணருமாறு செய்ய வேண்டுவது தமிழ்மாந்தர் கடமை. இக்கடமையுணர்ச்சியை மேற்கொண்டு பணிபுரிவதில் முன்னணியில் நிற்பதற்குச் சான்றே இவ்வரிய வெள்ளி விழா மலர்.

இம் மலரில் திருவள்ளுவர் நூலைப் பற்றிய எல்லாப் பொருளும் உள. இதன்பால் இல்லாத எப்பொருளும் இல்லை. ஆகவே, இவ்வரிய தமிழ்க் கருவூலத்தை ஒவ்வொரு தமிழ் மகனும் வாங்கிக் கற்கவேண்டும் கடப்பாடுடையன். இம் மலரில் பேரறிஞர்களின் கருத்தோவியங்கள் அணி செய்கின்றன. அவர்களோடுறவாடித் திருவள்ளுவர் உள்ளத்தையுங் கண்டு மகிழ வழிகாட்டியாகத் திகழ்கின்றது. இக்கழகத்தார் இது போன்ற அரும்பெரும் பணியை மேற்கொண்டு இசையனைத்தின் பெருமையெல்லாம் தென்திசையே வென்றேறத் தொண்டுகள் மேலும் புரிய இறைவன் அருள்வானாக.

---

திருநெல்வேலித், தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்
கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா